ओं



# விசாரசாகரம்

எனும்

# வேதாந்தசாரசங்கிரகம்

சாது நிச்சலதாஸ்ஜி அவர்களின்

ஹிந்திகிரந்தத்திலிருந்து

தஞ்சாவூர் ஜில்லா

குத்தாலம் சப்ரிஜிஸ்தரார்

**சிவராயரால்**

தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு

**பிர்ம்மஞானச்சுருக்கத்துடன்**

கும்பகோணம் பிர்ம்மஞான சங்கத்தால்


கும்பகோணம்

"ஸ்ரீவித்தியா அச்சுக்கூடத்தில்"

பதிப்பிக்கப்பட்டது.

1893.




விலை ரூபா 3.

# INTRODUCTION.

The importance of the work now presented to the public for the first time in a Tamil garb will appear from the following extract—a review of the original that appeared in the Theosophist of Madras some years ago.

"The Vicharsagar, or Ocean of Thought, is an admirable and indeed, exhaustive treatise, in Hindustani, on the main problems of Vedanta Philosophy, by the well known Sâdhu Nischaldas, a pupil of the celebrated Mahatma Dadu. All knowledge begins with thought; but right knowledge follows from right thought, which Sree Sankaracharya defines to be none other than the inquiry into life, its beginning, and end. The Vicharsagar is an ocean of thought in this sense of the word. The book opens with the usual description of the four requisites of a composition, *i e*, the subject, the relation, the reader, and the object. The qualities which make one a fit reader or student of the Vedanta include the whole of the preliminary stages of Raja Yoga, beginning with Viveka, Vairagya, and ending with Mumukshuta. The book then conceives three different kinds of students, varying in the degree of their preparation, natural as well as acquired, for appreciating the truths of an abstruse yet rational and sublime philosophy like the Vedanta, and ends with having made each of them Jivanmukta (absolved even while living) by various arguments, pro, and con, suited to the requirements of each. This is carried out by a beautiful allegory, in which Tatvadrishti (Intuition), Adrishti (scepticism), and Tarkadrishti (Free-thinking)— the three sons of King Subha Santati (Holy Samskara), attain Moksha, under proper instruction, the last having advised his father also, of the truths of the highest aim. There are many Sanskrit works on the philosophy of the Vedanta, all based on the

Upanishads and the Sutras of Vyasa, as explained by Shankara which it is difficult for many reasons to go through in any short period of time. The present volume, inasmuch as it embodies in itself all the principal things contained in these works, is really a blessing to those who do not know Sanskrit. Nay, it does more. On certain knotty points the work displays such lucidity and accuracy of thought that it is almost difficult to deny that even in classical writers the like of it is not easy to find".

"The Vedanta deals with the phenomena of matter and life, and declares, quite in accordance with modern science, that the ultimate nature of the former cannot be comprehended. It cannot be seid to *exist* in the sense in which God—the great knower of all—*exists;* nor can it be said *not to exist* in the sense in which the horns of a hare" do not exist. Hence its nature is *sat* as well as *asat, i. e., anirvachaniya*, or indescribable. But the Vedanta further maintains that nothing exists but in and of Brahma (the supreme *sat*) devoid of all properties or conditions, and that the *indescribable* creation is but a mere shadow in reality. This, the main forte of the Vedanta, is attacked by all descriptions of opponents, as a position extremely untenable and therefore easily vulnerable. If everything is Brahma, and Brahma is without conditions, where stands the hypothetical shadow of the world? How, again, can *Avidya*, or ignorance, the material cause of this shadow, co-exist with its opposite, Vidya, or gnana the hypothetical attribute of Brahma? And how laatly, from the analogy of a rope conceived in darkness to be a snake, could the world be falsely attributed to Brahma, unless it be granted against the hypothesis that, like the snake, it also had been directly seen in reality, at some previous moment? These are the logical difficulties—exoteric, of course—besetting a clear comprehension of the Vedantic theory. We may assure our readers without indulging in any quotations, which would

necessarily lengthen this short notice, that the Vichar Sagar will furnish a clear and concise solution of all these doubts. It is always necessary that a thing should be clear in theory before its practice can fairly begin."

"We any draw attention to one more point which is defined with equal clearness in the volume. What are the marks of a true gnani (enlightened one)? Is he able to free himself from the law of Prarabdha? These are doubts which darken the mental vision of many an enquirer into the secrets of the highest sciences. Let him who wishes to realise the characteristics of a true *Guru* turn to Vicharsagar, and he will find therein a clear and logical statement of the way in which an enlightened sage can be distinguished from the rest of the world."

"Besides these and many similar points of note there is not a single creed, not any single school of philosophy, which has not its proper place assigned to it in the attempt at general reconciliation put forth in this volume."

The translator thinks that very little more is required to show the importance of the work which is now presented to the Tamil speaking public in the vernacular.

KUTTALAM, S. I. Ry. **A. SIVA ROW.**



# முகவுரை.

இப்பிரபஞ்சத்தில் சகலரும் இச்சிப்பது சுகப்பிராப்தியும் துக்கநிவிர்த்தியுமே. சுகப்பிராப்தியின் பொருட்டு ஸ்திரீதன புத்திராதிகளை அநேகர் தேடுகிறார்கள். துக்கநிவிர்த்தியின்பொருட்டுத் தானம் தர்மம் முதலியவைகளைச் சிலர் செய்கிறார்கள். சிலர் நியாயம் முதலிய கிரந்தங்களை அப்பியசிக்கிறார்கள். ஆனால் இப்பேர்ப்பட்ட எவ்வித முயற்சியாலும் துக்கமற்ற சுகம் கிடைக்கிறதில்லை. சகல துக்கங்களுக்கும் காரணமெதுவோ அது நீங்காமல் சுகம் உண்டாகமாட்டாது. சாந்தோக்கிய உபநிஷத்தில் அடியில்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது. ஒருகாலத்தில நாரதர் சனத்குமாரரைப்பார்த்து ஸ்வாமின் என்னைச் சோகமில்லாதவனாகச் செய்தருளுவீரென்றார். அப்போது சனத்குமாரர் சொன்னதாவது:— பிர்ம்மம் சோகமற்றச் சுகரூபம். அதற்கு வேறானதெல்லாம் துக்கம். அஞ்ஞானமும் அதின் காரியமான ஜகத்தும் பிர்ம்மத்துக்கு வேறாக இருப்பதால், அவை துக்கரூபம். ஆகையால் அஞ்ஞானம் நிவிர்த்தியாகாதவரையில் துக்கம் அடியோடு நிவிர்த்தியாகமாட்டாது. இந்த அஞ்ஞானம் ஞானத்தால் நிவிர்த்தியாகும். ஞானம் விசாரத்தால் உண்டாகிறது. நான் யார்; ஜகத்து எப்படி உண்டாயிற்று; சுக துக்கங்களுக்குக் காரணமென்ன; இவ்விதமான விசாரணைக்கு விசாரமென்று பெயர். இவ்விதவிசாரமன்றியில் சுகம் கிடைக்கமாட்டாது.

2. இந்த வேதாந்த விசாரம் ஆதிகாலத்தில் எங்கும் விசேஷமாய் நடந்துவந்து, பிறகு மனுஷியர்களுக்குப் போகங்களில் பிரவிர்த்தியதிகப்பட அது மலினப்பட்டு, இப்போது ஸ்வல்பகாலமாய்ப் புத்திமான்களுடைய புத்தி மறுபடியும் அதில் பிரவிர்த்தித்திருக்கிறது. ஆங்கிலேய தேசத்திலுள்ள சில வித்வான்களும் இவ்விசாரத்தில் பிரவிர்த்தித்து நம்முடைய இருஷிகளாற் செய்யப்பட்ட வேதாந்த சாஸ்திரங்களைப்பரிசயம் பண்ணுகிறார்கள். இப்படி இருக்க நாம் நம்முடையகிரந்தங்களைப்பார்த்து நம்முடைய சுகத்துக்குச் சாதனமாயிருப்பதைத் தேடாமலிருப்பது வெகு அநுசிதம். ஆகையால் பிர்ம்மஞானத்தை அதாவது

ஆத்மஞானத்தை நாம் சம்பாதிக்கவேண்டியது அவசியம். பிர்ம்மஞான விஷயத்தில் விசேஷமுயற்சி இப்போது காணப்படுவதற்குக் காரணமும், அம்முயற்சியின் பலன்களும், பிர்ம்மஞானதத்துவங்களும் விசாரசாகரத்தின் கடைசியில் ஏழு அத்தியாயங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. அவ்விடம் பார்க்க.

3. இந்தப் பிர்ம்ம ஞானமானது உபநிஷத்துக்கள் பிர்ம்மசூத்திரங்கள் இவைகளின் வியாக்கியானங்கள் இவைகளில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. இக்கிரந்தங்களின் கருத்து வெவ்வேறு மதஸ்தர்களால் வெவ்வேறு விதமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. இப்போது எங்கும் அத்துவைதவிசாரமே விசேஷமாயிருப்பதால், அதின்படி வேதாந்தத்தின் சுருக்கம் யாதெனின், சச்சிதானந்தஸ்வரூபமாயும், அகண்டைகரசமாயும், ஸ்வயம்பிரகாசமாயும் அசங்கமாயுமிருப்பது பிர்ம்மம். இது சுத்தமாயிருப்பதால் ஜகத்து முதலியவைகளுக்குக் காரணமன்று. இந்தச் சுத்த சேதனத்தை மாயை என்னும் சக்தி ஆசிரயித்துக்கொண்டிருக்கிறது. இது அனாதியாயும், ஏகமாயும், ஞானத்தால் நாசமடைவதாயும், சதசத்துகளுக்கு விலக்ஷணமாயும் இருக்கிறது. இந்தச்சக்திக்குச் சத்வ, ரஜஸ், தமஸ், என மூக்குணங்களுண்டு. சத்வகுணத்தில் பிரதிபிம்பித்தவன் ஈசுவரன். ஈசுவரனே ஜகத்காரணம். இந்த ஈசுவரன் சர்வஞ்ஞன், சர்வசக்திமான், ஸ்வதந்திரன், வியாபகன், நித்தியன். மலின சத்வகுணத்தில் பிரதிபிம்பிக்கிறவன் ஜீவன். அநேக பாத்திரங்களிலுள்ள ஜலத்தில் பிரதிபிம்பிக்கும் சூரியன் ஒன்றானாலும் பிரதிபிம்பங்கள் அநேகமாய்த் தோன்றுவதுபோல, அனேக அந்தக்கரணங்களில் பிரதி பிம்பிக்கும் சேதனம் ஒன்றானாலும் அந்தக்கரணங்களாகிற உபாதிகளில் உண்டாகும் பிரதிபிம்பங்களாகிற ஜீவர்கள் அனேகம். எந்த அந்தக்கரணத்தில் அஞ்ஞானம இருக்கிறதோ, அந்த அந்தக்கரணத்துடன் கூடிய ஜீவனுக்குப் பந்தம் உண்டாகிறது. ஜீவன் புண்ணியபாபங்களைச்செய்து சுகதுக்கங்களை அனுபவித்து ஜன்ம மரணாதி சமுசார சாகரத்தில் உருளுகிறான். எந்த அந்தக்கரணத்திலுள்ள அஞ்ஞானம் ஞானத்தால் நிவிர்த்தியாகிறதோ அந்த ஜீவன் முக்தனாயிருக்கிறான். இவ்விதமாகப் பந்தமோக்ஷங்கள் அஞ்ஞானத்துக்கும் ஞானத்துக்கும் ஆதீனமாயிருக்கின்றன. மாயையின் தமோகுணாம்சத்தினின்றும் ஆகாசாதிகளின் சிருஷ்டி உண்டாகிறது. ஞானமுண்டானவுடன் எல்லாம் பிர்ம்மஸ்வரூபம் என்று விளங்குகிறது.

# முகவுரை

4. இந்தப் பிர்ம்மஞானத்தின் பொருட்டுச் சமுஸ்கிருதத்தில் உபநிஷத்துக்கள், பிர்ம்மசூத்திரங்கள், இவைகளின் வியாக்கியானங்கள் முதலிய அநேகக் கிரந்தங்களும் இதர பாஷைகளிலும் அநேகக்கிரந்தங்களும் ஏற்பட்டிருக்கின்றன. இவைகளில் அடங்கிய முக்கியமான விஷயங்களை எல்லாம் தெரிந்துகொள்ள இவைகளை எல்லாம் ஒருவன் பார்க்கவேண்டும். வித்வான்களுக்குக் கூட இது சீக்கிரத்தில் முடியாத விஷயமாயிருக்கச்சாதாரண ஜனங்களுக்கு கேட்பானேன். மேலும் உபநிஷதாதிகளில் சில விஷயங்கள் வெகு கடினமாயிருக்கின்றன. தெரிந்துகொள்ளவேண்டும், என்று தீவிர ஆசையுள்ள வர்களுக்குச் சாதகமில்லாவிடின் அதைவிட அதிக வருத்தம் அவர்களுக்கிராது. ஆகையால் உபநிஷத்துகள், புராணங்கள் முதலியவைகளினின்றும் முக்கியமாய்த்தெரிந்துகொள்ளவேண்டிய விஷயங்களையெல்லாம் அடக்கிக்கொண்டிருக்கும் ஒரு சுலபமான கிரந்தம் வெகு உபயோகமாயிருக்கும்.

5. விசாரசாகரமென்னும் கிரந்தம் இத்தன்மையது. சாது நிச்சலதாஸ்ஜி அவர்களால் இது ஹிந்திபாஷையில் எழுதப்பட்டிருக்கிறது. டில்லி பட்டணத்துக்குச் சமீபத்திலுள்ள கிஹறௌளி என்னும் கிராமத்தில் இவர் சமீபகாலத்தில் தான் இருந்ததாகத் தெரியவருகிறது. இவருடைய ஞானத்தை இவருடையகிரந்தமே விளக்குவிக்கும். சிந்து முதலிய வடதேசங்களில் இக்கிரந்தத்தினின்றும் சாதுக்கள் உபதேசம் பெற்றுக்கொள்வதாக தெரியவருகிறது. உதிரியான பூக்களை நாரானது ஒரு மாலையாகக்கட்டுவதுபோல், நிச்சலதாஸ்ஜி அவர்கள் ஜனங்களிடத்தில் வெகு கிருபையால் அவர்களின் உபயோகத்தின்பொருட்டு வெகு புஸ்தகங்களில் அடங்கிய சாரங்களை இந்த ஒரு கிரந்தத்தில் சேர்த்திருக்கிறார்கள். கிரந்தக்காரருடைய சரித்திரம் விவரமாய் தெரியவில்லை.

6. கிரந்தம் சாகரம் என்று பெயரிடப்பட்டிருப்பதால், அத்தியாயங்கள் தரங்கங்கள் அதாவது அலைகளாகச்சொல்லப்பட்டிருக்கின்றன. முதலாவது தரங்கத்தில், கிரந்தத்தின் முக்கியமான கருத்தாகிய ஜீவப்பிர்ம்மஐக்கியததைக்காட்டுசு மங்களாசரணம், கிரந்தமகிமை, அதிகாரிலக்ஷணம், ஜீவப்பிர்ம்மஐக்கியமாகிற விஷயம், துக்கநிவிர்த்தி சுகப்பிராப்தியாகிற பிரயோசனம், சிரவணமனன நிதித்தியாசனங்கள், ஞானத்தின் அந்தரங்க பகிரங்கசாதனங்கள், மோக்ஷத்தின் சாக்ஷாத்சாதனம், இவைகளெல்லாம் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

7. முதல் தரங்கத்திற்சொல்லிய அநுபந்தசதுஷ்டயம் இரண்டாவது தரங்கத்தில் விசேஷமாய்ச்சொல்லப்படுகின்றது. ஒவ்வொரு துக்கத்துக்கும் ஒவ்வொரு உபாயம் ஏற்பட்டிருப்பதால் பிரம்மஞானமன்றியிலேயே துக்கநிவிர்த்தியாகுமென்றும், அறியப்படாத விஷயத்தில் இச்சையுண்டாகாதபடியால் பிர்ம்மஞானத்தில் இச்சை ஒருவனுக்குமில்லை என்றும், ஜீவப்பிர்ம்மஸ்வரூபங்களில் பேதங்களிருப்பதால் இவைகள் ஒன்றெனக்கூடாதென்றும், அத்தியாசசாமக்கிரிகளில்லாதபடியால் பந்தம் சத்தியமென்றும், இந்தச்சத்தியபந்தம் கர்மத்தால்தான் நிவிர்த்தியாகுமென்றும் பூர்வபக்ஷி ஆக்ஷேபிக்கிறான். பிர்ம்மஞானமன்றியில் துக்கம் அடியோடு நிவிர்த்தியாகமாட்டாதென்றும், சாட்சிக்கும் பிர்ம்மத்துக்கும் ஏகத்வம் சொல்லக்கூடுமென்றும், பந்தம் மித்தையென்றும், இந்த மித்தியாபந்தம் ஞானமன்றியில் யாதொரு கர்மத்தாலும் நிவிர்த்தியாகமாட்டாதென்றும், அஞ்ஞானியின் கர்மம் ஜன்மாதிபலனை கொடுக்காமலிராதென்றும் சமாதானம்சொல்லி, கிரந்தத்தை ஆரம்பிப்பதாற்பிரயோஜனமுண்டென்று கிரந்தக்காரர் ஸ்தாபிக்கிறார். அநுபந்தசதுஷ்டயத்தை இந்த இரண்டு தரங்கங்களில் நிரூபித்திருப்பதுபோல சமஸ்கிருதகிரந்தங்களில் பார்ப்பது அரிது. சிஷ்யன் சம்பாதிக்கவேண்டிய விவேகாதி சாதனங்கள் விவரமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன.

8. மூன்றாவது தரங்கத்தில், குருலக்ஷணம், குருவை அவசியம் தேடவேண்டுமென்பது குருவைச் சேவிக்கும் விதம், பாஷாக்கிரந்தத்தினாலும் ஞானமுண்டாகும் என்பவை எல்லாம் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

9. நான்காவது தரங்கம் முதல் குருசிஷ்ய வினாவிடையாக ஒரு கதை மூலமாய் ஞானம் உபதேசிக்கப்படுகிறது. இக்கதையில் சுபசந்ததியென்னும் ஒரு அரசன் ஆத்மஞானத்தைச் சம்பாதிக்கவிச்சித்து, தன் பிள்ளைகளாகிற தத்துவதிருஷ்டி, தர்க்கதிருஷ்டி, அதிருஷ்டி இம்மூவர்களிடத்தில் இராச்சியத்தை ஒப்பிவித்துக் காட்டுக்குப்போக யத்தினம் செய்கையில், அந்தக்குமாரர்களே முதலில் புறப்பட்டுப்போய்விட்டார்கள். பிறகு குருவைக்கண்டு அவர்கள் உபதேசம் பெற்றனர். இந்த நான்காவது தரங்கத்தில் உத்தமாதிகாரியாகிய தத்துவதிருஷ்டிக்குத்துக்க நிவிர்த்தி சுகப்பிராப்திகளின் பொருட்டு ஜீவப்பிர்ம்மங்களின் அபேத ஞானம் உபதேசிக்கப்படுகிறது. ரஜ்ஜுவில்தோன்றும் சர்ப்பம்போல இந்தப்பிரபஞ்சம் மித்தை என்று நிரூபிக்கப்படுகிறது. ரஜ்ஜு சர்ப்ப

திருஷ்டாந்தம் எந்த வேதாந்த கிரந்தத்திலும் சொல்லப்பட்டிருந்தாலும், ரஜ்ஜுவில் சர்ப்பம் எவ்விதமாக உண்டாகிறதென்பது இந்தக் கிரந்தத்தில் விவரித்திருப்பதுபோலக்காண்பது அரிது. ஜீவப்பிர்ம்ம அபேத விஷயத்தில் வெகு ஆக்ஷேபசமாதானங்களும், வேதகுருவாக்கியங்களால் பிர்ம்மத்தின் பிரத்தியக்ஷஞானமுண்டாகும் என்றும் இத்தரங்கத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன.

10. ஐந்தாவது தரங்கத்தில வேதம் குரு இவை பொய்யென்றும், இவைகளால்தான் பொய்யான ஜகத்து நிவிர்த்தியாகும் என்றும், பிர்ம்மத்தை அறியாதபடியால் ஜகத்து தோன்றுகிறதென்றும், மாயை, ஈசுவரன், ஜீவன், சூட்சுமசிருஷ்டி, ஸ்தூலசிருஷ்டி, பஞ்சகோசவிவேகம், லயசிந்தனை, பிரணவ உபாசனை முதலியவை சொல்லப்பட்டிருக்கின்றன.

11, ஆறுவது தரங்கத்தில் ஜாக்கிரத்தும் ஸ்வப்நமும் அனேககாரணங்களால் சமமென்றும, "நான்யார்" என்னும் கேள்விக்கு "சச்சிதானந்தஸ்வரூபமாயும், ஜனனமரணங்களன்றியிலும், அசங்கமாயுமிருக்கிற பிர்ம்மமே ஜீவன்" என்கிற உத்தரமும், சிருஷ்டிக்குக் காரணம் யார் என்னும் கேள்விக்கு, ஈசுவரனே தவிர ஜீவன் அல்லவென்பதும், முக்திக்குச் சாதனம் யாது என்னும் கேள்விக்கு அச்சாதனம் கர்மமல்ல, ஞானம் தான் என்றும், சப்தத்தின் வாச்சியார்த்த லக்ஷியார்த்தங்களும், மகாவாக்கிய உபதேசமும் சொல்லப்பட்டிருக்கின்றன.

12. ஏழாவது தரங்கத்தில் சமாதியின் அஷ்டாங்கங்கள், ஞானிக்கு பிரவிர்த்தி நிவிர்த்தி இரண்டிலும் நியமமில்லை என்பது, பிராரப்த பலத்தால் ஞானிக்கு வியவகாரம் சம்பவிக்கிறதென்பது, ஜீவன் முக்தி விதேகமுக்தி லக்ஷணங்கள், வேதங்கள் புராணங்கள் முதலியவை அத்வைதஞானத்துக்கே சாதனமாயிருப்பதைக்காண்பிப்பதற்காக வித்தையின் 18 பிரஸ்தானங்களாகிய (4) வேதங்கள், (4) உபவேதங்கள், (6) அங்கங்கள், (18) புராணங்கள், (18) உபபுராணங்கள், நியாய வைசேஷிகமதங்கள், தர்ம சாஸ்திரங்கள், சாங்கிய சாஸ்திரம், பஞ்சராத்திரம், சைவக்கிரந்தங்கள், வைஷ்ணவக்கிரந்தங்கள், நாஸ்திகமதம், சக்தி பூஜையாகிற வாமமார்க்கம், புராணங்களிற்சொல்லி யசிவன் விஷ்ணு முதலிய தேவதைகளின் பூஜையில் ஸ்ரீவியாசருடைய கருத்து, ஆறு சாஸ்திரங்களில் பிரமாணமானது, இவைகளெல்லாம் விஸ்தாரமாய் இ

த்தரங்கத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன.

13. மேற்சொல்லிய விஷயங்கள் தவிர வேறு அனேகவிஷயங்களும் இவ்வெழுதரங்கங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. இவைகளில் நியாயம் சாங்கியம் முதலிய இதரமதங்களின் கருத்துகளும், அவைகளின் பிசகுகளும் ஆங்காங்கு குறிக்கப்பட்டிருக்கின்றன. இதரமதக்கிரந்தங்கள் விசேஷமாய்த்தம்தம் மதத்தையே ஸ்தாபிக்கும். இதில் இதரமதங்கள் கண்டிக்கப்பட்டு அத்வைதசித்தாந்தம் ஸ்தாபிக்கப்படுகிறது. ஆத்மஞானத்துக்கு உபயோகமான விஷயங்களெல்லாம் தெளிவாயும் யுக்தியுடனும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. இக்கிரந்தம் விசேஷமாய் யுக்திப்பிரதானமாயிருக்கிறது. சுருதிவாக்கியங்களை எடுத்துச்சொல்வதினால் மட்டும் அப்பியாசிக்கு விஷயம் சுலபமாய்ப்போதமாகமாட்டாது. ஆகையால் எந்தயுக்திகளால் அச்சுருதிகளின் கருத்து மனதில் சுலபமாய்ப்படுமோ அவைகள் கிரந்தக்காரரால் விசேஷமாய் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன. கிரந்தம் இவ்வளவு சுலபமாய்க்கிரந்தக்காரரால் செய்யப்பட்டிருந்தாலும், கடைத்தெருப்புராணங்களை கேட்பதுபோல் இதைக்கேட்பதினாலும், கதைகளை வாசிப்பதுபோல் இதை வாசிப்பதினாலும மேற்சொல்லிய விஷயங்களெல்லாம் அறியப்படும் என்பது வீணாசை. சிரத்தையுடன் கவனமாய்ப்படிக்காதவரையில் விஷயம் முன்போலவே இருக்கும். சிரமத்துக்குத்தக்க பலன் உண்டு.

14. இந்த அபூர்வமான கிரந்தம் வடதேசத்தில் சிலபாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. இதற்குச்சமானமான கிரந்தம் இத்தமிழ்நாட்டில் காணேம். இக்கிரந்தத்தை முதலில் வாசிக்கும்போது மனனத்தின் பொருட்டு இதை தமிழில் மொழிபெயர்த்தேன். பிறகு இத்தமிழ்நாட்டில் இந்த அற்புதக்கிரந்தம் விளங்கவேண்டும் என்று சில இஷ்டர்கள் அபேக்ஷித்ததின்பேரில் இதைப்பிரசுரஞ்செய்யப்பிரயத்தினம் செய்யப்பட்டது. இதில் அடங்கிய இரத்தினங்கள் வெளியாகவேண்டுமென்ற கருத்தைத்தவிரவேறில்லை.

15. இக்கிரந்தத்தை 714 பிரிவுகளாகப்பிரித்திருக்கிறேன். இப்பிரிவுகளின் சுருக்கத்தை விஷயசூசகஅநுக்கிரமணிகையில் எழுதியிருக்கிறேன். கடினமான விடங்களில் சுருக்கத்தைக்கொஞ்சம் விரிவாயும் எழுதியிருக்கிறேன். இது வெகு சாதகமாயிருக்குமென்று நினைக்கிறேன்.

(உ—ம்) ஜாக்கிரஸ்வப்நசமஷிநிருபணம், மகாவாக்கியஉபதேசம். மேலும் இந்த அட்டவணையால் பிரிவுகளின் முன்பின் சம்பந்தங்களும், ஒவ்வொரு விஷயத்திலும் தெரியவேண்டிய உள்விஷயங்களும் தெளிவாய்த்தெரியக்கூடும். விஷயங்களைக்கண்டு பிடிக்கும் பொருட்டு கடைசியில் அகாராதி சொல்லட்டவணையையும் கொடுத்திருக்கிறேன்.

16. இத்தமிழ் மொழிபெயர்ப்புக்கு வெகு குறிப்புகள் சின்னஎழுத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவைகள் மூலக்கிரந்தத்தில் கடினமாயுள்ளவைகளைத்தெளிவாக்குவதுடன், மூலத்தை அனுசரித்துத்தெரிந்துகொள்ளவேண்டிய சில விஷயங்களையும் எடுத்துச்சொல்லுகின்றன. இக்குறிப்புகள் விசாரசாகரத்தின் வியாக்கியானத்தினின்றும், பஞ்சதசிப்பிரகரணம், அதின் ஹிந்திவியாக்கியானம் இவைகளினின்றும், ஹிந்திபாலபோதத்தினின்றும், ஸ்ரீசங்கராசாரியாருடைய பாலபோதம் ஆத்மபோதம் இவைகளினின்றும், வாசுதேவமனனம், வேதாந்தசாரம் இவைகளினின்றும் எடுக்கப்பட்டிருக்கின்றன. ஏகதேசத்தில் சொந்தகுறிப்புகளையும் கொடுத்திருக்கிறேன். மொத்தத்தில் 408 குறிப்புகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

17. இக்கிரந்தத்தில் சம்ஸ்கிருதபதங்கள் வருவதால் சிலவிடங்களில் அவைகளைச்சம்ஸ்கிருதம்போலவே தமிழ் எழுத்தில் எழுதியிருக்கிறேன். (உ—ம்) காரணதை, ஸ்திரதை, சஞ்சலதை முதலியன.

18. இப்படிப்பட்டக்கிரந்தத்தை இதுவரையில் ஒருவரும் இத்தமிழ்நாட்டின் உபயோகத்துக்காக வெளியிடாததைப்பார்த்து இப்போது இந்தயத்தினம் என்னால் செய்யப்பட்டது. கூடியபிரயாசையுடன் மொழிபெயர்த்திருக்கிறேன். வித்வான்களால் கண்டுபிடிக்கப்படும் பொருள் குற்றங்களும் சொற்குற்றங்களும் வந்தனத்துடன் அங்கீகரிக்கப்படும். குற்றங்களை மன்னித்துச்சாரத்தை கிரகித்துப்பிரயத்தினப்படுவோர்களைத் தைரியப்படுத்துவது பெரியோர்களுக்குச்சகஜம். இதற்குக்கொடுபடும் ஆதரவின்பேரில் மறுபிரதிபோடும்படி நேரிடுமேயானால் அவைகள் மொழிபெயர்ப்பில் திருத்தப்படும். இப்போது பலவிடங்களில் காணப்படுகிற விசாரத்துக்கு இக்கிரந்தம் உபயோகமானால் எத்தனித்தகாரியம் சபலமாகும்.

19. புஸ்தகத்தின் கடைசியில் காட்டியபடி பிழைகளைத்திருத்திக்கொண்டு புஸ்தகத்தைப்படிப்பது நலம்.

## முகவுரை

20. என்னுடைய இந்தப்பெரிய அற்புதமான மொழிபெயர்ப்பைத்தமிழ் நடைக்கிணங்கக்கூடிய வரையில் பிழையறப்பரிசோதித்து எழுதினவர் இப்போது சிதம்பரம் இனிஸ்பெக்டிங் ஸ்கூல்மாஸ்டராகவிருக்கும் தமிழ் ஸம்ஸ்கிருதஞானஸ்தராகிய மகா-ள-ள-ஸ்ரீ. ஜி. எஸ். அப்பாசாமி அய்யர் என்று சகலரும் அறியும்படி விரும்புகிறேன்.

ஏ. சிவராவ்.
குத்தாலம்
தென்னிந்தியா ரயில்வே





ஓம்.

# விசாரசாகரம்.

## விஷயத்தைக்காட்டும் அனுக்கிரமணிகை.

### முதலாவது தரங்கம்.

அனுபந்தசாமானியநிரூபணம்.

### 1· வஸ்துவைக்காட்டியமங்களம் (I—11)

1. மங்களாசரணம் (1—3)



### II. கிரந்தமகிமை (12—13)

## III. அநுபந்தசதுஷ்டயநிரூபணம் (14—39)

---

# 2-வது தரங்கம்

## அனுபந்தவிசேஷ நிரூபணம்

## III. பிரயோஜனத்தில் ஆக்ஷேபசமாதானங்கள் (67—106)

### 1. ஆக்ஷேபங்கள் (67—83)

# 3-வது தரங்கம்.

## குருசிஷ்யலக்ஷணம்



# 4-வது தரங்கம்

## உத்தமாதிகாரிஉபதேசநிருபணம்

## V. உபதேசித்த விஷயத்தில் ஆக்ஷேபசமாதானங்கள் (166—250)

### 1. ஜீவப்பிரம்ம அபேதம் (166—192)

# 5-வது தரங்கம்

## மத்தியமாதிகாரிஉபதேசநிரூபணம்

### 1. குரு வேதம்வியாவகாரிகசத்தை

## III. மகாவாக்கியார்த்தஉபதேசம் (322—368)

---

# 6-வது தரங்கம்.

## I ஜாகிருத்ஸ்வப்நங்கள்சமம்.

---

# 7-வது தரங்கம்

## I. ஜீவன்முக்திவிதேகமுக்திவர்ணனை

விஷயசூசக அட்டவணை

முற்றிற்று

ஹரி: ஓம் தத்சத்



ஓம்.

ஸ்ரீகணேசாயநம.

# விசாரசாகரம்.

முதலாவது தரங்கம்.

## அனுபந்த சாமானியநிரூபணம்.

### I. வஸ்துவைக் காட்டிய மங்களம். [1—11]

#### I. மங்களாசரணம். (1-3)

1. சுகமாயும் நித்தியமாயும் பிரகாசமாயும் வியாபகமாயும் நாமரூபங்களுக்காதாரமாயும் புத்தியறியாததாயும் புத்தியை யறிகிறதாயுஞ் சுத்தமாயும் அபாரமாயும் எது இருக்கிறதோ அது தான் நான். (இதன் கருத்து) மகாவாக்கியத்தின் தாற்பரியமாகிற தன்னைக்காட்டிலும் வேறாகாத பரமாத்மாவே தன் சொரூபமென்பதாம். இனி இதின் விசேஷணங்களைத்தனித்தனியே சொல்லுகிறேன்:—

அந்தப் பிர்ம்மம் சுகமாயிருக்கிறது[1] (476—482), நித்தியமாயிருக்கிறது (471), பிரகாசமாயிருக்கிறது[2] (472), வியாபகமாயிருக்[3]

---

1. பரமப்பிரேமைக்கு விஷயமானது.

2. சைதன்யம் ஞானஸ்வரூபம்.

3. தேசகால வஸ்துக்களால் அந்தமில்லாதது. இதுவே அபாரமென்னப்படும். பாரம்=அந்தம். இந்த அந்தம் தேசகாலவஸ்துபேதங்களால் மூன்றுவிதம். இவைகளில்லாததினால் பிர்ம்மம் அபாரம். (1) எது எல்லாவிடங்களில் வியாபிக்காமல் ஓரிடத்தில்மட்டுமிருக்கிறதோ, அதற்குத் தேசத்தால் அந்தமுண்டு. (உ—ம்) கடம். பிர்ம்மம் ஓரிடத்தில் இல்லாமல எங்கும் வியாபித்திருக்கிறபடியாலும் சர்வதேசமும் பிர்ம்மத்தில் மாயையால் கல்பிக்கப்பட்டிருக்கிறபடியாலும் பிர்ம்மத்துக்குத் தேசத்தால் அநதமில்லை. (2) எதற்கு ஜன்மத்துக்கு முன்னும் நாசத்துக்குப் பின்னும் அபாவமுண்டோ அதற்குக்காலத்தால் அந்தமுண்டு. பிர்ம்மத்துக்கு உற்பத்தி நாசங்களில்லாதபடியால் பிர்ம்மம் நித்தியம். ஆகையால் காலத்தால் அந்தமில்லை. (3) எது எதற்கு வேறுபடுகிறதோ அதனால் அதற்கு அந்தமுண்டு. கடம் வஸ்திரத்துக்கு வேறுபடுவதால் கடத்துக்கு வஸ்திரத்தால் அந்தமுண்டு. பிர்ம்மத்தில் ஜடசேதனரூபவஸ்துக்களெல்லாம் கல்பிதங்கள். மண்ணில் கல்பிதமான கடம் மண்ரூபமாயிருப்பதுபோல் பிர்ம்மத்தில் கல்பிக்கப்பட்

கிறது (484), [4]நாமரூபங்களுக்காதாரமாயிருக்கிறது (159), 'புத்தியறியாததாயும் புத்தியை அறிகிறதாயும்' என்பதின் பொருள்:—(1) புத்தி பிர்ம்மத்தைப்பிரகாசிப்பிக்கவில்லை, ஆனால், பிர்ம்மம் புத்தியைப்பிரகாசிப்பிக்கிறது. (2) சப்தத்தினுடைய சக்திவிர்த்தியினால் (545) புத்தி பிர்மமத்தை யறிகிறதில்லை, ஆனால், சப்தத்தின் லக்ஷணாவிர்த்தியால் (572) புத்தி பிர்ம்மத்தை யறிகிறது. (3) மலவிக்ஷேபங்களோடே கூடிய புத்தி பிர்ம்மத்தை யறிகிறதில்லை, ஆனால், இவையில்லாத புத்தி பிர்ம்மத்தை யறிகிறது. இந்த நிர்மலமான புத்தியும் [5]பலவியாப்தியால் (232) பிர்ம்மத்தை யறிகிறதில்லை, ஆனால், [6]விர்த்திவியாப்தியால் (232) அதை யறிகிறது. இந்த விர்த்தியும் தீபமானது அன்னிய பதார்த்தங்களைப் பிரகாசிப்பிக்கிறதுபோல் பிர்ம்மத்தைப் பிரகாசிப்பிக்க ஸமர்த்தமாகவில்லை. ஆனால், இருட்டிலிருப்பதுங் கடத்தினாலே மூடப்பட்டிருப்பதுமான ஒரு இரத்தினமானது கடமுடைபட்டவுடன்தானே பிரகாசிக்கிறது போல, 'அகம் பிர்ம்மாஸ்மி' என்கிற விர்த்தியினால் பிர்ம்மத்தின் ஆவரணரூபமான அஞ்ஞானத்தை நிவிர்த்திசெய்வதே பிர்ம்மப்பிரகாசமுண்டாகிறதாகச் சொல்லப்படுகிறது. பிர்ம்மம் தான் பிரகாசிப்பதில் புத்தி முதலிய வேறு பிரகாசங்களை யபேக்ஷிக்காமலும் எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கிறதாயுமிருப்பதால் அது சுயம்பிரகாசமென்று சித்திக்கிறது. மேலும் அது [7]சுத்தமாயும் தேசகாலவஸ்துக்களால் அந்தமில்லாமல் அபாரமாயுமிருக்கிறது.

2. ஒவ்வொரு விசேஷணத்தின் பிரயோஜனம்.

(1) சுகம்—நித்தியம்:— பிர்ம்மம் கேவலம் சுகமாயிருக்கிறதென்று சொல்லும்பக்ஷத்தில் விஷயசுகத்திலும் நியாயமதப்படி (சசுகு) ஆத்மாவின் ஆனந்த குணத்திலும் பிர்ம்மலக்ஷணத்திற்கு [8]அதிவியாப்திதோஷம் வரு

---

டவைகளெல்லாம் பிர்ம்மரூபமே. ஆகையால் பிர்ம்மம் எல்லாவற்றிற்கும் ஆத்மாவாயிருக்கிறது. இப்படியிருப்பதால் பிர்ம்மம் எதற்கும் வேறுபடுகிறதில்லை. வேறுபடாமையால் எந்த வஸ்துவாலும் பிர்ம்மத்துக்கு அந்தமில்லை. ஆகையால் பிர்ம்மம் அபாரம்.

4. அதிஷ்டானம், விவர்த்த உபாதானகாரணம்.

5. சிதாபாஸனுக்கு விஷயமாய்.

6. கேவலம் விர்த்திக்கு விஷயமாய்.

7. மாயை அதின்காரியரூபமலம் இவையன்றியில்.

8. ஒரு வஸ்துவின் லக்ஷணம் வேறொருவஸ்துவிற் காணப்படுதல் அதிவியாப்திதோஷமாம்.

கிறது. அதைத்தள்ளுகிறதற்காகச் சுகலக்ஷணத்துடன் நித்தியலக்ஷணமும் சேர்க்கப்பட்டது. விஷயானந்தம் அநித்தியமாயிருப்பதினாலும் நியாய வாதிகளின் ஆத்மாவின் ஆனந்தகுணம் அநித்தியமாயிருப்பதினாலும் சுக லக்ஷணத்துடன் நித்திய லக்ஷணத்தைச்சேர்ப்பதினால் அதிவியாப்திதோஷமுண்டாகவில்லை.

(2.) நித்தியம்—பிரகாசம்:— பிர்ம்மத்தைக் கேவலம் நித்தியமாகச்சொல்லும் பக்ஷத்தில் நியாயமதத்தில் ஆகாசம்காலமுதலானவைகளை நித்தியமாகச் சொல்லியிருப்பதால் அவைகளில் வருகிற அதிவியாப்திதோஷத்தைத்தள்ளுவதற்காக நித்திய லக்ஷணத்துடன் பிரகாசலக்ஷணமுஞ் சேர்க்கப்பட்டது. நியாயமதத்தில் ஆகாசாதிகள் நித்தியமாக எண்ணப்படினும் பிரகாசரூபமாக எண்ணப்படாமல் ஜடமாக எண்ணப்பட்டிருக்கின்றன. (445—456). இவ்விடத்தில் நித்திய லக்ஷணத்துடன் பிரகாசலக்ஷணத்தைச் சேர்த்ததினால் அதிவியாப்திதோஷமுண்டாகவில்லை.

(3.) பிரகாசம்—வியாபகம்:— பிர்ம்மத்தைக் கேவலம் பிரகாசமாகச்சொல்லும் பக்ஷத்தில் சூரியாதிகளுடைய பிரகாசத்திலும், நியாயமதப்படி ஆத்மாவின் ஞானகுணத்திலும் (445), க்ஷணிகவிஞ்ஞானவாதிகள்மதப்படி (136) க்ஷணிகவிஞ்ஞானரூபஆத்மாவினிடத்திலும், அதிவியாப்திதோஷமுண்டாகிறது. அதை நிவிர்த்திசெய்வதற்காகப் பிரகாசலக்ஷணத்துடன் வியாபகலக்ஷணம் சொல்லப்பட்டது. மேலே சொன்ன மூன்றும் பிரகாசமாயிருந்தாலும் வியாபகமாக எண்ணப்படாமல் பரிச்சின்னமாக எண்ணப்பட்டிருக்கின்றன. ஆதலால் அதிவியாப்திதோஷமுண்டாகவில்லை.

(4.) வியாபகம்—நாமரூபஆதாரம்:— பிர்ம்மம் கேவலம் வியாபகமாக இருக்கிறதென்று சொல்லும்பக்ஷத்தில் ஆகாசாதிகளிடத்திலும், நியாயப்பிரபாகரமதங்களின்படி (154) ஆத்மாவினிடத்திலும், சாங்கியமதப்படி பிரகிருதியினிடத்திலும, வியாபகத்துவம் இருப்பதால் அதிவியாப்திதோஷமுண்டாகிறது. அதை நிவிர்த்தி செய்வதற்காக வியாபகலக்ஷணத்துடன் நாமரூபஆதாரலக்ஷணமுஞ் சேர்க்கப்பட்டது. மேற்கண்ட[9] ஆகாசாதிகள் மூன்றும் வியாபகமாயிருந்தாலும் நாமரூபத்துக்காதாரமாகச் சொல்லப்படாதபடியால் அதிவியாப்திதோஷ முண்டாகவில்லை.

(5.) நாமரூப ஆதாரம்— சுயம்பிரகாசம்:— பிர்ம்மத்தைக்கேவலம்

---

9. 188ல் சொல்லியபடி ஆகாசாதிகளின் வியாபகத்துவம் ஆபேக்ஷிகமாயிருக்கிறது.

நாமரூபத்துக்காதாரமாகச்சொல்லும்பக்ஷத்தில் பிராதிபாஸிகசர்ப்பத்தின்[10] நாமரூபங்களுக்கு ரஜ்ஜு ஆதாரமாகிறபடியினால் அதில் அதிவியாப்தி தோஷமுண்டாகிறது. அதைத்தள்ளுவதற்காக மேற்கண்ட நாமரூபஆதாரலக்ஷணத்துடன் சுயம்பிரகாசலக்ஷணமுஞ் சேர்க்கப்பட்டது. ரஜ்ஜு சுயம்பிரகாசமாக இல்லாதபடியால் அதிவியாப்திதோஷம் இரண்டுலக்ஷணங்களால் நிவர்த்தியாகிறது. நாமரூபங்களுக்காதாரமென்கிற லக்ஷணம் எந்த மதத்திலும் எந்த பதார்த்தத்துடனும் பிர்ம்மத்துக்கு அதிவியாப்திதோஷமுண்டாக்காவிட்டாலும் வேதாந்தமதத்தில் (146) ரஜ்ஜுவாதிஸ்தலங்களிற் கல்பிக்கப்பட்ட சர்ப்பாதிகளுடைய நாமரூபங்களுக்கு ஆதாரம் ரஜ்ஜுஉபஹிதசைதன்னியமே அங்கீகரிக்கப்பட்டிருந்தாலும், ரஜ்ஜுமுதலியவை அங்கீகாரம் பண்ணப்படாமலிருந்தாலும், இவ்விடத்தில் ரஜ்ஜுவாதிகள் நாமரூபங்களுக்காதாரமாகச் சொன்னது ஸ்தூலதிர்ஷ்டிமாத்திரத்தால்தான்.

(6.) **சுயம்பிரகாசம்— சுத்தம்:**— பிர்ம்மத்தைக்கேவலம் சுயம்பிரகாசமென்று சொல்லும்பக்ஷத்தில் சில உபாஸகர்களுடைய மதங்களில் ஆத்மாவைச் சுயம்பிரகாசமாகச் சொல்லியிருப்பதால் அதிவியாப்திதோஷமுண்டாகிறது. அதைத்தள்ளுவதற்காகச் சுயம்பிரகாசலக்ஷணத்துடன் சுத்தமென்கிற லக்ஷணஞ் சேர்க்கப்பட்டது. மேற்படி உபாசகர்களுடைய மதங்களில் ஆத்மா ஸ்வயம்பிரகாசமாயும் அவித்தியாதிமலசகிதமாயுமிருப்பதாகச்சொல்லப்பட்டிருப்பதால், சுத்தலக்ஷணத்தைச் சேர்ப்பதினால் அதிவியாப்திதோஷம் நிவிர்த்தியாய்விடுகிறது.

(7.) **சுத்தம்—அபாரம்:**— பிர்ம்மத்தைக் கேவலம் சுத்தமென்று சொல்லும்பக்ஷத்தில் சாங்கியமதத்தில் (௪௪௩) ஆத்மா சுத்தமென்று சொல்லப்பட்டிருப்பதால், அதனாலுண்டாகும் அதிவியாப்தியை நீக்குவதற்காகச் சுத்தலக்ஷணத்துடன் அபாரலக்ஷணமுஞ் சேர்த்துச்சொல்லப்பட்டது. சாங்கியமதத்திற் சொல்லியிருக்கிற ஆத்மாவுக்குத் தேசகாலபரிச்சின்னங்களில்லாமலிருந்தாலும் வஸ்துபரிச்சின்னமிருப்பதாகச் சொல்லியிருப்பதால், தேசகாலவஸ்துபரிச்சின்னரகிதமான பிர்ம்மத்துக்கு மேற்சொன்ன இரண்டு லக்ஷணங்களினாலும் அதிவியாப்திதோஷம் நிவிர்த்தியாகிறது.

3. மேலே சொன்ன பிர்ம்மலக்ஷணங்களில் சுகம்—நித்தியம், நித்தியம்—பிரகாசம், இவ்விதமாக இரண்டு லக்ஷணங்களாலேயே அதிவியாப்திதோஷம் நிவர்த்தியாகிறதாயிருந்தாலும் பிர்ம்மத்தை யறியவேண்டுமென்கிற இச்சையுள்ளவனுக்கு அந்த விசேஷணங்களுடைய ஞானமுண்டா

(10) பொய்த்தோற்றம், 278 வது பிரிவைப் பார்க்க.

வதற்காகவும் அநேக பிரகாரங்களினாலே பிர்ம்மத்தைத்தெரிந்துகொள்வதற்காகவும் மேற்கண்ட எல்லா விசேஷணங்களுஞ் சொல்லப்பட்டன. மேற்சொல்லிய விசேஷணங்களோடுகூடிய யாதொரு பிர்ம்மமுண்டோ அதே நான் என்று மங்களாசரணத்தின் தாற்பரியம்.[11]

## 2. ஆக்ஷேப சமாதானங்கள் ( 4-11 )

4. க-வது ஆக்ஷேபம்:— விஷ்ணு சிவன் முதலிய தேவதைகளின் ஸ்மரணரூபமான மங்களாசரணஞ்செய்வது யுக்தமாயிருக்க அத்தேவதைகளை விட்டுத் தன்னுடைய ஸ்மரணரூபமான மங்களாசரணஞ்செய்வது சரியன்று.

5. சமாதானம்:— என்னுடைய ஸ்வரூபம் சமுத்திரம்போல அபாரமாகயிருக்கிறது. அதில் விஷ்ணு, சிவன், பிரமன், சூரியன், சந்திரன், வருணன், யமன், சக்தி, குபேரன், கணபதி முதலியவர்களால் உபலக்ஷிதமான ( 702 ) சகலதேவதைகளும் அலைகளாக இருக்கிறார்கள். ஆகையால் என்னுடைய ஸ்மரணரூபமான மங்களாசரணத்தால் சகல தேவதைகளுடைய மங்களாசரணமும் பண்ணினதாக ஆகிறது. ஆகையால் தன்னுடைய ஸ்மரணரூபமங்களாசரணம் அயுக்தமன்று.

6. உ-வது ஆக்ஷேபம்:— விஷ்ணு சிவன் முதலிய தேவதைகளை மாயாவிசிஷ்டசேதனமாகிற ஈசுவரனுடைய அலைகளாகச் சொல்லலாம். உம்முடைய சொரூபத்தின் அலைகளாகச் சொல்லகூடாது. ஆகையால் ஈசுவரசொரூபமங்களாசரணந்தான் யுக்தம். விருக்ஷத்தின் மூலத்தில் விடப்பட்ட ஜலத்தினால் கிளைகள் முதலியன திருப்தியடைவது போலும் பிராணனுக்கு ஆகாரங் கொடுப்பதினால் இந்திரியாதிகள் திருப்தியடைவது போலும் ஈசுவரசொரூபமங்களாசரணத்தினால் சர்வதேவதைகளுடைய ஸ்மரணரூபமங்களாசரணமும் சித்திக்கிறது. உம்முடைய ஸ்மரணரூபமங்களாசரணத்தினால் சித்திக்கவில்லை.

7. சமாதானம்:— கிருபாளுவாயும் சர்வஞ்ஞனுமிருக்கிற எந்த ஈசுவரனை முனிகள் இருதயத்தில் தியானம் பண்ணுகிறார்களோ அந்த ஈசுரன் மாயோபாதியினால், ரஜ்ஜுவினிடத்திற் சர்ப்பம் போலும் சொப்பனத்திற் பட்டணம் போலும், என் சொரூபத்தினிடத்தில் பொய்யாகத் தோன்றுகிறான். எந்த வஸ்து ஏதனிடத்திற் கல்பிக்கப்படுகிறதோ அந்தக் கல்பிதவஸ்து அதிஷ்டானரூபமாகவே யிருக்கிறபடியால் (கூ௰௪) என்னுடைய ஸ்மரணரூபமங்களாசரணத்தினால் ஈசுவராதி சகல

11. ஜீவப்பிர்ம்ம ஐக்கியமாகிற கிரந்தத்தின் விஷயம் இந்த மங்களாசரணத்தினால் சூசனை செய்யப்படுகிறது.

தேவர்களுடைய மங்களாசரணமுஞ் சித்திக்கிறது. ஆகையால் என் சொரூப மங்களாசரணத்தில் யாதொரு அநுசிதமுமில்லை.

8. க-வது ஆக்ஷேபம்:— ஈசுவரனைச் சுத்தப் பிர்ம்மத்தினிடத்தில் கல்பிதனாகச் சொல்லலாம். உம்மிடத்தில் கல்பிதனாகச் சொல்லக்கூடாது. ஆகையால் நிர்க்குணப் பிர்ம்மத்தின் மங்களாசரணஞ் செய்யத்தக்கது. அம்மங்களாசரணத்தால் சகல தேவதைகளுடைய மங்களாசரணமும் சித்திக்கும். உம்முடைய மங்களாசரணத்தினால் அது சித்திக்கமாட்டாது.

9. சமாதானம்:— கயிற்றை யறியாததினாற் சர்ப்பப்பிரதீதி யெப்படி யுண்டாகிறதோ அப்படிப் பிர்ம்மத்தை யறியாததினால் ஜகத்தின் பிரதீதி யுண்டாகிறது. கயிற்றை யறிவதினாற் சர்ப்பம நிவிர்த்தியாகிறதுபோல், பிர்ம்மத்தை யறிவதினால் ஜகத்து நிவிர்த்தியாகிறது. அந்த அதிஷ்டானரூபமான சுத்தப்பிர்ம்மம் நானாகவே யிருக்கிறேன். 'நானாகவே' என்று சொன்னதினால் அம்சாம்சிபாவம், விகாரவிகாரிபாவம, உபாஸகஉபாஸ்யபாவம் முதலிய பேதங்கள் தனக்கும் பிர்ம்மத்துக்குமில்லையென்றும், இந்த பேதாபாவத்தினால் காரியரூபம், பிரகாசியரூபம், ஆதேயரூபம், இந்த மூன்று விதபாரதந்திரத்துவங்களும் தனக்கில்லையென்றும் சூசகமாகிறது. ஆகையால் என்னுடைய ஸ்மரணரூபமங்களாசரணமே சுத்தப் பிர்ம்மத்தின் மங்களாசரணமாம்.

10. உ-வது ஆக்ஷேபம்:— உங்களுடைய பரம்பரைகுருவாகிற தாதூஜி யவர்களுடைய சம்பிரதாயப்படி இஷ்டதேவதையாகிற இராமசந்திரனை நமஸ்காரஞ் செய்வது யுக்தம்.

11. சமாதானம்:—எந்த இராமசந்திரனை யறிகிறதற்காகச் சுகிருத புருஷர்கள் ஆசையின்றி சத்கருமங்களைச் செய்கிறார்களோ அந்த இராமசந்திரனே யென் சொரூபமாக இருப்பதினால் நான் யாரை நமஸ்கரிக்கிறது. என்னைக்காட்டிலும் வேறு வஸ்து இல்லாததினால் நான் யாரையும் நமஸ்காரஞ் செயயத் தக்கதில்லை என்பது கருத்து. அல்லது எந்தப் பிர்ம்மத்தை யறிகிறதற்காகச் சுகிருதபுருஷர்கள் இராமசந்திரனை நிஷ்காமமாய்ப் பஜிக்கிறார்களோ, அந்தப்பிர்மமம் என் சொரூபமாயிருப்பதால் நான் எல்லாவற்றிற்கும் அதிஷ்டானமாயிருக்கிறேன். எனக்குப்பின்னமாக வேறொன்றுமில்லாதபடியால் நான் யாரை நமஸ்காரஞ்செய்கிறது.

## II. கிரந்தமகிமை (12—13)

12. இந்த விசாரசாகரமென்னும்[12] கிரந்தம் வேதாந்த சித்தாந்தமென்

12. சித்தாந்தியாலும் பூர்வபக்ஷியாலும் அல்லது குருவினாலும் சிஷ்

ளுஞ் ஜலத்தால் நிறைந்து அதிகம்பீரமாயிருக்கிறது. குருமுகமாக சிரத்தை பக்தியுடன் இதைக்கேட்டு மனனஞ்செய்து சொரூபத்தின் சாக்ஷாத்காரரூபமான அபரோக்ஷஞானமூலமாக அவித்தியாதியனர்த்தங்களின் நிவிர்த்தி பூர்வகமாய்ப் பிர்ம்மானந்தத்தைத்தீரன்[13] அடைகிறான். சூத்திரம்[14] பாஷியம்[15] வார்த்திகம்[16] முதலிய[17] ஸம்ஸ்கிருதக் கிரந்தங்களனேகமிருந்தாலும் அ

---

யனாலும் செய்யப்படும் ஜடம் சேதனம் முதலிய பதார்த்தங்களின் நிர்ணயத்துக்கு விசாரமென்று பெயர். இப்படி விசாரத்தால் தீர்மானிக்கப்படும் அர்த்தம் சித்தாந்தமெனப்படும். இக்கிரந்தம் சாகரம் அதாவது சமுத்திரம்போல் சித்தாந்தமாகிற ஜலத்தை விசேஷமாய் அடக்கிக் கொண்டிருப்பதால் விசாரசாகரமென்னப்பட்டது. சாகரதிருஷ்டாந்தத்தால் அத்தியாயங்கள் தரங்கங்கள், அதாவது அலைகளாகச் சொல்லப்பட்டன. இதில் கடின விஷயங்களாகிற முதலைகளுண்டு. சுத்தஸ்வரூபத்தை நிச்சயிக்கும் சித்தாந்தங்களாகிற இரத்தினங்களுள. இச்சமுத்திரத்தைத் தாண்ட புத்தி ஓடமாகும். அப்பியாசம் நல்ல காற்றாகும். பிர்மநிஷ்ட குருவே சுக்கான். சிரத்தையுடன் இதைப் படிப்பதினால் மேற்சொல்லிய சகாயங்களுடன் போய்ச் சேரப்படுங்கரை மோக்ஷமாம்.

13. ‘தீ யென்றால்’ புத்தி. ‘ர’ என்றால் விஷயங்களினின்றும் இரக்ஷித்தல். விஷயங்களில் புத்தியைப் போக வொட்டாமல் தடுக்கக் கூடியவன் தீரன்.

14. சொற்ப அக்ஷரங்களை யடக்கிக் கொண்டும் சந்தேகமில்லாத சாரத்தையடக்கிக்கொண்டும் மற்றக்கிரந்தங்களுக்காதாரமாயும் எதினாலுந் தசைப்படாமலும் நிர்தோஷமாயும் இருக்கும் வாக்கியம் சூத்திரமெனப்படும். இப்படி அனேக சூத்திரங்களை அடக்கிக்கொண்டிருக்கும் ஆறு சாஸ்திரங்கள் முதலிய அநேகக் கிரந்தங்களிருக்கின்றன. இவைகளில் வேதவியாசராற்செய்யப்பட்ட 555 சூத்திரங்களடங்கிய உத்தரமீமாம்ஸாசாஸ்திரம் சூத்திரசப்தத்தால் இவ்விடத்தில் கிரகிக்கத்தக்கது.

15. சூத்திராதிரூப மூலக்கிரந்தங்களிலுள்ள பதங்களுக்கு வேறு பதங்களால் விவரமாய் அர்த்தஞ்செய்வது பாஷியமெனப்படும். இப்படிப்பட்ட பாஷியங்கள் அநேகமுள. இவைகளில் சங்கரபாஷியந்தான் இவ்விடத்தில் கிரகிக்கத்தக்கது.

16. மூலக்கிரந்தக்காரரால் சொல்லப்பட்ட விஷயங்களில் விளங்கியும் விளங்காமலும் இருக்கிற அர்த்தங்களைச் சொல்லுகிறசுலோகரூபமான வியாக்கியானத்துக்கு வார்த்திகமென்று பெயர். இப்படிப்பட்ட வார்த்திகங்கள் அநேகங்களுள. இவைகளில் சங்கராசாரியாருடைய சிஷ்யரான மண்டனமிசிரரென்னும் சுரேஸ்வராசாரியரால் செய்யப்பட்டவார்த்திகமே இவ்விடத்தில் கிரகிக்கத்தக்கது.

17. முதலிய சப்தத்தால் உபநிஷத்துகள் பகவத்கீதை முதலிய அநேகக் கிரந்தங்கள் கிரகிக்கத்தக்கன.

வைகளால் சாதாரண ஜனங்களுக்கு ஒன்றும் விளங்குகிறதில்லை. பாஷா க்கிரந்தத்தினால் அவர்களுக்கு ஞானமுண்டாகும். ஆகையால் ஸம்ஸ்கிருதக் கிரந்தங்களைப் படித்தறியச் சக்தியில்லாதவர்களுக்கு இந்தப்பாஷாக் கிரந்தம் பிரயோஜனமாயிருக்கும்.

13. பாஷாக்கிரந்தங்களனேகமிருந்தாலும் விசாரசாகரமன்றியில் வேறுபாஷாக் கிரந்தங்களால் ஆத்மவிஷயத்திலுள்ள சந்தேகங்கள் நிவிர்த்தியாகமாட்டா. ஏனெனில் சிலர் சிரவணஞ்செய்து பாஷாக்கிரந்தங்களைச் செய்திருக்கிறார்கள். பஞ்சபாஷாதிகள்[18] போல்வன. அவைகளில் சிலவிஷயங்கள் மட்டும் சாஸ்திரானுசாரமாயிருக்கின்றன. மேலும், கேட்ட அர்த்தத்தில் சரியான தாற்பரியங்களையடையாத விடங்களில் சாஸ்திரவிருத்தமாயுமிருக்கின்றன. ஆகையாற் சிரவணத்தினாற் செய்யப்பட்ட பாஷாக் கிரந்தங்களினால் நிர்ச்சந்தேகமான ஞானமுண்டாகிறதில்லை. வேறு சிலர் சொற்பசாஸ்திரம் படித்து பாஷாக் கிரந்தங்களைச் செய்திருக்கிறார்கள். ஆத்மபோதாதிக் கிரந்தங்கள்[19] போல்வன. அவைகளில் வேதாந்தார்த்தம் பூர்ணமாகச் சொல்லப்படாதபடியினால் நிர்ச்சந்தேகமான ஞானமுண்டாகிறதில்லை. இந்த விசாரசாகரக் கிரந்தத்திலோவெனில் வேதாந்தம் பூர்ணமாயும் சாஸ்திரானுசாரமாயும் எந்தவிடத்திலும் சாஸ்திர விருத்தமன்றியிலும் ஆத்மஞானத்துக்கு உபயோகமான விஷயங்கள் விஸ்தாரமாயும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் சகலபாஷா கிரந்தங்களிலும் இது உத்தமமானது. இதற்குச் சமானமான வேறுபாஷாக் கிரந்தங்களில்லை.

## III அனுபந்த சதுஷ்டய நிரூபணம் (14—39)

14. அனுபந்த சதுஷ்டயம்:— அதிகாரி, சம்பந்தம், விஷயம், பிரயோஜனம் இவைகளுக்கு அனுபந்த[20] மென்று பெயர். இந்த அனுபந்தத்தை யறியாமற் போனால் விவேகிக்குக் கிரந்தத்திற் பிரவிர்த்தியுண்டாகமாட்டாது. ஆகையால் அந்த அனுபந்தத்தைச் சொல்லுகிறோம்.

---

18. 19. வடதேசத்தில விளங்கும் ஷட்பீரசினீ முதலிய சிலகிரந்தங்களை உத்தேசித்து இவ்விடத்தில் பிரஸ்தாபஞ் செய்யப்பட்டிருக்கிறது.

20. கட்டிடத்துக்கு நாலு கால்கள் இருப்பது போலும் அவைகளன்றியில் அது நிற்காதது போலும் சகல கிரந்தங்களுக்கும் நான்கு அனுபந்தங்களுண்டு. இவைகளின்றியில் அவைகளிரா. இவைகளைத்தெரிந்து கொள்ளாமல் விவேகிக்குக் கிரந்தத்திற் பிரவிர்த்தியுண்டாக மாட்டாது. ஆகையால் கிரந்தாரம்பத்தில் இவைகளைச் சொல்ல வேண்டியது. தன்னையறிந்த பிறகு எது முமுக்ஷுவை கிரந்தத்தோடு சம்பந்தப்படுத்துகிறதோ அது அநுபந்தமாம்.

### அதிகாரி (15—21)

15. அதிகாரிலக்ஷணம்:—அந்தக்கரணத்தினிடத்தில் மலம்விக்ஷேபம் ஆவரணம், என்கிற மூன்று தோஷங்களுண்டு. நிஷ்க்காமகர்மத்தினுல் மலமும், உபாசனையினுல் விக்ஷேபமும் ஞானத்தினுல் ஆவரணமும் நிவர்த்தியாகின்றன. எவனுடைய மலவிக்ஷேபங்கள் மேற்சொல்லியபடி நிவர்த்தியாகியும் சொரூபத்தை மறைக்கிற அஞ்ஞானமட்டும் எவன் சித்தத்திலிருக்கிறதோ மேலும் நாலுசாதனங்களோடுகூடி எவனிருக்கிறனே அவன்தான் அதிகாரி.[22]

---

21. ஸ்தூலதேகத்தில் வாதம் பித்தம் கபமென்கிற மூன்று தோஷங்கள் இருப்பதுபோலவும் அவைகளின் நிவர்த்திக்காகத் தன்வந்திரி முதலியவர்கள் ஆயுள்வேதத்தைச் செய்திருக்கிறது போலவும் அந்தக்கரணத்தினிடத்தில் மலம் விக்ஷேபம் அஞ்ஞான மென்கிற மூன்று தோஷங்களுண்டு. இவைகளை நிவர்த்திக்கக் கர்மகாண்டம் உபாஸனுகாண்டம் ஞானகாண்டமாகிற மூன்றுகாண்டங்களோடு கூடிய நாலு வேதங்கள் பரமேஸ்வரனுற்செய்யப்பட்டிருக்கின்றன. மலம் என்றுல் பாவம். இது சமஸ்காரரூபமாயிருப்பதால் அதிசூக்ஷமமாயிருக்கிறது; பிரத்தியக்ஷமாய்ப்பார்க்கப் படுகிறதில்லை. அசுபவாசனையால் அதையனுமானிக்க வேண்டியதாயிருக்கிறது. நிஷித்த கர்மத்திலாவது விஷயத்திலாவது எவனுக்கு இச்சையுண்டோ அவனுடைய சித்தத்தில் அசுபவாசனையிருக்கின்றது. ஆகையால் அவன் மலதோஷத்தோடு கூடியவனென்று அனுமானிக்கத்தக்கவன். இதைநிவர்த்திக்க நிஷ்காமகர்மம், பூததயை, ஈஸ்வர நாமோச்சாரணம் இவைகள் உபாயங்களாம். இவைகளில் முதல் இரண்டு உபாயங்களும் மலத்தை மட்டும் போக்கும். நாமோச்சாரணம் விக்ஷேபத்தையும் போக்கும். சித்தசாஞ்சல்யத்துக்கு விக்ஷேபமென்று பெயர். எவனுடைய சித்தம் வேதாந்தச் சிரவணத்திலாவது தன் சொரூபத்திலாவது ஸ்திரமாய் நிற்காமல் இதர விஷயங்களில் பிரமிக்கிறதோ அவன் சித்தம் சஞ்சலிக்கிறது. ஆகையால் அவன் விக்ஷேப தோஷத்தோடு கூடினவன். இதை நிவர்த்திக்க ஈஸ்வரநாமோச்சாரணம் அஜபாமந்திரோச்சாரணம், ஈஸ்வரமூர்த்தித்தியானம் முதலிய உபாஸனைகள் உபாயங்களாம். ஏனெனில் உபாஸனையால் சித்தம் ஏகாக்கிறமாகிறது. அல்லது ஈஸ்வரபுத்தியால் குருவைச்சரீரம் வாக்கு, மனது, தனம், இவைகளாற் சேவிக்கவேண்டியது. இச்சேவை கர்மோபாஸனைகளன்றியிலேயே சித்தத்திற்குச் சுத்தியும் ஏகாக்கிறதையையும் கொடுக்கும். அல்லது பிரீதியுடன் வேதாந்தச்சிரவணத்தில் பிரவிர்த்திப்பதும் உபாயந்தான். இதுவும் கர்மோபாஸனைகளன்றியில் சித்தத்துக்குச் சுத்தியும் ஏகாக்கிறதையையுங் கொடுக்கும். பிரம்மரூபஆத்மாவை நான் அறியவில்லை யென்பது அஞ்ஞான லக்ஷணம் தத்துவ ஞானத்தால் இது நிவர்த்தியாகும்.

22. பிரகஸ்பதிஸவனம் என்கிற யாகத்துக்குப் பிராமணன் எப்படி அதிகாரியோ மற்றவர்களல்லவோ அப்படியே ராஜஸூய யாகத்துக்கு க்ஷத்திரியனும்.

16. நான்கு சாதனங்களாவன:— 1. விவேகம். 2. வைராக்கியம் 3. சமாதி ஷட்கசம்பத்தி. 4. முமுக்ஷுதை.

17. விவேகம்:—ஆத்மா நாசரகிதமாயும் கிரியாரகிதமாயும் ஜகத்து நாசஸகிதமாயும் கிரியாசகிதமாயும் இருத்தலை யறிவதே விவேகம்.[23] இது மற்ற சாதனங்களுக்காதாரமாயிருக்கிறது. ஏனெனில் முதலில் விவேகமுண்டானால்தான் வைராக்கியாதி மற்றசாதனங்களுமுண்டாகும். விவேகமுண்டாகாவிட்டால் மற்ற மூன்றும் உண்டாகா. ஆதலால் வைராக்கியாதி மூன்றுக்கும் விவேகம் ஹேதுவாயிருக்கிறது.

18. வைராக்கிய லக்ஷணம்:—பிர்ம்ம லோகபரியந்தமுள்ள போகங்களில் இச்சையுண்டாகாமல் அவைகளை யொழிப்பதே வைராக்கியமென்[24]று வேதார்த்தத்தை யறிந்த முனிகள் சொல்லுகிறார்கள்.

19. சமாதி ஷட்க சம்பத்தியாவது:—சமம், தமம், சிரத்தை, சமாதானம், உபரதி, திதிக்ஷை யென ஆறும்.

---

ஸோமயாகத்துக்கு வைசியனும் எப்படி யதிகாரிகளோ மற்றவர்களன்றோ அப்படி வேதாந்த விசாரத்துக்கு நான்கு சாதனங்களோடு கூடினவனே அதிகாரி

23. அன்னமானது நீரையும் பாலையும் பிரிக்கிறது போல் ஆத்மாவையும் அனாத்மாவையும் திடவிசாரத்தால் பகுத்தறிவதே விவேகம். இவ்விவேகத்தால் மட்டும் ஜகத்மித்தையென்னும் பரோக்ஷ ஞானமுண்டாகுமே தவிர அபரோக்ஷ ஞானமுண்டாகமாட்டாது. ஆகையால் மற்றசாதனங்களும் வேண்டியவை. வேதாந்த பரிசயமுள்ள சிலர் வைராக்கியாதி சாதனங்களுடன் கூடினவர்களாகக் காணப்படவில்லையெனில், ஊஷர பூமியிற் போட்ட வாழைக்குக் கிழ்க்கண் முளைக்காதது போல் மல விக்ஷேபங்களோடு கூடிய அந்தக்கரணத்தில் வைராக்யாதி இதர சாதனங்களுண்டாகா. செழிப்பான பூமியில் வைத்த வாழைக்குக் கிழ்க்கன்களுண்டாவது போல் சுத்த அந்தக்கரணத்திலும் விவேகம் வைராக்கியாதிகளை யுண்டுபண்ணும். ஆகையால் முமுக்ஷுவானவன் சித்தசுத்தி பூர்வகமாய் விவேகத்தைச்சம்பாதிக்க வேண்டியது.

24. வைராக்கியமாவது தியாகஞ்செய்யுமிச்சை, அல்லது இச்சையில்லாமை. இது நாலுவகை. (1) யதமானம். (2) வியதிரேகம். (3) ஏகேந்திரியம் (4) வசீகாரம் என்பன.

யதமானம் என்றால் மந்தவிவேகம். வியதிரேகம்:— நகுலக்கொடியையாசிரயித்துக் கீரிப்பிள்ளை பாம்புடன் சண்டையிடுவது போல் சத்சங்கத்தால் துர்குணத்தை விடுதல் வியதிரேகமாம். இந்திரியநிக்கிரகமே ஏகேந்திரியம், மனோநிக்கிரகமே வசீகாரம். இது மந்தம், தீவிரம், தீவிரதரமென மூவகையாம். புத்திரதனாதி நாசத்தால் சம்சாரத்தை வெறுக்கும் புத்திவிருத்தி மந்தமாம். இந்த லோகத்தில் புத்திராதி சம்பந்தத்தாலுண்டாகும் சுகத்தை இச்சிக்காமலி

(1) அவைகளில் சமமாவது[25] மனதை விஷயத்திற் போகவொட்டாமற் செய்வது.

(2) தமமாவது[26] இந்திரியங்களை விஷயத்திற் போகவொட்டாமற்செய்வது.

(3) சிரத்தையாவது[27] வேதகுருவாக்கியங்களில் விசுவாசம் வைப்பது.

(4) சமாதானமாவது[28] மனது சலியாமல் ஸ்திரமாய் நிற்பது.

(5) உபரதியாவது[29] சாதனசஹித[30] சகல கர்மங்களையும் விட்டும் விஷ

---

ருப்பது தீவிரம். புனராவிர்த்தி யுண்டென்பதை யறிந்து சர்வலோகங்களின் இச்சையு மில்லாமலிருப்பது தீவிரதரம். இவைகளில் ஞானத்துக்குக் காரணம தீவிரதரவசீகார வைராக்கியம். இதைத்தான் சம்பாதிக்கவேண்டும்.

25. தோஷதிருஷ்டியாகிற அங்குசத்தால் மனதாகிற யானையை சுவாதீனப்படுத்துவது சமம்.

26. தோஷதிருஷ்டிபூர்வமாய்ச் சாஸ்திரசிந்தனையாகிற சாட்டையால் சப்தாதிவிஷயரூபமாகிற மார்க்கத்தில் போகும் இந்திரியங்களாகிற குதிரைகளைச் சுவாதீனஞ்செய்தல் தமம்.

27. எவனுக்கு ஈசுரவன் குரு முதலியவர்களிடத்தில் பூஜ்யபுத்தியால் பிரீதிரூபபக்தியுண்டாகிறதோ அவனுக்கு வேதம சாஸ்திரம் குரு இவர்களின் வசனங்களில் சிரத்தையுண்டாகிறது. ஆகையால் சிரத்தை பக்தியை அபேக்ஷிக்கிறது. இந்தக்கிரந்தத்தில் மூன்றாவதாகச் சொல்லப்பட்ட சிரத்தை சில கிரந்தங்களில் ஆறாவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

28. பிரம்மரூப லக்ஷியத்தில் சித்தம் ஏகாக்கிரமாயிருப்பது சமாதானம். முன் அதிகாரிலட்சணத்தில் உபாசனையால் விக்ஷேப தோஷம் நீங்கி ச்சித்த ஏகாக்கிரதையுண்டாயிருக்க வேண்டியதென்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விரண்டு சித்த ஏகாக்கிரதைகளுக்கும் வித்தியாசமென்னவெனில், முதலாவது சகுணப்பிரம்மம் அல்லது மூர்த்தியுபாஸனையால் உண்டாகிறது, இரண்டாவது நிர்க்குணப்பிரம்மத்தினிடத்தில் இருப்பது.

29. [illegible] அனுபவப்பட்ட விஷயத்தில் [illegible] இச்சையுண்டாகாமலிருப்பது வைராக்கியத்தின் பலமாகிற உபரதி. அடைந்திராத விஷயத்தில் தோஷதிருஷ்டி பூர்வமாய் இச்சையில்லாமலிருப்பது வைராக்கியம்.

30. ஸ்திரீ, தனம், ஜாதி [illegible]

யபோகங்களை விஷமாக எண்ணியும் ஸ்திரீயை வெறுத்தும்[31] இருப்பதாம்.

(6) திதிக்ஷையாவது[32] சீதோஷ்ணம் பசிதாகமுதலிய துவந்தங்களைச் சகிப்பது திதிக்ஷை யென முனிகள் சொல்வார்கள்.

இந்த சமமுதலிய ஆறுமொரே[33] சாதனமாகவெண்ணப்படுகிறது ஆகையால் சாதனங்கள் ஒன்பதாகாமென்றும் நான்குதாமென்றும் விவேகிகள் சொல்லுகிறார்கள்.

---

31. விஷயபோகங்களில் ஸ்திரீபோகஞ் சேர்ந்திருந்தாலும் இவ்விடத்தில் இதைமறுபடியும் எடுத்துச்சொன்னதற்கு அபிப்பிராயமென்னவெனில், பலஜன்மங்களில் செய்த ஸ்திரீசம்பந்த சம்ஸ்காரம் தீவிரமாயிருப்பதாலும் ஸ்திரீயினிடத்தில் சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தமைதுனங்களாகிற ஆறுவிஷயங்களுமடையப்படுவதாலும் மற்றவிஷயங்களைக் காட்டிலும் ஸ்திரீ பிரபலமாயிருக்கிறாள். அவளிடத்தில் அதிக வெறுப்புண்டாகிறதற்காக அவளைக்குறிப்பிட்டுச் சொல்லப்பட்டிருக்கிறது.

32. சிரவணாதி பிரசங்கங்களில் அவைகளுக்கு விரோதமான சீதோஷ்ணம் பசிதாகம் முதலியவைகளைச் சகித்தல் திதிக்ஷை. இது இல்லாவிடின் சிரவணாதி காலங்களில் பசிதாகம் முதலியவைகள் சம்பவித்தால் அவைகளின் நிவிர்த்தியில் மனது பிரவிர்த்தித்துச் சிரவணாதிகளுக்கு விக்கினமுண்டாக்கும். ஆகையால் திதிக்ஷை யகத்தியம் வேண்டும்.

33 சரீரரூபரதத்துக்கு இந்திரியங்களாகிற குதிரைகள், மனமாகிற லகான் புத்தியாகிற சாரதி, ஆத்மாவாகிற எஜமான் உள. எவனுடையசாரதி சரியாயிருக்கிறதோ அவனுடைய இந்திரியமாகிற குதிரைகள் நன் மார்க்கத்திற் சென்று எஜமானை ஸ்வர்க்கம் அல்லது மோக்ஷமாகிற இடத்திற் சேர்ப்பிவிக்கும். சாரதி சரிதப்பாயிருந்தால் இந்திரியங்களாகிற குதிரைகள் வழிதப்பிப்போய் எஜமானை நரகத்திற் கொண்டுபோய்ச் சேர்ப்பிவிக்கும். ஆகையால் முமுக்ஷுவானவன் புத்தியாகிற சாரதி அவிலுக்குத் தோன்றுகிறபடி நடக்காமலும் இந்திரியங்களாகிற குதிரைகள் நன்மார்க்கத்திற் செல்லும்படிக்கும் செய்யவேண்டியது. இவ்விடத்தில் புத்தியாகிற சாரதியை வசப்படுத்துதல் சமம் எனப்படும். இந்திரியங்களாகிற குதிரைகளை வசப்படுத்துதல் தமமெனப்படும். சாரதியின் ஆதீனத்திற் குதிரைகளும் குதிரைகளின் ஆதீனத்தில் சாரதியுமிருப்பது போல் புத்தியும் இந்திரியங்களும் இருக்கின்றன. ஒரு மாலையில் அனேகமணிகளிருந்தாலும் மாலை ஒன்றென்று சொல்வது போல் சமதமாதிகள் வெவ்வேறாயிருந்தாலும் பரஸ்பரசகாயத்தை அபேக்ஷிக்கிறபடியால் அவைகள் ஆறுங்கூடின ஒரு சாதனமென்று சொல்லப்படுகின்றன [illegible] அடியில் [illegible].

(1)[34] மனதையடக்காதவரையில் இந்திரியங்களடங்குகிறதில்லை. ஆகையால் [illegible] அபேக்ஷிக்கிறது.

(2) மனதை யடக்காத வரையில் ஸ்திரீ புத்திராதிகளில் ஆஸக்தியுள்ள மனதிற்கு வேதாந்த சாஸ்திரத்திலும் சற்குருவினிடத்திலும் சிரத்தையுண்டாகமாட்டாது. ஆகையால் சிரத்தை சமத்தை யபேக்ஷிக்கிறது.

(3) மனதையடக்காதவரையில் பிரமத்தினிடத்தில் சித்தம் ஏகாக்கிரதையை யடையமாட்டாது. ஆகையால் சமாதானமும் சமத்தை யபேக்ஷிக்கிறது.

(4) பால் வார்த்து வளர்க்கப்பட்ட பூனை கட்டில் அகப்படாதபக்ஷத்தில் எலியைக் கண்டவுடன் அதன்பேரில் பாய்வதுபோல் விஷயத்தினின்றும் ஒழிவடைந்த மனதும் அடக்கப்படாதவரையில் புதிதாய்ப் பிராப்தமான விஷயத்தில் மறுபடியும் பாயும். ஆகையால் உபரதியும் சமத்தை யபேக்ஷிக்கிறது.

(5) அந்தர்முகமனதால் தான் சீதோஷ்ணாதிகளைச் சகிக்கமுடியும். பகிர்முகமனதால் சகிக்கமுடியாது. ஆகையால் திதிக்ஷையும் சமத்தை யபேக்ஷிக்கிறது. இவ்விதமாகத் தமாதிகள் ஐந்தும் சமத்தின் சகாயத்தை யபேக்ஷிக்கின்றன.

(6) இந்திரியங்கள் அடங்காதவரையில் மனம் அடங்காதாகையால் சமம் தமத்தை யபேக்ஷிக்கிறது.

(7) ரூபாதிவிஷயங்களில் ஆஸக்தியுள்ளவனுக்குக் குருசாஸ்திரங்களிடத்தில்சிரத்தையுண்டாகாதபடியால் சிரத்தையும் தமத்தையபேக்ஷிக்கிறது.

(8) இந்திரியநிக்கிரகமன்றியில் மனம் ஏகாக்கிரதையை யடையமாட்டாது. ஆகையால் சமாதானமும் தமத்தை யபேக்ஷிக்கிறது.

(9) இந்திரியங்களை யடக்காதவரையில் அனுகூலவிஷயங்களில் இச்சையுண்டாய்க் கொண்டேயிருக்கும். ஆகையால் உபரதியும் தமத்தை யபேக்ஷிக்கிறது.

(10) இந்திரியநிரோதமன்றியில் விஷயத்தைப் பார்க்கிறதினால் சஞ்சலப்படும் மனது சீதோஷ்ணாதிகளைச் சகிக்கமுடியாது. ஆகையால் திதிக்ஷையும் தமத்தை யபேக்ஷிக்கிறது.

(11) சத்குரு சத்சாஸ்திரம் இவைகளில் விசுவாசமன்றியில் சிரவணத்திற் பிரவிர்த்தியுண்டாகமாட்டாது. சமாதிகள் சிரத்தையை யபேக்ஷிக்கின்றன.

(12) சித்த ஏகாக்கிரதையின்றியில் சமாதிசாதனங்கள் சித்திக்கமாட்டா. ஆகையால் சமாதிகள் சமாதானத்தை யபேக்ஷிக்கின்றன.

(13) விஷயத்தினின்றும் சித்தம் உபரதியையடையாமற் போனால் சமாதிகள் சித்திக்கமாட்டா. ஆகையால் சமாதிகள் உபரதியை யபேக்ஷிக்கின்றன.

20. முமுக்ஷுதை:— பிரம்மப் பிராப்தியும் அனர்த்த நிவிர்த்தியுமே மோக்ஷத்தின் சொரூபம்.[34] அவைகளில் தீவிரமான இச்சை முமுக்ஷுதையெனப்படும்.

21. ஞானசாதனங்கள்:— விவேகாதிகள் நான்கு, சிரவண, மனன நிதித்தியாஸன மென மூன்று, தத்துவம்,[35] பதார்த்தங்களின் சோதனை ஒன்று ஆக எட்டும் ஞானத்துக்குச் சாதனங்களெனச் சொல்லப்படும்.

22. அந்தரங்க பகிரங்க ஸாதனங்கள்:— மேற்சொன்ன விவேகாதிகளெட்டும் அந்தரங்க[36] ஸாதனங்களாம். யஞ்ஞாதி கர்மங்கள்[37] பகிரங்கஸாத

---

(14) சீதோஷ்ணம், பசிதாகம், லாபநஷ்டம், முதலிய வியவகார உபத்திரவங்களைச் சகிக்காமற்போனால் மனநிரோதம், இந்திரியநிரோதம், குருசாஸ்திர வசனங்களில் விசுவாசம், சித்தத்தின் ஏகாக்கிரதை, அடையப்பட்டதனுதி விஷயங்களில் உபரதி இவைகள் உண்டாகமாட்டா. ஆகையால் சமாதிகள் திதிக்ஷையையும் அபேக்ஷிக்கின்றன. இவ்விதமாகச் சமாதிகள் பரஸ்பரசகாயத்தை யபேக்ஷிக்கின்றன. ஆகையால் இவைகளெல்லாங்கூடியது ஒரே சாதனமென்று சொல்லப்படுகின்றது.

34. பசியுள்ளவன் அன்னத்தைத் தேடுகிறதுபோலும் நெருப்பில் அகப்பட்டவன் ஜலத்தைத்தேடுகிறதுபோலும் இந்த முமுக்ஷுதை எல்லா சாதனங்களுக்கும் முந்தியேயுண்டாகிறது. ஏனெனில் பிரயோஜனமன்றியில் மந்தனும் ஒன்றிலும் பிரவிர்த்திக்கமாட்டான். ஆகையால் மந்தமான மோக்ஷரூபபலத்தின் இச்சையில்லாவிட்டால் நிஷ்காமகர்மத்தில் ஒருவனுக்கும் பிரவிர்த்தி யுண்டாகமாட்டாது. ஆகையால் மந்தமான மோக்ஷ இச்சை எல்லாச்சாதனங்களுக்கும் முந்தியே இருக்கவேண்டியது. அப்போது அது தீவிரமாயிராது. மற்றசாதனங்கள் சித்தியான்பிறகு இந்த இச்சை தீவிரமாகிறது. இத்தீவிர இச்சைதான் சிரவணாதிகளிற் பிரவிர்த்தி யுண்டாகும்படி செய்கிறது.

35. சேதனத்துக்கும் ஜடத்துக்குமுள்ள காரணகாரியசம்பந்தம் அதிஷ்டான அத்தியஸ்த சம்பந்தம் திருஷ்டிருசிய சம்பந்தம் சாக்ஷிசாக்ஷியசம்பந்தம் இவைகளைச் சாவதிரேகத்தமாய் விசாரிப்பதே பதார்த்த சோதனையாம். அன்னப்பட்சி பாலையும் நீரையும் பிரிக்கிறதுபோலும், அல்லது வெண்ணெயைத் தயிரிலிருந்து பிரிப்பதுபோலும்.

36. தனுசிற் பூட்டப்பட்ட பாணமானது லக்ஷியத்திற்குச் சமீபத்திற் போவதால் அது அடிக்கிற விஷயத்தில் அந்தரங்கச் சாதனமாயிருக்கிறது. இதுபோல் விவேகாதிகள் எட்டும் ஞானத்துக்குச் சமீபத்தில் இருப்பதால் அந்தரங்கச்சாதனங்களென்று சொல்லப்படுகின்றன.

37. [illegible] பாணத்தைப்பிரயோகிப்பது தூரமாய்த்தூரத்திலிருந்துகொண்டு லக்ஷியத்தையடிக்கச் சாதனமாயிருப்பதால் அது பகிரங்க சாதனமாயிருக்கிறது. இதுபோல் யஞ்ஞாதிகர்மங்களும் ஸகுணோபாஸனாதிகளும் ஞானத்து

வாங்களாம். இவைகளில் ஜிஞ்ஞாசுவானவன் பகிரங்கத்தை விட்டு அந்தரங்கத்தைக்கைக்கொள்ளவேண்டியது. எந்தச்சாதனத்துக்குச் சிரவணமாவது ஞானமாவது பிரத்தியக்ஷபலனாக விருக்கிறதோ அது அந்தரங்கச்சாதனம். விவேகாதிகள் நான்கும் சிரவணத்துக்குச் சாதனமாயிருக்கின்றன. ஏனெனில், விவேகாதிகளன்றியில் பகிர்முகபுருஷனுக்குச் சிரவணம் சித்திக்கிறதில்லை. அப்படியே சிரவண, மனன, நிதித்தியாசனங்கள் ஞானத்திலுபயோகப்படுகின்றன. ஏனெனில் சிரவணாதிகளன்றியில் ஞானமுண்டாகிறதில்லை. அப்படியே தத்பதம், துவம்பதம் இவைகளின் அர்த்த ஞானமன்றியில் அபேதஞானமுண்டாகிறதில்லை. இப்படி விவேகாதி நான்குசாதனங்கள் சிரவணத்திலும் சிரவணாதி நான்கு சாதனங்கள் ஞானத்திலுமுபயோகப்படுகிறபடியால் மேற்படி எட்டும் அந்தரங்கஸாதனங்களெனச் சொல்லப்பட்டன.

எந்தச்சாதனத்துக்குச் சிரவணமாவது ஞானமாவது பிரத்தியக்ஷபலனாகிறதில்லையோ ஆனால் அந்தக்கரணசுத்தி யெதற்குப்பலனாயிருக்கிறதோ, அது ஞானத்துக்குப் பகிரங்கஸாதனமாகச்சொல்லப்படுகிறது. இவ்விதமாய் யஞ்ஞாதிகர்மங்கள் பகிரங்கச் சாதனங்களாகின்றன. யஞ்ஞாதிகர்மங்கள் சம்சாரத்துக்குச் சாதனமாயிருக்கிறபடியால் அவைகளால் அந்தக்கரணசுத்தி யுண்டாகமாட்டாதென்று சொன்னாலும் அவைகள் ஸகாமபுருஷனுக்குச் சம்சாரத்துக்கு ஹேதுவாயும், நிஷ்காமபுருஷனுக்கு அந்தக்கரணசுத்திக்கு ஹேதுவாயுமிருக்கின்றன. இவ்விதமாக நிஷ்காமபுருஷனுக்கு அந்தக்கரணசுத்தி மூலமாய் ஞானத்துக்கு ஹேதுவாயிருப்பதால் யஞ்ஞாதிகள் பகிரங்கஸாதனங்களென்றும் விவேகாதிகள் அந்தரங்கஸாதனங்களென்றும் சொல்லப்பட்டன. பகிரங்கமென்றால் தூரத்திலிருப்பது. அந்தரங்கமென்றால் சமீபத்திலிருப்பது. யஞ்ஞாதி கர்மங்களையும் அவைகளுக்குச் சாதனமான ஸ்திரீதனபுத்திராதிகளையும் தியாகம் செய்கிறவன் ஞானாதிகாரியாவான். ஞானாதிகாரியிடத்தில் யஞ்ஞாதிகள் சம்பவிக்காமையால் தூரத்திலிருப்பன வென்றும் விவேகாதிகள் சம்பவிக்கிறபடியால் சமீபத்திலிருப்பனவென்றும் சொல்லப்படுகின்றன.

---

க்குத் தூரத்திலிருந்துகொண்டு மலவிக்ஷேபங்களைப் போக்கடித்துச் சித்த சுத்தியைக் கொடுத்து ஞானத்தில் இச்சையுண்டாக்குவது மூலமாய் ஞானத்துக்குச் சாதனங்களாயிருக்கின்றன. ஆகையால் அவைகள் பகிரங்க சாதனங்கள். இவைகளில் அந்தரங்கச் சாதனத்தைச் சம்பாதித்தபின் பகிரங்கத்தைவிட வேண்டியது. கிணற்றிலிருந்து ஓராதாரத்தைப் பிடித்துக்கொண்டு தொங்கும் புருஷன் அவனை வெளிப்படுத்துவதற்கு விடப்பட்ட கயிற்றைப்பிடித்துக்கொள்

23. விவேகாதிகளும் அந்தரங்க ஸாதனங்கள்:— விவேகாதிகள்[38] சிரவணத்திலுபயோகப்படுகின்றன. சிரவணாதிகள் ஞானத்திலுபயோகப்படுகின்றன. ஆகையால் விவேகாதிகளையபேக்ஷித்துச் சிரவணாதிகள் அந்தரங்கமாயும், சிரவணாதிகளையபேக்ஷித்து விவேகாதிகள் பகிரங்கமாயுமிருக்கின்றன. எல்லாக்கிரந்தங்களிலும் விவேகாதிகளையும் அந்தரங்கஸாதனமாய்ச்சொல்லியிருந்தாலும் பகிரங்கமாய்ச் சொல்லாவிட்டாலும் விவேகாதிகளுக்கு ஞானசாதனமான சிரவணம் பிரத்தியக்ஷபலனாயிருக்கிறது. சிரவணாதிகள்போல விவேகாதிகளும் ஜிஞ்ஞாசுவாற்கைக்கொள்ளத்தக்கனவாயிருக்கின்றன, யஞ்ஞாதிகளைப் போலத் தள்ளத்தக்கனவாயிருக்கவில்லை. ஆகையால் விவேகாதிகள் அந்தரங்கமெனச் சொல்லப்படுகின்றன. மேலும் யஞ்ஞாதிகளையபேக்ஷித்தும் அந்தரங்கமாயிருப்பதாலும் அந்தரங்கசாதனமென்றே சொல்லப்படுகின்றன.

24. சிரவண லக்ஷணம்:—விசாரித்துப் பார்த்தால் ஞானத்துக்குமுக்கியமான அந்தரங்கஸாதனம் "தத்துவமஸி" முதலிய மகாவாக்கியங்களைத் தவிர சிரவணாதிகளுமன்று. ஏனெனில் [39] யுக்தியினால் வேதாந்த வாக்கியத்தின் தாற்பரியத்தை நிச்சயஞ்செய்வது சிரவணமென்று சொல்லப்படுகிறது.

---

னுமுன் தான்முன் பிடித்திருந்த ஆதாரத்தை விட்டுவிட்டால் எப்படிக்கிணற்றில் முழுகிப்போவானோ அப்படி விவேகாதிகளைச் சம்பாதிக்கும்முன் யஞ்ஞாதிகளை விட்டுவிடும் புருஷன் கெட்டுப்போவான்.

38. சூத்திரனுக்குப் பூணூல்போடுவதால் பிராம்மணத்துவம் எப்படிச்சித்திக்கமாட்டாதோ அப்படிச் சாதன சதுஷ்டயமில்லாதவனுக்குச் சிரவணத்தால் ஞானமுண்டாகமாட்டாது. சிரவணமும் திடமாயிருக்கமாட்டாது. சிரவணகாலத்திலாவது அவைகளை விசாரித்து அரியவேண்டியது. விவேகாதிகள் நான்கும் அவசியம் வேண்டியவை. ஏனெனில் முதல் சாதனமட்டுமுள்ள சாஸ்திரஞ்ஞன் விஷயத்தில் ஆசக்தியுள்ளவனாய்க் காமியகர்மத்திற் பிரவிர்த்திக்கிறான். ஆகையால் இரண்டாவது சாதனம் வேண்டும். இவ்விரண்டுசாதனங்களிருந்தும் சிலர்கோபாதிகளால் தபிக்கிறபடியால் மூன்றாவது சாதனமும் வேண்டும். இம்மூன்றுமிருந்தும் சிலர் மோக்ஷஇச்சையில்லாமல் சிரவணாதிகளில் பிரவிர்த்திக்காமலிருக்கிறபடியால் நான்காவது சாதனமும் வேண்டும்.

39. அக்கினியின் ஞானம் புகையாலுண்டாகிறது. ஆனதால் புகை அக்கினியை நிச்சயிக்குங்குறியாயிருக்கிறது. இதுபோல் வேதாந்த வாக்கியங்களின் தாற்பரியமாகிற அத்துவைத ஸ்வரூபஞானம் உபக்கிரமஉபஸம்ஹாராதிகளால் உண்டாகிறது. ஆகையால் இவைகள் தாற்பரியத்துக்கு லிங்கங்களாயிருக்கின்றன. யுக்திசப்தத்தால் இந்தலிங்கங்களையறியவேண்டியது.

25. மன்னலக்ஷணம்:—ஜீவப்பிர்ம்மங்களுடைய அபேதத்துக்குச்[40]

---

இவையாவன.

(1). உபக்கிரமஉபஸம்ஹாரம்.
(2). அப்பியாஸம்.
(3). அபூர்வதை.
(4). பலம்.
(5). அர்த்தவாதம்.
(6). உபபத்தி.

1. **உபக்கிரமமாவது** பிரகரணத்தின் ஆரம்பம். உபஸம்ஹாரமாவது பிரகரணத்தின் முடிவு. ஆரம்பத்திற் சொல்லிய அர்த்தத்தையே முடிவிலுஞ்சொல்வது உபக்கிரமஉபஸம்ஹாரங்களின் ஏகரூபமாகிற முதலாவது லிங்கம்.

2. அத்வைதார்த்தத்தை யடிக்கடிச்சொல்வதுஅப்பியாஸமாம். யாசகன்ஸ்வப்பிரயோஜனமான ஒரேகருத்தை வெவ்வேறு வசனங்களால்வெளியிடுவதுபோல் வெவ்வேறுயுக்திகளால் அத்வைதப்பிரமத்தைப் பிரதிபாதிப்பதே **அப்பியாஸம்.**

3. உபநிஷத்துக்களன்றியில் இதரப்பிரமாணங்களால் அறியபடாதென்றும் பிர்ம்மம்ஸ்வயம் பிரகாசமாயிருப்பதால் இதரப்பிரமாணங்களையபேக்ஷிக்கிறதில்லையென்றும் பிரதிபாதிப்பதே **அபூர்வதை.**

4. அத்வைதப்பிர்ம்மஞானத்துக்கு ஜன்மாதி அனர்த்தங்களின் ர்த்தியும் பிர்ம்மத்தின் பிராப்தியுமே பலனெனச்சொல்வது பலனாகிற நான்காவது லிங்கம்.

(5). பேதஞானத்தின் நிந்தை அபேதஞானத்தின் ஸ்துதி ரூபங்களான வாக்கியங்கள் **அர்த்தவாதமெனப்படும்.**

(6). பிரதிபாதிக்கப்படும் அத்வைதார்த்தத்துக்கு அனுகூலமானதிருஷ்டாந்தங்கள் உபபத்தியாகிற ஆறாவதுலிங்கமாம். மண்ணுக்கும் அதிற்பிறந்த கடாதிகளுக்கும் வித்தியாஸமில்லாததுபோலும் தங்கத்துக்கும் அதனாற்செய்த நகைகளுக்கும் வித்தியாஸமில்லாததுபோலும் காரணமான பிர்ம்மத்துக்கும் அதின்காரியமான ஜகத்துக்கும் வித்தியாஸமில்லையெனப்பிரதிபாதிப்பதே **உபபத்தியாம்.** இவ்வாறு லிங்கங்களால் வேதாந்தவாக்கியங்களின் அத்வைதார்த்தத்தை நிச்சயிப்பதே சிரவணமெனப்படும்.

40. **அபேதத்துக்குச்சாதகமான்யுக்தி:—** (1) அனுமானப்பிரமாணயுக்தி:— எது சச்சிதானந்தஸ்வரூபமோ அது பிர்ம்மத்தைக்காட்டிலும் வேறன்று. எது சச்சிதானந்தஸ்வரூபமன்றோ அதுபிர்மத்துக்கு வேறாயிருக்கிறது. ஈஸ்வரன் சச்சிதானந்தரூபமாயிருப்பதால் பிர்ம்மத்துக்கு வேறன்று. கடம் வியாவகாரிகத்தில் சச்சிதானந்தரூபமாயில்லாததினால் பிர்ம்மத்துக்கு வேறாயிருக்கிறது.

41
சாதகமான யுக்திகளாலும் பேதத்துக்குப்பாதகமான யுக்திகளாலும் அத்விதீயப் பிர்ம்மத்தைச்சிந்தனைசெய்தல் மனனமென்று சொல்லப்படுகிறது.

**26.** நிதித்தியாஸனலக்ஷணம்:—அனாத்மாகார விர்த்திசம்பந்தமேயில்லாமலிருக்கிற பிர்ம்மாகாரவிர்த்தியே நிதித்தியாஸனமென்று சொல்லப்
42

---

ஜீவன்சச்சிதானந்த ரூபமாயிருப்பதால் பிர்ம்மத்துக்கு வேறாயிருக்கமாட்டாதென்பது அனுமானம். (2) உபமானப்பிரமாணம்:— கடாகாசத்துக்கும மடாகாசத்துக்கும் கடமடஉபாதிகளை நீக்கிப்பார்த்தால் பேதமில்லை. இதுபோல் புத்திமாயையாகிறஉபாதிகளை நீக்கிப்பார்த்தால் ஜீவப்பிர்ம்மாதிகளுக்கு பேதம்தோன்றுகிறதில்லை. (3) அர்த்தாபத்திப்பிரமாணம்:— 'நேஹநாநாஸ்திகிஞ்சன' என்னும்சுருதியில் பேதம் நிஷேதிக்கப்பட்டிருக்கிறது. உண்மையில் அபேதம்இல்லாதபக்ஷத்தில் இச்சுருதிவாக்கியம் ஏற்பட்டிருக்கமாட்டாது. ஒருவன் உபவாஸியென்பது அவனுடைய ஸ்தூலதையால் அடிபட்டுப்போகிறதுபோல் 'பேதம்இருக்கிறது' என்பதுமேற்கண்ட சுருதியால் அடிபட்டுப்போகிறது. இம்மூன்றுயுக்திகளும் அபேதத்துக்குச்சாதகமாயிருக்கின்றன.

**41.** பாதகயுக்திகள்:—(1) அனுமானப்பிரமாணயுக்தி:— ஜீவப்பிர்ம்மங்களின் பேதம் உபாதி சம்பந்தமாயிருப்பதால், கடாகாசமகாகாசங்களின் பேதம் போல்மித்தை. எது மித்தையன்றோ அது ஔபாதிகமுமன்று. வியவகாரத்தில் கடபடங்களின் பேதம் ஔபாதிகமாயில்லாததினால் சத்தியமாயிருக்கிறது. ஆகையால் எவ்விடத்தில் உபாதி சம்பந்தமிருக்கிறதோ அவ்விடத்தில் பேதமும் மித்தை. இது அனுமானப்பிரமாணயுக்தியாம். (2) உபமானயுக்தி:— பிம்பப்பிரதிபிம்பங்களின் பேதம் மித்தையாயிருப்பதுபோல் ஜீவப்பிர்ம்மங்களின் பேதமும் மித்தை. (3) அர்த்தாபத்திப்பிரமாணம்:— மகாவாக்கியங்களில் ஜீவப்பிர்ம்மங்களின் அபேதஞ்சொல்லப்பட்டிருக்கிறது. தோன்றும்பேதம்உண்மையில் மித்தையாயில்லாதபக்ஷத்தில் மகாவாக்கியங்களில் அபேதம் பிரதிபாதிக்கப்பட்டிருக்கமாட்டாது. அப்படிப்பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறபடியால் அர்த்தாபத்தியுக்தியால் அபேதஞ்சித்திக்கிறது. (4) அநுபலப்திப்பிரமாணம்:— ஜாக்கிரஸ்வப்னங்களில் உபாதியால் ஜீவப்பிர்ம்மங்களின் பேதம்தோன்றுகிறது. ஸுஷுப்தியில் உபாதியில்லாததினால் பேதமும் தோன்றுகிறதில்லை. ஆகையால் ஜீவப்பிர்ம்மங்களுக்குப்பாரமார்த்திகத்தில் பேதமில்லையென்பது நிச்சயப்படுகிறது. இது அநுபலப்திப்பிரமாணயுக்தி. இந்தயுக்திகளெல்லாம் பேதத்தைப்பாதிக்கின்றன.

**42.** நிதித்தியாஸனத்துக்கும் சாக்ஷாத்காரத்துக்கும் வித்தியாஸமென்னவெனில் சாக்ஷாத்காரத்தில் பிரம்மாகாரவிர்த்தி ஸ்வபாவமாய் வளைந்தமரத்தின் கிளைபோல் பிரயத்தனமன்றியில் இருக்கிறது. நிதித்தியாஸனத்தில் பிர்ம்மாகாரவிர்த்தி பிரயத்தனத்தால் வளைத்தகிளைபோல் இருக்கிறது. பிரயத்தனம் நீங்கினவுடன் கிளை நிமிர்ந்து விடுகிறதுபோல் நிதித்தியாசனம் நீங்கினவுடன் பிர்ம்மாகாரவிர்த்தியும் தங்குகிறதில்லை.

படும். நிதித்தியாஸனத்தின் பரிபக்குவ நிலைமைக்குச்சமாதியென்று பெயர். ஆகையால் சமாதி[43] வேறு சாதனமாகவில்லாமல் நிதித்தியாசனத்தில் அந்தர்க்கதமாயிருக்கிறது.

27. சிரவணாதிகளின் பிரயோசனம்:—இந்தசிரவணாதிகள் ஞானத்துக்குச்சாக்ஷாத்சாதனங்களாகவில்லை. ஆனால் புத்திதோஷங்களாகிய அசம்பாவனையையும் விபரீதபாவனையையும் இவைகள் நாசம்பண்ணுகின்றன.

அசம்பாவனையாவது சமுசயம்[44].

விபரீதபாவனையாவது விபர்யயம்[45].

சிரவணத்தின் உபயோகம்:— வேதாந்தவாக்கியம் அத்விதீயப்பிர்ம்மத்தைப் பிரதிபாதிக்கிறதா வேறொர்த்தத்தைப்பிரதிபாதிக்கிறதா என்பது பிரமாணத்திலுண்டாகிற[46] சந்தேகம். அது சிரவணத்தினால் நிவர்த்தியாகிறது.

மனனத்தின் உபயோகம்:—ஜீவப்பிர்ம்மங்களின் அபேதம் சத்தியமா அல்லது பேதம் சத்தியமா என்பது பிரமேயகதசந்தேகம்[47]. பிரமேயகதசந்தேகங்கள் அநேகமுள. அவை மனனத்தினால் நிவிர்த்தியாகின்றன.

நிதித்தியாசனத்தினுபயோகம்:—தேகாதிகள் சத்தியமென்றும், ஜீவப்பிர்ம்மபேதம் சத்தியமென்றும் நினைப்பது விபரீதபாவனை. அது நிதித்தியாசனத்தினால்[48] நிவிர்த்தியாகிறது. இவ்விதமாகச் சிரவணாதிகள் மூன

---

43. சமாதிசப்தத்தால நிர்விகல்பசமாதியென்று அறியத்தக்கது. நிதித்தியாசனசப்தத்தால்தியாதா தியானம் தியேயம் ஆகிறதிரிபுடிகளுடன் கூடிய ஸவிகல்ப சமாதியை அறியத்தக்கது. (623—625) பார்க்க.

44. இது ரஜ்ஜுவா அல்லது சர்ப்பமா? இவ்வித இரண்டு பக்ஷங்களை விஷயமாக்கும் ஞானம் சமுசயம் என்னப்படும்.

45. இது சர்ப்பம் என்னும் அவித்தியாவிர்த்தி விபர்யயம். இதுவே பிராந்திஞானம், விபரீதபாவனை, விபரீதஞானம், ஞானத்தியாஸம். பிரகிருதத்தில் அனாத்மாக்களான தேகாதிகளை ஆத்மரூபமாக அறிவது விபர்யயம்.

46. பிரமாணமாவது உபநிஷத்து வாக்கியங்கள்.

47. பிரமேயமென்றால் மோக்ஷ முதலிய அறியவேண்டிய விஷயங்கள்

48. இவ்விரண்டுவித சமுசயங்கள் நிவர்த்தியானாலும் ஞானமுண்டாவதற்கு முன் அவித்தியாரூபக்காரணமிருப்பதால் "நான் ஜீவன்" "பிர்மத்துக்கும் எனக்கும் பேதமுண்டு" "தேகாதிஜகத்துசத்தியம்" இப்படிப்பட்ட அனேகசமுசயங்கள்மறுபடியும் மறுபடியும் உண்டாகக்கூடும். இவைகளைநிவிர்த்திக்க நிதித்தியாசனம் அப்பியசிக்கத்தக்கது.

றும் ஞானத்துக்குப் பிரதிபந்தங்களான அசம்பாவனை விபரீதபாவனைக ளை நாசம்பண்ணுகிற மூலமாகஞானத்துக்கு ஹேதுக்களாயிருக்கின்றன வென ச்சொல்லப்படுகின்றனவே தவிர சாக்ஷாத் ஹேதுக்களாக விருக்க வில்லை.

28 ஞானத்துக்குச்சாக்ஷாத்சாதனம்:— ஞானத்துக்குச்சாக்ஷாத்சாத[49] னம் சுரோத்திரசம்பந்தமான வேதாந்தவாக்கியந்தான். இதுஅவாந்திரவா க்கியமென்றும் மகாவாக்கியமென்று மிருவகைப்படும். பரமாத்மா ஜீவன் இவைகளின் சொரூபங்களைப்பிரதிபாதிப்பது அவாந்திரவாக்கியமென் றும், ஜீவபரமாத்மாக்களின் ஏகத்துவத்தைப்பிரதிபாதிப்பது மகாவாக்கி யமென்றும்சொல்லப்படும். அவாந்திரவாக்கியத்தினால் பரோக்ஷஞானமு ம் மகாவாக்கியத்தினால் அபரோக்ஷஞானமுமுண்டாகும். பிர்ம்மமிருக்கிற தென்பது பரோக்ஷஞானம். பிர்ம்மம் நானாக விருக்கிறேனென்பது அப ரோக்ஷஞானம். நீ பிர்ம்மமென்று குருவினாலுச்சரிக்கப்பட்ட வாக்கியம் சுரோதாவின் காதில் சம்பந்தப்பட்டபின்பு நான் பிர்ம்மம் என்கிற அப ரோக்ஷஞானமுண்டாகிறது. அப்படிச்சுரோதாவின் காதில் வாக்கியஞ்ச ம்பந்தப்படாமல் ஞானமுண்டாகிறதில்லை. ஆகையால் சுரோத்திரசம்பந் த மகாவாக்கியமே அபரோக்ஷஞானத்துக்கு ஹேதுவாயும் அவாந்திர வா க்கியம் பரோக்ஷஞானத்துக்கு ஹேதுவாயும் இருக்கின்றன. மகாவாக்கி யத்தினால் எல்லாருக்கும் அபரோக்ஷஞானமுண்டாகிறதேதவிர பரோ க்ஷஞானமுண்டாகிறதில்லை.

29. இவ்விஷயத்தில் சிலருடைய[50] ஆக்ஷேபங்கள்:—(1)சிரவணாதிகளும் வாக்கியமுஞ்சேர்ந்து அபரோக்ஷஞானத்தையுண்டுபண்ணுகின்றன. கே வலவாக்கியத்தினால் பரோக்ஷஞானமுண்டாகிறதேதவிர அபரோக்ஷஞா னமுண்டாகிறதில்லை. (2)அப்படி யுண்டாகுமென்று சொல்லும் பக்ஷத்தி ல்சிரவண மனன நிதித்தியாசனங்கள் வியர்த்தமாய்ப்போய்விடும் சித்தாந் தத்தில் கேவலவாக்கியத்தால் அபரோக்ஷஞானமுண்டாகிறதென்றும் சி

---

49. கண்ணிற்போட்டமை நேத்திரரோகத்தை நிவிர்த்திப்பது மூலமா ய்ச்சூரியனைப்பார்க்கச்சாதகமாயிருக்கிறதேதவிரச்சாக்ஷாத்தாகத் தான் சூரிய னைப்பார்க்கிறதில்லை. ஆனால்சூரியனைப்பார்க்க நேத்திரந்தான் சாக்ஷாத்சாதனமா யிருக்கிறது. இதுபோல் சிரவணாதிகளும் ஞானத்துக்குப்பிரதி பந்தங்களாகிற சமுசயவிபர்யயரூப ரோகங்களை நிவிர்த்திக்கிறது மூலமாய் ஞானத்துக்குச்சாத னங்களாயிருக்கின்றன. சாக்ஷாத்சாதனம் சுரோத்திரசம்பந்த மகாவாக்கிய மே.

50. பஞ்சதசிப்பிரகரணத்தின் கர்த்தாவாகிய வித்தியாரண்யஸ்வாமிக ள் முதலியவர்கள்.

ரவணாதிகளால் அசம்பாவனை விபரீதபாவனைகள் நாசமாய்விடுகின்றனவெ ன்றும் ஆகையால் சிரவணாதிகள் வியர்த்தமில்லையென்றுஞ்சொல்லப்பட் டாலும், எந்தவஸ்துவின் அபரோக்ஷஞானமுண்டாகிறதோ அந்த வஸ்து விஷயத்தில் ஒருவருக்கும் அசமபாவனை விபரீதபாவனைகள் உண்டாகமா ட்டா. ஆகையால் கேவலவாக்கியத்தினால் அபரோக்ஷஞானமுண்டாகுமெ ன்றும் சொல்லும் சித்தாந்தத்தில் தத்துவமஸிமுதலிய வாக்கியங்களால் பிரம்மத்தின் அபரோக்ஷஞானமுண்டான பின்பு அசம்பாவனை விபரீதபா வனைகள் சம்பவிக்கமாட்டாவாகையால் சிரவணாதி சாதனங்கள வியர்த்தமா ய்விடும். நம்முடைய (பூர்வபக்ஷி) மதப்படி கேவலவாக்கியத்தால் பரோ க்ஷஞானமும் சிரவணாதிசகிதவாக்கியத்தால் அபரோக்ஷஞானமுமுண்டா கின்றனவென்று சொல்லும்பக்ஷத்தில் சிரவணாதிகள் வியர்த்தமாகவில்லை இதுஅநேக கிரந்தக்காரருடைய மதம்.

## சமாதானங்கள்[51] (30—31)

30. முதல் ஆக்ஷேபந்நுந்து:—மேற்சொல்லியமதம் சரியன்று. ஏனெ னில் சப்தத்துக்கோர் சுபாவமிருக்கிறது, அதாவது தேசத்தினாலுங் காலத் தினாலும் மறைபட்ட[52] பதார்த்தந்துக்கு வியவஹிதமென்று பெயர். அப்படிம றைபடாதபதார்த்தத்துக்கு அவ்வியவஹிதமென்றுபெயர். எந்தவஸ்துவிய வஹிதமாயிருக்கிறதோ அதன் ஞானம் சப்தத்தினால் பரோக்ஷமாகவேயிரு க்கிறது எந்தபிரகாரத்தினாலும் வியவஹிதவஸ்துவின் ஞானம் சப்தத்தால் அபரோக்ஷமாகிறதில்லை. வியவஹிதசுவர்க்கம் இந்திராதி தேவதைகள் சாஸ்திரரூபசப்தத்தினால் பரோக்ஷமாகவே அறியப்படுகின்றன. எந்தவ ஸ்து அவ்வியவஹிதமாக விருக்கிறதோ அதன் ஞானம் சப்தத்தால் அப ரோக்ஷமாயும் பரோக்ஷமாயுமுண்டாகும். எப்போது அவ்வியவஹித வஸ்து வின்ஞானம் 'இருக்கிறது' என்கிற சப்தத்தினாலுண்டாகிறதோ அப்போது அவ்வியவஹித வஸ்துவின் ஞானம் பரோக்ஷமாகவிருக்கிறது. 'பத்தாவது புருஷன் இருக்கிறான்' என்கிறவிடத்தில் 'இருக்கிறா' னென்பதால் விளங் குகிற அவ்வியவஹிததசமனுடைய ஞானம் சப்தத்தினால் பரோக்ஷமா கவிருக்கிறது. மேலும்எப்போது அவ்வியவஹித வஸ்துவின் ஞானம்'இது தான்'என்பதாயச் சப்தத்தினால் லுண்டாகிறதோ அப்போது அந்த ஞானம் அபரோக்ஷமாகவிருக்கிறது பரோக்ஷமாகவில்லை. பத்தாவதுபுருஷன் 'நீதா

---

51. இது சாரீரக சூத்திரங்களின் கருதது.

52. தூரதேசத்திலிருப்பது தேசத்தால் மறைபட்டபொருளாகும். சென்றகாலத்திலாவது வருங்காலத்திலாவது இருப்பதுகாலத்தினால் மறைபட் ட பொருளாகும்.

ன்'[53] என்கிறவிடத்தில இந்தச்சப்தத்தாலுண்டாகிற தசமனுடையஞானம் அபரோக்ஷமாகவிருக்கிறது. இதுபோல் பிர்ம்மம் எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருப்பதால் அத்தியந்தம் அவ்வியவஹிதமாயிருக்கிறது. 'அதுஇருக்கிறது' என்கிற பரோக்ஷஞானத்தை அவாந்திரவாக்கியம் போதிக்கிறது. பத்தாவது புருஷன் நீதான் என்பதுபோல் சுரோதாவே பிர்ம்மமென்று மகாவாக்கியம் போதிக்கிறது. ஆகையால் மகாவாக்கியத்தினால் அவ்வியவஹிதபிர்ம்மத்தின் பரோக்ஷஞானமுண்டாகாமல் அபரோக்ஷஞானமேயுண்டாகின்றது.

31. 2வது ஆக்ஷேபத்துக்கு:— அபரோக்ஷஞானமுண்டானவிடத்தில் அசம்பாவனாதிகள் உண்டாகமாட்டாவென்றும் சிரவணாதிகள் வியர்த்தமாய்விடுமென்றும் சொன்ன ஆக்ஷேபம் சரியன்று. ஒரு ராஜா பர்ச்சுவென்றும்[54] மந்திரியை நேத்திரத்தாற் பார்த்தும் விபரீதபாவனையால் அவரை யறியாததுபோல் மகாவாக்கியத்தினால் பிர்ம்மத்தின் அபரோக்ஷஞானமுண்டானாலும் எவனுடைய புத்தியில் அசம்பாவனாதி தோஷங்களிருக்கின்றனவோ அவனுக்கு ஞானம் சித்திக்கிறதில்லை. அந்தத்தோஷநிவர்த்தியின் பொருட்டுச் சிரவணாதிகளும் வேண்டும். எவனுடைய புத்தியில் தோஷங்களில்லையோ அவனுக்கு சிரவணாதிகள் வேண்டியதில்லை. இவ்விதமாக ஞானத்துக்குச் சாதனம் மகாவாக்கியமே தவிரச் சிரவணாதிகளன்று. ஞானப்பிரதிபந்தங்களாயிருக்கிற தோஷங்களைத்தான் சிரவணாதிகள் நாசஞ்

---

53. தசபுமான்கதை:— பத்துப்பெயர்கள் பிரயாணம்போகையில்நடுவில் ஓராற்றைக்கடக்க வேண்டியதாயிற்று. அக்கரைசேர்ந்தபின் எல்லாரும் வந்துவிட்டோமாவென்று பார்க்க ஒவ்வொருவனும் தன்னைவிட்டெண்ணி ஒன்பது பெயர்தானிருக்கிறோமென்றும் ஒருவன் ஆற்றோடு போய்விட்டானென்றும் நினைத்து விசனப்பட்டுக்கொண்டிருந்தான். அப்போது வேறொருபாட்டைசாரி இவர்கள் விசனப்படுவதைக்கண்டு துக்ககாரணத்தையறிந்து பத்தாவதுபுருஷன் இருக்கிறானென்று சொன்னான். அப்போது அவர்களுக்குத்தசமனுடைய பரோக்ஷஞானமுண்டாயிற்று. அப்போது அவர்களிலொருவன் அவன் எங்கே இருக்கிறானென்று கேட்க பாட்டைசாரி அவனைப்பார்த்து நீதான் என்றான். அப்போது அவனுக்குத்தசமனுடைய அபரோக்ஷஞானமுண்டாயிற்று. தசமனைப்பிரத்தியக்ஷமாயறியக்கண்களிருந்தும் வேறொருவன் நீதான் தசமனென்று சொல்லும்வரையில் அபரோக்ஷஞானமுண்டாகிறதில்லை. இங்குநீதான் என்று சொன்ன சப்தம் அபரோக்ஷஞானத்துக்குச்சாக்ஷாத்காரணமாயிருக்கிறது. இதுபோல் பிர்ம்மத்தின் அபரோக்ஷஞானத்துக்குக் குருவினாலுபதேசிக்கப்பட்ட மகாவாக்கியம் சாக்ஷாத்காரணமாயும் சமுசயரகிதசுத்தமனது அதற்குச்சாதகமாயுமிருக்கிறது. தசமனைப்பற்றி 4-வதுதரங்கத்தில் (195—200) விவரிக்கப்படும்.

54. இக்கதை 5-வது தரங்கத்தில் (255—270) விவரிக்கப்பட்டிருக்கிறது.

பண்ணுகின்றன. ஆகையால் சிரவணாதிகள் ஞானத்துக்குச் சாதனங்களாகச் சொல்லப்படுகின்றன. விவேகாதிகள் சிரவணாதிகளுக்குஹேதுவாயிருக்கிறபடியால் ஞானத்துக்குச்சாதனமாகச் சொல்லப்படுகின்றன. விவேகாதி நாலுசாதனங்களோடு கூடினபுருஷன்தான் அதிகாரி.[55]

32 சம்பந்தம்:[56]—(1)கிரந்தத்துக்கும் விஷயத்துக்கும் பிரதிபாத்திய பிரதிபாதகபாவசம்பந்தமாம். கிரந்தம் பிரதிபாதகம். விஷயம் பிரதிபாத்தியம். எது விஷயத்தைச் சொல்லுகிறதோ அது பிரதிபாதகம். எதுசொல்லப்படுகிறதோ அதுபிரதிபாத்தியம். (2) கிரந்தத்துக்கும் ஞானத்துக்கும் ஜந்யஜநகபாவசம்பந்தமாம். விசாரமூலமாகக்கிரந்தம் ஞானத்துக்கு ஜநகம் ஞானம் ஜன்யம். எது உற்பத்தி செய்கிறதோ அது ஜநகம். எது உற்பத்தி யாகிறதோ அது ஜன்யம். (3) அதிகாரிக்கும்விசாரத்துக்கும கர்த்துருகர்த்தவிய பாவசம்பந்தமாம். அதிகாரிகர்த்தா விசாரம்கர்த்தவியம் செய்கிறவன்கர்த்தா செய்யத்தக்கது கர்த்தவியம். (4) அதிகாரிக்கும் பலத்துக்கும் பிராப்பியபிராபகபாவசம்பந்தமாம். பலம் பிராப்பியம் அதிகாரி பிராபகன். எந்தவஸ்து அடையப்படுகிறதோ அது பிராப்பியம். எவன் அடைகிறானோ, அவன் பிராபகன். இன்னும் வேறுசம்பந்தங்களும்[57] அறியத்தக்கவை.

• 33. விஷயம்:— இந்த கிரந்தம் ஜீவப்பிரம்ம[58] ஐக்கியத்தைப்பிரதிபாதிக்கிறது. சகலவேதங்களும் இதையேபிரதிபாதிக்கின்றன. இது

---

55. இவன்கிரந்தத்துக்கும் கிரந்தவிசாரமூலமாக ஆத்மஞானத்துக்கும் ஆத்மஞானமூலமாக மோக்ஷத்துக்கும் அதிகாரியாகிறான்.

56. சம்பந்தரூபஅனுபந்தத்தைச்சொன்னதற்குப் பிரயோஜனம்:— எந்தவஸ்துவுக்கு எத்துடன் சம்பந்தமிருக்கிறதோ அந்தவஸ்துவுக்கு அதின்விஷயத்திலுபயோகமுண்டு. (உ-ம்) குலாலாதிகளுக்குக்கடத்துடன் சம்பந்தமுண்டு. ஆகையால் இவைகள் கடவிஷயத்தில் உபயோகப்படுகின்றன. எந்தவஸ்துவுக்கு எத்துடன் சம்பந்தமில்லையோ அவ்வஸ்துவுக்கு அதின்விஷயத்தில் உபயோகமுண்டாகிறதில்லை. (உ-ம்) கண்ணுக்குக்காற்றுடனும் ஆகாசத்துடனும் சம்பந்தமில்லை. ஆகையால் கண்காற்றாகாசவிஷயங்களில் உபயோகப்படுகிறதில்லை. இதுபோல் கிரந்தத்துக்கும் பிர்ம்மத்துக்கும் பரஸ்பரசம்பந்த மில்லாதபக்ஷத்தில் பிர்ம்மவிஷயத்தில் கிரந்தம் உபயோகப்படமாட்டாது. அப்படியே கிரந்தவிஷயத்தில் பிர்ம்மத்தினுபயோகம் சித்திக்கமாட்டாது. பரஸ்பர உபயோகத்தை நிச்சயிப்பதற்காக இவைகளின் சம்பந்தம் கற்பிக்கப்பட்டது.

57. வேறு என்பதால் சிரவணாதிகளுக்கும் ஞானத்துக்குமுள்ள சம்பந்தம்ஞானத்துக்கும் மோக்ஷத்துக்குமுள்ள சம்பந்தம் முதலியன அறியத்தக்கன.

58. ஜீவசப்தத்தால் ஜீவபதத்தின் லக்ஷியார்த்தமான கூடஸ்தன் அறியத்தக்கது.

தான் இந்தக்கிரந்தத்துக்கு விஷயம். இதற்கு விரோதமாய்ச்சொல்லபட்டவன் வேதவிரோதி, சடன் அதாவது மூகஸ்துதியாய் எதிரிற்பேசிக்காறுதவிடத்தில் தூஷிக்கிறவன்.

பிரயோஜனம் (34—39)

34. பிரயோஜனலக்ஷணம்:— பிரபஞ்சத்துக்குக்காரணமான அஞ்ஞானமும் பிரபஞ்சமும் ஜனமமரணரூபமான துக்கத்துக்குஹேதுவாயிருப்பதினாலே அனர்த்தமென்று சொல்லப்படுகின்றன. இந்தஅனர்த்தநிவிர்த்தியும் பரமானந்தப்பிராப்தியும் மோக்ஷம் என்றுசொல்லப்படும். மோக்ஷந்தான் கிரந்தத்தின் பரமப்பிரயோஜனமாகும். ஞானம் அவாந்திரப்பிரயோஜனமாகும். எதனிடத்திற் புருஷனுக்கு இச்சையுண்டாகிறதோ அதுதான பரமப்பிரயோஜனமென்றும் புருஷார்த்தமென்றும் சொல்லப்படுகிறது. அந்தஇச்சை துக்கநிவிர்த்தியின் பொருட்டும் சுகப்பிராப்தியின் பொருட்டும் சகலஜனங்களுக்கு முண்டாகிறது. இவைகள்தான் மோக்ஷத்தின் சொரூபம். ஆகையால்பரமப்பிரயோஜனம் மோக்ஷமேதவிர ஞானமன்று. ஏனெனில் சுகப்பிராப்தி துக்கநிவிர்த்திகளுக்குச்சாதனமாக ஞானமிருக்கிறது. சுகப்பிராப்தி துக்கநிவிர்த்தி ரூபமாகவே ஞானமில்லை. ஆகையால் ஞானம் அவாந்திரப்பிரயோஜனம். எந்தவஸ்துமூலமாகப்பரமப்பிரயோஜனம அடையப்படுகிறதோ அதுஅவாந்திரப்பிரயோஜனமெனப்படும். கிரந்தத்தின் ஞானமூலமாக முக்திரூபப்பரமப்பிரயோஜனமடையப்படுகிறதினால் ஞானம் அவாந்திரப்பிரயோஜனமாகவிருக்கிறது.

35. முதலாவதுஆக்ஷேபம் — அனர்த்தநிவிர்த்தியும் பரமானந்தப்பிராப்தியும் கிரந்தத்தின் பரமப்பிரயோஜனமாகச்சொன்னது சரியன்று. ஏனெனில் சர்வவேதங்களும்[59] ஜீவனைப்பரமானந்தச்சொரூபமாக வர்ணித்திருக்கின்றன. நீங்களும் அதையங்கீகாரஞ்செய்கிறீர்கள். அடையாதவஸ்துவையடையக்கூடும். எப்போதும் பிராப்தமாயிருக்கிற வஸ்துவையடைகிறதென்று சொல்வது ஒருக்காலும் சரியன்று. ஆகையால் சதாபரமானந்தச்சொரூபமாகிய ஆத்மாவுக்குப்பரமானந்தப்பிராப்தியுண்டாகுமெனச்சொல்வது எவ்விதத்திலும் அசம்பாவிதமாகவிருக்கிறது.

---

59. உ-ம் "பிரஞ்ஞானம் ஆனந்தம்பிர்ம்ம" என்னும் சுருதியைப்போல் அநேகச் சுருதிகள். இச்சுருதியில் பிரஞ்ஞானமாகிற ஜீவன் ஆனந்தரூபமாகிற பிர்ம்மமாயிருக்கிறனென்று சொல்லப்பட்டிருக்கிறது.

36. சமாதானம் (36—37):— இந்த ஆக்ஷேபத்தைக் கேட்டு, கிரந்தத்தின் பிரயோஜனத்தில் சிரத்தை யில்லாமற் போகக்கூடாது. ஆத்ம வித்தையை யுபதேசிக்கிற குருவின் கிருபையினால் இந்தச் சந்தேகங்களெல்லாம் திருஷ்டாந்தத்தினால் நிவிர்த்தியாய்விடும். எப்படி யெனில் ஒருபுருஷன் கையில் போட்டிருக்கிற கங்கணம் காணமற் போனதாய்ப் பிரமையினால் நினைக்கிறான். அப்போது அன்னிய புருஷனுடைய வார்த்தையினால் கையிலேயே யிருக்கிற கங்கணம் நூதனமாய்க் கிடைத்ததாக ஞான முண்டாகிறது. இவ்விதமாய் ஏற்கனவே யடைந்திருந்த கங்கணமும் புதிதா யடையப் பட்டதாகச் சொல்லப்படுகிறது. இதுபோல் பரமானந்தச் சொரூபமான ஆத்மாவினிடத்தில் அவித்தியா பலத்தினால் ஆத்மா பரமானந்தச் சொரூபி யல்லவென்றும் பிரம்மமே பரமானந்தச் சொரூப மென்றும் அந்தப் பிரம்மத்துக்கும் தனக்கும் வியோகம் வந்திருப்பதாகவும் உபாசனையினாற் பிரம்மத்தை யடையலாமென்றும் மூட ஜனங்களுக்குப் பிராந்தியுண்டாகிறது. இப்படிச் சொல்லுகிற பண்டிதர்களும் மூடர்கள்தாம். ஏனெனில் ஜீவப் பிரம்ம வியோகத்தை யங்கீகரிக்கிறவன் மூர்க்கனென்று சொல்லப்படுகிறான். இப்படிப்பட்ட மூடர்களுக்கு உத்தம சம்ஸ்காரத்தினால் பிரம்ம ஞானியாயிருக்கிற ஆசாரியரிடத்தினின்றும் ஒருக்கால் வேதாந்தச் சிரவணம் பிராப்தியானால் அப்போது பரமானந்தம் தங்களுக்குக் கிரந்தத்தினாலும் ஆசாரியருடைய கிருபையினாலும் கிடைத்ததாக எண்ண முண்டாகிறது. ஆத்மா ஏற்கனவே பரமானந்தச் சொரூபமாயிருக்க அவர்களுக்கு அது விளங்காமையால் பரமானந்தம் பிராப்தமில்லாதது போலிருக்கிறது. ஆசாரியர் மூலமாகக் கிரந்தத்தைக் கேட்பதால் பரமானந்தம் புத்தியில் விளங்குகிறது. அதனால் அது நூதனமாய அடையப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. இவ்விதமாக அடைந்திருப்பதையும் அடையக் கூடுமென்று சொல்லலாம். ஆகையால் பரமானந்தப் பிராப்தி இக்கிரந்தத்துக்குப் பரமப் பிரயோஜனமாகச் சொன்னது யுக்தந்தான்.

37. அப்படியே நித்திய[60] நிவிர்த்தியின் நிவிர்த்தியும் பிரயோஜனமாகச் சொன்னதுசரி. (உ-ம்) ரஜ்ஜுவினிடத்திற் சர்ப்பம நித்திய நிவிர்த்தியாகவே யிருக்கிறது. ரஜ்ஜுவென்றறிந்தமாத்திரத்தில் சர்ப்பம்நிவிர்த்தியாகிறது.

---

60. நிஷேதிக்கிற சுருதிவாக்கியங்களாலும் ஞானிகளுடைய அனுபவத்தினாலும் இந்தப் பிரபஞ்சம் வியாவகாரிகத்திலும் பிராதிபாஸிகத்திலும் இருப்பதாகத்தோன்றினாலும் பாரமார்த்திகத்தில் இல்லவே இல்லையென்பது பிரபஞ்சத்தின் நித்திய நிவிர்த்தியாம். சுருதி யுக்தி யனுபவங்களால் பிரபஞ்சத்தின் உண்மையான ஸ்திதியை அறிவதே நித்திய நிவர்த்தியின் நிவர்த்தியாம்.

இதுபோல் ஆத்மாவினிடத்திற் சமுசாரம் நித்திய நிவிர்த்தியாக யிருக்கிறது. ஆத்ம ஞானத்தினால் சமுசாரம் நிவிர்த்தி யாகிறது. ஆகையால் நித்திய நிவிர்த்தியின் நிவிர்த்தியும் நித்தியப்[61] பிராப்தியின் பிராப்தியும் கிரந்தத்தின் பரமப்ரயோஜனங்களாயிருக்கின்றன.

38. 2—வது ஆக்ஷேபம்:—காரண சகித ஜகத்தின நிவிர்த்தியும் பரமானந்தப் பிராப்தியும் கிரந்தத்தின் பிரயோஜனமாகச் சொன்னது சரியன்று. ஏனெனில் நிவிர்த்தி யென்றால் நாசம். நாசமென்பது அபாவரூபம். மோக்ஷத்தி னிடத்தில் அனர்த்த நிவிர்த்தியாகிற அபாவரூபப் பிரதீதியும், பரமானந்தப் பிராப்தி யாகிறபாவரூபப் பிரதீதியும் சேர்ந்திருக்க மாட்டா. ஏனெனில் பாவரூபமும் அபாவரூபமும் ஒன்றுக்கொன்று விரோதமாயிருக்கின்றன. விரோத தர்மங்கள் ஒரே காலத்தில் ஒரு வஸ்துவினிடத்திலிருக்க மாட்டா. ஆகையால் கிரந்தத்துக்குச் சொன்னப் பிரயோஜனம் சம்பவிக்க மாட்டாது.

39. சமாதானம்:— காரணசகித ஜகத்தின் நிவிர்த்தி அதிஷ்டானப் பிர்ம்மரூப மாகவிருக்கிறது. அதற்கு வேறாகவில்லை. சர்ப்பநிவிர்தி[62] அதிஷ்டானரஜ்ஜு ரூபமாகவிருக்கிறதுபோல் சகல கல்பித வஸ்துக்களுடைய நிவிர்த்தியும் அதிஷ்டானரூபமாகவே யிருக்கிறது. அதற்கு அன்னியமாகவில்லை. இது பாஷியக் காரருடைய சித்தாந்தம். ஆகையால் பிரகிருதத்தில் அனர்த்த நிவிர்த்தி பிர்ம்மரூபமாகவே யிருக்கிறது. ஏனெனில் சர்வ அனர்த்தத்துக்கும், அதிஷ்டானம் பிர்ம்மம். அந்த பிர்ம்மம் பாவரூபமாகவிருக்கிறது. ஆகையால் அனர்த்த நிவிர்த்தியே பாவரூபமாகவிருப்பதால் அதை கிரந்தத்தின் பிரயோசனமாகச் சொன்னது யுக்தந்தான்.

---

61 வீட்டில் புதையல் இருந்தும் தெரியாதவரையில் இல்லாததுபோலிருக்கிறது. மைமுதலியசாதனங்களால் கண்டறியப்பட்டவுடன் அது அடையப்பட்டதாகத்தோன்றுகிறது. இது நித்தியப்பிராப்தியின் பிராப்தியாம். இதுபோல் ஏதுவும் பிர்ம்மஸ்வரூபமாயிருப்பதால் பரமானந்த ரூபமானபிர்ம்மம் நித்தியப் பிராப்தமாக இருக்கிறது. ஆயினும் அஞ்ஞானத்தால் அப்பிராப்தம்போல் தோற்றுகிறது. நான் பரமானந்தஸ்வரூபப்பிர்ம்மமென்று நிச்சயமாய் சுருதி யுக்தியனுபவங்களால் அறிவதே நித்தியப்பிராப்தியின் பிராப்தியாம்.

62. சர்ப்பம் ரஜ்ஜுவில் தோன்றுகிறபடியால் ரஜ்ஜு சர்ப்பத்துக்கு அதிஷ்டானமென்று சொல்லப்படுகிறது. மந்தாந்தகாரமிருக்கும்வரையில் சர்ப்பப் பிரமையிருக்கிறது. வெளிச்சங்கண்டவுடன் ரஜ்ஜுவென்று அறியப்படுகிறது. அக்ஷணத்திலேயே சர்ப்பம் நிவிர்த்தியாய் விடுகிறது. ஆகையால் சர்ப்பநிவிர்த்தியும் அதின் அதிஷ்டானமான ரஜ்ஜுவின் ஞானமும் ஒரேக்ஷணத்திலுண்டாவதால் சர்ப்பநிவிர்த்தியே அதிஷ்டானரஜ்ஜு ரூபமாயிருக்கிறது.

இந்த முதலாவது தரங்கத்தை எந்த ஜிஜ்ஞாசுவானவன் நிரந்தரமாகப்படிக்கிறானோ அவனைத்தீனதயாளுவானதாது குருவானவர் முக்தனாகச்செய்கிறார்.

---

அநுபந்த சாமான்ய நிரூபணம் என்னும் முதல் தரங்கம்

முற்றிற்று.

# 2-வது தரங்கம்.

## அநுபந்த விசேஷ நிரூபணம்.[1]

முதல் தரங்கத்தில் அநுபந்தம் சுருக்கமாகச் சொல்லப்பட்டது. இரண்டாவது தரங்கத்தில் அது விஸ்தாரமாயப் பிரதிபாதிக்கப் படுகிறது.

### அதிகாரி விஷயமாய் ஆக்ஷேபங்கள். (40—43)

40. துக்கநிவிர்த்தி விஷயமாய் (40-41):— நாலு சாதனங்களோடு கூடினவன் அதிகாரி என்று (15) சொல்லப்பட்டது. அந்நான்கு சாதனங்களில் முமுக்ஷுதையொன்று. முமுக்ஷுதையென்பது மோக்ஷ இச்சை. காரணசரீரஜகத்தின்[2] நிவிர்த்தியும் பிரம்மப்பிராப்தியும் மோக்ஷமென்று சொல்லப்படுகிறது. இந்த மோக்ஷத்தின் முதலாவது அம்சமான காரணசரீரஜகத்தின் நிவிர்த்திவிஷயத்தில் பூர்வபக்ஷியான ஆக்ஷேபக்காரன் ஆக்ஷேபிக்கிறதாவது:— மூலஅவித்தியாசரீரஜகத்தின் நாசத்தை யொருவருமிச்சிக்கிறதில்லை.[3] ஆனாலோ மூன்றுவித துக்கங்களை நாசஞ் செய்ய விவேகியானவன் இச்சிக்கிறான். மூன்றுவித துக்கங்களாவன:— (1) அந்தியாத்மிகம் (2) அதிபௌதிகம் (3) அதிதைவிகம். ரோகம், தாகம் பசிபோல்வனவாலுண்டாகுந்துக்கம் அத்யாத்மிகமென்னப்படும்.[4] திரு

---

1. ஒருவன் வீடுகட்ட ஆரம்பிக்கும்பொழுது வேறொருவன் தடுக்கிறான் அப்போது நியாயஸ்தலத்தில் தன் பாத்தியதையை ஸ்தாபித்துக்கொண்டு மறுபடியும் வீடுகட்டத்தொடங்குகிறான். இதுபோல் கிரந்தகர்த்தா முதல் தரங்கத்தில் அநுபந்த சதுஷ்டயத்தைச்சாதாரணமாய் நிரூபித்துக் கிரந்தத்தை யாரம்பிக்குங்காலத்தில் பூர்வபக்ஷியாகிய ஆக்ஷேபக்காரன் ஆக்ஷேபங்களால் தடைசெய்கிறான். அப்போது கிரந்தகர்த்தாவாகிய சித்தாந்தியானவர் சுருதியுக்திகளின் பலத்தினால் தன் பக்ஷத்தை ஸ்தாபித்துக்கொண்டு இக்கிரந்தத்தைத்தொடங்குகிறார்.

2. மூலஅவித்தை.

3. பிச்சைக்காரன் பயத்தினால் சமையல் பண்ணாமலிருக்க ஒருவனும் இச்சிக்காதது போலும், கறையான் பயத்தினால் துணியை எறிந்துவிட ஒருவனும் இச்சிக்காததுபோலும், வெட்டுக்கிளி பயத்தினால் நிலத்தை விட்டுவிட ஒருவனும் இச்சிக்காததுபோலும், விவேகியானவன் மூவிததுக்கங்களின் பயத்தினால் ஜகத்தேநசித்துப்போக வேண்டுமென்று இச்சிக்கிறதில்லை.

4. ஆத்மாவையாசிரயித்திருக்கும் ஸ்தூல சூக்ஷமசரீரம் ஆத்யாத்மமென்னப்படும். இதிலுண்டாகும் துக்கம் ஆத்யாத்மிகமாம்.

டன், புலி, சர்ப்பம், போன்றவைகளாலுண்டாகுந்துக்கம் அதிபௌதிகம். யக்ஷராக்ஷஸப்பிரேதக்கிரகாதிகளாலும் சீதவாத[6]ஆதபங்களாலும் ஜனிக்குந்துக்கம் அதிதைவிகமெனப்படும்[7]. இவ்விதமாக மூன்றுவிதது க்கங்களை நிவிர்த்திக்க எல்லாருமிச்சிக்கிறார்கள். துக்கத்துக்கு அன்னிய மான எதையும் நிவிர்த்திக்க விவேகி இச்சிக்கிறதில்லை. ஆகையால் அஞ்ஞானசகித சகலஜகத்தின் நிவிர்த்திவிஷயத்தில் இச்சையொருவருக்குமுண்டாகிறதில்லை.

41. மேலும், "எல்லாருந்துக்க நிவர்த்தியை இச்சித்தாலும் அஞ்ஞானசகித சகல ஜகத்தின் நிவிர்த்தியன்றியில் துக்கநிவிர்த்தி யுண்டாகமாட்டாது. ஆகையால், துக்கநிவிர்த்தியின் பொருட்டு அஞ்ஞானசகிதசர்வஜகத்தின் நிவிர்த்தியையும் ஜனங்கள் அபேக்ஷிக்கிறார்கள்". இவ்விதமாகச்சித்தாந்தி சொல்வதுஞ்சரியன்று. ஏனெனில் ஆயுள்வேதத்திற் சொல்லிய ஔஷதங்களால் ரோகஜன்னிய துக்கங்கள் நிவிர்த்தியாகின்றன. போஜனத்தினால் பசியாலுண்டாகிற துக்கம் நிவிர்த்தியாகிறது. இவ்விதமாக அததற்கேற்பட்ட பரிகாரத்தால் அந்தந்த துக்கம் நிவிர்த்தியாகிறது. ஆகையால் அஞ்ஞானசகிதஜகன்னிவிர்த்தியன்றியிலும் துக்கநிவிர்த்தியுண்டாகிறது. துக்கநிவிர்த்தியின் பொருட்டு அஞ்ஞானசகித ஜகன்னிவிர்த்தியவசியமில்லை. இவ்விதமாகக் காரணசகித ஜகன்னிவிர்த்திரூபமான மோக்ஷத்தின் முதலாவது அம்சத்தில் இச்சையொருவருக்கு முண்டாகிறதில்லை.

42. சுகப்பிராப்திவிஷயமாய்:— பிர்ம்மப்பிராப்திரூபமான மோக்ஷத்தின் இரண்டாவதம்சத்திலும் இச்சையொருவருக்குமுண்டாகிறதில்லையென்று பூர்வபக்ஷி யடியில் வருமாறு சொல்லுகிறான். எந்தவஸ்து முன் அனுபவிக்கப்பட்டிருக்கிறதோ அதையடைகிற விஷயத்தில் இச்சையுண்டாகக்கூடும். அறியப்படாத பதார்த்தத்தை யடைய வேண்டுமென்கிற இச்சையுண்டாகமாட்டாது. அன்னியதேசங்களில் அனேகபதார்த்தங்கள் அறியப்படாமலிருக்கின்றன. அவைகளை யடைய இச்சையொருவருக்கு முண்டாகாதது போலும். அதிகாரிக்குப்பிர்ம்மச்சொரூபத்தின் ஞானமில்லை. எவனுக்குப்பிர்ம்மஞானமிருக்கிறதோ அவன் அதிகாரியன்று.

---

5. சரீரத்துக்கு வேறாயும் இந்திரியங்களுக்கு விஷயமாயுமிருப்பது அதிபூதம். அதினின்றுமுண்டாகும் துக்கம் ஆதிபௌதிகம்.

6. குளிர்காற்று வெயில்.

7. சரீரத்துக்கு வேறாயும் இந்திரியங்களுக்கு விஷயமாகாமலுமிருப்பது அதிதெய்வம். அதினின்றுமுண்டாகும் துக்கம் ஆதிதெய்விகம்.

அவன் முக்தன். அவனுக்குப்பிர்ம்மப்பிராப்தியில் இச்சையுண்டாகமாட்டாது. ஆகையால் வேதாந்தச்சிரவணத்துக்கு முன் அறியப்படாதபிர்ம்மத்தை யடைய இச்சையுண்டாகமாட்டாது. இவ்விதமாக அஞ்ஞானசகித ஜகன்னிவிர்த்தியும் பிர்ம்மப்பிராப்தியுமாகிற மோக்ஷத்தில் இச்சை யொருவருக்கு முண்டாகமாட்டாது. ஆகையால் முமுக்ஷுவாக ஒருவனும் இல்லை.

43. அதிகாரியே இல்லையென்பதைப் பூர்வபக்ஷி வேறு பிரகாரத்தினாற் சொல்லுகிறான். எல்லாரும் விஷயசுகத்தை இச்சிக்கிறார்கள். சகலவிஷயங்களையும் விட்டுத்தவஞ்செய்கிறவர்களும் பரலோகத்தினுத்தமபோகங்களை யிச்சித்து அனேகக்கிலேசங்களைப்[8] பொருத்துக்கொள்ளுகிறார்கள். ஆகையால் இகலோக அல்லது பரலோக விஷயசுகத்தை யெல்லாரும் இச்சிக்கிறார்கள். இந்த விஷயசுகம் மோக்ஷத்திலில்லை. ஆகையால் மோக்ஷசாதனத்தை ஒருவரும் இச்சிக்கிறதில்லை. இவ்விதமாக மோக்ஷ இச்சாரூபமுமுக்ஷுதை சித்திக்கிறதில்லை. மேலும் எல்லாருக்கும் விஷயசுகத்தில் இச்சையிருப்பதால் வைராக்கியம், சமம், தமம், உபரதி, இவைகளும் ஒருவரிடத்திலும் சித்திக்கிறதில்லை. ஆதலால் சாதனசதுஷ்டயசகித அதிகாரியே யில்லாதபடியால் கிரந்தாரம்பம் நிஷ்பிரயோசனம்

**அதிகாரிவிஷயத்திற் சமாதானங்கள். (44—54)**

44. **40—41**.க்குச்சமாதானம்—: ஜகத்துக்கு மூலகாரணமான அஞ்ஞானம், ஜகத்து, இவைகளின் நாசமன்றியில் வேறு உபாயத்தால் மூன்றுவித துக்கங்களின் நாசமுமுண்டாகமாட்டாது. மூலஅவித்தையின் நிவிர்த்தியால் சகலதுக்கங்களும் துக்கங்களுககுக்காரணமான ரோகாதிகளும், ரோகாதிகளுக்காசிரயமான[9] சரீராதிகளும் நாசமாகின்றன. ஆகையால் மூன்றுவித துக்கநாசத்தின் பொருட்டுக்காரணசகித ஜகன்னிவிர்த்திரூபமான மோக்ஷத்தின் முதலாவதம்சத்தை யெல்லாரும்இச்சிக்கிறார்கள். இதன்தாற்பரிய மென்னவெனில் எவன் சகலஔஷதாதி உபாயங்களை ச்செய்ய ச்சமர்த்தனாக இருக்கிறானோ அவனுக்கும் துக்கம் நியமமாக நிவிர்த்தியாகிறதில்லை. சிலருக்கு ரோகாதிகளாலுண்டாகுந்துக்கங்கள் ஔஷதாதி உபாயங்களால் நிவிர்த்தியாகின்றன, சிலருக்கு ஆகிறதில்லை, ஆகையால் ஔஷதாதிஉபாயத்தினால் ரோகாதிகளால் உண்டாகும் துக்கங்கள் நியமமாக நிவிர்த்தியாகும் என்பது கிடையாது. மேலும் எவனுக்கு ஔஷதாதி உபாயத்தால் துக்கம் நிவிர்த்தியாகிறதோ அவனுக்கும் துக்கம் மறுபடியும் உண்டாகிறது. ஆகையால் ஔஷதாதி உபாயங்களால் துக்

---

8. துக்கங்கள்.

9. இருப்பிடம்.

கம் அத்தியந்தம் நிவிர்த்தியாகிறதில்லை. எது நிவிர்த்தியாகி மறுபடியும் உண்டாகிறதில்லையோ அது அத்தியந்த நிவிர்த்தியென்னப்படும். ஔஷதாதி உபாயத்தால் துக்கநிவிர்த்தி நியமமாக உண்டாகாதபடியாலும் நிவிர்த்தியான துக்கம் மறுபடியும் உண்டாகிறபடியாலும் மேற்படி உபாயங்களால் துக்கம் அடியோடே நிவிர்த்தியாகிறதில்லை. மேலும் துக்கத்தின் சகலசாதனங்களும் நாசமானால் சகலதுக்கங்களும் நியமமாக நிவிர்த்தியாகும். அச்சாதனங்கள் நாசமடைந்தால் மறுபடியும் துக்கமுண்டாகமாட்டாது. ஆகையால் துக்கநிவிர்த்தியின் பொருட்டுத்துக்கசாதனங்களின் நிவிர்த்தியில் இச்சை யெல்லாருக்கும் உண்டாகிறது.[10]

45. அந்தத்துக்கசாதனங்கள் அஞ்ஞானமும், அதன் காரியமான பிரபஞ்சமும் என்று சாந்தோக்கிய உபநிஷத்தில் பூமவித்தியா விஷயத்தில் பிரசித்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அப்பிரசங்கமாவது:— "ஒரு சமயத்தில் சனத்குமாரரிடத்தில் நாரதர் சென்று சொன்னதாவது:— "சுவாமின், ஆத்மஞானியாயிருக்கிற புருஷனுக்கு துக்கம் இல்லை. நானோ துக்கசகிதனாயிருப்பதால் அஞ்ஞானியாயிருக்கிறேன். எனக்கு அஞ்ஞானம் நீங்கும்படி உபதேசம் செய்யப் பிரார்த்திக்கிறேன்". அப்போது சனற்குமாரர் நாரதரைப் பார்த்துச் சொல்லுகிறார்:— ஓய் நாரதரே பூமா சோகரகிதமாயும் சுக ரூபமாயும் இருக்கிறது பூமாவுக்கு அன்னியமான சகலமும் துச்சமாயும் துக்கத்துக்குச் சாதனமாயும் இருக்கிறது. பூமா என்றால் பிர்ம்மம். இவ்விதமாகப் பிர்ம்மத்துக்குப் பின்னமான எதுவும் சகலதுக்கங்களுக்கும் சாதனமாகச்சொல்லப்படுகிறது. அஞ்ஞானமும் அதின் காரியமானபிரபஞ்சமும் பிர்ம்மத்துக்கு அன்னியமாக இருப்பதால் துக்கத்துக்குச்சாதனமாயிருக்கின்றன. அவைகள்நிவிர்த்தியாவதால் சகலதுக்கங்களும் நியமமாக அடியோடே நிவிர்த்தியாகின்றன. ஆகையால் சகல துக்கநிவிர்த்தியின்பொருட்டு அஞ்ஞானசகிதப்பிரபஞ்சநிவிர்த்திரூபமான மோக்ஷதனின்முதலாவது அம்சத்தில் இச்சைஉண்டாகிறது.[11]

---

10. ஜ்வர நிவிர்த்தியை யபேக்ஷிக்கிறவன் சுரத்துக்கு அனுகூலமான பதார்த்தங்களை வைத்தியனிடத்தில் தெரிந்துகொண்டு அவைகளைத்தள்ளுகிறது போல் துக்கநிவிர்த்தியை இச்சிக்கிறவன் அதற்குச் சாதகமான விஷயங்களை குருவினிடத்திலும் சாஸ்திரத்தினாலும் தெரிந்துகொண்டு அவைகளைத்தள்ளவேண்டியது.

11. ஜகன்னிவிர்த்தி விஷயத்தில் இச்சையுண்டாகுமென்பதிலோர் சங்கை:— முன் அனுபவித்த பதார்த்தத்தில் இச்சையுண்டாகக்கூடும். அனுபவியாததில் இச்சையுண்டாக மாட்டாது. பிர்ம்மமாகிற அதிஷ்டான ஞானத்தால் அஞ்ஞானமும் பிரபஞ்சமும் நிவிர்த்தியானதாக முமுக்ஷுவுக்கு அனுபவமில்லை. ஆகையால் அவைகளை நிவிர்த்திக்க இச்சையுண்டாகமாட்டாது. இதற்குச்சமாதானம்:— அனுபவித்ததிலேயே இச்சையுண்டாகுமென்பது நியமமில்லை,

46. 42க்கு ச்சமாதானம்:— பூர்வபக்ஷி முன் சொன்னதாவது:— எந்தவஸ்து அனுபவிக்கப்பட்டிருக்கிறதோ அதையடைய இச்சை உண்டாகும். பிர்ம்மம் ஒருவராலும் அறியப்படாததினால் பிர்ம்மப்பிராப்தி ரூபமான மோக்ஷத்தின் இரண்டாவது அம்சத்தில் இச்சை ஒருவருக்கும் உண்டாகிறதில்லை. இதற்குச்சமாதானஞ்சொல்லுகிறேன். எல்லாரும் சுகத்தை அனுபவித்திருக்கிறார்கள். ஆகையால் சுகத்தில் இச்சை எல்லாருக்கும் உண்டாகிறது. பிர்ம்மம் நித்திய சுகரூபமென்று சாஸ்திரத்தில் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆகையால் உத்தமமான விவேகியானவன் பிர்ம்மத்தை அடைய இச்சிக்கிறான்.[12]

## 43வது பிர்வுக்குச்சமாதானம் (47—54)

47. சகலஜனங்களும் விஷயஜன்ய சுகத்தை இச்சிக்கிறார்கள் அந்தவிஷயஜன்ய சுகம் மோக்ஷத்தில் கிடைக்கிறதில்லை. ஆனால் பிரபஞ்சத்திற் கிடைக்கிறது. ஆகையால் மோக்ஷஇச்சையுள்ள அதிகாரியே சித்திக்காதபடியால் கிரந்தாரம்பம் நிஷ்பிரயோஜனம். இப்படி ஆக்ஷேபிக்கிற பூர்வபக்ஷியைக்கேட்க வேண்டியதென்னவெனில் (1) முமுக்ஷு ஒருவனும் இல்லையா, (2) அல்லது முமுக்ஷு இருந்தும் அவனுக்குக்கிரந்தத்திற் பிரவிர்த்தி உண்டாகிறதில்லையா? முமுக்ஷுவே இல்லை என்பது சரியன்று. ஏனெனில் எல்லாரும் சர்வதுக்கநாசத்தையும் நித்தியசுகப்பிராப்தியையும் இச்சிக்கிறார்கள். துக்கநாசமும் சுகப்பிராப்தியுமே மோக்ஷச்சொரூபம். ஆகையால் எல்லாரும் முமுக்ஷுக்களாகவே இருக்கிறார்கள்.

---

ஆனால் அனுபவித்ததற்கு ஸஜாதியமான வஸ்துவில் இச்சையுண்டாகுமென்பது நிச்சயம். உண்டுவிழுங்கின பதார்த்தத்தில் இச்சையுண்டாகிறதில்லை. ஆனால் அதற்கு ஸஜாதியமான வஸ்துவிலாவது வேறுவஸ்துவிலாவது இச்சையுண்டாகிறது. அஞ்ஞானத்துக்கும் பிரபஞ்சத்துக்கும் பிர்ம்மம் அதிஷ்டானமாயிருப்பதுபோல் கல்பிதஸர்ப்பத்துக்கு ரஜ்ஜு அதிஷ்டானமாயிருக்கிறது. ஆகையால் அதிஷ்டானவிஷயத்தில் பிர்ம்மமும் ரஜ்ஜுவும் பரஸ்பரம் ஸஜாதீயங்களாயிருக்கின்றன. ஸர்ப்பநிவிர்த்தியும் பிரபஞ்சநிவிர்த்தியும் பரஸ்பரம் ஸஜாதீயங்களாயிருக்கின்றன. ரஜ்ஜுஞானத்தால் சர்ப்பம் நிவிர்த்தியாகிறதென்பது அனுபவசித்தமாயிருக்கிறது. ஆனதால் ஸஜாதீயமான பிர்ம்மஞானத்தால் அஞ்ஞான சகிதப்பிரபஞ்ச நிவிர்த்தியாவதில் இச்சையுண்டாகக்கூடும்.

12. அனுபவித்த வஸ்துவில்தான் இச்சையுண்டாகிறதாயிருந்தால் அனுபவித்த ரோகாதிகளிலும் இச்சையுண்டாகக்கூடும். ஆனால் பிரபஞ்சத்தில் அப்படி யுண்டாகிறதில்லை. அனுபவித்த அனுகூலவிஷயத்தில்தான் இச்சையுண்டாகிறது. அவைகளிலும் ஸஜாதீயவஸ்துக்களில் அவசியம் இச்சையுண்டாகிறது. சுகானுபவம் எல்லாருக்கும் இருக்கிறபடியால் அதற்கு ஸஜாதீயமான பிர்ம்மசுகத்தில் எல்லாருக்கும் இச்சையுண்டாகக்கூடும்.

48. விஷய ஜன்ய சுகத்தை எல்லாரும் இச்சிக்கிறார்களென்று சொன்னது சரியன்று. ஆனால் சுகமாத்திரத்தை எல்லாரும் இச்சிக்கிறார்கள். அந்த சுகம் விஷயத்தினாலும் உண்டாகும். விஷயமன்றியிலும் உண்டாகும். விஷயசுகத்தில் தான் இச்சையுண்டாகிறதென்று சொல்லும் பக்ஷத்தில் சுஷுப்தி சுகத்தில் இச்சையுண்டாகக்கூடாது. சுஷுப்தி சுகம் விஷய ஜன்யமாக இல்லை. ஆகையால் சுகமாத்திரத்தை எல்லாரும் இச்சிக்கிறார்களே ஒழிய கேவலம் விஷய ஜன்ய சுகத்தை இச்சிக்கிறதில்லை. அதற்கு எதிரிடையாக ஆத்ம சுகத்தில் இச்சை யுண்டாகிறது. விஷய சுகத்தில் இச்சை யுண்டாகிறதில்லை. ஏனெனில் எல்லாருக்கும் விஷய சுகம் ஏற்றக்குறைச்சலாக இருக்கிறது. எக்காலத்திலும் நாசமாகாத ஒரேவிதமான சுகம் தங்களுக்குக் கிடைக்கவேண்டுமென்று எல்லாருக்கும் இச்சை உண்டாகிறது. இப்போர்ப்பட்ட சுகம் ஆத்மச்சொரூபமான மோக்ஷமாக இருக்கிறது. ஆகையால் எல்லாரும் முமுக்ஷுக்களாயிருக்கிறார்கள். ஆகையால் முமுக்ஷு ஒருவரும் இல்லையென்று சொன்னது சரியன்று.

49. இரண்டாவது பக்ஷத்தில் அதாவது முமுக்ஷு இருந்தும் கிரந்தத்தில் பிரவிர்த்தி உண்டாகாதபடியால் கிரந்தாரம்பம் நிஷ்பலம் என்று (47) ஆக்ஷேபிக்கிறவனைக் கேட்கவேண்டியதாவது:—

(1) கிரந்தம் மோக்ஷசாதனமாக இல்லாததினால் இதில் பிரவிர்த்தி உண்டாகவில்லையா?

(2) இந்தக் கிரந்தத்தைக் காட்டிலும் வேறு சாதனங்களிருப்பதால் இதில் பிரவிர்த்தி உண்டாகவில்லையா?

(3) எந்தச்சமம் தமம் முதலிய சாதனங்களிருந்தால் கிரந்தத்தில் அதிகாரம் உண்டென்று சொல்லப்பட்டதோ, அப்போர்ப்பட்டச் சமாதிகளோடு கூடிய ஞானத்துக்கு யோக்கியமான அதிகாரி ஒருவனுமில்லாததினால் கிரந்தத்திற் பிரவிர்த்தி உண்டாகவில்லையா?

முதலாவதாக்ஷேபம்.

அதாவது கிரந்தம் மோக்ஷசாதனமாக இல்லை என்பது சரியன்று. ஏனெனில் மோக்ஷம் ஞானத்தால் நியமமாய் உண்டாகிறதென்பது வேதாந்த சித்தாந்தம். அந்த ஞானம் சிரவணத்தால் உண்டாகிறது.

அச்சிரவணம் இரண்டு விதம்.

(1) வேதாந்த வாக்கியத்துக்கும் சுரோத்திரேந்திரியத்துக்குமுள்ள ஸம்யோக ரூபச்சிரவணம்.

(2) வேதாந்த வாக்கியத்தின் விசாரரூபச்சிரவணம். இவை

களில் ஞானத்துக்கு ஹேது முதலாவது சிரவணமே தவிர இரண்டாவதன்று. ஏனெனில் சப்த ஜன்ய ஞானத்திற்கு இந்திரியத்தோடு சப்த ஸம்யோகமே எங்கும் ஹேதுவாயிருக்கிறது. ஆகையால் வேதாந்தவாக்கியம் சுரோத்திரம் இவைகளின் ஸம்யோகரூபச்சிரவணமே பிர்ம்ம ஞானத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. அவாந்திர வாக்கியத்தின் சிரவணம் பரோக்ஷ ஞானத்துக்கும் மகாவாக்கியத்தின் சிரவணம் அபரோக்ஷஞானத்துக்கும் ஹேதுவென்று முன் (28) பிரதிபாதிக்கப் பட்டிருக்கிறது. எவனுக்கு ஞானமுண்டானாலும் அசம்பாவனை விபரீதபாவனைகள் எவனுக்கு இருக்கின்றனவோ அவன் இரண்டாவது சிரவணத்தையும் மனன நிதித்தியாசனங்களையுஞ் செய்யவேண்டியது. இந்த வேதாந்த வாக்கியத்தின் விசாரரூபச் சிரவணம் வேதாந்த வாக்கியத்திலுள்ள அசம்பாவனையை அதாவது வேதாந்த வாக்கியம் பிர்ம்மத்தைப் பிரதிபாதிக்கிறதா அல்லது வேறு அர்த்தத்தைப் பிரதிபாதிக்கிறதா என்கிற சமுசயத்தை நிவிர்த்திசெய்கிறது. மனனம் பிரமேயத்தின் அசம்பாவனையை அதாவது ஜீவனும் பிர்ம்மமும் ஏகமென்றுசொல்வது சத்தியமா அல்லது ஜீவப்பிர்ம்மபேதம் சத்தியமா என்கிற சந்தேகத்தை[13] நிவிர்த்திசெய்கிறது. நிதித்தி

---

13. இது ரஜ்ஜுவா அல்லது சர்ப்பமா என்கிற இரண்டுவித ஞானத்துக்கு சம்சயமென்றுபெயர். ஆத்மா அநாத்மா இவ்விரண்டு விஷயங்களில் சம்சயம் உண்டாகக்கூடும். அநாத்மசம்சயங்களை இவ்விடத்தில் கவனிக்கவேண்டியதில்லை. ஆத்மகத சம்சயம் பிரமாணத்திலும் பிரமேயத்திலும் உண்டாகக்கூடும். உபநிஷத்ரூப வேதாந்தவாக்கியங்கள் துவைதத்தை பிரதிபாதிக்கின்றனவா, அல்லது அத்வைதத்தை பிரதிபாதிக்கின்றனவா, அல்லது வேறு அர்த்தத்தை பிரதிபாதிக்கின்றனவா. இது பிரமாணகதசம்சயம். இது சிரவணத்துக்கு முன் உண்டாகிறது. வேதாந்தரூபபிரமாணத்தால் அறியக்கூடிய மோக்ஷம் முதலிய பதார்த்தங்களெல்லாம் பிரமேயமென்னப்படும். இவைகளின் ஸ்வரூபத்தில் உண்டாகும் சம்சயம் பிரமேயகதசம்சயமென்னப்படும். இந்தபிரமேயகத சம்சயம் விஷயபேதத்தால் அனேகவிதம். எப்படியெனில்,

I. **மோக்ஷஸ்வரூபசம்சயம்:—** சகல அனர்த்த நிவிர்த்தியும் பரமானந்தப் பிராப்தியுமே மோக்ஷமா, அல்லது மூன்று விதது:க்கநாசம் மோக்ஷமா (40) அல்லது நியாயமதத்தின்படி 21 து:க்கநாசம் மோக்ஷமா(448), அல்லது 5 து:க்க (55)நாசம் மோக்ஷமா, அல்லது சுவர்க்க வைகுண்டாதிகளின் சுகலாபமே மோக்ஷமா (519-20), இவ்விதசம்சயங்கள் மோக்ஷஸ்வரூபத்தில் உண்டாகின்றன.

II. **மோக்ஷசாதனசம்சயம்:—** அநர்த்தநிவிர்த்தியும் பரமானந்தப்பிராப்

யாசனம் விபரீதபாவனையை நிவிர்த்திசெய்கிறது. இவ்விதமாக முதலாவது சிரவணம் ஞானமூலமாக மோக்ஷத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. விசாரரூபச் சிரவணமும், மனனம், நிதித்தியாசனம் இவைகள் அசம்பாவனை விபரீதபாவனைகளை நிவர்த்திசெய்வது மூலமாக மோக்ஷத்துக்கு ஹேதுக்களாயிருக்கின்றன. வேதாந்தமென்றால் உபநிஷத்து. அது இந்தக் கிரந்தத்தைக்காட்டிலும் வேறாக இருந்தாலும் அதன் அர்த்தத்தைத் தான் இந்தப் பாஷாக் கிரந்தமும் சொல்லுகின்றது. இதன் சிரவணத்தினாலும் ஞான முண்டாகுமென்பது இனி (114) பிரதிபாதிக்கப்படும். இவ்விதமாக ஞான மூலமாகக் கிரந்தப மோக்ஷத்துக்கு ஹேதுவா யிருக்கிறது.. இந்தக் கிரந்தம் விசாரரூபமாயும் மனன ரூபமாயுமிருப்பதால் அசம்பாவனாதி தோ

---

தியுமே மோக்ஷமென்று சித்தாந்தி சொல்லும்பக்ஷத்தில் இந்தமோக்ஷத்துக்கு சாக்ஷாத்தானசாதனம் கர்மமா, அல்லது உபாசனையா, அல்லது ஞானமா, (496-535).

III. ஞானசாதனசம்சயம்:— மோக்ஷத்துக்குச்சாதனம் ஞானமென்று சொல்லும் பக்ஷத்தில், அபரோக்ஷஞானத்துக்கு சாக்ஷாத்துசாதனம் யஞ்ஞாதிகர்மமா, உபாசனையா,(165) விவேகாதிகள் நான்கா(22)சிரவணாதிகள் மூன்றா(24) "தத்த்வம்" பதார்த்தங்களின் சோதனையாகிற அவாந்திரவாக்கியஞானமா (28), அல்லது "தத்துவமஸி" முதலிய மகாவாக்கிய உபதேசமா (30)

IV. **ஞானத்துக்கு விஷயமாகிற ஜீவன் (த்வம்பதம்), ஜகத்து, ஈசுவரன் (தத்பதம்) இவைகளின் சந்தேகம்**:— ஞானத்துக்கு விஷயமானது பேதப்படுகிறதா அல்லது அபேதப்படுகிறதா. அபேதமானால் ஆத்மாவுக்கும் பிர்ம்மத்துக்கும் அபேதமா, அல்லது அந்தக்கரணவிசிஷ்டசேதனரூப ஜீவனுக்கும் விராட்ஹிரணியகர்பஅந்தர்யாமிரூப ஈசுவரனுக்கும் அபேதமா (485). ஆத்மா ஸ்தூலதேகத்தைக்காட்டிலும் பின்னமா, அல்லது அபின்னமா (436). பின்னமானால் (439) ஆத்மா ஜடமா(445) அல்லது சேதனமா, அல்லது ஜடசேதனமா (316) சேதனமானால் ஆத்மா கர்த்தா போக்தாவா அல்லது அசர்த்தா அபோக்தாவா (440). ஆத்மா அணுபரிமாணமா (464) மத்தியமபரிமாணமா (462) மஹத்பரிமாணமா (441). ஆத்மாவுக்கும் தத்பதத்தின் வாச்சியார்த்தத்துக்கும் அபேதமா அல்லது ஆத்மாவுக்கும் தத்பதத்தின் லக்ஷியார்த்தத்துக்கும் அபேதமா (495). ஜகத்தின் காரணம் பிரதானாதிகளா அல்லது ஈசுவரனா (437). ஈசுவரனானால் (491) ஈசுவரன் பரிச்சின்னனா அல்லது வியாபகனா(494). ஈசுவரன் ஜகத்தின் உபாதானகாரணமா அல்லது நிமித்தகாரணமாஅல்லது அபின்னநிமித்தோபாதன காரணமா (295). ஜீவர்களுடைய கர்மானுசாரமாக ஈசுவரன்சிருஷ்டிக்கிறானா அல்லது விஷமதிர்ஷ்டியுடன் சிர்ஷ்டிக்கிறானா (297). ஆத்மா பிர்ம்மத்துக்கு அபின்னமா? அல்லது பின்னமா? அபின்னமானால், எப்போதும் அபின்னமா? அல்லது மோக்ஷகாலத்தில் அபின்னமா? அனந்தாதிகளுட

ஷங்களின் நிவிர்த்தி மூலமாக மோக்ஷத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. ஆகையால் கிரந்தத்தினால் மோக்ஷம் உண்டாக மாட்டாதென்று சொன்னது கேவலம் மூடயுக்திரந்தான்.

50. "கிரந்தத்தினால் மோக்ஷமுண்டாகும். ஆனால் வேறு சாதனங்களாலும் மோக்ஷமுண்டாகிறபடியால் இந்தக் கிரந்தாரம்பம் நிஷ்பலம்" என்று சொல்லுகிறவனைச் கேட்கவேண்டியதாவது:— மோக்ஷத்தைக் கொடுக்கிற அவ்வேறு சாதனங்கள் எவை? "ஜீவப்பிரம்ம ஐக்கியத்தைப் பிரதிபாதிக்கிற உபநிஷத்து சூத்திரபாஷியங்கள் முதலிய ஸம்ஸ்கிருதக் கிரந்தங்கள் அநேகமிருக்கின்றன. அவைகளின் ஞானத்தினாலும் மோக்ஷம் உண்டாகிறது. ஆகையால் இந்தக் கிரந்தம் நிஷ்பிரயோசனம்" எனச் சொல்வது சத்தியமாயிருந்தாலும் அந்தக்கிரந்தங்களை அறியச்சக்தி யில்லாத முமுக்ஷுவுக்கு அவைகளினால் ஞானமுண்டாகமாட்டாது. ஆதலால் அப்பேர்ப்பட்ட முமுக்ஷுவுக்கு இந்தக்கிரந்தத்திற் பிரவிர்த்தியுண்டாகும்.

51. "கிரந்தம் மோக்ஷத்துக்கு ஹேதுவாக இருக்கிறது. ஸம்ஸ்கிருதக் கிரந்தத்தினால் மந்தபுத்தியுள்ள ஜனங்களுக்குப் போதம் உண்டாகிறதில்லை. முமுக்ஷுக்களாக இருந்தும் கிரந்தத்தில் அவர்களுக்குப் பிரவிர்த்தி உண்டாகிறதில்லை. ஏனெனில் அதிகாரிக்குச் சொல்லப்பட்ட விவேக வைராக்கிய சமாதி சாதனங்கள் அவர்களிடத்திற் காணப்படுகிறதில்லை", எனச்சொல்லுகிறவனைக் கேட்கவேண்டியதாவது:— அதிகாரிகள் அநேகரில்லையா? அல்லது ஒருவன்கூட இல்லையா? அதிகாரிகள் அநேகரில்லை என்பதை நாமும் அங்கீகரிக்கிறோம். ஞானத்துக்கு யோக்கியமான அதிகாரி ஒருவரும் இல்லை என்று சொல்வது சரியன்று. ஏனெனில் அந்தக்கரணத்தில் மலம் விக்ஷேபம் சொரூபாவரணமென்கிற மூன்று தோஷங்களிருக்கின்றன. மலம் என்றால் பாபம். விக்ஷேபம் என்றால் சஞ்சலதை. ஆவரணம் என்றால் அஞ்ஞானம். சுபகர்மத்தால் மலமும் உபாசனையினால் விக்ஷேபமும் ஞானத்தால் ஆவரணமும் நிவிர்த்தியாகின்றன. எவனுடைய அந்தக்கரணத்தில் மல விக்ஷேப தோஷங்கள் இருக்கின்றனவோ அவன் அதிகாரி யன்று. ஆனால் இந்த ஜன்மத்திலாவது பூர்வ ஜன்மத்திலாவது செய்த சுபகர்மத்தினாலும் உபாசனையினாலும் எவனுடைய மல விக்ஷேப தோஷங்கள் நிவிர்த்தியாயிருக்

---

ன் கூடி இருக்கிறார், இல்லையா? சச்சிதாநந்தங்கள் ஆத்மாவின் குணங்களா? அல்லது ஸ்வரூபமா? சச்சிதானந்தங்கள் பரஸ்பரம் பின்னமா அல்லது அபின்னமா (483). இன்னும் வெகு சந்தேகங்களுள். இப்படிப்பட்ட பிரமாணக அபிரமே யகதசம்சயங்கள் சிரவணத்தினாலும் மனனத்தினாலும் நிவிர்த்தியாகி பிரம்ம சாக்ஷாத்காரமானவுடன் சுத்தமாய் நீங்கிவிடும்.

கின்றனவோ அவனே ஞானத்துக்கு யோக்கியமான அதிகாரி. அவனுக்கு இந்த கிரந்தத்தில் பிரவிர்த்தி உண்டாகும். (14. பார்க்க.

52. எல்லாரும் விஷய சுகத்தை யிச்சிக்கிறார்கள். நித்திய சுகத்தை ஒருவரும் இச்சிக்கிறதில்லை என்று (43) சொன்னது சரியன்று. ஏனெனில் பாமரன், விஷயீ, ஜிஞ்ஞாசு, முமுக்ஷு வென புருஷர் நான்கு வகையாம். இவர்களில் இகலோகத்தில் நிஷித்தமாயும் விகிதமாயும் இருக்கிற போகங்களில் ஆசக்தியுள்ளவனும், சாஸ்திர ஸம்ஸ்கார ரகிதனுயுமிருக்கிறவன் பாமரன். சாஸ்திரானுசாரமாக விஷய போகங்களை அனுபவித்துக்கொண்டு இக பரலோகங்களின் போகங்களையடையக் காயஞ்செய்கிறவன் விஷயீ.

53 ஜிஞ்ஞாசுலக்ஷணம்:— எந்தப்புருஷன் உத்தம ஸம்ஸ்காரத்தினுல் சத்சாஸ்திரங்களைச் சிரவணஞ்செய்கிறானே அவனுக்குஅடியில்கண்டபடி விவேகமுண்டாகிறது.

(1) துக்கம்:— விஷயசுகம் அநித்தியமாயிருக்கிறது. அது உள்ளவரையில் எந்த துக்கமாவது அவசியம் இருந்துக்கொண்டே யிருக்கிறது. முடிவில் சுகம் முடிந்தவுடன் துக்கம் ஜனிக்கிறது. இனிச்சுகம் போய்விடுமென்கிற பயத்தினுல் தற்காலத்திலும் சுகம் துக்கத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. இவ்விதமாக விஷய சுகம் துக்கத்தினுல் கவ்வப்பட்டிருக்கிறது. ஆகையால் துக்கரூபமாகவே யிருக்கிறது. இந்தத்துக்கம் லௌகீக வுபாயத்தினுல் நிவிர்த்தியாகிறதில்லை. ஏனெனில் உபாயந்தேடுகிறவனுக்கும் சகல துக்கங்களும் நிவிர்த்தியாகிறதில்லை. நிவிர்த்தி யானாலும் மறுபடியும் உண்டாகின்றன.

(2) சரீரம்:— சரீரம் உள்ளவரையில் துக்கநிவிர்த்தியாகிறதுமில்லை. ஏனெனில் சரீரங்களெல்லாம் புண்ணியபாபங்களால் உண்டாகின்றன; மனுஷியசரீரம்மிசிரகர்மபலன். தேவசரீரமும்மிசிரகர்மபலந்தான். தேவசரீரமே கேவலம் புண்ணிய பலனென்று சொல்லும் பக்ஷத்தில் தேவதைகளுக்குள் சிலருக்கு இதரதேவதைகளுடைய விசேஷவிபூதிகளைக்கண்டு தாபம் உண்டாகக்கூடாது. எல்லாதேவதைகளிலும் பிரதானமான இந்திரனுக்கும், அனேகதைத்தியதானவர்களுடைய பயத்தினுல் துக்கமுண்டாவதாகச் சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கிறது. தேவசரீரம் கேவலம் புண்ணியபலனுக இருக்கும் பக்ஷத்தில் தேவதைகளுக்குத்துக்க முண்டாகக்கூடாது. ஆகையால் தேவசரீரமும் புண்ணியபாபங்களின் பலன்தான். மேலும் தேவதைகள் பாபரகிதர்களா யிருக்கிறார்களென்று

சுருதியில் சொல்லியிருப்பதற்குத்தாற்பரிய மென்னவெனில் கர்மத்துக்கு அதிகாரம் கேவலமனுஷ்ய சரீரத்தில் இருக்கிறதே தவிர இதரசரீரத்தில் இல்லை. ஆகையால் தேவசரீரத்திற் செய்யப்பட்ட சுபாசுபகர்மங்களின் பலன் தேவதைகளுக்கு உண்டாகிறதில்லை. தேவசரீரத்துக்கு முந்தின சரீரத்திற்செய்த சுபாசுபகர்மங்களின் பலன் தேவசரீரத்திலும் உண்டாகிறது. இவ்விதமாகத்தேவசரீரம் மிசிரகர்ம பலனாக இருக்கிறது. மேலும் திரியக்கு, பசு, பக்ஷிகளின் சரீரங்களும் மிசிரகர்ம பலன்தான். ஏனெனில் அவைகளின் பிரசித்தமான துக்கம் பாபபலனாகவும் மைதுனாதிசுகம் புண்ணியபலனாகவும் இருக்கின்றன. ஊரும் ஜந்துக்களைத்திரியக்கென்றும் நாற்கால் பிராணிகளைப்பசுவென்றும் பக்ஷங்களால் பறக்கிறபிராணிகளைப் பக்ஷியென்றும் சிலர் பசு பக்ஷிகளையும் திரியக்கென்றும் சொல்லுகிறார்கள். இவ்விதமாகச்சரீரங்களெல்லாம் புண்ணியபாபங்களால் உண்டாயிருக்கின்றன. தேவசரீரம் அதிகபுண்ணியத்தினாலும் சொல்பபாபத்தினாலும் உண்டாகிறது. இந்த அபிப்பிராயத்தினால் தான் தேவசரீரம் கேவலம் புண்ணியகர்மபலனென்று சாஸ்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் விரோதமில்லை. பெரும்பாலும் பிராமணர்களே வசிக்கும் கிராமத்துக்குப்பிராமண கிராமமென்று சொல்வதுபோல் அதிகபுண்ணியபலனாக இருப்பதால் தேவசரீரம் கேவலபுண்ணிய பலனென்று சொல்லப்படுகிறது. ஆனால் உண்மையாய்க்கேவலபுண்ணியபலன் அன்று. திரியக்கு பசு பக்ஷிகளுடைய சரீரம அதிகபாபத்தினாலும் சொற்பபுண்ணியத்தினாலும் உண்டாகிறது உத்தமமனுஷ்யனுடைய சரீரம் தேவசரீரத்துக்குச்சமானமாயிருக்கிறது. நீசனுடைய சரீரம் சர்ப்பாதிகளின் சரீரத்துக்குச்சமம். இவ்விதமாக எல்லாச்சரீரங்களும் புண்ணியபாபங்களாலுண்டாகின்றன. பாபத்தின் பலன் துக்கமானதால் சரீரம் உள்ளவரையில் துக்கம் நிவிர்த்தியாகமாட்டாது.

(3) தர்மாதர்மம்:— இந்தச்சரீரம் தர்மாதர்மங்களின் பலனாக இருக்கிறது. அவைகளின் நிவிர்த்தியன்றியில் சரீரம் நிவிர்த்தியாகிறதில்லை. ஏனெனில் இப்போதுள்ள சரீரம்போனாலும் புண்ணியபாபங்களால் வேறு சரீரம் உண்டாகிறது. ஆகையால் புண்ணியபாபங்களின் நிவிர்த்தியன்றியில் சரீரம் நிவிர்த்தியாகமாட்டாது.

(4) ராகத்வேஷம்:—இந்தப்புண்ணியபாபங்கள் ராகத்துவேஷங்களின் நாசமன்றியில் நிவிர்த்தியாகமாட்டா. ஏனெனில் இப்போதுள்ள புண்ணியபாபங்கள் அனுபவத்தால் நிவிர்த்தியானாலும் ராகத்துவேஷங்களால் வேறு புண்ணியபாபங்கள்

உண்டாகும். ஆகையால் ராகத்துவேஷ நிவிர்த்தியன்றியில் புண்ணியபாபங்கள் நிவிர்த்தியாகமாட்டா.

(5) அனுகூலப் பிரதிகூல ஞானங்கள்:— இந்த ராகத்துவேஷங்கள் அனுகூலப்பிரதிகூல ஞானங்களாலுண்டாகின்றன. அனுகூல ஞானமுண்டாகிற இடத்தில் ராகமும் பிரதிகூலஞானமுண்டாகிற இடத்தில் துவேஷமு முண்டாகின்றன. ஆகையால் அனுகூலப்பிரதிகூல ஞானங்களின் நிவிர்த்தியன்றியில் ராகத்துவேஷங்கள் நிவிர்த்தியாகமாட்டா.

(6) பேதஞானம்:— இந்த அனுகூலப்பிரதிகூல ஞானங்கள் பேதஞானத்தால் உண்டாகின்றன. ஏனெனில் எந்தவஸ்துவைத் தன் சொரூபத்துக்கு அன்னியமாக எவன் அறிகிறானோ அவனுக்கு அந்தவஸ்து விஷயத்தில் அனுகூலம் அல்லது பிரதிகூல ஞானமுண்டாகிறது. தன் சொரூபத்தில் அனுகூலப்பிரதிகூல ஞானங்களுண்டாகிறதில்லை. சுகத்துக்குச்சாதனமாயிருப்பது அனுகூலமென்றும் துக்கத்துக்குச்சாதனமாயிருப்பது பிரதிகூலமென்றும் சொல்லப்படும். தன சொரூபம் சுகத்துக்காவது துக்கத்துக்காவது சாதனமாயில்லை, சுகரூபமாயிருந்தாலும் அது சுகத்துக்குச்சாதனமாயில்லை. ஆகையால் சொரூபத்துக்குப்பின்னமாக அறியப்பட்ட வஸ்துவிடத்தில் அனுகூலப்பிரதிகூல ஞானங்களுண்டாகின்றன. இவ்விதமாகப்பதார்த்தங்களிடத்தில் தனக்கு வேறென்கிற யாதொரு பேதஞானமுண்டோ அது அனுகூலப்பிரதிகூல ஞானங்களுக்கு ஹேதுவாயிருக்கிறது. இந்தப்பேதஞான நிவிர்த்தியன்றியில் அனுகூலப்பிரதிகூல ஞானங்கள் நிவிர்த்தியாகமாட்டா.

(7) அவித்தை:— இந்தப்பேதஞானம் அவித்தையாலுண்டாகிறது. ஏனெனில் சகலப்பிரபஞ்சமும் அதன்ஞானமும் பிரம்மச்சொரூபத்தை அறியாதகாலத்தில் இருக்கின்றனவெனச்சகல வேதசாஸ்திரங்களும் முறையிடுகின்றன. இவ்விதமாக எல்லாதுக்கங்களுக்குங் காரணம் சொரூப அஞ்ஞானந்தான்.

(8) சொரூபஞானம்:— இந்தச்சொரூப அஞ்ஞானம் சொரூபஞானமன்றியில் நிவிர்த்தியாகிறதில்லை. ஏனெனில் எந்தவஸ்துவினிடத்தில் ஒருவனுக்கு அஞ்ஞானம் இருக்கிறதோ, அந்த அஞ்ஞானம் அந்தவஸ்துவை அறிகிறதினால் நிவிர்த்தியாகிறது. ரஜ்ஜுவின் அஞ்ஞானம் ரஜ்ஜுஞானத்தால் நிவிர்த்தியாகிறது போலவும் வேறெதினாலும் நிவிர்த்தியாகாதது போலவுமே. ஆகையால் சொரூபஞானமே அஞ்ஞானத்தின் நிவிர்த்தி

மூலமாகத் துக்க நிவிர்த்திக்கு ஹேதுவா யிருக்கிறது. சொரூபஞானத்தால் பிர்ம்மம் அடையப்படுகிறது. அந்தப்பிர்ம்மம் நித்தியமாயும், ஆனந்தச் சொரூபமாயும், துக்க சம்பந்தமன்றியிலும் இருக்கிறது. ஆகையால் சொரூபஞானத்தால் நித்தியமாயும் துக்கசம்பந்த மில்லாமலு மிருக்கிற பிர்ம்மச்சொரூபத்தின் ஆனந்தம் அடையப்படுகிறது. இவ்விதமாகத் துக்கநிவிர்த்திக்கும் பரமானந்தப்பிராப்திக்கும் காரணஞ்சொரூபஞானந்தான். ஆகையால் சொரூபம் அறியத்தக்கது. இப்படி எவனுக்கு விவேகம் உண்டாகிறதோ அவன் ஜிஞ்ஞாசுவென்று சொல்லப்படுகிறான்.

முக்தலக்ஷணம்:— ஸ்தூலசூக்ஷ்மசரீரங்களுக்குப்பின்னமாயிருக்கிற தனது சொரூபத்தைப்பிர்ம்ம ரூபமாக அபரோக்ஷமாய அறிகிறவன் முக்தனென்று சொல்லப்படுகிறான்.

54. இவ்விதமாக நான்குவித புருஷர்களுக்குள் பாமரவிஷயிகளுக்கு விஷயசுகத்தில் திருப்தியுண்டாகிறது. சிலவிஷயிகளுக்குப்பரமசுகத்தில் இச்சையுண்டானாலும் அதையடைய எது வழியன்றோ அதைவழியாக நினைத்து அவர்கள் அதில் பிரவேசிக்கிறார்கள். ஏனெனில் சத்சங்கமும் சத்சாஸ்திரச்சிரவணமும் பரமசுகத்தை யடைய உபாயங்கள். இவைகளைப்பாமர விஷயிகள் தேடாதபடியால் சுகப்பிராப்தியின் பொருட்டு அவர்களுக்குகிரந்தத்திற் பிரவிர்த்தி உண்டாகமாட்டாது. துக்க நிவிர்த்தியின் பொருட்டும் அவர்கள் வேறு உபாயங்களில் பிரவிர்த்திக்கிறபடியால் கிரந்தத்திற்பிரவிர்த்தி உண்டாகிறதில்லை. ஆகையால் துக்க நிவிர்த்தி சுகப்பிராப்திகளின் பொருட்டுப் பாமரவிஷயிகளுக்குக் கிரந்தத்திற் பிரவிர்த்தி உண்டாகமாட்டாது. மேலும் முக்தனுக்குங் கிரந்தத்திற் பிரவிர்த்தி யுண்டாகமாட்டாது. ஏனெனில் ஞானவான் முக்தனென்று[14] சொல்லப்படுகிறான். அவன் கிருத கிருத்தியன். அவனுக்குச் செய்யவேண்டியதொன்றுமில்லை. இது இனி (326) ப்பிரதி பாதிக்கப்படும். விளையாட்டாக அவன் பிரவிர்த்தித்தாலும் அவனுக்குக்கிரந்தத்தினால் யாதொரு பிரயோஜனமும் சித்திக்கமாட்டாது. ஆகையால் முக்தனை

---

14. அஞ்ஞான தசையில் இகலோக வியவகாரத்தின் பொருட்டு வியவசாயாதிகள்; பரலோகத்தின் பொருட்டு ஸகாமகர் மோபாஸனைகள், சித்தசுத்தி ஏகாக்கிரதைகளின் பொருட்டு நிஷ்காமகர்மோபாஸனைகள் வேதாந்தச்சிரவணத்தின் பொருட்டு விவேகவைராக்கியாதி சாதனங்கள் அபரோக்ஷஞானத்தின் பொருட்டுக் குருபதேசம் சமுசயாதிகளின் நிவிர்த்தியின் பொருட்டுச் சிரவணாதிகள் தத்பதார்த்தத்தில் பரோக்ஷப் பிராந்தியையும் துவம்பதார்த்த விஷயத்தில் பரிச்சின்னப் பிராந்தியையும் நிவிர்த்திக்க ஓதப்புரோதப்ர்வம் மோக்ஷத்

னை உத்தேசித்தும் கிரந்தம் உண்டாகவில்லை. ஜிஞ்ஞாசுவுக்கு விஷயசுகத்தில் இச்சை உண்டாகிறதில்லை. ஆனால் பரமசுகத்திலும் துக்கத்தின் அத்தியந்த நிவிர்த்தியிலும் இச்சை உண்டாகிறது. இந்தப்பரமசுகப்பிராப்தியும் துக்கத்தின் அத்தியந்தநிவிர்த்தியும் ஞானமன்றியில் உண்டாகமாட்டாவெனச் சத்சங்கத்தால் விவேகமுண்டாகிறவனுக்கு கிரந்தத்திற்பிரவிர்த்தி உண்டாகும். இவ்விதமாக மோக்ஷத்தை யிச்சிக்கிற அதிகாரி சித்திக்கிறான்.

## விஷயத்தில் ஆக்ஷேபங்கள் (55—61)

55. **ஜீவப்பிர்ம்மஐக்கியாபாவம்**:—முன் (33) "ஜீவப்பிர்ம்மஐக்கியம் இக்கிரந்தத்தின் விஷயம்" என்று சொன்னது சரியன்று. ஏனெனில் பிர்ம்மம் அவித்தை[15] அஸ்மிதை[16] ராகம்[17] துவேஷம்[18] அபினிவேசம்[19] ஆகிய இவ்வைந்துக் கிலேசங்களன்றியிலும் வியாபகமாயும் ஏகமாயும் ஸஜாதீய[20]மு

---

தின் பொருட்டுத்திட்டமான அபரோக்ஷஞானம் இவைகளைச்செய்யவேண்டியதும் சம்பாதிக்கவேண்டியதும் கர்த்தவ்யமாம். இவைகளைச்செய்தும் சம்பாதித்துமானவன் கிருதகிருத்தியன்.

15. விசாரித்துப்பார்த்தால் எது இல்லையோ அது அவித்தையென்னப்படும். இது **மூலா தூலா** வென இருவகைத்து. சுத்தசைதன்னியத்தை மூடிக்கொண்டிருப்பது மூலாவித்தை. மூலாவித்தையும் காரியகாரணபேதத்தால் இருவகைத்து. ஆவரண விக்ஷேபசக்திகளுடன் கூடியும் அனாதியாயு மிருப்பது காரணரூபம். ஒன்று வேறொன்றாகத்தோன்றுவது காரியரூபம். இந்தக்காரியரூப அவித்தையும் நாலுவிதம். (1) அநித்தியமான சுவர்காதிலோக விஷயத்தில் நித்தியபுத்தி. (2) அசுசியான சரீரம் ஸ்திரீ புத்திரர்களை முத்தமிடுதல் இவைகளைப்பரிசுத்தமாய் நினைப்பது. (3) துக்கரூபதனாதி போகசாதனங்களைச்சுகரூபமாய் நினைப்பது. (4) அனாத்மாவான தேகாதிகளை ஆத்மாவாக நினைப்பது. இந்நான்குரூபக்காரியாவித்தையும் இவ்விடத்தில் கிரகிக்கத்தக்கன.

16. புத்தியும் ஆத்மாவும் ஒன்றாகத்தோன்றுவது **அஸ்மிதை**.

17. அநுகூலபதார்த்த ஞானத்தால் உண்டாகும் புத்தி விர்த்தி**ராகம்**.

18. பிரதிகூல பதார்த்த ஞானத்தாலுண்டாகும் புத்தி விர்த்தி **துவேஷம்**.

19. மரணபயத்தால் சரீரத்தை ரக்ஷிக்க வேண்டுமென்கிற புத்திவிர்த்தி **அபினிவேசம்**.

20. பிர்ம்மம் ஸஜாதீய விஜாதிய ஸ்வகதபேதரகிதமாயிருக்கிறது. சமானஜாதிக்குள் பேதம் **ஸஜாதீயம்**. (உ-ம்) ஒரு பிராமணனுக்கும் மற்றொரு பிராமணனுக்கும் உள்ளபேதம் போலும். அன்னியஜாதியினின்றும் பேதம் விஜாதீயபேதம். (உ-ம்) பிராமணனுக்கும் சூத்திரனுக்குமுள்ள பேதம் போலும்.

தஙிய பேதரகிதமாயும் இருக்கிறது. ஏனெனில் பிர்ம்மத்துக்கு ஸஜாதீயமான வேறு பிர்ம்மமில்லை. ஜீவனோவெனில் சர்வக்கிலேசசகிதமாயும் பரிச்சின்னமாயும்[21] அநேகமாயும் இருக்கிறான். ஏனெனில் எத்தனை சரீரங்களுளவோ அத்தனை ஜீவர்களுள. எல்லாசரீரங்களிலும் ஒரேஜீவன்[22]

---

தனக்கும் தன் அவயவங்களுக்குமுள்ள பேதம் ஸ்வகதபேதம். (உம்) பிராமணனுக்கும் அவனுடைய கைகால் முதலியவைகளுக்குமுள்ள பேதம் போலும். எல்லாம் ஒரேபிர்ம்மஸ்வரூபமாயிருப்பதாலும் ஸஜாதீயவேறுபிர்ம்ம மில்லாததினாலும் பிர்ம்மம் ஸஜாதீயபேதரகிதமானது. பிர்ம்மத்துக்கு வேறாகத்தோன்றும் பிரபஞ்சம்விஜாதீயம். பிரபஞ்சம் சத்தியமானால் பிர்ம்மம் விஜாதீயபேதசகிதமாயிருக்கும். ஆனால் பிரபஞ்சம் சத்தியமன்று. ரஜ்ஜுவிற்கல்பிக்கப்பட்ட சர்ப்பம்போல் மித்தையாயிருக்கிறது. எது மித்தையோ அது அதிஷ்டானத்துக்கு வேறு படுகிறதில்லை. ஆகையால் பிர்ம்மம் விஜாதீய பேதரகிதமாயிருக்கிறது. பிர்ம்மம் நிரவயவமானதாயிருக்கின்றது. சச்சிதானந்தங்கள் பிர்ம்மத்தின் தர்மங்களேதவிர அவயவங்களன்று. புஷ்பத்தினுடைய ஸ்பரிசரூபரஸகந்தங்களாகிற குணங்கள்போல் சச்சிதானந்த தர்மங்கள் பிர்ம்மத்தின் ஸ்வரூபமேதவிர அதற்கு வேறன்று. ஆகையால் பிர்ம்மம் ஸ்வகதபேதரகிதமாயிருக்கின்றது.

21. தனித்தனியாய்

22. **ஜீவப்பிர்ம்ம ஐக்கியவிஷயமாய் ஆக்ஷேபசமாதானங்கள்.**

I **ஆக்ஷேபம்**:— எல்லாசரீரங்களிலும் ஒரேஆத்மா இருந்தால் பிர்ம்மத்துக்கும் ஆத்மாவுக்கும் ஏகத்துவஞ் சொல்லக்கூடும். ஆத்மா அனேகமாயிருப்பதால் ஏகத்துவஞ்சொல்லக்கூடாது.

II **சமாதானம்**:— ஆத்மா அனேகமென்பதற்கு யாதொரு பிரமாணமுமில்லை. இந்திரியங்களால் அஞ்ஞானிக்குத்தோன்றும் பேதம் சரீரத்தைப் பொறுத்ததாக இருக்கிறதேதவிர ஆத்மாவைப்பொறுத்திருக்கவில்லை. ஏனெனில் ஆத்மா சுருதியைத்தவிர வேறு பிரமாணங்களால் அறியத்தக்கதில்லை. ஆகையால் சரீரங்களிலுள்ள ஆத்மா வெவ்வேறன்று. அனேககடங்களிலுள்ள ஆகாசம் ஒன்றாயிருப்பது போல் அனேகசரீரங்களிலுள்ள ஆத்மாவுமொன்றே. இதற்கும் பிர்ம்மத்துக்கும் ஏகத்துவஞ் சொல்லக்கூடும்.

III **ஆக்ஷேபம்**:— ஆத்மா அனேகமென்பதில் பிரமாணமில்லையென்று சொன்னதுசரியன்று. ஏனெனில் அனேகமென்பதற்கு அனேகபிரமாணங்களுண்டு. (1) **பிரத்தியக்ஷப்பிரமாணம்**:— நான் நான் என்கிற பேதமிருக்கிறவரையில் ஆத்மா அனேகமென்பது பிரத்தியக்ஷம். ஒவ்வொரு தேகத்திலும் நான் பிராமணன் நான் சூத்திரன் என்கிற பேதம் விளங்குகிறது. எல்லாதேகங்களிலும் ஆத்மா ஒன்றானால் நீ நான் என்கிற வியவகார மில்லாமலிருக்கும். ஆகையால் ஆத்மா அனேகமென்பது பிரத்தியக்ஷமாயிருக்கின்றது. (2) அர்த்

**தாபத்திப்பிரமாணம்:—** ஆத்மா வெவ்வேருக இல்லாதபக்ஷத்தில் நீ நானென்கிற வியவகாரஞ்சித்திக்கமாட்டாது. வியவகாரமிருப்பதால் பேதத்தை யங்கீகரிக்கவேண்டியது. இது அர்த்தாபத்திப்பிரமாணம். (3) **அனுமானப்பிரமாணம்:—** கடங்கள் வெவ்வேருய்க்காணப்படுவதுபோல் சரீரங்கள் வெவ்வேருய்க்காணப்படுவதாலும் ஒவ்வொரு சரீரத்திலும் நான் என்கிற பிரதீதியிருப்பதாலும் ஆத்மா அனேகம். இது அனுமானப்பிரமாணம். (4) **சுருதிபுராணப்பிரமாணம்:—** சுருதிகளிலும் புராணங்களிலும் தேவகந்தர்வமனுஷியதானவயக்ஷராக்ஷஸ கின்னரர் முதலிய பேதங்களேற்பட்டிருக்கின்றன. ஆகையால் ஆத்மா அனேகமென்று சித்திக்கின்றது. (5) **யுக்திப்பிரமாணம்:—** ஆத்மா ஒன்ருனல் ஒருவன் சுகதுக்கங்கள் எல்லாருக்கும் உண்டாகவேண்டும். ஒருவன் ஞானியானல் எல்லாரும் ஞானியாக வேண்டும். அப்போது விதிநிஷேதசாஸ்திரங்கள் வியர்த்தமாய்விடும். ஆகையால் ஆத்மா அனேகமென்றே சொல்லவேண்டியது.

IV **சமாதானம்:—** (1) நான் நான் என்கிற பேதம் தோன்றுவதால் ஆத்மா அனேகமென்று சொன்னது சரியன்று. ஏனெனில் நான் சிசு நான் கௌமாரன் நான் யுவா நான் விர்த்தன் என்று சொல்லுமிடத்தில் சிசு முதலிய அவஸ்தாபேதத்தால் நான் என்கிறபாவம் வேறுபட்டாலும் ஆத்மா ஒன்ருகவே இருக்கிறது. கௌமாராவஸ்தையில் நான் சிசுவாயிருக்கிறேன் என்று தோன்றுகிறதில்லை. இரண்டு அவஸ்தைகளிலும் உள்ள நான் என்கிற பதத்தின் அர்த்தமாகிய ஆத்மா ஒன்ருகவேயிருக்கிறது. மேலும் ஆத்மா பேதப்படும்பக்ஷத்தில் பாலியாவஸ்தை முதல் விர்த்தாவஸ்தை வரையில் செய்யும் காரியங்கள் ஞாபகத்துக்கு வரக்கூடாது. ஆகையால் பிரத்தியக்ஷப்பிரமாணஞ் சித்திக்கவில்லை. (2) ஒரேசரீரத்தில் அவயவபேதத்தால் தலை கை கால் முதலிய வியவகாரங்கள் சித்திக்கின்றன. இந்த வியவகாரசித்தியின் பொருட்டுச்சரீரம் எப்படி வெவ்வேருக இருக்கவேண்டியதில்லையோ அப்படி நீ நான் என்கிற வியவகாரசித்தியின் பொருட்டும் சரீரங்களிலுள்ள ஆத்மா வெவ்வேருக இருக்கவேண்டியதில்லை. ஆகையால் அர்த்தாபத்திப்பிரமாணஞ்சித்திக்கிறதில்லை. (3) ஒவ்வொருசரீரமும் ரூபத்தில் பேதப்படுவதாலும் நான் என்கிற பாவம் வேறு படுவதாலும் அனுமானப்பிரமாணம் சித்திறதென்று சொன்னதுசரியன்று. ஏனெனில் ஸ்தூலசூக்ஷ்மகாரணதேகங்களும் ஜாக்கிரஸ்வப்ன தேகங்களும் பேதப்பட்டாலும் நான் என்கிற பதத்துக்கு அர்த்தமாகிய ஆத்மாபேதப்படுகிறதில்லை. (4) எல்லாசரீரங்களிலும் உள்ள சைதன்னியம் ஒன்ருகவேயிருப்பதால் சுருதிபுராணங்களிற் சொல்லியபேதம் ஆத்மாவைப்பொறுத்ததன்று. ஆனல் ஆத்மாவுக்கு உபாதியாகிய தேகத்தைப் பொறுத்ததாயிருக்கிறது. (5) சுகதுக்காதிகள் பிராரப்தத்தை யனுசரித்திருக்கின்றன. ஒரேசரீரத்தில் கர்ம்மபேதத்தால் சுகாதிகள் விசித்திரமாய்க்காணப்படுகின்றன. புண்ணியபாபங்களினுலும் சிதாபாஸசகித அந்தக்கரணரூப போக்தாபேதத்தினுலும் சுகதுக்கங்கள் பேதப்படுகின்றன. ஆத்மா எக்காலத்திலும் எல்லாவற்றையும் அறிந்தாலும் அந்தந்தபுத்தியை யனுசரித்துத்தான் ஆத்மா அறிகிறது. தேகபேதத்தால் புத்தியும் பேதப்படுகிறது. ஆகையால் ஞானமும் பேதிப்படுகிறது. புத்திவிர்த்திசம்பந்தப்படும் வஸ்துத்தான் விளங்குகிறது. வேறென்றும் விளங்குகிறதில்லை. ஆகையால் எல்லாருக்கும் சர்வஞ்ஞதை சித்

இருப்பதாய்ச் சொல்லும்பக்ஷத்தில் ஒரு சரீரத்தில்இருக்கிற சுகதுக்கங்கள் எல்லாசரீரத்திலும் உண்டாகவேண்டும்.

## சாக்ஷி பிர்ம்ம ஐக்கியா பாவம் (56—61)

56. "சுகம்முதலியவை அந்தக்கரணதர்மங்கள். இந்த அந்தக்கரணம் அனேகம். ஆகையால் ஒருவனுக்குச்சுகதுக்கங்கள் உண்டாகிறதினால் எல்லாருக்கும் அவை உண்டாகிறதில்லை. சாக்ஷீசுகதுக்கரகிதமாயும் ஏகமாயும் சர்வக்கிலேசரகிதமாயும் இருக்கிறது. அதற்கும் பிர்ம்மத்துக்கும் ஏகத்துவஞ் சொல்லக்கூடும்." இப்படி வேதாந்திசொல்வது சரியன்று. ஏனெனில் கர்த்தா போக்தாவாயிருக்கிற ஜீவனுக்கு வேறாகச் சாக்ஷீ இருக்கிறானென்பது மலடிமகனிருக்கிறானென்பதை ஒக்கும்.

57. சாக்ஷியை அங்கீகாரம் பண்ணும் பக்ஷத்திலும் அதை ஒன்றெனச்சொல்லக்கூடாது. அநேகமென்றே சொல்லவேண்டும்.

58. ஏனெனில் வேதாந்த சித்தாந்தம் என்னவெனில் அந்தக்கரணமும் சுகதுக்கமுதலிய அந்தக்கரணதர்மங்களும இந்திரியங்களுக்கும் அந்தக்கரணத்துக்கும் விஷயமாகஇல்லை, ஆனால் சாக்ஷிக்கு விஷயமாயிருக்கின்றன. ஏனெனில் இந்திரியங்கள் பஞ்சீகிருத பூதங்களை(306-308) விஷயமாக்குகின்றன. இதிலும் அடியில்கண்டபேதம் இருக்கிறது:—நேத்திரேந்திரியம் ரூபத்தோடுகூடிய வஸ்துவின் ரூபத்தையும் ரூபத்துக்காசிரயமான வஸ்துவையும் இரண்டையும் விஷயமாக்குகிறது. நீலபீதாதிவர்ணங்களுடன் கூடிய கடத்தின் ரூபத்தையும் ரூபத்துக்காசிரயமானகடத்தையும்நேத்திரேந்திரியம் விஷயமாக்குகிறதுபோலும். துவக்கிந்திரியமும் ஸ்பரிசத்தையும் அதன் ஆசிரயத்தையும் இரண்டையும் விஷயமாக்குகிறது. ரசனை ஆக்கிராணம் சிரவணம் ஆகிய மூன்றுஇந்திரியங்களும் ரஸகந்தசப்தங்களைமாத்திரம் விஷயமாக்குகின்றன. அவைகளின் ஆசிரயங்

---

இக்கிறதில்லை. சப்தத்தைத்தரும் ஆகாசம் எங்கும் வியாபித்திருக்கிறது. மிருதங்கம் முதலியவைகளுடன் ஆகாசம் சம்பந்தப்பட்டிருந்தாலும் கையாலடிக்கும்போதுதான் அதில் சப்தம் உண்டாகிறது. மற்றிடங்களிலுண்டாகிறதில்லை. இதுபோல் ஏகமாயும் பரிபூர்ணமாயுமிருக்கிற ஆத்மாவுக்கும், எப்போது புத்திவிர்த்திக்கும் யதார்த்தத்துக்கும் சம்பந்தமுண்டாகிறதோ அப்போது ஞானேதயமுண்டாகிறது. மற்ற இடங்களில் உண்டாகிறதில்லை. ஆகையால் புத்திவிர்த்தி அனேகமாயிருப்பதால் எல்லாருக்கும் சர்வஞ்ஞதை சித்திக்கிறதில்லை. அல்பஞ்ஞர்களை யுத்தேசித்துப் பிரவிர்த்தி நிவிர்த்திகளுக்குக்காரணமாவதால் விதி நிஷேத் சாஸ்திரங்களும் வியர்த்தமன்று. ஆத்மஸ்வரூபத்தையறிகிறவன்தான் முக்தனாகிறான். மேற்சொன்ன ஆக்ஷேபங்கள் சித்திக்காததினால் ஜீவபிர்ம்மஐக்கியம் சித்திக்கிறது.

க்களை[23] விஷயமாக்குகிறதில்லை. ஆகையால் இம்மூன்று இந்திரியங்களாலும் அந்தக்கரண ஞானமுண்டாகிறதில்லை. அப்படியே நேத்திரத்தினாலும் துவக்கினாலும் அந்தக்கரண ஞானமுண்டாகிறதில்லை. ஏனெனில் பஞ்சீகிருதபூதமாவது, பஞ்சீகிருதபூதத்தின் காரியமான ரூபஸ்பரிசங்களோடு கூடிய வஸ்துவாவது நேத்திரத்துக்கும் துவக்குக்கும் விஷயமாகிறது. அந்தக்கரணம் அபஞ்சீகிருதபூத காரியமாயிருப்பதால் (300) நேத்திரத்துக்கும் துவக்குக்கும் விஷயமாகிறதில்லை. இதேகாரணத்தினால் அபஞ்சீகிருதபூத காரியமான நேத்திரேந்திரியமும் நேத்திரத்துக்கு விஷயமாகிறதில்லை. பாஹ்யவஸ்துக்கள் இந்திரியங்களுக்கு விஷயமாகின்றன. அந்தக்கரணம் இந்திரியங்களையபேக்ஷித்து ஆந்தரமாக இருக்கிறது. ஆகையாலும் அந்தக்கரணம் இந்திரியத்துக்கு விஷயமாகிறதில்லை.

59. மேலும் அந்தக்கரணம் தன்விர்த்திக்கும் விஷயமாகிறதில்லை. ஏனெனில் அந்தக்கரணம் விர்த்திக்கு ஆசிரயமாயிருக்கிறது. ஆகையால் அந்தக்கரணம் தன் விர்த்திக்கு விஷயமாகமாட்டாது. அக்கினியானது தாஹகத்துக்கு ஆசிரயமாக இருக்கிறதேதவிர அதற்கு விஷயமாகிறதில்லை. ஆனால் அக்கினிக்கு வேறான காஷ்டாதி வஸ்துக்களை இந்தத் தாஹகம் விஷயமாக்குகிறது. இதுபோல அந்தக்கரணத்துக்கு அன்னியமான வஸ்துக்கள் அந்தக்கரண ஜன்ய விர்த்திக்கு விஷயமாகின்றன. அந்தக்கரணம்[24] தன் விர்த்திக்கே விஷயமாகிறதில்லை.

60. இப்படியே அந்தக்கரணதர்மங்களும் அந்தக்கரணவிர்த்திக்கு விஷயமாகிறதில்லை. ஏனெனில் அந்தக்கரண விர்த்தி அந்தக்கரணத்தை விஷயமாக்கும் பக்ஷத்தில் அதன் தர்மங்களாகிற சுகாதிகளையும் விஷயமாக்கக்கூடும். அந்தக்கரணத்தை விஷயமாக்குகிற விர்த்தி அந்த

---

23. ஏனெனில் ஆசிரயங்கள் நேத்திரேந்திரியத்துக்காவது ஸ்பரிசேந்திரியத்துக்காவது விஷயமாகின்றன. (உ-ம்) கற்கண்டை நாக்கில்வைத்தால் கற்கண்டின் குணமாகிய தித்திப்பை ரஸநேந்திரியம் கிரகிக்கிறது. அந்தத் தித்திப்பு குணத்துக்கு ஆசிரயமான கற்கண்டு ஸ்பரிசேந்திரியத்துக்கு விஷயமாகிறது. வீடு இருளால் மறைபடுதலால் அது இருட்டுக்கு விஷயமாகிறதெனக்காண்க:—

24. வீட்டின் ஒருபாகம் இருட்டுக்கு ஆசிரயம் அதாவது இருப்பிடமாயும் விஷயமாயுமிருக்கிறது. சேதனம் அஞ்ஞானத்துக்கு ஆசிரயமாயும் விஷயமாயுமிருக்கிறது (290). இதுபோல் அந்தக்கரணம் விர்த்திக்கு ஆசிரயமாயும் விஷயமாயும்ஏன் இருக்கக்கூடாது? இதற்குச்சமாதானம்:—வீட்டினோர்பாகம் இருட்டு இவைபோல் எப்போது ஆசிரயமும் ஆசிருதமும் பேதப்படுகின்றனவோ அப்போது ஒரேவஸ்து ஆசிரயமாயும் விஷயமாகவும் இருக்கும். எப்போது ஒ

க்கரணத்துக்கு ஸன்முகமாகிறதில்லை. ஆதலால் அந்தக்கரண தர்மங்களும் அந்தக்கரண விர்த்திக்கு விஷயமாகிறதில்லை. மேலும் அடியில் வருமாறு ஒரு நியமமுண்டு:— விர்த்தியின் ஆசிரயத்துக்குக்கொஞ்சம் தூரத்திலிருக்கிற வஸ்துவே விர்த்திக்கு விஷயமாயிருக்கிறதே தவிர அதிசமீபத்திலிருக்கிற வஸ்து விர்த்திக்கு விஷயமாகிறதில்லை. நேத்திரவிர்த்திக்கு ஆசிரயமான நேத்திரத்துக்கு அதிசமீபத்திலிருக்கிற அஞ்சனம் நேத்திரவிர்த்திக்கு விஷயமாகாததுபோல் அந்தக்கரணவிர்த்திக்கு அதிசமீபத்திலுள்ள சுகம் முதலிய தர்மங்கள் அந்தக்கரண விர்த்திக்கு விஷயமாகிறதில்லை. இவ்விதமாக அந்தக்கரணமும் அதின் தர்மங்களும் இந்திரியங்களுக்கும் அந்தக்கரணத்துக்கும் விஷயமாகிறதில்லை, ஆனால் சாக்ஷிக்குத்தான் விஷயமாகின்றன.

61. இந்தச்சாக்ஷி ஒன்றெனச்சொல்லும் பக்ஷத்தில் ஒரு அந்தக்கரணத்தின் சுக துக்கங்கள் சாக்ஷியால் விளங்குவதுபோல் எல்லாருக்கும் சுகதுக்கங்கள் விளங்கவேண்டும். அப்படி விளங்காமையால் சாக்ஷியனேகமெனச்சொல்லவேண்டும். அனேக சாக்ஷிகளை யங்கீகரித்தால் தோஷமில்லை. ஏனெனில் எந்தச்சாக்ஷிக்கு எந்த அந்தக்கரணம் உபாதியாயிருக்கிறதோ அந்தச்சாக்ஷியால் அந்தவுபாதிதர்மங்கள் விளங்குகின்றனவே தவிர எல்லாருக்கும் சுகதுக்கங்கள் விளங்குகிறதில்லை. இவ்விதமாகச் சாக்ஷியநேகமாக இருக்கிறது. அனேகமான சாக்ஷிக்கும் ஏகமான பிர்ம்மத்துக்கும் ஏகத்துவஞ் சொல்லக்கூடாது.

விஷயத்தில் சமாதானங்கள் (62—66).

62. சாக்ஷிக்ரோரூபம்:— “ஜீவன் ராகாதிக்கிலேச சகிதமாயிருக்கிறான், பிர்ம்மம் கிலேசரகிதமாயிருக்கிறது. ஆகையால் ஜீவப்பிர்ம்ம ஐக்கியம் கிரந்தத்தின் விஷயமாகச் சொன்னது சரியன்று,” என்று முன் (55) சொன்னது சத்தியமாயிருந்தாலும் ராகத்துவேஷ ரகிதமான சாக்ஷிக்கும் பிர்ம்மத்துக்கும் ஏகத்துவஞ் சொல்லக்கூடும். முன் (56) கர்த்தா போக்தாவுக்கு வேறான சாக்ஷியிருக்கிறானென்பது மலடிமகனுக்குச்சமானமென்று சொன்னது சரியன்று. ஏனெனில் கர்த்தாபோக்தாவாகிய சமுசாரியின் விசேஷ பாகத்துக்குச் சாக்ஷியென்று பெயர். சாக்ஷியை நிஷேதிக்கும் பக்ஷத்தில் சமுசாரியின் விசேஷபாகத்தை நிஷேதிக்கும்படி நேரிடுவதால் கர்த்தா போக்தாவாகிய சமுசாரியையும் நிஷேதிக்கு

---

ருப்பும் அதின் தாஹசக்தியும் போல் ஆச்ரயமும் ஆச்ருதமும் பேதப்படவில்லையோ அப்பொழுது ஆச்ரயமும் விஷயமும் ஒன்றாகமாட்டா. அந்தக்கரணமும் விர்த்தியும் பேதப்படாததினால் அந்தக்கரணம் விர்த்திக்கு ஆசிரயமாயிருக்கிறதே தவிர விஷயமாகிறதில்லை. ௨௬

ம்படி நேரிடும். ஒரே சைதன்னியத்தில் சாக்ஷீபாவத்துக்கு அந்தக்கரணம் உபாதியாயும், கர்த்ரு போக்த்ருபாவங்களுக்கு விசேஷணமாயுமிருக்கிறது. விசேஷணத்துடன் கூடியது விசிஷ்ட மென்றும் உபாதியுடன் கூடியது உபஹித மென்றுஞ் சொல்லப்படும். எந்த வஸ்து எந்த இடத்தில் தானிருந்துகொண்டு அந்த இடத்திலிருக்கிற வேறொரு வஸ்துவை விளங்கும்படிச் செய்து தான் சம்பந்தப்படாமலிருக்கிறதோ அது உபாதியென்று சொல்லப்படும். நியாயமதத்தில் கர்ணகோளகத்திலிருக்கிற ஆகாசத்துக்குச் சுரோத்திரமென்று பெயர். அக்கர்ணகோளகம் சுரோத்திரத்துக்கு உபாதியாக இருக்கிறது. ஏனெனில் அக்கர்ண கோளகம் எந்த இடத்திலிருக்கிறதோ அந்த இடத்திலிருக்கிற ஆகாசத்தைச் சுரோத்திரமாக அறியும்படிச்செய்து தான் சம்பந்தப்படாமல் இருக்கிறது. ஆகையால் கர்ணகோளகம் சுரோத்திரத்துக்கு உபாதியாக இருக்கிறது. இப்படியே அந்தக்கரணமும் எந்தவிடத்திலிருக்கிறதோ அந்த இடத்திலிருக்கிற சைதன்னியத்தைச் சாக்ஷியென்று அறியும்படிச்செய்து தான் சம்பந்தப்படாமலிருக்கிறது. ஆகையால் அந்தக்கரணம் சாக்ஷிக்கு உபாதியாக இருக்கிறது. இதனால் அந்தக்கரணத்திலிருக்கிற சேதனமாத்திரத்துக்குச் சாக்ஷியென்று பெயர் ஏற்படுகிறது.

63. ஜீவஸ்வரூபம்:—தன் சகிதமாக வஸ்துவை அறியும்படிச்செய்கிறது விசேஷணமென்று சொல்லப்படுகிறது குண்டலத்தையுடைய புருஷன் வந்தானென்று சொல்லுமிடத்தில் புருஷனுக்குக்குண்டலம் விசேஷணமாக இருக்கிறது. ஏனெனில் தன் சகிதமாகப் புருஷன் வந்தானென்று அறியும்படிக்குண்டலஞ் செய்கிறது. நீலவர்ணமுள்ள கடத்தை நான் பார்த்தேனென்னு மிடத்திலும் நீலவர்ணம் கடத்துக்கு விசேஷணமாக இருக்கிறது. இப்படியே அந்தக்கரணமும் கர்த்தா போக்தாவாயிருக்கிற ஜீவசைதன்னியத்துக்கு விசேஷணமாக இருக்கிறது. ஏனெனில் அந்தக்கரண சகிதசைதன்னியத்தைக் கர்த்தாபோக்தாவாக அறியும்படி அந்தக்கரணஞ் செய்கிறது. ஆகையால் சமுசாரிக்கு அந்தக்கரணம் விசேஷணம். இதனால் அந்தக்கரணத்திலிருக்கிற சேதனமும் அந்தக்கரணமும் சேர்ந்து சமுசாரி என்று ஏற்படுகிறது. இந்த விஷயம் இனி (226—228) விவரிக்கப்படும்.

64. ஐக்கிய நிரூபணம்:—ராகத்துவேஷாதி கிலேசங்கள் சமுசாரியிடத்திலிருக்கின்றன, சாக்ஷியிடத்தில் இல்லை. சமுசாரி இடத்திலும் விசேஷணபாகமான அந்தக்கரணத்தில் அவை இருக்கின்றன, விசேஷியபாகமான சேதனத்திலில்லை. சமுசாரியின் விசேஷியபாகமான சேதனத்துக்கும் சாக்ஷிக்கும் பேதமில்லை. ஏனெனில் ஒரே சைதன்னியம் அந்தக்கரண சகிதமானால் சமுசாரி என்றும் அந்தக்கரண ரகிதமானால் சாக்ஷி என்

றும் சொல்லப்படுகிறது. ஆகையால் சாக்ஷி சமுசாரிகளின் விசேஷிய பாகத்தில் பேதமில்லை. விசேஷிய பாகத்தில் கிலேசத்தை யங்கீகரிக்கும் பக்ஷத்தில் சாக்ஷியிலும் கிலேசத்தை யங்கீகரிக்கவேண்டும். ஆனால் சாக்ஷி யாதொரு கிலேசமுமில்லாதது என்பது வேதாந்த சித்தாந்தம். ஆகையால் சமுசாரியின் விசேஷிய பாகத்தில் கிலேசமில்லை, ஆனால் விசேஷணமான அந்தக்கரணத்தில் மட்டில் கிலேசமிருக்கிறது. இந்த அபிப்பிராயத்தால்[25] தான் ராகத்துவேஷங்கள் புத்தி தர்மங்களென்றும் ஜீவதர்மங்களல்லவென்றும், சொல்லப்படுகின்றன. இவ்விதமாக அந்தக்கரணவிசிஷ்ட ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் ஏகத்துவஞ்சொல்லக் கூடாவிட்டாலும் அந்தக்கரண உபஹித சாக்ஷிக்கும் பிர்ம்மத்துக்கும் ஏகத்துவஞ் சொல்லக்கூடும்.

65. முன் (61) "சாக்ஷீ அநேகம் பிர்ம்மம் ஏகம் ஆகையால் நானா சாக்ஷிக்கும் ஏக பிர்ம்மத்துக்கும் ஏகத்துவஞ் சொல்லக்கூடாது. வியாபகமான ஏக பிர்ம்மத்துக்கும் சாக்ஷிக்கும் பேதம் இல்லையென்று சொல்லும் பக்ஷத்தில் சாக்ஷியும் எல்லாச் சரீரங்களிலும் வியாபகமாயும் ஏகமாயும் ஆய்விடும். இதனால் சர்வசரீரங்களுக்கும் சுகதுக்கங்கள் ஒரேகாலத்தில் ஒரேவிதமாய் விளங்கவேண்டும்," என்று செய்த ஆக்ஷேபம் சரியன்று. ஏனெனில் ஈசுவரசாக்ஷீ ஒன்றாக இருக்கிறது. ஜீவசாக்ஷீ அனேகமாயும் பரிச்சின்னமாயு மிருக்கிறது, ஆயினும் வியாபகப்பிர்ம்மத்துக்கு வேறாக இல்லை. கடாகாசம் நானாவாயும் பரிச்சின்னமாயும் இருந்தாலும் மகாகாசத்துக்கு வேறாகாமலும் மகாகாச ரூபமாகவே யிருக்கிறதுபோல நானாவாயும் பரிச்சின்னமாயுமிருக்கிற சாக்ஷியும் பிர்ம்மத்துக்கு வேறாகாமல் பிர்ம்மரூபமாகவேயிருக்கிறது.

66. சுகதுக்கங்கள் அந்தக்கரண விர்த்திக்கு விஷயங்கள் ஆகிறதில்லை என்று முன் (60) சொன்னது சரியன்று. ஏனெனில் சுகதுக்கங்கள் சாக்ஷியால் விளங்குவனவாயிருந்தாலும், அந்தச்சாக்ஷீ நானாவாக இருந்தாலும், எப்போது அந்தக்கரணத்தின் பரிணமம் சுகதுக்கரூபமாக ஆகிறதோ அப்போது அந்தக்கரணத்தின் ஞானரூபவிர்த்தி சுகதுக்கங்களை விஷயமாக்குகிறது. அந்த விர்த்தியி லாரூடமான சாக்ஷீ அவைகளைப்பிரகாசிப்பிக்கிறது. இந்த ரீதியாகக் கிரந்தக்காரரால் சுகதுக்கங்கள் சாக்ஷிக்கு விஷயங்கள் ஆகின்றனவென்றும் விர்த்தியன்றியில் கேவல சாக்ஷிக்கு விஷயங்களாகிறதில்லை என்றும் சொல்லப்படுகிறது. இதில் ஒரு இரகசியம் இருக்கிறது. ஆகாசத்தில் கடாகாசமென்கிற பெயரும் ஜலத்

25. 4வது தரங்கத்தின் (57) வது குறிப்பைப்பார்க்க.

தைக் கொண்டுவருகிற காரியமும் கடரூப உபாதி திர்ஷ்டியால் தோன்று கின்றன. அந்தத் திர்ஷ்டி யன்றியில் அவைகள் பிரதீதியாகிறதில்லை. ஆனல் ஆகாசமாத்திரமே பிரதீதியாகிறது. ஆகையால் கடாகாசம் மகா[26] காச ரூபமாகவே யிருக்கிறது. இதுபோல் சேதனத்தில் சாக்ஷீயென்கி ற பெயரும் தர்மசகித அந்தக்கரணத்தின் பிரகாசரூப காரியமும் அந்தக் கரணரூப உபாதிதிர்ஷ்டியால் விளங்குகின்றன. அந்தத் திருஷ்டிய ன்றியில் அவைகள் பிரதீதியாகிறதில்லை. ஆனல் சைதன்னியமாத்தி ரமான பிர்ம்மமே விளங்குகிறது. ஆகையால் சாக்ஷீ பிர்ம்ம ரூபமாக இருக்கிறது. இந்த அபிப்பிராயத்தால் சாக்ஷீ ஏகமென்று சொல்லப்ப டுகிறது. ஏனெனில் உபாதிதிர்ஷ்டியன்றியில் சாக்ஷியில் அநேகத்துவ மும் பரிச்சின்னத்துவமும்பிரதீதியாகிறதில்லை. இந்தச் சாக்ஷீஜீவப தத்தின் லக்ஷியார்த்தம். இதுஇனி விவரிக்கப்படும். இவ்விதமாக ஜீவ ப்பிர்ம்ம ஐக்கியம் கிரந்தத்துக்குவிஷயமாக ச்சொன்னது சரிதான்.

## பிரயோஜனத்தில் ஆக்ஷேபங்கள். (67—83)

### ஞானத்தால் பந்தம் நிவிர்த்தியாகமாட்டாது. (67—73)

67. பந்தம் சத்தியம்:— அகங்காரம் முதலிய அனாத்ம வஸ்துக் கள் பந்தமென்று சொல்லப்படுகின்றன. அந்தப்பந்தம் அத்தியாஸரூப மாக இருக்கும்பக்ஷத்தில ஞானத்தால் நிவிர்த்தியாகும். அத்தியாஸரூப மாக இல்லாதபக்ஷத்தில் ஞானத்தினல் நிவிர்த்தியாகமாட்டாது. ஏனெ னில் ஞானத்தின் சுபாவமென்னவெனில் எந்த வஸ்து அறியப்படுகிற தோ அதனிடத்திலிருக்கிற அத்தியாசத்தையும் அஞ்ஞானத்தையும் அவ் வஸ்துவின் ஞானம் நிவிர்த்தியாக்குகிறது. ரஜ்ஜுவின் ஞானம் ரஜ்ஜு விலுள்ள சர்ப்பாத்தியாசத்தையும் ரஜ்ஜுவின் அஞ்ஞானத்தையும் நிவிர் த்திசெய்கிறதுபோலும். பிராந்திஞானத்துக்கு விஷயமான மித்தியாவஸ் துவும் பிராந்திஞானமும் அத்தியாசமென்னப்படும்.[27] எதினிடத்தில் எந்த

---

26. வெள்ளைக்காகிதத்தில் கறுப்புக்கோடுகளால் அக்ஷரங்கள் விள ங்குகின்றன. அக்ஷரங்களுக்கும் காகிதத்துக்கும் சொல்மாத்திரத்தில் பே தம். எப்படிமையாகிற உபாதிதிர்ஷ்டியன்றியில் அக்ஷரங்கள் ஏற்படுகிறதி ல்லையோ காகிதமட்டும் இருக்குமோ அதுபோல் அந்தக்கரணமாகிற உபாதிதிர் ஷ்டியன்றியில் சாக்ஷீயென்கிற பெயர் ஏற்படுகிறதில்லை. அந்தசேதனந்தான இருக்கிறது.

27. உண்மையில் ஒருவஸ்து இல்லாமலிருக்க வேறொரு வஸ்துவில் அ து தோன்றுதலும் அவ்வஸ்துவும் அத்தியாஸமென்னப்படும். (உ-ம்) ரஜ்ஜுவில் ச ர்ப்பம் உண்மையில் இல்லை. ஆனல் பிராதிபாஸிகமாய்த் தோன்றுகிறது. இ

வஸ்து மித்தையாகவில்லையோ சத்தியமாகவிருக்கிறதோ அதற்கு ஞானத்தினால் நிவிர்த்தியில்லை. இதுபோல ஆத்மாவினிடத்தில் அகங்காராதி பந்தங்கள் பொய்யாயிருக்கும்பக்ஷத்தில் ஞானத்தால் அவை நிவிர்த்தியாகும். ஆத்மாவினிடத்தில் பந்தம் மித்தையென்று சொல்லுவதற்கு சாமக்கிரீகள் இல்லாததினாலும் பந்தம் பிரதீதியாகிறதினாலும் பந்தம் சத்தியமாகவேயிருக்கிறது. அந்தச்சத்தியபந்தம் ஞானத்தால் நிவிர்த்தியாகும் என்பது வீணாசை.

68. அத்தியாசஸாமக்கிரிகள்[28]:—(1) சத்தியவஸ்துவின் ஞானத்தாலுண்டாகிற சம்ஸ்காரம் (2) பிரமாதாவின்[29] தோஷம் (3) பிரமாணத்தின்[30] தோஷம் (4) பிரமேயத்தின்[31] தோஷம் (5) அதிஷ்டானத்தின் விசேஷஅஞ்ஞானம் சாமானிய ஞானம் இவைகள்தாம் அத்தியாசஸாமக்கிரிகள். இவைகளன்றியில் அத்தியாசம் உண்டாகிறதில்லை. கிளிஞ்சிலில் வெள்ளியும் ரஜ்ஜுவில் சர்ப்பமும் அத்தியாசங்களாயிருப்பதுபோலும். எவன் உண்மையான வெள்ளியையும் சர்ப்பத்தையும் பார்த்ததில்லையோ அவனுக்கு அவைகளின் அத்தியாசமுண்டாகிறதில்லை; பார்த்திருக்கிறவனுக்குத்தான் அத்தியாஸமுண்டாகிறது. ஆகையால் சத்தியவஸ்துவின் ஞானஸம்ஸ்காரம் அத்தியாஸத்துக்குஹேதுவாயிருக்கிறது. கிளிஞ்சிலில் சர்ப்பாத்தியாசமும் ரஜ்ஜுவில் வெள்ளியின் அத்தியாசமுமுண்டாகாததினால் பிரமேயத்தின் சாதிருசிய[32]

---

ச்சர்ப்பமும் சர்ப்பஞானமும அத்தியாஸமென்னப்படும். இவ்வத்தியாஸம் ஞானாத்தியாஸம் அர்த்தாத்தியாஸம் என இருவகைத்து. பிராந்திஞ்ஞானத்திற்கு விஷயமானமித்தியாசர்ப்பம் அர்த்தாத்தியாஸமாம். சர்ப்பஞ்ஞானம் ஞானாத்தியாசம். பரோக்ஷ அபரோக்ஷ பேதங்களால் இது இருவகை. ஞானாத்தியாஸத்துக்கு மித்தியாஞானமென்றும் பிராந்திஞானமென்றும் பெயர். அர்த்தாத்தியாஸம் ஸ்வரூபஅத்தியாஸஸம்சர்க்கஅத்தியாஸபேதங்களால் இருவகை. அஞ்ஞானாதிகளுக்குச் சேதனத்தினிடத்தில் ஸ்வரூப அத்தியாஸமாம். ஆனந்தாதிதர்மங்களுடன் கூடியசேதனத்துக்கு அஞ்ஞானாதிகளில் ஸம்ஸர்க்காத்தியாசமாம்.

28. சாமக்கிரி சப்தத்தால் காரணங்களின் சமுதாயமெனக் கொள்க. சமையலுக்கு அடுப்புவிறகு ஜலமுமுதலியவை சாமக்கிரிகளாயிருப்பதுபோலும்.

29. பிரமாதா என்றால் ஜீவன்.

30. பிரமாணம்—இந்திரியம்.

31. பிரமேயம்=விஷயம்.

32. சர்ப்பம் போல் ரஜ்ஜு வளைந்தும்நீண்டுமிருப்பது சாதிரிசிய தோஷம்.

தோஷம் அத்தியாசத்துக்குஹேதுவாயிருக்கிறது. இவ்விதமாகப்பிரமாதாவின் லோபபயாதி தோஷங்களும் நேத்திரமுதலிய பிரமாணங்களின்மஞ்சட்காமாலைமுதலிய தோஷங்களும் அத்தியாசத்துக்கு ஹேதுவாயிருக்கின்றன. கிளிஞ்சிலில் அத்தியாசமுண்டாகும்போது "இது"[33] என்கிற சாமானியஞானமுண்டாகிறது. "இதுகிளிஞ்சில்"[34] என்கிறவிசேஷ ஞானமுண்டாகிறதில்லை. அத்தியாசமுண்டாகாதகாலத்தில் "கிளிஞ்சிலிருக்கிறது" என்கிறவிசேஷஞானமுண்டாகிறது. சாமானிய ஞானமுண்டாகாத இடத்தில் அத்தியாசமுண்டாகிறதில்லை. ஆகையால் அதிஷ்டானத்தின் விசேஷ அஞ்ஞானமும் சாமானியஞானமும் அத்தியாசத்துக்குஹேதுவாயிருக்கின்றன. இந்த ஐந்து சாமக்கிரிகளில் ஏதாவதொன்று குறைந்தாலும் அத்தியாசமுண்டாகிறதில்லை. கடத்துக்குக்குலாலன், சக்கரம், தண்டம், மண், சாமக்கிரிகளாக இருக்கின்றன. இவைகளில் எது குறைந்தாலும் கடமுண்டாகாததுபோல் அத்தியாசமும அதன்சாமக்கிரிகளில் ஏதாவதொன்றுகுறைந்தாலும் உண்டாகிறதில்லை; மேற்கண்ட ஐந்துசாமக்கிரிகளாலுந்தான் உணடாகின்றது. ? 83131

69. முதல்சாமக்கிரி அபாவத்தால் பந்தம் சத்தியம்:—பந்த அத்தியாசத்தில் ஒருகாரணமுமில்லை. பந்தம்எப்போதாவது சத்தியமாகவிருந்தால் அதின்ஞானத்தாலுண்டாகும் ஸம்ஸ்காரத்தினால் ஆத்மாவினிடத்தில்பொய்யான பந்தம் பிரதீதியாகும். ஆனால் சித்தாந்தத்தில் ஆத்மாவுக்கு வேறான சத்தியவஸ்து யாதொன்றுமில்லை. ஆகையால் சத்தியபந்தத்தின் ஞானஜன்யஸம்ஸ்காரமில்லாதபடியால் ஆத்மாவினிடத்தில் பந்தாத்தியாஸஞ் சொல்லக்கூடாது.

70 2வது. 3வது.சாமக்கிரிகளின் அபாவம்:— பிரமாதாவின் தோஷமும் பிரமாணத்தின் தோஷமுமிருக்கவில்லை. ஏனெனில் பிரமாதாமுதலிய சர்வப்பிரபஞ்சமும் அத்தியாசரூபமாயிருக்கின்றது. இதுவேபந்தம். இதுவேதாந்தசித்தாந்தம்.[35] பந்தஅத்தியாசத்துக்குமுன் பிரமாத்ருப்பிரமாணங்களின் சொரூபங்களேற்படாததினால் அவைகளின் தோஷங்களும் ஏற்படுகிறதில்லை. ஆகையால் பந்தாத்தியாசஞ்சொல்லக்கூடாது.

---

33. எது பிராந்தி காலத்தில் தோன்றுகிறதோ எதுவன்றியில் பிராந்தியுண்டாகிறதில்லையோ அதற்குச்சாமானிய அம்சமென்றும் ஆதாரமென்றும் பெயர். 159 பார்க்க.

34. எது பிராந்திகாலத்தில் தோன்றுகிறதில்லையோ எது தோன்றுகிறதினால் பிராந்தி நிவிர்த்தியாகிறதோ அது விசேஷாம்சமென்றும் அதிஷ்டானம் என்றும் சொல்லப்படும்.

35. பிரம்மசைதன்னியத்துக்கு வேறானஅஞ்ஞானம் அதின் காரியமான ஸ்தூலசூக்ஷமப்பிரபஞ்சம் இவைகளெல்லாம் சேதனத்தில் அத்தியாஸங்களாக

71. **4வது சாமக்கிரி அபாவம்:**—ஆத்மாவுக்கும் பந்தத்துக்கும் சாதிருசியமுமில்லை. ஆனால் இருட்டும் பிரகாசமும்போல் அவைகள் விபரீத சுபாவமுள்ளவை. ஆத்மா பிரத்தியக், அதாவது, ஆந்தரமாயும், பந்தம் பராக், அதாவது, பாஹியமாயுமிருக்கின்றன. மேலும் ஆத்மாவிஷயீ, அதாவது, பிரகாசிப்பிக்கிறதாயும், பந்தம் விஷயம், அதாவது, பிரகாசிப்பிக்கப்படுகிறதாயும் இருக்கின்றன. பிரத்தியக்கிடத்தில் பராக்குக்கும், பராக்கிடத்தில் பிரத்தியக்குக்கும் அத்தியாசமுண்டாகமாட்டாது. புத்திராதிகளையுத்தேசித்துத் தேகம் பிரத்தியக்காக இருக்கிறது. தேகத்தில் புத்திராதிகளுக்கும் புத்திராதிகளிடத்தில் தேகத்துக்கும் அத்தியாசமுண்டாகிறதில்லை. அப்படியே விஷயத்தில் விஷயீக்கும், விஷயீ இடத்தில் விஷயத்துக்கும் அத்தியாசமுண்டாகிறதில்லை. விஷயமாகிற கடாதிகளிடத்தில் விஷயீயாகிறதீபத்துக்கும், தீபத்தில் கடாதிகளுக்கும் அத்தியாசமுண்டாகாததுபோல் சாதிருசியமில்லாததினால் பிரத்தியக்காயும் விஷயீயாயும் இருக்கிற ஆத்மாவிடத்தில் பராக்காயும் விஷயமாயும் இருக்கிறபந்தத்திற்கு அத்தியாசமுண்டாகமாட்டாது. பிரத்தியக்குக்கும் பராக்குக்கும் விரோதம். அப்படியே விஷயத்துக்கும் விஷயீக்கும் விரோதம். இவைகளுக்குள் சாதிருசியமில்லாததினால் ஆத்மாவிடத்தில் பந்தஅத்தியாசம் சொல்லக்கூடாது.

72. **5வது சாமக்கிரி அபாவம்(72-73):**—அதிஷ்டானத்தின் விசேஷ அஞ்ஞானமுஞ்சொல்லக்கூடாது. ஏனெனில் பந்தத்துக்கு அதிஷ்டானமான பிர்ம்மம் சுயம்பிரகாசஞானரூபமாயிருக்கிறது. இப்படிப்பட்டபிர்ம்மத்தில் சூரியனிடத்தில் இருட்டுப்போல் அஞ்ஞானம் இருக்கமாட்டாது பிரகாசமான சூரியனுக்கும் இருட்டுக்கும் விரோதமிருக்கிறதுபோல் சேதனப்பிரகாசமான பிர்ம்மத்துக்கும் தமோரூபமான அஞ்ஞானத்துக்கும் பரஸ்பரம் விரோதம். ஆகையால் இவ்விரண்டுஞ்சேரமாட்டா.

73. மேலும் அதிஷ்டானத்தின் அஞ்ஞானத்தையங்கீகரித்தாலும் பந்தாத்தியாசமுண்டாகமாட்டாது. ஏனெனில் சுத்தமாயறியாதஇடத்திலும் செம்மையாயறிந்த இடத்திலும் அத்தியாசம் உண்டாகமாட்டாது. ஆனால் விசேஷமாயறியாத இடத்திலும் சாமானியமாயறிந்த இடத்திலும் அத்தியாசமுண்டாகும். பிர்ம்மம் சாமானியவிசேஷபாவங்களன்றியிலும் நிர்விசேஷமாயும் இருக்கிறதாகச் சித்தாந்தம். ஆகையால் பிர்ம்மம் விசே

---

ருக்கின்றன. அந்தக்கரண ரூபப்பிரமாதாவும் இந்திரியரூபப்பிரமாணமும் வகளில் அடங்கியிருப்பதால் இவைகளும் அத்தியஸ்தங்களே. அத்தியாஸத்துக்கு முன் இவைகள்சித்திக்கிறதில்லை இது உபநிஷத்துச்சித்தாந்தம்.

ஷமாயறியப்படவில்லையென்றும் சாமானியமாயறியப்பட்டிருக்கிற தென்றும்சொல்வது சரியன்று. மேலும் அத்தியாசத்தை அவசியம் அங்கீகரிக்க வேண்டுமென்கிற ஆசையால் பிர்ம்மத்தினிடத்தில் சாமானியவிசேஷபாவங்களையங்கீகரித்தால் சித்தாந்தத்தைத்தள்ளிவிடும்படி நேரிடும். இவ்விதமாக நிர்விசேஷமான பிரகாசரூபப்பிர்ம்மத்தினிடத்தில் விசேஷ அஞ்ஞானமும் சாமானியஞானமுமில்லாதபடியால் அதனிடத்தில் அத்தியாசம் உண்டாகாது. ஆகையால் பிர்ம்மத்தினிடத்தில் பந்தம் அத்தியாசரூபமெனக்கூடாது. ஆனல் பந்தம் சத்தியமே. இந்த ஸத்தியபந்தம் ஞானத்தால் நிவிர்த்தியாகமாட்டாது. ஆகையால் இந்தக்கிரந்தத்துக்கு ஞானமூலமாக மோக்ஷரூபப்பிரயோஜனம் சொன்னது சரியன்று. ஞானத்தினல் மோக்ஷம் கிடைக்குமென்று சொன்ன சித்தாந்தம் சரியன்று.

74 கர்மத்தின் ஆவசியகம்:— முன் (73) ஞானத்தால்மோக்ஷம் சித்திக்கமாட்டாதெனச் சொல்லப்பட்டது. ஏகபவிக வாதிகளின்ரீதிப்படிக்கர்மத்தால் மோக்ஷம் சித்திக்குமென்பதை இனிச்சொல்லுகிருர். சத்திய பந்தம் ஞானத்தினல் நிவிர்த்தியாகுமெனபது மேற்கண்டபடி யுக்திக்கு விருத்தமாயிருக்கிறது. ஆகையால் மோக்ஷத்தையடைய இச்சிக்கிறவன் எப்போதும் கர்மத்தைச்செய்ய வேண்டியது.

75 கர்மவிவாம் (75-76):— கர்மம் விகிதம்நிஷித்தமென இருவகையாம் புருஷனுடைய பிரவிர்த்திநிமித்தமாய் எககருமங்களை வேதம்விதித்திருக்கிறதோ அவைவிகிதகர்மங்களாம். எக்கருமங்களை வேதம்நிஷேதித்திருக்கிறதோ அவைநிஷித்தகர்மங்களாம் சுபாவசித்தமாய்ச்செய்யப்பட்டகிரியைகள் கர்மங்கள்அன்று. ஏனெனில்வேதத்தால் பிரவிர்த்திநிவிர்த்திகளின்பொருட்டுச் சொல்லப்பட்டிருக்கிறகிரியைகளே கர்மங்களெனப்படும். உதாசீனக்கிரியைகள்[36] கர்மங்களன்று. ஆகையால் கர்மம் இருவகையேதவிர மூன்றுவகையன்று.

76. விகிதவிவாம்:—விகிதகர்மம் நான்குவகைப்படும். (1) நித்தியம் (2)நைமித்தியகம் (3)காமியம் (4) பிராயச்சித்தம். பாபநாசத்தின் பொருட்டு விதிக்கப்பட்டகர்மம்[37] பிராயச்சித்தமாம். பிரமாதத்தினல் ஒரு சந்நியாசி

36. வேதத்தில் விதிக்கப்படாமலும், அல்லது நிஷேதிக்கப்படாமலும் ராகத்துவேஷங்களன்றியில் செய்யப்படும் ஸ்வாபாவிகமான நடை சௌசம் முதலியகர்மங்கள் உதாசீனங்களாம்.

37. அவசியம் செய்யவேண்டியகாரியத்தை மறந்து விடுதல் அல்லது இச்சையிருந்தும் செய்யாமலிருத்தல் பிரமாதமென்னப்படும்.

திரவியத்தைக்கிரகித்துப் பாபத்தைச் சம்பாதிக்கிறான்; அந்தப் பாபபரிகாரநிமித்தம் திரவியத்தைத்தியாகம்பண்ணி மூன்றுநாள் உபவாசமாயிருக்கிறான். இது பிராயச்சித்தகர்மம். பலத்தின்பொருட்டு விதிக்கப்பட்டகர்மம் காமியம். மழையை இச்சிக்கிறவன் செய்கிறகாரீரீயாகமும் சுவர்க்கத்தை இச்சிக்கிறவன் செய்கிற அக்கினிஹோத்திரம் சோமயாகம் முதலியவை காமியங்கள். எந்தக்கர்மத்தைச்செய்யாததினால் பாபமுண்டாகிறதோ எதைச் செய்கிறதினால் புண்ணியபாபரூபபலன்கள் உண்டாகிறதில்லையோ, எது எப்போதும் விதிக்கப்படுகிறதில்லையோ, ஆனால் சிலநிமித்தங்களின் பொருட்டு விதிக்கப்பட்டிருக்கிறதோ அது நைமித்திகம். கிரகணகாலத்தில் செய்யும் சிராத்தங்கள் நைமித்திககர்மங்கள். வயோவிர்த்தன், சாதிவிர்த்தன், ஆசிரமவிர்த்தன், வித்தியாவிர்த்தன், தர்மவிர்த்தன், ஞானவிர்த்தன், இவர்கள் வருங்காலத்தில் செய்யப்பட்ட உத்தானரூபகர்மங்கள் நைமித்திகங்கள். வித்தியாசப்தத்தினால் சாஸ்திரஞானமும் ஞானசப்தத்தால் அபரோக்ஷஞானமும் கொள்ளத்தக்கன. மேற்சொன்னவிர்த்தர்களில் வரிசைக்கிரமப்படி பின்சொல்லப்பட்டவர்முன் சொல்லப்பட்டவருக்கு உத்தமர். எது செய்யாததினால் பாபமுண்டாகிறதோ, செய்கிறதினால் புண்ணியமில்லையோ, மேலும் எது எப்போது விதிக்கப்பட்டிருக்கிறதோ அது நித்தியகர்மம். ஸ்நானசந்தியாவந்தனாதிகள் போலும். இவ்விதமாக நான்குவித விகிதகர்மங்களும் நிஷித்தகர்மமும் சேர்ந்து கர்மம் ஐந்துவகையாம்.

### மோக்ஷ இச்சையுள்ளவன் செய்யவேண்டியகர்மம்(77—82)

77. மோக்ஷத்தை யிச்சிக்கிறவன் காமியநிஷித்தகர்மங்களைச்செய்யக்கூடாது. ஏனெனில் காமியகர்மத்தால் உத்தமலோகமும் நிஷித்தகர்மத்தால் நீசலோகமும் அடையப்படுகின்றன. ஆகையால் இவைகளைத்தியாகஞ்செய்து நித்தியகர்மங்களை எப்போதும், நைமித்திககர்மங்களை நிமித்தங்கள் நேரிடும்போதும் மோக்ஷ இச்சை உள்ளவன் செய்யவேண்டும். ஏனெனில் நித்தியநைமித்திககர்மங்களைச்செய்யாவிட்டால் பாபங்கள் உண்டாகின்றன. அவைகளால் நீசயோனி அடையப்படுகிறது. ஆகையால் பாபத்தைப் போக்குவதற்காக நித்தியநைமித்திக கர்மங்களைச்செய்யவேண்டும். இவைகளைச் செய்யாததினாலுண்டாகும் பாபங்கள் செய்கிறதினாலுண்டாகாமலிருப்பதே இவைகளுக்குப்பலனே தவிர வேறுபலனில்லை. ஆகையால் முமுக்ஷுவானவன நித்தியநைமித்திக கர்மங்களை அவசியம் செய்யவேண்டும்.

78. ஒருக்கால் எவனாவது பிரமாதத்தினால் நிஷித்தகர்மத்தைச் செய்தால் அந்த தோஷத்தை நிவிர்த்திசெய்வதற்காகப் பிராயச்சித்தத்தைச் செய்யவேண்டும். ஒருவன் இந்த ஜன்மத்தில் நிஷித்தகர்மத்தைச் செய்யாமலிருந்தாலும் ஜன்மாந்தரத்தில் செய்தபாபத்தைப் போக்குவதற்காகப்

பிராயச்சித்தத்தைச் செய்யவேண்டும். பிராயசசித்தம் இருவகை. (1) அசாதாரணம் (2) சாதாரணம். குறிப்பிட்டபாபத்தை நிவிர்த்திக்கச் சாஸ்திரத்தினல் விதிக்கப்பட்ட பிராயச்சித்தம் அசாதாரணமாம். முன்(76)ச் சொல்லப்பட்ட உபவாசாதிகள்போலும். சர்வபாபங்களையும் நிவிர்த்திக்க சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட பிராயச்சிததம் சாதாரணமாம். கங்காஸ்நாநம், ஈசுவரநாமோச்சாரணம் முதலியவைபோலும். இவ்விதமாக இரண்டுவிதப்பிராயச்சித்தங்களுள. பாபமறியப்பட்டிருந்தால் அதைப் போக்குவதற்காகச் சாஸ்திரத்திற்சொல்லிய அசாதாரணப்பிராயச்சித்தத்தை செய்யவேண்டியது. ஜன்மாந்தரததிற்செய்யப்பட்டதும் இப்போது அறியப்படாததுமான பாவத்தைப்போக்கச் சாதாரணப்பிராயச்சித்தத்தைச்செய்யவேண்டியது. ஏனெனில் அசாதாரணப்பிராயச்சித்தத்தின் சுபாவமென்னவெனில், எந்தப்பாவததைப்போக்க அது ஏற்பட்டிருக்கிறதோ அதைத்தவிர வேறொன்றையும் அது போக்கமாட்டாது. ஜன்மாந்தரத்தின் பாபமின்னதென்று தெரியாதபடியால் அதை நிவிர்த்திக்கச் சாதாரண பிராயச்சித்தநதான்செய்யவேண்டியது.

79. சாதாரணப்பிராயச்சித்தத்தினல் சர்வபாவங்களும் நிவிர்த்தியாகின்றன. கங்காஸ்நாநம் முதலிய சாதாரணப்பிராயச்சித்தங்கள் கேவலப்பிராயச்சித்தங்களன்று. ஆனல் காமியரூபமாயும் பிராயச்சித்தரூபமாயுமிருக்கின்றன. ஏனெனில் கங்காஸ்நாநத்தினலும் ஈசுவரநாமோச்சாரணத்தினலும் உத்தமலோகம் அடையப்படுவதாய்ச் சாஸ்திரத்திற்சொல்லியிருக்கிறபடியால் இவைகள் காமியரூபமாயிருக்கின்றன; பாவத்தைப் போக்குவதால் பிராயச்சித்தரூபமாயுமிருக்கின்றன. அசுவமேதயாகம் பிரமஹத்தியாதி பாபங்களை நிவிர்த்திக்கிறது, சுவர்க்கப்பிராப்திரூபபலத்தையுங்கொடுக்கிறது. இதுபோல், கங்காஸ்நாநாதிகளும்கேவலப்பிராயச்சித்தரூபமாக இல்லாதபடியால் உத்தமலோகத்தைக்கொடுக்கின்றன. இதை முமுக்ஷுவானவன் இச்சிக்கிறதில்லை. ஆனலும் உத்தமலோகத்தில் இச்சையுள்ளவனுக்குக் கங்காஸ்நாநாதிகள் பாபத்தைப்போக்கி அதைக்கொடுக்கின்றன. இச்சையில்லாதவனுக்குக் கேவலம் பாபத்தைப்போக்குகின்றன. ஆகையால் இச்சையுடன்செய்கிற பிராயச்சித்தம் காமியரூபமாயும், இச்சையன்றியில் செய்யப்படுகிற பிராயச்சித்தம் கேவலப்பிராயச்சித்தரூபமாயுமிருக்கிறது. வேதாந்தமதத்தில் சகலகர்மங்களும் ஸகாமபுருஷனுக்கு ஸம்ஸாரத்துக்குஹேதுக்களாயும் நிஷ்காமபுருஷனுக்கு அந்தக்கரணசுத்தியால் மோக்ஷத்துக்குஹேதுவாயும் இருப்பதுபோல, ஓரேகங்காஸ்நாநமும் அப்படியே ஈசுவரநாமஉச்சாரணமும் ஸகாமனுக்குக்காமியபிராயச்சித்தரூபமாயும் நிஷ்காமனுக்குக் கேவலப்பிராயச்சித்தரூபமாயுமிருக்கின்றன. ஆகையால் முமுக்ஷு சாதாரணப்பிராயச்சித்தத்தைச்செய்யவேண்டும். இவ்விதமாக ஜன்மாந்திரத்தின் பாபங்களெல்லாம் ஞானமன்றியிலேயே நிவிர்த்தியாகின்றன.

80. அப்படியே ஜன்மாந்திரத்தின் காமியகர்மமும் முமுக்ஷுவுக்கு மலடிபோலப்பலன்தராது. ஏனெனில் வேதாந்த சித்தாந்தத்தில் கர்மானுஷ்டான காலத்தில் பலத்தில் இச்சையுண்டானால் அது சுவர்க்காதி லோகப்பிராப்திக்குஹேதுவாயும் பலத்தில் இச்சையில்லாவிட்டால் சுவர்க்காதிப்பிராப்திக்கு ஹேதுவாகாமலும் இருப்பதுபோல நம்முடைய ஏகபவிகவாத சித்தாந்தத்தில கர்மசித்தியின் பிறகும் புருஷனுடைய இச்சைபலத்துக்குஹேதுவாயிருக்கிறது. புருஷனுக்கு மோக்ஷ இச்சையுண்டான காலத்தில் முன் இச்சை பலனுக்கு ஹேதுவாகிறதில்லை. ஆகையால் ஜன்மாந்திரத்தின் காமியகர்மமும் பலனுக்குஹேதுவாகிறதில்லை. ஒருவன் தனத்தையுடைய வேண்டுமென்கிற இச்சையால் ஒரு தனிகனை ஆராதிக்கிறான். அப்படியாராதித்த பிறகு அவனுக்குச்சில ஹேதுக்களால் தனத்திலிச்சை விட்டுப்போகிறது. அப்போது தனப்பிராப்தி ரூபபலன் உண்டாகிறதில்லை. இதுபோல ஜன்மாந்திரத்தின் காமியகர்மபலன்களிலும் முமுக்ஷுவுக்கு இச்சையுண்டாகாதபடியால் பலன் உண்டாகிறதில்லை. ஆகையால் கேவலம் கர்மத்தினால் மோக்ஷமுண்டாகும்.

81. வர்த்தமான ஜன்மத்தில் காமியகர்மமும் நிஷித்தகர்மமுஞ்செய்யப்படாததினால் ஊர்த்துவஅதோ லோகங்களடையப் படுகிறதில்லை. ஜன்மாந்தரத்தின் பிராப்தமான நிஷித்த காமியகர்மங்கள் போகத்தால் நாசமாகின்றன. நித்திய நைமித்திககர்மங்களைச் செய்யாததினாலுண்டாகும் பாபம் அவைகளைச் செய்வதினால் முமுக்ஷுவுக்குச் சம்பவிக்கிறதில்லை. ஜன்மாந்தரத்தின் சஞ்சிதநிஷித்தகர்மங்கள் சாதாரணப் பிராயச்சித்தத்தால் நிவிர்த்தியாகின்றன. ஜன்மாந்தரத்தின் சஞ்சித காமியகர்மங்கள் முமுக்ஷுவுக்கு இச்சை யில்லாதபடியால் பலனைக் கொடுக்கிறதில்லை. ஆகையால் முமுக்ஷு நித்தியநைமித்திக சாதாரணப்பிராயச்சித்த ரூபகர்மங்களைச் செய்யவேண்டியது. வர்த்தமான ஜன்மத்தின் அறியப்பட்ட நிஷித்தகர்மங்களைப்போக்க அசாதாரணப்பிராயச்சித்தஞ்செய்யவேண்டியது.

82. பிராயச்சித்தமும் அனுவசியம்:—முமுக்ஷுவானவன் நித்தியநைமித்திகங்களைமட்டுஞ்செய்து பிராயச்சித்தத்தைவிட்டுவிடலாம். ஏனெனில்(1)சஞ்சிதநிஷித்தகாமியகர்மங்கள் முமுக்ஷுவுக்கு நிஷ்பலனாகின்றன. வேதாந்தமதத்தில் ஞானிக்குச்சஞ்சிதகர்மங்கள் நாசமாகிறதாய்ச்சொல்லியிருப்பதுபோல், நிஷித்தகர்மியங்களை விட்டு நித்தியநைமித்திகங்களைச்

38. சாதாரண அசாதாரணப் பிராயச்சித்தங்களைச் செய்வதில் வெகு சிரமத்தைக்கண்டு முமுக்ஷுவானவன் பூர்வபக்ஷியின் மதத்தில் பிரியப்படமாட்டானென்று நினைத்து பூர்வபக்ஷி இந்த உபாயத்தைச்சொல்லுகிறான்.

செய்கிற முமுக்ஷுவுக்கு நம்முடைய மதப்படிச் சஞ்சிதகர்மங்கள் நாசமாகின்றன.[39] (2) அல்லது, சஞ்சிதமான காமியநிஷித்தகர்மங்கள் எல்லாஞ்சேர்ந்து முமுக்ஷுவுக்கு இனி ஒரு ஜன்மத்தைக் கொடுக்கும். ஆகையால் முமுக்ஷுவுக்கு வேறு ஒருஜன்மமுண்டாகும்.[40] (3) அல்லது முமுக்ஷுவானவன், யோகி அநேக சரீரங்களின் போகங்களை ஒரேசரீரத்தில் ஒரேகாலத்தில் அநுபவிக்கக்கூடியதுபோல், வரும் ஜன்மத்தில் பூர்வஜன்மங்களின் சஞ்சிதமான எல்லாக்கருமங்களின் பலன்களையும் அநுபவிக்கக்கூடும்.[41] (4) அல்லது நித்தியநைமித்திகங்களைச் செய்கிறதினாலுண்டாகுங்கிலேசம் ஜன்மாந்திரத்தின் சஞ்சித நிஷித்தகர்மங்களின் பலனாகிறது. ஆகையால் ஜன்மாந்திரத்தின் சஞ்சிதநிஷித்தகர்மங்கள் நூதனஜன்மத்தைக் கொடுக்க ஹேதுவாகா. சஞ்சிதகாமியகர்மங்களும் பலனை, இனிக்கிடைக்கும் அந்த ஒரு ஜன்மத்திலேயே முழுதுங்கொடுத்துவிடுகின்றன. அச்ஜென்மத்தில் முமுக்ஷுவுக்குத் துக்கலேசமுமில்லை: கேவலம்சுகம்மட்டுந்தானிருக்கிறது. ஏனெனில் ஜன்மாந்திரத்தின் சஞ்சிதவிகிதகர்மம மேற்சொல்லிய ஒரு ஜன்மத்தைக்கொடுக்கிறது. சஞ்சிதநிஷித்தம் நித்தியநைமித்திககர்மாநுஷ்டானக்கிலேசத்தினால் பிரகிருதஜன்மத்திலேயே நாசமடைகிறது. இவ்விதமாகப் பிராயச்சித்தமன்றியிலேயே நித்தியநைமித்திககர்மங்கள் மோக்ஷத்தைக்கொடுக்கின்றன. ஆகையால் நித்தியகர்மங்களை எப்போதும் நைமித்திககர்மங்களை நிமித்தியம நேரிடும்போதும் அநுஷ்டிக்கவேண்டியது: இந்தமதத்துக்குச் சாஸ்திரத்தில் ஏகபவிகவாதமென்று பெயர்.[42]

---

39. செய்த சுபாசுபகர்மங்களை அநுபவிக்காமல் அவைகள் நசிக்கமாட்டா என்று சொல்லும் சாஸ்திரத்துக்கு விரோதம் வருவதால் அதை நிவிர்த்திக்கப் பூர்வபக்ஷி இந்த உபாயத்தைச் சொல்லுகிறார்.

40. அநேக விலக்ஷண ஜன்மங்களுக்குக் காரணமான அநேககர்மங்கள் ஒருஜன்மத்தைக்கொடுக்கக்கூடுமென்பதற்குத் திருஷ்டாந்தஞ்சொல்லுகிறார்.

41. அநேக கர்மங்களின் பலன் ஒரேகாலத்தில் உண்டாகிறதாயிருந்தால் சுகம்போல் துக்கமுண்டாகவேண்டும். அப்போது முமுக்ஷுவுக்கு இம்மதத்தில் பிரவிர்த்தியுண்டாகமாட்டாது. அப்படியுண்டாவதற்காக இந்தப்பக்ஷஞ்சொல்லப்படுகிறது.

42. ஏகபவிகமென்றால் ஏகஜன்மம் அல்லது மோக்ஷத்துக்குச்சாதனமான கர்மம் மாத்திரந்தான். வாதம் என்றால் சொல்லுதல் ஆகையால் கர்மத்தை மோக்ஷசாதனமாகச் சொல்லும்பக்ஷத்துக்குச் சாஸ்திரத்தில் ஏகபவிகவாதமென்று பெயர்.

83. ஆகையாலும் இந்தக்கிரந்தம் ஞானமூலமாகப் பந்தத்தைநிவிர்த்திக்குமென்று சொன்னசித்தாந்தம் சரியன்று. ஏனெனில், ரூபஞானம் நேத்திரமன்றியில் வேறெதினாலுமுண்டாகாததுபோலவும், ஆகையால் ரூபஞானமே நேத்திரத்தின் முக்கியப்பிரயோஜனமாயிருப்பதுபோலவும், எந்தப்பிரயோசனம் எதினாலுண்டாகிறதோ வேறெதினாலுமுண்டாகமாட்டாதோ, அது அதின் முக்கியப்பிரயோசனமென்று சொல்லப்படுகிறது. பந்தநிவிர்த்தியானது கிரந்தஞானமன்றியில் கர்மத்தினாலுண்டாவதால் அது கிரந்தத்தின்பிரயோசனமன்று.

## பிரயோஜனத்தில் சமாதானங்கள் (84—107)

## பந்தம்மித்லை அதுஞானத்தால் நிவிர்த்தியாகும்

## (67-73)ல் செய்த ஆக்ஷேபங்களுக்குச்சமாதானங்கள் (84-98)

84. பந்தம் மித்தை:—பந்தம் சத்தியம். அது ஞானத்தால் நிவிர்த்தியாகமாட்டாதென்று (67)ல்செய்த ஆக்ஷேபம் சரியன்று. ஏனெனில் பந்தம்மித்தை, அது ஞானத்தால் நிவிர்த்தியாகும்.

85. (69)க்குச்சமாதானம்(85—93):—சத்தியவஸ்துவின்ஞானம் சம்ஸ்காரமூலமாக அத்தியாசத்துக்கு ஹேதுவாகிறது. சத்தியமான சர்ப்பத்தின் ஞானம் சம்ஸ்காரமூலமாய் சர்ப்பாத்தியாசத்துக்கு ஹேதுவாயிருப்பதுபோல, பந்தம் சத்தியமானால் சத்தியபந்தத்தின் ஞானமுண்டாகும். சித்தாந்தத்திலோ அநாத்மவஸ்துக்கள் யாதொன்றும் சத்தியமன்று. ஆகையால் சம்ஸ்காரமூலமாக அத்தியாசத்துக்கு சாமக்கிரியாகிற சத்தியவஸ்துவின் ஞானம் சித்திக்காதபடியால் பந்தம் அத்தியாசமன்று. ஆனால் சத்தியமே. இப்படி முன் (69) செய்த ஆக்ஷேபம் சரியன்று. ஏனெனில் அத்தியாசவிஷயத்தில் ஸம்ஸ்காரமூலமாகச் சத்தியவஸ்துவின் ஞானம் ஹேதுவாக இருக்கிறது என்பது கூடாது. ஆனால் வஸ்துஞானம் ஹேதுவாயிருக்கிறது. அந்த வஸ்து சத்தியமாகவாவது மித்தையாகவாவது இருக்கக்கூடும். சத்தியவஸ்துஞானமே அத்தியாசத்துக்கு ஹேதுவாயிருக்கும்பக்ஷத்தில், ஒரு புருஷன் உண்மையான மாமரத்தைப்பார்த்ததில்லை. ஆனால் வித்தையாடியாற் காண்பிக்கப்பட்ட பொய்மாமரத்தைப்பலதடவைபார்த்தும் அது நான்மாமரமென்று அவனிடத்திலிருந்து கேட்டுமிருக்கிறான். அந்தப்புருஷன் இலுப்பைமரத்தை ஒருகாலத்திலும்பார்த்ததுமில்லை. அதைப்பற்றிக்கேள்விப்பட்டதுமில்லை. அந்த இலுப்பைமரத்தைக்கண்டவுடன் அதனிடத்தில் மாமர அத்தியாசமுண்டாகிறது. பூர்வபக்ஷியின் மதப்படி இந்த அத்தியாசமுண்டாகக்கூடாது. ஏனெனில் உண்மையான மாமரத்தின் ஞானம் அவனுக்கு ஏற்கனவேயில்லை. நம்முடைய மதப்படியோ வித்தையாடியால் காண்பிக்கப்பட்ட பொய்மாமரத்தின் ஞானமிருப்பதால் இலுப்பைமரத்தில் மாமர அத்தியாசமு

ண்டாகக்கூடும். ஆகையால் ஸஜாதீயவஸ்துவின் ஞானஜன்யஸம்ஸ்காரமே அத்தியாஸத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. இந்த ஸம்ஸ்காரத்தையுண்டுபண்ணுகிற ஞானமும் அதன்விஷயமும் மித்தையாகவாவது சத்தியமாகவாவது இருக்கக்கூடும். ஸம்ஸ்காரமூலமாக ஞானம் ஹேதுவாயிருக்கிறதென்பதற்கும் ஞானஜன்யஸம்ஸ்காரம் ஹேதுவாயிருக்கிறதென்பதற்கும் அர்த்தமொன்றுதான். அதாவது,ஞானம் ஸம்ஸ்காரத்துக்குஹேது; ஸம்ஸ்காரம் அத்தியாசத்துக்கு ஹேது. ஆகையால் ஸம்ஸ்காரமூலமாக ஞானம் ஹேதுவென்று சொன்னதினாலும ஞானஜன்யஸம்ஸ்காரமே அத்தியாஸத்துக்கு ஹேதுவென்று சித்திக்கிறது.

86. கேவல வஸ்துஞானமே அத்தியாசத்துக்கு ஹேதுவென்று சொல்லக்கூடாது. ஏனெனில் எது காரணமோ அது காரியத்துக்கு அவ்வியவஹித பூர்வகாலத்தில் இருக்கவேண்டுமென்பது நியாயம்.* கடத்துக்கு ஹேதுவான தண்டசக்கராதிகள் கடத்துக்கு அவ்வியவஹித பூர்வகாலத்திலிருப்பதுபோல அத்தியாசத்துக்கு ஞானம் ஹேதுவாயிருக்கும் பக்ஷத்தில் அதுவும் அத்தியாசத்துக்கு அவ்வியவஹித பூர்வகாலத்தில் இருக்கவேண்டும். ஆனால் அனுபவத்தில் அப்படியில்லை. ஏனெனில் எவனுக்குச்சர்ப்பஞானமுண்டாயிக்கிறதோ அவனுக்கு ஞானமுண்டாகி ஒருமாசத்துக்குப்பின்னும்[43] ரஜ்ஜுவில் சர்ப்பாத்தியாசமுண்டாகிறது. •மேல் சொன்ன நியாயப்படி இந்த அத்தியாசமுண்டாகக்கூடாது. ஏனெனில் ரஜ்ஜுவில் சர்ப்பாத்தியாசத்துக்குக்காரணமான சர்ப்பஞானம் முந்தியே நாசமாய் விட்டது. ஆகையால் அது அத்தியாசத்துக்கு அவ்வியவஹித பூர்வகாலத்தி லில்லை; வியவஹித பூர்வகாலத்திலிருந்தாலும் அவ்வியவஹித பூர்வகாலத்தில் இல்லை. ஆகையால் கேவலம் வஸ்துஞானம் அத்தியாஸத்துக்குஹேதுவன்று. அவ்வியவஹித பூர்வகாலத்திலிருக்கிறதுதான் ஹேது. அவ்வியவஹிதமென்றால் இடைவெளியில்லாதது: வியவஹிதமென்றால் இடைவெளி யுள்ளது

87. இதற்கு ஆக்ஷேபம்:—காரியத்துக்கு முந்தினகாலத்தில் காரணமிருக்கவேண்டியது. அந்த முந்தின காலம் வியவஹிதமாயாவது அவ்வியவஹிதமாயாவது இருக்கக்கூடும். காரியத்துக்கு அவ்வியவஹிதபூர்வகாலத்திலேயே காரணமிருக்கவேண்டுமென்கிற நியாயமிருக்கும்பக்ஷத்தில் விஹிதகர்மம் சுவர்க்கப்பிராப்திக்கும் நிஷித்தகர்மம் நரகப்பிராப்திக்கும் ஹேதுவென்று சொல்லிய சாஸ்திரவசனம் அப்பிரமாணமாய்விடும்.

---

43: ஒருமாதம் என்பதால் வெகு நாளைக்குப் பிறகும் என்று அறியத்தக்கது.

ஏனெனில் காயிக, வாசிக, மானஸிகக்கிரியைகளுக்குப் பெயர் கர்மங்களாம். அக்கிரியைகள் அனுஷ்டானமானவுடன் நாசமடைகின்றன. சுவர்க்க நரகங்கள் காலாந்தரத்தில் உண்டாகின்றன. ஆகையால் சுவர்க்க நரகப்பிராப்திக்கு அவ்வியவஹித பூர்வகாலத்தில் விஹிதநிஷித்த காமங்களில்லை. வியவஹித பூர்வகாலத்தின் சுபாசுபகர்மங்கள் சுவர்க்க நரகப்பிராப்திக்கு முறையே ஹேதுக்களாவதுபோல் வியவஹித பூர்வகாலத்தின் சர்ப்பஞானமும் ரஜ்ஜுவில் உண்டாகிற சர்ப்பாத்தியாசத்துக்கு ஹேதுவாயிருக்கும்.

88 மேற்செய்த ஆக்ஷேபஞ்சரியன்று. ஏனெனில் நஷ்ட ஞானமும் நஷ்டகர்மமும் முறையே அத்தியாசத்துக்கும் சுவர்க்க நரகப்பிராப்திக்கும் ஹேதுவாகும் பக்ஷத்தில் இறந்து போன குசவனும் நஷ்டமாய்ப்போன தண்ட சக்கராதிகளாலுங்கூட கடம் உண்டாகக்கூடும். ஏனெனில் ரஜ்ஜுவில் உண்டாகிற சர்ப்ப அத்தியாசத்துக்கு வியவஹித பூர்வகாலத்தில் சர்ப்பஞானம் இருந்தது போலும், சுவர்க்க நரகப்பிராப்திக்கு வியவஹித பூர்வகாலத்தில் சுபாசுப கர்மங்கள் இருந்தன போலும், கடத்துக்கு வியவஹித பூர்வகாலத்தில் இப்போதில்லாத குசவனும் தண்டசக்கராதிகளும் இருந்தன. இவைகளாலுங்கூட கடம் உண்டாகக்கூடும். ஆனல் அனுபவத்தில் அப்படி யுண்டாகிறதில்லை. ஆகையால் வியவஹித பூர்வகாலத்தில் இருந்தது ஹேதுவாகிறதில்லை ஆனல் அவ்வியவஹித பூர்வகாலத்திலுள்ள காரணமே காரியத்துக்கு ஹேதுவாகிறது.

89. சுபாசுப கர்மங்களும் காலாந்திரத்தில் வரப்போகிற சுவர்க்க நரகப்பிராப்திக்கு ஹேதுக்களாகிறதில்லை. ஆனல் சுபகர்மம் தனக்கடுத்த உத்தரக்ஷணத்தில் தர்மத்தை உற்பத்திசெய்கிறது. இந்த தர்மாதர்மங்கள் அந்தக்கரணத்தில் தங்குகின்றன. இவைகளால் காலாந்தரத்தில் சுவர்க்க நரகங்கள் அடையப்படுகின்றன. பிறகு தர்மாதர்மங்கள் நாசமடைகின்றன. இந்த அபிப்பிராயத்தினலேயே சாஸ்திரத்தில் சுபாசுபகர்மங்கள் அபூர்வ மூலமாகப் பலத்துக்கு ஹேதுக்களென்றும் சாக்ஷாத்து ஹேதுக்களல்லவென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. தர்மாதர்மங்களுக்கே அபூர்வமென்றும் அதிர்ஷ்டமென்றும் புண்ணிய பாபமென்றும் பெயர். தர்மாதர்மங்களை யுண்டுபண்ணுகிற சுபாசுபகர்மங்களையுங்கூட தர்மாதர்மங்களென்று சிலர் சொல்லுகிறார்கள். பிரபஞ்சத்தில் சுபக்கிரியை செய்கிறவனை இவன் தர்மம் செய்கிறானென்றும், அசுபக்கிரியை செய்கிறவனை இவன் அதர்மஞ்செய்கிறானென்றும் ஜனங்கள் சொல்லுகிறது வழக்கம். இந்தச்சுபாசுபக்கிரியைகளுக்குத் தர்மாதர்மங்களென்று பெயர் இல்லை. ஆனல் அக்கிரியைகள் தர்மாதர்மங்களை

யுண்டுபண்ணுகின்றன. ஆகையால் கிரியைகளுக்குத் தர்மாதர்மங்களென்று பெயரிட்டிருக்கிறார்கள். ஆயுளைவிர்த்தி செய்கிற நெய்க்குச்சாஸ்திரத்தில் ஆயுசென்று சொல்லியிருப்பது போலும்.

90. ரஜ்ஜுவிலுண்டாகிற சர்ப்பாத்தியாசத்துக்கு அவ்வியவஹித பூர்வகாலத்தில் சர்ப்பஞானமில்லை. ஆகையால் சர்ப்பஞானம் ரஜ்ஜுவில் சர்ப்பாத்தியாசத்துக்கு ஹேதுவாகிறதில்லை. ஆனால்சர்ப்பஞானத்தினாலுண்டாகிற ஸம்ஸ்காரமே ரஜ்ஜுவில் சர்ப்பாத்தியாசத்துக்கு ஹேதுவாயிருக்கிறது.

91. இதுபோல் சிளிஞ்சிலில் வெள்ளிஅத்தியாசத்துக்கு ஹேது வெள்ளிஞானத்தால் உண்டாகிற ஸம்ஸ்காரமே. இவ்விதமாகச் சம்ஸ்காரங்களே அத்தியாசங்களுக்கு ஹேதுக்களாகின்றன. மேலும் வஸ்துஞானம் ஸம்ஸ்காரத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. சுபாசுபகர்மங்களால் உண்டாகிற தர்மாதர்மங்கள் அந்தக்கரணத்தில் தங்குவதுபோல் வஸ்துஞானத்தாலுண்டாகும் ஸம்ஸ்காரமும் அந்தக்கரணத்தில் தங்குகிறது. எவனுக்கு முன் சர்ப்பஞானமிருந்திருக்கவில்லையோ அவனுக்கு வேறுவஸ்துக்களின் ஞானத்தாலுண்டாகிய ஸம்ஸ்காரமிருந்தபோதிலும் ரஜ்ஜுவில் சர்ப்பாத்தியாசம் உண்டாகமாட்டாது. எந்தவஸ்துவில் அத்தியாசமுண்டாகிறதோ அதற்கு ஸஜாதீயமான வஸ்துவின் ஞானத்தாலுண்டாகும் ஸம்ஸ்காரம் அத்தியாசத்துக்கு ஹேதுவாகிறது, விஜாதீயவஸ்துவின் ஞானஜன்யஸம்ஸ்காரம் ஹேதுவாகிறதில்லை. சர்ப்பத்துக்கு ஸஜாதீயம் சர்ப்பமேயொழிய வேறில்லை. சர்ப்பஞானமில்லாதவனுக்கு வேறுவஸ்துக்களின் ஞானமிருக்கக்கூடும். ஆயினும் ஸஜாதீயவஸ்துஞானஜன்யஸம்ஸ்காரம் இல்லாதபடியால் ரஜ்ஜுவில் சர்ப்பாத்தியாசம் அவனுக்குண்டாகிறதில்லை. ஸம்ஸ்காரமென்றால் சூக்ஷ்மாவஸ்தை. இவ்விதமாக அத்தியாசத்துக்குமுன்னிருந்த ஸஜாதீயவஸ்துஞானஜன்யஸம்ஸ்காரமே அத்தியாசத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. சத்தியவஸ்துஞானஜன்யஸம்ஸ்காரமே அத்தியாசத்துக்கு ஹேதுவெனவும், மித்தியாவஸ்து ஞானஜன்ய சம்ஸ்காரம் ஹேதுவில்லையெனவும் முன் (85) பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் மித்தியாவஸ்துவின் ஞானஜன்யஸம்ஸ்காரமும் அத்தியாசத்துக்கு ஹேதுவாயிருக்கிறது.

92. அந்தஸம்ஸ்காரம் பந்தாத்தியாச விஷயத்திலும் சித்திக்கிறது. ஏனெனில் அகங்காராதி அனாத்மவஸ்துக்களும் அவைகளின் ஞானமும் பந்தமெனப்படும். இந்த அனாத்மவஸ்துக்கள் ரஜ்ஜுவில் சர்ப்பம்போல் பிரதீதியாகுங்காலத்தில் இருக்கின்றன; பிரதீதியில்லாத காலத்தில் இருக்கவில்லையென்பது வேதாந்தசித்தாந்தம். இந்தக்காரணத்தினாலேயே சுஷுப்தியில் சகலப்பிரபஞ்சமுமில்லையென்று பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது.

சுஷுப்தியில் எந்தபதார்த்தமும் பிரதீதியாகிறதில்லை. ஆகையால் சகலப்பிரபஞ்சமும் சுஷுப்தியில் லயமடைகின்றது. இதற்குச்சாஸ்திரத்தில் திர்ஷ்டி சிருஷ்டிவாத மென்றுபெயர். இதன்விவரம் பின்னால் (417) பிரதிபாதிக்கப்படும். இவ்விதமாக அனந்த அகங்காராதிகளும் அவைகளின் ஞானமும் உற்பத்தியாய்க்கொண்டும் லயமடைந்துகொண்டுமிருக்கின்றன. அகங்காராதிகளின் பிரதீதியுண்டாகுங்காலத்தில் இவைகளுண்டாகியும் இந்தப்பிரதீதியில்லாதகாலத்தில் இவைகள் லயமடைந்தும வருகின்றன. அகங்காராதிகளும் அவைகளின் ஞானமும் அத்தியாசமென்று அநிர்வசனீயக்கியாதியின் பிரஸ்தாபத்திற் சொல்லப்படும் (145). அகங்காரம், சாக்ஷியால் விளங்குகிறதென்று விஷயப்பிரஸ்தாபத்தில் (60) சொல்லப்பட்டிருக்கிறபடியால் அகங்காரத்தின் பிரதீதி சாக்ஷிரூபமாகவே யிருக்கிறது. அதற்கு உற்பத்தி லயங்கள் சொல்லக்கூடாது. ஆயினும் அகங்காரத்தையும் சாக்ஷீ விர்த்திமூலமாகப்பிரகாசிப்பிக்கிறதேதவிர ச்சாக்ஷாத்தாகப்பிரகாசிப்பிக்கிறதில்லை. இந்தவிர்த்திக்கு உற்பத்திலயங்களிருப்பதால் அகங்காரப்பிரதீதிக்கும் உற்பத்திலயங்களைச் சொல்லக்கூடும். இவ்விதமாக உத்தரோத்தர அகங்காராதிகளுடையவும் அவைகளின் ஞானத்தினுடையவும் உற்பத்திக்கு பூர்வபூர்வமித்தியா அகங்காராதிகளுடைய ஞானஜன்ய ஸம்ஸ்காரம் ஹேதுவாயிருக்கிறது.

93. ஆக்ஷேபம்:— உத்தரோத்தர அகங்காராதிகளின் அத்தியாசத்துக்கு ப்பூர்வபூர்வ அத்தியாஸஸம்ஸ்காரம் ஹேதுவாக இருந்தாலும் முதலில் உண்டான அகங்காரத்துக்கும் அதன் ஞானத்துக்கும் ஹேதுவான ஸம்ஸ்காரம் யாதொன்றுமில்லை. ஏனெனில் அந்த முதல் அகங்காரத்துக்குமுன் வேறு அகங்கார மிருந்திருக்கும் பக்ஷத்தில் அதின் ஞானத்தால் ஸம்ஸ்காரமுண்டாகக் கூடும். ஆனால் அந்த முதல் அகங்காரத்துக்குமுன் வேறு அகங்காரம் இருக்கவில்லை. ஆகையால் சகல வஸ்துக்களுடையவும் முதல் அத்தியாசத்துக்கு ஹேதுவான ஸம்ஸ்காரம் சித்திக்கவில்லை.

சமாதானம்:— இந்த ஆக்ஷேபம் சித்தாந்தத்தை தெரிந்துகொள்ளாமல் செய்யப்பட்டது. ஏனெனில் வேதாந்த சித்தாந்தமென்னவெனில்.

**(1) பிர்ம்மம் (2) ஈசுவரன் (3) ஜீவன் (4) அவித்தை (5) அவித்தைக்கும் சைதன்னியத்துக்குமுள்ள சம்பந்தம் (6) அறுதிவஸ்துக்களின் பேதம், இவ்வாறும்**

சொரூபத்தினால்[44] அநாதியாகவிருக்கின்றன. உற்பத்தியில்லாதவஸ்து சொ

---

44. பிர்ம்மம் அவித்தைக்கு அதிஷ்டானமாயிருப்பதால் அது இதினின்றும் உண்டாகிறதில்லை. ஈஸ்வராதிகள் பிர்ம்மமன்றியில் சித்திக்காதபடியால்

ரூபத்தால் அநாதி யென்று சொல்லப்படுகிறது. மேற்கண்ட ஆறுவஸ்துக்களும் உற்பத்தி ரகிதங்களாயிருப்பதால் அவைகள் சொரூபத்தால் அநாதியாயிருக்கின்றன. மேலும் அகங்காராதிகளுக்குச்சுருதியில் உற்பத்தியுண்டெனச்சொலலி யிருப்பதால் சொரூபத்தினால் அவைகள் அநாதியாகாவிட்டாலும்பிரவாகரூபத்தால் சகலவஸ்துக்களும் அநாதியாயிருக்கின்றன. சகலவஸ்துக்களுக்கும் பிரவாகமில்லாமலிருக்கவில்லை. அநாதிகாலத்தில் ஒருக்காலும் கடமில்லை யென்கிற காலமில்லை. ஆகையால் கடத்தின் பிரவாகம் அநாதியாக இருக்கிறது. இவ்விதமாய்ச் சகலவஸ்துக்களின் பிரவாகமும் அநாதியாயிருக்கிறது. பிரளயகாலத்திலும் சுஷுப்தியிற்போல சகலவஸ்துக்களும் ஸம்ஸ்காரரூபமாயிருக்கின்றன. ஆகையால் பிரபஞ்சத்தின் பிரவாஹமும் அநாதியாயிருப்பதால் பிரபஞ்சம்[45] அநாதியென்று சொல்லப்படுகிறது. இந்த ஞானமில்லாதவனுக்கு முதல் அத்தியாசத்துக்கு ஹேதுவான ஸம்ஸ்காரம் இல்லையென்கிற மேற்சொல்லிய சந்தேகம் ஜனிக்கிறது. சித்தாந்தத்தில் எந்த அகங்காராதி வஸ்துக்களின் அத்தியாசமும் மற்றவைகளுக்கு முந்தினதாக இல்லை. ஆனால் பூர்வபூர்வ அத்தி

---

ர்ம்மம் இவைகளினின்றும் உண்டாகிறதில்லை. ஆகையால் பிர்ம்மம் அநாதி 2) பிர்ம்மம் நிர்விகாரமாயிருப்பதால் பிர்ம்மத்தினின்றும் அவித்தையுண்டாகிறதில்லை. ஆகையால் அவித்தை அநாதி. (3) ஜீவேஸ்வரர்கள் கேவலம் பிர்ம்மத்திலிருந்தாவது கேவலம் மாயையிலிருந்தாவது உண்டாகிறதில்லை. ஜீவன் ஈஸ்வரனிடத்திலிருந்தாவது ஈஸ்வரன் ஜீவனிடத்திலிருந்தாவது உண்டாகிறதில்லை. அவித்தியாசேதனசம்பந்தத்தால் ஜீவேஸ்வரபாவங்கள் சித்திக்கின்றன. பிர்ம்மம் அநாதியாயிருப்பதாலும் அவித்தையும் அப்படியே இருப்பதாலும் இவைகளின் சம்பந்தமும் அநாதியாயிருக்கிறது. ஆகையால் இச்சம்பந்தத்தாலுண்டாகும்ஜீவேஸ்வரபாவங்களும் அநாதியே. (4) அநாதியான பிர்ம்மம் அவித்தை இவைகளின் தாதாத்மியசம்பந்தமும் அநாதியாயிருக்கிறது. (5) இந்நான்கு வஸ்துக்களின் பேதமும் அநாதியே. ஆகையால் அநாதிவஸ்துக்கள் ஆறென்று சித்திக்கின்றது. இவைகளில் பிர்ம்மம் மூன்றுகாலங்களிலும் பாதிக்கப்படாதபடியால் அநாதியாயும் அனந்தமாயுமிருக்கிறது. மற்றவை ஞானத்தால் பாதிக்கப்படுவதால் அநாதியாயும் அந்தத்தோடுகூடியு மிருக்கின்றன.

45. பிரபஞ்சம் அநாதியாயிருப்பதால் சத்தியமாயிருக்க வேண்டுமே யென்கிற சங்கைக்குச்சமாதானம்:— ரஜ்ஜுவில் சர்ப்பப்பிராந்தியுண்டாகி ஒரு நாழிகை அல்லது இரண்டு நாழிகை அல்லது நாலு நாழிகை வரையில் இருந்துக்கொண்டிருக்கிறது. ரஜ்ஜு அறியப்பட்டபின் சர்ப்பம் மூன்றுகாலத்திலும் இல்லையென்கிற நிச்சயரூபஞானம் உண்டாகிறது. ஆகையால் சர்ப்பஞானம் மித்தையாயிருக்கிறது. இதுபோல் பிரபஞ்சமும் ஆரோபதசையில் அநாதியாயிருப்பதாகததோன்றுகின்றது. அதிஷ்டானம் அறியப்பட்டவுடன் பிரபஞ்சம் மூன்றுகாலத்திலும் இல்லையென்கிற நிச்சயமுண்டாகிறது. ஆகையால் பிரபஞ்சம் மித்தை.

யாசங்களுக்கு மற்றவை உத்தரோத்தர அத்தியாஸங்களாயிருக்கின்றன. ஆகையால் ஆக்ஷேபம்சரியன்று. இவ்விதமாக ஸஜாதீயவஸ்துவின் ஞானஜன்யஸம்ஸ்காரத்தால் அகங்காராதி பந்தத்தின் அத்தியாசம் சம்பவிக்கி —

94. (70-ந்தத்சமாதானம்) 94—95 பிரமாத்ருதோஷம்:— மூன்று. விதமான தோஷங்கள் அத்தியாசத்துக்கு ஹேதுக்களென்றும் பந்தஅத்தியாஸத்தில் யாதொருதோஷமும் காணப்படாதபடியால் பந்தம் சத்தியமென்றும் முன் (70—71) செய்த ஆக்ஷேபம் சரியன்று. ஏனெனில் தோஷமின்றியில் அத்தியாசம் உண்டாகாதபக்ஷத்தில் அத்தியாசத்துக்குத்தோஷம் ஹேதுவாகும். வஸ்திரமுண்டாவதற்கு நூல், நாடா, தரி, இவைகள் ஹேதுக்களாயிருக்கின்றன. அவைகள் இருந்தால் வஸ்திரமுண்டாகும். அவைகள் இல்லாவிட்டால் வஸ்திரமுண்டாகாது. இதுபோல் தோஷம் அத்தியாசத்துக்கு ஹேதுவானால் தோஷமில்லாத இடத்தில் அத்தியாசம் உண்டாகக்கூடாது. ஆனால் அனுபவத்தில் தோஷம் அத்தியாசத்துக்கு ஹேதுவாகக்காணப்படவில்லை. ஏனெனில் பிரமாதாவின் லோபபயாதி தோஷங்கள் அத்தியாசத்துக்கு ஹேதுக்களாகிறதில்லை. ஏனெனில் லோபமில்லாத வைராக்கிய புருஷனுக்கும் கிளிஞ்சிலில் வெள்ளி அத்தியாசமுண்டாகிறது. பூர்வபக்ஷியின் மதப்படித் தோஷமில்லாததினால் அத்தியாச முண்டாகக்கூடாது. ஆகையால் பிரமாதாவின் தோஷம் அத்தியாசத்துக்கு ஹேதுவாகிறதில்லை.

95. பிரமாணதோஷத்துக்குச்சமாதானம்:— பிரமாணதோஷமும் அத்தியாசத்துக்கு ஹேதுவாகிறதில்லை. ஏனெனில் எல்லாருக்கும ரூபமில்லாத ஆகாசத்தில் நீலவர்ணமும் சட்டி கூடாரம் இவைகளின் உருவமும் தோன்றுகின்றன. ஆகையால் எல்லாருக்கும் ஆகாயத்தில் நீலவர்ணம், சட்டி, கூடாரம், இவைகளின் அத்தியாசமுண்டாகிறது. எல்லாருக்கும் நேத்திரேந்திரியமாகிற பிரமாணத்தில் பித்தம் முதலிய தோஷமிருப்பதாகச்சொல்வது சரியன்று. ஆகையால் பிரமாணதோஷமும் அத்தியாசத்துக்கு ஹேதுவாகவில்லை. ஞானத்துக்குச்சாதனமான இந்திரியம் பிரமாணம் எனப்படும்.

96. பிரமேயதோஷத்து (71) க்குச்சமாதானம்:— சாதிரிசிய தோஷமன்றியில் ஆத்மாவினிடத்தில் ஜாதி அத்தியாசமுண்டாகிறது. பிராமணாதி ஜாதி ஸ்தூலசரீர தர்மமாயிருக்கின்றது. ஆத்மா, சூக்ஷ்மசரீரம், இவைகளின் தர்மமாகவில்லை. ஏனெனில் முன் சரீரத்திலிருந்த ஆத்மாவும் சூக்ஷ்மசரீரமும் வேறு சரீரம் அடையும்போதும் இருக்கின்றன. ஆனால் ஜாதிமட்டும் வித்தியாசப்படுகிறது. முன் சரீரத்திலிருந்த ஜாதியே பின் சரீரத்துக்குமிருக்கவேண்டுமென்பதவசியமில்லை. ஆத்மாவின்

அல்லது சூக்ஷ்மசரீரத்தின் தர்மமாக ஜாதி இருக்கும் பக்ஷத்தில் பின்சரீரத்தில் வேறு ஜாதி தோன்றக்கூடாது. ஆனால் இப்படியுந் தோன்றுவதால், ஜாதியானது ஆத்மா சூக்ஷ்மசரீரம் இவைகளின் தர்மமாகமாட்டாது. ஆனால் ஸ்தூலசரீரத்தின் தர்மமாகவிருக்கிறது. மேலும் நான் துவிஜன் என்பதில் பிராமண க்ஷத்திரிய வைசிய ஜாதிபாவங்கள் தோன்றுகின்றன. ஆகையால் ஆத்மாவினிடத்தில் ஜாதியின் அத்தியாசமுண்டாகிறது. கயிற்றில் சர்ப்பம் பாரமார்த்திகமாகவில்லாமலிருந்தும் தோன்றுவதினால் அதில் சர்ப்பாத்தியாச முண்டாவது போல் ஆத்மாவினிடத்தில் ஜாதி பாரமார்த்திகமாகவில்லாமலிருந்தும் தோன்றுவதினால் ஆத்மாவினிடத்தில் ஜாதிஅத்தியாசமுண்டாகிறது. மேலும் ஆத்மாவுக்கும் ஜாதிக்கும் சாதிருசியமில்லை. ஏனெனில் ஆத்மாவியாபகமாயும் பிரத்தியக்காயும் விஷயியாயும் ஜாதிபரிச்சின்னமாயும் பராக்காயும் விஷயமாயும் இருக்கிறது. இவ்விதமாக ஆத்மாவினிடத்தில் அதற்கு விரோதமான ஜாதியினுடைய அத்தியாசமுண்டாகிறது. ஆத்மாவினிடத்தில் சாதிருசியமன்றியில் ஜாதியத்தியாச முண்டாகிறதுபோல் சாதிருசியமன்றியில் அகங்காராதி பந்தங்களுடைய அத்தியாசமுண்டாகிறது. சாதிருசியதோஷம் அத்தியாசத்துக்கு ஹேதுவன்று. அப்படியிருக்கும்பக்ஷத்தில் ஆத்மாவினிடத்தில் ஜாதியத்தியாச முண்டாகக்கூடாது. ஆனால் மேற்காட்டியபடி அத்தியாசமுண்டாவதால் சாதிருசியதோஷம் அத்தியாசத்துக்கு ஹேதுவன்று. மேலும் சங்கில்[46] மஞ்சள்நிற அத்தியாசமுண்டாகக்கூடாது.[47] சர்க்கரையில் கசப்பு அத்தியாச முண்டாகக்கூடாது. ஏனெனில் வெண்மைக்கும் மஞ்சள்நிறத்துக்கும் விரோதமேயொழிய சாதிருசியமில்லை.

---

46. நியாயமதத்தில் நித்தியமாயும் ஏகமாயும் அநேக பதார்த்தங்களில் சேர்ந்துமிருப்பது ஜாதியென்று சொல்லப்படும். அதற்கும் ஆத்மாவுக்கும் சாதிருசியமாகிற பிரமேயதோஷம் சித்திக்கிறது. ஆகையால் ஆத்மாவினிடத்தில் ஜாதிஅத்தியாசமுண்டாகிறது. இப்படிப் பிரமேயதோஷம் அத்தியாஸத்துக்கு ஹேதுவாயிருக்கிறதென்று ஒருவன் சொல்லக்கூடுமென்பதை மனதில் வைத்துக்கொண்டு சங்கில் மஞ்சள்நிறஅத்தியாஸதிருஷ்டாந்தத்தைச் சொல்லுகிறார்.

47. சங்கில் மஞ்சள் அத்தியாசமில்லை. ஆனால் பித்தகாமாலைரோகமுள்ள நேத்திரத்திலிருக்கிற மஞ்சள்வர்ணம் சங்கில் ஒட்டுகிறது. ஆகையால் சங்கு மஞ்சளாய்த்தோன்றுகின்றது. இந்தச்சங்கைக்குச் சமாதானஞ் சொல்லுகிறேன். கடத்தில் பதிக்கப்பட்ட இரத்தினம் பதித்தவனுக்கும் அன்னியனுக்கும் தெரிகிறதுபோல் சங்கிலுள்ள பீதவர்ணம் காமாலையுள்ளவனுக்குமட்டும் தெரிகிறதே தவிர மற்றவனுக்குத்தெரிகிறதில்லை. ஆகையால் அந்தவர்ணம் நேத்திரத்தினின்றும் வெளியேபோய்ச்சங்கிலொட்டவில்லை. அது பிரமைரூபமாயிருக்கிறது. (ஆ—ம்)ஆகாசத்தில் பறக்கிறபக்ஷி எவனுடைய நேத்திரத்துக்குச்சமீபத்திலிருந்துபோகிறதோ அவனுக்குமட்டும் அது வெகுதூரம்போகிறவரையில் தெரியும்

அப்படியே தித்திப்புக்கும் கசப்புக்கும் விரோதமேதவிர சாதிருசியமில்லை. அனுபவத்தில் இவைகளின் அத்தியாசமுண்டாவதால் அதிஷ்டானத்தில் மித்தியாவஸ்துவின் சாதிருசியதோஷம் அத்தியாசத்துக்கு ஹேதுவாகவில்லை. ஆகாசத்தில், லோபபயாதிகளில்லாதவனுக்கும் நேத்திரத்தில் தோஷமில்லாமலிருந்தும், ஆகாசத்துக்கும் நீலவர்ணம், சட்டி, கூடாரம், இவைகளுக்கும் சாதிருசியமில்லாமலிருந்தும், அத்தியாசமுண்டாகிறது போல, ஆத்மாவினிடத்திலும் பந்தாத்தியாசம் தோஷங்களன்றியில் உண்டாகிறது. ஆகையால் தோஷங்களில்லாவிட்டால் பந்தம் அத்தியாசமாகமாட்டாதென்று பூர்வபக்ஷி சொன்னது சரியன்று. ஏனெனில் சகல தோஷங்களில்லாமலிருந்துங்கூட ஆகாசத்தில் நீலவர்ணாதிகளின் அத்தியாசமுண்டாகிறது. இவ்விதமாக தோஷம் அத்தியாசத்துக்கு ஹேதுவன்று.[48] ஆகையால் பந்தாத்தியாசத்தில் தோஷத்தின் அபேக்ஷையில்லை. சம்க்ஷேபசாரீரகத்தில் பந்தாத்தியாசத்தைப்பற்றிச்சொல்லுமிடத்தில் தோ[49]

மற்றவனுக்குத்தெரிகிறதில்லை. இதுபோல் எவன் கண்ணிலிருந்து மஞ்சள்வர்ணம் சங்கில் சென்றிருக்கிறதோ அவனுக்குமட்டும் அது தெரிகிறதேதவிர மற்றவனுக்குத்தெரிகிறதில்லை. (சு—ம்) ஆகாயத்தில் பரக்கிறபக்ஷி எவன் கண்ணுக்குச் சமீபத்திலிருந்துபோகிறதோ அவன் வேறொருவனுக்கு விரலினால் அதைக்காட்டினால் அது அவனுக்கும் தெரியும். இதுபோல் சங்கிலுள்ளபீதவர்ணம் விரலினால் காட்டப்பட்டாலும் வேறொருவனுக்கும் தெரிகிறதில்லை. ஆகையால் மஞ்சள்வர்ணம் சத்தியமன்று, பிரமையே. இவ்விதமாகச்சங்கில் மஞ்சள் அத்தியாஸம் சாதிருசியமன்றியிலுண்டானாலும் சங்கைசமாதானங்களுடன் இது சித்திக்கவேண்டியதாயிருக்கிறது. ஆகையால் விவாதமில்லாத சித்திப்பு திருஷ்டாந்தத்தைச்சொல்லுகிறார்.

48. தோஷம் அத்தியாஸத்துக்கு ஹேதுவல்லவென்று சொன்னதற்கு அபிப்பிராயமென்னவெனில்:—சகலதோஷங்களுமிருந்தால்தான் அத்தியாஸமுண்டாகுமென்பது நியமமில்லை. ஆனால் ஏதாவது ஒரு தோஷமிருந்தாலும் அத்தியாஸமுண்டாகும். ஆகாசத்தில் அத்தியாஸமுண்டாவதற்கு மூன்றுவித தோஷங்களுமில்லையென்று மேலே சொல்லப்பட்டிருந்தாலும் அவித்தையாகிற ஒரு தோஷமிருக்கிறது. யாதொரு தோஷமுமில்லாவிட்டால் அத்தியாஸமே யுண்டாகமாட்டாது. தோஷமன்றியில் பிரமை யுண்டாகமாட்டாதென்று **மதுசூதனஸ்வாமிகள்** அத்வைதசித்தியென்னுங்கிரந்தத்திற் சொல்லியிருக்கிறார். இவ்விடத்தில் யாதொரு தோஷமுமன்றியில் அத்தியாஸமுண்டாவதாகச்சொல்வது பிரௌடவாதமே. அதாவது தன்னுடைய உத்கிருஷ்டத்தைச்சொல்வதாகும்.

49. அந்தக்கரணத்திலுள்ள அஞ்ஞானத்தின் விக்ஷேபத்துக்கு ஹேதுவான சஞ்சிதத்திலுள்ள சுபாசுபகர்மங்களின் ஸம்ஸ்காரரூப அதிருஷ்டம் பிரமாண தோஷம். சேதனத்தில் வேறு பிரமாதா இல்லாததினால் தன்சொரூபமே பிரமாதா. அதிலிருக்கிற அவித்தைபிரமாதிரு தோஷம். சேதனத்தில் பிரமேய

ஷங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. கிரந்தம் விரியுமென்கிற பயத்தினால் நாமெழுதவில்லை. தோஷம் அத்தியாசத்துக்குஹேதுவாகும் பக்ஷத்தில் அதை யெடுத்துச்சொல்லவேண்டியது. அப்படி ஹேதுவாகாததினால் அதைப்பற்றி இங்கே பிரஸ்தாபிக்கவில்லை.

## [50] காரண அத்தியாச நிரூபணம் (97—98):—
## (72—73)க்குச்சமாதானம்.

97. 72 க்குச்சமாதானம்:—விசேஷமாக அறியப்படாதவஸ்துவில் அத்தியாசமுண்டாகும். சுயம்பிரகாசமான ஆத்மாவுடன் அஞ்ஞானம் சேரமாட்டாது. ஏனெனில் இருட்டும் வெளிச்சமும் பரஸ்பரம் விரோதமாயிருக்கின்றன. விசேஷவெளிச்சத்தில் ரஜ்ஜுவில் சர்ப்பாத்தியாசமுண்டாகாததுபோல் சுயம்பிரகாசமான ஆத்மாவில்பந்தாத்தியாசம் உண்டாகமாட்டாது. இப்படிச்செய்த ஆக்ஷேபம் சரியன்று. ஏனெனில் ஆத்மா பிரகாசரூபமாயிருந்தாலும் அதின் சொரூபப்பிரகாசம் அஞ்ஞானத்துக்கு விரோதமாயில்லை. ஆத்மச்சொரூபப்பிரகாசம் அஞ்ஞானத்துக்கு விரோதமாகும் பக்ஷத்தில் சுஷுப்தியில் பிரகாசரூப ஆத்மாவினிடத்தில் அஞ்ஞானந்தோன்றக்கூடாது. ஆனால் அநுபவத்தில் நல்ல நித்திரையிலிட்டெழுந்தவன் "நான் சுகமாய்த்தூங்கினேன், யாதொன்றும் அறியவில்லை" என்று அறிகிறான். இந்த ஞானத்துக்குச்சுகமும் அஞ்ஞானமும் விஷயங்களாயிருக்கின்றன. இந்த ஞானம ஜாக்கிரத காலத்தில் பிரத்தியக்ஷமாயில்லை. ஏனெனில் ஞானத்துக்கு விஷயம் எதிரிலிருக்கும்போது ஞானம் பிரத்தியக்ஷரூபமாயிருக்கிறது ஜாக்கிரத காலத்தில் சுகமும்

ஆந்தரதை யிருக்கிறது:—பிரபஞ்சத்தில் சாபேக்ஷ ஆந்தரதை யிருக்கிறது. சேதனம் பாரமார்த்திக வஸ்துவாயிருக்கிறது. பிரபஞ்சம் அநிர்வசனீய வஸ்துவாயிருக்கிறது. ஆந்தரவஸ்து பாவங்களால் சேதனத்துக்கும் பிரபஞ்சத்துக்கும் சாதிரிசியம் சித்திக்கிறது. இதுபிரமேயதோஷம் இந்ததோஷங்கள் ஸம்க்ஷேபசாரீரகக்கிரந்தத்திற் சொல்லப்பட்டிருக்கின்றன.

50. பிரபஞ்சத்துக்குக்காரணம் அதிஷ்டானத்தின் விசேஷ அஞ்ஞானம். இதின்அத்தியாஸம் காரண அத்தியாஸம்என்னப்படும் பிரபஞ்சஅத்தியாஸத்துக்குக்காரணம் அஞ்ஞானம். அஞ்ஞான அத்தியாஸத்துக்குக்காரணம் யாதொன்றுமில்லை. ஆகையால் அஞ்ஞானத்துக்கு அத்தியாஸம்சொல்லக்கூடாதென்று ஒருவன் ஆக்ஷேபிக்கும் பக்ஷத்தில் அதற்குச்சமாதானம் என்னவெனில் தீபம்தானும் விளங்கிமற்றபதார்த்தங்களையும் விளக்குவிக்கிறதுபோல அஞ்ஞானம் தன்அத்தியாஸத்துக்கும் பிரபஞ்ச அத்தியாஸத்துக்கும் காரணமாயிருக்கிறது.

அஞ்ஞானமுமில்லாதபடியால் இவைகள் பிரத்தியக்ஷரூபமாகவில்லாமல் ஸ்மரணரூபமாயிருக்கின்றன. இந்தஸ்மரணை அறியப்படாத வஸ்து விஷயத்திலுண்டாகமாட்டாது, ஆனால் அறியப்பட்டிருக்கிற வஸ்து விஷயத்தில் தானுண்டாகும். ஆகையால் சுஷுப்தியில் சுகம அஞ்ஞானமிவைகளின் ஞானமிருக்கிறது. இந்தச்சுஷுப்திஞானம் அந்தக்கரணம் இந்திரியமிவைகளாலுண்டாகிறதில்லை. ஏனெனில் சுஷுபதியில் அந்தக்கரணமுமிந்திரியங்களும் அபாவமாயிருக்கின்றன. ஆகையால் சுஷுப்தியில் ஆத்மச்சொரூபமே ஞானமாக விளங்குகிறது. ஞானமென்றால் பிரகாசம். இவ்விதமாகச்சுஷுப்தியில் பிரகாசரூபமான ஆத்மாவினிடத்தில் சொரூபச்சுகமும் அஞ்ஞானமும் விளங்குகின்றன. ஆத்மச்சொரூபப்பிரகாசம் அஞ்ஞானத்துக்கு விரோதமாகும பக்ஷத்தில் சுஷுப்தியில் அஞ்ஞானந்தோன்றக்கூடாது. அப்படித்தோன்றுவதால் ஆத்மா பிரகாசரூபமாயிருந்தும் அதன் சொரூபப்பிரகாசம் அஞ்ஞானத்துக்கு விரோதமில்லை. ஆனாலோ ஆத்மாவின் சொரூபப்பிரகாசம் அஞ்ஞானத்துக்குச்சாதகமாயிருக்கிறது. இவ்வபிப்பிராயத்தினால் தான் வேதாந்தசாஸ்திரத்தில் சாமானிய சைதன்னியம் அஞ்ஞானத்துக்கு விரோதமில்லை யென்றும் விசேஷ சைதன்னியமே அஞ்ஞானத்துக்கு விரோதமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. எங்கும் வியாபித்திருக்கிற சைதன்னியம் சாமானியமென்றும் விர்த்தியிலிருக்கிற சைதன்னியம் விசேஷமென்றும் சொல்லப்படும். கட்டையிலிருப்பது சாமானிய அக்கினி. அது இருட்டுக்கு விரோதமாகவில்லை, கட்டையைக்கடைவதாலுண்டாகும் விசேஷ அக்கினி திரியிலேற்றப்பட்டு இருட்டுக்கு விரோதமாகிறது. இதுபோல வியாபகசைதன்னியம் அஞ்ஞானத்துக்கு விரோதமாயில்லாவிடினும் வேதாந்த விசாரத்தால் எந்த அந்தக்கரண விர்த்தி பிர்ம்மாகாரமாகிறதோ அதிலிருக்கிற சைதன்னியம் அஞ்ஞானத்துக்கு விரோதமாயிருக்கிறது. இவ்விதமாகக்கேவலசைதன்னியம் அஞ்ஞானத்துக்கு விரோதமாயில்லை: ஆனால் விர்த்திசகிதசைதன்னியம் அல்லது சைதன்னியசகிதவிர்த்தி அஞ்ஞானத்துக்கு விரோதமாயிருக்கிறது. முதல் பக்ஷத்தில் அஞ்ஞானநாசத்துக்குச் சைதன்னியம் ஹேதுவாயும் விர்த்தி சாதகமாயும் இருக்கின்றன[51]. இரண்டாவது பக்ஷத்தில் அஞ்ஞானநாசத்துக்கு விர்த்தி ஹேதுவாயும் சைதன்னியம் சாதகமாயுமிருக்கின்றன. இது அவச்சேதவாதத்தின் ரீதியாம். ஆபாச (227) வாதத்திலோ சாமானியசைதன்னியம்போல் விசேஷசைதன்னியமும அஞ்ஞானத்

51. அவச்சேதவாதத்தில் விர்த்திசகிதசைதன்னியம் அல்லதுசைதன்னியசகிதவிர்த்தி விசேஷசைதன்னியமென்று சொல்லப்படுகிறது. இது அஞ்ஞானத்துக்கு விரோதியாயிருக்கிறது. ஆவரணத்தைப்போக்க விர்த்திகாரணமாயிருப்பதால் இரண்டாவதுபக்ஷமே உத்தமம்.

துக்கு விரோதமாகவில்லை. ஆனால் விர்த்திசகித ஆபாசம் அல்லது ஆபாச சகித விர்த்தி அஞ்ஞானத்துக்கு விரோதமாயிருக்கிறது. இவ்விதமாகப் பிரகாசரூபசைதன்னியம் அஞ்ஞானத்துக்கு விரோதமாயில்லை. ஆகையால் [52] அஞ்ஞானம சைதன்னியத்தை யாசிரயித்துக்கொண்டிருக்கிறது. இந்த அஞ்ஞானத்தால் சூழப்பட்ட ஆத்மாவினிடத்தில் பந்தாத்தியாசம சொன்னது சரியே.

98. 73 சித்தாந்தசமாதானம்:— சாமானிய ரூபமாய் அறியப்பட்டும், விசேஷ ரூபமாய் அறியப்படாமலுமிருக்கிற வஸ்துவில் அத்தியாசமுண்டாகும். ஆத்மாவில் சாமானிய விசேஷபாவங்களில்லாததினால் நிர்விசேஷமான ஆத்மா அறியப்பட்டும் அறியப்படாமலும் இருக்கிறதாகச்சொல்லக்கூடாது. அதனிடத்தில் அத்தியாசம் உண்டாகமாட்டாது. இந்த ஆக்ஷேபம் சரியன்று. ஏனெனில் ஆத்மா இருக்கிறது என்று எல்லாருக்கும் விளங்குகிறது. ஆத்மா என்றால் தன் சொரூபம். தான் இல்லை யென்பதாய் ஒருவனுக்கும் தோன்றுகிறதில்லை. ஆனால் தான் இருக்கிறதா யெல்லாருக்கும் தோன்றுகிறது. ஆகையால் ஆத்மா இருக்கிறதென்பதாக எல்லாருக்கும் விளங்குகிறது. ஆனால் சைதன்னியமாயும் ஆனந்தமாயும் வியாபகமாயும் நித்தியசுத்தமாயும் நித்தியமுக்தமாயும் ஆத்மா இருப்பதாக எல்லாருக்கும் விளங்குகிறதில்லை. ஆகையால் சைதன்னியாதி லக்ஷணங்களோடேகூடியதாக ஆத்மா அறியப்படவில்லை. ஆனால் இருக்கிறதாகமட்டும் அறியப்படுகிறது. இது அனுபோகசித்தம். இந்த அனுபோகசித்த வார்த்தை யுக்தியால் தள்ளப்படமாட்டாது. எல்லாருக்கும் விளங்குகிற ஆத்மாவின் சத்ரூபம் சாமானிய ரூபமாம். கேவலம் ஞானிகளுக்கு விளங்குகிற ஆத்மாவின் சைதன்னிய ஆனந்தாதிரூபம் விசேஷரூபமாம். அதிக காலத்திலும் அதிக தேசத்திலுமுள்ளது சாமானியமென்றும், சொல்பகாலத்திலும் சொல்பதேசத்திலுமுள்ளது விசேஷரூபமென்றும் சொல்லப்படும். ஆத்மாவின் சொரூபமே சேதன ஆனந்தாதிகளாயிருப்பதால் சத்ரூபம்போல் சேதன ஆனந்தாதிகளும் எங்கும் வியாபித்திருக்கின்றன. சத்தையபேக்ஷித்துச் சேதன ஆனந்தங்கள் சொல்பதேசத்திலும், இவைகளையபேக்ஷித்துச் சத்ரூபம் அதிகதேசத்திலும் இருப்பதாகச்சொல்லக்கூடாது. ஆகையால் சத்ரூபம் ஆத்மாவின் சாமானிய அம்சமென்றும் சேதனாதிகள் விசேஷாம்சமென்றும் சொல்வதுஞ் சரியன்று. ஆயி

---

52. சூரியனிடத்தில் அந்தகாரம் சேர்த்திராததுபோல் ஸ்வயம்பிரகாசமான ஆத்மாவினிடத்தில் அஞ்ஞானம் எப்படிச்சேரக்கூடும். இந்தஆக்ஷேபம் சரியன்று. ஏனெனில் சூரியாதிஜோதிகள் மகாதேஜஸின் விசேஷரூபங்கள், சாமானியரூபங்களன்று. ஆத்மாவின் ஸ்வரூபம் சாமானியபிரகாசமானது. ஆகையால் அது அஞ்ஞானத்துக்கு விரோதமன்று. ஆகையால் சூரிய திருஷ்டாந்தம் சரியன்று.

னும்சத்தின் பிரதீதி எல்லாருக்கும் அவித்தியா காலத்திலும் உண்டாகிறது. ஆத்மா சேதனானந்தாதி ரூபமென்கிற பிரதீதி எல்லாருக்கும் அவித்தியா காலத்திலுண்டாகிறதில்லை. கேவலம் ஞானிக்குமட்டும் உண்டாகிறது. அவித்தியாகாலத்தில் சேதனானந்தாதிகளிருந்தாலுங்கூட அவைகள் பிரதீதியாகிறதில்லை. ஆகையால் இவைகள் அனுபவிக்கப்படாதவைபோலவிருக்கின்றன. இந்த அபிப்பிராயத்தால் சைதன்னியாதிகள் சொல்பகாலத்திலிருப்பனவாகவும் சத்ரூபம் அதிககாலத்திலிருக்கிறதாகவும் சொல்லப்படுகின்றன. இவ்விதமாகச்சத்ரூபத்துக்கும் சேதனாதிகளுக்கும் சாமானிய விசேஷ பாவங்களில்லாவிடினும் சொல்பகாலத்திலும் அதிககாலத்திலும் தோன்றுவதால் சாமானியவிசேஷபாவங்கள் போல் இவைகளிருக்கின்றன. இக்காரணத்தினால் ஆத்மாவுக்குச்சத்ரூபம் சாமானிய அம்சமென்றும் சேதனாதிகள் விசேஷ அம்சமென்றும் சொல்லப்படுகின்றன.

ஆத்மா நிர்விசேஷமென்கிற சித்தாந்தத்துக்கும் ஹானியில்லை ஆத்மாவில் சாமானிய விசேஷபாவங்களை அங்கீகரிக்கும் பக்ஷத்தில் ஆத்மா நிர்விசேஷமென்கிற சித்தாந்தத்துக்கு ஹானியுண்டாகும். ஆனால் இந்தச்சாமானிய விசேஷபாவங்கள் அங்கீகரிக்கப்படவில்லை. அவித்தையால் சாமானிய விசேஷபாவங்கள் போல் பிரதீதியுண்டாகிறது. ஆகையால்சாமானிய விசேஷபாவங்கள் சொல்லப்படுகின்றன. இவ்விதமாகச்சத்ரூபத்தால் அறியப்பட்டும், சேதன, ஆனந்த, நித்தியசுத்த, நித்தியமுக்த பிர்ம்மரூபமாய் அறியப்படாமலுமிருக்கிற ஆத்மாவினிடத்தில் பந்தாத்தியாசமுண்டாகும். அத்தியாசரூபபந்தத்துக்கு ஞானத்தால் நிவிர்த்தியுண்டாகும். ஆகையால் கிரந்தத்தின் பிரயோஜனம் சித்திக்கிறது.

கர்மத்தால் மோக்ஷம் சித்திக்கமாட்டாது. (99—106)

99. 77—82பிரிவுகளின் ஆக்ஷேபச்சுருக்கம்:— நிஷித்தகாமியகர்மங்களைத்தியாகஞ்செய்து நித்தியநைமித்திகப் பிராயச்சித்த கர்மங்களைச்செய்யவேண்டியது. நிஷித்தகர்மம் இல்லாததினால் நீசலோகமும் காமியகர்மம் இல்லாததினால் உத்தமலோகமும் அடையப்படமாட்டா. நித்தியநைமித்திக கர்மங்களைச்செய்யாததினாலுண்டாகும் பாபம் இவைகளைச்செய்கிறதினாலுண்டாகிறதில்லை. இந்த ஜன்மத்திலாவது முன் ஜன்மங்களிலாவது செய்தபாபங்கள் சாதாரண அசாதாரணப் பிராயச்சித்தங்களால் நிவிர்த்தியாகின்றன. முன்செய்த காமியகர்மங்களின் பலன்களில் இச்சையிப்போதில்லாததினால் முமுக்ஷுவுக்கு அவைகள் பலன் கொடுக்கிறதில்லை. ஆகையால் முமுக்ஷுவுக்கு ஞானமன்றியிலும் ஜன்மாபாவரூபமான மோக்ஷம் சித்திக்கும்.

100. 77க்குச் சமாதானம்:—மேற்சொன்ன ஆக்ஷேபம் சரியன்று. ஏனெனில் நித்தியநைமித்திக கர்மங்களுக்கும் சுவர்க்கரூப பலனுண்டு.

இதுபாஷியக்காரரால்[53] யுக்தியினாலும் பிரமாணத்தினாலும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் நித்தியநைமித்திக கர்மங்களால் உத்தமலோகம அடையப்படுகிறதேதவிர ஜன்மாபாவம் சித்திக்கமாட்டாது. மேலும் நித்திய கர்மங்களின் பலத்தை யங்கீகரிக்காதபக்ஷத்தில் இவைகளைப் போதிக்கிறவேதம் நிஷ்பலமாய்விடும். ஏனெனில் நித்தியநைமித்திக கர்மங்களைச் செய்யாததினால் பாபமுண்டாகும் பக்ஷத்தில் அவைகளைச் செய்வதினால் பாபமுண்டாகாமலிருப்பதே அவைகளின்பலனாகும். ஆனால் நித்தியநைமித்திகங்களைச் செய்யாததினால் பாபமுண்டாகிறதில்லை. ஏனெனில் அவைகளைச் செய்யாமலிருப்பது அபாவரூபம், பாபம பாவரூபம். அபாவத்திலிருந்து பாவமுண்டாகமாட்டாது. ஆகையால் நித்தியநைமித்திககர்மங்களைச் செய்யாததினால் பாபமுண்டாகுமென்று சொன்னது சரியன்று. அப்படிப்பாபமுண்டாகும் பக்ஷத்தில் "அபாவத்திலிருந்து பாவமுண்டாகமாட்டாது" என்று கீதையின் 2வது அத்தியாயத்தில் பகவான்[54] சொன்ன வார்த்தைக்கு விரோதமாகும். ஆகையால் நித்தியநைமித்திககர்மங்களின் அபாவத்தால் பாவரூப பாபமுண்டாகமாட்டாது. இவ்விதமாக நித்தியநைமித்திக கர்மங்களுக்குப் பாபமுண்டாகாமலிருப்பதே பலன் அன்று. ஆனால் அவைகளன்றியிலும் பாபமுண்டாகாமலிருக்கும். ஆகையால் நித்தியநைமித்திக கர்மங்களின சுவர்க்கரூபபலனை அங்கீகரிக்காதபக்ஷத்தில் கர்மம் நிஷ்பலமாய்விடும். நிஷ்பலகர்மத்தைப் போதிக்கிறவேதமும் நிஷ்பலமாய்விடும். ஆகையால் நித்தியநைமித்திக கர்மங்களாலுஞ் சுவர்க்கபலனுண்டாகிறது.

101. 78—79 க்குச் சமாதானம்:— பிராயச்சித்தத்தினால் சகலமான அசுபகர்மங்களும் நாசமாய்விடுமென்று சொன்னது சரியன்று. ஏனெனில் அனேக கல்பங்களிற் செய்த அசுபகர்மங்கள் ஒரு ஜன்மத்தில் பிராயச்சித்தத்தால் நிவிர்த்தியாகமாட்டா. சர்வபாபங்களையும் நாசம்பண்ணுகிற கங்காஸ்நாநம் ஈசுவரநாமோச்சாரணம் முதலிய சாதாரணப்பிராயச்சித்தங்களும் ஞானத்துக்கே சாதனமாயிருக்கின்றன. ஆகையால் அவைகள் சகல பாபங்களையும் நாசஞ் செய்வதாகச் சொல்லப்படுகின்றன. ஆகையால் ஞானத்தினாலேயே சகல பாபங்களுக்கும் நாசமுண்டாகிறது.

102. 80-க்குச்சமாதானம்:— ஜன்மாந்திரத்தின் காமியகர்மபலத்தில் இச்சையில்லாததினால் அந்தக்கர்மம் பலனைகொடுக்கமாட்டாதென்று

53. ஸ்ரீ சங்கராசாரியர்.

54. பகவத்கீதையின் 2-வது அத்தியாயத்தின் 16-வது சுலோகத்தைப் பார்க்க.

சொன்னது சரியன்று. ஏனெனில் கர்மரூபமான விதையினின்று இரண்டு முளைகளுண்டாகின்றன. ஒன்று வாசனை மற்றொன்று அதிர்ஷ்டம். தர்மாதர்மங்களுக்கு அதிர்ஷ்டமென்றுபெயர். சுபகர்மத்திலிருந்து சுபவாசனையும் தர்மரூபமுளையுமுண்டாகின்றன. அசுபகர்மத்திலிருந்து அசுபவாசனையும் அதர்மரூபமுளையுமுண்டாகின்றன. சுபவாசனையால் சுபகர்மத்தில் பிரவிர்த்தியுண்டாகிறது. தர்மத்தால் சுகபோகமுண்டாகிறது. இப்படியே அசுபவாசனையால் அசுபகர்மத்திற் பிரவிர்த்தியும் அதர்மத்தால் துக்கானுபோகமுமுண்டாகின்றன. இவ்விதமாக வாசனாரூபமாயும் அதிர்ஷ்டரூபமாயும் இருக்கப்பட்டமுளைகள் கர்மரூபவித்தினின்றுமுண்டாகின்றன. இவைகளில் வாசனாரூபமுளை உபாயத்தால் நாசமடைகிறது. அதிர்ஷ்டரூபமுளை பலத்தைக்கொடுக்காமல் யாதொரு உபாயத்தாலும் நாசமடைகிறதில்லை. இது சாஸ்திர சித்தாந்தம். அசுபகர்மத்தினின்றும் உண்டாகிற அசுபவாசனாரூபமுளை சத்சங்காதியுபாயங்களால் நாசமடைகிறது. சுபகர்மத்தினின்றுமுண்டாகிற சுபவாசனாரூபமுளை துர்சங்கத்தால் நாசமடைகிறது. போகத்துக்கு ஹேதுவான அதிர்ஷ்டம் நாசமடைகிறதில்லை. ஆகையால் பலத்தைக்கொடுக்காமல் கர்மம் நிவிர்த்தியாகிறதில்லையென்று சாஸ்திரத்திற் சொல்லியதற்கு விரோதமில்லை. இவ்விதமாக அஞ்ஞானிக்குப்போகமன்றியில் கர்மம் நிவிர்த்தியாகமாட்டாது. ஞானிக்கோ போகமன்றியிலும் கர்மம் நிவிர்த்தியாகிறது. ஏனெனில் கர்மம், கர்த்தா, பலன், இம்மூன்றும் பாரமார்த்திகமாயில்லை: ஆனால் அவித்தையால் கல்பிக்கப்பட்டிருக்கின்றன. இந்த அவித்தைக்கு ஞானம் விரோதம். ஆகையால் அவித்தியா கல்பிதகர்மங்களும் ஞானத்தால் நாசமாகின்றன. சொப்பனத்தில் நித்திரையில் தோன்றும் பதார்த்தம் ஜாக்கிரத்காலத்தில் நித்திரையில்லாததினால் தோன்றாததுபோல, அவித்தியாரூபநித்திரையில் தோன்றும் கர்மம் கர்த்தா பலன் மூன்றும் ஞானரூபஜாக்கிரத்காலத்தில் அவித்தியா நிவிர்த்தியால் அபாவமாயிருக்கின்றன. ஞானமன்றியில் இவைகளுக்கு நாசமில்லை. மேலும் இச்சையில்லாததினால் கர்மபலத்தின் போகமுண்டாகமாட்டாதென்று சொல்லும் பக்ஷத்தில் ஈசுவரசங்கல்பம் மித்தையாய்ப்போய்விடும். ஏனெனில் பலபோகமன்றியில் அஞ்ஞானிக்குக் கர்மம் நிவிர்த்தியாகமாட்டாதென்பது ஈசுவர சங்கற்பம். இச்சையில்லாததினால் கர்மம் பலிக்காத பக்ஷத்தில் ஈசுவர சங்கல்பம் பொய்யாய் விடும். ஈசுவரன் சத்தியசங்கற்பனுயிருக்கும் விஷயம் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் இச்சையில்லாததினால் முன்செய்த காமியகர்மம் பலிக்காதென்பது விருத்தம். இச்சையில்லாததினாலேயே காமியகர்மம் பலிக்காதபக்ஷத்தில் அசுபகர்மத்தின் பலன் ஒருவருக்குமுண்டாகக்கூடாது. ஏனெனில் அசுபகர்மத்

தின் பலனாகிற துக்கத்தில் ஒருவனுக்குமிச்சையுண்டாகிறதில்லை. ஆகையால் ஞானம் இல்லாவிட்டால் கர்மபலன் உண்டாகாமற்போகாது. கர்மம் பலத்தைக்கொடுத்தேதீரும்.

103. கர்மானுஷ்டான காலத்தில் இச்சையில்லாதவனுக்குக்கர்மம் பலிக்காதென்று வேதாந்தத்திற் சொல்லியிருப்பதுபோல் கர்மானுஷ்டானத்துக்குப்பிறகும் இச்சையில்லாதவனுக்குக்கர்மபலன் உண்டாகமாட்டாதென்று முன் (82) சொன்னது வேதாந்தசித்தாந்தத்தைத்தெரிந்துகொள்ளாமற் சொன்னதுதான். ஏனெனில் பலத்தில் இச்சையுடன் கர்மம் செய்கிறவனுக்கும் இச்சையில்லாமற் கர்மம் செய்கிறவனுக்கும் கர்மம் பலத்தை நிச்சயமாய்க்கொடுத்தேதீரும். ஆனால் இச்சையில்லாத கர்மத்தினால் அந்தக்கரணம் சுத்தமாகிறது. இச்சாசகிதகர்மஞ்செய்கிறவனுக்குக்கேவலம் போகமுண்டாகிறதேதவிர அந்தக்கரணம் சுத்தமாகிறதில்லை. இச்சையில்லாமற் கர்மத்தைச்செய்கிறதினால் அந்தக்கரணஞ்சுத்தமாகிச்சிரவணாதிகளால் ஞானமுண்டானவனுக்குக்கர்மத்தின் பலனுண்டாகமாட்டாது. மேலும் பலாபேக்ஷையன்றியில் கர்மம் செய்தும் சிரவணமில்லாததினாலாவது அல்லது வேறு காரணத்தினாலாவது ஞானமுண்டாகாதவனுக்கு இச்சையில்லாத கர்மபலத்தின் போகமும் நிவிர்த்தியாகமாட்டாது. இது வேதாந்தசித்தாந்தம். ஆகையால் ஞானமில்லாவிட்டால் கர்மபலபோகம் நிவிர்த்தியாகமாட்டாது.

104. 82-க்குச் சமாதானம்:— நித்தியநைமித்திக கர்மங்களைச்செய்கிறதினால் உண்டாகும் கிலேசம் பூர்வசஞ்சித நிஷித்தகர்மங்களின் பலனாகவிருப்பதால் இவைகளுக்கு வேறு பலனில்லையென்று சொன்னது சரியன்று. ஏனெனில் சஞ்சித நிஷித்தகர்மங்கள் பலவிதமாயிருப்பதால் அவைகளின் பலனாகிற துக்கமும் பலவிதமாயிருக்கிறது. கர்மானுஷ்டானத்தாலுண்டாகிற கேவலங்கிலேசத்தையே அவைகளின் பலனாகச்சொல்லக்கூடாது.

105. மேலும் சகலமானசஞ்சித காமியகர்மங்களால் ஏகசரீரமுண்டாகுமென்று முன் (82) சொன்னதும் சரியன்று. ஏனெனில் சஞ்சித காமியகர்மங்கள் அநேகம். அவைகளின் பலன்களை ஒரு ஜன்மத்தில் அனுபவிக்கமுடியாது. மேலும் அனேகசரீரங்களிலுண்டாகும் போகங்களை ஒருவன் ஏககாலத்தில் அனுபவிக்கலாமென்று சொன்னவிஷயமும் சித்தயோகிக்குப்பொருந்துமேயன்றி மற்றவர்கட்குப்பொருந்தாது. சித்தயோகிக்குங்கூட எல்லாச்சாமர்த்தியங்களுமிருந்தாலும் ஞானமன்றியில் மோக்ஷம் லபிக்காதென்பது வேதாந்தசித்தாந்தம்.

106. முடிவு:— இவ்விதமாகக்காமியகர்மங்களையும் நிஷித்தகர்மங்களையும் விட்டுக்கேவலம் நித்தியநைமித்திக கர்மங்களைச்செய்கிற அஞ்

ஞானிக்கு நித்தியநைமித்திக கர்மங்களின் பலனையனுபவிக்கிறதற்கும் முன் செய்தசுபாசுபகர்மங்களின் பலனை அனுபவிக்கிறதற்கும் அனேகசரீரங்கள் உண்டாகுமேதவிர மோக்ஷமுண்டாகிறதில்லை. ஆகையால் ஞானமூலமாகப்பந்தம் நிவிர்த்தியாவதே கிரந்தத்தின் பிரயோஜனமென்று சொன்னது சரிதான். சொப்பனத்தில் தோன்றுகிற பொய்ப்பொருள் ஜாக்கிரதமன்றியில் நிவிர்த்தியாகாததுபோல அஞ்ஞானத்தில் தோன்றுகிற பொய்யான பந்தமும் ஞானரூபஜாக்கிரதமன்றியில் நிவிர்த்தியாகமாட்டாது.

## சம்பந்தவிஷயமாய் ஆக்ஷேபம்.

107. அதிகாரி முதலியவை சித்திக்காததினால் சம்பந்தமும் சித்திக்கவில்லை. ஏனெனில் (1) விஷயம் சித்திக்காததினால் கிரந்தத்துக்கும் விஷயத்துக்குமுள்ள பிரதிபாத்தியப்பிரதிபாதகபாவசம்பந்தம் சித்திக்கவில்லை. (2) கிரந்தத்துக்கும் ஞானத்துக்கும் ஜன்யஜனகபாவசம்பந்தம், ஞானம் நிஷ்பலமாய்ப்போவதால், சித்திக்கவில்லை. ஸபலமானவஸ்து ஜனிக்கக்கூடும். முன் சொன்னபடி ஞானம் ஸபலமன்று. மேலும் ஞானத்துக்குச்சொரூபமில்லாமையாலும் ஞானத்துக்கும் கிரந்தத்துக்கும் சம்பந்தமுண்டாகமாட்டாது. ஏனெனில் ஜீவப்பிர்ம்மங்களின் அபேதநிச்சயத்துக்குச் சித்தாந்தத்தில் ஞானமென்றுபெயர். ஜீவப்பிர்ம்மங்களின் அபேதம் இல்லாததினால் அந்தநிச்சயம் பிசகென்று விஷயப்பிரஸ்தாபத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் அபேதநிச்சயரூபமான ஞானம் சித்திக்கிறதில்லை. (3) அதிகாரி சித்திக்காததினால் அதிகாரிக்கும் விசாரத்துக்குமுள்ள கர்த்ருகர்த்தவ்யபாவசம்பந்தஞ்சித்திக்கவில்லை. (4) அதிகாரியும் பலனுமில்லாமையால் இவைகளுக்குள்ள பிராப்பியப்பிராபகபாவசம்பந்தஞ்சித்திக்கவில்லை. இவ்விதமாக அதிகாரிமுதலிய அனுபந்தசதுஷ்டயம் சித்திக்காததினால் கிரந்தாரம்பம் நிஷ்பிரயோஜனம்.

108. 107-க்குச்சமாதானம்:— மேற்சொல்லியபடி, கிரந்தத்துக்கு அதிகாரி, விஷயம், பிரயோஜனம், இவைகள் சம்பவிக்கிறபடியால் இவைகளின் சம்பந்தமும் சம்பவிக்கிறது. ஆகையால் கிரந்தம் ஆரம்பிக்கத்தக்கது.

அனுபந்தவிசேஷநிரூபணமென்னும்

2-வது தரங்கம்.

முற்றும்.

# 3-வது தரங்கம்.

## குருசிஷ்ய இலக்ஷணம்.

## கிரந்தத்தை ஆரம்பிக்கிறதாக பிரதிஞ்ஞை.

109. அனுபந்த சதுஷ்டயத்தை நன்றாயறிந்து ஞானத்துடன் கூடிய குருவிடத்தில் எவன் கிரந்தத்தைப் படிக்கிறானோ அல்லது கவனமாய்க் கேட்கிறானோ அவன் மோக்ஷத்துக்கு மார்க்கமான ஞானத்தையடைவான்.

குருசிஷ்யஸம்வாதத்தால் அர்த்தநிரூபணம் பண்ணுவதால் கேட்போருக்குப்போதஞ்சுலபமாயுண்டாகும். இந்தகாரணத்தால் குருசிஷ்ய வினாவிடையாகக்கிரந்தமெழுதப்படுகிறது.

### குருஇலக்ஷணம்.

110. வேதாத்தியயனஞ்செய்து அதன் பொருளை யறிந்தும் ஜீவப்பிர்ம்மஐக்கியநிச்சயத்தால் ஆத்மஞானியாயிருக்கப்பட்டவரே குருவாம்.[1] வேதாத்தியயனமட்டுஞ்செய்து ஆத்மஞானமடையாதவர் குருவாகார். ஆத்மஞானமடைந்தும் வேதாத்தியயனமில்லாதவர் தான் முக்தராயினும் பிறருக்கு உபதேசஞ்செய்யத்தக்க குருவாகார். ஏனெனில் ஜிஞ்ஞாசுவின் சந்தேகங்களைப்போக்க இவருக்கு யுக்திகள் தோன்றுகிறதில்லை. சந்தேகமற்ற உத்தம ஸம்ஸ்காரத்துடன் கூடிய ஜிஞ்ஞாசுவை யுபதேசிக்க இவர் சமர்த்தராகினும் எல்லாருக்கு முபதேசிக்கச்சக்தராகாமையால் இவர் ஆசாரியராகமாட்டார். ஆகையால் வேதாத்தியயனம் பண்ணினவரும் ஆத்மஞானமுடையவருமே ஆசாரியரென்று சொல்லப்படுவார். அவர் சிஷ்யனுடைய புத்தியில் தோன்றுகிற ஐந்துவிதப்பேதங்களையும் நானாவித யுக்திகளால்[2] போக்கடிப்பதில்

---

1. வழிதெரிந்தவன் வழியைக்காண்பிக்கக்கூடும். அப்படியே பிர்ம்ம ஸ்வரூபத்தை யறிந்தவன் உபதேசிக்கத்தக்கவன்.

2. ஐந்து பேதங்களைக் கண்டிக்கும் யுக்திகளாவன (1) [illegible]

சமர்த்தராவார். அப்பேதங்களாவன:— [1] ஜீவேசுவரபேதம். [2] ஜீவர்களுக்குள் பரஸ்பரபேதம். [3] ஜீவஜடபேதம். [4] ஈசுவரஜடபேதம். [5] ஜடஜடபேதம். இப்பேதங்களை அவர் கண்டிக்கக்கூடியவர். ஏனெனில்[3] பேதம் பயத்துக்குக் காரணம். ஆகையால்பேதத்தை யவசியம் போக்கவேண்டியது. இப்படிச்செய்வதினால் அத்துவயமாயும் அவித்யோதி மலரஹிதமாயும் இருக்கப்பட்ட ப்பிரம்மமே தானென்று சிஷியன் சாக்ஷாத்காரமாய் அறியும்படிச்செய்கிறார். சகல சமுசாரத்தையும் பொய்யென்று அறியும்படிச்செய்கிறார். இப்போர்ப்பட்ட அர்புதமான உபதேசத்தைச் செய்யப்பட்டவர் ஆசாரியரென்று சொல்லப்படுகிறார். ஞானமன்றியில் தன் தலையை மொட்டையடித்துக்கொண்டும் சிஷ்யனையுமிப்படிச்செய்வித்தும் வேறு சம்பிரதாயப்படி வேறு சின்னங்களைத்தரிக்கும்படிச் செய்தும வரப்பட்டவர் ஆசாரியராகார். சமுசாரமாகிற முதலையினின்றும் விடுவிக்கிறவராயும் தத்துவபோதனைச்செய்கிறவராயுமிருக்கிறவரே குருவென்றும் வேஷதாரி குருவல்லவென்றும் அறிந்தோர்கள் சொல்வார்கள்.

111. **சிஷ்யலக்ஷணம்**:- கிரந்தத்திற்பிரவிர்த்தியுண்டாவதற்காக முந்தின தரங்கங்களில் அதிகாரிக்குச்சொல்லப்பட்டிருக்கிற சாதனங்களுடன் கூடியவனே சிஷ்யனாவான்.

112. **குருபக்திபலன்**:— குருவினிடத்தில் ஈசுவரனிடத்தில் வைப்பதைவிட அதிக பக்தி வைக்கவேண்டியது. ஏனெனில் சகல சாஸ்திரங்களையும் அறிந்தவனுங்கூட குருவுபதேசமன்றியில் ஞானமடைகிறதில்லை. இது அடியிற் கண்ட திர்ஷ்டாந்தத்தால்விளங்கும்:—

113. வேதரூபமான சமுத்திரங்குருவன்றியில் க்ஷாரமாயிருக்கிறது. க்ஷார சமுத்திரத்தில் விழுந்தவன் அந்த ஜலத்தைப் பானஞ்செய்து கேவலந் துக்கத்தை யனுபவிக்கிறது போல் குருவன்றியில் வேதார்த்தத்தை விசாரிக்கிறவன் பேதரூபமான க்ஷாரத்தை யனுபவித்து ஜனன

---

டாகாசங்களின் பேதம்போல் ஜீவேசுவரர்களின் பேதம் அவித்தியாமாயாரூப உபாதிகளாலுண்டாவதால் கல்பிதம். (2)அநேகடாகாசங்களுடைய பேதம் போல ஜீவர்களுடைய பரஸ்பரபேதம் ஆபாஸசகித அந்தக்கரணரூப உபாதிகளாலுண்டாவதால் கல்பிதம். (3)ஜீவஜடங்களின் பேதம் ஸாபாஸ அந்தக்கரண நிராபாஸநாமரூபஉபாதிகளாலுண்டாவதால் கல்பிதம. (4) ஈசுவரஜடபேதம் ஸாபாஸமாயை நாமரூப உபாதிகளாலுண்டாவதால் கல்பிதம். (5) ரஜ்ஜுவில் கல்பித சர்ப்பதண்டாதிகளின் பேதம்போல் ஜடஜடங்களின் பேதம் நாமரூப உபாதியாலுண்டாவதால் கல்பிதம்.

3. ஜனனமரணரூபபயம்.

மரணரூபமான துக்கத்தை யடைகிறான். இக்காரணத்தினால் இராமானுஜர் மத்துவாசாரியர்முதலிய அநேகர் வேதார்த்தத்தை விசாரித்தும் குருமுகமாக விசாரிக்காததினால் பேதவிஷயத்தில் நிச்சயத்தை யடைந்து ஜநநமரணரூபமான துக்கத்தை யடைகிறார்கள்; முக்தரூபமான ஆனந்தத்தை யடைகிறதில்லை. ராமானுஜாதிகள் வேதத்தைத்தங்கள் குருமுகமாய் விசாரித்து வியாக்கியானங்களைச்செய்திருந்தாலும் எவர்கள் மூலமாய் விசாரித்தார்களோ அவர்கள் குருமாரன்று. ஏனெனில் ஜீவப்பிர்ம்ம ஐக்கியத்தை யுபதேசிக்கிறவனே குருவென்று முன் குருலக்ஷண (110)த்திற் சொல்லப்பட்டிருக்கிறது. இவர்களுக்கு உபதேசித்தவர்கள் ஜீவப்பிர்ம பேதத்தை யுபதேசித்திருப்பதால் அவர்கள் விஷயத்தி லுபயோகிக்கும் குருசப்தம் ஜயினர்கள் தங்கள் ஆசாரியர்விஷயத்தி லுபயோகிக்கும் குருசப்தம் போலாம். ஜயினர்கள் போல் பேதவாதிகளின் சிஷ்யர்களும் தங்களுக்கு வேதோபதேசஞ் செய்கிறவர்களை க்குருவென்று சொல்லுகிறார்கள். ஆனால் அவர்கள் குருமாராகார். ஆகையால் ராமானுஜாதி பேதவாதிகள் குருமுகமாக விசாரித்தவர்களாகார். இக்காரணத்தால் பேதத்தில் அபிமானம வைத்து ஜனனமரணரூப துக்கத்தை யடைகிறார்கள். இப்படியே முன் சொல்லிய லக்ஷணங்களுடன் கூடிய குருவன்றியில் சுவயமாக வேதார்த்தத்தை விசாரிக்கிறவர்களும், பேதவாதிகளிடத்தில் விசாரிக்கிறவர்களும் பேதரூப க்ஷாரத்தை யநுபவித்து ஜனனமரணரூப துக்கத்தை யநுபவிக்கிறார்கள். வேதமும் பிரம்மவித்தாயிருக்கிற குருவினிடத்தில் விசாரிக்கிறவர்களுக்கு அமிர்தத்தைக் காட்டிலும் அதிக ஆனந்தத்தைக்கொடுக்க வேதம் ஹேதுவாயிருக்கிறது. இயல்பாயுப்பாயிருக்கிற சமுத்திரஜலம் பாத்திரங்களால் கிரகிக்கப்பட்டால் உப்பாயும் மேகங்களால் கிரகிக்கப்பட்டு வர்ஷிக்கப்பட்டால் மதுரமாயுமிருப்பதுபோல் வேதார்த்தமும் குருவன்றியில் விசாரிக்கப்பட்டால் ஜனனமரண துக்கத்துக்கு ஹேதுவாயும் பிர்ம்மஞானியினிடத்திலிருந்து கிரகிக்கப்பட்டால் ஆனந்தத்துக்கு ஹேதுவாயும் இருக்கிறது. ஆகையால் உண்மையான குருவினிடத்தினின்றே வேதார்த்தத்தைக்கிரகிக்கவேண்டியது.

114. பாஷாக்கிரந்தத்தினாலும் ஞானமுண்டாகும்:— ஆக்ஷேபம்:— ஞானியினிடத்திலிருந்து வேதத்தைக் கற்கவேண்டுமென்று மேற் பிரிவிற் சொன்னதினால், வேதவாக்கியங்கள்மூலமாக ஜீவப்பிர்ம்மங்களின் சொரூபத்தைவிசாரிக்கிறதினால் ஞானமுண்டாகுமேயொழிய வேறு ஸம்ஸ்கிருதக்கிரந்தங்களாலாவது இதர பாஷாக்கிரந்தங்களாலாவது ஞானமுண்டாகமாட்டாது என்று சந்தேகம் ஜனிக்கிறது. ஆகையால் இது இதர பாஷாக்கிரந்தங்களிலொன்றாகையால் இதை யாரம்பிப்பது நிஷ்பிரயோஜனம்.

இதற்குச் சமாதானம்[4]:—பிர்ம்மத்தை யறிந்தவனே பிர்மரூபமென்

---

4. பாஷாக்கிரந்தத்தால் ஞானமுண்டாகாதென்று சொல்லுகிறவனுக்கு ஒரு கேள்வி:—பாஷாக்கிரந்தம் வேதானுசாரமாயில்லை. ஆகையால் அதினால்

று வேதத்திற் பிரசித்தமாய்ச்சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் அவனுடைய வாக்கு வேதரூபமாயிருக்கிறது. அந்த வாக்கு ஸம்ஸ்கிருதமாயாவது இதர பாஷையாயாவது இருக்கக்கூடும். அது எப்போதும் பேதபிரமையைப் போக்குவிக்கிறது. வேதவசன மன்றியில் ஞானம் உண்டாகமாட்டாதென்பது நியமமில்லை. ஆயுள்வேதத்திற் சொல்லிய ரோகங்கள் அவைகளின் ஸ்தானங்கள் ஔஷதங்கள் இவைகளின் ஞானம் இதர ஸம்ஸ்கிருதகிரந்தங்களாலும் இதரபாஷாக்கிரந்தங்களாலும் உண்டாவதுபோல எல்லாவற்றிற்கும் ஆத்மாவாகிய பிர்ம்மத்தின் ஞானமும் பாஷாக்கிரந்தங்களாலுமுண்டாகும். சர்வஞ்ஞர்களான முனிகளும் மகரிஷிகளும் ஸ்மிருதி புராண இதிஹாசங்களிலும் பிர்ம்மவித்தையைப்பற்றி விவரித்திருக்கிறார்கள் வேதமன்றியில் ஞானமுண்டாகாதபக்ஷத்தில் ஸ்மிருதியாதிகளில் அவைகள் சொன்னதெல்லாம் வியர்த்தமாய்ப்போகும். ஆகையால் ஆத்மாவின் சொரூபத்தைப் பிரதிபாதிக்கிற வாக்கிய

---

ஞானமுண்டாகவில்லையென்கிறாயா! (2) அல்லது பாஷாரூபமாயிருப்பதால் ஞானமுண்டாகமாட்டாதென்கிறாயா! (3) அவதாரபுருஷனால் செய்யப்படாமையால் ஞானமுண்டாகமாட்டாதென்கிறாயா! (4) அசுத்தமாயிருக்கிறதினால் ஞானமுண்டாகமாட்டாதென்கிறாயா! வேதத்தை யனுசரிக்கவில்லையென்று சொல்லும்பக்ஷத்தில் வேதவசனத்தை யனுசரிக்கவில்லையா! அல்லது வேதஅர்த்தத்தை யனுசரிக்கவில்லையா. வேதவசனத்தை யனுசரிக்கவில்லையென்று சொல்லும்பக்ஷத்தில் இதர ஸம்ஸ்கிருதக்கிரந்தங்களும் இப்படியேயிருப்பதால் இவைகளாலும் ஞானமுண்டாகக்கூடாது. வேதார்த்தத்தை யனுசரிக்கவில்லையென்று சொல்லும்பக்ஷத்தில் அது சரியன்று. ஏனெனில் எப்படிச்சில ஸம்ஸ்கிருதக்கிரந்தங்கள் வேதார்த்தத்தை யனுசரித்திருக்கின்றனவோ அப்படிச் சில பிராக்கிருதக்கிரந்தங்களும் வேதார்த்தத்தை யனுசரித்திருக்கின்றன. ஆகையால் ஆயுள்வேதத்தை யனுசரித்த இதர ஸம்ஸ்கிருத பிராக்கிருதக்கிரந்தங்களால் ஔஷதாதிகளின் ஞானமுண்டாவதுபோல் வேதார்த்தத்தையனுசரித்த ஸம்ஸ்கிருதப்பிராகிருதக் கிரந்தங்களாலும் ஞானமுண்டாகும். பாஷாக்கிரந்தம் பாஷாரூபமாயிருப்பதால் ஞானமுண்டாகமாட்டாதென்று சொல்லும்பக்ஷத்தில் எப்படி ஸம்ஸ்கிருதம் தேவபாஷையோ அப்படிப்பிராகிருதம் மனுஷ்யபாஷை. பாஷை இரண்டுக்கும் பொதுவாயிருக்கிறது. பாஷாக்கிரந்தம் அவதாரபுருஷனாற் செய்யப்படாததினால் ஞானமுண்டாகாதென்று சொல்லும்பக்ஷத்தில் சில ஸம்ஸ்கிருதக்கிரந்தங்கள் அவதாரபுருஷர்களாற் செய்யப்படவில்லை. ஆகையால் அவைகளாலும் ஞானமுண்டாகக்கூடாது. பாஷாக்கிரந்தம் அசுத்தமென்று சொல்லும் பக்ஷத்தில் எப்படிப் பாஷாக்கிரந்தத்தில் லகுஸ்தானத்தில் குருவும் குருஸ்தானத்தில் லகுவும் உபயோகப்படுத்தப்படுகின்றனவோ அப்படியே ஸம்ஸ்கிருதத்திலும் அசுத்தங்களிருக்கின்றன. அசுத்தம் இரண்டுக்கும் பொது. இவ்விதமாகப்பாஷாக்கிரந்தத்தால் ஞானமுண்டாகமாட்டாதென்று சொல்வது மூடமாத்திரந்தான். இந்த அபிப்பிராயத்தால் ஏகநாதசுவாமி முதலிய மகான்கள் அநேகப்பிராக்கிருதக்கிரந்தங்களை பரோபகாரார்த்தம் செய்திருக்கிறார்கள்

த்தினால்ஞானமுண்டாகும். அந்தவாக்கியம்வேதமாலும்இதர பாஷை யாலும் சரிதான். இதனால் பாஷாக்கிரந்தத்தினாலும் ஞானமுண்டாகு மென்று சித்திக்கிறது.

115. குருசேவை:— எந்தப்பிர்ம்மவித்தின் வாக்கு வேதவசனத்துக்குச்சமானமாயிருக்கிறதோ அந்தப்பிர்ம்மவித்தாகிற ஆசாரியரை ஜிஞ்ஞாசுவானவன் சேவிக்கவேண்டியது. ஏனெனில் சேவையினால் குருவானவர் பிரஸன்னராகும்போது ஜிஞ்ஞாசுவானவன் தன்னிஜரூபத்தை யறிந்துகொள்ளுகிறான். இதனால் அறியத்தக்கதென்னவெனில் குருசேவை ஈசுவரசேவையைவிட விசேஷமென்பதே. ஏனெனில் ஈசுவரசேவை அதிர்ஷ்டபலத்துக்குமட்டில் ஹேதுவாயிருக்கிறது. குருசேவையோ அதிர்ஷ்ட திர்ஷ்ட பலங்களுக்கும் ஹேதுவாயிருக்கிறது. தர்மாதர்மங்களை உற்பத்திசெய்வதின்மூலமாகப்பலத்துக்கு ஹேதுவாயிருப்பது, அதிர்ஷ்ட பலத்துக்கு ஹேதுவென்றும், தர்மாதர்மங்களை யுற்பத்தி செய்யாமலே சாக்ஷாத்தாய்ப்பலத்துக்கு ஹேதுவாயிருப்பது திர்ஷ்ட பலத்துக்கு ஹேதுவென்றும் சொல்லப்படும். ஈசுவரசேவை தர்மத்தை யுற்பத்தி செய்வதின்மூலமாக அந்தக்கரணத்தின் சுத்தியாகிற பலத்துக்கு ஹேதுவாகிறது. ஆகையால் ஈசுவரசேவை அதிர்ஷ்ட பலத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. குருசேவை தர்மாபேக்ஷையன்றியில் ஆசாரியருடைய பிரசன்னதயால உபதேசரூபபலத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. ஆகையால் திர்ஷ்டபலத்துக்கு ஹேதுவாயிருக்கிறது மேலும் குருசேவை தர்மத்தை யுண்டுபண்ணுகிறதுமூலமாக அந்தக்கரணசுத்தியாகிற பலத்துக்கும் ஹேதுவாகிறது. இதனால் அதிர்ஷ்ட பலத்துக்கும் ஹேதுவாகிறது. இவ்விதமாக ஆசாரியசேவை ஈசுவரசேவையைவிட உத்தமமாயிருக்கிறது. ஆனதினால் ஜிஞ்ஞாசுவானவன் எவ்விதத்திலும் பிர்ம்மவித்தான குருவைச்சேவிக்கவேண்டியது.

116. குருகிடைத்தவளவில் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து அவருடைய மேன்மையான பாதாரவிந்தங்களின் தூளியைச்சிரசில் தரிக்கவேண்டியது. குருவினிடத்தி லிருந்துகொண்டு பந்தத்தை நீக்க விரும்புகிறவன் தன் சரீரம் மனது தனம் வாக்குஇவைகளைக்குருவுக்கர்ப்பணஞ் செய்யவேண்டியது.

---

5. இரண்டுபாதங்கள் இரண்டுதொடைகள் இரண்டுகைகள் மார்பு தலை இந்த எட்டு அங்கங்களும் தரையில் படும்படித்தண்டம் போல் தீர்க்க நமஸ்காரஞ்செய்வது சாஷ்டாங்க நமஸ்காரமாம்.

117. **சரீரார்ப்பணம்:—** சரீரத்தினால் குருவுக்கு வேண்டிய பலவிதசேவைகளைச்செய்வதும் அவருடைய கட்டளைகளைக்கொஞ்சங் கூடமீறாமல் நடப்பதும் சரீர அர்ப்பணமாம்.

118. **மனார்ப்பணம்:—** மனதிற் ஸ்ரீ ராமனெனக்குருவை யெண்ணியும் அவரிடத்திற் பக்தி[6] வைத்தும் தன்னிடத்தில் அவருக்குச் சந்தோஷமுண்டாகும்படிச்செய்வித்தும் சொப்பனத்திலும் அவரிடத்தில் தோஷதிர்ஷ்டி வைக்காமலும், ஹரிஹரப்பிரமா,[7] கங்கை சூரியன், இவர்களைப் பாவிப்பதுபோல் அவரையும் பூஜ்ஜியராகப்பாவித்து வருதலுமே மனார்ப்பணமாம்.

119. **தனார்ப்பணம்:—** பத்தினி, புத்திரன், பூமி, பசு, தாசி, தாசன், திரவியம், ரதம், தானியம், இவைகளுக்குத் தனமென்று பெயர். இவைகளை யெல்லாமெழுதிக் குருவைச் சரணாகதி அடைவது தான் தனஅர்ப்பணமாம். ஏனெனில் குரு சர்வ பரித்தியாகம பண்ணியிருந்தால் அவர் ஒன்றையும் அங்கீகரிக்கிறதில்லை. அவரை யடைவதற்காக இவைகளைத்தத்தியாகஞ் செய்யவேண்டியதாயிருப்பதால் இந்தத் தியாகம் குருவின்பொருட்டுத் தனார்ப்பணமாகிறது. குரு கிரகஸ்தாச்சிரமத்திலிருந்தால் அவருக்கே யெல்லாவற்றையும் அர்ப்பணஞ் செய்ய வேண்டியது. இது இருவித தனார்ப்பணம். பிர்ம்மவித்தான குரு கிரகஸ்தாச்சிரமத்தில் இருக்கமாட்டாரென்று சொல்வது சரியன்று. ஏனெனில் யாக்ஞவல்கியர், உத்தாலகர் முதலிய குருமார்கள் கிரகஸ்தாச்சிரமத்திலிருந்ததாக வேதத்தினால் விளங்குகிறது. ஆகையால் கிரகஸ்தாச்சிரமத்திலிருப்போரும் குருவாகக்கூடும்.

---

6. பக்தி ஒன்பது விதம்:—(I) சிரவணம் (2) கீர்த்தனம் (3) ஸ்மரணம் (4) பாதசேவனம் (5) அர்ச்சித்தல் (6) வந்தனம் (7) தாஸபாவம் (8) ஸகாபாவம் (9) ஆத்மநிவேதனம் அதாவது தேகாதி யாவற்றையும் சமர்ப்பித்தல்.

7. குரு சீஷனிடத்தில் அன்புடனிருக்கும்போது அவரை விஷ்ணுரூபமாயும், கோபித்துக்கொண்டிருக்கும்போது சிவரூபமாயும், ராஜஸீகவ்யவகாரத்தில் இருக்கிறபோது பிர்ம்மன் ரூபமாயும், சாந்தமாயிருக்கும்போது கங்காதேவிரூபமாயும், வசனமாகிற கிரணங்களால் பிரமை சந்தேகங்களுடன் கூடிய அஞ்ஞானத்தை நிவர்த்திக்கும்போது சூரியரூபமாயும், அறியவேண்டும். இவ்விதமாகப் பிர்ம்மவேத்தாவான குருவினிடத்தில் சீஷன் எப்போதும் ஈசுவரபாவத்தைத் தரிக்கவேண்டியது. சொப்பனத்திலும் தோஷதிர்ஷ்டியை வைக்கக்கூடாது. ஞானத்துக்குமுன் ஞானத்தை அடைவதற்காகக் குருவை சேவிக்கவேண்டியது. ஞானமடைந்தபின் நன்றியறியாமை யென்னும் தோஷத்தை நிவர்த்திக்கக் குருவைச் சேவிக்கவேண்டியது.

120 **வாக்கர்ப்பணம்.**— குருவின் வாக்குக் குணமுள்ளதென நம்பி அதைச் சிலாகித்து அதில் தோஷம் பார்க்காமலிருப்பதே வாக்கு அர்ப்பணமாம்.

121. **குருசேவையடைந்தபின் சிஷ்யன் நடந்துகொள்ளவேண்டிய விதம்.** — தான் மோக்ஷத்தை யிச்சிக்கிறவன் முன் சொன்னபடி சரீராதிகளை யர்ப்பணஞ்செய்து குரு விருக்குமிடத்திலாவது அல்லது சமீபத்திலாவது வெகுகாலம் வாசஞ்செய்து[8] பிக்ஷைவாங்கிவந்து தானுண்ணாமல் குருவினிடத்தில் வைத்துவிட்டுப் பேசாமலிருக்கவேண்டியது. மறுபடி அதேதினத்தில் பிக்ஷைக்குப்போகக்கூடாது. குரு தயவுசெய்து கொடுத்தால் சாப்பிடவேண்டியது. சிஷ்யனுடைய பக்தியைப் பரீக்ஷித்தறியும்பொருட்டுக் குரு கொடாவிட்டால் உபவாசமாயிருந்து வழக்கம்போல் மறுநாள் பிக்ஷைக்குப்போகவேண்டியது. இதில் யாதொரு மனவருத்தத்தையுமடையக்கூடாது. இப்படி யிருந்துகொண்டு வருங்காலத்தில் எப்போது குருவானவர் சாவகாசமாயும் பிரசன்னமாயுமிருக்கிறாரோ அப்போது கையைக் குவித்துக் கொண்டு அவரைத் துதிசெய்து வணக்கத்துடன் தெரியப்படுத்திக்கொள்ளவேண்டியதாவது:— சுவாமின் "அடியேன் கேட்க விரும்புகிறேன்" எனச்சொல்லவேண்டியது. அதன்மேலுத்தரவுகொடுத்தால் கேட்கவேண்டியது. ஜன்மாந்திர உத்தம கர்மத்தினால் குருவானவர் கிருபைசெய்து சிஷ்யனுக்குத் தனுவியர்ப்பணமன்றியில் உபதேசஞ்செய்தால் அந்த உத்தம அதிகாரிக்கு மோக்ஷமுண்டாகும். ஏனெனில் குருசேவைக்குப் பலனிரண்டு. ஒன்று பிரசன்னத்தை மற்றொன்று அந்தக்கரணசுத்தியாம். இவனுக்கு இரண்டும் சித்தித்திருக்கின்றன.

எவன் மனோவாக்காயங்களை யர்ப்பணஞ்செய்து குருசேவை செய்கிறானோ அவன் பரமபதத்தை சீக்கிரம் அடைகிறான். தாதுவானவர் எப்போதும் அவனுக்கு சகாயம் செய்கிறார்.

---

8. பிரமசாரியை யுத்தேசித்து இது சொல்லப்பட்டது. கிரகஸ்தனை யுத்தேசித்தன்று.

# 4-வது தரங்கம்.

## உத்தமாதிகாரிக்குஉபதேசம்.

### I. பூர்வபீடிகை:—

122. இப்போது குருசிஷ்யனிடையாக ஒரு புதிய[1] கதையைச் சொல்லுகிறேன். அதைக்கேட்பதினால் ஜிஞ்ஞாசுவானவன் ஆத்மவிசாரணையிற் சமர்த்தனாகிறான்:—

### II. சுபசந்ததிராஜாவின்கதை

123. **சுபசந்ததி** யென்னுமோரரசன் பூமி சுவர்க்க பாதாள மென்கிற மூன்று லோகங்களையும் ஆண்டுகொண்டிருந்தான். அவனுக்கு மூன்று குமாரர்களிருந்தார்கள்.[2] அவர்கள் **தத்துவதிர்ஷ்டி, அதிர்ஷ்டி, தர்க்கதிர்ஷ்டி,** யெனப்பெயரிடப்பட்டிருந்தார்கள். அவர்கள் நான்கு சாஸ்திரங்களுங்கற்று மூவுலகங்களிலும் பிரசித்தி பெற்றிருந்தார்கள். சுபசந்ததியரசன் தன் பாலியத்தை விளையாட்டிலும் யௌவனத்தை ஸ்திரீலோலத்திலும் செலுத்தி அனேக போகங்களை யனுபவித்துக்கொண்டு தன்னுடைய புஜபலபராக்கிரமத்தால் மூவுலகங்களையும் நீதி

---

1. வேதத்திற் சொல்லிய ஜநகர் யாஞ்ஞவல்கியர் இவர்களுடைய கதைகள்போல் இந்த குருசிஷ்யஸம்வாதரூபகதை சொல்லப்படுகிறது. இது புராணாதிகளிற் சொல்லப்படவில்லை. ஸ்வபுத்தியால் கல்பிக்கப்பட்டிருப்பதால் "புதிய" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

2. இம்மூன்று குமார்களும் முறையே 4-வது தரங்கத்தின் உத்தமாதிகாரியாயும், 5-வது தரங்கத்தின் மத்தியமாதிகாரியாயும், 6-வது தரங்கத்தின் கனிஷ்டாதி காரியாயுமிருக்கிறார்கள்.

யுடன் ஆண்டுவந்தான். ஒருகாலத்தில்[3] அவன்மனதில் ஆத்மா உற்பத்திரகிதமாயும் சுகச்சொரூபமாயு மிருப்பதாயும் அதற்கு வேறானவெல்லாந் துக்கரூபமென்றும் ஒரு விவேகமுண்டாயிற்று. உடனே, தான் ஆத்மவிசாரணை செய்யும்பொருட்டுத்தன் ராஜ்யத்தைப்பிள்ளைகளிடத்தில் ஒப்பிவிக்கக்கருதி மந்திரியைக்கொண்டு அவர்களைத்தனக்குச்சமீபத்தில் வரவழைத்து இரகசியமாய்த்தனக்குண்டான வைராக்கியத்தை அவர்களுடன் சொல்லி ராச்சியத்தை ஒப்புக்கொள்ளும்படிக்கட்டளையிட்டார். ஒருவனுக்குப்பாதாளலோகத்தையும் ஒருவனுக்குச்சுவர்க்கலோகத்தையும் மற்றொருவனுக்குப்பூலோகத்தையுங்கொடுத்தார். பூலோகத்தில், எவனுபதேசத்தால் அந்தியகாலத்தில்[4] மோக்ஷமடையப்படுகிறதோ அப்படிப்பட்ட சர்வாந்தரியாமியாயும் திரிபுராரியாயும்[5] மிருக்கிற பரமசிவனால் பரிபாலிக்கப்பட்டும், உத்தரவாகினியாயும் அகாதமாயு[6]மிருக்கிற கங்கைநதிக்கரையிலிருப்பதுமான காசிபட்டணத்தில் இருந்துகொண்டு ராச்சியபாரம் பண்ணும்படி ஆஞ்ஞாபித்தார். புத்திரர்களுக்கு ராஜ்யத்தைப்பாகித்துக்கொடாவிட்டால் ஜனங்களுக்குத்துக்கம் நேரிடுமெனக்கருதி இவ்விதமாயப்பிரித்துக்கொடுத்தார். மறுபடியும் குமாரரைப்பார்த்துச்சொல்லுகிறதாவது, இந்த அபார சமுசாரம் துக்கரூபமாயிருக்கிறது. பாமரர்கள் இதைச்சுகமெனக்கருதி தனத்தையே மேலாகப்பாவித்து ஆத்மவிசாரஞ்செய்யாமலிருக்கிறார்கள். இப்படிப்பட்ட ஜனங்களின் சகவாசத்தை விட்டு நிஜமான சுகத்தை யடைய விரும்புகிறேன். பிதாவின் இவ்விதமான வார்த்தைகளைக்கேட்டு நல்ல யுக்தி புத்திகளுடன் கூடிய மூன்று பிள்ளைகளுங்கூடி யேகாந்தமாயோசிக்கிறதாவது, பாருங்கள், நம்முடைய பிதாவானவர் துக்கமான சமுசாரசாகரத்தில் நம்மைத்தள்ளி தான்மாத்திரம் பிரம்மானந்தமடைய இச்சிக்கிறார். இதனால் ஆத்மவிசாரத்தில் ஆசக்தியுள்ளவர்கள் அபாரமான துக்கரூப ராஜ்யத்தை விட விரும்புகிறார்கள். ஆனதால் நாங்களும் இந்த துக்கரூபமான ராஜ்யத்தை விட்டுவிடவேண்டுமென்று தீர்மானித்து மோக்ஷ இச்சை யுள்ளவர்களாய், சுபசந்ததியென்னும் பிதாவின் பெயரை அர்த்தவத்தாக்கிச்சற்குருவைத்தேட அரண்மனையை விட்டுப்புறப்பட்டார்கள். அனேக தேசங்கள் போய்த்தேடிக்கடைசியாய்க்கங்காதீரத்துக்கு வர, அவ்விடத்திலோரேகாந்தமான ஸ்தல

---

3. முன்செய்த புண்ணியவிசேஷத்தால் தற்செயலாய்.

4. காசியில் மரணமடைந்தால் மோக்ஷம் கிடைக்கும், என்கிற சுருதி, அபிப்பிராயம் இவ்விடத்தில் காண்பிக்கப்பட்டிருக்கிறது.

5. திருபுராசுரனை சம்காரம் செய்தவர்.

6. அளம்காணக்கூடாத.

த்தில் வெகு பெரிதாயும் நெருக்கமான கிளை கொப்பு தழைகளையுமுடைய ஆலமரத்தடியில் சின்முத்திரைகளோடு[7] கூடி ஜீவப்பிரம்ம ஐக்கியத்தை நிர்த்தோஷர்களாயும்[8] ஏகாக்கிர சித்தர்களாயும் இருக்கிற அநேக சிஷ்யர்களுக்கு உபதேசஞ்செய்கிற திரிகுணரகிதரான குருவைக்கண்டார்கள். அப்போது கைலாசத்தில் ஸநகாதிகளுக்குபதேசித்த பரமசிவனைப்போல அவரைப்பாவித்துச் சாஷ்டாங்கமாய் நமஸ்காரஞ்செய்து மோக்ஷஇச்சையுடன் விதிப்படி[9] ஆறுமாதம் அவரைச்சேவை செய்தார்கள். பிறகு குருவானவர் பிரசன்னராகி அமிர்தவசனத்துடன், நீங்கள்யார், எந்தஊர், வந்தகாரியமென்ன என்றுகேட்டார். அப்போது தத்துவதிர்ஷ்டி யானவன் தமபிமார்களைப்பார்த்து அவர்கள் அபிப்பிராயத்தைஅறிந்து, கைகூப்பி நின்று சொல்லுகிறதாவது, சுவாமின், நாங்கள் சுபசந்தநிராஜாவின் குமாரர்கள். வெகு தீனர்களாயும்[10] அஞ்ஞர்களாயுமிருக்கிறோம். சொரூபஞானத்தை யடையவிரும்புகிறோம். நீங்கள் கிருபைக்கடலாயும் கல்பகதருவுக்குச்சமானமாயும் விளங்குகிறீர்கள். நாங்கள் துக்காதீனர்களாயிருக்கிறோம். உத்தரவு கொடுத்தால் எங்கள் கோரிக்கைகளை தெறியப்படுத்திக்கொள்ளுகிறோம்.

குருஉத்தரம்:— சீஷனே என்வார்த்தையைக்கேள். அதனால் உன்னிருதயத்திலுள்ள சந்தேகங்கள் நிவிர்த்தியாகிப்பரமானந்தமடைவாய்.

## III. தத்துவதிர்ஷ்டியின்கேள்வி:—

124. குருவின் கருணையைக்கண்டு இருதயத்திலானந்தங்கொண்டு தன் காரியம் சித்தியாய்விட்டதாக வெண்ணி வணக்கத்துடன் கேட்கத்தொடங்கினான். சுவாமின, நீங்கள் கிருபாநிதியாகவும் சதாசிவனுக்

---

7. பெருவிரலையும் அதற்கடுத்த விரலையும் சேர்த்துவைத்துக்கொள்வது. இதற்கு லோயாமுத்திரை தர்க்கமுத்திரை ஞானமுத்திரை எனப்பெயர்களாம்.

8. திருட்டு, ஜீவஹிம்சை, கற்பழிவு, இம்மூன்றும் சரீர தோஷங்களாம். பொய்மொழிதல், பிறர் நிந்தை, கடுஞ்சொல், வீண்பேச்சு, இந்நான்கும் வாக்கின் தோஷங்களாம். இச்சை, சிந்தை, மந்தபுத்தி இம்மூன்றும் மனதின் தோஷங்களாம். நிருசிம்மதாபனீய உபநிஷத்தைப்பார்க்க.

9. மூன்றாவது தரங்கத்தில் சொல்லியபடி.

10. பரிதாபிக்கப்பட்டவர்கள்.

சூக்ஷ்மமான சர்வஞ்ஞராயுமிருக்கிறீர்கள். நாங்கள் ஜனனமரணாதிதுக்கரூபசமுசாரத்தினால் பயப்படுகிறோம். அதன் நிவிர்த்திக்கும் பரமானந்தப்பிராப்திக்கும் உபாயத்தைச்சொல்லியருளவேண்டும். அனேகவுபாசனைகளையுங் கர்மங்களையுஞ்[11] செய்தும் நாங்கள் இச்சிக்கும் பலனையடையவில்லை. ஆனாலோ சமுசாரபந்தம் பலப்படுகிறது. ஆகையால் எந்த வேறுபாயத்தால் நாங்கள் கிருதார்த்தர்களாவோமோ அவ்வுபாயத்தைச்சொல்லியருள்க.

## IV. மகாவாக்கிய உபதேசம். (125—165).

125. குரு உத்தரம்:-துக்கநிவிர்த்திக்கும் பரமானந்தப்பிராப்திக்கும் மோக்ஷமென்று பெயர். சிஷ்யனுடைய இருதயத்தில் மோக்ஷ இச்சை யிருப்பதைக்கண்டு அதற்குச்சாதனமான வேதாந்த ஞானத்தை யுபதேசிக்கிறார். ஞானத்தின் சொரூபம் அநேகசாஸ்திரங்களில் அநேகவிதமாய் வர்ணிக்கப்பட்டிருந்தபோதிலும் ஜீவப்பிரம்மபேதத்தை நிவிர்த்திக்குமஞ்ஞானமே மோக்ஷசாதனமென வேதத்திற் சொல்லியிருப்பதால் அந்த ஞானத்தையே உபதேசிக்கிறார்.

சிஷ்யனே பரமானந்தப்பிராப்திக்கும் ஜனன மரணாதி துக்கரூபச் சமுசார நிவிர்த்திக்கும் உனக்குண்டான இச்சை பிராந்தியினாலே தான் என்று அறி. நீ இயற்கையிலேயே பரமானந்தச்சொரூப (476—482) மாயிருக்கிறாய். ஆனதால அதையடைய நீ இச்சிப்பது சரியன்று. எது கிடைக்கவில்லையோ அதையடைய இச்சிக்கக்கூடும். உன்னுடைய சொரூபமோ எப்போதும் பிராப்தமாகவே யிருக்கிறது. அதை யடைய வேண்டுமென்று உண்டாகிற இச்சை பிராந்தியன்றியிலுண்டாகிறதில்லை. மேலும் ஜனனமரணாதிச் சமுசாரம் எப்போதாவது உனக்கு இருக்கும்பக்ஷத்தில் அதை நிவிர்த்திக்க இச்சையுண்டாகலாம். ஆனால் அந்தச்சமுசாரங் கொஞ்சங்கூட உன்னிடத்தில் இல்லை. ஆனதால் அனுபவிக்கப்படாத துக்கத்தை நிவிர்த்திக்க உண்டாகுமிச்சைபிராந்தியன்றியிலுண்டாகாது. சிஷ்யனே ஜனனமரணமற்றச்சேதனரூபப் பிர்ம்மமே நீ. ஆனதால் உன்னிருதயத்தில் ஜன்மாதிதுக்கத்தையனுபவிக்கவேண்டாம்.

### சுகவிஷயமாய்வினாவிடை (126—129)

126 கேள்வி:— சுவாமின், என்னுடைய ஆத்மா ஆனந்தரூபமாயிருக்கும்பக்ஷத்தில் விஷயசம்பந்தத்தால் ஆனந்தம் ஆத்மாவினிடத்தில்

---

11. சகாம கர்மங்கள்.

தோன்றக்கூடாது. ஆனால் அனுபவத்தில் விஷயசம்பந்தத்தால் ஆத்மாவினிடத்தில் ஆனந்தமுண்டாகிறது. ஆதலால் ஆத்மாவே ஆனந்தரூபமன்று.

127 குருஉத்தரம்:— சிஷ்யனே, எவன்புத்தி ஆத்மசொரூபத்தை யறியவில்லையோ அவனுக்கு விஷயத்திலிச்சை யுண்டாகிறது. போகசாதனமே விஷயமெனப்படும். தனபுத்திராதிகளும் விஷயங்கள்தாம். விஷயத்திலிச்சையுண்டாகும்போது புத்திசஞ்சலிக்கிறது. இச்சஞ்சலபுத்தியில் ஆத்மசொரூபானந்தத்தின் பிரதிபிம்பம் விளங்குகிறதில்லை.[12] இச்சித்தவிஷயங்கிடைத்தவுடன் க்ஷணமாத்திரம் புத்திஸ்திரப்பட்டு அதன் விர்த்தி அந்தர்முகமாகின்றது. இந்தஅந்தர்முகவிர்த்தியில் ஆத்மாவின் சொரூபானந்தம் பிரதிபிம்பிக்கிறது. இந்த ஆனந்தபிரதிபிம்பத்தை யனுபவிக்கிற புருஷனுக்கு விஷயத்காலானந்த முண்டானதாகப்பிராந்தியுண்டாகிறது. ஆனால் உண்மையில் விஷயத்திலானந்தமில்லை. மேலும் ஒருக்கால் விஷயத்திலானந்த முண்டாகும்பக்ஷத்தில் ஒருவிஷயத்திலானந்தமடைந்தவனுக்கு மற்றொருவிஷயத்தில் இச்சையுண்டாகும்போதும், முந்தியஆனந்தம் இருந்துகொண்டே யிருக்கவேண்டும். ஆனால அனுபவத்தில் அப்படியில்லை. நம்முடையபரிதிப்படி இரண்டாவதுவிஷயத்திலிச்சையால் புத்தி சஞ்சலப்படுவதால் அச்சஞ்சலபுத்தியில் சொரூபானந்தத்தின் பிரதிபிம்பம் விளங்குகிறதில்லை.

இதுவுமன்றி, விஷயத்தினாலானந்தம் உண்டாகும்பக்ஷத்தில் ஒருவனுடைய பிரியமான புத்திரன் வெகுகாலம் தேசாந்திரம் போயிருந்து வந்தவுடன் அவனைப்பார்ப்பதாலுண்டாகும் ஆனந்தம் மாறாமல் நீடித்திரு

---

12. ஆத்மா ஸ்வபாவமாக ஆனந்தஸ்வரூபம். மனோவியாகுலத்தினால் சமீபத்திலிருக்கிற பதார்த்தங்களும் கண்ணுக்குத்தெரியாமல் போவதுபோல் சஞ்சலிக்கிற ராஜஸவிர்த்தி இருக்கும் வரையில் ஆனந்தாம்சம் விளங்குகிறதில்லை. சஞ்சலிக்கிற கண்ணாடியில் பிரதிபிம்பம் தோன்றினும் பிம்பலக்ஷணம் விளங்காததுபோல் ராஜஸவிர்த்தியால் சஞ்சலிக்கும் புத்தியில் ஆத்மாவின் சத் சித் அம்சங்களின் பிரதிபிம்பங்கள் தோன்றினும் ஆனந்தாம்சத்தின் பிரதிபிம்பம் தோன்றுகிறதில்லை. இச்சித்தபொருள் கிடைக்கும்போது இச்சையாகிற சஞ்சலமான ராஜஸவிர்த்தி நிவிர்த்தியாகி அடையப்பட்டபொருளின் ஞானரூபஸாத்விக விர்த்தியால் விஷய உபஹிதசேதனத்தின் ஸ்வரூபமாகிற ஆனந்தம் விளங்குகிறது. இந்த விர்த்தி விஷயரூபநிமித்தத்திலுண்டாவதால் விஷயானந்தமென்று சொல்லப்படுகிறது. அல்லது இச்சித்த பொருளின் ஞானத்தால் இச்சாரூபவிர்த்தி நிவிர்த்தியாகிறது. இக்காரணத்தால் வேறு அந்தர்முகவிர்த்தியுண்டாகிறது. இதனால் அந்தக்கரணஉபஹிதஆனந்தம் விளங்குகிறது. இந்த அந்தர்முகவிர்த்தி அல்லது விர்த்தியிலுள்ள ஸ்வரூபானந்தத்தின் பிரதிபிம்பம் விஷயானந்தமென்றும் பிரதிபிம்பானந்தமென்றும் லேசானந்தமென்றுஞ்சொல்லப்படும்.

கவேண்டும். ஏனெனில் இந்த ஆனந்தத்துக்குக்காரணமான புத்திரன் சமீபத்திலேயே இருக்கிறான். ஆனால் அனுபவத்தில் அப்படியிருக்கவில்லை. நம்முடைய நீதிப்படியோ புத்திரனைக்கண்டவுடன் ஆனந்தமுண்டாகி விர்த்தி ஸ்திரப்படுகிறது. இது நீடிக்கிறதில்லை. மறுபடியும் விர்த்தி வேறுவிஷயத்திற் செல்லும்போது சஞ்சலப்படுவதால் முந்திய ஆனந்தம் விளங்குகிறதில்லை. ஆகையால் பதார்த்தத்திலானந்தமில்லை.

மேலும், விஷயத்தினாலேயே ஆனந்தமுண்டாகும் பக்ஷத்தில் சுஷுப்தியிலானந்தம் விளங்கக்கூடாது. சமாதியிலுண்டாகிற யோகானந்தமும்[13] விளங்கக்கூடாது. ஏனெனில் சுஷுப்தியிலும் சமாதியிலும் விஷயசம்பந்தமேயில்லை. ஆகையால்விஷயத்திலானந்தமேயில்லை. ஆனால் ஆத்மசொரூபானந்தந்தான் எல்லாருக்கும்விளங்குகிறது. ஆத்மசொரூபானந்தத்தைக்கிரகித்துக்கொண்டு எல்லாம் ஆனந்தரூபமாக விளங்குகிறதென்று வேதத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.

சிஷ்யனே, ஆனந்தச்சொரூபமே ஆத்மாவென்றறி. விஷயசம்பந்தத்தினால் அதுபிரகடமாகிறது. நீ கேட்டகேள்விக்குப் பதில்சொன்னேன். இதிலுனக்குச்சந்தேகம் இருக்கும்பக்ஷத்தில் அதைமனதில்வைக்காமல் எனக்குத்தெரிவி. நான் அதற்குப்பதில் சொல்லுகிறேன்.

128. தத்துவதிர்ஷ்டியின்கேள்வி:— பரமகுருவே நீங்கள் முன் விஷயசம்பந்தத்தால் ஆனந்தமுண்டாவதாகச்சொன்னது அஞ்ஞானிக்கேயொழிய ஞானிக்கன்று. ஏனெனில் எவன் புத்தி ஆத்மசொரூபத்தையறியவில்லையோ அவனைப்பற்றி நீங்கள் பிரஸ்தாபித்திருக்கிறீர்கள். இப்படிப்பட்டவன் அஞ்ஞானியேயொழிய ஞானியன்று. ஆகையால் இப்போது, ஞானிக்கு விஷயத்தில் இச்சை, விஷயசம்பந்தத்தால் முன் சொன்னபடி சுகத்தின் விளக்கம் இவைகள் உண்டா இல்லையா வென்பதைச்சொல்லியருள்க.

129. குருஉத்தரர்:— சிஷ்யனே, நீ நான் சொல்வதைக்கவனமாய்க்கேள். முன்னே, எவன் புத்தி ஆத்மசொரூபத்தையறியவில்லையோ என்று சொன்னதினால் அஞ்ஞானியைமட்டுமுத்தேசித்துச்சொன்னதன்று. அது ஞானிக்கும் பொருந்தும். ஞானியினுடைய புத்தியும்

---

13. சித்தத்தின் ஏகாக்கிரதையாகிய யோகத்தினால் வெளிப்படக்கூடிய ஆனந்தம்.

வியவகாரத்திற் பிரவிர்த்திக்கும்போது அவன் தத்துவத்தை மறந்து அஞ்ஞானியைப்போல் விளங்குகிறான். ஞானியின் புத்தி எப்போதும் ஆத்மாகாரமாயிருக்கும் பக்ஷத்தில் அவனுக்குப்போஜனாதி வியவகாரஞ்சம்பவிக்கமாட்டாது. ஆனதால், ஆத்மவிமுகபுத்தி இருவருக்கும் சகஜமே. அஞ்ஞானியின் புத்தி யெப்போதும் ஆத்மவிமுகமாயிருக்கிறது. ஞானியின் புத்தி ஆத்மவிமுகமாகும்போது, விஷயத்திலிச்சை, விஷயசம்பந்தத்தால் ஆத்மச்சொரூபானந்தத்தின் விளக்கம் இவைகள் அஞ்ஞானிக்குண்டாவதுபோல் ஞானிக்குமுண்டாகின்றன. ஆனால் பேதமென்னவெனில் விஷயசம்பந்தத்தால் விளங்குமானந்தம் தன் சொரூபானந்தத்துக்கு வேறல்லவென்றும் அவன் ஆபாசந்தான் என்றும் ஞானி அறிகிறான். இதனால் விஷயபோகத்திலும் ஞானிக்குச்சமாதி[15] சித்திக்கிறது. அஞ்ஞானியோ தன் சொரூபமே ஆனந்தமென்றறிகிறதில்லை. உண்மையில் இருவருடைய சொரூபமும் ஆனந்தந்தான்; விஷயத்தில் கேவலம் அஞ்ஞானிக்குமட்டும் பிராந்தியுண்டாகிறது.

## துக்கவிஷயமாய் வினவிடை (130—165)

130. **கேள்வி:—** சுவாமின், நான் பரமானந்தச்சொரூபமென்று தாங்கள் முன் சொன்னதை (125) நான் நன்றாக அறிந்தேன். ஆனால் ஜனனமரணாதி சமுசாரரூப துக்கம் என்னிடத்திலில்லாமையால் அதை நிவிர்த்திக்க இச்சிக்கலாகாதென்று (125) தாங்கள் சொன்ன விஷயத்தில்

---

14. ஜாக்கிரதாகார விர்த்தி யுண்டாகும்போது ஸ்வப்னாகார விர்த்தி யுண்டாகிறதில்லை. ஸ்வப்னாகார விர்த்தி யுண்டாகும்போது ஜாக்கிரதாகார விர்த்தி யுண்டாகிறதில்லை. இதுபோல் ஞானியின் புத்தியும் ஆத்மாகாரமாகும்போது அனாத்மாகாரமாகிறதில்லை அனாத்மாகாரமாகும்போது ஆத்மாகாரமாகிறதில்லை. ஒரே அந்தக்கரணத்தில் ஒரே காலத்தில் ஸாமானியவிசேஷரூப இரண்டு விர்த்திகளுண்டானாலும் விசேஷரூப இரண்டு விர்த்திகளுண்டாகமாட்டா. ஆகையால் பெட்டியில் பணத்தை வைத்துக்கொண்டிருக்கும் புருஷன் இதரவியவகாரங்களில் பணத்தை மறந்து அவை முடிந்தவுடன் பணநினைவு கொள்வதுபோல் ஞானியின் புத்தியும் வியவகாரத்தில் தத்துவத்தை மறந்து வியவகாரம் முடிந்தவுடன் தத்துவத்தின் நினைவைக்கொள்ளுகிறது. இக்காரணத்தினால் பாஷியக்காரர் பிரம்மசூத்திரபாஷியத்தில் முதல் அத்தியாயத்தின் முதல் பாதத்தில் "வியவகாரத்தில் ஞானியும் அவிவேகிபோல வியவகரிக்கிறான்" என்று சொல்லியிருக்கிறார்.

15. ஸ்வரூபானந்தத்தின் அனுசந்தானரூபச்சமாதிக்குச்சமானமாயிருப்பதால் இந்தப்புருஷன் சிங்கம் என்பதுபோல் விஷயபோகத்திற் சொல்லிய சமாதி உபசாரமாத்திரமே.

ஒரு சந்தேகம் ஜனிக்கிறது:— ஜன்மாதி துக்கம் என்னிடத்தி லில்லாதபக்ஷத்தில் என்னைவிட வேறொதை அது ஆசிரயித்துக்கொண்டிருக்கிறதென்பதைத்தாங்கள் தயவுசெய்து சொல்லவேண்டும். அதைத்தெரிந்துகொள்வதினால் என்னிடத்தில் சமுசாரமில்லையென்பதை நான் நம்புவேன்.

131. **குருஉத்தரம்**:— சிஷ்யனே, என் வார்த்தையைக்கேள். உன் சந்தேகங்களெல்லாம் நிவிர்த்தியாகும். இந்த ஜகத்துச்சுத்தமாய் உன்னிடத்திலாவது எவரிடத்திலாவது இல்லவேயில்லை.[16]

132. **கேள்வி**:— ஐயா, ஜன்மாதி சமுசார துக்கம் என்னிடத்திலாவது எவரிடத்திலாவது இல்லாதபக்ஷத்தில் என் பிரத்தியக்ஷமாய்த்தோன்றுகிறது. இல்லாத வஸ்து தோன்றக்கூடாது. மலடிமகனும் ஆகாசபுஷ்பமும் தோன்றாபோல் சமுசாரமுமில்லாதபக்ஷத்தில் தோன்றக்கூடாது. ஆனால் சமுசாரம் இருக்கிறதாகத்தோன்றுவதால் ஜன்மாதி சமுசாரரூப துக்கம் இல்லையென்று சொன்னது சரியன்று.

133. **குருஉத்தரம்**:— ஜன்மாதி ஜகத்து பாரமார்த்திகமாக இல்லை. ஆயினும் ஆத்மா பிர்ம்மசொரூபமென்று அறியாததினால் ஜகத்தின் பொய்த்தோற்றம் உண்டாகிறது. சொப்பனபதார்த்தம் ஆகாசத்தில் நீலவர்ணம், ரஜ்ஜுவிற் சர்ப்பம், இவைகள் பாரமார்த்திகமாக இல்லாமலிருந்தாலும் இவைகளின் பொய்த்தோற்றம் உண்டாகிறதுபோலும்.

134. ரஜ்ஜுவில் சர்ப்பம் பொய்யாகவிருப்பதுபோல் ஆத்மாவில் சமுசாரதுக்கம் பொய்யென்று சொல்லப்பட்டது. திர்ஷ்டாந்த ஞானமன்றியில் தார்ஷ்டாந்த ஞானமுண்டாகமாட்டாது. ஆகையால் ரஜ்ஜுவில் சர்ப்பம் எப்படித்தோன்றுகிறது. ரஜ்ஜுவில் சர்ப்பம், கிளிஞ்சிலில் வெள்ளி முதலியவை வெறும் பிரமையாயிருக்கின்றன. இவ்விஷயத்தில் நான்கு மதங்களைக்கேள்விப்பட்டிருக்கிறேன். (1) **சூனியவாதி அசத்கியாதி** யென்றும், (2) **க்ஷணிகவிஞ்ஞானவாதி ஆத்மக்கியாதி** யென்றும், (3) **நியாயவைசேஷித மதஸ்தர்கள் அன்னியதாககியாதி** யென்றும், (4) **சாங்கியப்பிரபாகரர்கள் அசத்கியாதி** யென்றும், இதைச்சொல்லுகிறார்கள்.

135. **அசத்கியாதி**;— சூனியவாதியின் அபிப்பிராயமென்னவெனில் ரஜ்ஜுவில் சர்ப்பம் அத்தியந்தம், அசத்தாக இருக்கிறது. அப்படியே வேறிடத்திலும் அத்தியந்தம் அசத்தாகஇருக்கிறது. இப்படி

16. ரஜ்ஜுவில் கல்பித சர்ப்பம் எப்படி இல்லவே இல்லையோ அப்படி பிர்ம்மத்தில் கல்பித ஜகத்து இல்லவே இல்லை.

அத்தியந்தம் அசத்தாயிருக்கிற சர்ப்பத்துக்கு 'ரஜ்ஜு'—வில் பிரதீதியுண்டாகிறது. இதற்கு அசத்கியாதி யென்றுபெயர். அத்தியந்தம் அசத்தாயிருக்கிற சர்ப்பத்தின் கியாதி அதாவது விளக்கமும் கதனமும் அசத்கியாதி என்னப்படும்.

136 ஆத்மக்கியாதி:—விஞ்ஞானவாதியின் அபிப்பிராயம்:— ரஜ்ஜு—விடத்திலும் அப்படியேவேறிடத்திலும் புத்திக்குவெளியில்யாதொருசர்ப்பமுமில்லை. யாதொருபதார்த்தமும் புத்திக்குவெளியிலில்லை. சகல பதார்த்தங்களின் ஆகாரத்தையும் புத்தி தரிக்கிறது. அந்தப்புத்தி க்ஷணிக விஞ்ஞானரூபமாக இருக்கிறது. க்ஷணிகந்தோறும் உற்பத்தி நாசங்களையடைகிறபுத்தி ஒருக்ஷணத்தில் சர்ப்பரூபமாகப் பிரதீதியாகிறது. இதற்கு ஆத்மக்கியாதியென்றுபெயர் ஆத்மா என்றால் க்ஷணிகவிஞ்ஞானரூப புத்தி அதன்கியாதி யென்றால்தோற்றமும் கதனமுமே.

## அன்னியதாக்கியாதி:—நையாயிகவைசேஷிகமதம்:—

137 புற்றுமுதலிய இடங்களில் மெய்யான சர்ப்பம்இருக்கிறது. அதுநேத்திரத்தினால் பார்க்கப்படுகிறது. நேத்திரதோஷபலத்தினால் சர்ப்பம் சமீபத்தில் எதிரில்தோற்றுகிறது. மெய்யானசர்ப்பத்துக்கும் நேத்திரத்துக்கும் மத்தியில்சுவர்முதலிய மறைவுகளிருந்தபோதிலும் தோஷசகித நேத்திரத்தினால்மறைபட்ட சர்ப்பமும் பார்க்கப்படுகிறது. இதிலோர்சங்கை:—(1) தோஷத்தினால் சாமர்த்தியம் குறைகிறதேதவிர விரத்தியாகிறதில்லை. ஜாடராக்கினியின் ஜீர்ணஞ்செய்யுஞ்சாமர்த்தியம் வாதபித்தகப தோஷங்களால் குறைவதுபோல நேத்திரத்தின் சாமர்த்தியமும் இருட்டு முதலிய தோஷங்களால் குறையவேண்டியது. (2) புற்றுமுதலிய இடங்களிலுள்ள சர்ப்பம் தோஷசகித நேத்திரத்தால் அறியப்பட்டால் சுத்த நேத்திரத்திற்கு மறைவிலிருக்கிற பொருளின் பிரத்தியக்ஷஞான முண்டாகமாட்டாது. ஆனால்தோஷசகித நேத்திரத்திற்கு உண்டாகும். ஆகையால்[17] தோஷமுள்ள நேத்திரத்துக்குச்சாமர்த்தியம் அதிகமாயிருக்கிறது என்று நினைப்பதற்குத் திருஷ்டாந்தமில்லை. இந்தச்சங்கை சரியன்று. ஏனெனில், சிலருக்குப்பித்ததோஷத்தினால் ஓர்விதரோக முண்டாகும் போதுநான்கு மடங்குண்டாலும் திருப்தியாகிறதில்லை. பித்ததோஷத்தினால் ஜாடராக்கினியின்ஜீர்ணிக்கும் சக்திஅதிகப்படுகிறதுபோல் இருள் முதலியதோஷங்களால் மறைவிலிருக்கும் சர்ப்பத்தின் பிரத்தியக்ஷஞான

---

17. மறைவிலிருக்கும் பொருள் சுத்தநேத்திரத்திற்கே விளங்காமலிருக்க தோஷமுள்ள நேத்திரத்திற்கு விளங்குவதாகச்சொல்லுவது உலகவிருத்தம்.

முண்டாகத்தக்கதாய் நேத்திரத்தின் சக்தியும் விர்த்தியாகிறது. இவ்விதமாகப் புற்றுமுதலிய ஸ்தலங்களில் இருக்கப்பட்ட சர்ப்பம் அன்னியதா அதாவது வேறுபிரகாரமாய் எதிரிலிருக்கிற ரஜ்ஜுவில் தோற்றுதல் அன்னியதாக்கியாதி[18] என்னப்படும்.

138 சிந்தாமணிக்காரர்மதம்:—தோஷமுள்ள நேத்திரத்தினால் புற்றிலுள்ள பாம்புபார்க்கப்படும்பக்ஷத்தில் மத்தியிலுள்ள வேறு பதார்த்தங்களும் பார்க்கப்படக்கூடும். ஆயைால்மறைவிலிருக்கிற பொருள் நேத்திரத்தினால் அறியப்படமாட்டாது. ஆனால்தோஷமுள்ள நேத்திரத்துக்கு ரஜ்ஜுவானது தன்சொரூபத்தோடு விளங்குகிறதில்லை; சர்ப்பரூபமாக விளங்குகிறது. ஆகையால் ரஜ்ஜு[19] அன்னியதா அதாவது வேறுவிதமாய் சர்ப்பரூபமாக விளங்குவது அன்னியதாக்கியாதியெனப்படும்.

139 மேற்படிமதங்களின்கண்டனம்:— (1) அசத்கியாதிமதப்படி அசத்தின் தோற்ற முண்டாகும்பக்ஷத்தில் மலடிமகன் முயற்கொம்பு இவைகளும் தோன்றவேண்டும். அப்படித் தோன்றுமையால் அசத்கியாதிமதம் சரியன்று. (2) க்ஷணிகவிஞ்ஞானவாதியின் மதப்படி க்ஷணிகந்தோறும் மாறும்புத்தி சர்ப்பாகாரத்தைத்தரிக்கும்பக்ஷத்தில் க்ஷணத்துக்குமேல் அச்சர்ப்பந் தோன்றக்கூடாது. ஆனால் அனுபவத்தில் பிரமையுள்ளவரையில் அச்சர்ப்பந் தோன்றுகிறது. ஆகையால் ஆத்மக்கியாதிமதம் ஏற்றுக்கொளளத்தக்கதன்று. (3) நையாயிகவைசேஷிக மதஸ்தர்களின் அன்னியதாக்கியாதி மதம் சிந்தாமணிக்காரருடைய அன்னியதாக்கியாதி மதத்தினால் கண்டிக்கப்படுகிறது. (4) சிந்தாமணிக்காரருடையமதமும் ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. ஏனெனில் ஞானம் எப்போதும் ஞேயானுசாரமா யிருக்கிறது. இவ்விடத்தில் ஞேயமோ ரஜ்ஜு, ஞானமோ சர்ப்பம். இவ்விரண்டும் வெவவேறு யிருப்பதால் சிந்தாமணிக்காரருடைய அன்னியதாக்கியாதி மதமும்அங்கீகரிக்கததக்கதன்று.

---

18. இந்தமதத்தில் ஓரிடத்திலிருக்கிறவஸ்து வேறொரு இடத்தில்தோன்றுவதே பிராந்தி என்று சொல்லப்படுகிறது. சித்தாந்தத்திற் சொல்லிய அர்த்தாதியாஸ ஞானத்தியாஸ ரூப பிராந்தி இம்மதத்தில் அங்கீகரிக்கப்படவில்லை.

19. சிந்தாமணிக்காரருடைய மதத்தில் ஒரு வஸ்து வேறு ரூபமாய்த் தோன்றுகிறதே பிராந்தி என்று சொல்லப்படுகிறது. இது ஞானத்தியாஸம்.

140 அக்கியாதிலக்ஷணம்:— சாங்கியப்பிரபாகரர்களின் அபிப்பிராய மென்னவெனில், ரஜ்ஜுவிற்சர்ப்பப்பிரமை யுண்டாகும்போது நேத்திரம்| தன்விர்த்திமூலமாக ரஜ்ஜுவுடன் சம்பந்தப்பட்டு, 'இது' என்கிற ரஜ்ஜுவின் சாமானிய ஞானமுண்டாகிறது. சர்ப்பத்தின் ஸ்மரணையு முண்டாகிறது, "இதுசர்ப்பம்" என்பதில் இரண்டு ஞானங்களுள. ஒன்று "இது" என்னும் சாமானியப் பிரத்தியக்ஷஞானம், மற்றொன்று சர்ப்பத்தின் ஸ்மரணரூபஞானம். இவ்விதமாக "இது சர்ப்பம்" என்பதில் இரண்டு ஞானங்களிருந்தாலும் பிரமாதாவின் பயதோஷம் பிரமாணத்தின் இருள்தோஷம் இவைகளின் பலத்தினால் இவ்விரண்டு ஞானங்களுமுண்டானதாக விவேகமுண்டாகிறதில்லை. "இது" என்கிறரஜ்ஜுவின் சாமானியஞானம் யதார்த்தமாயிருந்தாலும் முன்பார்த்த சர்ப்பத்தின் ஸ்மரணரூபஞானமு முண்மையாயிருந்தாலும், "எனக்கிரண்டு ஞானங்களுண்டாயின, அவைகளில் ரஜ்ஜுவின் சாமானியப் பிரத்தியக்ஷ ஞானமொன்று, சர்ப்பத்தின் ஸ்மரணரூபஞானமொன்று" என்கிறஇவ்விவேக முண்டாகிறதில்லை. இவ்விரண்டு ஞானங்களின் அவிவேகத்துக்குச் சாங்கியப்பிரபாகர மதத்தில் பிரமையென்று பெயர். பிரமையுண்டாகிற இடங்களி லெல்லாம் இப்படியே அறியத்தக்கது.

சுவாமின், ரஜ்ஜு முதலியவைகளில் சர்ப்பாதிப் பிரமை யுண்டாகிறவிஷயத்தில் நான்கு மதங்களைக் கேள்விப்பட்டிருக்கிறேன்.[20] அவைகளில் உத்தமமானதைச் சொன்னால் நான் அதை அறிந்துகொள்ளுகிறேன்.

---

20. மேற்சொல்லிய நான்கு மதங்களைத்தவிர சத்கியாதி என்று பூர்வபக்ஷிகளின் ஐந்தாவது மதமுண்டு. இது வைஷ்ணவரது. இம்மதப்படி சுக்தியினுடைய அவயவங்களோடு இரஜதத்தின வயவமும் எப்போதுமிருக்கின்றது. சுக்தியின் அவயவம் சத்தியமாயிருப்பதுபோல் இரஜதத்தின் அவயவமும் சத்தியம் மித்தையன்று. தோஷத்தோடுகூடிய நேத்திரசம்பந்தத்தால் சித்தாந்தத்தில் அவித்தையில் பரிணமமாக அநிர்வசனீய இரஜதம் உண்டாவதுபோல் தோஷத்தோடுகூடிய நேத்திர சம்பந்தத்தால் இரஜதாவயத்தினின்று சத்தியரஜதமும் உண்டாகின்றது. சித்தாந்தத்தில அதிஷ்டான ஞானத்தால் அநிர்வசனீயஇரஜதம் நிவிர்த்தியாவதுபோல் சுக்திஞானததால் சத்திய இரஜதமும் தனது அவ்யவத்திற் றெம்சமாகிறது. இம்மதமும் தள்ளத்தக்கது. ஏனெனில் சுக்தி இரஜத திருஷ்டாந்தத்தினால் பிரபஞ்சம் மித்தை என்னும் அனுமதி உண்டாகின்றது. சத்கியாதிவாதத்தில் சுக்தியில் இரஜதம் சத்தியமாம். இதைத் திருஷ்டாந்தமாக வைத்துக்கொண்டு பிரபஞ்சத்தில் மித்தியாத்வ சித்திபெருவது முடியாது. இன்னும் இந்த மதத்தில் அநேக தோஷங்களுள. கண்டிக்கும் யுக்திகள் கடினமாகையால் இவ்விடத்தில் எழுதப்படவில்லை.

141 குருஉத்தரம்:—அக்கியாதிகண்டனம்:—சிஷ்யனே, இந்தநான்கு மதங்களுக்கும் வேறாக **அநிர்வசனீயக்கியாதி** யென்னும் ஐந்தாவது மதமொன்றுண்டு. முதற்சொன்ன அசத்கியாதி முதலிய மூன்றுமதங்களும் எப்படி நிராகரிக்கப்பட்டனவோ (139) அப்படியே அக்கியாதிமதமும் ஒப்புக்கொள்ளத்தக்கதல்ல. ஏனெனில் அக்கியாதிவாதிகளின் மதப்படி "இதுசர்ப்பம்" என்று ஞானமுண்டாகுமிடத்தில் "இது" என்பதுசாமானியப்பிரத்தியக்ஷ ஞானம். சர்ப்பமென்பது முன் பார்த்த சர்ப்பத்தின் ஸ்மரணரூப ஞானம். இப்போது முனபார்த்த சர்ப்பத்தின் ஸ்மரணையை அங்கீகரித்து எதிரிலிருக்கும் ரஜ்ஜுவில் சர்ப்பஞானமில்லை யெனச்சொல்லும்பக்ஷத்தில் (1) எதிரிலிருக்கும் ரஜ்ஜுவைக் கண்டு புருஷன்பயப்பட்டுஓடக்கூடாது. ஆனால்அனுபவத்தில் பயந்தோடுகிறான். ஆகையால் எதிரிலிருக்கும் ரஜ்ஜுவில்சர்ப்பம் தோன்றுகிறதே தவிர முன்பார்த்த சர்ப்பத்தின் ஸ்மரணையுண்டாகிறதில்லை. (2) இதுவுந் தவிர, ரஜ்ஜுவின் யதார்த்தஞான முண்டானபிறகு "எனக்குரஜ்ஜுவினிடத்தில் மித்தியாசர்ப்பம் தோன்றிற்று" என்றுபுருஷனுக்கு ஞானமுண்டாவதால் ரஜ்ஜுவினிடத்தில் சர்ப்பம் பிரதீதியாகிறதே தவிரமுன்பார்த்த சர்ப்பத்தின் ஸ்மரணையுண்டாகிறதில்லை. (3) மேலும் "இதுசர்ப்பம்" என்னுமிடத்தில் ஒரேஞானமுண்டாகிறதே யொழிய இரண்டு ஞானங்களுண்டாகிறதில்லை. ஒரேகாலத்தில் அந்தக்கரணத்தில் ஸ்மரணரூப ஞானமும் பிரத்தியக்ஷரூபஞானமும் உண்டாகமாட்டா. ஆகையால்அக்கியாதிமதமும் ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. இந்நான்கு மதங்களின்லக்ஷணங்களும் கண்டனமும் **விவரணம் ஸ்வாராஜ்யசித்தி** முதலிய கிரந்தங்களில் விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. யுக்திகள் கடினமா யிருப்பதால் ஜிஞ்ஞாசுவுக்குச் சுருக்கமாகச் சொன்னேன் விரிவா யெழுதவில்லை.

## அநிர்வசனீயக்கியாதிலக்ஷணம் (142—156):—

142. சித்தாந்தத்தில் அநிர்வசனீயக்கியாதி லக்ஷணமென்ன வெனில், அந்தக்கரணத்தின் விர்த்தி நேத்திராதிகள் மூலமாக வெளியே சென்று விஷயாகாரமாகிறது. அப்போது விஷயத்தின் ஆவரணம் நீங்கி விஷயந்தோன்றுகிறது. அதற்குப்பிரகாசமும் சாதகமாயிருக்கிறது. பிரகாசமன்றியில் பதார்த்தம் விளங்குகிறதில்லை. ரஜ்ஜுவினிடத்தில் சர்ப்பப்பிரமை யுண்டாகும்போது அந்தக்கரணத்தின் விர்த்தி நேத்திரமூலமாக வெளியே சென்று ரஜ்ஜுவுடன் சம்பந்தப்பட்டும் இருட்டு[21]

---

21. இருள் சப்தத்தால் மந்தாந்தகாரத்தைக் கிரகிக்கத்தக்கது. ஏனெனில் நல்ல வெளிச்சத்தில் ரஜ்ஜு தெரியாமற் போகாது. நல்ல இருட்டில்

[22]முதலிய தோஷங்களின் பிரதிபந்தத்தால் விர்த்தி ரஜ்ஜுவாகாரமாகிறதில்லை. ஆகையால் ரஜ்ஜுவின் ஆவரணம் நீங்குகிறதில்லை. இவ்விதமாக ஆவரணம் நீங்கும்பொருட்டு விர்த்தி சம்பந்தப்பட்டும் ரஜ்ஜுவின் ஆவரணம் நீங்காதபோது ரஜ்ஜுசைதன்னியத்திலிருக்கப்பட்ட அவித்தையில் க்ஷோபம் அதாவது கலக்கமுண்டாகி அவ்வவித்தைச் சர்ப்பாகாரப்பரிணாமத்தை யடைகிறது. அந்த அவித்தியா காரியமான சர்ப்பம் சத்தா இருக்கும்பக்ஷத்தில் அதுரஜ்ஜுஞானத்தினால் நிவிர்த்தியாகக்கூடாது; ஆனால் அனுபவத்தில் நிவிர்த்தியாகிறது. ஆகையால் சர்ப்பம் சத்தன்று. மேலும் அச்சர்ப்பம் அசத்தாக இருக்கும்பக்ஷத்தில் மலடிமகன்போல்தோன்றக்கூடாது. ஆனால் அனுபவத்தில் தோன்றுகிறது. ஆகையால் அது அசத்துமன்று: ஆனாலோசதசத்துக்கு[23] விலக்ஷணமான அநிர்வசனீயமாயிருக்கிறது. இவ்விதமாகவே கிளிஞ்சில் முதலியவைகளில் வெள்ளிமுதலியவைகளும் அநிர்வசனீயமாய்த் தோன்றுகின்றன. இந்தஅநிர்வசனீயத்தின் கியாதிஅதாவது பிரதீதியும்வர்ணனையும் அநிர்வசனீயக்கியாதி என்னப்படும்.

143. சர்ப்பஞானமும் அவித்தியாபரிணாமம்:—எப்படிச்சர்ப்பம் அவித்தியாபரிணாம (142) மாகவிருக்கிறதோ அப்படியே சர்ப்பத்தின் ஞானரூபவிர்த்தியும் அவித்தியாபரிணாமமாக விருக்கிறது, அந்தக்கரணத்தின் பரிணாமமாகவில்லை. ஏனெனில், ரஜ்ஜுஞானத்தால் சர்ப்ப

---

அதிஷ்டானத்தின் "இது" என்கிற சாமானிய ஞானமன்றியிலும் விசேஷ அஞ்ஞானமன்றியிலும் அத்தியாஸ முண்டாகமாட்டாதென்று இரண்டாவது தரங்கத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. மந்தாந்தகாரத்தில் இவ்விரண்டும் இருப்பதால் மந்தாந்தகாரமே கிரகிக்கத்தக்கது.

22. முதலிய சப்தத்தால் நேத்திரங்களின் மந்தாதிதோஷங்கள் கிரகிக்கத்தக்கன.

23. சத்தைக்காட்டிலும் விலக்ஷணமானது அசத்து. ஆனதால் சத்துக்கு விலக்ஷணம் அனிர்வசனீய மென்று சொல்வது விரோதம். அசத்துக்கு விலக்ஷணம் சத்தாயிருக்க அநிர்வசனீய மென்று சொல்லுதல் விரோதம். சதசத்துக்கு வேறான மூன்றாவது பதார்த்தமில்லாததினால் அநிர்வசனீய சப்தம் ஏற்றுக்கொள்ளத்தக்கதல்ல. இதற்குச்சமாதானம்:— மூன்று காலத்திலும் பாதிக்கப்படாதது சத்தெனப்படும். இதற்கு விலக்ஷணமென்பதால் பாதிக்கத்தக்கதென்று ஏற்படுகிறது. ஸ்வரூபமில்லாத மலடிமகன் முதலியவை அசத்தெனப்படும். இதற்கு விலக்ஷணமென்றால் ஸ்வரூபமுண்டென்று ஏற்படுகிறது. ஆகையால் பாதிக்கப்படத்தக்கதாயும் ஸ்வரூபமுள்ளதாயு மிருக்கிற பதார்த்தம் அநிர்வசனீய மென்னப்படும்.

ம் பாதிக்கப்படுவதுபோல் சர்ப்பஞானமும் பாதிக்கப்படுகிறது. அந்தக் கரணத்தின் பரிணாமமாயிருக்கும்பக்ஷத்தில் சர்ப்பஞானம் பாதிக்கப்படக் கூடாது. ஆகையால் சர்ப்பம்போல் சர்ப்பஞானமும் அவித்கியாகாரிய மாயும் சத்து அசத்து இவைகளுக்கு விலட்சணமான அநிர்வசனீயமாயும் இருக்கிறது. ஆனால் சர்ப்பம் ரஜ்ஜு-உபஹித சேதனத்திலிருக்கப்பட்ட அவித்தையின் தமோகுணத்தின் பரிணாமமாக இருக்கிறது. விர்த்திஞானம் சாக்ஷிசேதனத்திலிருக்கப்பட்ட அவித்தையின் சத்துவகுணபரிணாமமாக விருக்கிறது. எப்போது ரஜ்ஜு-உபஹிதசேதனத்தின் அவித்தை சர்ப்பாகாரமாக ஆகிறதோ அப்போது சாக்ஷியை ஆசிரயித்த அவித்தை ஞானாகாரமாகிறது. ஏனெனில் எக்காரணத்தினால் ரஜ்ஜு-உபஹிதசேதனத்தை யாசிரயித்த அவித்தையில் கலக்கமுண்டாயிற்றோ[24] அக்காரணத்தினாலேயே சாக்ஷியை யாசிரயித்த அவித்தையிலுங்கலக்கமுண்டாகிறது. ஆகையால் பிரமையுண்டாகும்போது சர்ப்பாதி விஷயங்களும் அவைகளின் ஞானமும் ஒரேசமயத்திலுண்டாகின்றன. மேலும் ரஜ்ஜு-முதலிய அதிஷ்டானங்களின் ஞானத்தினால் ஒரேசமயத்தில் அவை லயமாகின்றன. இவ்விதமாகச்சர்ப்பாதிப்பிரமையில் வெளியிலிருக்கும் அவித்தியாம்சம் சர்ப்பாதி விஷயங்களுக்கு உபாதான காரணமாயிருக்கிறது.[25] சாக்ஷிசேதனத்தை யாசிரயித்து உள்ளே யிருக்கும் அவித்தியாம்சம் சர்ப்பாதி விஷயங்களின் ஞானரூப விர்த்திக்கு உபாதான காரணமாயிருக்கிறது.

144. **சர்ப்பம் சாக்ஷிபாஸ்யம்:—** சொப்பனத்தில் சாக்ஷியை யாசிரயித்த அவித்தையின் தமோகுணம்சம் விஷயரூப பரிணாமத்தையும் சத்துவகுணம்சம் ஞானரூப பரிணாமத்தையும் அடைகின்றன. ஆகையால் சொப்பனத்தில் உள்ளே யிருக்கும் அவித்தையே விஷயத்துக்கும் ஞானத்துக்கும் உபாதானகாரணமாயிருக்கிறது. இக்காரணத்தினால் வெளியே யிருக்கும் ரஜ்ஜு-சர்ப்பாதிகளும் உள்ளேயிருக்கும் சொப்பன பதார்த்தங்களும் சாக்ஷிபாஸியங்களென்று சொல்லப்படுகின்றன. அவித்தையின் விர்த்திமூலமாக எதைச்சாக்ஷீ பிரகாசிப்பிக்கிறதோ அது **சாக்ஷிபாஸ்ய** மென்று சொல்லப்படும்.

145. **விவர்த்தபரிணாமங்களின்லக்ஷணம்:—** ரஜ்ஜு-முதலியவைகளில் அநிர்வசனீய சர்ப்பாதிகளும் அவைகளின் ஞானமும்

---

24. உபாதானம் காரியாபிமுகமாகுதல் க்ஷோபம் எனப்படும்.

25. உதாரணம்:— கடத்துக்கு மண் உபாதான காரணம். குயவன் நிமித்தகாரணம்.

பிரமையென்றும் அத்தியாஸமென்றும் சொல்லப்படும். இந்தப்பிரமை அவித்தையின் பரிணாமமாயும் சேதனத்தின் விவர்த்தமாயும் இருக்கிறது. உபாதானகாரணத்துக்குச்சமானமான சுபாவத்துடனும் வேறு சொரூபத்துடனுங்கூடியது **பரிணாம** மெனப்படும். அதிஷ்டானத்துக்கு விபரீதமான சுபாவத்துடனும் வேறு சொரூபத்துடனுங்கூடியது **விவர்த்த** மென்னப்படும். உபாதானகாரணம் அவித்தை. இது அநிர்வசனீயம். இப்படியே ரஜ்ஜுவில் சர்ப்பமும் அதின் ஞானமும் அநிர்வசனீயமாயிருக்கின்றன. ஆகையால் ரஜ்ஜுவில் சர்ப்பமும் அதன் ஞானமும் அவித்தைக்குச்சமானமான சுபாவத்துடனும், வேறு சொரூபம் அதாவது அவித்தைக்கு வேறான ஆகாரத்துடனுங்கூடியிருப்பதால் இவை அவித்தையின் பரிணாமமாயிருக்கின்றன. மேலும் ரஜ்ஜுஅவச்சின்ன அதிஷ்டான சேதனம் சத்ரூபமாக இருக்கிறது. சர்ப்பமும் அதின் ஞானமும் சத்துக்கு விலக்ஷணமாயிருக்கின்றன. ஆகையால் ரஜ்ஜுவில் சர்ப்பமும் அதின் ஞானமும் அதிஷ்டானசேதனத்துக்கு விபரீதச்சுபாவத்துடன் கூடியிருக்கின்றன; சேதனத்துக்கு வேறான ஆகாரத்துடனுங்கூடியிருக்கின்றன. ஆகையால் ரஜ்ஜுவில் தோன்றும் சர்ப்பமும் அதின் ஞானமும் அவித்தியாபரிணாமமாயும்[26] சேதன விவர்த்தமாயுமிருக்கின்றன.

---

26 ரஜ்ஜுவில் சர்ப்பப்பிராந்தி உண்டாகும் போது, (1) முதலில் சர்ப்பாதி சம்ஸ்காரசகித புருஷனுடைய திமிராதிதோஷசகித நேத்திரத்துக்கும் ரஜ்ஜுவுக்கும் சம்பந்தமுண்டாகிறது. அப்போது ரஜ்ஜு விளங்குகிறதில்லை. (2) பிறகு, நேத்திர மூலமாக ரஜ்ஜுவை அடைந்த அந்தக்கரணம் "இது" என்னும் பரிணாமத்தை அடைகிறது. (3) பிறகு இதமாகாரவிருத்தியிலுள்ள சேனத்திலிருக்கிற அவித்தையில் க்ஷோபம் உண்டாகிறது. உபாதானம் காரியாபிமுகமாகுதலே க்ஷோபமாம். (4) பிறகு அவித்தையின் தமோகுணாம்சம் சர்ப்பாகார பரிணாமத்தையும் சத்வகுணாம்சம் சர்ப்பஞானாகார பரிணாமத்தையுமடைகின்றன. சர்ப்பமும் ஞானமும் அவித்தையின் பரிணாமமாயும் சேதனத்தின் விவர்த்தமாயுமிருக்கின்றன. ஒரே புருஷன் தகப்பனை அபேக்ஷித்து பிள்ளையாகவும், பாட்டனை அபேக்ஷித்து பேரனாகவுமிருப்பதுபோல் ஒரே சர்ப்பம் அவித்தையை அபேக்ஷித்து பரிணாமமாகவும், சேதனத்தை அபேக்ஷித்து விவர்த்தமாகவுமிருக்கிறது. பாலும் தயிரும் வியாவகாரிகமாகிற (277) ஒரேசத்தை. இவைகளின் சுவபாவங்கள் வெவ்வேறு. பால் தித்திப்பு தயிர் புளிப்பு. ஆகையால் தயிர் பாலின் பரிணாமம். இதுபோல் சர்ப்பமும் அவித்தையும் பிராதிபாஸிக (278) அல்லது வியாவகாரிக சத்தையாக இருக்கின்றன. அவித்தைக்கு ரூபமில்லை. சர்ப்பத்துக்கு ஸ்வரூபமிருக்கிறது. ஆகையால் சர்ப்பம் அவித்தையின் பரிணாமமாகிறது. சத்தையும் ஸ்வரூபமும் பேதப்படும்போது விவர்த்தமென்னப்படும். சேதனம் பாரமார்த்திகசத்தை (279), சர்ப்பம் அப்படியல்ல. ஆகையால் இரண்டுக்கும் சத்தாபேதம் சித்திக்கிறது. சேதனம் பாதிக்கப்படாதசத்தை, சர்ப்பம் பாதிக்கப்படும் சத்தை. ஆகையால் இரண்டின் ஸ்பாவங்களும் வெவ்வேறு. ஆகையால் சர்ப்பம் சேதனத்தின் விவர்த்தமாகிறது.

146. இவைகளின் அதிஷ்டானம்: — நிவிர்த்தி: — மித்தியா சர்ப்பத்துக்கு அதிஷ்டானம் ரஜ்ஜு-உபஹித சேதனமேதவிர ரஜ்ஜுவன்று. ஏனெனில் சர்ப்பம்போல ரஜ்ஜுவுங் கல்பிதமாயிருக்கிறது. ஒருகல்பிதவஸ்து வேறோர் கல்பிதவஸ்துவுக்கு அதிஷ்டானமாகமாட்டாது. ஆகையால் ரஜ்ஜு-உபஹிதசேதனமே அதிஷ்டானமேதவிர ரஜ்ஜுவன்று. மேலும் ரஜ்ஜுவிசிஷ்டசேதனத்தை அதிஷ்டானமாகச்சொல்லும்பக்ஷத்தில் ரஜ்ஜு, சேதனம் இவ்விரண்டும் அதிஷ்டானமாகும். ரஜ்ஜு அதிஷ்டானமாகா தென்று மேலே சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் ரஜ்ஜு-உபஹிதசேதனமே அதிஷ்டானமேதவிர ரஜ்ஜுவிசிஷ்டசேதனம் அதிஷ்டானமன்று. இப்படியே சர்ப்பஞானத்துக்கும் சாக்ஷீசேதனம் அதிஷ்டானமாயிருக்கிறது. இவ்விதமாகப் பிரமை யுண்டாகிற இடத்தில் விஷயத்துக்கும் அதின்ஞானத்துக்கும் உபாதிபேதத்தால் அதிஷ்டானம் வேறுபடுகிறது, ஒன்றாக இருக்கிறதில்லை. ரஜ்ஜுவென்றறியாமையே, அவித்தையிற்கலக்கமுண்டாவது மூலமாக சர்ப்பத்துக்கும் அதின் ஞானத்துக்கும் காரணமாயிருப்பதுபோல, ரஜ்ஜுவின் ஞானம் அவைகளின் நிவிர்த்திக்குக் காரணமாயிருக்கிறது.

147 ஆக்ஷேபம்:—ரஜ்ஜுஞானத்தால் சர்ப்பம் நிவிர்த்தியாகமாட்டாது. ஏனெனில் மித்தியாவஸ்துவுக்கு எது அதிஷ்டானமோ, அந்தஅதிஷ்டானத்தின் ஞானத்தினால் மித்தை நிவிர்த்தியாகு மென்பது அத்துவைதவாதிகளின் சித்தாந்தம். மித்தியாசர்ப்பத்துக்கு அதிஷ்டானம் ரஜ்ஜு-உபஹிதசேதனமே தவிர ரஜ்ஜுவன்றென முந்தின பிரிவிற் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் ரஜ்ஜுஞானத்தால் சர்ப்பம் நிவிர்த்தி யாகமாட்டாது.

148. சமாதானம்:— ரஜ்ஜுமுதலிய ஜடபதார்த்தங்களின் ஞானம் அந்தக்கரணத்தின் விர்த்திரூபமாக இருக்கிறது. விர்த்தியின் பிரயோஜனம் ஆவரணத்தை நீக்குவதே. இந்த ஆவரணம் அஞ்ஞானத்தின் சக்தியாயிருக்கிறது. ஆகையால் ஆவரணம் ஜடத்தை யாசிரயிக்காமல் ஜடத்துக்கு அதிஷ்டானமான சேதனத்தை யாசிரயித்திருக்கிறது. ஆகையால் அந்தக்கரணத்தின் விர்த்தி ரஜ்ஜுவுக்குச்சமான ஆகாரத்தை அடைகிறதினால் ரஜ்ஜு-அவச்சின்னசேதனத்தின் ஆவரணமே நீங்குகிறது. விர்த்தியிலுள்ள சிதாபாசன் ரஜ்ஜுவைப் பிரகாசிப்பிக்கிறது. சேதனம் சுயம்பிரகாசமாயிருக்கிறது. அது பிரகாசிக்க ஆபாசனுடைய உதவி வேண்டியதில்லை. இந்த விஷயம் விவரமாக இத்தரங்கத்தில் பின்னால் (205-முதல்) சொல்லப்படும். இவ்விதமாகச் சிதாபாசனுடன் கூடிய அந்தக்

காரணத்தின் விர்த்திரூப ஞானத்திலிருக்கிற விர்த்திபாகம் சேதனத்தின் ஆவரணத்தை நீக்குகிறது; சிதாபாஸபாகம் ரஜ்ஜுவைப் பிரகாசிப்பிக்கிறது. ஆகையால் விர்த்திஞானம் கேவலம் ஜடமான ரஜ்ஜுவை விஷயமாக்குகிறதில்லை. ஆனால் அதிஷ்டானசேதனத்துடன் கூடிய ரஜ்ஜு ஆபாசனுடன் கூடிய விர்த்திக்குவிஷயமாகிறது. இக்காரணத்தால் சித்தாந்தக்கிரந்தத்தில் "அந்தக்கரண ஜன்யவிர்த்திஞானம் பிர்மத்தை விஷயமாக்குகிறது" என்றெழுதப்பட்டிருக்கிறது. இந்தப்பிரகாரமாக ரஜ்ஜுஞானத்தால் ஆவரணம்நீங்கிச்சர்ப்பத்துக்கு அதிஷ்டானமான ரஜ்ஜுஅவச்சின்னசேதனமும் தன்பிரகாசத்துடன் விளங்குகிறது. ஆகையால் ரஜ்ஜுவின் ஞானமே சர்ப்பத்தின் அதிஷ்டான ஞானமாயிருக்கிறது. ஆனதால் ரஜ்ஜுஞானத்தால் சர்ப்பம் நிவிர்த்தியாகும்.

149. ஆக்ஷேபம்:—மேற்சொல்லியபடி ரஜ்ஜுஞானத்தினால் சர்ப்பம் நிவிர்த்தியானாலும் சர்ப்பஞானம் நிவிர்த்தியாகமாட்டாது. ஏனெனில் சர்ப்பத்துக்கு அதிஷ்டானம் ரஜ்ஜுஅவச்சின்ன சேதனம் (146). சர்ப்பஞானத்துக்கு அதிஷ்டானம் சாக்ஷீசேதனம். முன்சொன்னபடி ரஜ்ஜுஞானத்தால் ரஜ்ஜுஅவச்சின்ன சேதனமே விளங்குகிறதேதவிர சாக்ஷீசேதனம் விளங்குகிறதில்லை. ஆனதால் ரஜ்ஜுஞான முண்டானாலுங்கூடச் சர்ப்பஞானத்துக்கு அதிஷ்டானமான சாக்ஷீசேதனம் அறியப்படாம லிருக்கிறது. அதிஷ்டானம் அறியப்படாமலிருக்கும்போது கல்பிதம் நிவிர்த்தியாகமாட்டாது. அதிஷ்டானத்தை அறிவதினால் தான் கல்பிதம் நிவிர்த்தியாகும். ஆகையால் ரஜ்ஜுஞானத்தால் சர்ப்பஞானம் நிவிர்த்தியாகமாட்டாது.

150 சமாதானம்:—ஞானம் விஷயத்துக்காதீனமாயிருக்கிறது. விஷயமாகிற சர்ப்பம் நிவிர்த்தியாகிறதினால் சர்ப்பஞானத்துக்கு விஷயமில்லாமற்போகிறது. ஆதலால் சர்ப்பஞானமும் ரஜ்ஜுஞானத்தால் நிவிர்த்தியாய்விடுகிறது.

151 ஆக்ஷேபம்:—அதிஷ்டானஞானமன்றியில் கல்பிதம் நிவிர்த்தியாகமாட்டாது. சர்ப்பத்தின் ஞானமுங்கல்பிதம். அதற்கு அதிஷ்டானம்சாக்ஷீசேதனம். அந்த அதிஷ்டானஞானமன்றியில் கல்பிதசர்ப்பத்தின் ஞானம்நிவிர்த்தியாகமாட்டாது.

152 சமாதானம் (152—154):— நிவிர்த்தி இருவகையாம். ஒன்று[27] அத்தியந்தநிவர்த்தி, மற்றொன்று காரணத்தில் லயமாகுதல்.

---

27. கடம் உடைந்து மண்ணாகப்போகுதல் ஒருவித நிவிர்த்தி. வஸ்திரம் தனக்குக் காரணமான நூலுடன் எரிந்துபோகுதல் மற்றொருவிதமான அத்தியந்த நிவிர்த்தி.

காரணத்துடன் காரியமும் நிவிர்த்தியாகுதல் அத்தியந்த நிவிர்த்தி யெனின்னப்படும். எல்லா கல்பிதவஸ்துக்களுக்குங்காரணம் அதிஷ்டானத்தை ஆசிரயித்துக் கொண்டிருக்கிற அஞ்ஞானமாயிருக்கிறது (290). அதிஷ்டானஞானத்தினால் அஞ்ஞானமும் கல்பிதகாரியங்களும் நிவிர்த்தியாகின்றன. ஆனால் காரணத்தில் லயமாகிற நிவிர்த்தி அதிஷ்டானஞானமன்றியிலும் உண்டாகும். சுஷுப்தியிலும் பிரளயத்திலும் சகல பதார்த்தங்களும் அதிஷ்டானஞானமன்றியில் அஞ்ஞானத்தில் லயமடைகின்றன. அப்போது சர்வபதார்த்தங்களின் லயத்துக்குக்காரணம் போகத்துக்குக் காரணமான கர்மாபாவமாயிருக்கிறது. இதுபோல் அதிஷ்டானசாக்ஷியின் ஞானமன்றியிலும் சர்ப்பஞானம் நிவிர்த்தியாகிறது. அப்போது சர்ப்பஞானத்துக்கு விஷயமான சர்ப்பத்தின அபாவமே சர்ப்பஞானத்தின் நிவிர்த்திக்குக் காரணமாயிருக்கிறது. இவ்விதமாகரஜ்ஜு ஞானத்தால்சர்ப்ப நிவிர்த்தியும் சர்ப்பஞானத்துக்கு விஷயமான சர்ப்பாபாவத்தால் சர்ப்பஞானமும் நிவிர்த்தியாகின்றன.

153 அல்லது, சர்ப்பமும் அதின்ஞானமும் இரண்டும் ரஜ்ஜுஞானத்தினாலேயே நிவிர்த்தியாகும். எப்படியெனில், ரஜ்ஜு பிரத்தியக்ஷமாக அறியப்படும்போது அந்தக்கரணத்தின் விர்த்தி நேத்திரமூலமாக வெளியே சென்று ரஜ்ஜுவை யடைந்து அதற்குச்சமானமான ஆகாரத்தைத்தரிக்கிறது. ஆனதால் ரஜ்ஜுபிரத்தியக்ஷமாக அறியப்படும்போது விர்த்தியுபகிதசேதனமும் ரஜ்ஜுஉபஹிதசேதனமும் இரண்டும் ஒன்றாய்ப் போகின்றன, பேதப்படுகிறதில்லை. இதற்குக் காரணம்:—"சொரூபத்தினால் சேதனத்துக்கு யாதொருபேதமுமில்லை. ஆனால் உபாதிபேதத்தால் சேதனத்துக்குப் பேதமுண்டாகிறது. விர்த்தியுபஹிதசேதனத்துக்கும் ரஜ்ஜுஉபஹிதசேதனத்துக்கும் பேதத்தை யுண்டு பண்ணுகிற உபாதிகள் விர்த்தியும் ரஜ்ஜுவுமே. இந்தவிர்த்தியும் ரஜ்ஜுவும் வெவ்வேறிடங்களிலிருக்கும்போது உபாதியுடன்கூடிய சேதனத்துக்குப்பேதமுண்டாகிறது. இரண்டுஉபாதிகளும்ஒரேயிடத்தி லிருக்கும்போது உபஹிதசேதனத்துக்குப்பேத முண்டாகிறதில்லை." இப்படி வேதாந்த பரிபாஷாதிக் கிரந்தங்களில் எழுதபட்டிருக்கிறது. வெவ்வேறிடங்களி லிருக்கிறஉபாதிகளாலேயே உபஹிதசேதனத்துக்குப்பேதமுண்டாகிறது. ஒரே யிடத்தில் இரண்டு உபாதிகளுமிருந்தாலும் அவைகளாலுபஹிதமானசேதனம் ஒன்றாகவே யிருக்கிறது. இவ்விதமாக ரஜ்ஜுபிரத்தியக்ஷமாக அறியப்படுங் காலத்தில்ரஜ்ஜுஉபஹிதசேதனமும் விர்த்தியுபஹிதசேதனமும் ஒன்றாயிருக்கின்றன. அப்போது சாக்ஷிசேதனமே விர்த்தியுபஹித சேதனமாயிருக்கிறது. ஏனெனில் அந்தக்கரணத்திலும் அதன்விர்த்தியிலும் இருந்துகொண்டு அவைகளைப் பிரகாசிப்பி

க்கிற சேதனமாத்திரத்துக்குச்சாக்ஷீயென்று பெயர். இவ்விதமாக ரஜ்ஜுவின் பிரத்தியக்ஷஞானசமயத்தில் சாக்ஷீசேதனமும் ரஜ்ஜுஉபஹித சேதனமும் ஒன்றாய் விடுகின்றன ரஜ்ஜுஉபஹிதசேதனம் ரஜ்ஜுஞானத்தால் விளங்குகிறது. ரஜ்ஜுஉபஹிதசேதனத்துக்கு வேறாகாத சாக்ஷி சேதனமும் ரஜ்ஜுஞானத்தால் விளங்குகிறது. இவ்விதமாக ரஜ்ஜுஞானசமயத்தில் அதிஷ்டானசாக்ஷீவிளங்குகிறதினால் கல்பித சர்ப்பஞானமும் நிவிர்த்தியாகும்.

154 இதுவுமன்றி, கூடஸ்ததீபிகையில்வித்தியாரண்யஸ்வாமிகள் சொல்லியிருக்கிறதாவது:— ஆபாஸஸஹித அந்தக்கரணத்தின் விர்த்தி இந்திரியமூலமாக வெளியே சென்று கடாதி விஷயங்களைப் பிரகாசிப்பிக்கிறது. கடாதிவிஷயம், ஆபாஸசகித விர்த்திரூப விஷயத்தின் ஞானம், ஆபாஸஸஹித அந்தக்கரணரூப ஞாதா, இம்மூன்றையுஞ் சாக்ஷீ பிரகாசிப்பிக்கிறது. இதற்கர்த்தமென்னவெனில் "இதுகடம்" என்கிறவாக்கியத்தில் ஆபாஸசகித விர்த்தியால்கடம்மாத்திரம பிரகாசமாகிறது. "நான்கடத்தை அறிகிறேன்" என்கிற வாக்கியத்தில் நான் என்கிற சப்தத்துக்கு அர்த்தமாகிற ஞாதா, ஞேயமாகிற கடம், இதின்ஞானம் இம்மூன்றையும் சாக்ஷீ பிரகாசிப்பிக்கிறது. (ஞாதா, ஞானம், ஞேயம், மூன்றும் திரிபுடிஎன்னப்படும்) இவ்விதமாகச் சகலத்திரிபுடிகளையும் சாக்ஷீ பிரகாசிப்பிக்கிறது. சாக்ஷீ தான் அஞ்ஞாதமாயிருந்தால் திரிபுடியின் ஞானம் சாக்ஷியா லுண்டாகமாட்டாது. ஆகலால் சகல திரிபுடிஞானகாலத்திலும் சாக்ஷியின் ஞானம் இருந்துக்கொண்டே யிருக்கிறது. இந்தச் சாக்ஷிஞானத்தால் சர்ப்பஞானம் நிவிர்த்தியாகிறது.

155 146-வது பிரிவில் சர்ப்பத்துக்கும் அதன்ஞானத்துக்கும் அதிஷ்டானங்கள் வெவ்வேறாகச்சொன்னதில் இவ்வளவு ஆக்ஷேப சமாதானங்கள் உண்டாயின. இன்னும் வேறுஅனேகங்களுமுள. ஆகையால் சர்ப்பத்துக்கும் அதின் ஞானத்துக்கும் அதிஷ்டானம் ஒன்றுதானென்னும் பக்ஷம் இனிக்கூறப்படும். வெளியேயிருக்கும் ரஜ்ஜுசேதனம் சர்ப்பத்துக்கும் அதின்ஞானத்துக்கும் அதிஷ்டானம் என்று சொல்லக்கூடாது. ஏனெனில் எவ்வளவு ஞானம் உண்டாகிறதோ அவ்வளவும் பிரமாதா அல்லது சாக்ஷியை ஆசிரயித்துக் கொண்டிருக்கிறது. ஞானம் வெளியேயுள்ள ரஜ்ஜுசேதனத்தை ஆசிரயிக்கமாட்டாது. இதுபோல் சர்ப்பம் சர்ப்பஞானம் இவைகளுக்கதிஷ்டானம் அந்தக்கரண உபஹிதசாக்ஷீ சேதனமென்று சொல்லும்பக்ஷத்தில் சரீரத்துக்குள் அந்தக்கரணத்தினிடத்தில் சர்ப்பம் தோன்றவேண்டும். வெளியேயுள்ள ரஜ்ஜுவினிடத்தில் சர்ப்பம் தோன்றக்கூடாது. ஆனால் அனுபவத்தில் ரஜ்ஜுவினிடத்தில்

தான் தோன்றுகின்றது. உள்ளேதோன்றும் சர்ப்பம் மாயாபலத்தால் வெளியே தோன்றுவதாகச் சொல்லும்பக்ஷத்தில் ஆத்மக்யாதிமதம் சித்திக்கும். (ஆனால் இந்தமதம் 139-வதுபிரிவில் கண்டிக்கப்பட்டிருக்கிறது). இவ்விதமாக, ரஜ்ஜூபஹிதசேதனம் ஞானத்துக்கு அதிஷ்டானமன்று. அந்தக்கரணஉபஹிதசேதனம் சர்ப்பத்துக்கு அதிஷ்டானமன்று: ஆதலால்சர்ப்பம் அதின்ஞானம் இவைகளுக்கதிஷ்டானம் ஒன்றாகாவிட்டாலும் ரஜ்ஜூவை யடைந்த அந்தக்கரணத்தின் "இது" என்கிற ஆகாரத்துடன் கூடிய விர்த்தியிலுள்ள சேதனத்தை யாசிரயித்துக்கொண்டிருக்கிற அவித்யை சர்ப்பாகாரஞானாகார பரிணாமங்களை யடைகிறது. உபஹிதசேதனத்திலிருக்கிற அவித்யையின் தமோகுணாம்சம் சர்ப்பத்துக்கும் சத்துவகுணாம்சம் சர்ப்பஞானத்துக்கும் உபாதானகாரணங்களா யிருக்கின்றன. சர்ப்பம் சர்ப்பஞானம் இவைகளுக்கு விர்த்தியுபஹிதசேதனம அதிஷ்டானமாயிருக்கிறது. விர்த்தி வெளியே ரஜ்ஜுவினிடத்தில் செல்லுவதால் விர்த்தியுபஹிதசேதனமும் வெளியே இருக்கிறது. ஆதலால் அது சர்ப்பத்துக்கு ஆசிரயமாக இருக்கிறது. அந்தக்கரணச் சொரூபம் எவ்வளவோ அவ்வளவு தான் சாக்ஷீ சொரூபம். சரீரத்துக்குள்ளிருக்கிற அந்தக்கரணமே விர்த்திஸ்வரூப பரிணாமத்தை யடைகிறது. ஆகையால் விர்த்தியுபஹிதசேதனம் சாக்ஷியாயிருக்கிறது. ஆனதால் ஞானத்துக்கு ஆசிரயமாயிருக்கிறது. ரஜ்ஜூ பிரத்தியக்ஷமாகும்போது ரஜ்ஜூசேதனமும் விர்த்தி சேதனமும் இரண்டும் ஒன்றாவதால் ரஜ்ஜூ ஞானத்தினால் சர்ப்பமும் அதின் ஞானமும் நிவர்த்தியாகக்கூடும்.

156. ஒரே ரஜ்ஜுவினிடத்தில் பத்துப் பேர்களுக்குள் சிலருக்கு சர்ப்பம் சிலருக்குத்தடி, சிலருக்குப் பூமாலை, சிலருக்குப் பூமியின் வெடிப்பு, சிலருக்கு நீர்த்தாரை, இவ்விதமாக வெவ்வேறான பிரமை தோன்றுகிறதுண்டு. அல்லது எல்லாருக்கும் சர்ப்பமே தோன்றுவதுண்டு. ரஜ்ஜுவின் சாக்ஷாத்கார ஞானமுண்டானவுடன் அவரவர்களுக்கு விர்த்திசேதனத்திலுண்டாயிருந்த பிரமை நீங்கி விடுகிறது. எவனுக்கு ரஜ்ஜுஞானமுண்டாகவில்லையோ அவனுக்குப் பிரமை நீங்குகிறதில்லை. ஆகையால் விர்த்திசேதனமே கல்பிதபிரமைக்கு அதிஷ்டானமாயிருக்கிறதே தவிர ரஜ்ஜு முதலிய விஷய உபஹித சேதனம் அதிஷ்டானமாகவில்லை. ரஜ்ஜு உபஹித சேதனத்தையே சர்ப்ப தண்டாதிகளுக்கு அதிஷ்டானமாகச் சொல்லும் பக்ஷத்தில் பத்துப்பேர்களுக்கும் தோன்றும் பொருள் ஒன்றாகவே யிருக்கவேண்டும். ஆனால் அப்படி அனுபவத்தி லிருப்பதாய் நியாயங்காணோம். ஆனபடியால் எவனுடைய விர்த்திசேதனத்தில் எந்தப்பொருள் கல்பிதமாகிறதோ அது அவனுக்கு மட்டும் தோன்றுகிறதே தவிர வேறொருவருக்குத் தோன்றுகிறதில்லை. இவ்விதமாக வெளியிலுள்ள

கார்யுபாதிகளுக்கும் அவைகளின் ஞானத்துக்கும் விர்த்தியுபஹிதசாக்ஷீ அதிஷ்டானமாயிருக்கிறது. சொப்பனபதார்த்தங்களுக்கும் அவைகளின் ஞானத்துக்குங்கூட அந்தக்கரணஉபஹிதசாக்ஷியே அதிஷ்டானமாயிருக்கிறது. இவ்விதமாக சதசத்துகளுக்குவிலக்ஷணமாயும் அநிர்வசனீயமாயு மிருக்கிற அவித்தையின்பரிணாமமான அநிர்வசனீய சர்ப்பாதிகளின் கியாதி அதாவது பிரதீதியும் கதனமும் அநிர்வசனீயக்கியாதியென்று சொல்லப்படும்.

157. **கேள்வி**:— சுவாமின், மித்தையாகத்தோன்றுகிற இந்த அபாரமான ஜகத்துக்கு ஆதாரமென்ன? அதைச்சொல்லியருள்க.

158. **உத்தரம்**:— சிஷனே, உன்னுடைய உண்மையான பிர்ம்மஸ்வரூபத்தை நீயறியாததினால் உனக்கு மித்தையான ஜகத்துத்தோன்றுகிறது. ஆனதால் ஜகத்துக்காதாரமும் அதிஷ்டானமும் நீயே. ரஜ்ஜுவை யறியாமையால் மித்தையான சர்ப்பம் தோன்றுகிற விடத்தில் மித்தையான சர்ப்பத்துக்கு ரஜ்ஜு ஆதாரமாயும் அதிஷ்டானமாயுமிருக்கிறது. மித்தியாசர்ப்பத்துக்கு அதிஷ்டானம் சித்தாந்தமாகிற இரண்டாவது பக்ஷத்தில் விர்த்தியுபஹிதசேதனமாயும் பிரதமபக்ஷத்தில் ரஜ்ஜு உபஹிதசேதனமாயும் இருந்தாலும் எந்தப்பக்ஷத்திலும் ரஜ்ஜு அதிஷ்டானமாகாவிட்டாலும் பிரதமபக்ஷத்தில் அதிஷ்டானசேதனத்துக்கு ரஜ்ஜு உபாதியாயிருப்பதால் ஸ்தூலதிர்ஷ்டிக்கு ரஜ்ஜுவே யதிஷ்டானமாகச்சொல்லப்படுகிறது. மித்தியாசர்ப்பத்துக்கு ரஜ்ஜு அதிஷ்டானமும் ஆதாரமுமாயிருப்பதுபோல் மித்தியாஜகத்துக்கும் நீயே அதிஷ்டானமும் ஆதாரமுமாயிருக்கிறாய்.

159. **ஆதார அதிஷ்டான விவரம்**:— இவ்விடத்தில் ஒரு ரகசியமிருக்கிறது. ரஜ்ஜுவுக்கு இரண்டு ஸ்வரூபங்களுள. ஒன்று "இது" என்கிற **சாமானியஸ்வரூபம்**. மற்றொன்று ரஜ்ஜுவென்கிற **விசேஷஸ்வரூபம்**. "இது சர்ப்பம்" என்று மித்தியாசர்ப்பந்தோன்றுகிற பிராந்தி காலத்திலும் விளங்குகிற "இது" என்கிற ரூபம் சாமானியரூபம். பிராந்திகாலத்தில் எந்தஸ்வரூபம் விளங்கவில்லையே ஆனால் எது விளங்குகிறதினால் பிராந்தி நீங்குகிறதோ அது ரஜ்ஜுவின் விசேஷஸ்வரூபம். இதுபோல ஆத்மாவுக்கும் இரண்டு ஸ்வரூபங்களுண்டு. ஒன்று சாமானியம் ஒன்று விசேஷம். சத்ரூபம் சாமானியம். அசங்கதை, கூடஸ்ததை, நித்தியமுக்த்தை, முதலியவிசேஷரூபம். ஏனெனில் "ஸ்தூலசூக்ஷ்மசரீரம் "இருக்கிறது" என்பதில் ஸ்தூலசூக்ஷ்மசரீரத்

தின் பிராந்திசமயத்திலும் மித்தையான சரீரத்துக்கு வேறாகாமல் சத்ரூபம் விளங்குகிறது. ஆகையால் ஆத்மாவின் சத்ரூபம் சாமானியரூபமாயிருக்கிறது. ஸ்தூலசூக்ஷ்மசரீரத்தின் பிராந்திசமயத்தில் ஆத்மாவின் அசங்க, கூடஸ்த, நித்தியமுக்தஸ்வரூபங்கள் தோன்றுகிறதில்லை. ஆனால் அசங்காதிஸ்வரூபங்கள் ஆத்மாவினிடத்தில் தோன்றுகிறதினால் சரீரப்பிராந்தி நிவிர்த்தியாகிறது. ஆகையால் அசங்காதிகள் விசேஷரூபங்களாம். எல்லாப்பிராந்திகளிலும் சாமானியரூபம் ஆதாரமென்றும் விசேஷரூபம் அதிஷ்டானமென்றும் சொல்லப்படும். சர்ப்பத்துக்கு ஆசிரயமான ரஜ்ஜுவின் "இது" என்கிற சாமானியரூபம் சர்ப்பத்துக்கு ஆதாரமாயும் ரஜ்ஜு என்கிற விசேஷரூபம் அதிஷ்டானமாயுமிருப்பதுபோல் மித்தியாபிரபஞ்சத்தின் ஆசிரயமான ஆத்மாவின் சாமானியமான சத்ரூபம் பிரபஞ்சத்துக்கு ஆதாரமாயும் அசங்காதி விசேஷரூபங்கள் அதிஷ்டானமாயுமிருக்கின்றன. இவ்விதமாக ஆதார அதிஷ்டானங்களின் பேதம் **ஸ்ரீசங்கராசாரியாருடைய** பவுத்திரசிஷ்யரான **சர்வஞாத்மா** என்னும் முனியால் சொல்லப்பட்டிருக்கிறது.

160. **கேள்வி**:— சுவாமின், பொய்யான ஜகத்துக்குத்திர்ஷ்டா ஆர்? எவன் அதிஷ்டானமாயும் ஆதாரமாயுமிருக்கிறானோ அவனே திர்ஷ்டாவாகமாட்டான். ஜகத்துக்கு ஆதாரமும் அதிஷ்டானமும் ஆத்மாவானதினால், ஆத்மாவைவிட வேறான திர்ஷ்டாவைச்சொல்லவேண்டும். சர்ப்பத்துக்கு அதிஷ்டானமாயும் ஆதாரமாயுமிருக்கப்பட்ட ரஜ்ஜுவைக்காட்டிலும் வேறாயிருக்கிற புருஷன் சர்ப்பத்துக்குத்திர்ஷ்டாவாயிருக்கிறதுபோல ஜகத்துக்குத்திர்ஷ்டா ஆர்?

161. **உத்தரம்**:— ஜகத்தில் எந்த வஸ்து மித்தையோ அது அதிஷ்டானத்தில் கல்பிதமாயிருக்கிறது. அதிஷ்டானம் இருவகைத்து. ஒன்று சேதனம் மற்றொன்று ஜடம். அதிஷ்டானம் ஜடமாயிருக்கும்போது அதிஷ்டானத்தைக்காட்டிலும் திர்ஷ்டா வேறாகஇருக்கிறான். சேதனம் அதிஷ்டானமாயிருக்கும்போது அதிஷ்டானமே திர்ஷ்டா, வேறில்லை. சொப்பனத்துக்கு அதிஷ்டானம் சாக்ஷீசேதனம். அது அந்தச் சொப்பனத்துக்குத்திர்ஷ்டாவாயுமிருக்கிறது. இப்படியே ஜகத்துக்கு ஆத்மா அதிஷ்டானமாயும் திர்ஷ்டாவாயுமிருக்கிறது. ஸ்தூலதிர்ஷ்டிக்குச் சர்ப்பம் அதிஷ்டானமென்று சொல்லுமிடத்தில் இந்தச்சங்கை சமாதானங்கள் சம்பவிக்கின்றன. சித்தாந்தத்திலோ சர்ப்பத்துக்கு அதிஷ்டானம் சாக்ஷீசேதனம். அதுவே திர்ஷ்டா. ஆனதால் சகல கல்பிதங்களுக்கும் அதிஷ்டானமே திர்ஷ்டாவாயிருக்கிறது. சங்கைசமாதானங்களுக்கு இடமில்லை.

162. சிஷ்யனே, இவ்விதமாகச்சமுசாரரூபதுக்கம் பிராந்தியால் உன்னிடத்தில் தோன்றுகிறது. இந்தமித்தையை நிவிர்த்திசெய்ய இச்சிக்கக்கூடாது. உதாரணம்:— ஒரு மந்திரவாதி ஒருவனுக்குப்பொய்யான சத்துருவை மந்திரபலத்தினால் காண்பிக்கிறான். இச்சத்துருவைக்கொல்ல ஒருவரும் பிரயத்தனப்படுகிறதில்லை. இதுபோல மித்தியா சமுசாரத்தை நிவிர்த்திக்க இச்சிக்கலாகாது.

163. கேள்வி:— சுவாமின், ஜகத்து என்னிடத்தில் மித்தையாக விருக்கிறது சத்தியமாகவில்லையென்று நீங்கள் சொன்னது சத்தியமாகவிருந்தாலும் எந்த வுபாயத்தினால் பொய்யான ஜனனமரணாதி சமுசாரம் என்னிடத்தில் தோன்றமாட்டாதோ அந்த வுபாயத்தைத் தேவரீர் சொல்லியருளவேண்டும். பொய்யை நிவர்த்தி செய்யச்சாதனந்தேடக்கூடாதென்று தேவரீர் சொன்னது சத்தியமாக விருந்தாலும் எவனுக்கு மித்தியாபதார்த்தம் துக்கத்துக்கு ஹேதுவாயிருக்கிறதோ அவனுக்கு அந்த மித்தியாபதார்த்தம் சாதனத்தினால் தள்ளத்தக்கது. ஒருவனுக்குத் தினந்தோறும் பயங்கரமான சொப்பனமுண்டாகிறது. அது பொய்யாக விருந்தாலும் அது நீங்குவதற்காக ஜபம் பாதப்பிரக்ஷாளனம் முதலிய அனேகவுபாயங்களை அவன் தேடுகிறான். இதுபோல் இந்தச்சமுசாரம் பொய்யாகவிருந்தாலும் ஜன்மாதி துக்கத்துக்கு ஹேதுவாக எனக்குத்தோற்றுகிறது. ஆகையால் சமுசாரத்தை நிவிர்த்திசெய்ய இச்சிக்கிறேன். தயவுசெய்து உபாயத்தைச்சொல்லவேண்டும்.

164. குருஉத்தரம்(164—165):— சிஷ்யனே, ஜகத்துரூபமான துக்கத்தை நிவிர்த்திசெய்ய எந்தச்சாதனத்தைக்கேட்டாயோ அதை நானுனக்கு முன்னமேயே (125) சொல்லியிருக்கிறேன். அதையுறுதியாய் நம்பு. அதினால் ஜகத்ரூபதுக்கம் உன்னிடத்தில் தங்கமாட்டாது. சிஷ்யனே, உன்னுடைய ஆத்மசொரூபத்தை நீயறியாததினால் ஜகத்ரூபதுக்கம் உனக்குத்தோன்றுகிறது. அது ஆத்மஞானத்தால் நிவிர்த்தியாகிறது. எந்த வஸ்து எதின் அஞ்ஞானத்தினால் விளங்குகிறதோ அந்த வஸ்து அதின் ஞானத்தினால் நீங்குகிறது. ரஜ்ஜுவையறியாததினால் சர்ப்பம் தோன்றுகிறது, ரஜ்ஜுவென்று தெரிந்தமாத்திரத்தில் சர்ப்பம் நிவிர்த்தியாகிறது. இதுபோல ஆத்மாவையறியாததினால் ஜகத்துத்தோன்றுகிறது. ஆத்மாவை யறிந்தமாத்திரத்தில் ஜகத்து நிவிர்த்தியாகிறது. இந்த ஆத்மஞானத்தை நானுனக்கு உபதேசிக்கிறேன். "ஜகத்து என்னிடத்தில் மூன்றுகாலத்திலுமிருக்கவில்லை. ஏனென்னில் அது பொய்யாகவிருக்கிறது. எது பொய்யோ அது அதிஷ்டானத்துக்கு எவ்விதஹானியையுஞ்செய்கிறதில்லை. கானல் ஜலம் பூமியை நனைக்கிறதில்லை. இதுபோல ஜகத்து விளங்குகிறது. ஆனால் பொய்யாக இருக்கிறது. எனக்கு ஹானியுண்

டாக்க அது கொஞ்சங்கூடச்சமர்த்தமாகிறதில்லை. நான் சச்சிதானந்தரூப்பிர்ம்மஸ்வரூபியாயிருக்கிறேன்." இப்பேர்ப்பட்ட நிச்சயந்தான் ஞானமென்று சொல்லப்படுகிறது. இதுதான் மோக்ஷத்துக்குச்சாதனம். வேறில்லை. இந்த ஞானத்தைத்தான் உனக்கு முன்னமேயே உபதேசித்திருக்கிறேன்.

165 சிஷ்யனே, ஜகத்தின் உபாதானகாரணம் அஞ்ஞானம் (295) இந்த அஞ்ஞானநாசத்தால் ஜகத்து தானாகவே நாசமடைகிறது. ஏனெனில் உபாதானம் நசித்தபின்பு காரியமிருக்கிறதில்லை. அந்த அஞ்ஞானத்தின் நாசம்கேவலம் ஞானத்தினால் உண்டாகிறதேதவிரக் கர்மத்தினாலும் உபாசனையினாலும் உண்டாகிறதில்லை. ஏனெனில் அஞ்ஞானத்துக்கு விரோதம் ஞானமேதவிரக்கர்மஉபாசனைகளன்று. வீட்டுக்குள்ளிருக்கும் இருள் எச்செய்கையாலும் நீங்காமல் கேவலம் பிரகாசத்தால்நீங்குகிறதுபோல் அஞ்ஞானரூபமான இருட்டு ஞானரூபமான பிரகாசத்தால்மட்டும் நிவிர்த்தியாகுமேதவிர வேறெந்தச்சாதனங்களாலும் நிவிர்த்தியாகமாட்டாது. சிஷ்யனே, ஜகந்து நிவிர்த்தியாகும்படியான உபதேசத்தை உனக்குப் பூர்ணமாகப் பண்ணினேன். இதை நீ மனதில்கொண்டு செம்மையாய் விசாரித்துச் சமுசயங்களேதேனும் உண்டானால்கேட்பாயாக.

## உபதேசித்தவிஷயங்களில்

### ஆக்ஷேபசமாதானங்கள் (166—250)

### ஜீவப்பிர்ம்ம அபேதம் (166—192)

### தத்துவதிர்ஷ்டி-கேள்வி (166—169)

166. **உபதேசச்சுருக்கம்**:—சுவாமின், நீங்கள்சொன்னபடி "ஜகத்துக்குக் காரணம் அஞ்ஞானம். இந்த அஞ்ஞானத்தை ஞானம் போக்கி ஜகத்தையும் நிவிர்த்திக்கிறது" என்பதையும், "ஜகத்துமித்தை ஜீவன் ஆனந்தஸ்வரூபம். அவன் பிர்ம்மத்துக்கு வேறன்று, பிர்ம்மரூபமே. இந்த நிச்சயத்துக்கு ஞானமென்று பெயர். உன்னிடத்தில் ஜகத்துமித்தையாகவிளங்குகிறது. ஜீவன் ஆனந்த ஸ்வரூபனாகவிருக்கிறான்," என்கிற ஞானஸ்வரூபத்தையும் நான் சத்தியமாக அறிந்தேன். ஆனால் ஜீவனும் பிர்ம்மமும் ஒன்றென்பதை யறியவில்லை. ஏனெனில் ஜீவபிரம்மங்களின் பேதங்களைக்காட்டுகிற சங்கை என் மனதில் தோன்றுகிறது.

167. **ஸ்வரூபசங்கை**:— சுவாமின், நான் புண்ணியபாப

ங்களைச் செய்கிறேன். அவைகளின் பலமாகிற மரணம், ஜன்மம், சுகம், துக்கம், இவைகளையனுபவிக்கிறேன். அநேகவிதமாக ஜகத்து என்னிடத்தில் விளங்குகிறது. ஜகத்துக்குக்காரணமான அஞ்ஞானத்தை நிவிர்த்திக்க நான் இச்சிக்கிறேன். பிரம்மத்தினிடத்திலோ புண்ணியமில்லை, பாபமில்லை, ஜன்மம் இல்லை, மரணமில்லை, சுகமில்லை, துக்கமில்லை, வேறெவ்விதக்கிலேசமுமில்லை ஞான இச்சையுமில்லை. ஆகையால் பிர்ம்மத்தினுடையவும் என்னுடையவும் ஸ்வரூபங்கள் ஒன்றுக்கொன்று விரோதமாயிருக்கின்றன. ஆகையால் இரண்டுக்கும் ஏகத்துவஞ்சொல்லக்கூடாது. என்னிடத்திலுங்கூட ஜன்மாதி சமுசாரம் பாரமார்த்திகமாயில்லாமலிருந்தாலும் பொய்யான ஜன்மாதிகள் எனக்குப்பிராந்தியால் தோன்றுகின்றன. பிர்ம்மத்தினிடத்தில் தோன்றுகிறதில்லை. ஜீவனுக்கும் பிர்ம்மத்துக்கும இவ்வளவு பேதங்களிருப்பதால் ஏகத்துவஞ் சொல்லக்கூடாது.

168. பிரமாண சம்சயம் (168—169):— சுவாமின், எனக்கு வேறொரு சமுசயம் உண்டு. வேதத்தில் அடியில் வருமாறு பார்த்திருக்கிறேன். புத்திரூபமான ஒரு விருக்ஷத்தில் இரண்டு பக்ஷிகளுண்டு. அவைகளிரண்டும் சமானமானவைகள். அவைகளிலொன்று கர்மபலபோக்தாவாயிருக்கிறது. மற்றொன்று சுத்தமாயும் போக ரகிதமாயும் அசங்கமாயும் கர்மபலபோகதாவைப் பிரகாசிப்பித்துக்கொண்டுமிருக்கிறது. இவைகளில் கர்மபலபோக்தாவா யிருக்கிறது ஜீவனென்றும், மற்றொன்று பரமாத்மா வென்றும் தோன்றுகிறதினால் இவைகளுக்கு ஏகத்துவஞ் சொல்லக்கூடாது.

169. மேலும் வேதத்தில் கர்மமும் உபாசனையும் வெகுப் பிரகாசமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஜீவனும் பிர்ம்மமும் ஒன்றென்கிற விஷயத்தில் கர்மஉபாசனைகள்வியர்த்தமாகும். எனெனில் நீங்கள் ஜீவனும் பிர்ம்மமும் ஏகமென்று சொல்லும்பக்ஷத்தில் பிரம்மத்தினிடத்தில் ஜீவஸ்வரூபம் அந்தர்பாவமாயிருக்கிறதா அல்லது ஜீவனிடத்தில் பிர்ம்மஸ்வரூபம் அந்தர்பாவமாயிருக்கிறதா? ஒருக்கால் பிர்ம்மத்தினிடத்தில் ஜீவஸ்வரூபம் அந்தர்ப்பாவமாயிருக்கிறதாகச் சொல்லும்பக்ஷத்தில் ஜீவனே பிர்ம்மரூபமாகிறதினால் அதிகாரியே இல்லாமற்போவான். அதினால் கர்மஉபாசனைகள் நிஷ்பலமாய்விடும். ஜீவனிடத்தில் பிர்ம்மஸ்வரூபம் அந்தர்பாவமென்று சொல்லும்பக்ஷத்தில் பிர்ம்மம் ஜீவரூபமாகிறதினால் எதை யுபாசிக்கவேண்டுமோ அந்த வுபாசியமே இல்லாமற் போகிறது. அதினால் உபாசனை நிஷ்பலமாய்விடும். மேலும் கர்மபலத்தைக் கெடுக்கிறபரமா

ரத்மமே இல்லாமற்போவதால் கர்மம் நிஷ்பலமாய்விடும். மேலும் மீமாம்ஸகர்கள் சொல்லுகிற "கர்மமேஈசுவரன் அதனாலேயே பலனுண்டாகிறது" என்கிற கோட்பாடு சரியன்று. ஏனெனில் கர்மம்ஜடம். பலத்தைக் கொடுக்கச்சாமர்த்தியம் அதற்குண்டெனச்சொல்லக்கூடாது. ஆகையால் கர்மபலத்தை ஈசுவரனே கொடுக்கிறார். இப்படியிருப்பதால் பரமாத்மாவும் ஜீவனும் ஒன்றெனச்சொல்வது சரியன்று.

170. 167-க்குச்சமாதானம்:— **(170—189)**. சிஷ்யனே உனக்குண்டாகிற சந்தேகத்தைநிவர்த்திக்கிறவிசாரத்தைச்சொல்லுகிறேன் கேள். ஒரு ஆகாசத்தில் (1) கடாகாசம் (2) ஜலாகாசம் (3) மேகாகாசம் (4) மகாகாசம் என்று நான்குபேதங்கள் இருப்பதுபோல் ஒரேசேதனத்தில் (1) கூடஸ்த (2) ஜீவ (3) ஈசுவர (4) பிரம்மமென்கிற நான்கு பேதங்கள் இருக்கின்றன. சிஷ்யனே, எப்போது இந்தஸ்வரூபங்களை நன்றாகக் கேட்டுத்தெரிந்து கொள்ளுகிறாயோ அப்போது உன்னுடைய சங்கைக்குச் சமாதானம் உனக்கேவிளங்கும். ஆகையால் நான் உனக்கு இந்தச்சொரூபங்களைச் சொல்லுகிறேன். இவைகளைக் கேட்கிறதினால் சந்தேகமற்றஞானமுனக்குண்டாகி ஜன்மாதி துக்கங்களும் நாசமாய்விடும்.

171 கடாகாசம்:— சிஷ்யனே, ஜலத்தினால் நிறைந்திருக்கிற கடத்துக்கு ஆகாசம் எவ்வளவு அவகாசங் கொடுக்கிறதோ அவ்வளவாகாசத்துக்கும் கற்றோர் கடாகாச மென்று சொல்வார்கள்.[28]

172 ஜலாகாசம்:—சிஷ்யனே, ஜலம்நிறைந்த கடத்தில் நட்சத்திராதிசகித ஆகாசம் பிரதிபிம்பிக்கிறது.[29] இந்த ஆகாசப்பிரதிபிம்பமும்

---

28. சங்கை:— கடத்துக்கு வெளியே இருக்கிற ஆகாசம் மகாகாசமென்றும் உள்ளேயிருக்கிற ஆகாசம் கடாகாசமென்றும் ஏன் சொல்லக்கூடாது. சமாதானம் — இப்படிச்சொல்லும்பக்ஷத்தில் கடமிருக்கிற ஆகாசத்துக்கு க்கபால ஆகாசமென்று சொல்லவேண்டும். இந்த ஐந்தாவது ஆகாசம் சாஸ்திரத்தில் ஏற்றுக்கொள்ளப்படாதபடியால் இந்த ஆக்ஷேபத்திற் சொல்லிய கடாகாச லக்ஷணம் ஏற்றுக்கொள்ளத்தக்கதில்லை.

29. ஜலத்தினால் நிறைந்த கடத்தில் உண்டாகிற ஆகாசத்தின் பிரதிபிம்பம் கடத்துக்குள்ளிருக்கிற கடாகாசத்தின் பிரதிபிம்பமென்று சொல்லப்படும் இச்சங்கையை நிவிர்த்திக்க நக்ஷத்திராதிகளுடன் ஆகாசம் பிரதிபிம்பிக்கிறதாகச்சொல்லப்பட்டிருக்கிறது. நக்ஷத்திரப் பிரதிபிம்ப முண்டாவதால் வெளியே இருக்கும் மகாகாசத்தின் பிரதிபிம்ப முண்டாகிறது. மேலும் அல்பகடத்திலுள்

கடாகாசமும் இரண்டும் சேர்ந்து ஜலாகாசமென்று சொல்லப்படும்.

173 இதிலோர்சங்கை:—ஆகாசத்தின்பிரதிபிம்ப முண்டாக மாட்டாது. ஆனாலோகேவலம் நக்ஷத்திராதிகளின் பிரதிபிம்பமட்டுமுண்டாகும் ஏனெனில் ஆகாசம் ரூபமில்லாதது, ரூபமுள்ள பதார்த்தங்களுக்குத்தான் பிரதிபிம்பமுண்டாகும். ஆதலால் ஆகாசத்துக்குப் பிரதிபிம்பம் உண்டெனச் சொல்லக்கூடாது.

174 இதற்குச்சமாதானம்:—ஜலத்தில் ஆகாசப்பிரதிபிம்ப முண்டாகாதபக்ஷத்தில் சொற்ப ஜலத்தில் வெகு பெரிய பதார்த்தம் தோன்றக்கூடாது. ஆனால் அப்படித் தோன்றுவதால் ஆகாசத்தின் பிரதிபிம்பத்தை ஒப்புக்கொள்ளவேண்டியது. மேலும் ரூபமில்லாத பதார்த்தத்துக்குப் பிரதிபிம்ப முண்டாகமாட்டாதென்கிற நியமமில்லை. ஏனெனில் ரூபமில்லாத சத்தத்துக்குப்பிரதித்தொனி யுண்டாகிறது. அந்தப் பிரதித்தொனி சத்தத்தின் பிரதிபிம்பம், ஆகையால் ரூபரகித ஆகாசத்துக்கும்[30] பிரதிபிம்ப முண்டாகக்கூடும்.

175 மேகாகாசம்:—மேகத்துக்கு ஆகாசம் எவ்வளவு அவகாசங்கொடுக்கிறதோ அவ்வளவு ஆகாசமும் மேகஜலத்திலுண்டாகும ஆகாசப்பிரதிபிம்பமும் இரண்டுஞ்சேர்ந்து மேகாகாசமென்று சொல்லப்படும்.

176 இதிலோர்சங்கை:—மேகம் ஆகாசத்தில் இருக்கிறது. ஆனால்அதில் ஜலமும் ஆகாசப்பிரதிபிம்பமும் இருப்பதாக அவைகளைப் பார்க்காமல் எப்படி யறியக்கூடும்.

177 சமாதானம்:— மேகத்தில் ஜலமும் ஆகாசப்பிரதிபிம்பமும் பிரத்தியக்ஷமாக வில்லாவிட்டாலும் அனுமானத்தினால் அறியத்தக்கவை. மேகத்திலிருந்து ஜலவிருஷ்டி யுண்டாவதால் மேகத்தில் ஜலமிருப்பதாக

---

ள ஜலத்தில் பெரிய ஆகாரம் தோன்றுகிறது. இது கடத்துக்குள்ளிருக்கும் ஆகாசத்தில் இல்லை, ஆனால் வெளி ஆகாசத்தி லிருக்கிறது. ஆகையால் மகாகாசத்தின் பிரதிபிம்பம்தான் கிரகிக்கத்தக்கது.

30. குணம் குணத்தை ஆசிரயிக்கிறதில்லை, ஆனால்ஆகாசாதி திரவியத்தையாசிரயிக்கிறது. இந்த நியாயப்படி நீலபீதாதி வர்ணங்கள் ரூபகுணத்தை ஆசிரயிக்காத படியால் ரூபரகிதமா யிருக்கின்றன. இந்த ரூபரகிதமான வர்ணத்துக்கு கண்ணாடியில் பிரதிபிம்பமுண்டாகிறது. இதுபோல் ரூபரகித ஆகாசத்துக்கும் ரூபரகித சேதனத்துக்கும் பிரதிபிம்பமுண்டாகிறது.

அனுமானமுண்டாகிறது. மேகத்தில் ஜலமில்லாத பக்ஷத்தில், ஜலவிருஷ்டி மேகத்தினின்று முண்டாகமாட்டாது. மேலும் மேகத்திலுள்ள ஜலம் ஆகாசப்பிரதிபிம்ப சகிதமாயிருக்கிறது. ஏனென்றால் எவ்விடத்தில் ஜலமிருக்கிறதோ அவ்விடத்தில் ஆகாசப்பிரதிபிம்ப மில்லாமலிருக்கமாட்டாது. ஆகையால் மேகத்திலுள்ள ஜலமும் ஆகாசப்பிரதிபிம்பத்துடனிருக்கிறது. இவ்விதமாக மேகத்தில் ஜலமும் ஆகாசப்பிரதிபிம்பமும் அனுமானிக்கப்படுகின்றன.

178 மகாகாசம்:—பிர்ம்மாண்டத்துக்கு உள்ளும் புறமும் ஓரேவிதமாயும் வியாபகமாயும் இருக்கிற ஆகாசஸ்வரூபத்துக்கு வித்துவான்கள் மகாகாசமென்று சொல்வார்கள்.

179 சீஷனே, நாலுவித ஆகாசலக்ஷணங்களையும் சொன்னேன். இனிநான்குவிதமாய்[31] விளங்குஞ்சேதனத்தின் லக்ஷணத்தைச் சொல்லுகிறேன். அதைக்கேட்பதினால் விசாரத்தின் பலமாகிற ஞானம் அடையப்படும்.

180 கூடஸ்தவர்ணனை:—புத்தி அல்லது வியஷ்டி[32] அஞ்ஞானத்தின் அதிஷ்டானசேதனத்துக்குக் கூடஸ்தனென்று பெயர். எந்தப்பக்ஷத்தில் புத்திசங்கதசேதனம் ஜீவனாகிறதோ அந்தப்பக்ஷத்தில் புத்திக்கதிஷ்டானசேதனம் கூடஸ்தனென்று சொல்லப்படுகிறது. எந்தப்பக்ஷத்தில் வியஷ்டிஅஞ்ஞானசகிதசேதனம் ஜீவனென்று சொல்லப்படுகிறதோ அந்தப்பக்ஷத்தில் வியஷ்டிஅஞ்ஞானத்துக்கு அதிஷ்டானசேதனம் கூடஸ்தனென்று சொல்லப்படுகிறது. இதனால் என்ன சித்திக்கிறதெனில் ஜீவத்

---

31. சில அத்வைத க்கிரந்தங்களில் ஜீவ ஈஸ்வர பிர்ம்ம என்கிற மூன்று சேதனங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அனாதியான ஆறு பதார்த்தங்களில் இம்மூன்றே (93) எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன. கூடஸ்த சேதனத்தை விட்டதினால் யாதொரு தோஷமுமில்லை. ஏனெனில் கூடஸ்தனுக்கும் பிர்ம்மத்துக்கும் நாமமாத்திரத்தில் பேதமேதவிர வேறெவ்வித பேதமுமில்லை. இதுவுமன்றியில் வித்தியாரண்யஸ்வாமிகள் திருக்திரிசியமென்னுங்கிரந்தத்தில் கூடஸ்தன் பாரமார்த்திக ஜீவனென்றும் ஜாக்கிரதகாலத்திலுள்ள அந்தக்கரணப்பிரதிபிம்பன் வியாவகாரிக ஜீவனென்றும், சொப்பனத்திலுள்ளவன் பிராதிபாஸிக ஜீவனென்றும் சொல்லியிருக்கிறார். இவ்விதமாகக்கூடஸ்தன் ஜீவனிடத்தில் அந்தர்ப்பாவமாயிருக்கிறான்.

32. ஜீவஸ்வரூபம் (181ல்) புத்திப்பிரதிபிம்பமாகவும் (186ல்) அவித்தியா பிரதிபிம்பமாகவும் இரண்டுவிதமாக இனி வர்ணிக்கப்படுவதால் இவ்விடத்தில் இரண்டு பக்ஷங்கள் பிரஸ்தாபிக்கப்பட்டன.

துவத்துக்கு எது விசேஷணமோ அதின் அதிஷ்டானத்துக்குக் கூடஸ்தனென்று பெயராகும். இந்தக்கூடஸ்தன உற்பத்தியற்றவன். அதாவது, பிர்ம்மத்துக்கு வேறாக எப்படிச் சிதாபாஸன் உண்டாகிறானோ அப்படிக் கூடஸ்தனுண்டாகிறதில்லை. ஆனால் பிர்ம்மரூபமாகவே யிருக்கிறான் கடாகாசம் மகாகாசத்துக்கு வேறாகாமல் மகாகாசரூபமாகவே யிருப்பது போலும். இந்தக்கூடஸ்தன் ஆத்மபதத்தின் லக்ஷியார்த்தம். கூடஸ்தனுக்கே பிரத்தியக் கென்று நிஜரூபனென்றும் ஜீவசாக்ஷியென்றும் பெயர். கூடஸ்தன் கடாகாசத்துக்குச் சமானன்.

181 ஜீவவர்ணனை(181-186) புத்திப்பிரதிபிம்பமாக(181-185):- அனேக காமகர்மங்களுடன் கூடிய புத்தியில் உண்டாகிற சேதனப்பிரதிபிம்பத்துக்கு வித்துவான்கள் ஜீவனென்று பெயரிட்டிருக்கிறார்கள். கேவலம்பிரதிபிம்பத்தை மாத்திரம் ஜீவனென்று அவர்கள் சொல்லுகிறதில்லை. ஆனால் கடாகாச சகித ஆகாசப்பிரதிபிம்பத்தை ஜலாகாசமென்று சொல்வதுபோல, கூடஸ்தசகித சிதாபாசனை ஜீவனென்று சொல்லுகிறார்கள் ஆகையால் புத்தியிலுள்ள சிதாபாஸனும் புத்தியின் அதிஷ்டான சேதனமும் இரண்டுஞ்சேர்ந்து ஜீவனென்று[33] சித்திக்கிறது.

---

33. அந்தக்கரணம், அதிஷ்டானசேதனம், அந்தக்கரணபிரதிபிம்பசைதன்னியம், இம்மூன்றும் கூடி ஜீவன் என்று சொல்லப்படும். (1) கேவலம் அந்தக்கரணத்தைமட்டும் ஜீவன் என்று சொல்லும் பட்சத்தில் கடத்துக்கும் ஜீவத்துவம் சொல்லவெண்டும். கடம் ஸ்வச்சமாயில்லாததினால் அதற்கு சொல்லக்கூடாதென்னும் பட்சத்தில் சொச்சமான கன்னடிக்குஜீவத்துவம் சொல்லக்கூடும். கன்னடி பாஹியமானதினால் அதற்கு ஜீவத்துவம் சொல்லக்கூடாதென்னும் பட்சத்தில் அந்தரமான இந்திரியங்களுக்கு ஜீவத்துவம் சொல்லக்கூடும். இந்திரியங்களைப்பார்க்கிலும் அந்தக்கரணம் ஆந்தரம் ஆனதால் அதற்கே சொல்லவேண்டுமெனில், அந்தக்கரணத்துக்கும் அந்தரமான அஞ்ஞானத்துக்கு ஜீவத்துவம் சொல்லவேண்டும். அப்படிக்கூடாதபடியால் அந்தக்கரணத்திற்கு ஜீவத்துவம் சொல்லக்கூடாது. மேலும் ஜீவன் சேதனமானதினால் அசேதனமான அந்தக்கரணத்திற்கு ஜீவத்துவம் கூடாது. (2) கேவலம் பிரதிபிம்பத்திற்கு ஜீவத்துவம் சொல்லுவது சரியன்று. ஏனெனில் அந்தக்கரணமில்லாமல் பிரதிபிம்பமுண்டாகமாட்டாது. (3) அதிஷ்டான சேதனத்திற்கு ஜீவத்துவம் சொல்லுவது சரியன்று. ஏனெனில் அந்தசைதன்னியம் நிர்விகாரமானது. அதற்கு விகாரரூபமான ஜீவத்துவம் கூடாது. (4) அந்தக்கரணமும் பிரதிபிம்பமும் கூடினது ஜீவனென்று சொல்லும் பட்சத்தில் இவ்விரண்டும் கற்பிதமானதினால் ஜீவனுக்கு நித்தியத்துவம் சித்தியாமலும் முக்தரானவர்கள் இல்லாமலும் போகவேண்டும். மேலும் பாகத்தியாகலக்ஷணை சம்பவிக்காமல் சகலவாச்சியபாகங்களைத்தள்ளுகிறதாகிய ஜகர்லக்ஷணை சம்பவிக்கும். இது ஆசாரியருடைய மதத்துக்கு விருத்தமாகும் (519). மேலும் அதிஷ்டானத்துக்கு வேறாகாமல் அதி

182. ஆபாஸலக்ஷணம்:— பிரதிபிம்பம் கூடஸ்தசைதன்னியத்தினுடையது, வெளியேயுள்ள பிர்ம்மசைதன்னியத்தினுடையதன்று. மிகவுஞ்சிவந்த புஷ்பத்தின் பேரில் வைக்கப்பட்ட ஸ்வச்சமான ஸ்படிகத்தில் அந்தப்புஷ்பத்தின் சிவப்பு வர்ணத்தின் காந்தியடிக்கிறது. அது அந்தச் சிவப்புப்புஷ்பத்தின் பிரதிபிம்பமாக இருக்கிறது. இதுபோல, கூடஸ்தனையாசிரயித்த புத்தியில் உண்டாகுங்கூடஸ்தனுடைய பிரகாசம் சிதாபாஸனென்று[34] சொல்லப்படுகிறது. ஸ்படிகம் மிகவும் சுத்தமாயிருக்கிறதுபோல் புத்தியும் மிக்கச்சுத்தமாயிருக்கிறது. ஏனெனில் புத்தி சத்துவகுணத்தின் காரியம் (300). ஆகையால் கூடஸ்தனுடைய பிரகாசத்துக்குப்பிரதிபிம்பமென்று[35] பெயர். அல்லது, பிர்ம்மசைதன்னியத்தின் பிரதிபிம்பமு முண்டாகக்கூடும். கடத்திலுள்ள ஜலத்தில் மகாகாசத்தின் பிரதிபிம்பமுண்டாகிறதே தவிர கடத்துக்குள் இருக்கும் ஆகாசத்தின் பிரதிபிம்பமுண்டாகிறதில்லை. ஏனெனில், எவ்வளவு விஸ்தாரம் ஜலத்தில் காணப்படுகிறதோ அவ்வளவு விஸ்தாரம் கடத்திலுள்ள ஆகாசத்தில் இல்லை. இந்த விஸ்தீர்ணதை ஆகாசத்தின் பிரதிபிம்பமாக இருக்கிறது. ஆகையால் அது வெளியாகாசத்தின் பிரதிபிம்பமென்று சித்திக்கிறது. வியாபகசைதன்னியத்தின் பிரதிபிம்பமுண்டாகமாட்டாதென்று ஒருவன் சொல்லும்பக்ஷத்தில் ஆகாசதிர்ஷ்டாந்தத்தால் அச்சங்கை நிவிர்த்தியா

---

ஷ்டானத்தை மறைப்பது ஆரோப்பியமென்னப்படும். அதிஷ்டானத்துக்கு வேருகி ஆரோப்பியம் எங்கும் தோன்றுகிறதில்லை. இந்த அனுமானத்தாலும் அது (புத்திசகிதசிதாபாஸன் = ஜீவன்) விருத்தமாயிருக்கிறது. (5) அதிஷ்டானசேதனமும் பிதிரபிம்பசேதனமும் கூடினது ஜீவனென்று சொன்னால் கேவலம் சைதன்னியம் மாத்திரம் நிர்விகாரமானபடியால் கர்த்தருத்துவபோக்த்தருத்துவாதி விகாரலக்ஷணமான ஜீவத்துவம் சொல்லக்கூடாது. (6) அதிஷ்டானசேதனமும் அந்தக்கரணமும் சேர்ந்தது ஜீவன் என்றுசொன்னால் தர்ப்பணமும் தர்ப்பண அதிஷ்டானமுங்கூடிஜ்ஜீவனாகவேண்டும். இவைகளுக்கு ஜீவத்துவம் இல்லை. ஆதலால் அந்தக்கரணம் அதிலுண்டாகும் அதிஷ்டான சேதனத்தின் பிரதிபிம்பம் அதிஷ்டானசேதனம் இம்மூன்றும் சேர்ந்ததே சீவனும். கூடஸ்தனுக்குச்சம்சாரம் சம்பவிக்காதபடியால் ஜீவனே சமுசாரியாக எடுத்துக்கொள்ளவேண்டியதாயிருக்கிறது.

34. வஸ்திரலக்ஷணமன்றியில் வஸ்திரம்போல் காணப்படுவது வஸ்திராபாஸமென்பதுபோல் சேதனலக்ஷணமன்றியில் சேதனம்போல் காணப்படுகிறது சிதாபாஸமென்னப்படும்.

35. முன், பிரதிபிம்பம் கூடஸ்தனுடையது என்று சொல்லப்பட்டது. இப்போது பிர்ம்மசைதன்னியத்தினதாக சொல்லப்படுகிறது.

கிறது. எப்படியெனில், ஆகாசம் வியாபகமாயிருந்தும் அதற்குப்பிரதி பிம்பமுண்டாகிறதுபோல் வியாபகசைதன்னியத்துக்கும் பிரதிபிம்பமு ண்டாகக்கூடும். மேலும், ரூபத்துடன் கூடிய பதார்த்தத்துக்கு ரூபத் துடன் கூடிய பதார்த்தத்தில் பிரதிபிம்ப முண்டாகவேண்டு மென்கிற நியமம் இல்லை. ஏனெனில் ரூபமில்லாத சப்தத்துக்கு ரூபமில்லாத ஆகாசத்தில் பிரதிபிம்ப முண்டாகிறதென்று முன்னமே (174) சொல்ல ப்பட்டிருக்கிறது. ஆகையால் பிர்ம்மசைதன்னியத்துக்கும் பிரதிபிம்பமு ண்டாகக்கூடும்.

183. இவ்விதமாக, புத்தியிலுள்ள ஆபாஸனும் புத்தியின் அதி ஷ்டான சேதனமும் இரண்டுஞ்சேர்ந்து ஜீவனென்று சொல்லப்படுகி றது. இந்த ஜீவன் துவம்பதத்தின் வாச்சியார்த்தம். ஜீவனிடத்திலுள் ள சிதாபாஸனைத்தள்ளி மிச்சப்படுங்கேவலகூடஸ்தன் துவம்பதத்தின் லக்ஷியார்த்தம். அஹம் (நான்) சப்தத்துக்கும் ஜீவனே வாச்சியார்த்தம், கூடஸ்தனே லக்ஷியார்த்தமாம்.

184. சிதாபாஸன் கூடஸ்தன் இரண்டும் சேர்ந்தது ஜீவனுளு ம் ஜீவத்துவத்தினுடைய சகல தர்மங்களும் ஆபாஸனிடத்திலிருக்கின் றன. புண்ணியம் பாபம் இவைகளின பலனாகிற சுகம், துக்கம், லோ காந்தரம் போகுதல், இந்தலோகத்துக்கு வருதல், முதலிய வெல்லாம் ஆபாஸசஹித புத்தியைச்சேர்ந்தவை கூடஸ்தனைச்சேர்ந்தவையல்ல. ஆனல் கூடஸ்தனிடத்தில் கேவலம் பிராந்தியால் தோற்றுகின்றன. இந்தப்பிரா ந்தித்தோற்றமும், புத்திசஹித ஆபாசனுக்குண்டாகிறது, கூடஸ்தனுக்கு ண்டாகிறதில்லை. ஏனெனில், கூடம் என்றால் கொல்லனுடைய பட்டடை. இதுபோல் நிர்விகாரமாயிருப்பது கூடஸ்தனென்று சொல்லப்படுகிறது. அல்லது மித்தையாகிற புத்திசிதாபாஸன் இவைகளுக்குக்கூடமென்றுபெ யர். இவைகளிடத்தில் பற்றில்லாமலிருப்பது கூடஸ்தன் எனச்சொல்ல ப்படுகிறது. ஆகையால் கூடஸ்தனிடத்தில் பிராந்தியாதிகள் சம்பவிக்க மாட்டா, ஆனல் சிதாபாஸனிடத்தில் சம்பவிக்கின்றன.

185. செம்மையாய் விசாரித்துப்பார்த்தால் புண்ணியபாபங்கள் சுகதுக்கங்கள் லோகாந்தரப்போக்குவரவு இவைகள் கேவலம் புத்தியை ச்சேர்ந்தவையேயொழிய ஆபாஸனைச்சேர்ந்தவையன்றென[36] விளங்கும்.

---

36. ஜலத்தின் சீதளம் அச்சலத்தில் பிரதிபிம்பித்த சூரியனை எப்படி ஸ்பரிசிக்கவில்லையோ அப்படி அந்தக்கரணவிகாரங்கள் அந்த அந்தக்கரணத்திற் பிரதிபிம்பித்த சிதாபாசனை ஸ்பரிசிக்கவில்லை. அவ்வந்தக்கரணத்திற்கு அதிஷ் டானமான பிரத்தியகாத்மாவை ஸ்பரிசிக்கமாட்டாதென்பதில் சந்தேகமென்ன,

புத்திசம்பந்தத்தால் ஆபாஸனிடத்தில் தோன்றுகின்றன. ஜலசகிதகடம் கோணலானாலும் நேரானாலும் ஒருவனால் கொண்டுபோகப்பட்டாலும் கொண்டுவரப்பட்டாலும், கடசம்பந்தத்தினால் ஆகாசத்தினுபாசமும் அவ்வாறே செய்கிறது. தான் சுதந்தரமாக ஒன்றும் செய்கிறதில்லை. இதுபோல், காயகர்மரூபமான ஜலத்தால் நிறைந்த புத்திரூபமான கடம் புண்ணியமுதலிய சகல விகாரங்களையும் தரிக்கிறது. புத்திசம்பந்தத்தால் சிதாபாஸன் அவைகளைத்தரிக்கிறான். கூடஸ்தன் யாதொரு விகாரமுமில்லாதவன்.[37] ஜலம் நிறைந்த கடத்தின் விகாரங்களில்லாத கடாகாசம் போலக்கூடஸ்தனுமென்றறி. ஆகையால் ஜீவதர்மங்கள் சிதாபாஸனிடத்தில் விளங்குகின்றன. ஆயினுங்கூடஸ்தனிடத்தில் அஞ்ஞானத்தால் தோன்றுகின்றன. ஆகையால் புத்தியினிடத்துள்ள கூடஸ்தசகித சிதாபாசனுக்கு ஜீவனென்று பெயரிடப்பட்டது.

186 ஜீவஸ்வரூபம் மற்றொருவிதம்:—மேற்சொல்லிய ஜீவஸ்வரூபத்தில் பிராஞ்ஞனுக்கு ஹானியுண்டாகிறது. ஏனெனில் சுஷுப்திக்கு அபிமானியாகிற ஜீவனுக்குப்பிராஞ்ஞனென்று (342) பெயர். சுஷுப்தியில் புத்தி அபாவமாயிருப்பதால் புத்தியிலுள்ள ஆபாஸனும் இல்லை. இதனால் பிராஞ்ஞனுடைய சொரூபத்தைப்பிரதிபாதிக்கிற சாஸ்திரத்துக்குவிரோதம் சம்பவிக்கிறது. ஆகையால் ஜீவஸ்வரூபம் வேறுவிதமாகச் சொல்லப்படுகிறது.

---

பிருதிவீ விகாரங்களும் பிருதிவீயின் காரிய விகாரங்களும் பிருதிவீக்காதாரபூதமான ஆகாசத்தை எப்படி ஸ்பரிசிக்கவில்லையோ அப்படிப்போல அனுதமாவான அஞ்ஞானமும் அஞ்ஞானகாரியமான தேகேந்திரியாதி பிரபஞ்சதர்மங்களும் அஞ்ஞானத்திற்கும் அஞ்ஞானகாரியங்களுக்கும் ஆதாரபூதமான பிரத்தியகாத்மாவை ஸ்பரிசிக்கவில்லை. அஞ்ஞானத்தால் கூடஸ்தனை ஸ்பரிசிக்கிறதாக பிராந்தி உண்டாகிறது.

37. சந்திரன் எப்போதுமிருந்தாலும் பக்ஷத்தினாலும் திதியினாலும் சந்திரகலை விருத்தி அல்லது க்ஷயத்தை அடைகிறது. விருக்ஷம் எப்போதுமிருந்தாலும் அதின் பலன் ஜன்மாதிஷட்விகாரபரிணாமத்தை அடைகிறது. இவைகள்போலக்கூடஸ்தன் நிர்விகாரனாகவிருந்தாலும் தேகாதிகளுக்கு ஜன்மாதிஷட்விகாரரூபபரிணாமங்களுண்டாகின்றன. கூடஸ்தனே பரிணாமத்தை அடைந்தால் கூடஸ்தன் ஜடமாவான். பரிணாமம்=விகாரம். ஆகையால் கூடஸ்தனுக்கு விகாரமிருப்பதாகச்சொல்லக்கூடாது.

அஞ்ஞானத்தின் அம்சத்துக்கு வியஷ்டியஞ்ஞான மென்றுபெயர். சம்பூர்ண அஞ்ஞானத்துக்கு ஸமஷ்டி அஞ்ஞானமென்று பெயர். அஞ்ஞான அம்சத்திலுள்ள சேதனத்தின் ஆபாஸமும் அஞ்ஞான அம்சத்துக்கு அதிஷ்டானமான கூடஸ்தனும் சேர்ந்தது ஜீவனென்றுசொல்லப்படும். இந்தஜீவஸ்வரூபத்தில் பிராஞ்ஞனுக்கு அபாவமில்லை. ஏனெனில் சுஷுப்தியில் அஞ்ஞான மிருக்கிறது. சுஷுப்தியிலுள்ள சைதன்னியத்தின் பிரதிபிம்பசகித அஞ்ஞானம்சம் புத்திரூபத்தை யடைகிறது, சேதனப் பிரதிபிம்பத்துடனுங் கூடியிருக்கிறது. இந்தச்சிதாபாஸசகித புத்தியில் புண்ணியாதி சமுசாரந் தோன்றுகிறது. இந்த அபிப்பிராயத்தால் சிலசாஸ்திரங்களில் புத்தி ஜீவனுடைய உபாதியென்று சொல்லப்பட்டிருக்கிறது. விசாரதிருஷ்டியால் பார்க்குமளவில் ஜீவனுக்கு உபாதி அஞ்ஞானமாயிருக்கிறது.

38
ஈசுவரவர்ணனை:—

---

38. ஈசுவரஸ்வரூபம் பலமதங்களில் பலவிதமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. (1) யோகமதத்தை அனுசரித்தவர்கள் சைதன்னியத்தின் சமீபத்திலிருக்கிற பிரகிருதியை பிரேரணை செய்யும் ஜீவனல்லாத புருஷனை ஈசுவரன் என்கிறார்கள். இந்த ஈசுவரன் கிலேசம் கர்மம், இதின்பலம் இவைகளன்றியிலும் ஜீவனைப்போல அசங்கசேதனமாயுமிருக்கிறார். ஜீவனுக்கும் கிலேசாதிகளில்லாவிட்டாலும் அவிவேகத்தினால் இவைகள் இருப்பதாகத்தோன்றுகின்றன. இதுவே ஜீவேசுவரர்களின்பேதம். (2) நியாயமதத்தை அனுசரித்தவர்கள் அசங்கனாயிருக்கிற ஈசுவரனுக்கு நியாமகத்துவம் கூடாதென்று ஆக்ஷேபித்து ஈசுவரனுடைய ஞானம் பிரயத்தினம் இச்சைரூபகுணங்கள் நித்தியமென்றும், ஆனதால்தான் ஜீவனைக்காட்டிலும் ஈசுவரன் வேறு என்றும் சொல்லுகிறார்கள். (3) ஈசுவரனுடைய ஞானாதிகள் நித்தியமானால் சிருஷ்டியின் ஆரம்பகாலத்தில் ஈசுவரனுடைய ஞானாதிகளுண்டாயின என்று சொல்லிய சுருதிக்கு விரோதமுண்டாகும். சிருஷ்டியும் எப்போதுமுண்டாயிக்கொண்டிருக்கவேணும். ஆகையால் நையாயிகமதம் பிசகு என்றும் ஹிரணியகர்பனே ஈசுவரன் என்றும் ஹிரணியகர்ப உபாசகர்கள் சொல்லுகிறார்கள். ஹிரணியகர்பனுக்கு லிங்கசரீரமிருந்தாலும் அவித்தை காமகர்மாதிகளில்லாதபடியால், ஹிரணியகர்பன் ஜீவனாகிறதில்லை. (4) ஸ்தூலதேகமன்றியில் லிங்கதேகம் எங்கும் காணப்படாதபடியால் விராட்உபாசகர்கள் விராட்புருஷனே ஈசுவரன் என்கிறார்கள். (5) ஹஸ்தபாதாதிகளுடன் கூடினவன் ஈசுவரனானால் புழுமுதல் எல்லாவற்றிற்கும் ஈசுவரத்துவம் சித்திக்கும். ஆகையால் ஹிரணியகர்பஉபாசகருடைய மதம் பிசகு என்றும் சதுர்முகபிர்ம்மாவே ஈசுவரன் என்றும் பிரஜையை இச்சிக்கிறவர்கள் சொல்லுகிறார்கள். (6) வைஷ்ணவர்கள் விஷ்ணுவின் நாபிகமலத்தினின்றும் பிர்ம்மா உண்டானவரானதால், விஷ்ணுவே ஈசுவரனென்கிறார்கள். (7) சைவர்கள், சிவனுடைய பாதத்தை கண்டுபிடிக்க விஷ்ணுவால் முடி

187 மாயையினிடத்திலுள்ள சேதனத்தின் ஆபாஸம், மாயையின் அதிஷ்டானசேதனம் இரண்டுஞ் சேர்ந்தது ஈசுவரனும்.[39] இந்த ஈசுவரன் மேகாகாசத்துக்குச்சமானமாயிருக்கிறன். இவன் அந்தரியாமியாயிருக்கிறன். ஏனெனில் எல்லாருடைய உள்ளிலுமிருந்துப்பிரேரணைசெய்கிறன். இவன் சதாமுக்தனுயிருக்கிறன். ஏனெனில் இவனுக்குத்தன் ஸ்வரூபத்தில் ஆவரணமில்லே. ஆனதால் இவனுக்கு ஜன்மமரணுதி பந்தம் தோன்றுகிறதில்லே. இக்காரணத்தால் ஈசுவரன் நித்தியமுக்தனென்று சொல்லப்படுகிறன். மேலும் ஈசுவரன்சர்வஞ்ஞன், சகலபதார்த்தங்களேயும் அறியப்பட்டவன். ஏனெனில்மாயையினிடத்தில் சுத்தசத்துவகுணமுண்டு. தமோகுண ரஜோகுணங்களால் மறைபடாமல் அவைகளே மறைக்கிறசத்துவகுணம் சுத்தசத்துவகுணமெனப்படும். சத்துவகுணத்தினின்றும் ஞானமுற்பத்தியாகின்றது. ஆகையால் சத்துவகுணம் பிரகாசஸ்வபாவமுள்ளது. இப்பேர்ப்பட்ட

---

யாமல் போயிவிட்டபடியால், சிவனே ஈசுவரன் என்கிறர்கள். (8) கணபதி உபாசகர்கள், திருபுராசுரனே ஜெயிக்க கணபதியை சிவன் பூஜித்தபடியால் கணபதியே ஈசுவரன் என்கிறர்கள். (9) பைரவ மைரலாதி உபாசகர்கள், மாரண, உச்சாடன, வசிகரணுதி சிததிகளுக்கு ஹேதுவான பைரவாதிகளின் மந்திரங்களேயும், அவைகளின் ஸ்தோத்திரங்களேயும், இம்மந்திர தந்திரங்களே பற்றிச்சொல்லிய கிரந்தங்களேயும் பிரமாணமாகக்கொண்டு பைரவாதிதேவதைகளே ஈசுவரனுக வர்ணிக்கிறர்கள். இவ்விதமாக மேற்சொல்லிய மதங்களெல்லாம் ஒன்றுக்கொன்று வித்தியாசப்படுகின்றன. சகலமதங்களுக்கும் அவிருத்தமானது கிரந்தத்திற் சொல்லிய ஈசுரஸ்வரூபமே.

39. மாயையிலுள்ள புத்திவாசனேயில் உண்டாகும் சேதனப்பிரதிபிம்பம் ஈசுவரனென்று வித்தியாரண்யஸ்வாமிகள் பஞ்சதசிப்பிரகரணத்தில் சொல்லியிருக்கிறர்கள். ஈசுவரன் மேகாகாசத்துக்குச்சமானமென்பதில் மேகத்துக்குச்சமானம் மாயை, மேகஜலத்துக்குச்சமானம் புத்திவாசனே, அச்சலத்திலுள்ள ஆகாசபிரதிபிம்பத்துக்குச்சமானம் சிதாபாஸன், புத்திவாசனேயில் உண்டாகிற பிரதிபிம்பத்துக்கு ஈஸ்வரனென்று சொன்னதினுல் யாதொருதோஷமுமில்லே. ஏனெனில் மாயாரூப அஞ்ஞானமே ஈஸ்வரபாவத்துக்கு உபாதியாயிருந்தாலும் புத்திவாசனே அஞ்ஞானத்தில் அந்தர்க்கதமாயிருக்கின்றது. சர்வஞ்ஞத்துவத்துக்குக்காரணம் அஞ்ஞானத்தின் சத்துவகுணம். இது ஞானரூபஸகல புத்திக்கும் உபாதானகாரணமாக இருக்கிறது. ஆனதால் சுஷுப்தியில் சகலபுத்தியும் தனக்குபாதானமான அம்சத்தில் லயமாகி உபாதானரூபமாகவே இருக்கிறது. உபாதானரூபமாயிருப்பதே சூக்ஷுமசம்ஸ்காரமென்னப்படும். இச்சம்ஸ்காரமே வாசனேயென்னப்படும். இவ்விதமாக அஞ்ஞானத்திலுள்ள சத்துவாம்சத்துக்கு வேருக வாசனே இல்லே. ஆகையால் புத்திவாசனேசப்தத்தால் அஞ்ஞானத்திலுள்ள சத்துவாம்சமே கிரகிக்கத்தக்கது.

சத்துவகுணத்தோடேகூடிய மாயையினிடத்திலிருக்கிற சேதனுபாஸத்து க்குத்தன் ஸ்வரூபத்தினிடத்திலாவது வேறு பதார்த்தத்தினிடத்திலாவது ஆவரணம் சம்பவிக்கிறதில்லை. ஆகையால் ஈசுவரன் முக்தன் சர்வஞ் ஞன்.

ஜீவேஸ்வரர்களிடத்திலுள்ள அதிஷ்டான சைதன்னியம் பந்த மோக்ஷ பேதங்களன்றியில் இருக்கிறது. ஆகாசம்போல் ஒரே தன்மை யாயிருக்கிறது. ஆனல் ஆபாஸனிடத்தில் பந்தமோக்ஷங்களிருக்கின்றன. அதிஷ்டானத்தினிடத்தில் ஆபாஸனுக்குப்பிராந்தியால் அவைகள் தோ ன்றுகின்றன. ஆகையால் கேவலம் ஆபாஸனிடத்தில் பந்தமோக்ஷங்க ளிருக்கின்றன. இதிலும் இவ்வளவு பேதமிருக்கிறது. எந்த ஆபாஸனி டத்தில் ஆவரண மிருக்கிறதோ அவனிடத்தில் பந்த மிருக்கிறது. எவ னிடத்தில் சொரூபாவரணமில்லையோ அவன் முக்தனுயிருக்கிறான். ஈசுவரனிடத்தில் ஆவரணமில்லாமையால் ஈசுவரன் சதா முக்தனுயிரு க்கிறான். ஜீவனிடத்தில் ஆவரணமிருப்பதால் ஜீவன்பா றுன். ஏனெனில் எந்த அவித்தியாம்சத்தில் உண்டாகிற சைதன்னியத்தி னுபாஸத்துக்கு ஜீவனென்று பெயரோ அந்த அவித்தைக்கு ஆவரணம் பண்ணல் சுபாவமாயிருக்கிறது. அவித்தை அஞ்ஞானம் மாயை இவை கள் ஒரே வஸ்துவுக்குப் பெயராயினும், சுத்தசத்துவகுணப்பிரதானத் தால் மாயை யென்றும் மலினசத்துவகுணப்பிரதானத்தால் அஞ்ஞானம் அவித்தை யென்றும் சொல்லப்படும். ரஜோகுண தமோகுணங்களுக் குச்சுவாதீனமான சத்துவகுணம் மலினசத்துவகுணமெனப்படும். அவி த்தையில் ரஜோகுண தமோகுணங்கள் அதிகமாயிருப்பதால் அவித்தையி லுள்ள ஜீவனுடைய ஆபாஸாம்சத்துக்கு அவித்தையானது சொரூபாவர ணஞ்செய்கிறது. ஆனபடியால் ஜீவனிடத்தில் பந்தம் இருக்கிறது, ஈசுவரனிடத்திலில்லை. அதிஷ்டானசேதன சகிதமான மாயையிலுள்ள ஆபாசரூப ஈசுவரன் தத்பதத்தின் வாச்சியார்த்தம். கேவலம் அதிஷ்டா னசேதனம் தத்பதத்தின் லக்ஷியார்த்தம். ஈசுவரன் ஜகத்தினுற்பத்தி பரிபாலனம் சம்ஹாரம் இவைகளைச் செய்கிறாரென்று சாஸ்திரத்திற்சொ ல்லியதற்கு அபிப்பிராய மென்னவெனில், சேதனும்சம் ஆகாசம்போல் அசங்கமாயிருக்கிறது. ஆபாசாம்சம் ஜகத்தின் உற்பத்தி முதலியவைக ளைச்செய்கிறது. அதனிடத்திலேயே சர்வஞ்ஞத்துவமிருக்கிறது. பக் தர்களை யனுக்கிரகிப்பதும் ஆபாசாம்சமே. இன்னும்மற்ற ஐசுவரியங்க ளும் கேவலம் ஆபாசனிடத்தி லிருக்கின்றன. சேதனும்சம் ஏரேவிதமா யிருக்கிறது. அதனிடத்தில் ஸத்தாஸ்பூர்த்தி கொடுக்கிறதைத் தவிர வே[40]

40. இருத்தல் விளங்குதல்.

ஜுஜுகவுரியமில்லை.

188. பிர்ம்மஸ்வரூபவர்ணனை:— பிர்ம்மாண்டத்துக்கு உள்ளும் புறமும் மகாகாசம்போல நிறைந்திருக்கிற சேதனம் பிரம்மமென்று சொல்லப்படும். இந்தப் பிர்ம்மம் தூரத்திலும் இல்லை சமீபத்திலும் இல்லை. ஏனெனில் எந்த வஸ்து தனக்குப்பின்னமாகவும் தேசரூபஉபாதியோடே கூடியுமிருக்கிறதோ அது சமீபத்திலும் தூரத்திலும் இருக்கிறதாகச்சொல்லப்படும். பிரம்மம் பின்னமன்று ஆனால் எல்லா வஸ்துக்களுக்கும் ஆத்மாவாயும் தேசாதிசர்வ உபாதிரகிதமாயுமிருக்கிறது. ஆகையால் அது தூரத்திலும் சமீபத்திலு மிருப்பதாகச்சொல்லக்கூடாது. பிர்ம்மசப்தத்தின் வாச்சியம் ஸோபாதிகமாயிருக்கிறது. ஏனெனில் வியாபக வஸ்துவுக்குப் பிர்ம்மமென்று பெயர். இந்த வியாபகத்துவம் ஆபேக்ஷிக வியாபக மென்றும் நிரபேக்ஷிகவியாபகமென்றும் இருவகையாம். எந்த வஸ்து எந்தப்பதார்த்தத்தை யபேக்ஷித்து வியாபகமாக இருக்கிறதோ எதை யபேக்ஷித்து வியாபகமாக இல்லையோ அவ்வஸ்து வினிடத்தில் ஆபேக்ஷிகவியாபகத்துவஞ்சொல்லப்படுகிறது. உதாரணம்:— பிருதிவியாதிகளை யபேக்ஷித்து மாயைவியாபகமாயிருக்கிறது. சேதனத்தை யபேக்ஷித்து அப்படியிருக்கவில்லை. ஆகையால் மாயையினிடத்தில் ஆபேக்ஷிகவியாபகத்துவ மிருக்கிறது. எந்தவஸ்து எல்லாவற்றையு மபேக்ஷித்து வியாபகமாயிருக்கிறதோ அவ்வஸ்துவினிடத்திலுள்ள வியாபகத்துவம் நிரபேக்ஷிகவியாபகத்துவமென்று சொல்லப்படும். இந்தநிரபேக்ஷிகவியாபகத்துவம் சேதனத்திலிருக்கிறது. ஏனெனில் சேதனத்துக்குச்சமானமாகவாவது அதிகமாகவாவது வேறு யாதொன்றும் வியாபகமாகவில்லை. ஆனால் சைதன்னியமே எல்லாவற்றிற்கும் அதிகவியாபகமுள்ளது. ஆகையால் சேதனத்தினிடத்தில் நிரபேக்ஷிக வியாபகத்துவ மிருக்கிறது. இந்தஇரண்டு விதவியாபகத்துவங்களுங் கூடிய வஸ்து பிர்ம்மசப்தத்தின்வாச்சியார்த்தம். மாயாவிசிஷ்டசேதனத்தில் இவ்விருவகை வியாபகத்துவங்களு மிருக்கின்றன. ஏனெனில் மாயையினிடத்தில் ஆபேக்ஷிகவியாபகத்துவமும் சேதனத்தினிடத்தில நிரபேக்ஷிகவியாபகத்துவமும் இருக்கின்றன. சேதனத்தின் ஏகதேசத்தில்[41] மாயையிருப்பதாலும் மாயாவிசிஷ்ட சேதனத்தைவிடச் சுத்தசேதனம் அதிகவியாபகமுள்ளதாகையாலும் சுத்தசேதனத்தினிடத்தில் நிரபேக்ஷிகவியாபகத்துவம் இருக்கிறதேதவிர மாயாவிசிஷ்டசேதனத்

---

41. கடத்தை உண்டாக்கும்படியான சக்தி எந்தமண்ணிலுமில்லை. களிமண்ணில் மட்டுமிருக்கிறது. இதைப்போல் மாயையும் பிரம்மத்தில் எங்குமில்லாமல் ஏகதேசத்திலிருக்கிறது.

இனிடத்தில் நிரபேக்ஷிக வியாபகத்துவம் சொல்லக்கூடாது. ஆயினும் மாயாவிசிஷ்டசேதனம் பாரமார்த்திகத்தில் சுத்தசைதன்னியத்துக்கு வேருகாமல் அதாகவே இருக்கிறது. ஆகையால் மாயாவிசிஷ்டத்திலுமுள்ள சேதனும்சத்துக்கு நிரபேக்ஷிக வியாபகத்துவமிருக்கிறது. இவ்விதமாகமாயாவிசிஷ்டமே பிர்மம் சப்தத்தின்வாச்சியமாகச்சொன்னதுசரியே. சுத்தசேதனம் பிர்ம்மசப்தத்துக்குலக்ஷியார்த்தம். ஆகையால் ஈசுவர பிர்ம்ம சப்தங்களுக்கு ஒரே அர்த்தம் பிரதீதியாகிறது. வெவ்வேறு அர்த்தங்கள் பிரதீதியாகிறதில்லே. ஆயினும் பிர்ம்மசப்தத்துக்குச் சுபாவமென்னவெனில் அனேகவிடங்களில் லக்ஷியார்த்தத்தையும் சிலவிடங்களில் வாச்சியார்த்தத்தையும் தருதலே. ஈசுவரசப்தத்துக்குச்சுபாவமென்ன வெனில் பலவிடங்களில் வாச்சியார்த்தத்தையும் சிலவிடங்களில் லக்ஷியார்த்தத்தையும் தருதலே. இவ்விதபேதமிருப்பதால் பிர்ம்மசப்தத்துக்கு அர்த்தம் தனியாயெழுதப்பட்டது.

189 சிஷ்யனே, நான்குவிதச்சேதனங்களையும் சொன்னேன். இவைகளில் ஜீவனுடையஸ்வரூபத்திலுள்ள மித்தியாஆபாஸாம்சம் புண்ணியபாபங்களைச்செய்து அவைகளின் பலன்களை யனுபவிக்கிறது. கூடஸ்தனுகிற சேதனம் கலியாணரூபமாக இருக்கிறது.

190 168—169-ம்பிரிவுகளுக்குஉத்தரம்—190—192:—ஆகையால், புத்திரூபவிருக்ஷத்தில் பரமாத்மா ஜீவன் என்கிற இரண்டு பக்ஷிகளிருப்பதாக முதலில் நீ யாதொருசங்கை கொண்டாயோ அதற்கு உத்தரம் என்னவெனில் பரமாத்மாவும் ஜீவனும் வெவ்வேருயிருக்கிறதாக நினைக்கத்தக்கதல்ல. ஆனுல் கூடஸ்தன் பிரகாசிப்பிக்கிருன் ஆபாஸன் போகிக்கிருன் என அறியத்தக்கது.

191 ஜீவஸ்வரூபத்திலுள்ள சேதனத்தின் சாயையாகிற ஆபாஸாம்சம் கர்மத்தைச் செய்கிறது. இப்படிக் கர்மஞ் செய்கிற ஆபாஸாம்சத்துக்கு ஈசுவரனுடைய ஆபாஸாம் சம்பலனைக் கொடுக்கிறது. இரேழியிலிருக்கிற தீபமானது அதற்கு முன்பக்கம் பின்பக்கங்களைப் பிரகாசிப்பிக்கிறதினுல் அவைகளுடன் சம்பந்தப்படுகிறதுபோல் சேதனத்தின்சாயையும் ஈசுவரனிடத்திலும் மற்றிடங்களிலும் சம்பந்தப்படுகிறது. ஆபாஸனே கர்மீ ஆபாஸனே பலதார்தா. இதனுல் என்ன சித்தியாகிறதெனில் ஜீவஸ்வரூபத்திலுள்ள ஆபாஸாம்சம் புண்ணியபாபங்களைச்செய்து அவைகளின் பலன்களை யனுபவிக்கிறது. ஈசுவரனிடத்திலுள்ள ஆபாசாம்சம் கர்மபலத்தைக்கொடுக்கிறது. இவ்விருவர்களின் சேதனும்சத்தில் யாதொருபேச்சுக்குமிடமில்லே. தெளிவாய்ச்சொல்லின், ஜீவசைதன்னியத்

இனிடத்தில் கர்மம் கர்மபலபோகம் இவைகளின் சம்பந்தமில்லை. ஈசுவர் சேதனத்தினிடத்தில் பலத்தைக் கொடுக்கிற சம்பந்தமில்லை. இச்சேதனத்தினிடத்தில் இவைகள் இருப்பதாகச் சொல்லுகிறவன் மூடன். ஏனெனில் சேதனம் இரண்டிடங்களிலும் அசங்கமாயும் ஏகரூபமாயும் இருக்கிறது. அதிஷ்டானத்தில் யாதொரு பேதமுமில்லை. ஜீவசேதனத்தை ஈசுவரசேதனத்துக்கு வேறாகவும் ஈசுவரசேதனத்தை ஜீவசேதனத்துக்கு வேறாகவும் நினைக்கிறவன் நிந்திக்கத்தக்கவன். இப்படிச்சொல்வதினால் "ஜீவனும் பரமாத்மாவும் ஒன்றென வங்கீகரிக்கும் பக்ஷத்தில் கர்மோபாஸனைகளைப்பிரதிபாதிக்கும் வேதம் நிஷ்பிரயோஜனமாகுமே" என நீ கொண்ட இரண்டாவது சங்கைக்குச்சமாதானஞ் சொல்லப்பட்டது. ஜீவேஸ்வரர்களுடைய சேதனபாகம் அபேதமாயும், ஆபாஸபாகம் பேதமாயுமிருக்கின்றன. ஆகையால் இரண்டுவசனங்களுஞ்சரியே.

192 சிஷ்யனே, உன்னுடைய கேள்வியில் கண்டஇரண்டுபக்ஷிகளும் கூடஸ்தனும் புத்தியிலுள்ளஆபாஸனுமே. இவைகள்கடாகாசம் ஆகாசபிம்பம்போல்பின்னப்படுகின்றன. உன்னுடைய மற்றொரு கேள்வியில் கண்ட கர்மியும் பலதாதாவும் முறையே ஜீவேஸ்வரர்களன்று. ஆனால் ஜீவனுடைய ஆபாஸாம்சம் கர்மத்தைச்செய்கிறது. ஈசுவரனுடையஆபாசாம்சம் பலத்தைக் கொடுக்கிறது. ஜீவேசுவரர்களுடைய சேதனம்சம் கடாகாசம் மகாகாசம்போல் பேதமற்றது. இவ்விதமாக ஜீவப்பிர்ம்மங்களின் ஏகத்துவஞ் சித்திக்கிறது. ஆகையால், சிஷ்யனே, "நான் பிர்ம்மம்"என்று நீ அறிவாயாக. இதில் நான் என்பதினால் கூடஸ்தனையும் பிர்ம்மமென்பதினால் மகாகாசம்போல் பிர்ம்மத்தின லக்ஷியார்த்தத்தையும் அறிந்து கொள்ளவேண்டியது. நான்சப்தத்துக்கும் பிர்ம்மசப்தத்துக்கும் வாச்சியார்த்தம் அபேதமாக இல்லை. லக்ஷியார்த்தம் அபேதமாயிருக்கிறது. சிஷ்யனே, எதுவரையில் நான்பிர்மம்என்று நீ அறியவில்லையோ அது வரையில் நீ தீனன் துக்கியென்று நினைத்துக்கொள். பரமாத்மாவை உனக்கு வேறாக நினைப்பது உன் பயத்துக்கு[42] ஹேதுவாகும். ஆகையால் "நான் பிர்ம்ம"மென்று நீ யறி.

(2) நான் பிர்ம்மமென்கிற ஞானம்

யாருக்குண்டாகிறது (193—203)

193. கேள்வி:— சுவாமின் "நான் பிரம்மம்" என்கிற ஞானம்

42. ஜனனமரணரூப சமுசாரபயம்.

யாருக்குண்டாகிறது. இதைத் தேவரீர் தயவுசெய்து சொல்லியருளவேண்டும். நீங்கள் சொல்லாவிடின் நான் எதார்த்தத்தை அறிந்து கொள்ளமாட்டேன். இக்கேள்வியால் சீஷனுடைய மனதிலுள்ள அபிப்பிராயம் வருமாறு:— நான் பிர்ம்ம மென்கிற ஞானம் கூடஸ்தனுக் குண்டாகிறதா அல்லது ஆபாஸ ஸகிதபுத்திக்குண்டாகிறதா?. கூடஸ்தனுக்குண்டாகிறதாகச் சொல்லும்பக்ஷத்தில் கூடஸ்தன் ஸம்ஸாரியாவான். ஆபாஸ ஸகிதபுத்திக்குண்டாகிறதாகச் சொல்லும்பக்ஷத்தில் நான் பிர்ம்ம மென்கிற ஞானம் பிராந்திரூபமாகும். ஏனெனில் கூடஸ்தனும் பிர்ம்மமு மொன்று ஆபாஸன் வேறு என்று நீங்கள் முன்னமேயே (180) சொல்லி யிருக்கிறீர்கள். ஆனதால் பிர்ம்மத்துக்கு வேறான ஆபாஸனை பிர்ம்மரூபமாக அறிதல் பிராந்தியேயாகும். சர்ப்பத்துக்கு வேறான ரஜ்ஜுவை சர்ப்பரூபமாயறிதல் பிராந்தியாவதுபோலும். ஆனதால் ஆபாஸசகிதபுத்திக்கு "நான் பிர்ம்ம" மென்கிற ஞானம் யதார்த்தமன்று பிராந்திதான். ஒருக்கால் 'நான் பிர்ம்மம்' என்னும் ஞானத்தைப் பிராந்திரூபமாகவே யங்கீகரித்தாலும் இந்த ஞானத்தால் மித்தியாஜகத்து நிவர்த்தியாகமாட்டாது. ஆனால் யதார்த்த ஞானத்தால் மித்தியை நிவர்த்தியாகும். ரஜ்ஜுவின் யதார்த்த ஞானத்தால் மித்தியாசர்ப்பம் நிவிர்த்தியாகிறதுபோலும். இவ்விதமாக 'நான் பிர்ம்மம்' என்கிற ஞானம் ஆபாஸ ஸகித புத்திக்கு ண்டாகிறதாகச் சொல்லக்கூடாது.

194 குருஉத்தரம்(194—201):— சீஷனே, இப்போது ஆபாஸனுடைய ஏழு அவஸ்தைகளையுஞ் சொல்லுகிறேன் கேள். இவ்வேழில் யாதொன்றும் சேதனமாகிற கூடஸ்தனுக்குண்டாகிறதில்லை. நான் பிர்ம்மமென்கிற ஞானம் இவ்வேழிலொன்றாகயிருக்கிறது.

195 அவ்வேழவஸ்தைகளாவன — (1) அஞ்ஞானம் (2) ஆவரணம் (3) பிராந்தி (4) பரோக்ஷஞானம் (5) அபரோக்ஷஞானம் (6) சோகநாசம் (7) அதிஹர்ஷம்

196 அஞ்ஞான ஆவரணஸ்வரூபங்கள் — சீஷனே "நான்பிர்ம்மத்தையறியவில்லை, என்கிறவியவஹாரத்துக்கு க்காரணம் அஞ்ஞானம். பிர்ம்மமில்லை விளங்கவுமில்லை , இந்தவியவஹாரத்துக்குகாரணம் ஆவரணம். ஆவரணத்தால் இருவகைவியவஹாரங்களுண்டாகின்றன. ஏனெனில், அஞ்ஞானத்தின்சக்திகள் இரண்டு. ஒன்று அஸத்வாபாதகம் மற்றொன்று அபானபாதகம். இவ்விரண்டிற்கும் ஆவரணமென்று பெயர். வஸ்து இல்லையென்று, தோன்றும்படிச்செய்யுஞ் சக்தி அஸத்வாபாதகமெனப்படும் வஸ்து விளங்கவில்லை யென்று தோன்றும்படிச் செய்யும் அஞ்ஞானத்தி

ன் சக்தி அபானுபாதகமென்னப்படும். ஆகையால் 'பிர்ம்மமில்லை' என்கிற வியவஹாரத்துக்குக்காரணம் அஞ்ஞானத்தின் அஸத்வாபாதகசக்தியாம். பிரம்மம் விளங்கவில்லை யென்கிற வியவஹாரதுக்குக் காரணம் அஞ்ஞானத்தின் அபானுபாதகசக்தியாம். இவ்விரண்டுக்கும் ஆவரணமென்று பெயராம்.

197. பிராந்திஸ்வரூபம்:— கூடஸ்தனிடத்தில் தோன்றுகிற ஜன்மாதிசமுசாரம் வேதத்தில் பிராந்தியெனச்சொல்லப்படுகிறது[43]. இதற்கே சோகமென்று பெயராகும்.

198. பரோக்ஷாபரோக்ஷ ஞானங்கள்:— 'பிர்ம்ம மில்லை' என்னும் ஆவரணுஞ்சத்தைப் "பிர்ம்மமிருக்கிறது" என்கிற பரோக்ஷஞானம் நாசஞ்செய்கிறது. ஏனெனில் "பிரம்மம் சத்திய ஞான அனந்த ரூபமாயிருக்கிறது" என்கிற ஞானத்துக்குப் பரோக்ஷ ஞானமென்று பெயர். இந்தப்பரோக்ஷஞானம் "பிர்ம்மமில்லை" என்னும்பிரதீதிக்கு விரோதமா யிருக்கிறது வேறொன்றுக்கும் விரோதமில்லை. 'நான் பிரம்ம' மென்னும் அபரோக்ஷஞானம் சகல அவித்தியாசமூகத்துக்கும் விரோதியாயிருக்கிறது. இக்காரணத்தால் 'பிர்ம்மத்தை நான் அறியவில்லை' என்கிற அஞ்ஞானம் "பிர்ம்மமில்லை விளங்கவில்லை" என்கிற ஆவரணம் நான் பிர்ம்மமன்று ஆனால் புண்ணிய பாபங்களைச் செய்து சுக துக்கங்களை யனுபவிக்கிறஜீவன்" என்கிற பிராந்தி, இந்த அவித்தியா சமூகத்தை அபரோக்ஷஞானம் நாசம்பண்ணுகிறது.

199 பிராந்திநாசவர்ணனை:— என்னிடத்தில்ஜன்மமில்லைமரணமில்லை சுகதுக்காதிகளின் லேசமுமில்லை சமுசாரத்தின் யாதொரு தர்மமும் என்னிடத்தில் இல்லை. ஆனால் நான்ஜனனமிலலாத கூடஸ்தனாயிருக்கிறேன். இவ்விதமாகச்சர்வஅனர்த்தங்களையும் நிஷேதித்தலே பிராந்திநாசத்தின் ஸ்வரூபமென்று சொல்லப்படுகின்றது. இவ்விடத்தில் கூடஸ்தனிடத்தில் ஜனனத்தை நிஷேதித்ததினால் ஸர்வஅனர்த்தங்களையும் நிஷேதித்ததாகக் கொள்ளவேண்டியது. ஏனெனில் ஜனனத்துக்கும்பிறகுதான் அனர்த்தங்கள்பிரதீதியாகின்றன ஜனனத்தை நிஷேதிக்கிறதினால் சகலஅனர்த்தங்களும் நிஷேதிக்கப்படுகின்றன, இந்தப்பிராந்திநாசத்துக்குச் சோகநாசமென்றும் பெயர்.

---

43. இதற்கே அத்தியாசமென்றும், விக்ஷேபமென்றும் பெயர்.

200 ஹர்ஷஸ்வரூபம்:— சீஷனே நான்அத்வயப்பிர்ம்மஸ்வரூபம் என்று உனக்குச்சமுசயமில்லாதஉன்ஸ்வரூபஞானமும் எப்போது உண்டாகிறதோ அப்போது உனக்குண்டாகும்ஆனந்தத்துக்கு ஹர்ஷமென்று[44] பெயர்.

201. நான்இப்போது உனக்குஏழுவஸ்தைலக்ஷணங்களையும் விவரமாய்ச் சொன்னேன். இவைகளெல்லாம் ஆபாஸனுக்கேயிருக்கின்றன இவைகளில், நான் பிர்ம்மம், என்கிறஞானமும்ஆபாஸனுக்கே யுரியது. ஞானம் யாருக்குண்டாகிறது என்கிறகேள்விக்குத்தரஞ்சொன்னேன். இன்னும் ஏதாவது கேட்கவிரும்பினல் கேள்.

202. கேள்வி:— முன் [193] சீஷன் கேள்விகேட்டகாலத்தில் மனதிற் கொண்டிருந்த அபிப்பிராயத்தை இபோது வெளியிடுகிறுன். சுவாமின் கூடஸ்தனும் பிர்ம்மமும் ஒன்றென்றும் ஆபாஸன் பிர்ம்மத்துக்கு வேறென்றும் தேவரீர் முன் சொல்லியிருக்கிறீர்கள். இப்படிப்பிர்ம்மத்துக்கு வேறுயிருக்கிற ஆபாஸனுக்கு நான் பிர்ம்மம், என்கிற பிர்ம்மரூபஞானம் உண்டாகமாட்டாது ஆனல் தனக்கு அதிஷ்டாணமாகிய கூடஸ்தன் பிர்ம்மரூபமாயிருக்கிறுன் என்று ஆபாஸனுக்கு ஞானமுண்டானல் அது யதார்த்தஞானமாயிருக்கும். நான் பிர்ம்மம் என்கிற ஆபாஸனுடைய ஞானம் யதார்த்தஞானமன்று. ஏனெனில் நான் என்றுல் தன்ஸ்வரூபம். ஆபாஸன் மித்தியாஸ்வரூபன், ஆனதால் பிர்மமத்துக்கு வேறுயிருக்கிறுன். இப்படிப் பிர்மமத்துக்கு வேறுயிருக்கிற ஆபாஸஸ்வரூபத்தைப் பிரம்மஸ்வ

---

44. இந்த ஆனந்தத்துக்கு வித்தியாரண்யசுவாமிகள் பஞ்சதசிபிரகரணத்தில் "நிரங்குச திருப்தி" என்று பெயரிட்டிருக்கிறுர். விஷயாநந்தம் மேல் மேல் ஆனந்தத்தை இச்சிக்கிறபடியால் அது சாங்குசமாயிருக்கிறது. பிரம்மாநந்தத்துக்கு மேலான ஆனந்தமில்லாதபடியால் அது நிரங்குசமாயிருக்கிறது. தசமனுடையகதையில் தசமன் தன்னைவிட்டு மற்றென்பதுபேர்களை யெண்ணித் தான் தசமனென்று அறியாமலிருப்பது அஞ்ஞானம். தசமன் இல்லை விளங்கவில்லை யென்பது ஆவரணம். தசமன் இறந்துபோய்விட்டானென்று நினைத்து அழுதல் சோகம். இதுவே பிராந்தி அல்லது விக்ஷேபம் என்னப்படும். தசமன் இறந்துபோகவில்லை இருக்கிறுன் என்கிறதை இஷ்டனுடைய வார்த்தையால் அறிவது பரோக்ஷஞானம். நீயேதசமனென்று காண்பிக்கப்பட்டுத்தன்னை யறிவது அபரோக்ஷஞானம். இப்படி யறிந்தபின் அழுகையை நிறுத்தல் பிராந்தி நாசம். தான் தசமனென்று அறிந்ததினுலுண்டாகும் சந்தோஷம் அதிஹர்ஷம். இவ்விதமாகத்திர்ஷ்டாந்தத்திற் காட்டிய தசமனுடைய ஏழுவஸ்தைகளும் சிதாபாசவிஷயத்தில் கிரந்தத்திற் சொல்லியபடிக்காணப்படுகி

ரூபமாக அறிவது மித்தியாஞானமாகும். சர்ப்பத்துக்கு வேறான ரஜ்ஜு-
வைச் சர்ப்பரூபமாக அறியும் ஞானம் மித்தையாவதுபோலும். மித்தை
யென்றால் பிராந்தி. இந்தப் பிர்ம்ம ஞானத்தைப் பிராந்திரூபமாகச் சொ
ல்வதுசரியன்று.

203. குரு உத்தரம்:— நான் என்னும் சப்தத்தின் அர்த்தத்தைச்
சொல்லுகிறேன் கேள். அதனால் உன்னிருதயத்திலுள்ள சங்கையாகிற
களங்கம் நிவிர்த்தியாய்விடும். சிஷ்யனே, 'நான் பிர்ம்ம' மென்கிற ஞானம்
புத்திஸஹித ஆபாஸனுக்குண்டானாலும் கூடஸ்தனுக் குண்டாகாவிட்டாலு
ம் ஆபாஸன் கூடஸ்தனையும் தன் ஸ்வரூபத்தையும் ஆத்மாவாக அதா
வது தானாகவே அறிகிறான். இந்த 'நான்' சப்தத்தில் விளங்குகிற கூடஸ்
தனுக்குப் பிர்ம்மத்துடன் எப்போதும் அபேதமிருக்கிறது. கடாகாசத்
துக்கும் மகாகாசத்துக்கும் எப்போதும் அபேதமிருப்பதுபோலும். இக்
காரணத்தினால் கூடஸ்தனுக்குப் பிர்ம்மத்துடன் முக்கியஸமானாதிகரணம்[45]
வேதாந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. எந்த வஸ்துவுக்கு எந்த வஸ்
துவுடன் சங்கம் எப்போதும் அபேதமாயிருக்கிறதோ அவ்வஸ்துவுக்கு,
அதனுடன் சங்கம் முக்கியஸமானாதி கரணமென்று சொல்லப்படுகிறது.
கடாகாசத்துக்கு மகாகாசத்துடன் சங்கம் எப்போதும் அபேதமாயிருக்
கிறது. ஆகையால் கடாகாசம் மகாகாசமாயிருக்கிறது. ஆகையால்
கடாகாசத்துக்கு மகாகாசத்துடன் சங்கம் முக்கியஸமானாதிகரணம்.
இவ்விதமாகக்கூடஸ்தனுக்குப் பிர்ம்மத்துடன் சங்கமும் முக்கியஸமானாதி
கரணமே. ஏனெனில் கூடஸ்தனுக்கும் பிர்ம்மத்துக்கும் எப்போதும்
அபேதம். ஆகையால் "நான்" என்கிற சப்தத்தில் விளங்குகிற கூடஸ்
தனுக்குப்பிர்ம்மத்துடன் சங்கம் எப்போதும் அபேதமாயிருக்கிறது.

---

ன்றன. கூடஸ்தன் அஸங்கனாயும் நிர்விகாரமாயுமிருப்பதால் இவ்வவஸ்தைக
ள் சிதாபாஸனுக்கே யேற்படுகின்றன. இவ்வேழவஸ்தைகளில் அஞ்ஞானம்,
ஆவரணம், விக்ஷேபம் இம்மூன்றும் பந்தத்துக்குக்காரணங்களாயிருக்கின்றன
மற்ற நான்கும் மோக்ஷத்துக்குச்சாதனங்களாயிருக்கின்றன.

45. வெவ்வேறு அர்த்தங்களோடு கூடியும் வாக்கியத்தில் ஒரேவேற்று
மைபலத்தால் ஒரே லக்ஷியார்த்தத்தைக்கொடுக்கிறவையாயுமிருக்கிற இரண்டுப
தங்கள் சமானாதிகரணமென்னப்படும். இப்பதங்களின் சம்பந்தம் சாமானாதி
கரண்ய மென்னப்படும். இது முக்கியசாமானாதிகரண்யமென்றும், பாதாசா
மானாதிகரண்யமென்றும் இருவகை. ஜீவபிர்ம்மஐக்கியங்களைப்போதிக்கிற மகா
வாக்கியங்களில் சாமானாதிகரண்யத்தை யறியத்தக்கது. 6-வது தரங்கம் 104-வ
து குறிப்பைப்பார்க்க.

மேலும், "நான்" சப்தத்தில் விளங்குகிற ஆபாஸனுக்குத்தன் ஸ்வரூபம் பாதிக்கப்பட்டுப்பிர்ம்மத்துடன் அபேதம் சித்திக்கிறது. முகத்தின் பிரதிபிம்பத்துக்குப் பிம்பமாகிற முகத்துடன் சங்கம பிரதிபிம்பம பாதிக்கப்பட்டு அபேதப்படுகிறதுபோலும். இக்காரணத்தினால் வேதாந்தத்தில் ஆபாஸனுக்குப்பிர்ம்மத்துடன் சங்கம பாத ஸமானாதிகரணமென்று சொல்லப்படுகிறது. எந்த வஸ்து பாதிக்கப்பட்டு எத்துடன சங்கம் அபேதப்படுகிறதோ அந்த வஸ்துவுக்கு அதனுடன் சங்கம் பாத ஸமானாதி கரணமென்று சொல்லப்படுகிறது. முகத்தின் பிரதிபிம்பம் பாதிக்கப்பட்டு முகத்துடன் அபேதப்படுகிறதினால் பிரதிபிம்பம முகமாயிருக்கிறதே தவிர வேறாயில்லை. இது பாதஸமானாதி கரணமாம். இனனும் ஒருதாகரணம்:— கட்டையில் புருஷப்பிரமையுண்டாகித கட்டையெனத்தெறிந்த பிறகு புருஷன் கட்டைஎன்பதில் புருஷனுக்குக் கட்டையுடன் பாதஸமானாதிகரணம் சித்திக்கிறது. இதுபோல ஆபாஸன் பாதிக்கப்பட்டுப் பிர்ம்மத்துடன் அபேதப்படுகிறது.ஆகையால் நான்சப்தத்தில் விளங்குகிற ஆபாஸன் பிர்மமத்துக்கு வேறாகஇல்லை. சிஷ்யனே, இவ்விதமாக "நான்" சப்தத்தில் விளங்குகிற கூடஸ்தனுக்கு முக்கிய அபேதமும் ஆபாஸனுக்குபாதையால் அபேதமும சித்திகின்றன.

(3) கூடஸ்தாபாஸர்களதோன்றுங்காலம். (204—232).

204. கேள்வி:— ஸ்வாமின், அஹம (நான்) விர்த்தியில் சாக்ஷியும் ஆபாஸனும் விளங்குகின்றன வெனத் தேவரீர சொன்ன விஷயத்தில் நான் ஒரு சங்கதி தெறிந்து கொள்ளவில்லை. அதாவது, இவைகள், ஒரே காலத்தில் விளங்குகின்றனவா அல்லது வெவ்வேறு காலத்திலா. இதைத்தேவரீர் எனக்கு விவரமாய்ச சொல்லவேணடும.

205. குரு உத்தரம்:— (205—232)— சிஷ்யனே, உன் கேள்விக்கு நான் சாரமான உத்தரஞ்சொல்லுகிறேன். நீ சாவதானமாய்க் கேள். இதைக்கேட்பதினால் ஞானரூபமான சூரியப்பிரகாசமுண்டாகி அஞ்ஞானரூபமான தமஸு நாசமடையும். சிஷ்யனே, ஒரேசமயத்தில் சாக்ஷியும் ஆபாஸனும் அஹம் விர்த்தியில் விளங்குகின்றன. எல்லாப்பிரகரணங்களிலும் ஆபாஸசப்தத்தால் அந்தக்கரணசகித ஆபாஸன் என்று கிரகிக்கவேண்டியது. அந்தக்கரணஸகித ஆபாஸன் சேதனமாகிற சாக்ஷிக்கு விஷயமாகி விளங்குகிறான். சாக்ஷி ஸ்வயம்பிரகாசத்தால் விளங்குகிறது. அந்தக்கரணத்தின் ஆபாஸசகித விர்த்திக்குச்சாக்ஷி விஷயமாகிறதில்லை.

206. கடாதி வெளியிலுள்ள பதார்த்தங்களின் ஞானமுண்டாகும் ரீதி:— . இந்திரியத்துக்கும் கடத்துக்கும் சம்பந்தமுண்டாகும்போது இந்திரியமூலமாக அந்தக்கரணத்தின் விர்த்தி வெளியிற் சென்று கடத்தி

ன் ஸமானாகாரத்தை அடைகிறது. இரும்பினாலாவது மண்ணாலாவது செய்த கருவில் உருக்கிவிடப்பட்ட தாம்பிரம் அக்கருவின் சமானாகாரத்தையடைவதுபோல அந்தக்கரணவிர்த்தியும் கடத்துக்குச்சமானமான ஆகாரத்தை யடைகிறது. இந்த விர்த்தி ஆபாஸனன்றியிலுண்டாகிறதில்லை. ஆபாஸசகிதமாகவேயுண்டாகிறது. ஏனெனில் விர்த்தி அந்தக்கரணத்தின் பரிணாமமாயிருக்கிறது. அந்தக்கரணத்தின் பரிணாமத்துக்கு விர்த்தியென்று பெயர். அந்தக்கரணம் சத்துவகுணகாரியமாகையால் ஸ்வச்சமாயிருக்கிறது, ஆகையால் அந்தக்கரணத்தில் சேதனத்தின் ஆபாசமுண்டாகிறது. இதுபோல விர்த்தியும் ஸ்வச்சமான அந்தக்கரணத்தின் காரியமானதால் விர்த்தியில் சேதனத்தின் ஆபாஸமுண்டாகிறது. அந்தக்கரணத்தினின்றும் ஆபாஸசகிதமாக விர்த்தியுண்டாகிறது. இக்காரணத்தினாலும் விர்த்தி ஆபாஸசகிதமாயிருக்கிறது. மேலும் விஷயமாகிற கடம் தமோகுணகாரியமாயிருக்கிறது. ஆகையால் அது ஸ்வரூபத்தினால் ஜடம். அதனிடத்தில் அஞ்ஞானமும் ஆவரணமுமிருக்கின்றன.

207. **சங்கை:—** அஞ்ஞானமும் ஆவரணமும் விசாரிக்கையில் சேதனத்திலிருக்கின்றனவேதவிரக்கடத்திலில்லை. ஏனெனில் அஞ்ஞானம் சேதனத்தை யாசிரயித்து அதையே விஷயமாக்குகிறதென்பது. வேதாந்தசித்தாந்தம். முன் ஸப்தாவஸ்தைப் பிரசங்கத்தில் அஞ்ஞானத்துக்காசிரயம் அந்தக்கரணஸகித ஆபாஸனென்று சொல்லப்பட்டது இது அஞ்ஞானத்தின் அபிமான[46] ஆசிரயம். "நான் அஞ்ஞானியாயிருக்கிறேன்" என்னும் அபிமானம் அந்தக்கரணசகித ஆபாஸனுக்குண்டாகிறது. ஆகையால் ஆபாஸன் அஞ்ஞானத்துக்காசிரயமாகச்சொல்லப்படுகிறது. முக்கிய ஆசிரயம் சேதனமேதவிர ஆபாஸசகித அந்தக்கரணமன்று. ஏனெனில், ஆபாஸசகித அந்தக்கரணம் அஞ்ஞானத்தின் காரியமாயிருக்கிறது. எது எதின் காரியமோ அந்தக்காரியத்தைக்காரணம் ஆசிரயிக்கமாட்டாது. ஆகையால் அஞ்ஞானத்துக்குச்சேதனமே அதிஷ்டானரூப ஆசிரயமாயிருக்கிறது. சேதனத்தையே அஞ்ஞானம் விஷயமாக்குகிறது. ஸ்வரூபம் தெரியாமல் மறைபடுவதே அஞ்ஞானத்துக்கு விஷயமாதலாம். இந்த அஞ்ஞானகிருத ஆவரணம் ஜடவஸ்து விஷயத்தில் சொல்லக்கூடாது. ஏனெனில், ஜடவஸ்து ஸ்வரூபத்திலேயே ஆவிருதமாயிருக்கிறது. அதனிடத்தில் அஞ்ஞானகிருத ஆவரணத்துக்கு யாதொ

---

46. பணத்துக்கு முக்கிய ஆசிரயம் பெட்டி, நான் தனிகன் என்னுமிடத்தில் நான் என்பது அபிமானாசிரயம். இதுபோல் அஞ்ஞானத்துக்கு முக்கிய ஆசிரயம் சேதனம். ஆபாஸசகித அந்தக்கரணம் அபிமானரூப ஆசிரயம்.

ரு பிரயோஜனமுமில்லை. இவ்விதமாக அஞ்ஞானத்துக்கு ஆசிரயமும் விஷயமும் சைதன்னியமே. வீட்டுக்குள்ளிருக்கும் இருள் வீட்டையே மறைப்பது போலும். ஆகையால் அஞ்ஞானமும் ஆவரணமும் கடத்தி லிருப்பதாகச்சொல்லக்கூடாது.

208. **சமாதானம்:—** சேதனத்தின் ஸ்வரூபத்துக்கு வேருக வும் சதசத்துக்கு விலக்ஷணமாயும் இருக்கிற அஞ்ஞானம் சேதனத்தை யாசிரயித்துக்கொண்டிருக்கிறது. அந்த அஞ்ஞானத்தால் சேதனம் ஆவிருதமாயிருக்கிறது. இதுபோல, கடத்தின் ஸ்வரூபத்துக்கு வேறான அஞ்ஞானம் கடத்தை யாசிரயிக்காவிட்டாலும் அஞ்ஞானத்தால் கடாதி கள் ஸ்வரூபத்தில் பிரகாசமில்லாத ஜடஸ்வரூபங்களாகச்செய்யப்பட்டிரு க்கின்றன. ஆகையால் கடாதிகள் எப்போதும் இருளால் மூடப்பட்ட வைபோல் ஆவிருதமாயிருக்கின்றன. இந்த ஆவிருதஸ்வபாவம் கடாதிக ளுக்கு அஞ்ஞானத்தால் உண்டாயிற்று. ஏனெனில் தமோகுணப்பிரதா ன அஞ்ஞானத்தினின்றும் பூதங்களுடைய உற்பத்திமூலமாகக்கடாதிகள் உண்டாகின்றன. அத்தமோகுணம் ஆவரணஸ்வபாவத்தோடு கூடினது. ஆகையால் கடாதிகள் பிரகாசமில்லாத இருட்டாகவேயிருக்கின்றன. இவ்விதமாக இருள்ரூபமான ஆவரணம் கடாதிகளில் ஸ்பாவசித்தமாயி ருக்கிறது. கடாதிகளுடைய அதிஷ்டானசேதனத்தை யாசிரயித்துக்கொ ண்டிருக்கிற அஞ்ஞானம் சைதன்னியத்தை மறைத்து, ஸ்பாவத்தாலேயே மறைபட்ட கடாதிகளையும் மறைக்கிறது. ஸ்வபாவமாகவே மறைபட்ட பதார்த்தங்களை மறுபடியும் மறைப்பதில் பிரயோஜனமில்லாவிட்டாலு ம் மூடும்பதார்த்தம் பிரயோஜனத்தின் அபேக்ஷையன்றியிலேயே மூடப் படாத பதார்த்தம்போல் மூடியிருக்கும் பதார்த்தத்தையும் மறுபடியும் மறைக்கிறது. இது உலகத்தில் பிரசித்தமாயிருக்கிறது. இந்த அஞ்ஞா னத்தால் ஆவிருதமான கடத்தையடைந்த அந்தக்கரணத்தின் ஆபாஸஸ ஹித கடாகாரவிர்த்தியிலுள்ள விர்த்திபாகம் கடத்திலாவரணத்தைப் போக்குகிறது; ஆபாஸபாகம் கடத்தைப்பிரகாசிப்பிக்கிறது. இவ்வித மாக வெளியிலுள்ள பதார்த்தவிஷயங்களில் விர்த்தியும் ஆபாஸனுமுப யோகப்படுகின்றன.

209. **இதற்குத்திர்ஷ்டாந்தஞ்** சொல்லுகிறேன். இரு ட்டில் மண்பாத்திரத்தால் மண் அல்லது இரும்பினாற்செய்த ஒரு வஸ்து மூடப்பட்டிருக்கிறது. தடியால் அந்த மண்பாத்திரத்தை யுடைத்தாலு ம் தீபமில்லாமல் உள்ளே யிருக்கும் பொருள் பிரகாசிக்கிறதில்லை. ஆனா ல் தீபத்தினால்தான் அது பிரகாசிக்கிறது. இதுபோல, அஞ்ஞானத்தா ல் ஆவிருதமான கடத்தின் ஆவரணத்தை விர்த்தியானது நாசஞ்செய்தா லும் கடம் பிரகாசிக்கிறதில்லை. ஏனெனில் கடம் ஸ்வரூபத்தினால் ஜட

ம். விர்த்தியும் ஜடம். ஆவரணத்தைப்போக்கமட்டும் அதினாற்கூடும். அதினாற் பிரகாசமுண்டாகிறதில்லை. ஆகையால் கடத்தைப்பிரகாசிப்பிக்கிறது ஆபாஸந்தான்.

210. *பிரத்தியக்ஷஞான லக்ஷணம்:—* நேத்திரத்துக்கு விஷயமான வஸ்துவின் பிரத்தியக்ஷஞானம் மேற் சொல்லியபடி யுண்டாகிறது. சிரவணாதிகளுக்கு விஷயமான பதார்த்தங்களின் பிரத்தியக்ஷ ஞானமும்[47] இப்படியே யுண்டாகிறதாக அறியத்தக்கது. விர்த்தியும் கடமும் ஒரேயிடத்திலிருப்பதால் கடத்தின் ஞானம் பிரத்தியக்ஷமென்று சொல்லப்படுகிறது. அந்தக்கரணத்தின் விர்த்தி கடாகாரமாகி ஆனால் கடத்துடன் சம்பந்தப்படாமல் விர்த்தி உள்ளேயே இருக்கும்போது, உண்டாகும் கடத்தின் ஞானம் பரோக்ஷ ஞானமென்று சொல்லப்படும். (இது கட) மென்பது அபரோக்ஷ ஞானத்தினாகாரம். (கடமிருக்கிறது) அல்லது (அந்தக்கடமிருக்கிறது) என்பது பரோக்ஷ ஞானத்தினாகாரம். ஸ்மிருதி ஞானமும் பரோக்ஷ ஞானமாகவே யிருந்தாலும் அது ஸம்ஸ்கார ஜன்யமாயிருக்கிறது. அநுமிதி முதலிய பரோக்ஷ ஞானம் பிரமாண ஜன்யமாயிருக்கிறது. பிரமாணப்பிரசங்கம் நேரிட்டபடியால் பிரமாணங்களை

---

47. சுரோத்திரேந்திரியம் சப்தத்தைப் பிரத்தியக்ஷமாயறியும்போது அந்தக்கரணத்தின் ஆபாஸ சஹித விர்த்தி சுரோத்திரமூலமாக வெளியேசென்று சப்தாகாரத்துக்குச் சமானமான ஆகாரத்தை யடைகிறது. விர்த்திபாகம் சப்தத்தின் ஆவரணத்தை நீக்குகிறது. ஆபாஸபாகம் சப்தத்தை ப்பிரகாசிப்பிக்கிறது. (2) துவக்கிந்திரியத்தால் ஸ்பரிசகுணமும் அதற்காசிரயமான கடாதிகளும் பிரத்தியக்ஷமாகும்போது விர்த்தி சரீரமாகிற கோளகத்தை விட்டு வெளியே போகிறதில்லை. ஆனால் சரீரமாகிற கோளகத்துடன் சம்பந்தப்பட்ட கடாதிவிஷயங்களையும் அவைகளையாசிரயித்த கடினாதி ரூபஸ்பரிச குணத்தையும் சரீர ரூபக் கோளகத்திலேயே இருக்கிற ஆபாஸசஹித அந்தக்கரணவிர்த்தி விஷயமாக்குகிறது. விர்த்தி கடாதி விஷயம் ஸ்பரிசம் இவைகளின் ஆவரணத்தைப்போக்குகிறது. சிதாபாஸன் இவைகளைப் பிரகாசிப்பிக்கிறது. (3) ரசனேந்திரியத்தால் விஷயம் பிரத்தியக்ஷமாகும்போதும் விர்த்தி ஜிஹ்வையாகிற கோளகத்தை விட்டு வெளியே போகிறதில்லை ஆனால் நாக்குடன் பதார்த்தம் சம்பந்தப்படும் போது நாக்கின் நுனியிலிருக்கிற ரஸனேந்திரியத்திலுள்ள ஆபாஸ சஹித விர்த்தி பதார்த்தத்தையறிகிறது. விர்த்திரஸத்தின்ஆவரணத்தைநீக்குகிறது. சிதாபாஸன் மதுரம்முதலிய ரஸங்களைப்பிரகாசிப்பிக்கிறது. (4) கிராணேந்திரியத்தால் கந்தம் பிரத்தியக்ஷமாகும்போது மூக்காகிறகோளகத்துடன் புஷ்பாதிகளின் கந்தம் சம்பந்தப்படும்போது மூக்கின் நுனியிலிருக்கிற கிராணேந்திரியத்திலுள்ள ஸாபாஸ அந்தக்கரணவிர்த்தி கந்தத்தை கிரகிக்கிறது விர்த்தி பாகம் கந்தத்தின் ஆவரணத்தை நீக்குகின்றது. சிதாபாஸன் கந்தத்தைப்பிரகாசிப்பிக்கிறது. இவ்விதமாக இந்திரியங்களுக்குப்பிரத்தியக்ஷஞானமுண்டாகின்றது.

நிரூபணஞ்செய்கிறேன். சார்வாக[48] மதஸ்தர்கள் பிரத்தியக்ஷப் பிரமாணத்தை மட்டும் அங்கீகரிக்கிறார்கள்.

211. அனுமானப்பிரமாணம்:- கணாத[49] சுகத[50] மதங்களையனுசரிக்கிறவர்கள் அனுமானப்பிரமாணத்தையும் அங்கீகரிக்கிறார்கள். ஏனெனில் ஒரு பிரத்தியக்ஷப் பிரமாணத்தை மட்டும் அங்கீகாரஞ் செய்யும் பக்ஷத்தில திருப்தியை இச்சிக்கும புருஷனுக்கும் போஜனத்தில் பிரவிர்த்தி யுண்டாகமாட்டாது. ஏனெனில் சாப்பிடாத பதார்த்த விஷயத்தில் திருப்தி யுண்டாகுமென்பதற்குப் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் யாதொரு பிரத்தியக்ஷஞானமுமில்லை. ஆகையால் சாப்பிட்ட போஜனத்திலுண்டான திருப்தியின் அனுபவம் சாப்பிடாத போஜனத்திலும் அனுமானத்தாலுண்டாகுமென அறியப்பட்டுத திருப்தியின்பொருட்டுப்போஜனத்தில் பிரவிர்த்தி யுண்டாகிறது. ஆகையால் அனுமானப்பிரமாணத்தையும் அங்கீகாரஞ்செய்யவேண்டியது யுக்தமே. இவ்விதமாக கணாத, சுகத மதானுசாரிகள் பிரத்தியக்ஷ அனுமானப் பிரமாணங்களை யங்கீகரிக்கிறார்கள்.

212. சப்தப்பிரமாணம்:— சாங்கிய சாஸ்திரத்தின் கர்த்தாவாகிய கபிலர் மதத்தை யனுசரித்தவர்கள் மூன்றாவதான சப்தப்பிரமாணத்தையு மங்கீகரிக்கிறார்கள். ஏனெனில், பிரத்தியக்ஷ அனுமானங்களாகிற இரண்டு பிரமாணங்களைமட்டில் அங்கீகரிக்கும் பக்ஷத்தில், அன்னிய தேசத்தில் ஒருவன் தகப்பன் இறந்துபோகிறான், அச்செய்தியை ஒருவன் வந்து சொல்லுகிறான். அப்போது கேட்கிறவனுக்குத் தகப்பன் இறந்து போய்விட்டானென்கிற நிச்சய முண்டாகக்கூடாது. ஏனெனில், தேசாந்தரத்திலிருந்த தகப்பனுடைய சாவின ஞானம் பிரத்தியக்ஷப்பிரமாணத்தாலும் அனுமானப்பிரமாணத்தாலு முண்டாகவில்லை. ஆகையால் கபிலர் மதத்தை யனுசரித்தவர்கள் பிரத்தியக்ஷம் அனுமானம், சப்தம், இம்மூன்று பிரமாணங்களையும் அங்கீகரிக்கிறார்கள்.

---

48. ஐந்து பூதங்களையும் அங்கீகரித்துத் தேகத்தை யாத்மா வென்று சொல்லுகிறவன் லோகாயதன். ஆகாசமன்றியில் மற்றநான்கு பூதங்களைமட்டும் அங்கீகரித்துத் தேகத்தை யாத்மா வென்று சொல்லுகிறவன் சார்வாகன்.

49. வைசேஷிகசாஸ்திரத்தின் கர்த்தா இவருக்குக் கணபுக் கென்றும் பெயர்.

50. பௌத்த மதம்.

213. **உபமானப்பிரமாணம்:—** நியாய சாஸ்திர கர்த்தாவான **கௌதம**ருடைய மதத்தை யனுசரித்தவர்கள் உபமான மென்னும் நான்காம் பிரமாணத்தையுமங்கீகரிக்கிறார்கள். ஏனெனில் பிரத்தியக்ஷாதி மூன்று பிரமாணங்களை மட்டில் அங்கீகரிக்கும் பக்ஷத்தில், ஒருவன் கவயமென்னுமிருகத்தைப் பார்த்ததில்லை. காட்டுமனிதனிடத்தினின்றும் கவயமிருகம் பசுமாடுபோன்றது, எனக்கேள்விப்படுகிறான். அவன் காட்டுக்குப்போய்க்கவயத்தைப் பார்க்கும்போது காட்டுமனிதன் சொன்னது ஞாபகத்தில் வருகிறது. இந்தஸ்மரணைக்குப் பின் இது கவயமென்று அவனுக்கு ஞானமுண்டாகிறது. உபமானப்பிரமாணத்தை யங்கீகரிக்காவிட்டால் இந்த ஞானமுண்டாகக்கூடாது. ஆகையால் இப்பேர்ப்பட்ட விலக்ஷண ஞானத்துக்கு ஹேதுவான உபமானப் பிரமாணத்தையுமங்கீகரிக்கிறார்கள்.

214. **அர்த்தாபத்திப்பிரமாணம்:—** பூர்வமீமாம்சகர்களில் ஒருவரான பட்டருடைய சிஷ்யரான **பிரபாகரர்** அர்த்தாபத்தியென்னும் ஐந்தாம் பிரமாணத்தையு மங்கீகரிக்கிறார். பகலில் போஜனஞ் செய்யாத புருஷன் ஸ்தூலமாயிருப்பதைக் கண்டு, இவன் இரவில் சாப்பிடுகிறான் என்கிற ஞானமுண்டாகிறது. ஏனெனில் இராச்சாப்பாடுமில்லாமல் பகலிலும் சாப்பாடில்லாதபக்ஷத்தில் ஸ்தூலதை யுண்டாகமாட்டாது. ஆகையால் இராச்சாப்பாடே ஸ்தூலதையைக்கொடுக்கிறது. இந்தக்காரியமான ஸ்தூலதைக்கு இராபோஜனம் காரணமாயிருக்கிறது இக்காரணமான இராபோஜனத்தின் ஞானத்துக்கு ஹேதுவான ஸ்தூலதையின் ஞானம் அர்த்தாபத்திப் பிரமாண மெனப்படுகிறது.

215. **அனுபலப்திப்பிரமாணம்:—** பூர்வமீமாம்சகரான **பட்டர்** அனுபலப்தியென்னும் ஆறாவது பிரமாணத்தையுமங்கீகரிக்கிறார். வேதாந்த சாஸ்திரத்திலும் ஆறு பிரமாணங்கள் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன. அனுபலப்திப்பிரமாணத்தின் பிரயோஜன மென்னவெனில் வீடு முதலியவைகளில் கடாதிகளில்லை யென்கிற ஞானமுண்டாகிறது. அப்போது எந்தப் பதார்த்தம் பிரதீதியாக வில்லையோ அதின் அபாவஞானமுண்டாகிறது. இந்த அப்பிரதீதிக்கு அனுபலப்தி யென்று பெயர். கடம் விளங்காததினால் கடமில்லையென்பது நிச்சயமாகிறது. இப்படிப் பதார்த்தத்தின் அபாவநிச்சயத்துக்குக் காரணமான அப்பிரதீதிக்கு அனுபலப்திப் பிரமாணமென்று பெயர்.

216. **பிரமாலட்சணம்:—** (216—219) பிரமாஞானத்துக்கு எதுகரணமோ (218) அது பிரமாணமென்று சொல்லப்படும். ஸ்மிருதிக்கு வேறாயும் பாதிக்கப்படாத பொருளை விஷயமாக்குகிறதாயு

யிருக்கிற ஞானம் பிரமா வென்னப்படும். ஸ்மிருதி ஞானம் பிரமாவன்று. ஏனெனில் பிரமா ஞானம் பிரமாதாவை யாசிரயித்தது. ஸ்மிருதி பிரமாதாவை யாசிரயித்ததன்று; ஆனால் சாக்ஷியை யாசிரயித்ததாக அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. பிராந்தி ஞானமும் சமுசயமும் சாக்ஷியையுமாசிரயித்திருக்கிறதாக அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் ஸ்மிருதி பிராந்தி சமுசயம் இம்மூன்றும் ஆபாஸஸஹித அவித்தையின் விர்த்திரூபங்களாயிருக்கின்றன; அந்தக்கரணத்தின் விர்த்திரூபங்களாயிருக்கவில்லை. ஆகையால் அவைகள் பிரமாதாவின் ஆசிரதங்களன்று; ஆனால் சாக்ஷியின் ஆசிரதங்களே. எது அந்தக்கரணத்தின் விர்த்திரூப ஞானமோ அது பிரமாதாவின் ஆசிரதமாகும். அதுவே பிரமாவென்று சொல்லப்படும். ஸ்மிருதிஞானம் அந்தக்கரணத்தின் விர்த்தியாகாததால் பிரமாதாவை யாசிரயிக்கவில்லை; பிரமாவுமன்று. ஆகையால் பிரமாலக்ஷணையில் ஸ்மிருதியை விலக்கவேண்டும். பாதிக்கப்படாத பொருளை விஷயமாக்கும் ஞானம் ஸ்மிருதிஞானமாயுமிருக்கக்கூடும். ஆனால் ஸ்மிருதிஞானம் ஸ்மிருதிக்கு வேறன்று, ஸ்மிருதி ரூபமாகவே இருக்கிறது. ஆகையால் பாதிக்கப்படாத பொருளை விஷயமாக்கிக்கொண்டும் ஸ்மிருதிக்கு வேறாயுமிருக்கிற ஞானமே பிரமா[51] வென்று சொல்லப்படும். இதில் யாதொரு தோஷமுமில்லை.

217. வேறு சிலர் ஸ்மிருதிஞானத்தையும் பிரமாரூபமாகப்பாவிக்கிறார்கள். அவர்களுடைய மதத்தின்படி பிரமாலக்ஷணத்தில் ஸ்மிருதி விலக்கப்படவில்லை. ஆனால் பாதிக்கப்படாத பொருளை விஷயமாக்குகிற ஞானம் பிரமாவென்று சொல்லப்படுகிறது. பிராந்திஞானம் பாதிக்கப்படாதபொருளை விஷயமாக்கவில்லை. ஆனால் பாதிக்கப்படுகிறபொருளை விஷயமாக்குகிறது. ஆகையால் பிரமாவின் லக்ஷணம் பிராந்திஞானத்திற் காணப்படவில்லை. ஸ்மிருதிஞானத்தையும் பிரமாவாகச்சொல்லும் மதத்தில் ஸ்மிருதிஞானம் அந்தக்கரணவிர்த்தியாயிருக்கிறது, அவித்தியாவிர்த்தியாயில்லை. மேலும் சாக்ஷியை யாசிரயித்து மில்லை, பிரமாதாவை யாசிரயித்திருக்கிறது. ஏனெனில் அந்தக்கரணவிர்த்தியினுசிரயம் பிரமாதாவேதவிரச்சாக்ஷியன்று.

---

51. பிரமாவென்பது யதார்த்த அனுபவம். இந்தப்பிரமாலக்ஷணம் ஸ்மரணையை வேறுபடுத்துகிறது. 217-வதுபிரிவில் பிரமாவென்பது யதார்த்த ஞானம். இந்தப்பிரமாலக்ஷணம் ஸ்மரணையையும் அடக்கிக்கொண்டிருக்கிறது

218. **சித்தாந்தம்:—** இவ்விதமாக ஸ்மிருதி ஞானம் அந்தக்கரண விர்த்தியாயிருப்பதால் பிரமா ரூபமாயிருக்கிறது; வேறு சிலர் மதத்தில் அவித்தியாவிர்த்தியாயிருப்பதால் பிரமாரூபமாகவில்லை. பிராந்தி ஞானமும் சமுசயஞானமும் எல்லாருடைய மதத்திலும் அவித்தியா விர்த்தியாகவும் சாக்ஷியை யாசிரயித்துக் கொண்டுமிருக்கின்றன. இதில் யாதொரு விவாதமுமில்லை. விசாரித்துப் பார்க்குமளவில் ஸ்மிருதிஞானமும் அவித்தியா விர்த்தியாகவும் சாக்ஷியை யாசிரயித்துக் கொண்டுமிருக்கிறது, பிரமா ரூபமாகவில்லை.[52] ஏனெனில் வேதாந்த சம்பிரதாயத்தை யறிந்தவர்கள் பிரமாஞானத்தை ஆறு விதமாக வகுத்திருக்கிறார்கள்: அவைகளில் ஸ்மிருதிஞான முசேராமையால் அது பிரமாவன்று. மதுசூதனஸ்வாமிகள் ஸ்மிருதிஞானம் சாக்ஷியை யாசிரயித்திருக்கிறதாகவே சொல்லியிருக்கிறார்கள்.

219. **ஷட்பிரமாக்கள்:—** இப்போது அவ்வாறு விதப்பிரமாக்களைச் சொல்லுகிறேன். அவைகளாவன:— (1) பிரத்தியக்ஷப்பிரமா (2) அனுமிதிப் பிரமா (3) உபமிதிப் பிரமா (4) சாப்தீப்பிரமா, (5) அர்த்தாபத்திப்பிரமா (6) அபாவப்பிரமா.

220. **கரணலக்ஷணம்:—** முன் சொன்ன பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்கள் இவைகளுக்கு முறையே கரணங்களாயிருக்கின்றன. பிரத்தியக்ஷப்பிரமாவின் கரணம் பிரத்தியக்ஷ ப்பிரமாணமென்று சொல்லப்படும். அசாதாரணகாரணமே கரணமென்னப்படும். சகல காரியங்களுக்கும் காரணமாயிருப்பது சாதாரண காரணமென்னப்படும். தர்மாதர்ம

---

52. பிரமைரூபமான அனுபவத்தின் சம்ஸ்காரத்தாலுண்டாகும் ஸ்மிருதி பாதிக்கப்படும் அர்த்தத்தை விஷயமாக்குவதால் யதார்த்தமில்லாமலிருக்கிறது. ஆனதால் அது அவித்தியாவிர்த்தியாயிருக்கின்றது, அந்தக்கரணவிர்த்தியாயில்லை; மேலும் சாக்ஷியை ஆசிரயித்துக்கொண்டிருக்கிறது பிரமாதிையயாசிரயிக்கவில்லை. யதார்த்த அனுபவத்தின் ஸம்ஸ்காரத்தாலுண்டாகும் ஸ்மிருதிஞானம் பாதிக்கப்படாத அர்த்தத்தை விஷயமாக்குகிறதினால் அது யதார்த்த ஞானமாயிருக்கிறது, மேலும் அந்தக்கரண விர்த்தியாயிருக்கிறது, அவித்தியா விர்த்தியாகவில்லை. பிரமாவை யாசிரயிக்கிறது; சாக்ஷியை யாசிரயிக்க வில்லை. ஆனால் முன்னோர்கள் ஸ்மிருதி ஞானத்தைப் பிரமாவாக எடுத்துக்கொள்ளவில்லை. ஆகையால் இரண்டுவித ஸ்மிருதிகளும் அப்பிரமாக்களே. இவைகளின் அயதார்த்த ஸ்மிருதி அயதார்த்த அப்பிரமா. யதார்த்த ஸ்மிருதி யதார்த்த அப்பிரமா

ங்கள் சகல காரியங்களுக்குங் காரணமாகையால் சாதாரண காரணங்களாகின்றன. சகலகாரியங்களுக்கும் காரணமாகாமல் சிலகாரியங்களுக்கு மட்டில் காரணமாயிருப்பது அசாதாரண காரணமென்னப்படும். தண்டம் ஸகலகாரியங்களுக்குங்காரணமாயில்லை, ஆனால் கடாதிகாரிய விசேஷங்களுக்கு க்காரணமாயிருக்கிறது. ஆனதால் தண்டம் கடத்துக்கு அசாதாரண காரணமென்றும் கரணமென்றுஞ் சொல்லப்படுகிறது. இதுபோல்பிரத்தியக்ஷப் பிரமாவுக்கு ஈசுவரனும் ஈசுவரனுடைய இச்சைமுதலியவைகளும் சாதாரண காரணங்களாயிருக்கின்றன. ஏனெனில் ஈசுவரன்முதலியவை[53] சகல காரியங்களுக்கும் காரணங்களா யிருக்கின்றன. அவைகளன்றியில் யாதொரு காரியமு முண்டாகிறதில்லை. ஆகையால் ஈசுவராதிகள் சாதாரண காரணங்களாயிருக்கின்றன. நேத்திரமுதலிய இந்திரியங்கள் பிரத்தியக்ஷப்பிரமாவுக்கு அசாதாரண காரணங்களா யிருக்கின்றன. ஆகையா லிவைகள் பிரத்தியக்ஷப் பிரமாவின் கரணங்களாம். இவ்விதமாக நேத்திராதி இந்திரியங்கள்ப் பிரத்தியக்ஷப்பிரமாணங் களாகச்சொல்லப் படுகின்றன.

221. வேதாந்தசித்தாந்தத்தில் இந்திரியத்தை ப்பிரமாஞானத்துக்குக்காரணமாகச் சொல்லுவது சரியன்று. ஏனெனில் சேதனத்தில் நான்கு பேதங்களுண்டு. (1)பிரமாதாசேதனம் (2)பிரமாணசேதனம் (3) பிரமிதி அல்லது பிரமாசேதனம் (4) பிரமேய அல்லது விஷயசேதனம். இவ்விதமாக ப்பிரமா சேதனசம்பந்தமாயிருக்கிறது. அச்சேதனம் நித்தியம். இந்திரியஜன்யமன்று. ஆகையால் இந்திரியம் அதற்குக்காரணமாகிறதில்லை. ஆயினும் சேதனத்தில் பிரமாவியவகாரத்துக்கு காரணமான விர்த்திக்கும் பிரமாவென்று பெயர். அவ்விர்த்திக்கு இந்திரியங்காரணமாயிருக்கிறது.

222. பிரமாத்ருசேதனம்:— தேகத்தின் மத்தியிலுள்ள அந்தக்கரணத்தால் அவச்சின்னமான சேதனம் பிரமாதா எனப்படும்.

223. பிரமாணசேதனம்:— இந்த அந்தக்கரணம் நேத்திராதி இந்திரியங்கள் மூலமாக வெளியே சென்று கடாதிவிஷயங்கள் இரு

---

53. முதலிய சப்தத்தால் ஈசுவரனுடைய ஞானம், ஈசுவரனுடைய பிரயத்தினம், காலம், திக்கு, அதிர்ஷ்டம், பிராகபாவம், பிரதிபந்தகாபாவம், இவ்வேழும் அறியத்தக்கவை.

ப்பிடம் வரையில் நீண்டு கடாதிகளுடன் சேர்ந்து அவைகளின் உருவத்தையடைகிறது. உதாரணம்:— குளத்திலுள்ள ஜலம் மடைவழியாய்ப்புரப்பட்டு வாய்க்கால்வழியாய்ச்சென்று வாய்க்காலுருவமாகி வயலிற்பாய்ந்து வயலாகாரத்தையடைகிறது. இதுபோல அந்தக்கரணமும் இந்திரியமாகிற துவாரத்தின்வழியாய் வெளியேசென்று விஷயரூபமான வயலை யடைகிறது. அப்போதுசரீரம்முதல் கடாதிவிஷயம் வரையில் அந்தக்கரணத்தின் யாதொரு நீண்டபரிணாமமுண்டாகிறதோ அதற்கு விர்த்தி ஞானமென்று பெயர். அதினால் அவச்சின்னமான சேதனத்துக்குப்பிரமாணசேதனமென்று பெயர். விர்த்திஞானரூப அந்தக்கரணபரிணாமத்துக்குப்பிரமாணமென்றுபெயர்.

224. **பிரமாசேதனம்**:— வயலிற் பாய்ந்த ஜலம் வயலாகாரமாகிறதுபோல் கடாதிவிஷயத்தில் விர்த்திசென்று கடாதிகளின் சமானாகாரத்தை யடைகிறது. இச்சமானாகாரத்தால் அவச்சின்னமான சேதனத்துக்குப்பிரமாசேதனமென்று பெயர்.

225. **பிரமேயசேதனம்**:— ஞானத்துக்கு விஷயமான கடாதிகளால் அவச்சின்னமான சேதனத்துக்கு விஷயசேதனம் அல்லது பிரமேயசேதனமென்று பெயர். இவைகள் வேதார்த்தமறிந்த ஆசாரியர்களுடைய பரிபாஷைகளாம்.

226. **அவச்சேதவாதப்படிப்பிரமாத்ருலக்ஷணம்**:— அவச்சேதவாதிகளின் மதத்தில் அந்தக்கரண விசிஷ்டசேதனம் பிரமாத்ரு. அதுவே கர்த்தா, போக்தா. அந்தக்கரண உபஹித சேதனம் சாக்ஷீ. ஒரே அந்தக்கரணம் பிரமாதாவுக்கு விசேஷணமாயும் சாக்ஷிக்கு உபாதியாயுமிருக்கிறது.

**விசேஷணலக்ஷணம்**:— சொரூபத்தில் எதற்குப்பிரவேச[54]முண்டோ அந்த வியாவர்த்தக வஸ்துவுக்கு விசேஷணமென்று பெயர். மற்றபதார்த்தங்களினின்றும் வேறுபடுத்தி வஸ்துஸ்வரூபத்தை யறியும்படி எது செய்கிறதோ அது வியாவர்த்தகமென்னப்படும். எது வேறுபடுத்தப்பட்டு அறியப்படுகிறதோ அது வியாவர்த்தியமென்று சொல்லப்படும். நீலகடமென்பதில் கடத்துக்கு நீலவர்ணம் விசேஷணம். ஏனெனி

---

54. காரியத்துடன் சம்பந்தம் பிரவேசமென்னப்படும்.

ல் நீலகடத்தில் நீலவர்ணம் பிரவேசித்திருக்கிறது. மேலும் மஞ்சள் வெண்மைமுதலிய வர்ணங்களுடன் கூடிய கடங்களினின்றும் வேறுபடுத்தி இந்நீலகடத்தை யறியும்படிச்செய்கிறது. ஆகையால் நீலவர்ணம் வியாவர்த்தகம், அதனால் விசேஷணமாகிறது. கடம் பரிச்சேத்தியமாயிருக்கிறது. ஏனெனில், மஞ்சள் முதலிய வர்ணங்களுடன் கூடின கடங்களினின்றும் வேறுபடுத்தப்பட்டு இந்நீலகடம் அறியப்படுகிறது. வேறுபடுத்தப்பட்டு அறியப்படும் பதார்த்தம் பரிச்சேத்திய மென்றும் வியாவர்த்தியமென்றும் விசேஷியமென்றும் சொல்லப்படும். தண்டபுருஷனென்பதிலும் புருஷனுக்குத்தண்டம் விசேஷணமாயிருக்கிறது. இவ்விதமாகப்பிரமாதாவின் ஸ்வரூபத்தில் அந்தக்கரணஞ்சேர்வதால் பிரமாதாவுக்கு அந்தக்கரணம் விசேஷணமாகிறது.

**உபாதிலக்ஷணம்:—** பிரமேயசேதனத்தினின்றும் பின்னப்படுத்திப் பிரமாதாவின் ஸ்வரூபத்தையறியும்படிச் செய்கிறதினால் அந்தக்கரணம் வியாவர்த்தகமாயிருக்கிறது. எந்தவஸ்து, ஸ்வரூபத்தில் பிரவேசியாமல் வியாவர்த்தகமாயிருக்கிறதோ அது உபாதியென்று சொல்லப்படும். உதாரணம்:— நையாயிக மதத்தில் கர்ண கோளகத்தால் வளைபட்ட ஆகாசம் சுரோத்திரமென்று சொல்லப்படும். இவ்விடத்தில் கர்ணகோளகம் சுரோத்திரத்துக்கு உபாதியாயிருக்கிறது. ஏனெனில், சுரோத்திரஸ்வரூபத்திற் கர்ணகோளகம் பிரவேசியாமல் வெளியிலுள்ள ஆகாசத்தினின்றும் வேறுபடுத்தி சுரோத்திரத்தை யறியும்படிச்செய்கிறது. ஆகையால் கோளகம் வியாவர்த்தகமாகிறது. கடாகாசத்தில், ஆகாசத்திற்குக்கடம் உபாதியாயிருக்கிறது. ஏனெனில் அவகாசரூபமான ஆகாசஸ்வரூபத்தில் கடம் பிரவேசியாமல் மகாகாசத்தினின்றும் வேறுபடுத்தி கடாகாசத்தை யறியும்படிச்செய்கிறது. ஆகையால் கடம் ஆகாசத்துக்கு உபாதியாயிருக்கிறது. இதுபோல அந்தக்கரணஉபஹிதசேதனம் சாக்ஷியென்னுமிடத்தில் அந்தக்கரணம் சாக்ஷிக்குஉபாதியாயிருக்கிறது. ஏனெனில் சாக்ஷிஸ்வரூபத்தில் அந்தக்கரணம் பிரவேசிக்கிறதில்லை. பிரமேயசேதனத்தினின்றும் சாக்ஷியை வேறுபடுத்தி அதையறியும்படி அந்தக்கரணஞ்செய்கிறது. ஆகையால் ஒரே அந்தக்கரணம் சாக்ஷிக்கு உபாதியாயும் பிரமாதாவுக்கு விசேஷணமாயுமிருக்கிறது. இவ்விதமாக அந்தக்கரணஉபஹிதசேதனம் சாக்ஷியாகவும் அந்தக்கரண விசிஷ்டசேதனம் பிரமாதாவாகவு மிருக்கின்றன. உபாதியுடன் கூடியது உபஹிதமென்றும் விசேஷணத்துடன் கூடியது விசிஷ்டமென்றுஞ் சொல்லப்படும். அந்தக்கரணவிசிஷ்டபிரமாதா கர்த்தாபோக்தாவாயும் சுகியாயும் துக்கியாயும் சமுசாரியாயும் ஜீவனாயும் இருக்கிறான். இது அவச்சேதவாதப்படிப் பிரமாதாவின் லக்ஷணமாம்.

227. ஆபாஸவாதப்படிப் பிரமாதிருலக்ஷணம்:— ஆபாஸவாதத்தில் ஆபாஸஸஹித அந்தக்கரணம் ஜீவனுக்கு விசேஷணமாயும் சாக்ஷிக்கு உபாதியாயுமிருக்கிறது. ஆகையால் ஆபாஸஸஹித அந்தக்கரண விசிஷ்டசேதனமே ஜீவன். ஆபாஸஸஹித அந்தக்கரண உபஹிதசேதனமே சாக்ஷீ.

228. இருவிதவாதங்களின் சாதிரிசியம் பேதம்:— மேற்சொன்ன இருவிதப்பக்ஷங்களிலும் விசேஷணசகிதசேதனம் ஜீவனும் சமுசாரியாயுமிருந்தாலும் விசேஷியபாகமான சேதனத்தினிடத்தில் ஜனனமரணமுதலிய சமுசாரம் சம்பவிக்கிறதில்லை. ஆகையால் விசேஷணமாத்திரத்தில் தான் சமுசாரம் சம்பவிக்கிறது. அதுவே விசிஷ்ட சேதனத்தில் பிரதீதியாகிறது. சிலவிடங்களில் விசேஷணத்தின் தர்மங்கள் விசிஷ்டத்திலும் சிலவிடங்களில் விசேஷியதர்மங்கள் விசிஷ்டத்திலும் சிலவிடங்களில் விசேஷண விசேஷியதர்மங்கள் விசிஷ்டத்திலும் தோன்றுகின்றன. உதாரணம்:— (1) தடியால் கடாகாசம் நசிக்கிறது என்னுமிடத்தில் விசேஷணமான கடம் தடியால் நாசமடைகிறது. விசேஷியமான ஆகாசம் நசிக்கிறதில்லை. ஆயினும் விசிஷ்டமான கடாகாசம் நசித்துப்போகிறதாகப் பிரதீதியாகிறது. (2) குண்டலீபுருஷன் தூங்குகிறான் என்னுமிடத்தில் குண்டலம் விசேஷணம் புருஷன் விசேஷியம். விசேஷணமான குண்டலம் தூங்குவதாகச் சொலவது சரியன்று. குண்டல விசிஷ்டன் தூங்குகிறான் என்று விசிஷ்டத்தில் வியவஹாரமுண்டாகிறது. (3) ஆயுதபாணியான புருஷன் யுத்தத்துக்குப் போயிருக்கிறான் என்னுமிடத்தில் விசேஷணமான ஆயுதமும் விசேஷியமான புருஷனும் யுத்தத்துக்குப் போயிருப்பதால் இவ்விரண்டின் தர்மங்களும் விசிஷ்டத்திற் காணப்படுகின்றன. பிரகிருதத்தில் அவச்சேதவாதத்தில் அந்தக்கரணம் விசேஷணமாயும் ஆபாஸவாதத்தில் ஆபாஸசகித அந்தக்கரணம் விசேஷணமாயு மிருக்கின்றன. இரண்டு பக்ஷங்களிலும் சேதனம் விசேஷியம், அதனிடத்தில் ஜன்மாதிசமுசாரஞ் சம்பவிக்கிறதில்லை. ஆனால் விசேஷணமான அந்தக்கரணத்தின் அல்லது ஆபாஸசகித அந்தக்கரணத்தின் தர்மமாகிற ஜன்மாதி சமுசாரம் விசிஷ்டசேதனத்தில் வியவகரிக்கப்படுகிறது. இதுவே ஆபாஸ அவச்சேதவாதங்களின் பேதமாம் வியவகாரம் என்றால் தோற்றமுங்கதனமுமாம்.

229. ஆபாஸவாதத்தின்சிரேஷ்டதை:— ஆபாஸவாதத்தில் அந்தக்கரணம் ஆபாஸஸஹிதமாயும் அவச்சேதவாதத்தில் அந்தக்கரணம் ஆபாஸரகிதமாயும் இருக்கிறது. இவ்விரண்டில் ஆபாஸவாதம்

சிரேஷ்டம். ஏனெனில் **பாஷியக்காரரால்** ஆபாஸவாதம் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. அவச்சேதவாதத்தில் **வித்தியாரண்யஸ்வாமிகள்** தோஷமுஞ்சொல்லியிருக்கிறார்கள். எப்படியெனில், ஆபாஸஸகிதமான அந்தக்கரண அவச்சின்ன சேதனத்தைப்பிரமாதாவாக கினைக்கும் பக்ஷத்தில் கடாவச்சின்ன சேதனமும் பிரமாதாவாகக்கூடும். ஏனெனில், எப்படி அந்தக்கரணம் பூதங்களின் காரியமோ அப்படியே கடமும் பூதங்களின் காரியமே. மேலும் எப்படி அந்தக்கரணம் சேதனத்துக்கு அவச்சேதகமோ அதாவது வியாவர்த்தகமோ அப்படிக்கடமும் சைதன்னியத்துக்கும் அவச்சேதகமாயிருக்கிறது. ஆனதால், அந்தக்கரணவிசிஷ்டம்போல் கடவிசிஷ்டத்தையும் பிரமாதாவாகச்சொல்லக்கூடும். அந்தக்கரணத்தில் ஆபாஸனை யங்கீகரிக்கும்பக்ஷத்தில் இந்தத்தோஷம் சம்பவிக்காது. ஏனெனில் அந்தக்கரணம் பூதங்களின் சத்துவகுணகாரியம், ஆனதால், ஸ்வச்சம். கடாதிகள் பூதங்களின் தமோகுணகாரியம், ஆனதால் ஸ்வச்சமன்று. எது ஸ்வச்சமாயிருக்கிறதோ அதில் ஆபாஸம் அல்லது பிரதிபிம்பம் உண்டாகும். மலினபதார்த்தத்தில் பிரதிபிம்பமுண்டாகமாட்டாது. கண்ணாடியும் அதின் மூடியும் மண்ணாலானவையானாலும் கண்ணாடி ஸ்வச்சமாயிருப்பதால் அதில் முகத்தின் பிரதிபிம்பமுண்டாகிறது. மூடி ஸ்வச்சமில்லாததால் அதில் பிரதிபிம்பமுண்டாகிறதில்லை. இதுபோல அந்தக்கரணம் சத்துவகுணகாரியமானதால் ஸ்வச்சமாயிருக்கிறது. அதில் சேதனத்தினாபாசமுண்டாகிறது. சரீரம் கடம் முதலியவை தமோகுணகாரியமாகையால் ஸ்வச்சமாயில்லை. அவைகளில் சேதனத்தின் ஆபாஸமுமுண்டாகிறதில்லை.

230. இவ்விதமாக அந்தக்கரணத்தில் இரண்டுவிதப்பிரகாசங்களுள. ஒன்று வியாபகசேதனத்தின் பிரகாசம், மற்றொன்று ஆபாஸத்தின் பிரகாசம். சரீரங் கடம் முதலியவைகளில் வியாபகசேதனத்தின் பிரகாசம் இருக்கிறது, ஆபாஸத்தின் பிரகாசமில்லை. ஆகையால் இருவிதப்பிரகாசங்களோடு கூடிய அந்தக்கரணவிசிஷ்டசேதனமே பிரமாதாவென்று சொல்லப்படுகிறது, ஒரு பிரகாசசகித கடாதிகளுடன் கூடிய சேதனம் பிரமாதாவன்று. யாருடைய மதத்தில் அந்தக்கரணத்தில் ஆபாஸனில்லையோ அவர்கள் மதத்தில் கடாதிகளிற்போல் அந்தக்கரணத்திலும் ஆபாஸத்தின் இரண்டாவது பிரகாசமில்லை. வியாபகசேதனத்தி

ஒருப் பிரகாசம் அந்தக்கரணத்திலிருப்பதுபோல் கடத்திலு மிருக்கிறது. ஆகையால் அந்தக்கரணவிசிஷ்டம்போல் கடவிசிஷ்ட சரீரவிசிஷ்ட சுவர்விசிஷ்ட சேதனத்தையும் பிரமாதாவாகச் சொல்லவேண்டும். இவ்விதமாகக் கடசரீராதிகளைக் காட்டிலும் அந்தக்கரணத்தில் ஒருவிலக்ஷணதைக்காணப்படுகிறது. அந்தக்கரணம் சத்துவகுண காரியமானதால் சுத்தமாயிருக்கிறது. ஆகையால் அது சேதனத்தின் ஆபாஸத்தை க்கிரகிக்க யோக்கியமாயிருக்கிறது. அந்நியபதார்த்தங்கள் ஸ்வச்சமாயிராமையால் ஆபாஸத்தைக் கிரகிக்க யோக்கியமில்லை. ஆபாஸத்தை க்கிரகிக்க யோக்கியமான அந்தக்கரணத்துடன் கூடிய சேதனம் பிரமாதா வென்று சொல்லப்படுகிறது. கடசரீராதிகள் ஆபாஸனைக் கிரகிக்க யோக்கியமில்லாமையால் அவைகளுடன் கூடின சேதனம் பிரமாதாவன்று. இவ்விதமாக ஆபாஸவாதமே சிரேஷ்டமாயிருக்கிறது. அவச்சேதவாதம சிரேஷ்டமன்று.

231. பிரமாதாமுதலிய சேதனங்களின் ஸ்வரூபம்:— அந்தக்கரணம் ஆபாஸஸஹிதமாயிருப்பது போல் அந்தக்கரணவிர்த்தியும் ஆபாஸஸஹிதமாகவே யிருக்கிறது. ஆபாஸஸஹித விர்த்திவிசிஷ்ட சேதனம்பிரமாண சேதனமென்னப்படும். கடாதிவிஷயாகாரமாகிற அந்தக்கரணத்தின் விர்த்தியில் ஆரூடமான சேதனம் பிரமா அல்லது யதார்த்த ஞானமென்று சொல்லப்படும். அதற்குச் சாதனமான இந்திரியம் பிரமாணமென்று சொல்லப்படும். ஏனெனில் விஷயாகார விர்த்தியில் ஆரூடமான சேதனம் பிரமா வென்றுசொல்லப்படுகிறது. அப்போது சேதனம் ஸ்வரூபத்தில் நித்தியமாயிருப்பதால் இந்திரிய ஜன்யமாயில்லை. ஆனதால் பிரமாசேதனத்துக்கு இந்திரியம் சாதனமன்று. ஆயினும் உபாதியில்லாத சேதனத்தில் பிரமா வியவகார மில்லை. ஆனால் விஷயாகார விர்த்தியுபஹித சேதனத்தில் பிரமா வியவகார முண்டாகிறது. ஆகையால் சேதனத்தினிடத்தில் பிரமா சப்தம் உபயோகிக்கப்படுவதற்கு விஷயாகாரவிர்த்தி உபாதியாயிருக்கிறது. இந்த விஷயாகார விர்த்தி இந்திரியஜன்யமாயிருக்கிறது. இந்திரியம் அதற்கு சாதனமாயிருக்கிறது. பிரமாபாவத்துக்கு உபாதியாகிய விர்த்தி இந்திரியஜன்யமாயிருப்பதால் உபஹிதமான பிரமாவும் இந்திரிய ஜன்யமென்று சொல்லப்படுகிறது. ஆகையால் இந்திரியம் பிரமாவுக்கு சாதனமென்று சொல்லப்படுகிறது. ஆனால் அந்தக்கரணத்தின் சகல பரிணாமங்களையும் பிரமா வென்று சொல்லக்கூடாது. சரீரத்துக்குள்ளிருக்கிற அந்தக்கரணம் விஷயமாகிற கடாதிகளுடன் சேரும்போது உண்டாகும் அந்தக்கரணத்தின் பரிணாமம் பிரமாணமென்றும் விஷயத்துடன் சேர்ந்து விஷயாகாரமாகும் அந்தக்கரணத்தின் பரிணாமம் பிரமா வென்றுஞ் சொல்லப்படும். சரீரத்துக்குள்ளிருக்கிற அந்தக்கரணமுதல் கடாதிவிஷயம் வரையில் நீண்டிருக்கிற அந்தக்கரணத்தின் பரி

ரூமமே பிரமாரூபத்தைத் தரிக்கிறது. ஆதலால் பிரமாவுக்கும் பிரமாண ரூப அந்தக்கரண விர்த்திக்கும் அதிக பேதமில்லை.

232. இவ்விதமாக வெளியிலுள்ள பதார்த்தங்களின் பிரத்தியக்ஷஞானமுண்டாகும்போது அந்தக்கரணவிர்த்தி வெளியேசென்று விஷயமாகிற கடாதிகளுக்குச்சமானமான ஆகாரத்தைத்தரிக்கிறது. சரீரத்துக்குள்ளிருக்கிற ஆத்மாவின் பிரத்தியக்ஷஞான முண்டாகும்போது அந்தக்கரணவிர்த்தி வெளியே போகாமல் சரீரத்துக்குள்ளேயே ஆத்மாகாரமாகிறது. அந்த விர்த்தியால் ஆத்மாவை யாசிரயித்த ஆவரணம் நீங்குகிறது. ஆத்மா தன் பிரகாசத்தால் விர்த்தியில் பிரகாசிக்கிறது. இக்காரணத்தால் ஆத்மா விர்த்திக்கு விஷயமாகச்சொல்லப்படுகிறது. விர்த்தியிலுள்ள சிதாபாஸரூபபலத்துக்கு ஆத்மா விஷயமாகிறதில்லை. இந்தப்பிரகாரமாகச்சாக்ஷியாகிற ஆத்மா ஸ்வயம்பிரகாசரூபமாய் விளங்குகிறதென்பது சித்திக்கிறது.

## (4) பிர்ம்மத்தின் பிரத்தியக்ஷஞானம் (233—250)

### தத்துவதிர்ஷ்டியின்கேள்வி:— (233—244)

233. பிர்ம்மத்தின் அபரோக்ஷஞானத்தால் சகல அவித்தியா சமூகங்களும் நாசமாகின்றன வெனவும் பரோக்ஷஞானத்தால் ஆகாவெனவும் முன் (198) சொல்லப்பட்டது. இந்தவிஷயத்தில் நான் சங்கிக்கிறதாவது:— பிர்ம்மத்தின் ஞானம் பிரத்தியக்ஷமாக வுண்டாகமாட்டாது. ஏனெனில், இந்திரியஜன்யஞானம் பிரத்தியக்ஷமாகும். பிர்ம்மத்தின் ஞானம் இந்திரியஜன்யமன்று.

234. ஏனென்றால், நேத்திரேந்திரியத்தால் ரூபவர்ணங்களோடுகூடிய பதார்த்தங்களின் ஞானமுண்டாகிறது. பிர்ம்மம் இப்படிப்பட்ட பதார்த்தமாக இல்லாதபடியால் நேத்திரேந்திரியத்தால் பிர்ம்மத்தின் ஞானமுண்டாகமாட்டாது. ராமகிர்ஷ்ணாதிகளுடைய மனுஷியாகாரங்களான மூர்த்திகள் ரூபங்களோடுகூடியிருந்தாலும் அந்த மூர்த்திகள் மாயையாலுண்டுபண்ணப்பட்டு மித்தையாக விருக்கின்றன. அம்மூர்த்திகள் பிர்ம்மமன்று, புராணங்களில் ராமகிர்ஷ்ணாதிகளுக்குப்பிர்ம்மரூபஞ்சொல்லப்பட்டிருக்கிறது. அவர்களுடைய சரீரரூபமூர்த்தியே பிர்ம்மமென்கிற அபிப்பிராயத்தாற் சொன்னதல்ல. ஆனால் அவர்களுடைய சரீரங்களுக்கு அதிஷ்டானமான சேதனம் பிர்ம்மமென்று புராணங்களின் அபிப்பிராயம்.

235. ஆக்ஷேபம்:— இதில் ஒரு சங்கை. எல்லாச்சரீரங்க

ளுக்கும் அதிஷ்டானசேதனம் பிர்ம்மம். ஆகையால், அதிஷ்டானசேதன அபிப்பிராயத்தால் ராமகிர்ஷ்ணஜிகளுக்குப்பிர்ம்மத்துவம் சொல்லும்பக்ஷத்தில், எல்லாச்சரீரங்களுக்கும் அதிஷ்டானசேதனம் பிர்ம்மமாயிருப்பதால் மனுஷிய, பசு, பக்ஷி, முதலிய சகலமும் பிர்ம்மரூபமாகும். அவைகளுக்குச்சமானமாக ராமகிர்ஷ்ணஜிகளுமாய்விடுவார்கள். ஆகையால் ராமகிர்ஷ்ணஜிகளின் அதிஷ்டானசேதனம் "பிர்ம்மம்" என்கிற அபிப்பிராயத்தால் பிர்ம்மத்துவஞ்சொல்லப்படவில்லை. ஆனால் மற்றஜீவர்களுடைய ரூபத்தைக்காட்டிலும் அவர்களுடைய ரூபம் விசேஷமாயிருப்பதால் அவர்களுடைய சரீரமே பிர்ம்மமென்று நினைக்கத்தக்கது.

236. **சமாதானம்**:— இச்சங்கைசரியன்று. கைகால முதலிய அவயவங்களோடேகூடியதும் ரூபத்தோடுங் கிரியையோடுங் கூடியதுமான சரீரத்துக்கும் அவயவரூபக்கிரியைகளில்லாத பிர்ம்மத்துக்கும் அபேதஞ்சொல்வது சரியன்று. ஆகையால் சரீரம் பாதிக்கப்பட்டுத்தான் பிர்ம்மரூபஞ்சித்திக்கிறதாகச்சொல்லவேண்டும். இப்படி யெல்லாச்சரீரங்களும் பாதிக்கப்பட்டால் எல்லாஜீவர்களும் பிர்ம்மரூபமாவார்களே யென்றால் ராமகிர்ஷ்ணஜிகளுக்கும் மற்றஜீவர்களுக்கும் அடியிற் கண்டபேதமிருப்பதால் மற்றஜீவர்களெல்லாம் பிர்ம்மரூபமாகார்கள்.

237. **அந்தப்பேதங்களாவன**:— ஜீவர்களுடைய சரீரம் (1) புண்ணியபாபங்களுக்கு ஆதீனமாயும் (2) பூதகாரியமாயுமிருக்கின்றன. (3) ஜீவர்களுக்குத்தேகாதி அனாத்மபதார்த்தவிஷயத்தில் அவித்தியாபலத்தினால் நான் என்னுடையது என்கிற அத்தியாஸமுண்டாகிறது ஆசாரியருடைய உபதேசத்தால் அந்த அத்தியாஸம் நிவிர்த்தியாகிறது ராமகிர்ஷ்ணஜிகளுடைய சரீரங்கள் அவர்களுடைய புண்ணியபாபங்களாலுண்டாகவில்லை, பூதகாரியங்களாகவுமில்லை.

238. **புண்ணியபாபாதீனபாவம்**:— எப்படியெனில், சிருஷ்டிக்கு முன் பிராணிகளுடைய கர்மபோகங்களைக்கொடுக்க ஈசுவரன் சித்தமாயிருந்தபோது ஆப்தகாமரான அவரிடத்திலும் பிராணிகளுடைய கர்மானுசாரமாக "நான் ஜகத்தை யுண்டுபண்ணுகிறேன்" என்கிற சங்கல்பமுண்டாகிறது. அச்சங்கல்பத்தினின்றும் ஜகத்தினுற்பத்திரூபச்சிருஷ்டியுண்டாகிறது. அப்படியே சிருஷ்டிக்குப்பிறகும் "நான் ஜகத்தைப்பாலனம் பண்ணுகிறேன்" என்கிற சங்கற்பம் ஈசுவரனுக்குண்டாகிறது. அந்தச்சங்கற்பத்தால் ஜகத்து ரக்ஷிக்கப்படுகிறது. கர்மானுசாரமான சுகதுக்கத்தின் சம்பந்தம் பாலனமென்று சொல்லப்படும். அப்பாலன சங்கற்பத்துக்கு மத்தியில் உபாஸகபுருஷர்களுடைய உபாஸனை

பலத்தினால் "ராமகிருஷ்ணாதிநாமசகித மூர்த்திகள் எல்லாருக்கும் பிரதீதியாகட்டும்" என்கிற சங்கற்பம் ஈசுவரனுக்குண்டாகிறது. அந்த ஈசுவரசங்கற்பத்தினால் விசேஷநாமரூபங்களில்லாத ஈசுவரனிடத்தில் ராமகிருஷ்ணாதிநாமங்களையும பீதாம்பரத்தையுந்தரித்துகொண்டும், சுந்தரமான ரூபங்களைத்தரித்துக்கொண்டுமிருக்கிற விக்கிரகங்களுற்பத்தியாகின்றன. அவ்விக்கிரகங்கள் கர்மாதீனமன்று. ராமகிருஷ்ணாதி விக்கிரகங்களால் சாதுக்களுக்குந்துஷ்டர்களுக்கும் முறையே சுகமும் துக்கமும் உண்டாகின்றன. எது எவனுடைய சுகதுக்கங்களுக்கு ஏதுவாயிருக்கிறதோ அது அவனுடைய புண்ணியபாபங்களாலுண்டாகிறது. ஆகையால், அது புண்ணியபாபங்களுக்கு ஆதீனமாகச்சொல்லப்படுகிறது. இவ்விதமாக அவதாரபுருஷர்களுடைய சரீரங்கள் சாதுக்களுடைய சுகத்துக்கு ஹேதுவாகிறதினால் சாதுக்களுடைய புண்ணியத்தினாலும் அசுராதி துஷ்டர்களுடைய துக்கத்துக்கு ஹேதுவாகிறதினால் அவர்களுடைய பாபத்தினாலுமுண்டாகின்றன. ஆகையால் அவதாரபுருஷர்களின் சரீரங்கள் புண்ணியபாபங்களுக்கு ஆதீனமன்று, என்று சொல்வது சரியன்று. ஆயினும், ஜீவனால் பூர்வசரீரத்திற் செய்யப்பட்ட புண்ணியபாபகர்மத்தின் பலன் உத்தரசரீரத்தில் அந்த ஜீவனுக்குச்சுக துக்கமாகி விடுகிறது. அப்போது சரீராபிமானத்துடன் கூடிய ஜீவனுடைய முன் சரீரத்தின் புண்ணியபாபத்துக்கு ஆதீனமாகப்பிந்தியசரீரஞ்சொல்லப்படுகிறது. அதுபோல் ராமகிருஷ்ணாதிகளின் சரீரங்கள் சாதுதுஷ்டர்களின் புண்ணியபாபங்களுக்கு ஆதீனமாயிருந்தாலும் இவர்களுடைய சுகதுக்கங்களுக்கு ஹேதுவானாலும் ராமகிருஷ்ணாதிகளின் புண்ணியபாபங்களால் அவர்களுடைய சரீரங்களுண்டாகவில்லை. அவர்களுடைய சரீரங்களால் அவர்களுக்குச்சுகதுக்கபோகமுண்டாகிறதில்லை. ஆகையால் ராமகிருஷ்ணாதிகளின் சரீரங்கள் அவர்களுடைய புண்ணியபாபங்களுக்கு ஆதீனமன்று.

239. பூதகாரியாபாவம்:—அப்படியே ராமகிருஷ்ணாதிகளுடைய சரீரங்களும் பூதபரிணாமங்களன்று. ஆனால் சேதனத்தை யாசிரயித்த மாயாபரிணாமங்களாம். பஞ்சீகிருத பூதங்களுடைய பரிணாமமாக இருக்கும்பக்ஷத்தில் கிருஷ்ணனுடையசரீரம் கயிற்றினாற்கட்டப்பட்டும் கட்டுக்குட்படவில்லையென்று சாஸ்திரத்திற் சொன்னது அசங்கதமாய் விடும். பஞ்சபூதங்களாற் செய்யப்பட்ட சித்தயோகியின் சரீரத்திலும் கட்டுகள் பலிக்காவிட்டாலும், யோகிசரீரம் முதலில் கட்டுக்குட்படுகிறது. மறுபடி யோகாப்பியாசரூபபுருஷார்த்தத்தால் அக்கட்டுகள் பலிக்கிறதில்லை. கிருஷ்ணாதிகளுடைய சரீரங்கள் யோகிசரீரம்போல் யோகாப்பியாசத்தால் கட்டுகளுக்குட்படாதவையல்ல. ஆனால் அவர்களின் சரீ

ரங்கள் சுபாவத்திலேயே கட்டுக்குட்படாதவை. ஆகையால் அவர்களுடைய சரீரங்கள் பூதபரிணாமங்களல்ல, மேலும் மாண்டூக்ய உபநிஷத்தின் ஸ்ரீசங்கராசாரியருடைய பாஷியத்தின் டீகையில் ராமாதிகளுடைய சரீரங்கள் பூதபரிணாமங்கள் என்று ஆனந்தகிரி சொல்லியிருக்கிறார். அப்படிச்சொன்னது ஸ்தூலதிருஷ்டிக்கு மற்றச்சரீரங்களுக்குச்சமானமாக இவர்களுடைய சரீரங்களுங்காணப்படுகின்றன, என்கிற அபிப்பிராயத்தால்தான். ஏனெனில், கீதாபாஷியத்தில் பாஷியக்காரர் சொல்லியிருக்கிறதாவது, ஜீவர்களுக்கனுக்கிரகம் பண்ணுவதற்காகச்சரீரத்தைத்தரிக்கிறது போல் மாயையின் பலத்தினால் பரமாத்மாவானவர் கிருஷ்ணரூபமாக விளங்குகிறார். அவர் ஜன்மாதிகளில்லாதவர். அவருக்கு வசுதேவர் மூலமாகத்தேவகியிடத்தில் ஜன்மம் மாயையாற் பிரதீதியாகிறது. இவ்விதமாகப்பாஷியக்காரர் கிருஷ்ணசரீரத்தை மாயாகாரியமாகச்சொல்லியிருக்கிறார். ஆகையால் பூதங்களினின்றும் அவதாரசரீரம்[55] உண்டா

55. ஈசுவரனுடைய அவதார விஷயத்தில் சாதாரணமான அபிப்பிராயமென்னவெனில் ஈசுவரன் சரீரத்தில் பிரவேசித்து இராம கிருஷ்ணாதி நாமங்களைத்தரித்தார் என்பதாம். இதில் சிலர் வேறு விதமாய் அபிப்பிராயப்படுகிறார்கள். எப்படியெனில். எங்கும் வியாபித்தும் நித்தியமாயும் பிரளய காலத்திலும் மன்வந்திரங்களிலும் எக்காலத்திலும் அசங்கமாயுமிருப்பது பரப்பிரம்மம். இதற்கு யாதொரு கிரியையும் ஏற்படவில்லை. மன்வந்திரத்தின் ஆரம்பத்தில் பிரம்மத்தினிடத்தில் நின்றும் ஒரு அம்சம் வெளிப்படுகிறது. இதற்குப்பெயர் ஈசுவரன், பிரத்தியகாத்மா சப்தப்பிரம்மம். இது சைதன்னிய ஸ்வரூபம். இப்போது ஒவ்வொரு மனுஷிய சரீரத்திலுங்காணப்படுகிற சைதன்னியாம்சம் இந்த ஈசுவரனாகிற சூரியனுடைய கிரணமே. இந்த அம்சம் மூலஸ்தானமாகிய ஈசுவரனுடன் சேருவதே முக்தி யெனப்படும். அவதார விஷயத்தில் சைதன்னியாம்சத்துடன் கூடிய சரீரமும் ஈசுவரனும் சம்பந்தப்படவேண்டியது. இச்சம்பந்தம் ஈசுவரன் தன் அம்சத்துடன் சேருவதால் உண்டாகக்கூடும் அல்லது வியஷ்டி சைதன்னியாம்சம் அந்தக்கரண சுத்திபலத்தால் ஈசுவரனுடன் சேருவதால் உண்டாகக்கூடும். இரண்டாவது பக்ஷத்தில் ஜீவன்முக்தர்கள் தங்களுடைய பிரயத்தனத்தால் ஈசுவரனுடன் ஐக்கியமாவதால் அவர்கள் எல்லாரும் அவதார புருஷர்களாக வேண்டும். ஆனால் அவதாரங்கள் பத்துதானென்று சாஸ்திரத்தில் ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் ஜீவன் முக்தர்களெல்லாரும் அவதாரங்களன்று. ஆகையால் ஈச்வரன் சரீரத்திலுள்ள சைதன்னியாம்சத்துடன் சேருவதே அவதாரமென்று சொல்ல வேண்டியது. இப்படிச்சேரவேண்டியதற்குக்காரணம் ஈசுவரனுக்கே தெரியும். தான் சுவீரிகத்தசரீரம் மூலமாக தன் காரியத்தை அவர் நிறைவேற்றுகிறார். ஈசுவரன் சரீரத்

கவில்லை. ஆனால் அந்தச்சரீரத்தின் உபாதானகாரணம் சாக்ஷாத்துமா யையே.

240. உபதேசம் அனுவசியம்:—மற்றஜீவர்களுக்குத் தேகாதிகளிடத்தில் நான் என்கிற பிராந்தி யிருக்கிறது. ஸ்ரீம கிர்ஷ்ணாதிகளுக்கு அப்படி யில்லை. ஏனெனில் ஜீவனுடைய வுபாதி மலின சத்துவகுணத்தோடு கூடிய அவித்தையாம். ஸ்ரீமகிர்ஷ்ணாதிகளுடைய வுபாதி சுத்த சத்துவ குணத்தோடு கூடிய மாயையாம். ஆகையால் ஜீவனுக்கு அவித்தையாலுண்டான பிராந்தியும் ஸ்ரீம கிர்ஷ்ணாதிகளுக்கு மாயையாலுண்டான சர்வஞ்ஞதையுமிருக்கின்றன! ஜீவனுக்கு அஞ்ஞானத்தாற் செய்யப்பட்ட

---

திலிருக்கிறவரையில் சரீரம் மூலமாகச் செய்யப்படுங் காரியமெல்லாம் ஈசுவரனுடையதே தவிர சாதாரண சைதன்னியத்தினதன்று. கோறின காரியம் முடிந்த பிறகு ஈசுவரன் சரீரத்தை விட்டு தன் ஸ்தானத்திற்குப்போய் விடுகிறார். இதுவே அவதார இரகஸியம். அவதாரத்தை இவ்விதமாய் அறியாதபக்ஷத்தில் மகாபாரதத்திற் சொல்லிய இரண்டுவிஷயங்கள் விருத்தமாய் விளங்கும். எப்படியெனில், பாரதத்தில் லோகபாலசபையை வர்ணிக்கு மிடத்தில்யமனுடைய சபையில் மற்ற அரசர்களுடன் தசரதருமனுமிருந்ததாக நாரதர் சொல்லியிருக்கிறார். இராமாவதாரம்மேற்சொல்லியபடி ஈசுவரன், சைதன்னியாம்சம், சரீரம் இம்மூன்றும் சேராமல் ஈசுவரனும் சரீரமும் சேர்ந்ததாக இருக்கும் பக்ஷத்தில் இராமாவதாரம் முடிந்த பிறகு ஈசுவரன் தன் ஸ்தானத்திற்குபோய்விட்டபடியால் யமனுடைய சபையில் இராமனிருக்க ஹேதுவில்லை. ஆகையால் இதர ஜனங்களைப்போலவே இராமனும் ஜனித்தாரென்றும், சிலகாரணங்களால் அவருடைய சரீரம் ஈசுவரனுக்கு உபயோகப்பட்டதென்றும், ஈசுவரன் பிரிந்துபோன பிறகுமற்ற அரசர்களைப்போலவே இராமனும் இருந்துவிட்டாரென்றும் அறியவேண்டியது. மேலும், பாரதத்தில் மௌசலாபர்வதத்தில் கிருஷ்ணனுடைய மரணத்தைப் பற்றிச் சொல்லுமிடத்தில் வியாசர் சொல்வதாவது:— கிருஷ்ணன் சுவர்க்கத்துக்குப்போய்விட்டார். அவிடத்திலுள்ள சகல தேவதைகளும் மரியாதை செய்தார்கள். பிறகு அங்கிருந்து நாராயணன் (ஈசுவரனுக்கே பிறதிநாமம்) தன் லோகத்துக்குப்போய்விட்டார். தர்மராஜன் சுவர்க்கத்துக்குப்போனபோதும் அவ்விடத்தில் கிருஷ்ணனைக்கண்டார். இவ்விரண்டு வசனங்களையும் (அதாவது நாராயணன்போனதையும் கிருஷ்ணனிருந்ததையும்) எவ்விதமாய் சமரசப்படுத்தி யறியக்கூடும். மகாவிஷ்ணுவே ஒரு பிரயோஜனத்தின் (துஷ்டநிக்கிறக சிஷ்ட பரிபாலனத்தின்) பொருட்டு சில காலம் கிருஷ்ணன் என்னும்புருஷன் மூலமாக வியவகரித்தார் என்று நாம் அறியாதவரையில் மேற்சொல்லிய வசனங்களின் விருத்தங்கள் நீங்கமாட்டா. ஆகையால் அந்தக்கரண சுத்தியாலும் இராஜ யோகபலத்தாலும் பரிபக்குவமடைந்தபுருஷனுடன் ஈசுவரன் சம்பந்தப்படுவதே அவதார இரகஸியம்.

ஆவரணமும் பிராந்திநாசத்தின் பொருட்டு ஆசாரியர்மூலமாக மகாவாக்கிய உபதேசத்தால் உண்டாகும் ஞானுபேக்ஷையுமிருக்கின்றன. அப்படி ராமகிருஷ்ணுதிகளுக்கு ஆவரணமும் பிராந்தியுமில்லாதபடியால் உபதேசத்தாலுண்டாகக் கூடிய ஞானுபேக்ஷையில்லை. ஜீவனுக்கு அந்தக்கரணவிர்த்திரூபஞானம்போல் ஈசுவரனுக்கு மாயாவிர்த்திரூப ஆத்மஞானம் உபதேசாதிகளன்றியிலுமுண்டாகிறது. ஆனல் அந்த ஞானத்தால் யாதொரு பிரயோஜனமும் ஈசுவரனுக்குச்சித்திக்கிறதில்லை. ஏனெனில் ஜீவனுக்குக்கடாதிகளின் ஞானத்தால் ஆவரணம் நீங்கி விஷயமாகிற கடாதிகளின் பிரகாசமுண்டாகிறது. மேலும் ஜீவனுக்கு "நான் பிரம்மம்" என்னும் ஆத்மஞானமுண்டாகுமிடத்தில் ஞானத்துக்குவிஷயமான ஆத்மாவின் ஆவரணம் ஞானத்தால் நீங்குகிறது. ஆத்மாவாகிற விஷயம் ஸ்வயம் பிரகாசமாயிருக்கிறது. ஆகையால் ஆத்மஞானத்தால் பிர்ம்மமாகிற விஷயம் பிரகாசிக்கிறதில்லை. அப்படியே ஈசுவரனுடைய மாயாவிர்த்திரூபமான "நான் பிர்ம்மம்" என்கிற ஞானத்துக்கு விஷயமான ஈசுவரனுடைய ஆத்மா ஆவரணரகிதமாயும் ஸ்வயம்பிரகாசமாயுமிருக்கிறது. ஆகையால் ஆவரணநாசமும் விஷயப்பிரகாசமும் ஈசுவரஞானத்துக்குப்பிரயோஜனமன்று. ஜீவன் முக்தவித்துவானுக்கு, ஆவரணமில்லாத ஆத்மாவை விஷயமாக்குகிற அந்தக்கரணத்தின் "நான் பிர்ம்மம்" என்கிற விர்த்தியானது ஆவரணபங்காதிப்பிரயோஜனமன்றியில் இருக்கிறதுபோல், ஈசுவரனுக்கும் ஆவரணபங்காதிப்பிரயோஜனமன்றியிலேயே மாயாவிர்த்திரூபமான "நான் பிர்ம்மம்" என்கிற ஞானம் உபதேசாதிகளன்றியிலுண்டாகிறது.

241. முடிவு:— இவ்விதமாக ராமகிருஷ்ணுதிகளுக்கு ஜீவர்களைக்காட்டிலும் விலக்ஷணமான ஈசுவரத்தன்மையிருக்கிறது. அப்போதும் அவர்களுடைய சரீரம் மாயையாலுண்டானதால் பிர்ம்மமன்று, மித்தை. மாயையிலுண்டுபண்ணப்பட்ட அவதாரசரீரம் கைகால் முதலிய அவயவசகிதமாயும் ரூபசகிதமாயும் செய்யப்பட்டிருக்கிறது. ஆகையால் அந்தச்சரீரம் நேத்திரேந்திரியத்துக்கு விஷயமாகிறது. நேத்திரேந்திரியம் பிர்ம்மத்தை விஷயமாக்குகிறதில்லை.

242. அப்படியே துவக்கிந்திரியமும் ஸ்பரிசத்தையும் ஸ்பரிசத்துக்கு ஆசிரயமான பதார்த்தத்தையும் விஷயமாக்குகிறது. பிர்ம்மம் ஸ்பரிசத்துக்காசிரயமன்று. ஸ்பரிசமுமன்று. ஆகையால் பிர்ம்மம் துவக்கிந்திரியத்துக்கு விஷயமாகிறதில்லை.

243. ரஸனேந்திரியத்தால் ரஸஞானம் கிராணேந்திரியத்தால்

கந்தஞானம் சுரோத்திரத்தால் சப்தஞானம் உண்டாகின்றன. ரஸ, கந்த, சப்தங்களைககாட்டிலும் பிர்மமம் விலக்ஷணமாயிருப்பதால் ரஸனாதி இந்திரியங்களால் பிர்மத்தின் ஞானமுண்டாகிறதில்லை.

244. கர்மேந்திரியம் ஞானத்துக்குச்சாதனமன்று. ஆனால் அது வசனாதிக்கிரியைகளுக்குச் சாதனமாயிருக்கிறது. ஆகையால் கர்மேந்திரியங்களால் யாதொரு ஞானமுமுண்டாகிறதில்லை. இவ்விதமாக எந்த இந்திரியத்தாலும் பிர்மத்தின் ஞானமுண்டாகிறதில்லை. இந்திரியத்தினலுண்டாகும் ஞானம் பிரத்தியக்ஷமென்றும் அபரோக்ஷமென்றுஞ்சொல்லப்படுகிறது. இவ்விதமாகப்பிர்மத்தின் அபரோக்ஷஞான முண்டாகிறதில்லை. ஆனால் சப்தத்தால் பிர்மஞானமுண்டாகிறது. சப்தத்தாலுண்டாகும் ஞானம் பரோக்ஷமே. ஆகையால் பிர்மத்தின் ஞானமுமபரோக்ஷமாகவேயிருக்கிறது.

245. குருஉத்தரம்:— (245—250) இந்திரியசம்பந்தமன்றியில் பிரத்தியக்ஷஞான முண்டாகமாட்டாதென்கிறது நியமமில்லை. ஏனெனில் சுகதுக்கங்களின் ஞானம் எந்த இந்திரியத்தினலுமுண்டாகிறதில்லை. சுகதுக்கங்களின் ஞானமும் பிரத்தியக்ஷமாயிருக்கிறது. ஆகையால் இந்திரியசம்பந்தத்தாலுண்டாகும் ஞானமே பிரத்தியக்ஷஞானமாகுமென்பது நியமமில்லை. ஆனால் விஷயத்தோடு விர்த்தி சம்பந்தப்பட்டு விர்த்தி விஷயாகாரமாகும்போது[56] பிரத்தியக்ஷஞானமுண்டாகிறதாகச்சொல்லப்படுகி

---

56. விஷயசேதனமும் விர்த்திசேதனமும் அபேதப்படும்போது பிரத்தியக்ஷஞானமுண்டாகிறது. இந்த அபேதம் சிலவிடங்களில் இந்திரியங்கள் மூலமாகவும் சிலவிடங்களில் சப்தத்தினலும் சிலவிடங்களில் சரீரத்துக்குள்ளேயேயுண்டாகும் விர்த்திமூலமாகவும் உண்டாகும். சேதனத்துக்கு ஸ்வரூபத்திலோ யாதொரு பேதமும் இல்லை. ஆனல் விஷயம் விர்த்தி இவைகளாகிற உபாதிகளால் உண்டாகும் பேதம் இருக்கிறது. இந்த உபாதிகள் வெவ்வேறிடங்களில் இருக்கும் போது சேதனம் பேதப்படுகிறது. விர்த்திவிஷயாகாரமாகும்போது இரண்டு உபாதிகளும் ஓரிடத்திற்சேர்ந்து பிரத்தியக்ஷஞானத்தைக்கொடுக்கின்றன. இந்தப்பிரத்தியக்ஷஞானத்துக்கு அபரோக்ஷஞானமென்றும் சாக்ஷாத்காரமென்றும் பெயர். இந்தப்பிரத்தியக்ஷஞானலக்ஷணம் இந்திரியங்களாலுண்டாகும் பாஹிய கடாதிகளின் பிரத்தியக்ஷஞானத்திலும் மகாவாக்கியங்களாலுண்டாகும் பிர்மத்தின் பிரத்தியக்ஷஞானத்திலும் பாஹியநிமித்தங்களன்றியில் உள்ளேயே யுண்டாகும் சுகதுக்கங்களின் பிரத்தியக்ஷஞானத்திலும் மாயையின் விர்த்தியாகிய ஈசுவரஞானத்திலும் அவித்தியா விர்த்தியாகிய ரஜ்ஜு சர்ப்பாதிகளின் ஞானத்திலுங்காணப்படுகின்றது.

கிறது. அப்படிப்பட்ட சம்பந்தம் சிலவிடங்களில் இந்திரியமூலமாகவும் சிலவிடங்களில் சப்தத்தினாலுமுண்டாகிறது, "நீ தசமன்" என்கிற சப்தத்தால் தசமனாகிற தன்னுடன் அந்தக்கரணவிர்த்தி சம்பந்தப்பட்டுத்தசமனாகாரமாகிறது. ஆகையால் சப்த ஜன்யமான தசமனுடைய ஞானமும்[57] பிரத்தியக்ஷமாயிருக்கிறது. இதுபோல, பிரமாதாவினிடத்தில் சுக துக்கமுண்டாகும்போது அந்தக்கரணத்தின் விர்த்தி சுகாகாரமாயும் துக்காகாரமாயுமிருக்கிறது. அந்தவிர்த்தியுடன் சுக துக்கங்களின் சம்பந்தமுண்டாகிறது. ஆனதால் சுக துக்கங்களின் ஞானம் பிரத்தியக்ஷமென்று சொல்லப்படுகிறது. முன்னுண்டான சுக துக்கங்கள் நஷ்டமானபின் மறுபடியும் அவைகள் ஒருவன் ஞாபகத்துக்கு வரும்போது அந்தக்கரணவிர்த்தி சுகாகாரமாயும் துக்காகாரமாயும் ஆகிறது. ஆனால் விர்த்தி சுக துக்கங்களுடன் சம்பந்தப்படுகிறதில்லை. ஆகையால் அந்த ஞானம் ஸ்மிருதி ரூபமாக இருக்கிறதே தவிர பிரத்தியக்ஷமாயில்லை.

246. அந்தக்கரணத்தின் தர்மங்களாகிற சுகதுக்கங்கள் சாக்ஷீ[58] பாஸியங்களாயிருந்தாலும் (60), சுகாகாரமாயும் துக்காகாரமாயுமிருக்கிற அந்தக்கரணத்தின் விர்த்தி மூலமாகச சாக்ஷீ சுக துக்கங்களைப் பிரகாசிப்பிக்கிறது [66]. சாக்ஷீபாஸியபதார்த்தத்தையும் சாக்ஷீ விர்த்தியபேக்ஷையுடன் பிரகாசிப்பிக்கிறது. உதாரணம்:— கிளிஞ்சிலில் வெ

57. "நான் தசமன்" னென்கிற தசமனுடைய ஸ்வரூபத்தின் அபரோக்ஷ ஞானம் "நீ தசமன்" என்கிற சப்தப்பிரமாணத்தாலுண்டாகிறது, இந்திரியத்தினாலாவது மனதினாலாவது உண்டாகிறதில்லை. ஏனெனில் சரீரரூபமான தசமன் இந்திரியத்தால் அறியும்படியாயிருந்தால் நேத்திரேந்திரியத்துக்குத்தான் விஷயமாகவேண்டும். நேத்திரேந்திரியத்தால் சரீரத்தில் தசமனுடைய ஞானமுண்டாகும்பக்ஷத்தில் கண்ணைமூடிக்கொண்டிருக்கிறவனுக்குத் தசமனுடைய ஞானமுண்டாகக்கூடாது. ஆனால் அவனுக்கும் உண்டாகிறது. ஆகையால் தசமனுடைய ஞானம் நேத்திரேந்திரியத்தாலுண்டாகவில்லை. மனதுக்கு நேரில் பாஹிய பதார்த்தங்களையறியமுடியாது. ஆனால் ஆந்தர பதார்த்தங்களையறியமுடியும். தேவதத்தன் யஞ்ஞதத்தன் என்கிறபெயர்கள் சூக்ஷ்மத்தோடு கூடிய ஸ்தூலசரீரத்துக்கு ஏற்பட்டிருக்கின்றன. நீ நான் என்கிற வியவகாரமும் ஸ்தூலதேகத்தில் காணப்படுகின்றது. இந்த ஸ்தூலதேகத்தின் ஞானம் மனதுக்கு நேரிலுண்டாகவில்லை. இவ்விதமாகத்தசமனுடைய ஞானம் சப்தப்பிரமாணத்தாலுண்டாகிறது. அதற்கு நேத்திரமும் மனதும் சாதகமாயிருக்கின்றன.

58. சுகதுக்கங்கள் புத்தியைச்சேர்ந்தவை, ஆத்மாவைச்சேர்ந்தவையல்ல. ஏனெனில் புத்தி இருக்கும்போது இவைகளிருக்கின்றன. சுஷுப்தியில் புத்தி இல்லை, இவைகளும் தோன்றுகிறதில்லை.

ள்ளி சாக்ஷீபாஸியமாயிருக்கிறது. இவ்விடத்தில் அவித்தியாவிர்த்தி மூலமாகச் சாக்ஷீ வெள்ளியைப்பிரகாசிப்பிக்கிறது. ஆனால் சுகதுக்கங்கள் பிரகாசிப்பதற்கு அந்தக்கரண விர்த்தி சாக்ஷிக்கு உதவியாயிருக்கிறது. மித்தையானவெள்ளி முதலியவை பிரகாசிப்பதற்கு அவித்தியா விர்த்தி சாக்ஷிக்கு உதவியாயிருக்கிறது. இவ்விதமாகச்சாக்ஷீபாஸிய பதார்த்தத்தின் ஞானத்திலும் விர்த்தி வேண்டியதாயிருக்கிறது. இந்த விர்த்தி இந்திரியாதி வெளி சாதனங்களாலுண்டாகும்போது இதன் விஷயம் சாக்ஷீபாஸியமல்லவென்று சொல்லப்படுகிறது. சுக துக்கங்களை விஷயமாக்குகிற விர்த்திக்கு வெளியிலுள்ள இந்திரியாதிகள் ஏதுக்களாகிறதில்லை. ஆனால் சுகாதிகளுண்டாகும்போது வேறு சாதனங்களின் அபேக்ஷையன்றியில் அந்தக்கரணவிர்த்தி சுக துக்காகாரங்களாக ஆகின்றது. அவ்விர்த்தியிலாரூடமான சாக்ஷீ சுகதுக்கங்களைப் பிரகாசிப்பிக்கிறது. ஆனதால் சுகதுக்கங்கள் சாக்ஷீபாஸியமென்று சொல்லப்படுகின்றன. கடாதிகளுடன் அந்தக்கரணவிர்த்தியின் சம்பந்தம் நேத்திராதி இந்திரியங்கள்மூலமாயுண்டாகிறது. ஆகையால் கடாதிகள் சாக்ஷீபாஸியமல்ல.

247. அந்தக்கரணவிர்த்தி பிர்ம்மாகாரமாகும்போது[59] விர்த்தி வெளியிற்போகாமல் சரீரத்துக்குள்ளேயே யிருக்கிறது. அந்த விர்த்தியுடன் பிரம்மம் சம்பந்தப்படுகிறது. ஆகிறதால் பிர்ம்மஞ்ஞானமும் சுக துக்கங்களின் ஞானம்போல பிரத்தியக்ஷரூபமாயிருக்கிறது. ஆனால் சுகாகார துக்காகார விர்த்திகளில் வெளிச்சாதனங்களின் அபேக்ஷையில்லை. ஆனதால் சுகதுக்கங்கள் சாக்ஷீபாஸியமாயிருக்கின்றன. பிரம்மாகாரமான அந்தக்கரணவிர்த்தியிலரூமூலமாகக் கேட்கப்பட்ட வேதவசனத்தின் சுரோத்திரத்துடன் சம்பந்தம பாஹிய சாத

---

59. நேத்திரத்துக்கும் சூரியனுக்கும் அபேதமுண்டு. கண்மறைபட்டால் பிர்ம்மாண்டத்திலுள்ள சூரியனுடையபிரகாசம் பார்க்கப்படுகிறதில்லை. மறைவு நீங்கினால் கண்ணிலுள்ள அந்தக்கரணவிர்த்தியால் சூரியனுடையபிரகாசம் காணப்படுகிறது. இதுபோல் சாக்ஷியாத்மாவுக்கும் பிர்ம்மத்துக்கும் பேதமில்லை. அந்தக்கரணத்திலுள்ள அஞ்ஞானமாகிற ஆவரணத்தினால் மறைவுண்டாகும்போது எங்கும் பரிபூர்ணமாயிருக்கும் பிர்ம்மம் பிரத்தியக்ஷமாய் விளங்குகிறதில்லை. விர்த்தி பிர்ம்மாகாரமாகும்போது பிர்ம்மம் தன் பிரகாசத்தினால் விளங்குவதாகத்தெரிகிறது.

ஷமாகச்சொல்லக்கூடும். ஆகையால் பிர்ம்மம் சாக்ஷீபாஸியமன்று. இவ்விதமாக விஷயத்துடன் விர்த்தி சம்பந்தப்படும்போது பிரத்தியக்ஷஞான முண்டாகிறதாய்ச்சொல்லப்படுகிறது. நான் பிர்ம்மமென்கிற விர்த்திக்கு விஷயமாகிற பிர்ம்மத்துடன் அவ்விர்த்தி சம்பந்தப்படுவதால் பிர்ம்மத்தின் ஞானம் பிரத்தியக்ஷமாயிருக்கிறது.

248. புகையைப் பார்க்கிறதினால் நெருப்பின் ஞான முண்டாகும்போது புகையின் ஞானம் பிரத்தியக்ஷமாயிருக்கிறது. நெருப்பின் ஞானம் பிரத்தியக்ஷமாயில்லை. ஏனெனில் நேத்திரமூலமாக அந்தக்கரணவிர்த்தி புகையுடன் சம்பந்தப்படுகிறது. ஆகையால் புகையின் ஞானம் பிரத்தியக்ஷமென்று சொல்லப்படுகிறது. அனுமானத்தினால் அந்தக்கரணவிர்த்தி சரீரத்துக்குள் நெருப்பின் ஆகாரத்தைத் தரிக்கிறது. ஆனால் நெருப்புடன் விர்த்தி சம்பந்தப்படுகிறதில்லை. ஆகையால் நெருப்பின்ஞானம் பிரத்தியக்ஷமாயில்லை.

249. இவ்விதமாக விர்த்தியுடன் விஷயம் சம்பந்தப்படும்போது பிரத்தியக்ஷஞானமுண்டாவதாகச் சொல்லப்படுகிறது. விர்த்தியுடன் விஷயம் சம்பந்தப்படாதபோது விஷயம் தூரத்திலாவது சென்றகாலத்திலாவது வருங்காலத்திலாவது இருக்கக்கூடும். அல்லது அனுமானத்தினாலாவது சப்தத்தினாலாவது விஷயாகாரவிர்த்தி சரீரத்துக்குள்உண்டாகக்கூடும். அப்போதுண்டாகும் ஞானம் பரோக்ஷமென்று சொல்லப்படுகிறது. இந்திரியஜன்னியஞானமே பிரத்தியக்ஷமாகு மென்பது நியமமில்லை. சுகதுக்கங்களின் ஞானம் இந்திரியஜன்யமாகாவிட்டாலும் பிரத்தியக்ஷமாயிருக்கிறதுபோல் தசமபுருஷனுடைய ஞானம் சப்தஜன்யமாயிருந்தும் பிரத்தியக்ஷமாயிருக்கிறது. இவ்விதமாகக்குருமூலமாக ச்சிரவணம் பண்ணி மகாவாக்கியரூப வேதசப்தத்தினின்று உண்டாகிற பிர்ம்மஞானமும் பிரத்தியக்ஷமாகவேயிருக்கிறது.

250 குருவினிடத்தில் இப்பேர்ப்பட்ட உபதேசத்தைக் கேட்டுப் புத்திமானான தத்துவதிர்ஷ்டி தன்னாத்மாவைப்பிர்ம்மரூபமாக அறிந்து பேதப்பிரமையைப்போக்கினான். ஆவரணம் நீங்கின அந்தக்கரணவிர்த்தி "நான் பிர்ம்மம்" என்கிறதாய்ப் பரிணமிக்கிறது. இதை யன்புள்ள குருவே நான் இப்போதுஅறிந்தேன்.

உத்தமாதிகாரியின் உபதேசநிரூபணமென்னும் நான்காவது தரங்கம் முற்றிற்று.

---

60. எவனுடைய அந்தக்கரணம் அத்தியந்தம் சுத்தமாயிருக்கிறதோ எவனுக்கு மகாவாக்கியரூப சப்தத்தால் திடஞானமுண்டாகிறதோ அப்படி உண்டானபிறகு சமுசயாதிகளை நிவிர்த்திக்க சிரவணாதிகள் வேண்டியதில்லையோ அவன் உத்தமாதிகாரி. எவன் அந்தக்கரணம் அத்தியந்தம் சுத்தமாயில்லையோ ஆனால் கொஞ்சம் மலவிக்ஷேபதோஷங்களுடன் கூடியிருக்கிறதோ அவன் மத்தியம அல்லது கனிஷ்டாதிகாரி. மகாவாக்கியரூப சப்தத்தால் அபரோக்ஷஞானமுண்டானபிறகும் சமுசயாதிகளை நிவிர்த்திக்க இவன் சிரவணாதிகளைச்செய்ய வேண்டியதாக இருக்கிறது.

---

# விசாரசாகரம்.

## 5-வது தரங்கம்.

### மத்தியமாதிகாரி உபதேசநிருபணம்.

### வேதம்குருவியாவஹாரிக சத்தைகள் (251—282).

251. அதிருஷ்டியின்கேள்வி:— குருமுகமாகக்கேட்கப்பட்ட வேதவாக்கியத்தால் அத்துவைதபிர்ம்மத்தின் சாக்ஷாத்கார ஞானமுண்டாகிறதென்று முந்திய தரங்கத்தில் 249-வது பிரிவில் சொல்லப்பட்டது. இதைக்கேட்டு அதிர்ஷ்டி யென்னும் 2-வது சிஷ்யன் சங்கிக்கிறதாவது:— வேதம் குரு இவைகள் சத்தியமானால் அத்துவைதத்திற்கு ஹானியுண்டாகி, துவைதம் சித்தியாகும். சங்கரமதம் அசுத்தமெனக்கண்டு மத்துவாதிப்பிரபுக்தர்கள் அதைத்தியாகம் பண்ணுவார்கள். வேதம் குரு இவைகள் அசத்தியமானால் சமுசார துக்கம் நிவிர்த்தியாகமாட்டாது, புருஷார்த்தமுங் கிடைக்கமாட்டாது. மித்தையான கானல் ஜலத்தால் தாகசமனமாகமாட்டாததுபோலும. இவ்விதமாக இரண்டுவிதங்களினாலும் அத்துவைதஞானம் உண்டாகமாட்டாது. சுவாமின், இந்தச் சங்கை யெனக்குண்டாயிருக்கிறது. இதைத்தேவரீர் தயவுசெய்து நிவிர்த்திக்கவேண்டும்.

### குருஉத்தரம் (252—273)

### பிரமாண அப்பிரமாணமதங்கள் (252—254)

252. வியாஸவசனம்:— சிஷ்யனுடைய வார்த்தையைக்கேட்டுக் குரு சொல்லுகிறதாவது:— **சங்கரமதமே** பிரமாணம், மற்றவை அப்பிரமாணம். இவைகள் வேதவிருத்தமாயிருக்கின்றன. **வாயு கூர்ம** புராணாதிகளில் **ஸ்ரீவியாஸர்** சொல்லியிருப்பதாவது:- **சங்கரமதமே** பிரமாணம். கலிகாலத்தில் வேதார்த்தத்தைப்பலர் பலவிதமாய்க்கிரகிப்பார்கள். அப்போது பரமசிவன் சங்கரரூபமாயவதரித்துப்பக்தர்களுடைய ஹிதத்தின் பொருட்டுச்சகலமதங்களையுங்கண்டித்து ஜயின பவுத்த மதங்களை நிர்மூலமாக்கி விடுவார். சூரியப்பிரகாசத்தால் ஜகத்திலுள்ள இருள் நீங்கிச்சகலசிருஷ்டிகளும் அவரவர்களுடைய சொரூபத்துடன் விளங்குவதுபோலவும், சர்வசமுசயங்களும் விபரீதபாவங்களும்

நீங்குவதுபோலவும், வேதார்த்தவிஷயத்திலுள்ள அஞ்ஞானத்தை ஸ்ரீசங்கரவியாக்கியானம் போக்கிசசமுசயபிராந்திகளை நிவிர்த்தித்துப் பூர்ணமான யதார்த்த வுபதேசஞ்செய்யும். வேதார்த்தத்தை வேறுவிதமாய்ச்செய்கிற மற்றவர்கள் மூடர்களே. அவர்கள் வீண்சிரமப்படுகிறார்கள். மத்துவாதிகளுடைய மதம் அப்பிரமாணம். இதை நான் வியாஸவசனத்தால் அறிகிறேன்.

253. **வால்மீகிவசனம்:**— சிஷ்யனே, நான் வேறு பிரமாணஞ்சொல்லுகிறேன் கேள். **வால்மீகிரிஷி** யென்னும் ஆதிகவி **வாஸிஷ்ட** மென்னுங்கிரந்தத்திலும் **உத்தரராமாயண** த்திலும் அத்வைதமதமே பிரமாணமென்று சொல்லியிருக்கிறார். அத்வைதமதத்தில் பிரதானமான **திருஷ்டிசிருஷ்டிவாத**த்தை அனேக இதிஹாசங்களால் பிரதிபாதித்திருக்கிறார். ஆகையால் வால்மீகியின் வசனப்படிக்கு **மத்வாதி**களுடைய பேதமதம் அப்பிரமாணம். **உபநிஷத்துகள் கீதை பிர்ம்மசூத்திரம்** மூன்றுஞ்சேர்ந்து வேதாந்தத்தின் **பிரஸ்தானத்திரய** மென்று சொல்லப்படும். இந்தப்பிரஸ்தானத்திரயத்துக்கு மத்வாதிகள தங்கள் மதானுசாரப்படி வியாக்கியானஞ்செய்திருந்தாலும் **வியாஸவசனத்தினால் ஸ்ரீசங்கராசாரியா**ருடைய வியாக்கியானமே யதார்த்தம். வால்மீகியினுடைய வசனத்தினாலும் அத்வைதமதமே பிரமாணம். பேதவாதம் அப்பிரமாணம. யுக்திகளும் பேதவாதம் விருத்தமாயிருக்கிறது. இது **ஸ்ரீஹர்ஷமிச்ராசாரி**யருடைய **கண்டனா**திக்கிரந்தங்களில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. பேதமதத்தைக் கண்டிக்கும் யுக்திகள் கடினமாயிருப்பதால் அவைகளை இவ்விடத்தில் எழுதவில்லை. மேலும் **ஜயின** மதம்போல் ரிஷிமுனிவசனங்களுக்கு விருத்தமான பேதமதத்தை அப்பிரமாணமாய்க்கொண்ட ஆஸ்திகஅதிகாரியாகிய உனக்கு அந்தப்பேதமதம் யுக்தியால் கண்டிக்கப்படவேண்டுமென்பது அவசியமில்லை.

254. **வேதவசனம்:**— சிஷ்யனே, பேதமதம் வேதவசனத்துக்கும் விருத்தமென்பதைச்சொல்லுகிறேன் கேள். **கடவல்லி**யுபநிஷத்தில் **யமதர்ம**ராஜா பேதப்பிரதீதி பெருந்துக்கத்தைக்கொடுக்கத்தக்கதென்று சொல்லியிருக்கிறார். ஆகையால் பேதவாதத்தை மனதினின்றொழித்து அத்வைதத்தையே கைக்கொள்ளவேண்டியது. அந்தக் **கடவல்லி** யுபநிஷத்திற் சொல்லியசுருதிகளாவன:—

"ம்ருத்யோஸ்ஸம்ருத்யு மாப்நோதிய இஹநாநேவபஶ்யதி। மநஸைவதமாப்தவ்யம்.., ம்ருத்யோஸ்ஸம்ருத்யுங்கச்சதி நாநேவயஇஹநாநாஸ்தி கிஞ்சந"

இவைகளின் பொருள்:— எவன் பரமாத்மாவினிடத்தில் அனேகத்தைப்பார்க்கிறானோ அவன் மிருத்தியுவினால் மிருத்தியுவை யடைகிறான். துவைதத்தை மனதிற் கொண்டவனுக்குப்பயமுண்டென வேதஞ்சொல்லுகிறது. ஞேயத்தியேயங்களைத்தனக்கு வேறாச்சிந்திப்பவன் பசுவுக்கொப்பாவான், என வேதங்கோஷிக்கிறது.

255. பேததிரஸ்காரம்:— சீஷனே, ஆகையால் துக்கத்தைக்கொடுக்கிற மத்வாதிகளுடைய வசனங்களைக் கேட்டவுடன் மறக்கவேண்டும். எதுவரையில் துவைதவசனம் உன்னிருதயத்தில் தங்குகிறதோ, அதுவரையில் அத்வைத சாக்ஷாத்காரமுனக்குக்கிடைக்கமாட்டாது. எப்போது துவைதவசனத்தில் ஸ்மரணையுண்டாகிறதோ அப்போது அதின் எதிரிடையாயிருக்கிற அத்வைதசாக்ஷாத்காரத்தின் ஸ்மரணை விட்டுப்போகும். இதை விளக்குகிற ஒரு கதையைக்கேள்.

256. பர்ச்சுகதை:— ஓரரசனுக்குப் பர்ச்சு வென்று மோர் முக்கிய மந்திரி யிருந்தான். அவன் சகல ராச்சிய காரியங்களையும் தன் விசாரணையில் வைத்திருந்தான். இதைக்கண்டு மற்ற உத்தியோகஸ்தர்கள் பொறாமை யடைந்தார்கள். ஆனால் பர்ச்சுவினிடத்தில் அரசன் வைத்திருந்த அன்பின் மிகுதியால் அவர்கள் அவனுக்கு யாதொரு தீங்கும் செய்யமுடியவில்லை. இப்படி யிருக்கையில் அவர்களெல்லாரு மாலோசித்து ஒரு யுக்திசெய்தார்கள். அதென்னவெனில் அவ்வூரில் பகைவரால் உபத்திரவமுண்டாகும்படிச்செய்வித்தார்கள். உடனே அரசன் சபைகூட்டிச் சத்துருவைத் துரத்தியடிக்கும்படி முக்கிய உத்தியோகஸ்தர்களுக்குக்கட்டளை யிட்டான். அப்போது அவர்கள் அரசனைப்பார்த்து, ஆண்டவனே, பர்ச்சுவையே தேவரீர் எப்போதுங் கொண்டாடுகிறீர்கள். ஆனால் ஆபத்துக்காலத்தில் எங்களை ஏன் அனுப்புகிறீர்கள். இதைக்கேட்டுப் பர்ச்சு, ராஜாவைப் பார்த்து, சுவாமின், ஆஞ்ஞாபித்தால் இக்கணமே சத்துருக்களை ஜயித்தோட்டி விடுகிறேனென்றான். அப்போது அரசன் உடனே அப்படிச் செய்யுமென்று உத்தரவளித்தனன். பர்ச்சுவும் அவ்வாறே சென்று அச்சத்துருக்களை அடித்துத்துரத்தி அனைவருக்கும் க்ஷேமம் விளைவித்தனன். பர்ச்சுவின் காரிய மிவ்வாறிருக்க, மற்ற உத்தியோகஸ்தர்கள் அரசனிடஞ் சென்று பர்ச்சு யிறந்தான் எனச் சாதித்தார்கள். இவர்கள் பொய்வசனத்தை நம்பி அரசன் பர்ச்சுஸ்தானத்தில் இவர்களில் ஒருவனை நியமித்து அவனுக்குப் பல்லக்குச்சத்திர சாமரங்களைக் கொடுத்தான். இப்புதிய மந்திரி அரசனுக்குப் பர்ச்சு ஞாபகமே சொப்பனத்திலும் வராமலிருக்கும்படி யேற்பாடு பண்ணினான்.

257. பர்ச்சுவின் சந்நியாஸம்:— இவ்வர்த்தமானங்களை

யெல்லாம் பார்த்து விசாரித்தறிந்து சந்நியாஸம் பூண்டு தன் மனதில் இவ்வாறு யோஜிக்கிறான்:— அரசனிடம் செல்ல என்றால் இப்போது முடியாது. ஏனெனில் அரண்மனை வாயிலிற் போனால் அவ்வாயில் காப்போர் என்னை க்கொல்வார்கள். இதுவரையில் சகல போகங்களையும் அனுபவித்தேன். ரோகமில்லாத தேகேந்திரியங்கள் ரமணீயமான வீடு போகிக்கத்தக்க ஸ்திரீ முதலியவைகளை யுடைத்தாயிருந்தேன்.

258. ஸ்திரீஸ்துதி:— சமுத்திரமானது கங்கையை விடாதது போல் காமியான நான் ஸ்திரீயினிடத்திற் பிரீதி வைத்திருந்தேன். பிரமன் அவளைத் திலோத்தமைக்குச்சமானமான அழகுடன் சிருஷ்டித்தான். அவளை நான் ஒருக்ஷணங்கூடப் பிரிந்திருக்கிறதில்லை.

259. ஸ்திரீநிந்தனை:— இப்படிப் போகங்களையும் போக சாதனங்களையும் அனுபவித்துக் கொண்டிருக்கும்போதே இவ்வாபத்து சம்பவித்தது. ஜகத்தில் என்னைப்போல் மூடன் யாரிருக்கிறான். இதுவரையில் ஸ்திரீயின் அல்குலிலாசக்தனாயிருந்தேன். அது மலமூத்திரங்களாலெப்போது மீரமாயிருக்கிறது. சரீரத்தினின்றும் இரத்தம்பெருகி அதன் வழியாய் வருகிறது. தோலால் மூடப்பட்டும் மாமிசமயமாயும் அசுத்த மயிர்களோடுங்கூடியதுமானதில் அழகென்ன யிருக்கிறது. ஆனால் அவ்விகாரம் அதிகதுக்கத்துக்கிருப்பிடமானது. ஸ்திரீயின் தொடைகள் எப்போதும் அதிமலினமாயிருந்தும் வாழை மரத்துக்கும் யானையின் தும்பிக்கைக்கும் சமானமாயச் சொல்லப்படுகின்றன. இருதொடைகளுக்கும் மத்தியில் மூத்திரச் சாக்கடை யிருக்கிறது. இரத்தம் மாமிசம் தோல் எலும்பு முதலியவை நிறைந்த அவளுடைய பெரிதான நிதம்பத்தில் மலினமான குகமிருக்கிறது. அதில் துர்க்கந்தந்தவிர வேறொன்றுமில்லை. இப்படி யிருக்கும் நிதமபத்தில் ஆசை வைப்பவன் அந்தகன். ஸ்திரீகளின் உதடுகளினின்றும் உமிழ்நீர் வருகிறது. சுத்தாசுத்தவிவேகமில்லாதவன் அவளைப்பார்த்து மதர்த்து அவளிடத்திற் கொஞ்சமும் வெறுப்பின்றி அவள்முகத்தில் முத்தமிடுகிறான். அவள் அதிசுந்தரலாவண்ணியமுள்ளவளென்று நினைக்கிறான். இப்போது நான் நன்றாய் விசாரித்து இவைகளை யெல்லா மொழிப்பேன்.

260. பர்ச்சுவின்வைராக்கியம்:— போஜனத்துக்குபயோகமான நானாவிதமான பக்ஷணங்களையும் மற்றப்பதார்த்தங்களையும் இதுவரையில் நாக்குச்சுவைத்திருந்தும் இன்னும் திருப்தியடையவில்லை. ஆகையால் வீணாய் இனியதைப்போஷிக்கமாட்டேன். காட்டிலுள்ள கந்தமூலங்களையுண்டுப்பசிதீர்ப்பேன். ஒருவனுக்குமுட்படமாட்டேன். குகையே வீடு, வனமே தோட்டம், தரையே படுக்கை, கையே தலையணை, நிர்

மலஜலங்குடிக்கக் கையே பாத்திரம். இப்படியிருக்க என் ராஜசேவை செய்யவேண்டும். இவ்விதமாக ஏகாந்தத்தில் ஆலோசித்துப் பார்சு பரமானந்தத்தையடைந்தான். ஏகாந்தமன்றியில், சமுத்திரம் வரையில் பூமி கிடைத்தாலும் பரமானந்தங்கிடைக்கமாட்டாது.

261 தைத்திரீயவுபநிஷத்தின்கருத்து:—பூமியின் ராச்சியாதிபத்தியம் ரோகமற்ற யௌவனம் திடகாத்திரம் வித்தியாதிசப்தகுணங்கள் முதலியவை ஒருவனுக்கிருந்தாலும் மனுஷியசுகத்துக்கு முடிவுண்டு. மானிடக்கந்தர்வர்க[1]ளென்று சொல்லப்பட்டவர்கள் ராஜாக்களைக்காட்டிலும் ஏழுமடங்குள்ளசுகத்தை யடைகிறார்கள். தேவகந்தர்வர்கள்[2] இவர்களைவிட நூறுமடங்கு சுகமுள்ளவர்கள். இவர்களைவிட பிதிர்க்கள்[3] நூறுமடங்கான சுகமனுபவிப்பவர்கள். பிதிர்க்களைப்பார்க்கிலும் அஜான[4]தேவர்கள் நூறுமடங்குசுகிகள். கர்மதேவர்கள்[5] இவர்களைவிட நூறுமடங்குசுகிகள். முக்கியதேவர்களு[6]டைய சுகம் இவர்களுக்கு நூறுமடங்கதிகம். இந்திரன்சுகம் இவர்களிலும் நூறுமடங்கு. சகலதேவகுருவான பிரகஸ்பதியின் சுகம் இந்திரனுக்கும் நூறுமடங்கு. பிராஜாபதியின் சுகம்

1. இந்த கல்பத்தில் மனுஷியனாகி புண்ணியவிசேஷத்தால் கந்தர்வபதவியை அடைந்தவன் மனுஷியகந்தர்வன்.

2. முன்கல்பத்தில் செய்த புண்ணியத்தால் இந்த கல்பத்தின் ஆதியிலேயே கந்தர்வபாவத்தை அடைந்தவன் தேவகந்தர்வன்.

3. தங்களுடைய லோகங்களில் வெகுகாலம் வரையில் வசிக்கும் அக்கினிஷ்வத்த முதலியபிதிர்கள்.

4. கல்பத்தின் ஆதியிலேயே தேவபாவத்தை அடைந்தவர்கள் அஜானதேவர்கள்.

5. இந்தகல்பத்தில் அசுவமேதாதிகர்மங்களைச்செய்து வெகு ஐசுவரியத்தை அடைந்து அஜான தேவர்களால் சேவிக்கப்பட்டிருப்பவர்கள் கர்மதேவர்கள்.

6. யமன், அக்னி, வாயு, சூரியன், சந்திரன், ருத்திரன் முதலிய பிரதான தேவதைகள் முக்கிய தேவர்களாம். சிலர் யமன் முதல் பிர்ம்மா பரியந்தமுள்ள தேவதைகளையும், சிலர் 8 வசுக்கள், 12 ஆதித்தியர்கள், 11 ருத்திரர்கள் ஆக 31 தேவர்களையும் முக்கிய தேவர்களாகச் சொல்லுகிறார்கள்.

குருவுக்கு நூறுமடங்கு. பிரம்மத்தின்சுகம் இவருக்கும் நூறுமடங்குள்ளது பிரம்மத்துக்குத் துக்கம்ஒருக்காலுமில்லை. இவ்விதமாகச் சுகத்தின் கிரமம் தைத்திரீய வுபநிஷத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. ராஜன்முதல் பிரமமவரையிலுள்ள சுகத்தை ஏகாந்தவாசியாயும் இருதயத்திற் காமனை யெரித்தவனுயு மிருக்கிறவன் எப்போதும் அடைவான். ஏகாந்தமே சுகத்தைக் கொடுக்கத்தக்கது. ஸ்திரீ புத்திரன் தனம் இவைகள் துக்கத்தையே கொடுப்பவை.

262 துர்க்குணஸ்திரீயால்வருந்துக்கம்:—எவனுடைய ஸ்திரீ குரூபியாயும் துர்ப்பாஷிணியாயு மிருக்கிறளோ அவன் மனதில் எப்போதும் துக்கமே குடிகொண்டிருக்கும். ஸ்வாமின், இந்த ஸ்திரீ மலமூத்திராதிகள்நிறைந்த பாண்டம். எந்தப் பாவத்தினுலோ எனக்கிவள் தண்டனைரூபமாய் அமைந்திருக்கிறள். எருமைக்கடாவுக்கு எருமைக்கடாரியும் ஆண்பிசாசுக்குப் பெண்பிசாசும் ஆணொட்டகத்துக்குப் பெண்ணொட்டகமும் பிரியம். பெண்கழுதையின் சப்தத்தைக்கேட்டு ஆண்கழுதை மோகிக்கிறது. ராத்திரியில் பெண்ணரியின் சப்தத்தைக்கேட்டு ஆண்ணரி ஊளையிடுகிறது. வியபசாராதி யபராதத்தாலாவது வைராக்கியத்தாலாவது ஸ்திரீயைத் தள்ளவேண்டியது. இவளுடைய குரூபமும் துர்ப்பாஷணையும் என்னுடைய பூர்வகர்மானுசாரத்தினுல் கிடைத்திருக்கின்றன, இந்தஜன்மத்தில் அவைகள் அபராதங்களாகா. ஆகையால் நிரபராதியாகிய அவளை வைராக்கியமன்றியில் தள்ளுதல் பாவத்துக்கே காரணமாகும். முன்செய்த பாவத்தின் பலன் இவள் ரூபமாகக் கிடைத்திருக்கின்றது. குரூபத்தைப் பார்ப்பதினுலும் துர்ப்பாஷையைக் கேட்பதினுலும் புருஷனுக் கெப்போதும் துக்கமே சம்பவிக்கிறது.

263 ரூபவதியால்நேரிடுங்கேடு:—ஸ்திரீயானவள் அழகுள்ளவளாயும் மதுரமான வசனத்துடன்கூடினவளாயு மிருந்தால் குரூபமானஸ்திரீயினும் அதிகதுக்கத்துக்கு ஹேதுவாகிறள். சுவர்ணம்போல் தோலுடைய ஸ்திரீயிடத்தில் பிரியம்வைத்த புருஷனுக்கு தர்மார்த்தமோக்ஷங்களெல்லாம் போய்விடுகின்றன.

264 தனநாசம்:—அவளுடைய இனியவார்த்தைகள் விஷத்தன்மையுள்ளவை. அவளால் கொடுக்கப்படும் உணவுகளை யுண்டு காமாந்தன் சொப்பனத்திலும் அவளைத்தவிர வேறென்றையும் பார்க்கிறதில்லை. வீட்டிலாவது வெளியிலாவது அகப்படும் தனம் வஸ்திரம் பூஷணம் முதலியனவெல்லாம் அவளுடைய சரீரவுபயோகத்துக்காகவே சமர்ப்பிக்கப்படுகின்றன. குருதாய்தந்தையர்களின் ஞாபகமேவருகிறதில்லை. பக்தர்கள் ஈசுவரனிடத்தில் பக்தியைச் சமர்ப்பிக்கிறதுபோல் ஸ்திரீயி

ளிடத்திற் பாயஸாதிபதார்த்தங்கள் சமர்ப்பிக்கப்படுகின்றன. மூக்கணாங் கயிறுபோட்ட காளை மனுஷனைவிட்டுத் தப்பிப்போகமாட்டாததுபோல் ஸ்திரீயின் வலையிலகப்பட்டவன் அவளைவிட்டுத் தப்பமாட்டான்.

265 தர்மநாசம்:—கூட்டிலடைபட்ட கிளி சுத்தாசுத்தவசனங்களைக் கற்றுக்கொடுத்தபடிச் சொல்வதுபோல் ஸ்திரீ சொல்லிக்கொடுத்தபடி தாய்தந்தையரிடத்திற் பேசுகிறான். ஆண்மயில் பெட்டையின் முன்பாக ஆடியதைச் சந்தோஷப்படுத்துவதுபோல் காமுகன் ஸ்திரீ சொன்னபடியாடி அவளைச்சந்தோஷிப்பிக்கிறான். இருவர்களுடைய மனதிலுங் காமவிகாரமுண்டாகும்போது மிகவுமுன்மத்தர்களாய் அமங்களமான பிரேதம்போன்ற ரூபத்தைத் தரித்து ஆடுகள்போல் அடிக்கடி ஒருமனதுடன் ரமிக்கிறார்கள். மத்தியபானம் பண்ணினவன் துர்க்கந்தத்தை யறியாமல் புத்திகெட்டுப் புரளுவதுபோல் ஸ்திரீபுருஷர்கள் காமமதத்தால் விவேகங்கெட்டு அதிமலினசரீரத்தைக் கட்டிக்கொண்டு புரளுகிறார்கள். காமமதம் மனதைப் பிரமிக்கும்படிசெய்வதை யறிந்து காமத்தையென்றவர்கள் இவர்களுடைய செய்கையைப் பார்த்து ஆச்சரியப்படுகிறார்கள். காமமதத்தால் புருஷனுடைய புத்தி நாசமடைகிறது. தன்னுடையது பிறருடையது உயர்ந்தது தாழ்ந்தது என ஸ்திரீவித்தியாசந் தெரிகிறதில்லை. காமியானஸ்திரீயும் துக்கத்துக்குட்படுகிறாள். காமவிகாரம் பலப்படும்போது பிராமணஸ்திரீ நீசபுருஷனுடனும் ரமிக்கிறாள். இப்படி ஸ்திரீபுருஷர்கள் காமவிகாரத்தால் அநேகவித அனர்த்தங்களைச்செய்கிறார்கள். காமவிகாரத்தில் தோஷம்பார்க்காதவன் சுந்தரமான ஸ்திரீயையடைந்து விஷத்துக்குச் சமானமான துக்கத்தை யடைகிறான் என்று வெகுமுனிகள் சொல்லியிருக்கிறார்கள்.

266. பிந்துநாசம்:— புஜிக்கப்பட்ட நானாவித பதார்த்தங்களின் ரஸத்தினின்றும் பிந்து உற்பத்தியாகிறது. ஜீவன் பிந்துக்காதீனமாயிருக்கிறது. பிந்து மனதின் துக்கத்தைப்போக்குகிறது. மனது மலினப்பட்டால் துக்கம் ஜனிக்கிறது. மனம் இரத்தமிகுதியால் சஞ்சலப்பட்டாலும் பிந்துவின் அருமையறிந்து ஸ்திரப்படுகிறது. மறுபடியும் தான் பலிஷ்டனென்றறிந்து பிரஸன்னனாகிச்சுபகாரியத்திற் பிரவேசிக்கிறான். பிந்து ஜாஸ்தியானால் ரூபலாவண்யம் ஜாஸ்திப்படுகிறது. பிந்து இல்லாமற்போனால் பிரேதம்போல் சரீரங்காணப்படுகிறது. எவன் பிந்து ஒருக்காலும் நாசமடைகிறதில்லையோ அவன் சரீரத்திற்றளர்ச்சியுண்டாகிறதில்லை. பிந்து சம்ரக்ஷணையால் கேசரி முத்திரையை அப்பியாஸிக்கிறயோகி சிரேஷ்டத்துவமடைகிறான். அஷ்டமாசித்திகளும் அவனுக்குச்சித்திக்கின்றன. ஜகத்தில் மிகவும் உத்தமமாயிருக்கிற இந்தப்பிந்து

வை ஸ்திரீயானவள் தன் அல்குலில் ரக்ஷித்துக்கொள்ளுகிறாள். யந்திரத்திற் கொடுக்கப்பட்ட கரும்புரஸம் பிழியப்பட்டுச் சக்கையாவதுபோல் ஸ்திரீயானவள் புருஷனைத்தன் புஜங்களால் ஆலிங்கனஞ்செய்து அவன் வீரியத்தையபஹரித்துத்தன் யோனியில் நிறப்புகிறாள். புருஷன் வீரியமெல்லாமொழியும் வரையில் இவ்வாறு பிரதிதினஞ்செய்கிறாள். ஸ்திரீ புருஷனுடைய சரீரத்தை யசாரமாக்கிவிடுகிறாள். வாசனையில்லாத பூ சக்கையாக எறியப்படுவதுபோல் புருஷன் பிந்துவற்றுப்போனால் ஸ்திரீயின் கடுஞ்சொற்களாகிற கொள்ளிக்கட்டையாற் சுடப்படுகிறான். யௌவனம், பலம், தனம் மிகுதியாயிருக்கிற புருஷனை ஸ்திரீ யாராதிக்கிறாள். இவை யொழிந்தவுடன் நீ யாரென்கிறாள். மூடன் மறுபடியும் அவளிடத்தில் ரமிக்கவிரும்புகிறான். அவன் தொட்டவுடன் துர்ப்பாஷையாய் பேசுகிறாள். கோபத்தினாற் சிவந்த கண்ணைச்சுழற்றுகிறாள். பிறகு புருஷன் சமீபத்திற்போகிறதில்லை. கோடிவஜ்ரங்களின் சாரஞ்சேர்ந்தால் எவ்வளவு கடினமாயிருக்குமோ அதைவிட அதிகக்கடினமானது ஸ்திரீ இருதயமென்று ரிஷிகள் சொல்லியிருக்கிறார்கள். அநாதரவுசெய்கிற ஸ்திரீயையும் புருஷன் சாகும்வரையில் கைவிடுகிறதில்லை. சுருதி ஸ்மிருதி புராணாதிகளைப்படித்து அதிபுத்திசாலியானவனையுங்கூட ஸ்திரீ ஸ்வாதீனஞ்செய்துவிடுகிறாள். பழக்கின மிருகம் சொன்னபடி யாடுவதுபோல் ஸ்திரீயின் இஷ்டபடி புருஷனாடுகிறான். காமத்தில் முழுகின பண்டிதனும் யுக்திமுதலியவைகளை மறந்துவிடுகிறான். எப்பொழுதாவது வேதாதிகளின் ஞாபகம்வந்தால் ஸ்திரீயினிடத்தில் வெறுப்பையடைந்து அவளைவிட விரும்பி அவள்கண்ணிற் படாமலிருக்கிறான். அவளிடத்தில் வைராக்கியம்போனவன் மறுபடியும் அவளிடத்தில் பிரியப்படுகிறான், அரசன் சேவகரைக்கட்டளையிடுவதுபோல் ஸ்திரீ புருஷனுக்கு வேலையிடுகிறாள். எவன் ஸ்திரீயின் கண்ணாகிற பாணத்தால் அடிபடுகிறானோ அவன் பரமார்த்தத்தையடையப்பாத்திரமாகான். தாசிகளும் பரஸ்திரீகளும் மிகவும் நிந்திக்கத்தக்கவர்கள். ஸ்வஸ்திரீயோ நரகசாமக்கிரியே, சந்தேகமில்லை. விவேகியானவன் இம்மூவர்களின் சிநேகத்தையும் விட்டு விடுகிறான், இவர்களுடன் சிநேகஞ்செய்கிற மூடன் நாசத்தையேயடைகிறான். தர்மார்த்தமோக்ஷங்களை ஸ்திரீ முழுமையும் நாசஞ்செய்கிறாள். அவள் சகலஅனர்த்தங்களுக்குங்காரணமென்றறிந்து சுகத்தையடையும்பொருட்டு அவளைத்தள்ளத்தக்கது.

267. **புத்திரசங்கதுக்கம்:—** புத்திரனும் அப்படியே துக்கத்துக்குக்காரணமாகிறுன். புத்திரன் இல்லாவிட்டால் இல்லையென்கிற துக்கம் மாத்திரமே. புத்திரன் உண்டானால் கர்ப்பத்தில் துக்கம், ஜீவித்திருப்பதில் அதிகதுக்கம். இறப்பதிலோ மிக்கத்துக்கம். ஸ்திரீ கர்ப்பிணியாகாவிட்டால் ஸ்திரீ புருடர் இருவருக்கும் பெருந்துக்கமுண்டாகிறது. கர்ப்பமுண்டானால் அது நாசமடையாமலிருக்கவேண்டுமே யென்று விசாரப்படுகிறுர்கள். பிறகு பிறப்பது பெண்ணோ ஆணோ வென்று சிந்திக்கிறுர்கள். அரைகுறையான மாஸங்களில் சிசு ஜனிக்காமலிருக்க வேண்டுமே யென்று கவலைப்படுகிறுர்கள். ஒன்பதுமாதமானபின் வெகுவருத்தப்பட்டுப்பிரசவிக்கிறுள். நவக்கிரகங்களில் சிலவிருத்தமாயிருப்பதைக்கண்டு தம்பதிகள் அகோராத்திரம் மனம் வருந்துகிறுர்கள். சிசு ஸ்தன்னியபானஞ்செய்யாவிட்டால் தாய்தந்தையர்கண்ணீர் விட்டழுகிறுர்கள். இவ்விதச்சிந்தையிற் சிலநாட்கழிந்தபின் பல் முளைக்கும்போது வெகு குழந்தைகள் மரணமடைவதைக்கண்டு விசனப்படுகிறுர்கள். வியாதியாற் குழந்தை இளைத்துப்போனால் அதன் சவுக்கியத்தின் பொருட்டு பள்ளன் பறையன் சக்கிலியன் துலுக்கன் முதலியவயித்தியர்களையுந்தேடுகிறுர்கள். எவர்களை மதிக்கத்தகாதோ அவர்களையும் சினேகிக்கிறுர்கள். பைரவாதி யக்ஷகதேவதைகளைப்பிரார்த்தித்துக்கொள்ளுகிறுர்கள். மயானத்தில் பலி கொடுக்கிறுர்கள். குழந்தை கழுத்தில் மந்திரங்களெழுதிய தாழ்த்துகளைக்கட்டுகிறுர்கள். ஒரே நாராயணனைப்பஜித்தும் கனவிலும் இதரதேவதைகளை ஸ்மரிக்காதவர்களும் குழந்தை நிமித்தம் வியபசாரிபோல் பலதேவதைகளைத்தேடுகிறுர்கள். ஊரில் வைசூரிகண்டால் தாய்தந்தையர் தவிக்கிறுர்கள். எண்ணெய்முழுக்கையும் நிறுத்துகிறுர்கள். கழுதையைத் தெய்வமெனக் கொண்டாடுகிறுர்கள். தாயே உன் வாகனமான கழுதையை ஊரைச்சுற்றிக்கொண்டுவருகிறேன், அதற்குத்தீனிபோடுகிறேன் என்று கடலையை மடியில் போட்டுக்கொண்டுபோய் கழுதைக்குப்போட்டுப்பிரார்த்திக்கிறுர்கள். இவ்விதமாக வெகு வருத்தப்பட்டுக்குழந்தைகளைக்காப்பாற்றுகிறுர்கள். குழந்தை பெரியவனானபின்பு அனேகவுபாயங்கள் தேடியும் ஆயுள் குறைவால் இறந்துபோனால், தாய்தந்தையர் தலையிலடித்துக்கொண்டு தங்களை வெகுதீனர்களாகப்பாவித்து இரவும் பகலுமாறுத்துயரமடைகிறுர்கள். ஜன்மும் வியர்த்தமாகிவிட்டதாய் நினைத்துத்திக்காரஞ்செய்கிறுர்கள். புத்திரசோகத்தையடைந்தவர்களே இந்தத்துக்கத்தின் தன்மையையறிவார்கள். புத்திரன் பிழைத்துப்பெரியவனானால் அவன் தன் ஸ்திரீயின் சுகத்தையே தேடுகிறுன். வெகுபாடுபட்டு வளர்த்த தாய்தந்தையருக்கு வெகுசீக்கிரத்தில் வருத்தமுண்டாகும்படி ஸ்திரீ செய்கிறுள். மாமன் மாமியான் தா

ளை வருத்துவதாக ராத்திரியில் புருஷனுடஞ்சொல்லுகிறாள். சற்புத்திரன் காலையில் பெற்றோரைத்தூரத்திலிருந்து நமஸ்கரித்து அவர்கள் நெருங்கினாலும் முகமலர்ச்சியுடன் பார்க்கிறதில்லை. அசத்புத்திரன் காலையில் தாய்தந்தையரைத்துர்ப்பாஷையாய்ப்பேசி வீட்டிலுள்ள பொருளையெடுத்துக்கொண்டு வேறிடத்தில் குடிப்போகிறான், தானுழைத்து அவர்களுக்கொன்றும் சம்பாதித்துப்போடுகிறதில்லை. இரவும் பகலும் ஸ்திரீயின் போஷணையிலேயே காலஞ்செலுத்துகிறதையும் தங்களை யலக்ஷியஞ்செய்வதையுங்கண்டு பெற்றோர்கள் மிகவும் வருத்தப்படுகிறார்கள். இவ்விதமாகப்புத்திரன் துக்கத்தையே விளைவிப்பவனென்று விசாரிக்குமளவில் நன்றாய் விளங்குகிறது. எவன் புத்திரனால் சுகம்பெறலாமென்று கருதுகிறானோ அவன் மூடசிரோமணி.

268. தனசங்கதுக்கம்:— ஜாதிகுலதர்மங்களை விட்டுத்தனத்தை விரும்புவோர் வாயில் மண்விழும்.[7] தனம், சம்பாதிப்பதிலும் செலவிடுதலிலும் காப்பாற்றுவதிலும் இழந்துபோவதிலும் துக்கத்தையேதருகிறது. தனத்தைச்சேர்க்க இச்சிக்கிறவன் ஜாதிகுலதர்மங்களை விட்டு அனேகதுன்பங்களுக்குட்படவேண்டியிருக்கிறது. அப்படியுட்பட்டும் அதிர்ஷ்டமன்றியில் தனங்கிடைக்கிறதில்லை. கிடைத்தால் அதைக்காப்பாற்றுவதில் விசாரமுண்டாகிறது. செலவிட்டால் குறையுமேயென்கிற விசாரம்வருகிறது. முழுதும் செலவானால் அபாரமானதுக்கம். இவ்விதமாகத்தனம் மனதிற்குத்துக்கத்தையே விளைவிக்கிறது. இதையிச்சிப்போன் இகழத்தக்கவனாவான்.

---

7. ஸ்ரீமத்பாகவதத்தில் பதினோராவது ஸ்கந்தத்தில் 23-வது அத்தியாயத்திற் சொல்லியிருக்கிறதாவது:— அர்த்தத்தைச் சம்பாதிப்பதிலும் சம்பாதித்த அர்த்தத்தை க்காப்பாற்றுவதிலும் அதை விர்த்தி செய்வதிலும் அது செலவாகிறதிலும் நாசமாகிறதிலும் அனுபவிக்கப்படுவதிலும் மனுஷனுக்குத் துக்கம் பயம் சிந்தை பிரமை இவைகளுண்டாகின்றன. சம்பாதிக்கிறதிலும் விர்த்திசெய்வதிலும் துக்கமும் காப்பாற்றுவதில் பயமும் செலவிலும் அனுபவிப்பதிலும் சிந்தையும் நாசத்திற் பிரமையு முண்டாகின்றன. அர்த்தத்தை அடையும்பொருட்டு (1) திருட்டு (2) ஹிம்சை (3) பொய் மொழிதல் (4) டம்பம் (5) இச்சை (6) குரோதம் இவ்வாறு அனர்த்தங்களிருக்கின்றன. அடைந்த அர்த்த விஷயத்தில் (1) கர்வம் (2) அபிமானம் (3) ஸ்நேகத்தியாகம் (4) வைரம் (5) அவிசுவாசம் (6) அசூயை (7) ஸ்திரீ (8) மத்தியம் (9) சூதாடல் இம்மூன்றுகளாலுண்டாகுந்துக்கம் ஆகிய இவ்வொன்பது அனர்த்தங்களும் இருக்கின்றன. ஆகையால் ஓரர்த்தம் 15 அனர்த்தங்களுக்கு மூலகாரணமாயிருக்கிறது.

269 பர்ச்சுகாட்டுக்குபோகுதல்:— இவ்விதமாக ஸ்திரீ புத்திரன் தனம் இவைகள் துக்ககரமானவை யெனத் தெரிந்து அவைகளில் அபிமானத்தை யொழித்துப் பர்ச்சு தனிமையாகக் காட்டுக்குப்போய் அவ்விடத்தில் சித்தசாந்தியை யடைந்தான்.

270 ராஜாபர்ச்சுவைசந்தித்தல்:—பார்ச்சுஸ்தானத்தில் மந்திரியாய் நியமிக்கப்பட்டவன் இந்த விருத்தாந்தங்களை யெல்லாங்கேள்விப்பட்டுப் பர்ச்சு ஜீவித்திருக்கிறானென்று ராஜா கேள்விப்பட்டாலாவது நேரில் சந்தித்தாலாவது நாமெல்லோரும் பொய்யராய்விடுவோம், அரசன் நம்பான் தண்டிப்பான், என்று புதுமந்திரி மனதில் நினைத்து உத்தியோகஸ்தர்களுடன் ஆலோசித்து ராஜாவிடம் எல்லாரும் போய், பர்ச்சு பிசாசாய்க்காட்டிற் சஞ்சரிப்பதாயும் உடம்பெல்லாம் சாம்பற்பூசிக் கொண்டிருப்பதாயும் அவனைச்சந்தித்துப்பேசுகிறவர்களை யவன் அடிக்கிறதாயும் அவனைக்கண்டவுடன் ஓடுவோர்மட்டும் தப்புகிறதாயும் தெரியப் படுத்திக்கொண்டனர். இதன் உண்மையை விசாரிக்காமலே அரசன் பர்ச்சு பிசாசாய்விட்டானென்று நிச்சயித்துவிட்டான். பிறகு ராஜா ஒரு நாள் வேட்டையாடக்காட்டுக்குச்சென்றான். பர்வதங்களும் நெருக்கமான விருக்ஷங்களும் சிங்கம் புலி முதலிய துஷ்டமிருகங்களிருக்குமிடத்திற் பிரவேசித்து ஒருமரத்தடியிற் பர்ச்சு தவஞ்செய்வதைக்கண்டு இவன் பிசாசு என்கிற பயத்தினால் அரசன் ஓடினான்.

271. திர்ஷ்டாந்தத்தைத் தார்ஷ்டாந்தத்திற் பூரித்தல்:— பர்ச்சு இறந்து பிசாசானானென்கிற பொய்வசனத்தை நிசமாக நம்பி தன் கண்ணால் ஜீவித்திருக்கும் பர்ச்சுவைப்பார்த்தும் பிசாசென்கிற நினைவால் அரசன் ஓடினதுபோல் துவைதவாதிகளின் வசனத்தைக்கேட்டு அஞ்ஞானி அதில் விசுவாசம் வைத்து அந்தக்கரணத்தில் பிரம்மம் அத்வைதமென்கிற ஞானமுண்டானாலும் பேதவசனவிசுவாசத்தால் எப்போதும் துக்கத்தையேயடைகிறான். ஒருக்காலும் அவனுக்குப்பிரம்மத்தின் சாக்ஷாத்காரஞானமுண்டாகிறதில்லை. பேதவசனத்தையசத்தியமாக அறிகிறவனுக்குப்பிரம்மஞானம் மகாவாக்கியத்தாலுண்டாகும். சிஷ்யனே, பேதவசனத்தை நீ கேட்பாயானால் அதைப்பொய்யாகவும் நரகசாதகமாகவும் அதைப்பிரதிபாதிக்கப்பட்டவரெல்லாம் பொய்யரென்றும் அவர்கள் ஒருகாலத்திலும் புருஷார்த்தத்தை யடையமாட்டார்களென்றும் அறி. அவர்களிடத்தில் ஒருக்காலத்திலுஞ்சேரக்கூடாது. சேர்ந்தாலும் அவர்களுடைய பேதவசனத்தைக்கேட்கக்கூடாது. கேட்டாலும் கேட்டவுடனே அதைத்தள்ளவேண்டியது. அவ்வசனத்தை மிலேச்சன்வசனமாக நினைக்கவேண்டியது.

272. வேதமுங் குருவும் மித்தையானால் சமுசாரதுக்கத்தை யெப்படி நிவிர்த்திக்கக்கூடுமென்று நீ கேட்டகேள்விக்கு (251) உத்தரஞ் சொல்லுகிறேன் கேள். பொய்யானதுக்கம் பொய்யான உபாயத்தால்தான் நிவிர்த்தியாகும். வேதமுங் குருவும் பொய்யாயில்லாவிட்டால் பொய்யான ஜகத்தின் துக்கம் நிவிர்த்தியாகமாட்டாது. இதற்கோர்திர்ஷ்டாந்தஞ்சொல்லுகிறேன் கேள். அதினால் சந்தேகங்கள் நிவிர்த்தியாய்விடும். தேவர்களுடைய அரசனான இந்திரன்போல் வெகுபிரதாபமுள்ள அரசன் ஒருவனிருந்தான். அவனிடத்தில் பீமனுக்குச்சமானமான அனேக வீரர்களிருந்துகொண்டு வாயிலில் காத்துவந்தார்கள். அவனுடைய அந்தப்புரத்திலும் உருவின கத்தியுடன் அனேகர் காத்துவந்தார்கள். மேல்மாடியில் சயனிக்கு மறையில் புஷ்பங்கள் பரப்பின மெத்தையில் அரசன் தூங்கிக்கொண்டிருந்தான். ஒரு ஈயும் அவ்விடத்திற் பிரவேசிக்க முடியாதிருக்க, வேறெதுதான் அங்கேபோகக்கூடும். அரசன் அப்போது ஒரு கனவுகண்டான். அதென்னவெனில் ஒரு நரி அவன் காலைப்பிடித்துக்கொண்டது. அதையுதறித்தள்ள அவனால் முடியவில்லை. சகாயத்துக்காகக்கூக்கரலிட்டும் வாயிலில் இருந்தவர்கள் சகாயத்துக்கு வரவில்லை. பிறகு ஒரு தடியை யெடுத்துக்கொண்டு அதைபடித்தபின் அது ஓடிவிட்டது. கடித்தவிடத்தில் வெகு வலியுண்டாயிற்று. தடிசகாயத்தால் நொண்டிக்கொண்டு ஒரு வைத்தியன்வீட்டுக்குப்போய் ரணத்தையாற்றும்படிக்கு மருந்துகேட்டான். வைத்தியன் தன் கையில் மருந்தில்லையென்றும் பணங்கொடுத்தால் பண்ணிக்கொடுக்கிறதாயுஞ்சொன்னான். இதைக்கேட்டு அரசன் கையில் காசில்லாமையால் பின்வாங்கி வெகுவருத்தத்துடன் திரும்பி மனதில் ஆலோசித்தான்:— நான் தனிகனாயிருந்தால் இந்த வைத்தியன் வீட்டுக்கு ஓடிவருவான். நான் ஏழையென்றும் என்னாற் பிரயோசனமில்லையேன்றும் நினைத்து, கைவிடப்பட்ட ரோகியென என்னைக்கைவிட்டுவிட்டான். ஆனால் அவனிடத்திற் பிசகில்லை. பிரதிப்பிரயோசனமன்றியில் ஒருவனும் ஒருகாரியமும் செய்யமாட்டான். தாய் தந்தை ஸ்திரீ பிள்ளை பந்துக்களெல்லாம் தங்களுடைய பிரயோசனத்தின்பொருட்டே ஒருவனிடத்தில் அன்புபாராட்டுகிறார்கள். பிரயோஜனமில்லாவிடில் இவர்கள் திரும்பிப்பார்க்கக்கூடமாட்டார்கள். எவன் இல்லாததை ஒருநொடிக்கூடச்சகிக்கமாட்டார்களோ, எவன் கொஞ்சம் பிரிந்துபோனாலும் அதிகதுக்கப்படுகிறார்களோ, அவன் வீட்டுவாயிலில் வந்தவுடன் அவனைக்கட்டிக்கொள்ள எல்லாரும் கூடுகிறார்கள். துரதிர்ஷ்டத்தினால் அவன் குஷ்டரோகியாகி அவன் விரல்கள் குறைந்துபோய் அவைகளிலிருந்து ஜலம் பெருக்கிக்கொண்டும் ஈக்களால் உபத்திரவப்பட்டுக்கொண்டுமிருந்தால் இவனால் என்னப்பிரயோசனமென்று நினைத்து முன் பிரியமாயிருந்தவர்கள் இப்போது அடா, பாவிப்பயலே, ஏன் இன்னும் ஜீவித்துக்கொண்டிருக்கிறாய், பிராணனை விடு என்று கடிந்து பேசு

கிறார்கள். வாந்தியுச்சிஷ்டம்போல் அவனை வெறுக்கிறார்கள். பிரிய முள்ள ஸ்திரீயானவள் சற்றுவிலகியிருந்துக்கொண்டு முகத்திலுள்ள ஈக் களை யோட்டுகிறாள். இவனை மடியில் வைத்து வளர்த்த தாய்தந்தையர் இவனுக்கு வேண்டியதைக்கொடுத்து விலகிவிடுகிறார்கள். பந்துக்கள் மறைவில் நின்றுகொண்டுபேசுகிறார்கள். இவ்விதமாக, சர்வஜகத்தும் தம் தம் சொந்தப்பிரயோசனத்தையே நாடுகிறது. சொந்தப்பிரயோசன த்தை நாடாமல் யார்தான் ஒருவனிடத்தில் அன்பு பாராட்டுவார். நான் தனிகனுயில்லாமையால் எனக்கு மருந்து கொடுக்கவில்லை. இப்படி நினை த்துக்கொண்டு போகும்போது அரசன் ஒரு சந்நியாசியைச்சந்திக்கிறான். அவன் ஒரு ஔஷதங் கொடுத்தவுடன் வலி சுத்தமாய் நீங்கிவிடுகிறது. அரசன் நித்திரையினின்று விழித்துக்கொண்டவுடன் கடி, துக்கம், சந்நி யாசி இவைஒன்றையும் காணவில்லை. சிஷனே, இந்தத்திர்ஷ்டாந்தம் உனக்குச்சொன்னேன். இதனுல் பொய்யால்தான் பொய் நிவிர்த்தியாகு ம் என்று அறி. ராஜாவுக்குப்பொய்யான துக்கமுண்டானகாலத்தில் நிஜமானவை யாதொன்றுமுபயோகப்படவில்லை.

273. மேற்சொன்னதற்கு அபிப்பிராயமென்னவெனில் சமுசா ரரூபதுக்கம் பொய்யாக இருக்கிறது. ஆகையால் அதை நிவிர்த்திக்கச்சா தனங்களான வேதமுங்குருவும் பொய்யாகவேயிருக்கவேண்டும். பொய் யை நாசஞ்செய்ய நிஜமான சாதனங்கள் வேண்டியதில்லை. சத்தியசாத னங்களால் பொய் நாசமாகமாட்டாது. மேற்காட்டிய உதாரணத்தில் அரசன் சமீபத்திற்பொய்யான நரி நிஜமான வாயில்காப்போரால் தடுக்க ப்படாமல் வந்து அரசனிடத்தில் அனேக நிஜமான ஆயுதங்களிருந்தபோ திலும் பொய்யானதடியால் அடிக்கப்பட்டு ஓடிவிட்டது. ராஜாவுக்குப் பொய்யான புண் உண்டாயிற்று. நிஜமான வயித்தியன் ஒருவனும் வர வில்லை. பொய்யான வயித்தியனிடத்திற் போய், அரசனுக்கு வெகு ஆஸ்தி யிருந்தும் ஒருபைசாவுமில்லாமல் போனதால் மருந்து பெறக்கூ டாமல், பொய்யான சந்நியாசியாற் கொடுக்கப்பட்ட பொய்யானமருந்தா ல் பொய்யான புண் ஆறிப்போய்விட்டது. ஒருவிதமான சத்தியசாதன மும் அரசனுடைய துக்கநிவிர்த்திக்கு உபயோகப்படவில்லை. இவ்வித மான சொப்பனம் எல்லாருக்கும் அனுபவசித்தமாயிருக்கிறது. ஜாக்கிர தபதார்த்தங்கள் எப்போதும் எவனுக்கும் சொப்பனத்திலுபயோகப்படு கிறதில்லை. இதுபோல் பொய்யான சமுசாரதுக்கம் பொய்யான வேதங் குரு இவைகளால் நாசமடைகிறது. சத்தியமான வேதங்குரு இவைகளைய பேக்ஷிக்கிறதில்லை.

274. கேள்வி:— மித்தையான கானலஜலத்தினால தாகசாந் தியாகாததுபோல் மித்தையான வேதங்குரு இவைகளால் சமுசாரதுக்க

ம் நிவிர்த்தியாகமாட்டாது. அப்படி நிவிர்த்தியாகுமென்று சொல்லும்பக்ஷத்தில் கானல் ஜலத்தினாலும் தாகசாந்தியாகக்கூடும்.

275. சமாதானம்:— பொய்யான கானல்ஜலத்தினால் எவருக்கும் தாகசாந்தியாகாவிட்டாலும் பொய்யான வேதங்குரு இவைகளால் சமுசாரதுக்கம் நிவிர்த்தியாகும். சமுசாரதுக்கம் நிவிர்த்தியாவதுபோல் தாகமும் கானல்ஜலத்தால் நிவிர்த்தியாகக்கூடுமே, ஆனால் நிவிர்த்தியாகவில்லையே யெனில் உன் திருஷ்டாந்தம் விஷமமாயிருக்கிறது. ஏனெனில் கானல் ஜலத்திலும் தாகத்திலும் ஸத்தை பேதப்படுகிறது. இதைப் பார்ப்பாயாக.

276. ஸத்தைபேதங்கள்:— சமுசாரதுக்கமும் குருவேதம் இவைகளும் ஓரேஸத்தையாக இருக்கின்றன. ஆகையால் குருவேதங்களால் சமுசாரதுக்கம் நிவிர்த்தியாகும். எந்தபதார்த்தங்களுக்கு அவைகளுக்குள் சமஸத்தை[8] யிருக்கிறதோ அவைகளுக்கு அவைகளுக்குள்ளே

---

8. இதிலோர் சங்கை:— சமஸத்தையுள்ள பதார்த்தங்களே சாதக பாதகங்களாகவிருப்பதாக நியமமில்லை. ஆனால் விஷமஸத்தையுள்ள பதார்த்தங்களும் சில இடங்களில் சாதக பாதகங்களாயிருக்கக்கூடும். எப்படியெனில் அதிஷ்டானத்தைக்காட்டிலும் ஆரோபத்தின் ஸத்தை விஷமம். ஆரோபத்துக்கு அதிஷ்டானம் சாதகமாயிருக்கிறது. கல்பித வெள்ளிக்கு அதிஷ்டானம் கிளிஞ்சில் கிளிஞ்சில் வியாவஹாரிக ஸத்தை, வெள்ளி பிராதிபாஸிக ஸத்தை. வெள்ளிக்குச்சாதகம் அதாவது காரணம் கிளிஞ்சிலில் காணப்படுகின்றது. இதுவுமன்றி ஜகத்துக்கு அதிஷ்டானம் பிர்ம்மம். பிர்ம்மம் பாரமார்த்திக ஸத்தை, ஜகத்து வியாவகாரிக ஸத்தை. ஆகையால் விஷமஸத்தையும் சாதகமாயிருக்கிறது. மேலும் கிளிஞ்சிலின் ஞானத்தால் வெள்ளியும் வெள்ளியின் ஞானமும் பாதிக்கப்படுகின்றன. வெள்ளியின் ஞானமும் வெள்ளியும் பிராதிபாஸிகஸத்தை கிளிஞ்சிலின் ஞானம் வியாவகாரிகஸத்தை. இவ்விதமாக விஷமஸத்தை பாதகமாயிருக்கிறது. ஆகையால் சமஸத்தையுள்ள பதார்த்தங்களே சாதகபாதகங்களாயிருக்க வேண்டுமென்கிற நியமமில்லை. இதற்குச்சமாதானம்:— கேவலம் கிளிஞ்சிலாவது பிர்ம்மமாவது வெள்ளிக்கு அல்லது ஜகத்துக்கு அதிஷ்டானமாக இல்லை. ஆனால் தூலாவித்தையுடன் கூடிய கிளிஞ்சில் வெள்ளிக்கும் மூலாவித்தையுடன் கூடிய பிர்ம்மசேதனம் ஜகத்துக்கும் அதிஷ்டானங்களாயிருக்கின்றன. சில இடங்களில் விசேஷணத்தின் தர்மங்கள் விசிஷ்டத்தில் வியவகரிக்கப்படுகின்றன. இந்த நியமத்தால் பிராதிபாஸிக தூலாவித்தையுடன்கூடியசுக்தி (அதாவது கிளிஞ்சில்) அல்லது சுக்திஅவச்சின்னசேதனம் பிராதிபாஸிகமென்று சொல்லப்படுகிறது. வியாவகாரிகமூலாவித்தையவச்சின்னபிர்ம்மசேதனம் வியாவகாரிக மென்று சொல்லப்படுகிறது அவித்தை உபாதியாயிருந்தாலும் விசேஷணமாயில்லாவிட்டாலும் அவிவேகிகளுடைய திருஷ்டிக்கு விசேஷணம்போல க்காணப்படுவதால் இவ்விடத்தில் விசேஷணமாகச்சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் இந்த அவித்தையின் பிராதிபாஸிக வியாவகாரிக

யே சாதகபாதகங்களிருக்கின்றன.

உதாரணம்:— மண்ணுக்குங் கடத்துக்கும் ஸமஸத்தையிருக்கிறது. ஆகையால் மண் கடத்துக்குச்சாதகமாயிருக்கிறது. நெருப்புக்கும் கட்டைக்கும் சமஸத்தையிருப்பதால் நெருப்பு கட்டைக்குப்பாதகமாயிருக்கிறது. சாதகமெனில் காரணம், பாதகமென்றால் நாசஞ்செய்தல். கானல் ஜலத்துக்கும் தாகத்துக்கும் சமஸத்தையில்லாதபடியால் கானல் ஜலம் தாகத்துக்குப்பாதகமாயில்லை. அதாவது, தாகத்தை நிவிர்த்திக்கிறதில்லை. இந்த இடத்தில் ஒரிரகசியமிருக்கிறது:— சேதனத்தினிடத்திற் **பாரமார்த்திகஸத்தை** இருக்கிறது. சேதனத்துக்கு வேறான மித்தையான பதார்த்தங்களில் **வியாவஹாரிக** ஸத்தையெனவும் **பிராதிபாஸிக** ஸத்தை எனவும் இருவித ஸத்தைகளுள.

277. **வியாவஹாரிகஸத்தை:**— எந்தப்பதார்த்தம் பிர்ம்மஞானமன்றியில் பாதிக்கப்படவில்லையோ ஆனால் பிர்ம்மஞானத்தினாலேயே பாதிக்கப்படுகிறதோ அந்தப்பதார்த்தத்தில் வியாவஹாரிகஸத்தை இருப்பதாகச்சொல்லப்படுகிறது. இந்த வியாவஹாரிகஸத்தை ஈஸ்வரசிர்ஷ்டியிலிருக்கிறது. ஏனெனில், தேகம், இந்திரியம் முதலிய பிரபஞ்சமாகிற ஈஸ்வரசிர்ஷ்டி பிர்ம்மஞானமன்றியில் பாதிக்கப்படுகிறதில்லை பிர்ம்மஞானத்தினாலேயே பாதிக்கப்படுகிறது. ஈஸ்வரசிர்ஷ்டியின பதார்த்தங்கள் பிர்ம்மஞானமன்றியில் நாசமடைந்தாலும் பிர்ம்மஞானமன்றியில் பாதிக்கப்படுகிறதில்லை. பொய்யென்கிற சாக்ஷாத்தான நிச்சயத்துக்குப்பாதை யென்றுபெயர். இந்தநிச்சயம ஈஸ்வரசிர்ஷ்டிபதார்த்தத்தில் பிர்ம்மஞானத்துக்குமுன் ஒருவனுக்குமுண்டாகிறதில்லை. பிர்ம்மஞானத்துக்குப்பிறகுண்டாகிறது. ஆகையால், மூலஅவித்தியாகாரியமாகிற ஜாக்கிரதபதார்த்தங்களாகிற ஈஸ்வரசிர்ஷ்டியில் வியாவகாரிகஸத்தை இருக்கிறது. ஜன்மம், மரணம், பந்தம், மோக்ஷம் முதலிய வியவகாரங்கள்

---

தர்மங்கள் அவைகளின் ஆசிரயமான சிளிஞ்சிலிலும் பிர்ம்மத்திலும் வியவகரிக்கப்படுகின்றன. ஆகையால் இவ்விடத்தில் விஷமஸத்தையுடன் கூடினது சாதகமாக இல்லை. ஆனால் சமஸத்தையுடன் கூடினதே சாதகமாயிருக்கிறது. மெலும், பஞ்சபாதிகாகாரருடைய ரீதிப்படி மூலாவித்தைக்கு வேறாகத்தூலாவித்தையில்லை. ஆகையால் அதின் நிவிர்த்தி சிளிஞ்சில்ஞானத்தால் உண்டாகிறதில்லை. பிர்ம்மஞானத்தினால் தான் உண்டாகிறது. ஆனால் வியாவகாரிக அந்தக்கரணத்தின்விர்த்தியாகிய சுக்தியின் யதார்த்தஞானத்தால் சுக்தியிலுள்ள தூலாவித்தை பாதிக்கப்படுகிறது. ஆகையால் அதின் காரியங்களான வெள்ளியும் அதின்ஞானமும் பாதிக்கப்படுகின்றன. ஆகையால் விஷமஸத்தையுடன் கூடினது பாதகமாயில்லை.

சித்திக்கும்படிச்செய்வது வியாவகாரிகஸத்தையாம்.

278. **பிராதிபாஸிகஸத்தை:—** பிர்ம்மஞானமன்றியில் பாதிக்கப்படும் பதார்த்தம் பிராதிபாஸிகஸத்தை என்னப்படும்.

உதாரணம்:— பிர்ம்மஞானமன்றியிலேயே சிளிஞ்சில் கயிறு கானல்ஜலம் முதலியவைகளின் ஞானத்தினால் முறையே வெள்ளி, சர்ப்பம், ஜலம் முதலியவை பாதிக்கப்படுகின்றன. சிளிஞ்சில் முதலியவைகளில் பிராதிபாஸிகஸத்தையிருக்கிறது. பிராதிபாஸிகமென்றால் பிரதீதிமாத்திரம். ஸத்தையென்றால் இருக்குதல். பிரதீதிமட்டும் இருப்பதற்குப்பிராதிபாஸிகஸத்தை யென்றுபெயர். தூலாவித்தையின் காரியமான வெள்ளி முதலியவைகளில் பிரதீதிமட்டுமிருக்கிறபடியால் அவைகளுக்குமபிராதிபாஸிகஸத்தை சொல்லப்படுகிறது.

279. **பாரமார்த்திகஸத்தை:—** எது முக்காலங்களிலும் பாதிக்கப்படுகிறதில்லையோ அது பாரமார்த்திகஸத்தையென்று சொல்லப்படுகிறது. சேதனம் ஒருக்காலும் பாதிக்கப்படுகிறதில்லை. ஆகையால் அது பாரமார்த்திகஸத்தையாம்.

280. இவ்விதமாக வேதம் குரு சமுசாரதுக்கம் இவைகள் ஒரே வியாவகாரிகஸத்தையாயிருப்பதால் இவைகளுக்குள் ஸமஸத்தையிருக்கிறது. ஆகையால் பொய்யான வேதங்குரு இவைகளால் பொய்யான சமுசாரதுக்கம் நிவிர்த்தியாகக்கூடும். மேலும் பசி தாகம் பிராணனுடைய தர்மங்கள். பிராணனும் அதினுடைய தர்மங்களும் பிர்ம்மஞானமன்றியில் நிவர்த்தியாகமாட்டா. ஆகையால் தாகம் வியாவஹாரிகஸத்தை, கானல்ஜலம் பிர்ம்மஞானமன்றியிலேயே அதின் ஞானத்தினால் பாதிக்கப்படுவதால் அது பிராதிபாஸிகஸத்தை. ஆகையால் தாகத்துக்கும் கானல்ஜலத்துக்கும் ஸமஸத்தையில்லை. ஆனதால் கானல் ஜலத்தால் தாகசாந்தியுண்டாகிறதில்லை. இவ்விதமாகத்தார்ஷ்டாந்தத்தில் பாதிக்கிறவேதங்குரு இவைகளுக்கும் பாதிக்கப்படுகிற சமுசாரதுக்கத்துக்கும் ஒரே ஸத்தையிருக்கிறது. திர்ஷ்டாந்தத்தில் ஜலத்துக்கும் தாகத்துக்கும் ஸத்தைப்பேதப்படுகிறது. ஆகையால் திர்ஷ்டாந்தம் விஷமமாயிருக்கிறது அதாவது தார்ஷ்டாந்தத்துக்குச்சமானமாயில்லை.

## பிராந்திநிவிர்த்தியில் பேதம்:—

281. **கேள்வி:—** ஸ்வாமின், பிர்ம்மத்துக்கு வேறானவையெல்லாம் பொய்யென்று முன் சொன்னீர்கள். இந்தப்பொய்யான பதார்த்தங்களில் சுக்தியில் வெள்ளி ரஜ்ஜுவில் சர்ப்பம் கானல்ஜலம் முதலியவை பிர்ம்மஞானமன்றியில் பாதிக்கப்படுமென்றும் சமுசாரதுக்கம் பிர்ம்

ஞானத்தினால் பாதிக்கப்படுமென்றும் சொன்னபேதத்துக்குக்காரணமென்ன?

282. உத்தரம்:— ஈஷனே பிர்ம்மத்துக்கு வேறானதெல்லாம் அவித்தியாகாரியமானதால் பொய் இதில் யாதொன்றும் சத்தியமில்லை. ஆனால் எதின் அஞ்ஞானத்தினால் எது உண்டாகிறதோ அதின்ஞானத்தினால் அது பாதிக்கப்படுகிறது. கிளிஞ்சில்ரஜ்ஜு கானல்ஜலம் முதலியவைகளை யறியாததினால் வெள்ளி சர்ப்பம் ஜலம் முதலியவைகளுண்டாகின்றன. கிளிஞ்சில் முதலியவைகளை யறிவதால் வெள்ளி முதலியவை பாதிக்கப்படுகின்றன. பிர்ம்மத்தையறியாததினாலுண்டாகிற ஜனனமரணாதி சமுசாரதுக்கம் பிர்ம்மத்தையறிவதால் பாதிக்கப்படுகிறது.

## 2. சமுசாரவிஷயமாய் (283—322)

283. கேள்வி:— ஸ்வாமின், பிரமமத்தை யறியாததினாலுண்டாகிற சமுசாரம் எந்தக்கிரமமாயுண்டாகிறது. இதைச்சொல்லியருள வேண்டும்.

284. உத்தரம்:— ஸ்வப்பனம் கிரமமன்றியிலுண்டாகிறது போல் பிரமையினால் பொய்யான ஜகத்து விளங்குகிறது. இதின் கிரமத்தையறிய இச்சிக்கிறவன் கானல் ஜலத்தில் வஸ்திரத்தை நனைக்க இச்சிக்கக்கூடும். உபநிஷத்துகளில் ஜகத்துற்பத்தி யனேகப்பிரகாரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. சாந்தோக்கிய வுபநிஷத்தில் சத்ரூபப்பிர்ம்மத்தினின்றும் அக்கினி ஜலம் பிருதிவீ இவைகள் கிரமமாக உண்டானதாகச்சொல்லப்பட்டிருக்கிறது. தைத்திரீய வுபநிஷத்தில் ஆகாசம் வாயு அக்கினி ஜலம் பிருதிவீ இவ்வைந்து பூதங்களும் கிரமப்படி யுண்டானதாகச்சொல்லப்பட்டிருக்கிறது. சிலவிடங்களில் எல்லாவற்றையும் பரமேசுவரன் உண்டுபண்ணுகிறானென்று கிரமமன்றியிலுற்பத்தி சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதமாக ஜகத்துற்பத்தி வேதத்தில் பலவிதமாகச்சொன்னதற்குத்தாற்பரியமென்னவெனில் ஜகத்து பொய். அது ஒரு பதார்த்தமாக இருக்கும் பக்ஷத்தில் அதினுற்பத்தியையனேகவிதமாக வேதஞ்சொல்லியிருக்கமாட்டாது. அநேகப்பிரகாரமாகச்சொல்லியிருக்கிறபடியால் உற்பத்திக்கிரமத்தைச்சொல்வதில் வேதத்துக்கு அபிப்பிராயமில்லை. ஆனால் அத்வைதப்பிர்ம்மத்தை யறியவேண்டியதற்காக ஜகத்தை நிஷேதிக்கவேண்டியதாயிருப்பதால் இந்தப்பொய்யான ஜகத்தை எவ்விதத்திலாவது ஆரோபஞ்செய்யவேண்டுமென்பது வேதத்தின் கருத்து.

உதாரணம்:— வேடிக்கைக்காக ஒரு காகிதத்தாற் செய்யப்பட்ட யானை ஆகாசத்திற் பறக்கவிடப்படுகிறது. அதின்காலும் வாலும் மடங்கிப்போனாலும் அதைச்சரிப்படுத்த ஒருவனும் பிரயத்தனப்படுகிறதில்லை. இதுபோல் அத்வைதஞானத்தின்பொருட்டுப்பிரபஞ்சத்தை நிஷேதிப்பதற்காகப்பிரபஞ்சமாரோபிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் பிரபஞ்சத்தினுற்பத்திக்கிரமத்தை ஒரேவிதமாகச்சொல்ல வேதத்தில் பிரயத்தனஞ் செய்யப்படவில்லை. இப்படியிருப்பதால் வேதத்தின் அபிப்பிராயமானது பிரபஞ்சத்தை நிஷேதிப்பதிலிருக்கிறதேதவிர, கிரமஉற்பத்தியைசசொல்வதில் இல்லையென்றறியவேண்டியது.

285. சூத்திரக்காரரும் பாஷியக்காரரும்[9] 2-வது அத்தியாயத்தில் உற்பத்தியைச் சொல்லுஞ் சுருதி வசனங்களின் விரோதங்களைத் தள்ளி தைத்திரீய சுருதியின் அனுசாரமாகச் சொல்லப்பட்ட உற்பத்திக் கிரமமே எல்லாவுபநிஷத்துகளின் கருத்தென்று சொல்லியிருக்கிறார்கள். இப்படிச்சொன்னது மந்த ஜிஞ்ஞாசுவை உத்தேசித்துத்தான். முன் (283) சொல்லிய சுருதி அபிப்பிராயத்தையறியாத மந்த ஜிஞ்ஞாசு உபநிஷத்துகளில் விரோதமிருப்பதாக நினைத்துப் பிராந்தியை யடைவான். இதை நிவிர்த்திசெய்வதற்காக எல்லாவுபநிஷத்துகளிலும் ஒரேவிதமாக ஜகத்துற்பத்தி பிரதிபாதிக்கப்பட்டதாக சொல்லி யிருக்கிறார்கள். மேலும் பிர்ம்மவிசாரத்தால் யதார்த்த ஞானமுண்டாகாதவனுக்கு லயசிந்தனையின்பொருட்டும் உற்பத்திக்கிரமம் சொல்லப்பட்டிருக்கிறது. எந்தக்கிரமத்தினுலுற்பத்தி சொல்லப்படுகிறதோ அதற்கு விபரீதக்கிரமத்தினுல் லயசிந்தனை செய்யவேண்டியது. இந்த லயசிந்தனையால் அத்வைதப் பிர்ம்மத்தினிடத்தில் புத்தி ஸ்திரப்படுகிறது. இந்த லயசிந்தனைப்பிரகாரம் **பஞ்சீகரணக்கிரந்தத்தில், வார்த்திகக்காரரான சுரேஸ்வராசாரியரால்** சொல்லப்பட்டிருக்கிறது. இந்தக்கிரந்தம் உத்தமஜிஞ்ஞாசுவின் பொருட்டு ஏற்பட்டிருப்பதாலும் சமுத்திரம்போல் விரிவாயிருப்பதாலும் ஜகத்தினுற்பத்தி லயக்கிரமங்களைச்சுருக்கமாய்ச் சொல்லுகிறேன்.

286. **மாயை** (286—292):— சுத்தப்பிர்ம்மத்தினின்றும் ஜகத்துற்பத்தியாகிறதில்லை. ஏனெனில், சுத்தப்பிர்ம்மம் அசங்கமாயும் கிரி

---

9. சூத்திர சப்தத்தால் பிர்ம்மசூத்திரமென்றும், பாஷியகாரர் ஸ்ரீசங்கராசாரியரென்றும் அறியத்தக்கது. இரண்டாவது அத்தியாயம் பிர்ம்ம சூத்திரத்தினது.

யையற்றதாயுமிருக்கிறது. ஆனால் மாயாவிசிஷ்டனாகிற ஈசுவரனிடத்தி னின்றும் ஜகத்துற்பத்தியாகிறது. ஆகையால் மாயை ஈசுவரன் இவர்க ளின் சொரூபங்களைப்பிரதிபாதிக்கிறேன். ஜீவேஸ்வரபேதங்களில்லாத சுத்தசேதனத்தை யாசிரயித்துக்கொண்டிருப்பது **மாயை.** இது அனா தி. அதாவது, உற்பத்தியற்றது. மாயையினுற்பத்தியை யங்கீகரிக்கும்ப க்ஷத்தில் புத்திரனிடத்தினின்றும் பிதாவினுற்பத்தி சொல்லத்தகாதது போல் மாயாகாரியமான பிரபஞ்சத்தினின்றும் மாயையினுற்பத்தி சொல் லத்தகாது. ஆகையால் சேதனத்தினின்றே மாயை யுற்பத்தியானதாகப் பூர்வபக்ஷீ சொல்லக்கூடும். இது சரியன்று. ஏனெனில் ஜீவேஸ்வரர்க ள் மாயையின் காரியங்களாயிருக்கிறார்கள். மாயையன்றியில் அவர்களி ன் சொரூபங்கள் சித்திக்கிறதில்லை. ஆகையால் ஜீவசேதனத்திலிருந்தா வது ஈஸ்வரசேதனத்திலிருந்தாவது மாயை யுற்பத்தியாவதாகச்சொல்லக் கூடாது. சுத்தசேதனம் அஸங்கமாயும் கிரியாரகிதமாயும் நிர்விகாரமாயு மிருப்பதால் அதனிடத்தில் மாயை யுற்பத்தியாகிறதாகச்சொல்லும்பக்ஷ த்தில் அது விகாரியாய்விடும். மேலும் சுத்தசேதனத்தினின்று மாயை யுண்டாகும்பக்ஷத்தில் மோக்ஷதசையில் மாயை மறுபடியும் உண்டாகு மானதால் மோக்ஷத்தின்பொருட்டு ஏற்பட்ட சாதனங்கள் பயனற்றுப் போம். ஆகையால் சேதனத்தினின்றும் மாயை யுற்பத்தியாகிறதில்லை. இவ்விதமாக உற்பத்தியில்லாத **மாயை யனாதி**யென்று சொல்லப்படுகி றது. மேலும் அது **ஏகமாயும்** ஞானத்தால் முடிவு (நாசம்) அடைவ தாயிருப்பதால் **ஸாந்தமாயும் சதசத்துக்கு விலக்ஷண**மாயுமி ருக்கிறது. முக்காலத்திலும் பாதிக்கப்படாதது சத்தென்று சொல்லப் படும். சேதனம் சத்து. மாயை ஞானத்தால் பாதிக்கப்படுவதால் சத் துக்கு விலக்ஷணமாயிருக்கிறது. முக்காலத்திலும் விளங்காதது முயற் கொம்பு மலடிமகன் ஆகாசபுஷ்பம் இவைகள்போல் அசத்தாயிருக்கிற து. ஞானத்துக்குமுன் மாயையும் அதின் காரியமும் பிரதீதியாகின்றன. ஜாக்கிரதகாலத்தில் "நான் அஞ்ஞானி," "பிர்ம்மத்தை யறியவில்லை" என்கிற அனுபவத்தால் மாயை விளங்குகிறது. சொப்பனத்தில் தோன் றும் பலவிதப்பதார்த்தங்களுக்கு மாயை யுபாதானகாரணமாயிருக்கிறது. சுஷுப்திக்குப்பிறகு "நான் சுகமாய்த்தூங்கினேன், ஒன்றுமறியவில் லை" என்கிறஞாபகம் வருகிறது. அறியப்படாத வஸ்துவிஷயத்தில் ஞாபகம் வரமாட்டாது. ஆகையால் சுஷுப்தியில் அஞ்ஞானம் விளங்

குகிறது. இந்த அஞ்ஞானமும் மாயையுமொன்றே, இவைகளுக்குப்பேத மில்லை.' இவ்விதமாக மூன்று அவஸ்தைகளிலும் மாயை விளங்குவதால் அது அஸத்துக்கு விலக்ஷணமாயிருக்கிறது. இப்படி சதசத்துக்கு விலக்ஷணமான மாயையின் காரியமும் சதசத்துக்கு விலக்ஷணமாயிருக்கிறது. சதசத்துக்கு விலக்ஷணமானது அத்வைதமதத்தில் மித்தை யென்றும் அநிர்வசனீயமென்றும் சொல்லப்படும். மாயை அதின்காரியம் இவைகளினின்றும் துவைதம் சித்திக்கமாட்டாது. ஏனெனில் சேதனம் ஸத்ரூபமாயிருப்பதுபோல் மாயையும் அதின் காரியமும் ஸத்ரூபமாயிருந்தால் துவைதம் சித்திக்கும். மாயையும் அதின் காரியமும் சதசத்துக்கு விலக்ஷணமாயிருப்பதால் மித்தையாயிருக்கின்றன. மித்தியாபதார்த்தத்தினின்றும் துவைதம் உண்டாகிறதில்லை. சொப்பனத்தின் மித்தியாபதார்த்தத்தினால் துவைதம் உண்டாகாததுபோலும்.

287. **மாயையின் ஆசிரயம் விஷயம்**:— மாயை ஜீவேசுவர பேதமில்லாத சுத்தப்பிர்ம்மத்தை யாசிரயித்து அதையே மறைத்துக் கொண்டுமிருக்கிறது. வீட்டை யாசிரயித்த இருள் வீட்டையே மறைப்பதுபோலும். இதற்கு ஸ்வாசிரயஸ்வ விஷயபக்ஷமென்று பெயர். ஸ்வவென்றால் சுத்தப்பிர்ம்மம். அதையே யாசிரயித்தல் ஸ்வாசிரயம். அதையே விஷயமாக்குதல் அதாவது[10] மாயையால் மூடுதல் ஸ்வவிஷயமாகும். ஸம்க்ஷேபசாரீரகம், விவரணம், வேதாந்த முக்தாவளி, அத்வைதசித்தி அத்வைததீபிகை முதலிய கிரந்தங்களில் அஞ்ஞானத்தை ஸ்வாசிரயஸ்வ விஷயமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

288. **வாசஸ்பதிமதம்**:— அஞ்ஞானம் ஜீவனை யாசிரயித்துக்கொண்டு பிர்ம்மத்தை விஷயமாக்குகிறது. 'நான் அஞ்ஞானி, பிர்ம்மத்தை யறியவில்லை' என்பதில் நான் என்பது ஜீவன். ஜீவன் தான் அஞ்ஞானியென்று சொல்வதினால் அஞ்ஞானத்துக் காசிரயம் ஜீவனென்று விளங்குகிறது. பிரம்மத்தை யறியவில்லை யென்று சொல்வதினால் அஞ்ஞானத்துக்கு விஷயம் பிர்ம்மமென்று விளங்குகிறது. இவ்விதமாக அஞ்ஞானம் ஜீவனையாசிரயித்துப் பிர்ம்மத்தை விஷயமாக்குகிறது; அதாவது மறைக்கிறது. இந்த அஞ்ஞானம் ஒன்றல்ல அனேகம், ஏனெனில் அஞ்ஞானமொன்றென நினைக்கும் பக்ஷத்தில் ஒருவனுடைய அஞ்ஞானம் நிவர்த்தியாகிறதினால் மற்றவர்களுக்கு அஞ்ஞானமும் அதன் காரியமான சமுசாரமும் விளங்கக்கூடாது. இதுவரையிலும் ஒருவனும் ஞானியாகவில்லை

---

10. 7-வது தரங்கத்தில் 668-வது பிரிவின் குறிப்பை பார்க்க.

யென்று சொன்னால் இனிமேலும் ஒருவனும் ஞானியாகமாட்டான். ஆகையால் சிரவணாதி சாதனங்கள் பிரயோசனமில்லாமற்போம். ஆனதால் அனந்த ஜீவர்களை யாசிரயித்த அஞ்ஞானமும் அனந்தமாயிருக்கிறது. அனந்த ஜீவர்களுடைய அனந்த அஞ்ஞானத்தினால் கற்பிக்கப்படுகிற ஈசுவரனும் பிர்ம்மாண்டமும் அனந்தமாயிருக்கின்றன. எந்த ஜீவனுக்கு ஞானமுண்டாகிறதோ அதற்கு அஞ்ஞானம் ஈசுவரன் பிர்ம்மாண்டம் இவைகள் நிவிர்த்தியாகின்றன. எவனுக்கு ஞானமுண்டாகவில்லையோ அவனுக்குப்பந்தமிருக்கிறது. இது வாசஸ்பதிமதம்.

289. ஷை மதம் சரியன்று. ஏனெனில் "ஈசுவரன் ஜீவனுடைய அஞ்ஞானத்தினால் கல்பிக்கப்பட்டவன்" என்று சொல்வது சுருதிஸ்மிருதி புராணங்களுக்கு விருத்தமாயிருக்கிறது. "ஈசுவரன் அனந்தம், ஜீவர்களுக்குள்ளே சிருஷ்டி பேதப்படுகிறது" என்று சொல்வதும் விருத்தம்தான். ஆகையால் அஞ்ஞானம் அனேகமென்று நினைப்பது அஸங்கதமாயிருக்கிறது. மேலும் அஞ்ஞானத்தையனேகமாய்ப்பாவித்து ஈசுவரனையும் சிருஷ்டியையும் ஒன்றெனப்பாவித்தலும் சரியில்லை. ஏனெனில் ஜீவேஸ்வரப்பிரபஞ்சங்கள் அஞ்ஞானகல்பிதங்கள், அஞ்ஞானம் அனந்தமானால் ஒவ்வொரு அஞ்ஞானத்திலும் கல்பிதமாகிற ஜீவன்போல் ஈஸ்வரனும் பிரபஞ்சமும் அனந்தமாகவேண்டும். ஆனதால் வாசஸ்பதியானவர் அனந்த ஈசுவரனையும் அனந்த சிருஷ்டியையும் சொல்லியிருக்கிறார். ஆகையால் அஞ்ஞான மொன்றெனும் மதமே சரியானது.

290. இந்த ஒரே அஞ்ஞானமும் ஜீவனையாசிரயிக்கவில்லை. ஆனால் சுத்தப்பிர்ம்மத்தை யாசிரயித்திருக்கிறது. ஏனெனில் ஜீவபாவம் அஞ்ஞானத்தின் காரியம். அந்த அஞ்ஞானம் ஒருக்காலும் சுதந்தரமாயிருக்கிறதில்லை. ஆகையால் ஆசிரயமில்லாத அஞ்ஞானத்தினின்றும் ஜீவபாவம் சித்திக்கமாட்டாது. முதலில் அஞ்ஞானம் ஏதாவதொன்றை யாசிரயித்துக்கொண்டிருந்தால் பிறகு அதின்காரியமான ஜீவபாவம் சித்திக்கும். ஜீவன்போல ஈசுவரனும் அஞ்ஞானகாரியமாயிருப்பதால் அஞ்ஞானம் ஈஸ்வரனையுமாசிரயித்திருக்கவில்லை. ஆனால் இந்த அனாதியான அஞ்ஞானம் சுத்தப்பிர்ம்மத்தை யாசிரயித்துக்கொண்டிருக்கிறது. அனாதிசேதன அஞ்ஞானங்களின் சம்பந்தமுமனாதியே. அனாதிசம்பந்தத்தாலுண்டாகும் ஜீவேஸ்வரபாவங்களும் அனாதியே. ஆனால் ஜீவேஸ்வர பாவங்கள் அஞ்ஞானத்துக்கு ஆதீனமாகையால் அஞ்ஞானத்தின் காரியங்களாகச்சொல்லப்படுகின்றன. "நான் அஞ்ஞானி" என்று சொல்வதினால் ஜீவனை யாசிரயித்ததாக அஞ்ஞானம் விளங்கினாலும் வாஸ்தவத்தில் சுத்தப்பிர்ம்மத்தையே யாசிரயித்துக்கொண்டிருப்பதால் ஜீவனுக்கு நான் அஞ்ஞானியென்கிற அபிமானமுண்டாகிறது. ஜீவன் அஞ்ஞான

காரியமாயிருப்பதால் ஜீவன் அஞ்ஞானத்துக்கு அதிஷ்டானரூப ஆசிரயமாகமாட்டான். ஆனால் சுத்தப்பிரம்மமே அஞ்ஞானத்துக்கு அதிஷ்டானரூப ஆசிரயமாக இருக்கிறது. சுத்தப்பிரம்மமாகிற அதிஷ்டானத்தை யாசிரயித்துக்கொண்டிருக்கிற அஞ்ஞானம் அந்தப்பிரம்மத்தையே மறைக்கிறது. அதன் பிறகு ஜீவன் நான் அஞ்ஞானி யென்பதினால் அஞ்ஞானத்துக்கு அபிமானிரூப[11] ஆசிரயமாயிருக்கிறான். இவ்விதமாக அஞ்ஞானம் ஸ்வாசிரயஸ்வவிஷயமாயிருக்கிறது.

291. இந்த அஞ்ஞானம் ஒன்றாக இருக்கிறது, ஞானத்தினால் நிவிர்த்தியாகிறது. ஆயினும் எந்த அந்தக்கரணத்தில் அஞ்ஞானமிருக்கிறதோ அந்த அந்தக்கரண அவச்சின்ன சேதனத்திலிருக்கப்பட்ட அஞ்ஞானாம்சம் ஞானத்தால் நிவிர்த்தியாகிறது. இவனே முக்தனாகிறான். எந்த அந்தக்கரணத்தில் ஞானமுண்டாகவில்லையோ அவ்விடத்தில் அஞ்ஞானாம்சமும் பந்தமும் தங்குகின்றன. இவ்விதமாக அஞ்ஞானமொன்[12]று என்னும்பக்ஷத்தில் பந்தமோக்ஷவியவகாரங்கள் சித்திக்கின்றன. வாசஸ்பதிமதப்படி அஞ்ஞானம் அனேகமென்று சிலர் புத்தியிற்படுவதும் அத்வைதஞானத்துக்கு உபாயந்தான். அதைக்கண்டிப்பதில் யாதொரு கட்டாயமுமில்லை.[13] எவ்விதமாக அத்வைதப்போதமுண்டாகுமோ அவ்

11. நான் அஞ்ஞானியாயிருக்கிறேன், என்கிற அனுபவத்தால் அஞ்ஞானம் ஜீவனையாசிரயித்ததாக வாசஸ்பதி சொன்னது முமுக்ஷுவின் புத்தியில் இலகுவாய்ப் படும்பொருட்டுத் தான். வாசஸ்பதிமிசிரருடைய அந்தரங்கக்கருத்து என்னவெனில் 'நான்' என்கிற சப்தத்துக்கு வாச்சியார்த்தம் அந்தக்கரண விசிஷ்டசேதன ரூபஜீவன். இதின்விசேஷியபாகமாகிற சாக்ஷிசேதனமே பிரம்மம். இது அஞ்ஞானத்துக்கு ஆசிரயமாயிருக்கிறது. விசேஷியத்தின் தர்மம் விசிஷ்டத்தில் வியவகரிக்கப்படுகிறது.

12. இருள் என்பது ஒன்று. அதினுடைய அம்சங்கள் அநேகம். இவைகள் வீட்டுக்குவீடு இருக்கின்றன. எந்தவீட்டில் தீபம் இருக்கிறதோ அந்த வீட்டினுள்ளஇருளின் அம்சம் நாசமாகிறது. இதுபோல் அஞ்ஞானமென்பது ஒன்று. இதின்அம்சங்கள் அநேகம். இவைகள் அநேக அந்தக்கரணங்களிலுள்ள சாக்ஷியினிடத்திலிருக்கின்றன. எந்த அந்தக்கரணத்தில் ஞானமுண்டாகிறதோ அவ்விடத்திலுள்ள அஞ்ஞானாம்சம் நசித்துப்போகிறது. ஆனதால் ஒருவனுக்கு ஞானமுண்டானதால் எல்லாருக்கும் அஞ்ஞானம் நீங்கி முக்தி பிரதீதியாகிறதில்லை. இவ்விதமாக அஞ்ஞானத்தை ஒன்றாக அங்கீகரித்தாலும் பந்தமோக்ஷங்கள் சித்திக்கின்றன.

13. எந்த எந்த உபாயத்தால் பிரத்தியகாத்மவிஷயத்தில் ஒருவனுக்குப் போதமுண்டாகுமோ அந்தந்த உபாயமெல்லாம் வேதாந்த சித்தாந்தத்தில் சிரேஷ்டமென்று நைஷ்கர்ம்ய சித்திக்காரர் சொல்லியிருக்கிறார்.

விதமாகப் ப்ரகிருதியைப் ஸ்திரப்படுத்தவேண்டியது.

292. மாயையின் நாமபேதங்கள்:— சுத்தப்பிரம்மத்தை யாசிரயித்துக்கொண்டிருக்கும் மாயைக்கு **அவித்தை**யென்றும் **அஞ்ஞான**மென்றும் பெயர். சிந்திக்கக்கூடாத சக்தியுள்ளதாயும் யுக்தியில் அடங்காததாயுமிருப்பது **மாயை** யென்று சொல்லப்படும். வித்தையால் நாசமடைவதால **அவித்தை** யென்று சொல்லப்படும். ஸ்வரூபத்தை மறைப்பதால் **அஞ்ஞான**மென்று சொல்லப்படும். மாயையாசிரயிக்கிற சேதனம சாமானியசேதனம். அது மாயைக்கு விரோதமில்லை, சாதகமாயிருக்கிறது. சத்தாஸ்புரணங்களைக்கொடுக்கிறது. விர்த்தியில இருக்கிற சேதனம அல்லது சேதனசகிதவிர்த்தி (98) மாயைக்கு விரோதமென அறியவேண்டியது. இவ்விதமாக அனாதியாயும் ஏகமாயும் ஸாந்தமாயும சதசத்துக்கு விலக்ஷணமாயும் அவித்தை அஞ்ஞானச் சொரூபங்களாகவும சாமானியசேதனத்துக்கு விரோதமில்லாமலும் விர்த்திசேதனத்துக்கு விரோதமாயுமிருக்கிற மாயை வர்ணிக்கப்பட்டது.

293. ஈஸ்வர ஸ்வரூபம் (293—295) :— சுத்த சத்துவகுணஸஹிதமான மாயை மாயையின் அதிஷ்டானமான சேதனம் மாயையில் ஆபாஸம இம்மூன்றும் சேர்ந்தது ஈஸ்வரனென்று சொல்லப்படும. இந்த ஈஸ்வரன் சர்வஞ்ஞன் (492). ஈஸ்வரனே ஜகத்துக்குக்காரணம்.

294. காரணம் இருவகைத்து — (1) உபாதான காரணம் (2) நிமித்த காரணம. எது காரியத்தின் ஸ்வரூபத்தில் பிரவேசிக்கிறதோ[14] எது அன்றியில் காரியம சித்திக்கிறதில்லையோ அது உபாதானகாரணமென்னப்படும். உதாரணம.— மண் கடத்துக்கு உபாதானகாரணம. கடஸ்வரூபத்தில் மண் பிரவேசிக்கிறது. மண் அன்றியில் கடம் உண்டாகிறதில்லை. எது ஸ்வரூபத்தில் பிரவேசிக்கிறதில்லையோ ஆனால் காரியத்துக்கு வேறாக இருந்துக் கொண்டு காரியத்தைச் செய்கிறதோ எதின் நாசத்தினால் காரியம் நாசமடைகிறதில்லையோ அது நிமித்தகாரணமென்று[15] சொல்லப்படும. (உ—ம்) கடத்துக்குக் குயவன் தண்டம சக்கரம் முத

14. காரியத்தின் உற்பத்தி ஸ்திதி லயங்களுக்குக் காரணம் உபாதானகாரணமென்னப்படும்.

15. காரியத்தின் உற்பத்திக்குமட்டும் காரணம் நிமித்த காரணமென்னப்ப

லியவை நிமித்தகாரணங்கள். கடவெளுபத்தில் இவைகள் பிரவேசிக்கிற தில்லை. கடத்துக்கு வேறாயிருந்துகொண்டு கடத்தை யுற்பத்திசெய்கின்றன. உற்பத்தியானபின் குயவன் தண்டாதி நாசத்தினால் கடம் நாசமடைகிறதில்லை. இவ்விதமாகக் காரணம் உபாதான நிமித்தமென இருவகையாம்.

295. ஈசுவரனே ஜகத்துக்குபாதான காரணமாயும் நிமித்தகாரணமாயுமிருக்கிறான்.[16] ஒரேசிலந்திப்பூச்சி தன்வலைக்கு உபாதானகாரணமாயும் நிமித்தகாரணமாயும் இருப்பதுபோலும். இந்தப்பூச்சியின் ஜடசரீரம் இதின் வலைக்கு உபாதானகாரணமாயும இதின் சேதனபாகம் நிமித்தகாரணமாயும் இருக்கின்றன. இதுபோல் ஒரே ஈசுவரன் தன் சரீரமான ஜடமாயையால் ஜகத்துக்கு உபாதானகாரணமாயும தன் சேதனபாகத்தால் நிமித்தகாரணமாயுமிருக்கிறான். ஒரேவஸ்து இருவிதகாரணமாயுமிருப்பதற்குச் சிலந்தியன்றியிலும் சொப்பனம முக்கிய திருஷ்டாந்தமாயிருக்கிறது. எந்தச்சமயத்தில் ஜீவனுக்கு க்காமபலன் கொடுக்க ஈசுவரன் சன்முகமாகிறதில்லையோ அப்போது பிரளயமும், ஸன்முகமாகும்போது

---

16. ஜகத்துற்பத்தி விஷயத்தில் ஆரம்ப பரிணாம விவர்த்த வாதங்களில் விவர்த்தவாதந்தான் சித்திக்கின்றது. எப்படியெனில் (1) அவயவங்களுடன் கூடிய பலகாரணங்களால் அவயவத்துடன் கூடிய ஒருகாரிய முண்டாவது ஆரம்பவாதம். (உ—ம்) அனேக நூல்களால் ஒருவஸ்திர முண்டாவது ஆரம்பவாதம். இதில் காரணகாரியங்களின் வியவஹாரங்கள இருக்கின்றன. ஜகத்துற்பத்தியில் ஆரம்பவாதம் ஒவ்வாது. ஏனெனில் பிர்ம்மம் அத்துவிதீயமாயும் நிரவயவமாயு மிருப்பதால் அதினின்றும் ஸாவயவமான ஜகத்துண்டாகமாட்டாது. (2) பரிணாமவாதமும் ஒவ்வாது. ஏனெனில் ஒருவஸ்து தன் அவஸ்தையைவிட்டு வேறு அவஸ்தையை யடைவது பரிணாமமென்னப்படும். கடம் மண்ணின் பரிணாமமாயிருப்பது போல் ஜகத்து பிரகிருதியின் பரிணாமமென்று சாங்கியமதஸ்தர்களும்பிரம்மத்தின் பரிணாமமென்று சில உபாஸகர்களும் சொல்லுகிறார்கள். சாங்கியமதம் சூத்திரபாஷியக்காரரால் கண்டிக்கப்பட்டிருக்கிறது. சேதனம் நிரவயவமாயிருப்பதால் உபாஸகருடைய மதமும்பிசகாம். இவ்விதமாகப் பரிணாமவாதமும்ஒவ்வாது. (3) மேற்காட்டிய தோஷங்கள் விவர்த்தவாதத்தில்இல்லை. எப்படியெனில் தன்சொரூபத்தை விடாமல் வேறுசொரூபத்தைக் காண்பித்தல் விவர்த்தவாதம். சிளிஞ்சிலில் வெள்ளி தோன்றுவது விவர்த்தவாதமாம். இதுதான் வேதாந்தத்தில் அங்கீகரிக்கப் பட்டிருக்கிறது. ஜகத்துக்கு விவர்த்த உபாதானரூப அதிஷ்டானம் மாயாவுபகித சேதனமே தவிர மாயாவிசிஷ்ட சேதனமன்று. ஆயினும் மாயாவிசிஷ்டத்தினின்றும் ஜகத்துண்டானதாகச் சொல்வது அவிவேகியின் திருஷ்டியை அனுசரித்துத்தான் விவேகியின் திருஷ்டிக்கு ஜகத்தின் பரிணாமியுபாதானம் கேவலம்மாயையேயும் விவர்த்தவுபாதானம் மாயாவுபகித

சிருஷ்டியுமுண்டாகின்றன. இவ்விதமாகச் சிருஷ்டி ஜீவனுடைய கர்மாதீனமாயிருக்கிறது. ஆகையால் ஜீவஸ்வரூபத்தைச் சொல்லுகிறேன்.

296. ஜீவஸ்வரூபம்:— ரஜோர்குண தமோர்குணங்களை அமுக்கிவிடுவது சுத்தசத்துவகுணமென்றும் இவைகளால் அமுக்கப்படுவது மலினசத்துவகுணமென்றும் சொல்லப்படும். இந்த மலினசத்துவகுணசகித அஞ்ஞானம்சத்தில் உண்டாகும் சேதனத்தின் ஆபாசம், அஞ்ஞானம், அஞ்ஞானத்துக்கு அதிஷ்டானமான கூடஸ்தன் இம்மூன்றும் சேர்ந்தது ஜீவனென்று சொல்லப்படும். இந்த ஜீவன் கர்மத்தைச்செய்கிறான், பலத்தைஇச்சிக்கிறான்.

297. ஜகத்துசிருஷ்டி:— (291—309) இந்த ஜீவனுடைய கர்மானுசாரமாக உயர்ந்த அல்லது தாழ்ந்த போகங்களை யநுபவிக்கும்பொருட்டு ஈஸ்வரன் சிருஷ்டிபண்ணுகிறார். ஆகையால் ஈஸ்வரனிடத்தில் விஷமதிருஷ்டியும் குரூரதையும் இல்லை எல்லாவற்றிற்கும் முதலான சிருஷ்டியில் முந்தினகர்மமில்லை. இந்தப்பிரதமசிருஷ்டியிலும் உயர்ந்த தாழ்ந்த சரீரங்கள் போகங்கள் முதலியவை ஈஸ்வரனால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் ஈஸ்வரனுக்கு விஷமதிருஷ்டி யுண்டென்று ஒருவன் சொல்லும்பக்ஷத்தில் அது சரியன்று. ஏனெனில், சமுசாரம் அநாதி. உத்தரோத்தரசிருஷ்டிக்குப்பூர்வபூர்வ சிருஷ்டியின் கர்மம் காரணமாயிருக்கிறது. எல்லாவற்றிற்கும் முதலாக யாதொரு சிருஷ்டியுமில்லை. ஆகையால் ஈஸ்வரனிடத்தில் தோஷமில்லை.

298. ஜீவனுக்குக்கர்மபோகங்கொடுக்க ஈஸ்வரன் உதாசீனமாயிருக்கும்போது பிரளயமுண்டாகிறது. பிரளயத்தில் சகலபதார்த்தங்களின் சம்ஸ்காரமும் மாயையில் தங்கியிருக்கிறது. ஆகையால் ஜீவனுடைய சேஷமான கர்மமும் சூக்ஷ்மமாக மாயையில் தங்கியிருக்கிறது. கர்மபோகத்தைக்கொடுக்க ஈஸ்வரன் சன்முகமாகும்போது "ஜீவனுடைய போகநிமித்தமாக ஜகத்தை யுண்டுபண்ணுகிறேன்" என்று ஈஸ்வரனுக்கு [17] இச்சையுண்டாகிறது.

---

சேதனத்திலுமிருக்கின்றன. அவிவேகிக்கு இவ்விரண்டும் மாயா விசிஷ்டசேதனத்திற்பிராந்தியாற் காணப்படுகின்றன. ஆகையால் மாயாவிசிஷ்ட ஈசுவரனிடத்தினின்றும் ஜகத்துண்டானதாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

17. துக்கம் அல்லது துக்கசாதனங்களை நிவர்த்திக்கும் பொருட்டாவது சுகம் அல்லது சுகசாதனங்களையடையும்பொருட்டாவது இச்சையுண்டாகுமேதவிர வேறு வஸ்து விஷயத்தில் இச்சையுண்டாக மாட்டாதென்பது நியமம். ஈச்வரனுக்குத்துக்கம்முதலியவை இல்லாததினால் அவைகளின் நிவர்த்திக்கு இச்சையுண்டாகமாட்டாது. ஈஸ்வரன் பூர்ணகாமனானதால் சுகம் முதலியவைகளையடைய அவருக்கு இச்சையுண்டாகுமென்றுஞ் சொல்லுதல் சரியன்று. ஆழந்

## சூக்ஷ்மசிருஷ்டி நிரூபணம். (299—304)

299. **பஞ்சபூதஉற்பத்தி:—** இந்த ஈஸ்வரனுடைய இச்சையால் மூலமாயை தமோகுணப்பிரதானமாகிறது. இந்தத்தமோகுணப்பிரதான மாயையிலிருந்து ஆகாசம் வாயு தேயு ஜலம் பூமி இவ்வைந்து பூதங்களுமுண்டாகின்றன. இந்தப்பூதங்களில் கிரமமாகச்சப்தஸ்பரிச ரூப ரஸ கந்தங்களாகிற ஐந்து குணங்களிருக்கின்றன. மாயையிலிருந்து சப்தஸஹித ஆகாசமுண்டாகிறது. ஆகாசத்தினின்றும் வாயு உற்பத்தியாகிறது. வாயு ஆகாசகாரியமானதால் ஆகாசத்தின் சப்தகுணம் வாயுவிலிருக்கிறது. தன் குணமாகிய ஸ்பரிசமுமிருக்கிறது. வாயுவிலிருந்து தேஜஸ் உண்டாகிறது. தேஜஸில் ஆகாசத்தின் சப்தம் வாயுவின் ஸ்பரிசம் தன்னுடைய ரூபம் இவைகளிருக்கின்றன. தேஜஸினின்றும் ஜலமுற்பத்தியாகிறது. ஜலத்தில் ஆகாசத்தின் சப்தம் வாயுவின் ஸ்பரிசம் தேஜஸின் ரூபம் தன் ரஸம் இவைகளிருக்கின்றன. ஜலத்தினின்றும் பிருதிவீ யுற்பத்தியாகிறது. பிருதிவியில் ஆகாசத்தின் சப்தம் வாயுவின் ஸ்பரிசம் தேஜஸின் ரூபம் ஜலத்தின் ரஸம் தன் கந்தம் இவைகளிருக்கின்றன. ஆகாசத்தில் பிரதித்வனிரூப சப்தம் இருக்கிறது. வாயுவில் ஸீஸீ சப்தமும் உஷ்ணம் சீதம் கடினம் இவைகளுக்கு விலக்ஷணமான ஸ்பரிசமுமிருக்கின்றன. அக்கினிரூபதேஜஸில் புகபுக சப்தம் உஷ்ணமான ஸ்பரிசம் பிரகாசரூபம் இவைகளிருக்கின்றன. ஜலத்தில் சிலுசிலு சப்தம் சீதமான ஸ்பரிசம் சுக்கில ரூபம் மதுரமான ரஸம் இவைகளிருக்கின்றன. உப்பு கசப்பு முதலிய ருசிகள் பிருதிவிசம்பந்தத்தால் ஜலத்தில் தோன்றுகின்றன. சுபாவத்தில் ஜலத்தின் ரஸம் மதுரமே. இந்த மாதுரியம் நெல்லிக்காயைத்தின்று நீரைக்குடித்தால் விளங்கும். பிருதிவியில் க

---

தைகளுக்கு விளையாடுவதில் இச்சையுண்டாவது போல ஈசுவரனுக்கும் யாதொரு நிமித்தமன்றியில் ஜகத்தை யுண்டுபண்ணவேண்டுமென்கிற இச்சையுண்டாவதாகச்சொல்வதுஞ் சரியன்று. ஏனெனில் குழந்தைகளுக்கு விளையாட்டில் சுகத்தையடையவேண்டுமென்கிற இச்சையிருக்கிறது. பூர்ணகாமனான ஈஸ்வரனுக்குயாதொரு இச்சையுமில்லை. இந்த ஆக்ஷேபங்களுக்குச் சமாதானம் என்னவெனில், கல்பவிருக்ஷமானது இதரஜனங்களுடைய சங்கல்பமாகிற நிமித்தத்தினால் இச்சித்த பலத்தைத்தான் சுபாவத்தினால் கொடுப்பதுபோல் பலத்தைக்கொடுக்க வேண்டுமென்கிற ஈஸ்வரனும் ஜீவர்களுடைய அதிருஷ்டமாகிற நிமித்தத்தினால் இச்சை ஞானம் பிரயத்தனம் இவைகளைத்தான் சுபாவத்தினால் சிருஷ்டியாரம்பகாலத்தில் உண்டுபண்ணுகிறார். பிரளயம் வரையில் இவைகளிருப்பதால் நித்தியமென்று சொல்லப்படுகின்றன.

10. தன புருஷனுடைய சகலமாயாய் ஜகத்தைத் தரித்து அநேக நிமித

டகடசப்தம், உஷ்ணசீதங்களுக்கு விலக்ஷணமான கடினஸ்பரிசம், வெளுப்பு கறுப்பு மஞ்சள் சிவப்பு பச்சை முதலிய ரூபங்கள், தித்திப்பு புளிப்பு உவர்ப்பு உறைப்பு கசப்பு துவர்ப்பு என்னும் ரஸங்கள், சுகந்தம் துர்க்கந்தம் என்னும் இருவிதக்கந்தங்கள், இவைகளெல்லாம் பிருதிவியிலிருக்கின்றன. இவ்விதமாக ஆகாசத்தில் ஒன்று, வாயுவிலிரண்டு, தேயுவில் மூன்று, ஜலத்தில் நான்கு, பிருதிவியில் ஐந்து குணங்கள் இருக்கின்றன. இவைகளில் ஒன்று தன்குணமாகவும் மற்றவை காரணத்தின் குணங்களாகவு மிருக்கின்றன. எல்லாவற்றிற்கும் மூலகாரணம் ஈஸ்வரன். ஈஸ்வரனிடத்தில் மாயை சேதனம் என இரண்டு பாகங்களிருக்கின்றன. எல்லாபூதங்களிடத்திலும் மித்தியாபாகம் மாயையினுடையது ஸத்தாஸ்பூர்த்திபாகம்[19] சேதனத்தினுடையது.

300. *அந்தக்கரணம்:—* பஞ்சபூதங்களின் சத்துவகுணாம்சங்கள் சேர்ந்து அந்தக்கரணத்தை யுண்டுபண்ணுகின்றன. அந்தக்கரணம் ஞானத்துக்கு ஹேதுவாயிருக்கிறது; ஞானத்தினுற்பத்தி சத்துவகுணத்தினின்றுமுண்டாகிறது. ஆதலால் அந்தக்கரணம் பூதங்களின் சத்துவ குணகாரியமாயிருக்கிறது. பஞ்சபூதங்களின் காரியமான ஐந்து ஞானேந்திரியங்களுக்கும் சாதகமாயிருக்கிறது. ஆகையால் பஞ்சபூதங்களுஞ்சேர்ந்து தங்களுடைய சத்துவகுணங்களால் அந்தக்கரணத்தை யுண்டுபண்ணுகின்றன. தேகத்துக்கு அந்தரூ அதாவது உள்ளிலும் கரணம் அதாவது ஞானத்துக்குச் சாதகமாயும் இருப்பது அந்தக்கரணமென்னப்படும். பூதங்களின் சத்துவகுணகாரியமானதால் அந்தக்கரணத்துக்கு சத்துவமென்றும்பெயர். அந்தக்கரணத்தின் பரிணமைத்துக்கு விர்த்தி யென்று பெயர்.

---

ளோடுகூடிய புத்திரனுசிற கர்ப்பத்தைத் தரிக்கிற கர்ப்பிணிஸ்திரீ பிரசவத்துக்குமுன் சந்ததியுண்டாகுமென்கிற நோக்கத்தால் எப்போதும் பிரசன்னமாயிருக்கிருள். ஆகையால் சத்துவகுணப் பிரதானமான மாயையபோலிருக்கிருள். பிரசவகாலத்தில் பிரசவவேதனையாகிற காரணத்தினுல் பிரசன்னதை மறைபட்டுத்தமோகுணப் பிரதானம் பேர்ல் சித்தஞ் சூனியமாயிருக்கிறது. சிருஷ்டிக்குமுன் பிர்ம்மத்தின் பிரதிபிம்பமாகிற ஜகத்தின் காரணத்தைச் சுத்தசத்துவப் பிரதானமான மாயை தன்கர்ப்பத்தில் தரிக்கிறது. சிருஷ்டியின் ஆரம்பத்தில் சுத்த சத்துவப் பிரதானஸ்வரூபம் மறைபட்டுச் சிருஷ்டிக்கு யோக்கியமான தமோகுணப் பிரதானமான பிரகிருதி ரூபமுண்டாகிறது

19. ஸத் என்றுல் இருத்தல். ஸ்பூர்த்தி என்றுல்விளங்குதல்

இந்த விர்த்தி நாலு விதம். பதார்த்தத்தின் சொரூபத்தை நிச்சயம்பண்ணுகிற விர்த்தி **புத்தி** யென்றும், சங்கல்ப விகல்பாத்மக விர்த்தி மனமென்றும், இந்தாவிர்த்தி **சித்த**மென்றும் நான் என்கிற அபிமானவிர்த்தி **அகங்கார**மென்றுஞ்சொல்லப்படும்.

301. **பஞ்சப்பிராணன்** — பஞ்சபூதங்களின் சேர்க்கையான ரஜோகுணம் சத்தினின்றும் **பிராண**னுற்பத்தியாகிறது. இந்தப்பிராணன் கிரியாபேதத்தினாலும் ஸ்தானபேதத்தினாலும் ஐந்துவிதமாயிருக்கிறது. எதற்கு இருதயம் ஸ்தானமோ பசிதாகம் கிரியையோ அதற்குப் **பிராண**னென்று பெயர். எதற்குக் குதம ஸ்தானமோ மூத்திர விஸர்ஜனம் கீழ்நோக்கம் கிரியையோ அதற்கு **அபானன்** என்று பெயர். எதற்கு நாபிஸ்தானமோ எது அன்னபானாதிகள் பசனமாகும்படி சமப்படுத்துகிறதோ அது **சமானன்**. எதற்குக்கண்டம ஸ்தானமோ சுவாசக்கிரியையோ அது **உதானன்**. எதற்கு சாவசரீரமும் ஸ்தானமோ அன்னபானாதிகளின் ரஸத்தைச் சகலநாடிகளிலும் இழுத்துக்கொண்டுபோகுதல் கிரியையோ அதற்கு **வியான**னென்று பெயர்.

சிலர் அபிப்பிராய மென்னவெனில் **நாகன், கூர்மன், கிரகரன், தேவதத்தன், தனஞ்சயன்** என ஐந்து உபவாயுக்கள் உண்டு. இவைகளில் வாந்தி வரும்படிச் செய்வது நாகன், விக்கல், ஏப்பம், இமைப்புகளைச்செய்விப்பது தும்மல் வரும்படிச்செய்வது கிரகரன, கொட்டாவி விடச்செய்வது தேவதத்தன், வீங்கச்செய்வது தனஞ்சயன், இவ்வைந்து உபவாயுக்களும் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம, இவைகளின் ரஜோகுணமசத்தினின்றும் முறையே உண்டாகின்றன. அபானன, சமானன், பிராணன, உதானன், வியானன் இவைகள தனித்தனியே பிருதிவியாதிகளின் ரஜோகுணம்சத்தினின்றும் முறையே யுண்டாகின்றன, பஞ்சபூதங்களுடைய சேர்க்கையான ரஜோகுணம்சத்தினின்றும் உண்டாகிறதில்லை.

ஆனால் அத்வைத சித்தாந்தத்தில் இப்படி சொல்லப் படவில்லை. ஏனெனில், **வித்தியாரண்யஸ்வாமிகளும்** பஞ்சீகரணக்கிரந்தத்தில் **வார்த்திகக்காரரும்** சூக்ஷ்மசரீரத்திலும் பஞ்ச கோசங்களிலும் நாககூர்மாதிகளை யெடுக்கவில்லை. மேலும் அபானாதிபஞ்சப்பிராணன்கள் பூதங்களின் சேர்க்கையான ரஜோகுணம்சத்தினின்றும் உண்டானதாக அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆகையால் ஒவ்வொருபூதத்தின் ரஜோகுணத்தினின்றும் ஒவ்வொரு பிராணனும் உண்டானதாகச் சொல்வது சரியன்று. சூக்ஷ்மசரீரத்தில் நாககூர்மாதிகளைக் கிரகிக்கக்கூடாது. பஞ்சப்பிராணன்களையே கிரகிக்கவேண்டியது. பிராணன் விக்ஷேபரூபமாயிருக்கிறது. விக்ஷேப ஸ்வபாவம் ரஜோகுணத்தினது. ஆகையால்

பூதங்களின் ரஜோகுணாம்சத்தினின்றும் பிராணனுடைய உற்பத்தி சொல்லப்பட்டது.

302. ஞானேந்திரியம்:— ஒவ்வொரு பூதத்தினுடைய சத்துவகுணாம்சத்தினின்றும் பஞ்சஞானேந்திரியங்களுமுண்டாகின்றன. ஆகாசத்தின் சத்துவகுணத்தினின்றும் சுரோத்திரம், வாயுவின் சத்துவகுணத்தினின்றும் துவக்கு, தேயுவின் சத்துவகுணத்தினின்றும் நேத்திரம், அப்புவின் சத்துவகுணத்தினின்றும் ரஸனை, பிருதிவியின் சத்துவகுணத்தினின்றும் கிராணமும் உண்டாகின்றன. இவ்வைந்தும் ஞானத்துக்குச்சாதனமாயிருப்பதால் ஞானேந்திரியங்களென்னப்படும். ஞானம் சத்துவகுணத்தாலுண்டாவதால் இவ்வைந்தும் பூதங்களுடைய சத்துவகுணத்தினாலுண்டாவதாகச்சொல்லப்படும். சுரோத்திரேந்திரியம் ஆகாசத்தின் குணத்தையறிவதால் ஆகாசத்தினின்றும் உண்டானதாகச்சொல்லப்படுகிறது. இதுபோல எந்தஎந்த பூதத்தின் குணத்தை எந்தஎந்த இந்திரியம் அறிகிறதோ அந்தஅந்தப்பூதத்தினின்றும் அந்தஅந்தஇந்திரியம் உண்டானதாகச்சொல்லப்படும்.

303. கர்மேந்திரியம்:— ஒவ்வொரு பூதத்தின் ரஜோகுணாம்சத்தினின்றும் ஒவ்வொரு கர்மேந்திரியமுண்டாகின்றது. ஆகாசத்தின் ரஜோகுணத்தினின்றும் வாக்கும், வாயுவின் ரஜோகுணத்தினின்றும் பாணியும், அக்கினியின் ரஜோகுணத்தினின்றும் பாதமும், அப்புவின் ரஜோகுணத்தினின்றும் உபஸ்தமும், பிருதிவியின் ரஜோகுணத்தினின்றும் குதமும் உண்டாகின்றன. ஸ்திரீயின் யோனியிலும் புருஷனுடைய மாணியிலும உள்ள விஷயாநந்தத்துக்குச்சாதனமான இந்திரியத்துக்கு உபஸ்தமென்று பெயர். கர்மம் என்றால் கிரியை. இந்தப்பஞ்சேந்திரியங்களும் கிரியைகளுக்குச்சாதனமாயிருப்பதால் கர்மேந்திரியங்களென்று சொல்லப்படும். கிரியை ரஜோகுணத்தாலுண்டாவதால் பூதங்களுடைய ரஜோகுணத்தினின்றும் கர்மேந்திரியங்களுடைய உற்பத்திசொல்லப்பட்டது.

304. சூக்ஷ்மசிருஷ்டி:— அபஞ்சீகிருத பூதங்கள் இவைகளின் காரியங்களான அந்தக்கரணம், பிராணன், கர்மேந்திரியம், ஞானேந்திரியம் இவைகள் சேர்ந்தது சூக்ஷ்மசிருஷ்டியென்று சொல்லப்படும்.

305. இந்திரியங்கள் சூக்ஷ்மசிருஷ்டியை யறியமாட்டா. கண் மூக்கு முதலிய கோளகங்கள் இந்திரியங்களுக்கு விஷயமானாலும் அக்கோளகங்களிலுள்ள இந்திரியங்கள் எந்த இந்திரியத்துக்கும் விஷயமாகிறதில்லை. சூக்ஷ்மசிருஷ்டியினுற்பத்தியின் பிறகு ஈஸ்வரேச்சையால் ஸ்தூ

லகிருஷ்டியின்பொருட்டு பூதங்களுடைய பஞ்சீகரணமுண்டாயிற்று.

306. **பஞ்சீகரணம் முதல்விதம்:—** ஒவ்வோருபூதத்தின் தமோகுணமும் இரண்டிரண்டாகி ஐந்துபூதங்களின் முதற்பாதியில் ஒவ்வொன்றும் நான்காகி இரண்டாம்பாதி ஐந்தில் தன்னம்சம் விட்டு மற்றநான்கு பூதங்களுடனும் அரைக்கால் மாத்திரையாகச் சேர்ந்து பஞ்சீகரணமாயிற்று. எப்படியெனில் ஆகாசம் தன்பாதியை விட்டு பிருதிவியாதிநாலுபூதங்களுடன்சேர்ந்தது. இப்படியே வாயு தன்பாதியைவிட்டு ஆகாசாதிநாலுபூதங்களுடன் சேர்ந்தது. இவ்விதமாகச் சகல பூதங்களும் தங்கள் தங்கள் பாதியைவிட்டு மற்றப்பூதங்களுடன் சேர்ந்தன. இதனால் தன் பாதியும் மற்ற ஒவ்வொரு பூதத்தின் அரைக்காலுஞ்சேர்ந்து மறுபடியும் பூரணமாகி ஒவ்வொன்றிலேயே பஞ்சபூதங்களும் சேர்ந்தமையால்பஞ்சீகரணமாயிற்று. எந்த பூதம் பஞ்சீகரணஞ்செய்யப்படுகிறதோ அதற்குப்பஞ்சீகிருதமென்று பெயர்.

307. **இரண்டாம்விதம்:—** ஒவ்வொருபூதத்தையும் 25பாகமாக்கி 21 பாகங்களை யொருகூறாகவும் நாலுபாகங்களை ஒருகூறாகவும் வைத்து இந்நான்கு பாகங்களில் ஒவ்வொன்றையும் தன் பெருங்கூறைவிட்டு மற்றப்பூதங்களின் பெருங்கூருடன் தனித்தனியே சேர்க்கின் பஞ்சீகரணமாகும்.

308. இந்தப்பஞ்சீகரணத்தின் முதல் விதப்படி எல்லாப்பூதங்களிலும் பாதிபாகம் தங்கள் ஸ்வாம்சமாகவும் மற்றப்பாதி மற்றப்பூதங்களுடைய அம்சமாகவும் இருப்பதால் ஸ்வாம்சம் மறைபட்டு ஆகாசாதிபூதங்கள் வெவ்வேறாக விளங்காமல் போகக்கூடுமென்று சில முமுக்ஷுக்களுடைய மனதில் சங்கை ஜனிக்கக்கூடும். இதை நிவிர்த்திப்பதற்காக இரண்டாவதுவிதப்பஞ்சீகரணஞ்சொல்லப்பட்டது. இதில் ஸ்வாம்சம் 21 பாகமாகவும் மற்றப்பூதங்களின் அம்சம் நான்கு பாகமாகவுமிருப்பதால் ஒவ்வொரு பூதமும் தனித்தனியே விளங்குகிறது.

309. **ஸ்தூலப்பிர்ம்மாண்டம்:—** இந்தப்பஞ்சீகிருத பூதங்களால் இந்திரியங்களுக்கு விஷயமான **ஸ்தூலப்பிர்மாண்ட**முண்டாகிறது. இந்தப்பிர்ம்மாண்டத்தில் **பூலோகம், புவர்லோகம், சுவர்க்கலோகம், மகர்லோகம், ஜனலோகம், தபோலோகம், சத்தியலோக**மென ஏழு மேல்லோகங்களும், **அதல, சுதல, பாதாள, விதல, ரஸாதல், தலாதல, மகாதல** என்னும் ஏழு கீழ்லோகங்களுமிருக்கின்றன. இந்த 14 லோகங்களில் ஜீவனுடைய போகத்துக்கு யோக்கியமான அன்னாதிகளும் போகத்துக்கு ஸ்தானமான தேவ

மனுஷிய பசு முதலிய ஸ்தூலசரீரங்களுமுண்டாகின்றன. இப்படி ஸம்க்ஷேபமாகச்சிருஷ்டி நிரூபிக்கப்பட்டது. மாயையினுடைய காரியத்தை விஸ்தாரமாக நிரூபிப்பதில் கோடிபிர்ம்மாக்களுடைய ஆயுசும் போதாது. இதை வால்மீகர் வாசிஷ்டத்தில் அநேக இதிஹாஸங்களால் நிரூபித்திருக்கிறார்.

## ஆத்மவிவேகம்பஞ்சகோசவிவேகம் (310—321)

310. **பஞ்சகோசங்கள்:—** மாயை, மாயையின் காரியம் இவைகளில் மூன்றுசரீரங்களும்[20] ஐந்துகோசங்களும் இருக்கின்றன. சுத்தசத்துவகுணசஹிதமாயை ஈஸ்வரனுடைய காரணசரீரமாம்.

---

20. இவைகள் ஸ்தூல சூக்ஷ்ம காரணங்களாம். **ஸ்தூலசரீரம் அல்லது தேகம்:—** ஜீர்ணித்துப் போகிறபடியால் சரீரமெனவும், தகிக்கப்படுவதால் தேகமெனவும் பெயர். மயிர் தோல் நரம்பு தசை எலும்பு கொழுப்பு இவ்வாறும் ஸ்தம்பம்போல் பிரத்தியக்ஷத்தில் தோற்றுகிறபடியால் ஸ்தூலதேகமெனப்பெயர் வந்தது. இந்த ஸ்தூலதேகம் 25 தத்துவங்களாலுண்டாயிருக்கிறது. அவைகள் அடியிற்கண்ட பதகத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

| முக்கியதத்துவங்கள் | இவைகளின் அம்சங்கள். | | | | |
|---|---|---|---|---|---|
| | பிருதிவி | அப்பு | தேயு | வாயு | ஆகாசம் |
| பிருதிவி | எலும்பு | மாமிசம் | நரம்பு | தோல் | மயிர். |
| அப்பு | இரத்தம் | சுக்கிலம் | மூத்திரம் | வியர்வை | வாய்நீர் |
| தேயு | ஆலஸ்யம் | காந்தி | பசி | தாகம் | நித்திரை |
| வாயு | சுருங்கல் | நடத்தல் | இருத்தல் | ஓடல் | விரிதல் |
| ஆகாசம் | பயம் அல்லது கடி | மோகம் ,, உதரம் | குரோதம் ,, இருதயம் | காமம் ,, கண்டம் | சோகம் ,, சிரஸு |

மேற்கண்ட பதகத்தில் பிருதிவியில் பிருதிவியம்சம் எலும்பு. பிருதிவியம்சமும் ஜலஅம்சமும் சேர்ந்ததுமாமிசம். பிருதிவியம்சமும் தேயு அம்சமும் சேர்ந்தது நரம்பு. பிருதிவியம்சமும் வாயு அம்சமும் சேர்ந்தது தோல். பிருதிவியம்சமும் ஆகாசமும் சேர்ந்தது மயிர். இவ்வாறே மற்ற

பூதங்களினும் அறியத்தக்கது. மேற்சொல்லிய 25 தத்துவங்களின் பஞ்சபூத லக்ஷணம் அடியில் வருமாறு.

I. ஆகாசத்தில். (1) பயம் உண்டாகும்போது பிருதிவியைப் போல சரீரம் ஜடாமகிறபடியால் பயம் பிருதிவீரூபம். (2) புத்திராதிகளிடத்தில் ஜலம் போல பிரசரிக்கிறபடியால் மோகம் ஜலரூபம். (3) அக்கினி போல் தகிக்கிறபடியால் குரோதம அக்கினி ரூபம். (4) காமரூபவிர்த்தி வாயுபோல்சலிக்கிறதினுல் காமம் வாயுரூபம். (5) சோகம் உண்டாகும் போது ஆகாசம்போல் தேகம் சூன்னியமாயிருக்கிறபடியால் சோகம் ஆகாச ரூபம். II வாயுவில். (6) பிருதிவிபோல் சங்கோசமடைவதால் சுருங்கல் பிருதிவி அம்சம். (7) ஜலம்போல்சலிக்கிறபடியால் நடத்தல் ஜலாம்சம். (8) தேஜஸைப்போல் உலர்த்துகிறபடியால் அல்லது பிரகாசிக்கிறபடியால் வலனம் (இருத்தல்) அக்கினி அம்சம். (9) வாயு ஓடுவதுபோலிருப்பதால் ஓடல் வாயு அம்சம். (10) ஆகாசம்போல் பிரசரிக்கிறபடியால் விரிதல் ஆகாசாம்சம். III தேயுவில். (11) ஜடஸ்வபாவத்தால் ஆலஸ்யம் பிருதிவி அம்சம். (12) ஜலமும் புகையோடு கூடியிருப்பதால் காந்திஜலாம்சம். (13) சாப்பிட்டதை பஸ்மமாக்குவதால், பசி தேயு அம்சம். (14) காத்து சிறிய துளியை சோஷிக்கிறதுபோல், கண்டத்தை சோஷிக்கிறபடியால், தாகம் வாயு அம்சம். (15) நித்திரைவரும்போது ஆகாசம்போல் சரீரம் சூன்னியமாயிருப்பதால் நித்திரை ஆகாசாம்சம். IV அப்புவில். (16) சில பூக்களைப்போல் இரக்தவர்ணமுள்ளபடியால், இரக்தம் பிருதிவியம்சம். (17) கர்ப்பத்துக்கு ஹேதுவானது ஜலம் போலிருப்பதால் சுக்கிலம் ஜலாம்சம். (18) தேஜஸ் போல் பசுமாயிருப்பதால், மூத்திரம் தேஜஸின் அம்சம். (19) வேர்வை இரக்கைகளுடைய சிரமத்தாலுண்டாவதுபோல் வியர்வையும் சிரமத்தாலுண்டாவதால் வாயுவின் அம்சம். (20) ஆகாசம்போல் கீழும் மேலும் போவதால் வாய் நீர் ஆகாசாம்சம (V) பிருதிவியில். (21) கடினமாயிருப்பதால் எலும்பு பிருதிவி அம்சம். (22) ஈரமிருப்பதால் மாம்சம் ஜலாம்சம். (23) நரம்பில் நின்றும் தாபமுண்டாவதால், நரம்பு தேயு அம்சம். (24) சேஷ்டைகளால் தோல் வாயு அம்சம். (25) மயிர் எடுத்தால், ஆகாசம்போல் பீடிக்காமல் சூன்னியமாயிருக்கிறது. ஆகையால் மயிர் ஆகாசாம்சம.

முன் சொல்லிய பயம் முதலியவை சூக்ஷ்மதேகத்தின் முக்கியதர்மங்களாயிருக்கின்றன. ஜலத்தின் குளிர்ச்சி கடத்தில் தோன்றுவதுபோல் இவைகளும் ஸ்தூலதேகத்தில் தோன்றுவதால் ஸ்தூலதேகத்தின் கவுணதர்மங்களாயிருக்கின்றன. ஆகையால் ஸ்தூலதேகத்தின் தத்துவங்களில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இந்த 25 தத்துவங்களின் சமுதாயத்துக்கு ஸ்தூலதேகமென்று பெயர். நாமம், ஜாதி, ஆசிரமம், வர்ணம் (நிறம்) ஆகாரம் (உருவம்) ஜனனம்

மலினசத்துவகுணசகித அவித்தியாம்சம் ஜீவனுடைய காரணசரீரமாம். பஞ்சசூக்ஷ்மபூதங்கள், மனம் புத்தி சித்தம் அகங்காரம், பஞ்சப்பிராண

---

மரணம் முதலியவை ஸ்தூலதேகத்தின் தர்மங்களாம். அன்னத்தின் ஸ்தூல பாகத்தால் மலமும் மத்தியபாகத்தால் மாமிசமும் சூக்ஷ்மபாகத்தால் மனதும் உண்டாகின்றன. ஜலத்தின் ஸ்தூலபாகத்தால் மூத்திரமும் மத்தியபாகத்தால் இரத்தமும் சூக்ஷ்மபாகத்தால் பிராணனுமுண்டாகின்றன. உண்ணப்படும் தைலபதார்த்தங்களின் ஸ்தூல பாகத்தால் எலும்பும் மத்தியபாகத்தால் மேதை (வெள்ளைமாமிசம்) யும் சூக்ஷ்மபாகத்தால் வாக்குமுண்டாகின்றன. தாயினுடைய இரத்தத்தினின்றும் இரத்தம் மாமிசம் தோலுண்டாகின்றன. பிதாவினுடைய வீரியத்தினின்றும் எலும்பு நரம்பு மஜ்ஜை இவைகளுண்டாகின்றன. ஸ்தூல சரீரம் நான்கு விதம். [1] அண்டஜம். [2] ஜராயுஜம். [3] ஸ்வேதஜம். [4] உத்பிஜம். கருப்பையிலிருந்துண்டாகும் மனுஷியன் மிருகங்கள் ஜராயுஜங்களாம். முட்டையிலிருந்துண்டாகும் பக்ஷி பாம்பு முதலியவைகள் அண்டஜங்களாம். வியர்வையாலுண்டாகும் பேன் புழு முதலியவை ஸ்வேதஜங்களாம். வித்தினின்று பூமியைப் பிளந்து புறப்படும் மரஞ்செடி முதலியவை உத்பிஜங்களாம்.

**சூக்ஷ்மசரீரம்:—** அபஞ்சீகிருதமான 17 தத்துவங்களோடு கூடியது என்று ஆத்மபோதத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. அவையாவன:— பிராணன்கள் 5 கர்மேந்திரியங்கள் 5. ஞானேந்திரியங்கள் 5. மனம் 1. புத்தி 1. ஆ 17. இதற்கு லிங்கசரீரமென்றும் பெயராம். சுபாசுபக்கிரியைகளைச் செய்தல் சுக துக்க போகங்களைப் புஜித்தல் இக லோகம் வருதல், இராகத்துவேஷாதிகள் சம தமாதிகள் அந்த மந்தாதி குணங்கள் இவைகளெல்லாம் லிங்கசரீரத்தின் தர்மங்களாம். ஸ்தூல சரீரம்போல் ஸ்தூலமாய்த் தோன்றாதபடியால் சூக்ஷ்ம சரீரமெனவும், சப்தாதி விஷயங்களையறியப் பண்ணுகிறபடியினாலும் ஆத்மாவை லக்ஷணத்தினால் அறியப்பண்ணுகிற படியினாலும் லிங்கதேகமெனவும் பெயருண்டாயிற்று.

**காரணசரீரம்:—** இதுவே அஞ்ஞானம். ஸ்தூலலிங்க தேகங்களுக்கு அஞ்ஞானம் காரணமாயிருப்பதால் அதுவே காரண சரீரமென்று சொல்லப்படுகிறது. அஞ்ஞானத்தின் சொரூபம் முன் (196) சொல்லப்பட்டிருக்கிறது தத்துவத்தால் தகிக்கப்படுவதால் காரணதேகமென்று பெயர்.

21. **ஈஸ்வரனுடைய சரீரங்களுங்கோசங்களும்:—** சமஷ்டி அஞ்ஞானரூபமாயை ஈஸ்வரனுடைய காரணசரீரம். இதுவே ஈஸ்வரனுடைய ஆனந்தமயகோசம். ஜீவர்களுடைய சூக்ஷ்மசரீரங்களின் சமஷ்டியாகிய ஹிரண்ய

ன் பஞ்சகர்மேந்திரியங்கள் பஞ்சஞானேந்திரியங்கள் இவைகள் சேர்ந்து ஜீவனுடைய சூக்ஷ்மசரீரமாகிறது. சகலஜீவர்களின் சூக்ஷ்மசரீரங்களுஞ்சேர்ந்து ஈஸ்வரனுடைய சூக்ஷ்மசரீரமாகிறது. ஸ்தூலப்பிரம்மாண்டமெல்லாம் ஈஸ்வரனுடைய ஸ்தூல சரீரமாகிறது. ஜீவனுடைய வியஷ்டி ஸ்தூல சரீரம் பிரசித்தமாயிருக்கிறது. இந்த மூன்றுசரீரங்களிலேயே பஞ்சகோசங்களும் இருக்கின்றன. காரணசரீரத்துக்கு ஆனந்தமய கோசமென்றுபெயர். சூக்ஷ்மசரீரத்தில் விஞ்ஞானமய கோசம் மனோமயகோசம் பிராணமயகோசம இம்மூன்றுகோசங்களிருக்கின்றன. பஞ்சஞானேந்திரியங்களும் நிச்சயரூபமான அந்தக்கரணத்தின் விர்த்தியான புத்தியும் சேர்ந்து விஞ்ஞானமயகோசமென்னப்படும். பஞ்சஞானேந்திரியங்களும் சங்கல்பவிகல்பாத்மகமான அந்தக்கரண விர்த்தியாகிய மனதும் சேர்ந்து மனோமயகோசமென்னப்படும். பஞ்சப்பிராணனும் பஞ்சகர்மேந்திரியங்களுஞ்சேர்ந்து பிராணமயகோசமென்னப்படும். ஸ்தூலசரீரத்துக்கு அன்னமயகோசமென்றுபெயர். இவ்விதமாக மூன்று சரீரங்களிலேயே ஐந்து கோசங்களுமிருக்கின்றன.[22]

---

கர்ப்பம் ஈஸ்வரனுடைய சூக்ஷ்மசரீரமாம். இதில் விஞ்ஞானமய மனோமய பிராணமயங்களாகிற மூன்றுகோசங்களிருக்கின்றன. இவைகளில் திக்பாலர்கள் வாயு சூரியன் வருணன் அஸ்வினீ குமாரர்கள் இவைகளாகிற ஈஸ்வரனுடைய பஞ்சஞானேந்திரியங்களும் சமஷ்டிபுத்திமயமான மகதத்துவமாகிற ஈஸ்வரனுடைய புத்தியும் சேர்ந்து ஈஸ்வரனுடைய விஞ்ஞானமயகோசமாகின்றன. மேற்சொல்லிய ஞானேந்திரியங்களும் சமஷ்டிமனமாகிற ஈஸ்வரனுடைய அகங்காரதத்துவமாகிற மனமுஞ்சேர்ந்து ஈஸ்வரனுடைய மனோமயகோசமாகின்றன. அக்கினி இந்திரன் உபேந்திரன் பிரஜாபதி யமன் ஆகிற ஐந்து ஈஸ்வரனுடைய கர்மேந்திரியங்களும் சமஷ்டிப்பிராணனாகிய ஈஸ்வரனுடைய பிராணனுஞ்சேர்ந்து ஈஸ்வரனுடைய பிராணமயகோசமாகின்றன. சமஷ்டிஸ்தூலசிர்ஷ்டியாகிய விராட் ஈஸ்வரனுடைய ஸ்தூலசரீரம். இது ஈஸ்வரனுடைய அன்னமயகோசம்

22. பஞ்சகோசங்கள்:— தாய்தந்தையரால் உண்ணப்படும் அன்னத்தினின்று உண்டாகும் தாயினுடைய இரத்தத்தினின்றும் பிதாவினுடைய வீரியத்தினின்றும் தாயினுடைய உதரத்தில் உற்பன்னமாகி ஜனனத்துக்குப்பிறகு பால்முதலிய அன்னங்களால் வளர்க்கப்பட்டு மரணத்துக்குப்பிறகு அன்னரூபமான பிருதிவியில் லயமடைகிற தேகம் அன்னமயகோசமென்னப்படும். பிராணமய கோசம் கேவலம் ரஜோகுணத்தின் அவஸ்தை. பிராணாதி வாயுக்கள் சரீரத்தில் பூரித்து சரீரத்துக்குப்பலத்தைக்கொடுத்து இந்திரியங்களை அவைகளின் காரியத்தில் பிரவிர்த்திக்கும்படிச்செய்கின்றன. கர்மேந்திரியங்களால் வியவகாரஞ் செய்வதினாலும் இச்சைமுதலிய ரஜோகுணவிர்த்திகளுடன் கூடியிருப்பதாலும் மனோமயம்சத்துவ ரஜோகுணங்களின் அவஸ்தையாம். விஞ்ஞானமயம் கேவலம்

ஈஸ்வரசரீரத்தில் ஈஸ்வரகோசமும் ஜீவசரீரத்தில் ஜீவகோசமும் இருக்கின்றன. கோசமென்றால் உறை. உறைபோல் பஞ்சகோசங்கள் ஆத்மாவின் ஸ்வரூபத்தை மறைக்கிறபடியால் அன்னமயாதிகள் கோசங்களென்று சொல்லப்படுகின்றன. அநேக மந்தபுத்தியுள்ளவர்கள் அனாத்மாக்களான பஞ்சகோசங்களில் ஒன்றை ஆத்மாவாக நினைத்து முக்கியமான சாக்ஷியாகிற ஆத்மஸ்வரூபத்தை யறிகிறதில்லை. ஆனதால் அன்னமயாதிகள் ஆத்மஸ்வரூபத்தை மறைக்கின்றன.

311. **அன்னமயகோசமே ஆத்மா:**— சிலபாமர ஜனங்கள் **விரோசன** மதத்தை யனுசரித்து ஸ்தூலசரீரரூபமான அன்னமய கோசத்தையே ஆத்மாவென்கிறார்கள். அவர்களுடைய சித்தாந்தத்துக்கு அடியில் வருமாறு யுக்திசொல்லுகிறார்கள்:— எதில் நான் என்னும் புத்தி யுண்டாகிறதோ அது ஆத்மா. இந்த நான் என்னும்புத்தி ஸ்தூலசரீரத்திலுண்டாகிறது. 'நான் மனுஷ்யன்', 'நான் பிராமணன்' இப்பெயர்ப்பட்ட பிரதீதிகள் எல்லாருக்கும் உண்டாகின்றன. மனுஷ்யத்வம் பிராமணத்வம் ஸ்தூலசரீரத்தில்தான் இருக்கின்றன. ஆகையால் ஸ்தூலசரீரம் நான் என்னும்புத்திக்கு விஷயமாயிருக்கிறது. ஆனதால் ஸ்தூலசரீரமே ஆத்மா மேலும் எதில்முக்கியமான பிரீதியுண்டாகிறதோ அது ஆத்மா. ஸ்திரீ புத்திரன் தனம் பசு முதலியவைகள் ஸ்தூலசரீரத்துக்கு உபயோகப்படுமானால் இவைகளில் பிரீதி யுண்டாகிறது. உபயோகப்படாவிட்டால் பிரீதியுண்டாகிறதில்லை. எதின் நிமித்தமாக அன்னியபதார்த்தங்களில் பிரீதியுண்டாகிறதோ அந்த ஸ்தூலசரீரத்திலேயே முக்கியமான பிரீதியிருக்கிறது. ஆகையால் ஸ்தூலசரீரமே ஆத்மா. அதற்கு

---

சத்துவகுணத்தின் அவஸ்தையாம். இவ்விதமாக அவஸ்தாபேதத்தால் ஒரே சூக்ஷ்மசரீரத்தில் மூன்றுகோசங்கள் சொல்லப்படுகின்றன. ஆத்மாவின் ஸ்வரூபம் ஆனந்தம். இதினுடைய பிரதிபிம்பத்துடன் கூடியும் பிரியமோதப்பிரமோதங்களாகிற விர்த்திகளுடைய லயத்துக்கு ஸ்தானமாயும் இருக்கிறது அவித்தையாகிறகாரணதேகம். இதுவே ஆனந்தமயகோசம். இஷ்டவிஷயத்தைப் பார்க்கிறதினாலுண்டாகும் விர்த்தி பிரியமென்னப்படும். அதையடைவதாலுண்டாகும் விர்த்தி மோதமென்னப்படும். அதையனுபவிப்பதாலுண்டாகும் விர்த்தி பிரமோதமென்னப்படும். இவ்விருத்திகள் ஜாக்கிரஸ்வப்னங்களில் புண்ணியகர்மத்தின் பலனாகிற சுகானுபவத்திலுண்டாகின்றன. சுஷுப்தியில் இவ்விர்த்திகள் தங்களுக்குக்காரணமான அஞ்ஞானத்தில் லயமாகின்றன. இந்த அஞ்ஞானம் ஆனந்தமயகோசமென்று சொல்லப்படுகின்றது. அன்னமயகோசம் போகஸ்தானம். சூக்ஷ்மசரீரம் போகசாதனம். பிராணமயகோசம் கிரியாசக்தியுள்ளகாரியரூபம். மனோமயம் இச்சாசக்தியுள்ள கரணரூபம். விஞ்ஞானமயம் ஞானசக்தியுள்ள கர்த்தாரூபம். ஆனந்தமயகோசம் போக்தாரூபம்."

வஸ்திரம் பூஷணம் அஞ்சனம் மஞ்சனம் நானாவிதபோஜனங்கள் முதலிய வைகளால் உபசரிப்பதே பரமபுருஷார்த்தம். இது அசுரஸ்வாமியாகிய விரோசனனுடைய சித்தாந்தம்.[23]

---

23. தேகாத்மவாதிமதம்:— சார்வாகமதத்தை யனுசரித்தவர்கள் வாயு முதலிய நாலு பூதங்களின் சங்காதமாகிற தேகத்தை ஆத்மாவாகப்பாவித்து அடியிற்கண்ட யுக்திகளைச்சொல்லுகிறார்கள். [1] நான் என்கிற புத்திக்கு விஷயமானது ஆத்மா. நான் மனுஷியன்; ஸ்தூலமாயிருக்கிறேன். மெலிந்திருக்கிறேன், நான் பிராமணன் இவ்வித அனுபவத்தினால் மனுஷியமுதலிய தர்மங்களோடுகூடிய ஸ்தூலதேகத்திலேயே நான் என்கிற புத்தியுண்டாவதால் தேகமே ஆத்மா. [2] பரமப்பிரீதிக்கு விஷயமானது தேகம். அதையுத்தேசித்துத்தான் ஸ்திரீ புத்திரதனாதிகளிற் பிரீதியுண்டாகிறது. பரமப்பிரீதிக்கு விஷயமாகிறதினால் தேகமே ஆத்மா. [3] அந்தத்தேகத்தையலங்கரித்தல் போஷித்தல முதலியன பரமபுருஷார்த்தங்களாம். [4] மரணமே மோக்ஷம். [5] பிரத்தியக்ஷமே பிரமாணம் மற்றவை அப்பிரமாணம். இந்தமதம் அடியில் வருமாறு கண்டிக்கப்படுகிறது. [1] நான் பார்க்கிறேன், கேட்கிறேன் பேசுகிறேன் என்பதில் இந்திரியமும் நான் என்பதற்கு விஷயமாயிருக்கிறது. [2] என்னுடைய தேகமென்பதில் மமதை தோன்றுகிறது. மமதைக்கு விஷயமானது அகந்தைக்கு விஷயமாகமாட்டாது. ஆகையால் தேகம் ஆத்மாவன்று. [3] ஸ்திரீ முதலியவைகளைக்காட்டிலும் தேகத்தில் அதிசப்பிரீதி தோன்றுவதுபோல் தேகத்தைக்காட்டிலும் இந்திரியங்களில் அதிகப்பிரீதி இருக்கிறது. ஆகையால் ஸ்தூலதேகத்தில்தானே அதிகப்பிரீதி இருக்கிறதாகச்சொன்னது சரியன்று. ஆகையால் தேகம் ஆத்மாவன்று. [4] சேதனமே ஆத்மா. ஜடமான பூதங்களுடைய சங்காதத்தில் சேதனமில்லாதபடியால் தேகம் ஆத்மாவன்று. [5] பாக்கு சுண்ணாம்பு இவைகளுடன்கூடிய தாம்பூலத்தில் சிவப்பு வர்ணங்கொடுக்குஞ்சக்தியிருப்பதுபோல் பூதசமுதாயமான தேகத்தில் ஞானசக்தியிருக்கிறதாகச் சொல்லுவது சரியன்று. ஏனெனில் பூதசமுதாயமான தேகத்தில் சேதனமிருந்தால் பூதசமுதாயமான கடத்திலும் சேதனமிருக்கக்கூடும். [6] சுஷுப்தி, மூர்ச்சை, மரணம் முதலிய அவஸ்தைகளில் கடம்போல் தேகமும் ஜடமாயிருக்கிறது. இது எல்லாருக்கும் தெரிந்த விஷயமே. ஆகையால் ஜடதேகம் ஆத்மாவன்று. [7] தேகமே ஆத்மாவானால் பாலகசரீரத்துக்கு ப்பின்னமான யௌவனசரீரத்தில் 'அவனே நான்' என்று உண்டாகும் ஞானமுண்டாகக்கூடாது. அப்படி யுண்டாவதால் தேகம் ஆதமாவன்று. (8) சரீரத்துக்கு ஜன்ம மரணாதிகளுண்டு. ஆகையால் ஜன்மத்துக்கு முன்னும் மரணத்துக்குப் பின்னும் சரீர

312. இந்திரியமே ஆத்மா:— வேறுசிலர், சொல்லுகிறதாவது, ஸ்தூலசரீரம் ஆத்மாவன்று. ஆனால் ஸ்தூலசரீரத்தில் எது இருப்பதினால் ஜீவிக்கிற வியவகாரமேற்படுகிறதோ எது இல்லாவிட்டால் இறந்துபோன வியவகாரமேற்படுகிறதோ அதுவே ஆத்மா. அது ஸ்தூலசரீரத்துக்கு வேறாகவிருக்கிறது. ஜீவிப்பதும் மரிப்பதும் இந்திரியத்துக்காதீனமாயிருக்கின்றன. சரீரத்தில் இந்திரியமுள்ளவரையில் ஜீவிப்புண்டு. இந்திரியங்களில் ஏதாவதொன்று இல்லாவிட்டால் மரணமென்று சொல்லப்படுகிறது. நான் பார்க்கிறேன் பேசுகிறேன் கேட்கிறேன் என்பவைகளில் நான் என்கிற புத்தி[24] இந்திரியத்திலிருக்கிறது. ஆகையால் இந்திரியமே ஆத்மா.

313. பிராணனே ஆத்மா:— ஹிரண்யகர்ப்பவுபாஸகர்கள் பிராணனே ஆத்மாவென்று சொல்லுகிறார்கள். அவர்கள் யுக்தி வருமாறு:— மரணசமயத்தில் மூர்ச்சையுண்டானால் சமீபத்திலிருக்கப்பட்ட புத்திராதிகள் பிராணனிருந்தால் ஜீவித்திருப்பதாயும் பிராணனில்லாவிட்டால் இறந்துபோய்விட்டதாயும் அறிகிறார்கள். பின்னும் சரீரத்தில் நேத்திரேந்திரியம் இல்லாவிட்டால் சரீரத்துக்கு அந்தகத்துவம் சித்திக்கிறது. இப்படியே சுரோத்திரேந்திரியமில்லாவிட்டால் செவிடாயும், வாக்கில்லாமற்போனால ஊமையாயும் இவைபோல் இல்லாத இந்திரியங்களி

---

மில்லை. ஆனால் ஆத்மா இருக்கிறது. அப்படி யில்லாவிட்டால் கிருதநாசம் அகிருத அப்பியாகமங்களாகிற தோஷங்கள் நேரிடும். ஆகையால் தேகமே ஆத்மாவல்ல. [9] தேகத்தை யலங்கரித்தல் போஷித்தல் முதலிய போகங்களே புருஷார்த்தமென்று சொன்னது சரியன்று. ஏனெனில் இச்சைக்கு விஷயமானது புருஷார்த்தம். சுகப்பிராப்தியிலும் துக்கநிவிர்த்தியிலும் எல்லாருக்கும் இச்சையிருப்பதால் அவைகள்தாம் புருஷார்த்தங்கள். எல்லாசுகங்களையும்விட அதிகசுகமும அத்தியந்த துக்கநிவிர்த்தியும் பரமபுருஷார்த்தமென்னப்படும். இவை மோக்ஷத்திலிருக்கின்றன. போகங்களில் தோஷங்களிருப்பதால் அவை புருஷார்த்தங்கள் அல்ல. [10] தேகமே ஆத்மாவானால் மரணத்துக்குப் பிறகு தேகம் தகிக்கப்பட்டுப்போவதால் ஒன்றும்மிச்சப்படுகிறதில்லை. ஆகையால்மோக்ஷத்துக்கு ஆஸ்பதமில்லை. பிரலாபமட்டுந்தான் மிஞ்சுகிறது. [11] அனுமான சாப்தமுதலிய பிரமாணங்கள் அனுபவசித்தமாயிருப்பதால் பிரத்தியக்ஷத்தைத்தவிர வேறு பிரமாணங்களில்லையென்று சொன்னது ஜடமே.

24. இந்திரியாத்மவாதிகள் லோகாயதர்கள் இவர்களுடைய மதமும் சரியன்று. ஏனெனில் (I) எது இல்லாவிட்டால் சரீரமிருக்கமாட்டாதோ அது ஆத்மா. கண் முதலியவைகள் இல்லாவிட்டாலும் சரீரமிருக்கிறது. ஆ

ன் வியாபாரமன்றியிலும் சரீரமட்டும் இருந்துக்கொண்டேயிருக்கிறது. பிராணன் இல்லாமற்போனால் தேகம் அந்தக்ஷணமே மயானம்போல அமங்களமாயும் பயங்கரமாயுமிருக்கிறது. மேலும் நான் பார்க்கிறேன் கேட்கிறேன் என்பதாலும் இந்திரியங்களுக்கு வேறாய் ஆத்மா இருப்பதா கச்சித்திக்கிறது. ஏனெனில் நேத்திரஸ்வரூபமான நான் பார்க்கிறேன் சிரவணரூபமான நான் கேட்கிறேன் என்று பிரதீதியுண்டானால் இந்திரியமே ஆத்மாவாகக்கூடும். ஆனால் நேத்திரத்தோடுகூடின நான் பார்க்கிறேன், காதுடன் கூடின நான் கேட்கிறேன் என்று பிரதீதியாகிறபடியால் இந்திரியத்துக்கு வேறாகவே ஆத்மா இருக்கிறது. மேலும் சுஷுப்தியில் யாதொரு இந்திரியமும் இல்லாமலிருக்கும்போதும் பிராணனிருப்பதால் ஜீவக்கிறான் என்கிற வியவகாரம் சித்திக்கிறது. ஆகையால் ஜீவிப்பதும் மரிப்பதும் இந்திரியங்களுக்காதீனமல்ல. ஸ்தூலசரீரத்துக்கும்

---

கையால் இந்திரியம்ஆத்மாவன்று. [2] நான் பார்க்கிறேன் கேட்கிறேன், இவ்விதமாக நான் என்பதற்கு இந்திரியம் விஷயமாயிருப்பதால் இந்திரியமே ஆத்மா என்று சொல்வது சரியன்று. ஏனெனில் நேத்திரத்துடன் கூடிய நான் பார்க்கிறேன் என்பது அபிப்பிராயமேதவிர நேத்திரமாகிய நான் பார்க்கிறேன் என்பது அபிப்பிராயமன்று. ஆகையால் நான் என்பதறகு விஷயம் இந்திரியத்தைச்காட்டிலும் வேறானதென்று சித்திக்கிறது. மேலும் என்பார்வை மந்தமாயிருக்கிறதென்பதால் இந்திரியம் மமதைக்கு விஷயமாகிறது. ஆகையால் இந்திரியம் ஆத்மாவன்று. [3] எவன் எதையறிகிறானோ அவன் அதற்கு வேறாயிருக்கிறான். கடத்தைப்பார்க்கிறவன் கடத்துக்கு வேறாயிருப்பதுபோலும். இந்திரியத்தினுடைய மந்ததீக்ஷணகுணங்களை யறிகிற ஆத்மா இந்திரியத்துக்கு வேறாகவே இருக்கவேண்டும். [4] மனது வியாகுலப்பட்டிருக்கும்போது ஒன்றும் பார்க்கப்படுகிறதில்லை, கேட்கப்படுகிறதில்லை. ஆகையால் ஜடமென்பது அனுபவசித்தம். ஜடமாவதால் இந்திரியம் ஆத்மாவன்று. [5] ஹடமாய் இந்திரியமே சேதனம் என்று சொல்லுகிறவனைக்கேட்கவேண்டியதாவது ஒரேயொரு இந்திரியம் சேதனமா, இந்திரியங்களெல்லாஞ்சேர்ந்தது சேதனமா, அல்லது ஒவ்வொரு இந்திரியமும் தனித்தனியே சேதனமா? முதற்பக்ஷம் ஒவ்வாது. ஏனெனில் எந்த இந்திரியத்தைச்சேதனமாகச்சொல்லுகிறோமோ அது இல்லாவிடினும் ஞானமும் ஜீவனும் காணப்படுகின்றன. ஆகையால் இந்திரியம் சேதனமன்று. இரண்டாவதுபக்ஷத்தில் ஓரிந்திரியம் நஷ்டமானால் சமுதாயத்துக்கு ஹானி வந்துவிடுகிறது. ஆகையால் சேதனம், ஞானம், ஜீவன் ஒன்றும் இருக்கமாட்டாது. அனுபவத்தில் இப்படி இல்லாததினால் சமுதாயம் சேதனமன்று. மூன்றாவது பக்ஷமும் சரியன்று. ஒவ்வோரிந்திரியமும் தனித்தனியே ஆத்மாவானால் ஒரு சரீரத்தில் பத்து ஆத்மாக்களிருக்கவேண்டும். ஒவ்வொன்

பிராணனுக்குமுண்டாகிறவியோகமேமரணம். ஆகையால் ஜீவனமரணங்கள் பிராணாதீனமாயிருக்கின்றன. இந்தப்பிராணனே ஆத்மா.

314. மனமேஆத்மா:— வேறுசிலர் சொல்வதாவது, பிராணன் ஜடம், ஆகையால் கடம்போல அது அனாத்மா. பந்தமோக்ஷங்கள் மனதுக்காதீனமாயிருக்கின்றன. விஷயத்தில் ஆஸக்தியையடைந்த மனம்

---

றின் இச்சை வெவ்வேறாக இருக்கக்கூடுமானதால் ஒருவாழைமரத்திற் கட்டப்பட்ட பத்துயானைகளால் அந்த வாழை பங்கப்படுவதுபோல் தேகம் பங்கமாய்விடும். ஆகையால் ஒவ்வோரிந்திரியமும் தனித்தனியே சேதனமன்று. இவ்விதமாக இந்திரியம் அசேதனமாகிறதினால் ஆத்மாவன்று. [6] சுருதியிற்சொல்லிய இந்திரியஸம்வாதம் இந்திரியஅபிமானிதேவதைகளுடையது. ஸம்வாதத்தால் இந்திரியம் சேதனமென்று ஏற்படவில்லை. இவ்விதமாக இந்திரியமே ஆத்மாவென்று சொல்லுகிறவர்களின் மதம் பிசகாயிருக்கிறது.

25. பிராணாத்மவாதிமதகண்டனை:— சமஷ்டிபிராணனை யுபாஸிக்கிற ஹைரண்யகர்ப்பர்களுடைய மதமும் சரியன்று. ஏனெனில் [1] பாஹியவாயுபோல் பிராணனும் வாயுவாயிருப்பதால் பிராணனே ஆத்மாவல்ல. [2] பிராணன் பார்க்கப்படாததினால் மரணம் நியமமாகச்சம்பவிக்கிறதில்லை. விருக்ஷங்களில் பிராணன் பார்க்கப்படாவிட்டாலும் அவைகள் ஜீவிக்கிறது நன்றாய்த்தெரிகிறது. மனுஷன் மூர்ச்சையடையும்போது பிராணனிருக்கிறதாகத்தெரிகிறதில்லை. அதனால் அவன் இறந்துபோய்விட்டானென்று சொல்லப்படுகிறதில்லை. அவன் ஜீவித்துக்கொண்டேயிருக்கிறான். ஆகையால் பிராணன் ஆத்மாவன்று. [3] தூங்கிக்கொண்டிருக்கும்போது பிராணன் இருந்தும் ஒருவன் ஒருவஸ்துவை யெடுத்துக்கொண்டுபோனால் அவனைத்தடுக்கிறதில்லை. ஆகையால பிராணன் ஜடம். அது ஆத்மாவன்று. [4] பிராணன் வெளியேபோகிறதினால் தேகம்மரிக்கிறது. ஆகையால் பிராணனே ஆத்மாவென்று சொல்வது அசங்கதம். ஏனெனில் ஜடராக்கினி வெளியே போவதினாலும் தேகம் மரிக்கிறது. மரணத்துக்குப்பிராணன் வெளியேபோவதே காரணமன்று. சுருதியில் பிராணனைச்சிரேஷ்டமாகச்சொன்னது பிராணஉபாஸனையிற் பிரவிர்த்தியுண்டாகும்பொருட்டேயாம். (5) சுருதியில் பிராணமயாதிகோசங்களை ஆத்மாவென்று சொன்னதற்குத்தாற்பரியம் என்னவெனில் ஸ்தூலாருந்ததி நியாயத்தால் அதிஷ்டானமான பிரத்தியகபின்னபரமாத்மாவை யறியும்பொருட்டுத்தான். (6) சுருதியில் பிராணன் இந்திரியங்களுடன் சம்வாதஞ்செய்ததாகவும் தேகத்தில் பிரவேசித்ததாகவும் சொன்னது பிராணஅபிமானிதேவதையை யுத்தேசித்துச்சொன்னதேதவிரக்கேவலம் பிராணனை யுத்தேசித்துச்சொன்னதன்று. (7) பசியால் என் பிராணன் போகிறது, போஜனத்தால் என் பிராணன் திருப்தியடைகிறது; இவ்விதமாகப்பிராணன் மமதைக்கு விஷயமாவதால் அகந்தைக்கு விஷயமாகிறதில்லை. (8) தன்பிராணன் வெளியேபோகிறதும் உள்ளே வருவதும் அனுபவசித்தமாயிருப்பதால் பிராணனையறிகிற ஆத்மா பிராணனுக்கு வேறாகவே இருக்கிறான்.

பந்தத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. விஷயவாசனையற்ற மனம் மோக்ஷத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. மனச்சம்பந்தத்தினால்தான் இந்திரியம் ஞானத்துக்கு ஹேதுவாகிறது. மனச்சம்பந்தமன்றியில் இந்திரியத்தால் ஞானமுண்டாகிறதில்லை. ஆகையால் சகலவியவகாரங்களுக்கும் மனதே ஹேதுவாயிருக்கிறது. இதுவே[26] ஆத்மா.

315. புத்தியே ஆத்மா:— க்ஷணிகவிஞ்ஞானவாதிகளான பௌத்தர் சொல்வதாவது, மனதின் வியாபாரம் புத்திக்காதீனமாயிருக்கிறது. ஏனெனில் புத்தியின் ஆகாரமே மனது. ஆனதால் க்ஷணிகவிஞ்ஞானரூபபுத்தியே ஆத்மா. மனது ஆத்மாவன்று. அவர்களுடைய அபிப்பிராயமென்னவெனில் சகலபதார்த்தங்களும் விஞ்ஞான ஆகாரமாயிருக்கின்றன. அந்த விஞ்ஞானம் பிரகாசரூபம். ஒவ்வொருக்ஷணத்திலும் விஞ்ஞானமுண்டாகி நாசமடைகிறது. முந்திய விஞ்ஞானததுக்குச்சமானமாய் வேறு விஞ்ஞானமுண்டாகிறதினால் முந்தியவிஞ்ஞானம் நாசமடைகிறது.. இப்படியே மூன்றாவது விஞ்ஞானத்தின் உற்பத்தி இரண்டாவது விஞ்ஞானத்தின் நாசம் நான்காவதினுற்பத்தி மூன்றாவதின் நாசம் இவ்விதமாக நதியின் பிரவாகம்போல் விஞ்ஞானத்தின் தாரை தொடர்ந்துகொண்டேயிருக்கிறது. இந்த விஞ்ஞானதாரை இருவகை. ஒன்று ஆலயவிஞ்ஞானதாரை, மற்றொன்று பிரவிர்த்திவிஞ்ஞானதாரை. நான் நான் என்கிற விஞ்ஞானதாரைக்கு ஆலயவிஞ்ஞானதாரையென்றும் புத்தியென்றும் பெயர். இது கடம் இது சரீரம் என்கிற விஞ்ஞானதாரைக்குப்பிரவிர்த்திவிஞ்ஞானதாரை என்று பெயர். ஆலயவிஞ்ஞானதாரையினின்றும் பிரவிர்த்திவிஞ்ஞானதாரை உற்பத்தியாகிறது. மன

---

26. மனஆத்மவாதிமதகண்டனம்:— நாரதபஞ்சராத்திரத்தை யனுசரித்தவர்கள் மனமே ஆத்மாவென்று சொல்லுகிறார்கள். இது சரியன்று. ஏனெனில் (1) வாய்ச்சி, உளி இவைகள்போல் மனது கரணமாயிருப்பதால் அது ஆத்மாவன்று. (2) சுஷுப்தியில் சாமானியசேதனம் இருக்கிறது. மனமிருந்தால் சேதனமிருக்கிறது, மனமில்லாவிட்டால் சேதனமில்லையென்பது இல்லை. மனது ஜடம். ஆகையால் அது ஆத்மாவன்று. (3) என்மனது வேறிடத்திற் போயிருந்தது என்றும் இப்போது வந்துவிட்டது என்றும் சொல்வதினால் மனது மமதைக்கு விஷயமாகிறதேதவிர அகந்தைக்கு விஷயமாகிறதில்லை. (4) மனதின ஸ்திரதையையும் அஸ்திரதையையும் அறிகிற ஆத்மா மனதுக்கு வேறாயிருக்கிறது. (5) ஆபாஸத்துடன்கூடியிருப்பதினால் மனது போக்தாவாயிருக்கிறது. தான்மட்டும் போக்தாவாயில்லை. ஆகையால் அது ஆத்மாவன்று. (6) "மனிதனுடைய பந்தமோக்ஷங்களுக்குக்காரணம் மனதே. விஷயத்தில் ஆஸக்தியடைந்த மனது பந்தத்தையும் வாஸனாரகிதமனது மோக்ஷத்தையுங்கொடுக்கின்றது." இச்சுருதி ஞானப்பிராப்திமூலமாகவே மோக்ஷத்துக்கும் அத்தியா

தின் ஸ்வரூபமும் பிரவிர்த்திவிஞ்ஞானதாரையிலிருக்கிறது. ஆனதால் ஆலயவிஞ்ஞானதாரைரூப புத்தியின் காரியமாயிருக்கிறது. இந்தப்புத்தி யே ஆத்மா. ஆலயவிஞ்ஞானதாரையில் பிரவிர்த்திவிஞ்ஞானதாரை லயப்படுவதினால் நிர்விசேஷ க்ஷணிகவிஞ்ஞானதாரையின் ஸ்திதியே இவர்கள் மதத்தில் மோக்ஷமாம். இவ்விதமாக விஞ்ஞானவாதிகள் புத்தியை க்ஷணிகரூபமாயும் ஸ்வயம் பிரகாசரூபமாயும் பாவித்து[27] அதையே ஆத்மாவாகச்சொல்லுகிறார்கள்.

## ஆனந்தமயகோசமே ஆத்மா (316—319)

316. பட்டர்மதம்:— பூர்வமீமாம்ஸகர்களில் ஒருவரான **வார்த்திகக்காரபட்டர்** சொல்லுகிறதாவது:— மின்னல் கொடிபோல ஆத்மா க்ஷணிகரூபமன்று. ஆனால் ஸ்திர ஸ்வரூபமான ஆத்மா ஜடரூபமாயும் சேதனரூபமாயும் இருக்கிறது. பட்டருடைய, அபிப்பிராயமென்னவெனில் சுஷுப்தியிலிருந்து விழித்துக்கொண்டவன் நான் ஜடமாகத் தூங்கினேனென்று சொல்லுகிறான். இதினால் ஆத்மா ஜடரூபமென்று சித்திக்கிறது. விழித்தவனுக்கு ஸ்மரணையுண்டாகிறது. அறியப்படாத பதார்த்தத்தின் ஸ்மரணையுண்டாகமாட்டாது. சுஷுப்தியில் ஆத்மஸ்வரூபந்தவிர வேறு யாதொரு ஞானசாதனமிருக்கவில்லை. ஆகையால் ஸ்மரணைக்குக்காரணமாயிருக்கிறது சுஷுப்தியிலுள்ள ஞானமே. இது ஆத்மாவின் ஸ்வரூபம். இவ்விதமாக ஆத்மா ஆகாசவெளிச்சம்போல் பிரகாசரூபமாயும் அப்பிரகாசரூபமாயுமிருக்கிறது. ஞானரூபமாயிருப்பதால் பிரகாசரூபமாயும் ஜடமாயிருப்பதால் அப்பிரகாசரூபமாயுமிருக்கிறது. ஆனந்தமயகோசம் பிரகாசரூபமாயும் அப்பிரகாசரூபமாயுமிருக்கிறது. ஏனெனில் சுஷுப்தியில் சேதனத்தின் ஆபாஸசகித அஞ்ஞானம் ஆனந்தமயகோசமென்று சொல்லப்படுகிறது. ஆபாஸம் பிரகாசரூபமாயும் அஞ்ஞானம் அப்பிரகாசரூபமாயும் இருக்கின்றன. இவ்விதமாக ஆ

---

ஸமூலமாகப்பந்தத்துக்கும் மனது காரணமாயிருக்கிறதென்று சொல்லுகிறதேதவிர மனதே ஆத்மாவென்று சொல்லவில்லை. (7) மனோமயகோசமே ஆத்மாவென்று சொல்லும் சுருதிக்குத்தாற்பரியம் முந்தினடிப்பணியிற் சொல்லப்பட்டிருக்கிறது.

27. விஞ்ஞானவாதிமதம்:— இது புத்தனுடைய சிஷ்யனாகிய **யோகாசாரி**யென்னும் நாஸ்திகனுடைய மதம். இதுவும் சரியல்ல. ஏனெனில் (1) ரூபாதி ஞானரூபகாரியத்துக்கு நேத்திராதி இந்திரியம் காரண (சாதன) மாக இருப்பதுபோல் நிச்சயரூபகாரியத்துக்குக்காரணமாக இருப்பதால் புத்தி ஆத்மாவாகமாட்டாது. ஆனால் எல்லாபதார்த்தங்களையும் நிச்சயஞ்செய்கிற புத்தியை அறிகிறதுதான் ஆத்மா. (2) அந்த ஆத்மா பிரகாசஸ்வரூபத்தால் எப்போதும்

த்மாவும் ஆனந்தமயகோசமும் பிரகாசரூபமாயும் அப்பிரகாசரூபமாயுமி
28
ருப்பதால் பட்டருடைய மதத்தில் ஆனந்தமயகோசமே ஆத்மாவென்று சித்திக்கிறது.

317. மாத்தியமிகபௌத்தமதம்:— இவர்கள் சொல்லுகிறதாவது:— ஆத்மா நிரம்சம், ஆனதால் ஒரே ஆத்மாவுக்குப்பிரகாசரூபமும் அப்பிரகாசரூபமுமிருப்பதாகச்சொல்வது சரியன்று. ஆகாசவெளிச்சத்தின் ஓரம்சம் பிரகாசமாயும் ஓரம்சம் அப்பிரகாசரூபமாயுமிருப்பது போல் அம்சமில்லாத ஆத்மாவினிடத்தில் இரண்டுரூபங்களைச்சொல்லுவது அயுக்தம். ஆனதால் இரண்டுரூபங்களைச்சொல்லவேண்டுமேயானால் ஆத்மாவுக்கு அம்சங்களிருப்பதாக நினைக்கவேண்டும். அம்சத்தோடு கூடிய கடாதிபதார்த்தங்கள் உற்பத்திநாசங்களுடன் கூடியிருக்கின்றன. இவைகள்போல் ஆத்மாவும் அம்சசகிதமானால் ஆத்மாவையும் உற்பத்தி

---

பிரகாசிக்கிறது. பாஸியபாஸகபேதம்போல் பாஸியமான புத்திக்குப்பாஸகமான ஆத்மா வேறுபடுகிறது. தீபாதிப்பிரகாசம் கடாதிகளுடன் சேர்ந்து அந்த ஆகாரத்தையடைந்து மிசிரபாவத்தால் பிரகாசித்தாலும் வாஸ்தவத்தில் வேறாயிருப்பதுபோல் ஞானஸ்வரூபமான ஆத்மா புத்திவிர்த்தியுடன் சேர்ந்து அதின் ஆகாரத்தையடைந்து பிரகாசித்தாலும் உண்மையில் வேறாகவும் சுத்தமாகவுமிருக்கிறது. (3) அபஞ்சிகிருதபூதகாரியமான அந்தக்கரண நிச்சயவிர்த்தியால் புத்தியென்றும், சங்கல்பவிகல்பங்களால் மனது என்றும சொல்லப்படுகிறது. புத்தி காரியமாயிருப்பதால் தேகம் இந்திரியம் மனது இவைகள் போல் புத்தியும் அநாத்மா. (4) கடவல்லியுபநிஷத்தில் ஆத்மாவை ரதிகனாயும் தேகத்தை ரதமாயும் புத்தியைச்சாரதியாயும் சொல்லப்பட்டிருக்கிறது. ரதிகனைவிடச்சாரதி வேறானதால் புத்தி ஆத்மாவன்று. (5) என் புத்தி மந்தமாயிருக்கிறது, தீவிரமாயிருக்கிறது, என்பதில் மமதைக்கு விஷயமாயிருக்கிறது. (6) ஆகையால் புத்தி அகந்தைக்கு விஷயமாகமாட்டாது. (7) ஆத்மா க்ஷணிகரூபமென்று சொல்வதுஞ்சரியன்று. ஏனெனில் (1) ஆத்மா க்ஷணிகமானால் முதல்வருஷத்தில் கடன்கொடுத்தவன் மறுவருஷத்தில் அதைக்கேட்கக்கூடாது. முதல்க்ஷணத்தில் போஜனஞ்செய்தவன் மறுக்ஷணத்தில் இல்லாதபடியால் போஜனத்தின் முடிவில் நான் திருப்தியடைந்தேனென்று சொல்லக்கூடாது. ஆனால் அப்படிச்சொல்வதால் ஆத்மா க்ஷணிகரூபமன்று. (2) ஆத்மா க்ஷணிகரூபமானால் மோக்ஷநிமித்த சாதனங்கள் வியர்த்தமாய்விடும்.

28. ஆத்மாவை ஜடசேதனரூபமாகச்சொல்லுவது சரியன்று. ஏனெனில் ஒரே இடத்தில் இருட்டும் வெளிச்சமும் சேராததுபோல ஒரேஆத்மாவிடத்தில் ஜடசேதனங்கள் சேரா. இரண்டு அம்சங்களில் ஒன்று கோசரமாயும் மற்றென்று அகோசரமாயுமிருப்பதாக சொல்லுவது சரியன்று. தண்டத்தையும் புருஷனையும் பார்த்தாலொழிய தண்டிவந்தான் என்கிற ஞானம் உண்டாகிறதில்லை. ஆகையால் ஒரு ஜடாம்சத்தினால்மட்டும் இரண்டு அம்சங்களும் அறிய

நாசங்களுடன் கூடின்தாக நினைக்கவேண்டும். உற்பத்திநாசங்களுடன் கூடினபதார்த்தம் உற்பத்திக்குமுன்னும் நாசத்துக்குப்பின்னும் அசத்தாயிருக்கிறது. ஆதியந்தங்களில் அசத்தாயிருக்கும் பதார்த்தம் மத்தியில் சத்தாயிருக்கமாட்டாது. ஆனால் மத்தியிலும் அசத்தாகவேயிருக்கிறது. ஆகையால் ஆத்மா அசத்ரூபம். இப்படியே ஆத்மாவுக்கு வேறான சகல பதார்த்தங்களும் உற்பத்திநாசங்களுடன் கூடியிருப்பதால் அசத்ரூபங்களாயிருக்கின்றன. இவ்விதமாக ஆத்மாவும் அனாத்மாக்களான சகலவஸ்துக்களும் அசத்ரூபங்களாகிறதினால் சூனியமே பரமதத்துவம். இது சூன்னியவாதியாகிய மாத்தியமிகபௌத்தனுடைய மதம்.

இவர்களும் அஞ்ஞானரூப ஆனந்தமயகோசத்தைப்பிரதிபாதிக்கிறார்கள். ஏனெனில் அஞ்ஞானம் மூன்றுவிதமாய் விளங்குகிறது. (1) அத்வைதசாஸ்திரஸம்ஸ்காரமில்லாத மூடனுக்கு ஜகத்ரூபபரிணாமத்தையடைந்த அஞ்ஞானம் சத்தியமாய்த்தோன்றுகிறது. (2) அத்வைதசாஸ்திரானுசாரமான யுக்தியில் நிபுணனாயிருக்கிற பண்டிதனுக்கு அஞ்ஞானமும் அதன்காரியமான ஜகத்தும் சதசத்துக்கு விலக்ஷணமான அநிர்வசனீயரூபமாய் விளங்குகின்றன. (3) ஞானநிஷ்டையையடைந்த ஜீவன்முக்தவித்துவானுக்குக்காரியசகிதமான அஞ்ஞானம் துச்சமாகத்தோன்றுகிறது. துச்சம், அசத்து, சூன்யம் இம்மூன்றும் ஒரே அர்த்தத்தைத்தருகின்றன. இவ்விதமாக ஜீவன்முக்தனுக்குத்துச்சமாகத்தோன்றும் அஞ்ஞானத்தில் மோகமடைந்து சூன்யவாதி பரமபுருஷார்த்தத்தையடைகிறதில்லை. ஆனால் ஆத்மா அசத்ரூபமாயிருப்பதாலும் ஆனந்தமயகோசம் அஞ்ஞானரூபமாய் அதாவது அசத்ரூபமாயிருப்பதாலும் ஆனந்தமயகோசத்தையே ஆத்மாவாகச் சூன்யவாதி சொல்லுகிறான்.

29

---

ப்படமாட்டா. மேலும் ஜடமாய் இரண்டுஅம்சங்களையும் அங்கீகரிக்கும்பக்ஷத்தில் இரண்டுக்கும் சம்பந்தம் சம்யோகமா? தாதாத்மியமா? விஷயவிஷயீபாவமா? முதல்பக்ஷத்தில் இரண்டுதிரவியங்களுக்குத்தான் சமவாயசம்பந்தமிருக்கக்கூடுமானதால் ஆத்மா அநித்தியமாகும்: இரண்டாவது பக்ஷத்தில் சித் ஜடஅம்சங்கள் ஒருஸ்வரூபத்தில் இருப்பதால் சித் ஜடமாகும், ஜடம் சித்தாகும். மூன்றாவது பக்ஷத்தில் கடம்போல் இரண்டு அம்சங்களும் அனாத்மாவாகும். சுருதியில் ஆத்மா விஞ்ஞானகனமென்று சொல்லியிருப்பதற்கு ஒருபாகம் ஜடம் என்பது விருத்தம். சுஷுப்தியினின்றும் எழுந்திருந்தவனுடைய ஸ்மரணை ஆத்மாவின் ஜடதையை விஷயமாக்கவில்லை, ஆனால் சுஷுப்தியிலுள்ள அஞ்ஞானம்சத்தை விஷயமாக்குகிறது.

**29. சூன்யவாதிமதம்:—** எல்லாம் சூன்யம். சூன்யமே பரமதத்துவம். சுஷுப்தியிலுள்ள அஞ்ஞானரூப ஆனந்தமயகோசமே ஆத்மா. இந்த மதம் சரியன்று. ஏனெனில் சூன்யம் சாக்ஷிசகிதமாயிருக்கிறதா? அல்லது சா

318. **பிரபாகரநையாயிகமதம்:—** பூர்வமீமாம்சகர்களைச் சேர்ந்த **பிரபாகரநையாயிகர்கள்** சொல்லுகிறதாவது:— ஆத்மா சூன்யரூபமன்று. ஏனெனில் ஆத்மாவைச்சூன்யரூபமாகச்சொல்லுகிறவனைக்கேட்கவேண்டியதென்னவெனில் சூன்யரூபத்தை நீ அநுபவித்திருக்கிறாயா இல்லையா? அநுபவிக்கவில்லையென்று சொல்லும்பக்ஷத்தில் சூன்யமில்லையென்று சித்திக்கிறது. அநுபவித்ததாகச்சொல்லும்பக்ஷத்தில் எதினால் சூன்யம் அநுபவிக்கப்படுகிறதோ அதுவே ஆத்மா. அது சூன்யத்துக்கு விலக்ஷணமென்று சித்திக்கிறது. சூன்யத்துக்கு விலக்ஷணமான ஆத்மாவினிடத்தில் மனதின் ஸம்யோகத்தினால் ஞானமுண்டாகிறது. ஞானகுணத்தால் ஆத்மா சேதனமென்று சொல்லப்படுகிறது. ஸ்வபாவத்தில் ஆத்மா ஜடம். சுகம் துக்கம் இச்சை, துவேஷம், பிரயத்தனம், தர்மம், அதர்மம் முதலிய குணங்கள் ஆத்மாவினிடத்திலிருக்கின்றன.

இவர்களுடைய மதத்திலும் ஆனந்தமயகோசமே ஆத்மாவென்றும் விஞ்ஞானமயகோசத்திலுள்ள புத்தி ஆத்மாவின் ஞானகுணமென்றும் சொல்லப்படுகின்றன. ஏனெனில் ஆனந்தமயகோசத்தில் சேதனம் கூடமாயிருக்கிறது, விவேகமில்லாதவனுக்குத்தோன்றுகிறதில்லை. பிரபாகரநையாயிகர்கள் சுஷுப்தியில் ஆத்மாவுக்கு ஞானமில்லாததாக நினைத்து ஸ்வரூபத்தில் அது ஜடமென்று சொல்லுகிறார்கள். ஆகையால் கூடசேதனத்துடன் கூடிய ஆனந்தமயகோசத்திலேயே அவர்களுக்கு ஆத்மப்பிராந்தியுண்டாகிறது. மேலும் ஆத்மஸ்வரூபமான நித்தியஞானம் ஜீவனிடத்திலில்லை யென்றும் ஆனால் அநித்தியஞானமிருக்கிறதென்றும் நினைக்கிறார்கள். இந்த அநித்தியஞானம் சித்தாந்தத்தில் அந்தக்கரணத்தின்

---

ஸாக்ஷிரகிதமாயிருக்கிறதா? அல்லது ஸ்வப்பிரகாசமா. சாக்ஷீ இருந்தால் சூன்யத்துக்கு வேறான சாக்ஷியே ஆத்மா. சாக்ஷீரகிதமாயிருந்தால் சூன்யமே அசித்தம். சூன்யம் ஸ்வப்பிரகாசமென்றுசொன்னால் நம்முடைய பிர்ம்மத்துக்கு அது வேறு ஒரு பெயராகும். சூன்யமில்லாமற்போகும். "அஸதாஸீத்" என்கிற சுருதிக்குச்சூன்யமிருந்ததாக அபிப்பிராயமன்று. ஆனால் நையாயிகர் முதலியவர்கள் ஜகத்துக்குப்பிராகபாவம் காரணமென்று சொல்லுகிறார்கள். இப்படி விபரீதமாய்க்கிரகிப்பதை நிவர்த்திக்கத்தான் சுருதி பிறந்திருக்கிறது. பௌத்தர்களில் 4 விதம்:— (1) மாத்தியமிகசூன்னியவாதி (2) க்ஷணிகவிஞ்ஞானவாதியாகியயோகாசாரியன் (3) பாஹ்யபதார்த்தத்தை அநுமானத்தால் அறியப்பட்டவனை சௌத்திராந்திகன் (4) பாஹியபதார்த்தத்தை பிரத்தியக்ஷமாய் அறிகிறவனை வைசேஷிகன்.

விர்த்தியாகிய புத்திரூபமாயிருக்கிறது. இவ்விதமாக பிரபாகரநையாயிகமதத்தில்[30] ஆனந்தமயகோசம் ஆத்மாவாயும் புத்தி அதன்குணமாயுமிருக்கின்றன.

319. இந்தமதத்தின் **கண்டனம்**:— மேற்சொல்லிய மதமும் சரியன்று. ஏனெனில் ஞானத்துக்குவேறான ஜடவஸ்துக்களாகிற கடாதிகள் அநித்தியமாயிருக்கின்றன. ஆத்மாவும் ஞானஸ்வரூபமாகாவிட்டால் கடாதிகள் போல் ஜடமாகிறதினால் அநித்தியமாய்விடும். ஆத்மா அநித்தியமானால் மோக்ஷநிமித்தியமாயேற்பட்ட சாதனங்கள் நிஷ்பிரயோசனமாய்விடும். இவ்விதமாக வேதாந்தவாக்கியத்தில் விசுவாசமில்லாத அனேகப்பகிர்முகபுருஷர்கள் பஞ்சகோசங்களிலேயே ஒன்றை ஆத்மாவாகநினைத்து முக்கியமான ஆத்மஸ்வரூபமான சாக்ஷியை அறிகிறதில்லை. ஆனதால் அன்னமயாதி கோசங்கள் ஆத்மாவை மறைப்பதால் கோசங்களென்று சொல்லப்படுகின்றன.

320. ஜீவனுடைய பஞ்சகோசங்கள் ஜீவனுடைய யதார்த்தஸ்வரூபமான சாக்ஷியை மறைக்கிறது போல் ஈஸ்வரனுடைய பஞ்சகோசங்களும் ஈஸ்வரனுடைய யதார்த்த ஸ்வரூபத்தை மறைக்கின்றன[31]; ஏனெனில் ஈஸ்வரனுடைய யதார்த்தஸ்வரூபம் தத்பத லக்ஷியம். இதைவிட்டு மாயாரூபமான ஆனந்தமய கோசத்துடன் கூடிய அந்தரியாமியாகிற தத்பத வாச்சியத்தை பரமதத்துவமாகச் சிலர் சொல்லுகிறார்கள். இப்படியே ஹிரண்யகர்ப்பன், வைசுவாநரன், விஷ்ணு, பிரமன், சிவன், கணேசன், தேவி, சூரியன்முதல் அஸி, பனை, முள்ளிலவை, எருக்கு, மூங்கில்வரையிலுள்ள பதார்த்தங்களிலும் பரமாத்மபிராந்தியை யடைகிறார்கள். சகலபதார்த்தங்களிலுமுள்ள லக்ஷியபாகம் பரமாத்மாவுக்கு வேறாகாவிட்

30. **நையாயிகமதம்**:— ஆத்மாஜடம். ஏனெனில் சுஷுப்தியில் ஞானமில்லாமலிருப்பதால் ஆத்மா ஜடந்தான். இது சரியன்று. ஏனெனில் "நான் சுகமாய்த்தூங்கினேன், ஒன்றும் அறியவில்லை" என்கிற அனுபவத்தால் முன்சொன்னது பாதிக்கப்பட்டுப்போகிறது. ஆத்மா ஜடமானால் சுஷுப்தியிலுள்ள ஆனந்தத்தின் ஸ்மரணையுண்டாகக்கூடாது. உண்டாகிறபடியால் ஆத்மா ஜடமன்று.

31. ஜீவனுடைய கோசங்கள் ஜீவனுடைய நிஜரூபமான பிரத்தியகாத்மாவை ஜீவனுடைய திர்ஷ்டிக்கு மறைப்பதுபோல் ஈஸ்வரனுடைய கோசங்கள் ஈஸ்வரனுடைய நிஜரூபத்தை ஈஸ்வரதிர்ஷ்டிக்கு மறைக்கிறதில்லை. ஏனெனில் ஈஸ்வரன் ஆவரணரகிதன். ஆகையால் சமஷ்டி பஞ்சகோசங்களினின்றும் பிரம்மஸ்வரூபத்தை ஜீவனே விவேசனம்பண்ணவேண்டியது.

டாதும் உபாதியுடன் கூடினதைப்பரமாத்மாவாக நினைக்கிறவனுக்குப்பி ராந்தியுண்டாகிறது. பஞ்சகோசங்களால் மூடப்பட்ட ஜீவேஸ்வரர்களுடைய பரமாத்மஸ்வரூபத்தையறியாமல் தேகாதிகளிடத்தில் ஆத்மப்பிராந்தியடைந்து புண்ணியபாவங்களைச்செய்கிறார்கள். அந்தரியாமி முதல் ஸ்தம்பபரியந்தமுள்ளவைகளை ஈசுவரரூபமாக நினைத்து ஆராதனையால் சுத்தத்தையடைய இச்சிக்கிறார்கள். உபாதியின் ஆராதனைக்குத்தக்கபடிப்பலன் சித்திக்கிறது. ஏனெனில் காரணசூக்ஷ்மஸ்தூலப்பிரபஞ்சங்களெல்லாம் ஈஸ்வரனுடைய சரீரத்தில் அந்தர்ப்பூதமாயிருக்கின்றன. அவைகளின் உபாஸனைக்குத்தக்கபடிப்பலனும் எல்லாருக்குமுண்டாகிறது. ஆனால் பிரம்மஞானமன்றியில் மோக்ஷமுண்டாகிறதில்லை. மோக்ஷத்தை யிச்சிக்கிறவன் விவேகத்தினால்[32] ஜீவேஸ்வரஸ்வரூபங்களைப்பஞ்சகோசங்களினின்றும் வேறுபடுத்தவேண்டியது. முஞ்சிப்புல்லினின்று அதின் மத்தியிலுள்ள இஷீயென்னும்பொருளை யுக்தியால் வேறுபடுத்துவது போலும்.

321. விவேசனவிதம்:[33]— சொப்பனாவஸ்தையில் ஸ்தூல தேகம் விளங்குகிறதில்லை. ஆனால் ஆத்மா விளங்குகிறது. இப்படியே

---

32. ஆத்மாவுக்குச்சத்து, சித்து, ஆனந்தம், அத்வயம் இந்நான்கும் விசேஷணங்களாம். தேகாதிகளுக்கு அசத்து, ஜடம், துக்கம், த்வயம் விசேஷணங்களாம். இவைகளில் ஆத்மாவின் சச்சித்ரூபங்கள் தேகாதிகளின் அசத் ஜடரூபங்களை மறைக்கின்றன. ஆகையால் தேகாதிகள் சத்சித்ரூபங்கள்போல் பிரதீதியாகின்றன. தேகாதிகளின் துக்கத்துவயரூபங்கள் ஆத்மாவின் ஆனந்தரூபத்தையும் அத்வயரூபத்தையும் மறைக்கின்றன. அதினால் ஆத்மா துக்கியாயும் த்வயமாயும் பிரதீதியாகிறது. இவ்விதமாக ஆத்மாவுக்கும் பஞ்சகோசங்களுக்கும் பரஸ்பரஅத்தியாசமிருக்கிறது. ஆகையால் முமுக்ஷுவானவன் பஞ்சகோசவிவேசனம் அவசியஞ்செய்யவேண்டியது.

33. ஸ்தூலதேகவிவேசனம்:— ஸ்தூலதேகம் ஜனிப்பதற்கு முன்னும் மரிப்பதற்குப்பின்னும் ஏகமாய் ஆத்மா இருப்பதினால் கடத்தைக்காட்டிலும் ஆகாசம் வேறாயிருப்பதுபோல் ஆத்மா ஸ்தூலதேகத்தைக்காட்டிலும் வேறாயிருக்கிறது, அவ்வியபசாரியாயுமிருக்கிறது. கடம்போல் தேகம் உற்பத்திக்கு முன்னும் மரணத்துக்குப்பின்னும் இல்லாததினாலும் அநேகமாயிருப்பதாலும் ஆத்மாவைக்காட்டிலும் தேகம் வேறாயிருக்கிறது, வியபசாரியாயுமிருக்கிறது. எது அதிகதேசத்திலும் அதிககாலத்திலும் இருக்கிறதோ அது அவ்வியபசாரியென்னப்படும். எல்லா சரீரங்களிலுமுள்ள ஆத்மா ஒன்றாகவிருப்பதினால் ஆகாசம்போல் வியாபகமாயிருக்கிறது. ஆகையால் எல்லாவிடங்களிலும் அது இருக்கிறது. மேலும் தேகங்களினுற்பத்திக்கு முன்னும் மரணத்துக்குப்பின்னு

சுஷுப்தியவஸ்தையில் சூக்ஷ்மசரீரம் அறியப்படுகிறதில்லை. ஆனால் சுக ஸ்வரூபமான ஆத்மா ஸ்வயம்பிரகாசத்தால் விளங்குகிறது. சுஷுப்தியில் சுகஞானமில்லாத பக்ஷத்தில் நான் சுகமாய்த்தூங்கினேனென்னும் ஸ்மரணை விழித்தபின் உண்டாகக்கூடாது. அப்படி யுண்டாவதால் சுஷுப்தியில் சுகத்தின் ஞானம் இருந்துக்கொண்டே யிருக்கிறது. இந்தச்சுஷுப்திசுகம் விஷயத்தாலுண்டானதன்று. அது ஆத்மச்சொரூபமே. இந்த ஆத்மா ஸ்வயம் பிரகாசமாயிருக்கிறது. ஆகையால் சுகஸ்வரூபமான ஆத்மா ஸ்வயம் பிரகாசரூபத்தால் சுஷுப்தியில் விளங்குகிறது. மேலும் நிதித்தியாஸனத்தின் பலமாகிற நிர்விகல்பச் சமாதியவஸ்தையில் அஞ்ஞானத்தால் செய்யப்பட்ட ஆவரணமன்றியில் ஆத்மாவிளங்குகிறது. காரணசரீரமாகிற அஞ்ஞானம் விளங்குகிறதில்லை. இப்படி மூனறுதேகங்களும் வியபசரிக்கின்றன; ஓரவஸ்தையை விட்டு வேறோரவஸ்தையில் விளங்குகிறதில்லை. ஆத்மா அநுகதமாக விருந்து சகல அவஸ்தைகளிலும் விளங்குகிறது, ஆகையால் வியாபகமாயிருக்கிறது. இந்த விவேகத்தால் மூன்று சரீரங்களுக்கும் வேறாக ஆத்மாவை யறியவேண்டியது. ஸ்தூலசரீரம் அன்னமயகோசம். காரணசரீரம் ஆனந்தமயகோசம். சூக்ஷ்மசரீரத்தில் பிராணமயம், மனோமயம் விஞ்ஞானமயம் என்னும் மூன்று கோசங்களிருக்கின்றன. ஆகையால் மூன்று சரீரங்களின் விவேகத்தால் பஞ்சகோசங்களின் விவேகமுமுண்டாகிறது. ஜீவனுடைய ஸ்வரூபம் பஞ்சகோசங்களுக்கும் வேறாயிருப்பதுபோல் ஈஸ்வரனுடைய ஸ்வரூபமும் சமஷ்டிப் பஞ்சகோசங்களுக்கும் வேறாகயிருக்கிறது. நான்காவது தரங்கத்தில் நாலுவித ஆகாசத்திருஷ்டாந்தத்தால் ஜீவேஸ்வரர்களுடைய லக்ஷ்யஸ்வரூபம் விஸ்தாரமாக வியுவகரிக்கப்பட்டிருக்கிறது. மேலேவரு

---

ம் ஆத்மா இருப்பதால் அது முக்காலங்களிலும் பாதிக்கப்படாமலிருக்கிறது. ஆகையால் சர்வகாலமும் அது இருக்கிறது. சர்வதேசகாலங்களிலுமிருப்பதால் ஆத்மா அவ்வியபசாரி. எந்த வஸ்து சொற்பதேசத்திலும் சொற்பகாலத்திலும் இருக்கிறதோ அது வியபசாரியென்னப்படும். கடம்போல் தேகமும் பரிச்சின்னமாய்ச்சொற்பவிடத்திலிருக்கிறது. உற்பத்திநாசங்களோடுகூடியிருப்பதால் அது சர்வகாலமுமில்லாமல் சொற்பகாலமிருக்கிறது. சொற்பதேசத்திலும் காலத்திலுமிருப்பதால் தேகம் வியபசாரி. ஆத்மாவும் தேகமும் முறையே அவ்வியபசாரியாயும் வியபசாரியாயுமிருப்பதால் இரண்டுக்கும் பேதஞ்சித்திக்கிறது. ஆகையால் நான் ஸ்தூலதேகமன்று, தேகம் என்னுடையதன்று. ஆனால் பஞ்சமகாபூதங்களுடையது. நான் ஸ்தூலதேசமில்லாததினால் ஸ்தூலதேகத்துக்குச்சொல்லப்பட்ட நாமம், ஜாதி, ஆசிரமம், நிறம், ஆகாரம் முதலிய தர்மங்கள் நான் அன்று. அவைகளும் என்னுடையவையல்ல. இது ஸ்தூலதேகவிவேசனமாம்.

ம் ஆருவதுதரங்கத்தால் அஸ்தி பாதி பிரியரூப நிரூபணையிலும் மகாவாக்கியார்த்த நிரூபணையிலும் ஆத்மாவின் பரமார்த்தஸ்வரூபம பிரதிபாதிக்கப்படும். ஆனதால் இவ்விடத்தில் சுருக்கமாக ஆத்மவிவேசனம் செய்யப்பட்டது.

## III மகாவாக்கியார்த்தஉபதேசம் (321—368)

322. இவ்விதமாகப் பஞ்சகோசங்களினின்றும் ஆத்மாவைவேறாக அறிந்தும் கிருதகிர்த்தியனுகச் சிஷனுகவில்லை. ஆகையால் ஜீவப்பிர்ம்மங்களுடைய அபேதத்தை நிச்சயிப்பதற்காக மறுபடியும் விசாரஞ்செய்யவேண்டியது.' ஆகையால் கிருதகிர்த்தியத்தின் சித்தியின் பொருட்டு மகாவாக்கியார்த்தத்தை யுபதேசிக்கிறேன்.

உபதேசம்:— பஞ்சகோசங்களைக்காட்டிலும் ஆத்மா வேறு. அது பிர்ம்மஸ்வரூபமென்றறி. கேட்டது பார்த்த தெல்லாம் மித்தையென்றறி. மித்தையான வஸ்து அதிஷ்டானத்துக்கு வேறாயிராதில்லை. சொப்பனத்தில் பிச்சைவாங்கும் ராஜா தரித்திரனுகான். சகலத்துக்கும் நீ கர்த்தாவாயினும் அகர்த்தாவே. இப்பெயர்பட்ட உன்னுடைய ஆச்சரியமான ஒப்பில்லாத பிரம்மஸ்வரூபத்தையறிவாயாக.

323. கேள்வி:— பஞ்சகோசங்களுக்கு வேருகவும் பிர்ம்மஸ்வரூபமாகவும் ஆத்மா இருப்பதாக அறிவதி லொருசங்கை. ஆத்மா புண்ணியபாபங்களைச்செய்து ஸ்வர்க்க நரக பூலோகங்களில் அநேகவிதச் சுகதுக்கங்களை யனுபவிக்கிறது. ஆத்மாவுக்கும் பிர்ம்மத்துக்கும் ஏகத்துவஞ் சொல்வது சரியன்று.

---

சூக்ஷ்மதேகவிவேசனம்:— மரணம் மூர்ச்சை சுஷுப்தி பிரளயம் ஞானம் இவ்வைந்து அவஸ்தைகளில் லிங்கதேகம் அதின் காரணமான அஞ்ஞானத்தில் லயமாகிறது. ஆகையால் வியபசரிக்கிறது. ஆதலால் அசத்தாயிருக்கின்றது. ஆத்மா சர்வகாலங்களிலும் பிரகாசித்துக்கொண்டிருப்பதால அவ்வியப்சாரியாயிருக்கிறது. ஆகையால் சத்ரூபமாயிருக்கிறது. ஆத்மாசத்ரூபமாயிருப்பதால் அது லிங்க தேகமன்று. லிங்கதேகமும் ஆத்மாவினதன்று. அது அபஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களின் காரியம். நான் லிங்கதேகம் அல்லாததினுல்கர்த்ருத்வம் போக்த்ருத்வம் சுகம் துக்கம் முதலிய லிங்கதேகத்தின் தர்மங்கள் நான் அன்று. அவைகளும் என்னுடையவையல்ல. இவைகளையெல்லாம் அறியப்பட்ட நான் இவைகளுக்கு வேருயிருக்கிறேன்.

காரணதேகவிவேசனம்:— காரணதேகம் அஞ்ஞானம். இது நான் அன்று. என்னுடையதுமன்று காரணசரீரத்தின் தர்மங்களாகிய ஆவரண விக்ஷேபங்களும் நான் அன்று. அவைகளும் என்னுடையவையல்ல. இவைகளை யறியப்பட்ட நான் இவைகளுக்கு வேருக இருக்கிறேன்.

324. **உத்தரம்**:—பிர்ம்மரூப ஆத்மாவுக்குவேருகச் சாஸ்திரத்தில் காணப்படுவனவும் கேட்கப்படுவனவுமான ஸ்வர்க்கநரக புண்ணிய பாபாதிகளெல்லாம் மித்யாப்பிரமை யென்றறி. மித்தியாவஸ்து அதிஷ்டானத்தை வேற்றுமைப்படுத்துகிறதில்லை. சொப்பனத்தில் பிச்சைவாங்கும் அரசன் தரித்திரனாகிறதில்லை. கானல்ஜலத்திணல் பூமி நனைகிறதில்லை. பொய்யான சர்ப்பத்தால் ரஜ்ஜு விஷசஹிதமாகிறதில்லை. ஆனதால் சமஸ்தப்பொய்யாகிற சுபாசுப கர்மங்களைச்செய்கிறவனுமுண்மையில் கர்த்தாவன்று. இப்பெயர்ப்பட்ட உன்னுடைய ஆச்சரியமான ஒப்பில்லாத ஸ்வரூபத்தையறி. இதற்கு பாவமென்னவெனில் பிர்ம்மத்துக்குவேருயிராத உன்னுடைய ஸ்வரூபத்தில் ஸ்தூலசூக்ஷ்ம சரீரங்கள் இவைகளின் பலமாகிற ஜன்மம் மரணம் ஸ்வர்க்கம் நரகம் சுகம் துக்கம இவைகளெல்லாம் அவித்தையால் கல்பிக்கப்படுகின்றன. உன்னுடைய பிர்ம்மபாவம் இந்தக்கல்பித பதார்த்தங்களால் வேறுபடுகிறதில்லை. ஞானத்துக்கு முன்னும் ஆத்மா பிர்மமரூபமாகவே யிருக்கிறது. ஆத்மாவினிடத்தில் மூன்று காலங்களிலும் சரீரம் சரீரத்தின் தர்மம இவைகளின் சம்பந்தமில்லை; ஆனால் ஆத்மா எப்போதும் நித்யமுக்தனாயிருக்கிறது. இதற்கும் பிர்ம்மத்துக்கும் ஒருக்காலும் பேதமில்லை.

325. **சிரவணபலன்**:— ஆத்மா எப்போதும் நித்தியமுக்தப் பிர்ம்மஸ்வரூபமாயிருக்கும்பக்ஷத்தில் ஞானசாதனங்களாகிற சிரவணாதிகள் வீணாகுமென்று செய்யும் ஆக்ஷேபத்துக்குச் சமாதானம். ஜீவன்முக்த வித்துவானுடைய திருஷ்டியில் அஞ்ஞானமும் அதின்காரியமும் துச்சமாயிருக்கின்றன. ஜீவன்முக்தனுடைய நிச்சயத்தைச் சொல்லுகிறேன். சிஷனே, இந்தப் பிரபஞ்சம் ஆகாசபுஷ்பம்போல் இருக்கவில்லை. ஆன

---

ஜாக்கிராவஸ்தை:— அவஸ்தை யென்ருல் காலம். ஸ்வப்பன சுஷுப்தியவஸ்தைகளுக்கு வேருயும் இந்திரியஜன்ய ஞானத்துக்கும் அதின் ஸம்ஸ்காரத்துக்கும் ஆதாரமாயு மிருக்குங்காலம் ஜாக்கிராவஸ்தை யென்னப்படும். இதில் 14 திரிபுடிகளால் (346) வியவகாரஞ் சித்திக்கிறது. இந்த அவஸ்தையின் சாமக்கிரிகளாவன:— (1) சிதாபாசரூப ஜீவனுக்கு நேத்திரம் ஸ்தானம். சரீரம் முழுமையும் ஜீவன் வியாபித்திருந்தாலும் நேத்திரம் முக்கியமான ஸ்தானமாயிருப்பதால் அதுவே ஸ்தானமென்று சொல்லப்படுகிறது. (2) கிரியா சக்தி. (3) வைகிரி வாணி. (4) போகம் ஸ்தூலம். (5) குணம் சத்துவம. (6) பெயர் விசுவன். சொப்பன சுஷுப்தியவஸ்தைகளில் ஜாக்கிரதாவஸ்தை யில்லை. இவைகளுக்குச் சாக்ஷியான ஆத்மா மூன்றவஸ்தைகளிலுமிருக்கிறது., ஆகையால் ஆத்மா ஜாக்கிராவஸ்தையைக் காட்டிலும் வேருகயிருக்கிறது.

தால் அதன் கர்த்தாவாய ஈஸ்வரனும் இருக்கவில்லை. சாக்ஷிக்கு விஷயமான அஞ்ஞானத்தின் சாக்ஷியமென்று சொல்லப்படுகின்றன. சாக்ஷியமில்லாததினால் சாக்ஷியுமில்லை. திரிசியத்தைப் பிரகாசிப்பிக்கிறது திருக்கென்னப்படும். பிரகாசிப்பிக்கப்படுகிற தேகாதிகள் திரிசியமென்னப்படும். தேகாதி திரிசியமில்லாததினால் திருக்குமில்லை. கேவலம் கூடஸ்தசேதனத்தைச் சாக்ஷியென்றும் திருக்கென்றும் சொன்னாலும், இவைகளைத் தள்ளக்கூடாவிட்டாலும் சாக்ஷியத்தை யபேக்ஷித்துச் சாக்ஷீ யென்கிற பெயருந் திரிசியத்தை யபேக்ஷித்துத் திருக்கென்கிற பெயருமவிளங்குகின்றன. ஆகையால் சாக்ஷீ திருக்கென்னும் பெயர்கள நிஷேதிக்கப்பட்டாலும் ஸ்வரூபம் நிஷேதிக்கப்படமாட்டாது. பந்தமிருக்கும்பக்ஷத்தில் பந்த நிவிர்த்திரூபமான மோக்ஷமிருக்கக்கூடும். பந்தமுமில்லை மோக்ஷமுமில்லை. அஞ்ஞான மிருக்கும்பக்ஷத்தில் அது ஞானத்தால் நாசமாகக்கூடும். அஞ்ஞானமில்லாததினால் அதை நாசஞ்செய்கிற ஞானமுமில்லை. இவைகளையறிந்து கர்த்தவ்வியத்தை விடவேண்டியது, அதாவது நான் இதைச் செய்யவேண்டும், என்கிற புத்தியை விடவேண்டியது. ஏனெனில் இந்த லோகம அப்படியே பரலோகம் இவைகள் துச்சமாயிருக்கின்றன. இவைகளின்பொருட்டுச் செய்யவேண்டியது யாதொன்றுமில்லை. ஆத்மாவினிடத்தில் பந்தமில்லை. ஆகையால் மோக்ஷத்தின்பொருட்டும் செய்யவேண்டியதொன்றுமில்லை. இவ்விதமாக ஆத்மாவை நித்தியமுக்தப் பிர்ம்மரூபமாக அறிந்து நிச்சலமாகி எப்போது செய்யவேண்டியவையெல்லாம் விடுவாயோ அப்போது அக்கிரியப்பிர்ம்மஸ்வரூபமாகிற விதேக மோக்ஷத்தை அடைவாய். இதற்கு அபிப்பிராயமென்னவெனில் ஞானத்துக்கு முன் ஆத்மா நித்திய முக்தப்பிர்ம்மஸ்வரூபமாகவேயிருந்தாலும், ஞானத்துக்குமுன் ஆத்மாவைக் கர்த்தாபோக்தாவாக நினைத்துச் சுகப்பிராப்தி துக்கநிவர்த்தியின்பொருட்டு ஒருவன அனேக சாதனங்களைத்தேடுகிறான், அவைகளால் துக்கத்தையுமடைகிறான். உத்தமமான ஆசாரியரையடையும்போது வேதாந்தவாக்கியவுபதேசத்தைப் பெற்று அவ்வாக்கியத்தைக் கேட்கிறதினால் ' நான் கர்த்தா போக்தாவன்று' நான் பிர்ம்ம

---

சொப்பனவஸ்தை:— எந்த அவஸ்தையில் இந்திரியங்களின் சகாயமன்றியில் ஹிதாவென்னும் நாடியில்தங்கியிருக்கிற ஜாக்கிரஸம்ஸ்காரத்தால் விஷயங்கள் அறியப்படுகின்றனவோ அது சொப்பனவஸ்தையாம். சொப்பனவஸ்தையில் சிதாபாஸரூபஜீவனுக்கு (1). ஸ்தானம் கண்டம். (2) சக்திஞானம் (3) மத்தியமா வாணி. (4) போகம் சூக்ஷ்மம். (5) குணம் ராஜஸம் (6) பெயர் தைஜஸன். இவைகள் சொப்பன சாமக்கிரிகளாம். ஜாக்கிர சுஷுப்தியவஸ்தைகளில் சொப்பன மில்லை. ஆத்மா மூன்று அவஸ்தைகளுக்

ஸ்வரூபம், ஆனகால் நான் யாதொன்றும் செய்யவேண்டியதில்லை'' இப்படிப்பட்ட ஞானமுண்டாகிறது. இப்படியறிவதே சிரவணாதிகளின் பலன். பிர்மத்தையடைவது வேதாந்தச்சிரவணத்தின் பலனன்று. ஏனெனில் பிர்மம் தன்ஸ்வருபமானதால் எப்போதும் அடையப்பட்டேயிருக்கிறது.

326. ஞானி அஞ்ஞானிகளின் சின்னம்:— எவன் கர்த்தவ்வியமிருக்கிறதாக நினைக்கிறானோ அவன் அஞ்ஞானி. எவன் வேறுருபமாவதற்குஇச்சிக்கவில்லையோ அவன்ஞானி.

327. இரகசியதத்துவஉபதேசம்:— ஏகமாயும் அகண்டமாயும் அசங்கமாயும ஜனனமன்றியிலும் அக்ரியமாயும் நாமரூபங்களன்றியிலுமிருப்பது பிர்மம். அதனிடத்தில் மூலஅஞ்ஞானமில்லை. சூக்ஷ்மஸ்தூலங்களில்லை, சமஷ்டி வியஷ்டிகளில்லை, ஈசனில்லை, சூத்ரனில்லை, விராட்டில்லை பிராஞ்ஞனில்லை, தைஜஸனில்லை, விசுவனில்லை, போகமில்லை, யோகமில்லை, பந்தமில்லை, மோக்ஷமில்லை, ஒன்றும் அதனிடத்திலில்லை. எல்லாம் தன்னிடத்திலுண்டு. ஜாக்கிரதகாலத்தில் விளங்குகிற பிரபஞ்சமெல்லாம் புத்தியால் விளங்குகிறது. சொப்பனத்தில், அனுபவிக்கும்படியான போகங்களில்லாமலிருந்தும் புத்தியால் விசித்திரமாய்க் கல்பிக்கப்படுகின்றன. இந்தப்புத்தி சுஷுப்தியில் லயமடைந்து பேதங்களற்று ஓரேசின்மாத்திரையாகவிளங்குகிறது. புத்தியால்கல்பிக்கப்படுவதெல்லாம் மனதிலேயேயிருக்கிறது. பிர்மம் புத்தியைப்பிரகாசிப்பிக்கிறது. எவனுடைய இருதயத்தில் ஞானப்பிரகாசமுண்டாகிறதோ அவன் இருதயத்தைவிட்டு அஞ்ஞானமென்னுமிருள் சுத்தமாய்ப்போய்விடுகிறது. அவன் எப்போதும் அசங்கமாயும் ஏகரஸமாயும்

---

கும் சாக்ஷியாயிருப்பதால் ஆத்மா சொப்பனத்தைக்காட்டிலும் வேறாகயிருக்கிறது.

சுஷுப்தியவஸ்தை:— எந்த அவஸ்தையில் கேவலம் சுகமும் அஞ்ஞானமு முளவோ அது சுஷுப்தி யவஸ்தையாம். இதின் சாமக்கிரிகளாவன:— (1) இருதயம் ஸ்தானம். (2) சக்தி திரவிய ரூபம். கிரியாரூப ஞானரூப வியவகாரங்களில்லாமல் கேவலம் அஞ்ஞான ரூப திரவிய மிருப்பதால் இதுவே திரவிய சக்தி யென்று சொல்லப்படுகிறது. (3) பசியந்தீ வாணீ. (4) ஆனந்தம் போசம். (5) தமோகுணம். (6) அபிமானியின் பெயர் பிராஞ்ஞன். ஜாக்கிர சொப்பனங்களில் சுஷுப்தி இல்லை. ஆத்மா மூன்றவஸ்தைகளுக்குஞ் சாக்ஷியாயிருப்பதால் அது சுஷுப்தியைக்காட்டிலும் வேறாயிருக்கிறது.

சுயம்பிரகாசமாயுமிருக்கிற பிர்ம்மஸ்வரூபமாகிற ஆத்மாவாக இருக்கிருன். ஏறன் ஒன்றும் உண்டாகவில்லை. பின்னும் ஒன்றும் உண்டாகப்போகிறதில்லை. ஜகத்தெல்லாம் மனதினுல் கல்பிக்கப்பட்டது. அதையடையவாவது, நிவிர்த்திசெய்யவாவது ஞானி இச்சிக்கிறதில்லை. ஞானிக்கு யாதொரு ஆசையுமில்லை.[34] பார்க்கும்போது ஞானி பார்க்கிறதில்லை, கேட்கும்போது கேட்கிறதில்லை, சகலரஸங்களையும் ருசித்தும் ருசிக்காதவன், துவக்கால் தொட்டும் தொடாதவன், நல்ல வாசனையை மோந்தும் மோக்காதவன். பேசியும் பேசாதவன், கிரகித்தும் கிரகிக்காதவன், மலமோசனஞ்செய்துஞ்செய்யாதவன், நட

---

34. மேலே சொல்லியபடி பதார்த்தத்தைப் பார்க்கிறதில்லை. கேட்பதைக்கேட்கிறதில்லை. இவ்விஷயங்களைப் பகவத்கீதையின் 5-வது அத்தியாயத்தில் 7. 8. 9. வது சுலோகங்களில் சொல்லியிருப்பதை இவ்விடத்தில் முழுவதும் தெரிந்துகொள்ளும்பொருட்டு எழுதப்பட்டது.

(7) 'யோகயுக்தோ விசுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்திரிய: |
சர்வ பூதாத்ம பூதாத்மா குர்வன்னபி நலிப்யதே | .

இ—ள்:— கர்ம யோகத்துடனுவது அல்லது பிர்ம்ம நிஷ்டாரூபசந்நியாஸயோகத்துடனுவது கூடினவனும், இதினுல் ராகத்துவேஷாதிகளில்லாத பரிசுத்தமான மனதையுடையவனும் அதினுல் விஷயங்களுக்கு விமுகமான இந்திரியங்களை யுடையவனும் அதினுல் பாஹ்ய வாஸனுரூபஸ்வபாவத்தை ஜயித்தவனும் பிர்ம்மாதிஸ்தம்ப பரியந்தமுள்ள சகல பூதங்களிலுமுள்ள ஆத்மா தன்னுத்மாவுக்கு வேறல்லவென்று அறிந்தவனுமிருக்கிற பிர்ம்மவித்தானவன் சரீரசம்ரக்ஷணையின் பொருட்டு விதியை யனுசரித்தாவது அனுசரிக்காமலாவது எந்தகர்மத்தைச்செய்தாலும் அதின் பலத்தை யடைகிறதில்லை. அதாவது, கர்மத்தில் அகர்மபுத்தியால் யாதொரு சம்பந்தத்தையுமடைகிறதில்லை.

(8) நைவகிஞ்சித் கரோமீதி யுக்தோமன்யேத தத்வவித் | பச்யன் ஸ்ருண்வன் ஸ்ப்ருசன் ஜிக்ரன் அச்நன் கச்சன் ஸ்வபன் சுவஸன்.

(9) பிரலபன் விஸ்ருஜன் க்ருண்ணன் உன்மிஷன் நிமிஷன்னபி | இந்திரியாணீந்திரியார்த்தேஷு வர்த்தந்த இதி தாரயன் |

இ—ள். ஆத்ம ஸ்வரூப பாவத்தை யறிந்த பிர்ம்மவித்தானவன் தன்னுடைய கூடஸ்தத்தை அஸங்கதை உள்ளும் புறமும் நிரந்திருத்தல் இவைகளை யறிந்தவனுய் பார்த்தாலும் கேட்டாலும் தொட்டாலும் மோந்தாலும் புஜித்தாலும் நடந்தாலும் தூங்கினுலும் சுவாசம் விட்டாலும். பேசினுலும்

ந்தும் நடக்காதவன், யௌவன ஸ்திரீயையனுபவித்தும் நித்தியசன்னியாசி. சிஷனே இந்த ஆச்சரியத்தை நீ அறிவாயாக. இவைகளுக்கு அபிப்பிராயமென்னவெனில் இந்திரியங்கள் விஷயங்களில் பிரவேசிக்கின்றன. இவைகளிலெனக்குப்பற்றுதலில்லை. நான் இந்திரியமன்று, எனக்கு இந்திரியமில்லை. நான் சாக்ஷீ கூடஸ்தன், அசங்கன். இந்திரியம் விஷயத்தைத்தியாகஞ்செய்தாலும் அனுபவித்தாலும் எனக்கு

---

மல ஜலங்களை விஸர்ஜனஞ்செய்தாலும் கைகளாற் கொடுக்கல்வாங்கல் செய்தாலும் கண்களைமூடினாலும் துறந்தாலும்' அவன் இவைகளுக்குக் கர்த்தாவன்று சப்தாதி விஷயங்களில் இந்திரியங்கள் தான் பிரவிர்த்திக்கின்றன. இந்த நிச்சயத்தை பிர்ம்மவித்து எப்போதுந் தரிக்கிறான். இந்திரியங்கள் அவ்வவற்றின் காரியங்களைச் செய்கின்றன. ஞானீ அக்கிரியனாயிருப்பதால் யாதொன்றுஞ் செய்கிறதில்லை. சகல கிரியைகளுக்கும் சாக்ஷியாயிருக்கிறான். தேகேந்திரியாதி வியாபாரங்களில தான் தனது என்கிற பாவங்களை விட்டு வித்வான் ஒன்றிலும் சம்பந்தப்படாமலிருக்கிறான்.

'நான் அசங்கமாயும் அக்கிரியமாயுமிருக்கிற பிர்ம்மசேதனம்', என்கிற நிச்சயம் ஞானிக்கிருப்பதால் அவன் வாஸ்தவத்தில் யாதொருகிரியையுஞ் செய்கிறதில்லை. பிராரப்த பலத்தால் ஞானிக்குத் தேகேந்திரியாதிகளுடைய தரிசனாதி வியாபாரரூபக் கிரியைகள இருக்கின்றன. அவைகள் பிராரப்தபலத்தின் போகங்களாம். ஆனால் அந்த போகத்திலுள்ள திடமான இச்சை இந்திரியத்தாலுண்டானதல்ல. ஏனெனில் இந்திரியங்களுக்குத் தரிசனாதி வியாபாரங்கள்மட்டுந்தான் ஏற்பட்டிருக்கின்றன. மேலும் அந்த இச்சை ஆத்மாவினுடையது மன்று. ஏனெனில் ஆத்மா எப்போதும் நிர்விகாரம். பரிசேஷத்தில் விஷயங்களின் குணதோஷங்களை விசாரிக்கிறமனதிற்கு அனுகூல ஞானத்தால் இச்சையுண்டாகிறது. இந்த இச்சை ஞானியினுடைய அந்தக்கரணத்திலுண்டாகிறதில்லை. ஏனெனில் ஞானியின் அந்தக்கரணம் அந்தர்முகமாயிருக்கிறது. இச்சை கொஞ்சங்கூட இல்லாதபக்ஷத்தில் போஜனாதி சரீரத்துக்கு வேண்டிய வியாபாரங்களிலும் பிரவிர்த்தியுண்டாகாமற்போவதினால் ஞானிக்குப் பிராரப்த போகமும் உண்டாகமாட்டாது. ஈஸ்வரசங்கல்பமும் வியர்த்தமாய்ப் போகமாட்டாது. ஆயினும் பிராரப்தத்தாலுண்டாகும் இச்சை ஞானிக்குத் திடமாயிருக்கிறதில்லை. ஆனால் அவனுடைய திடமில்லாத இச்சை வஸ்வாதீனமாயிருப்பதினால் வறுத்தவித்தைபோல் துர்ப்பலமாயிருக்கின்றது, அதினால் தேகசம்ரக்ஷணைக்குக் காரணமான சாஸ்திரவிகித போகத்துக்கு ஹேதுவாயிருக்கிறது, வியசனத்தை யுண்டுபண்ணுகிறபோகத்துக்கு ஹேதுவாயிருக்கிறதில்லை. மேலும் விஷயம் சத்தியமென்கிற பிராந்தி ஞானிக்கில்லாதபடியினாலும் மித்தியாபுத்தியால் திடமானவைராக்கியமுண்டாகி

யாதொரு சம்பந்தமுமில்லை. இது ஞானியினுடைய நிச்சயம். ஞானி காரியங்களைச்செய்கிறதாகக்காணப்பட்டாலும் அவன் அகர்த்தா.

328. இவ்விதமாக ஆசாரியர் சிஷ்யனுக்கு ரஹஸியமான தத்துவத்தையுபதேசித்தும் சிஷன்முகம்[35] நன்றாய்ப்பிரசன்னமாகாததைக்கண்டு ஆசாரியர் அறிந்ததாவது சிஷன் கிருதார்த்தனாகவில்லை. கிருதார்த்தனாயிருந்தால் அவன் முகம் பிரசன்னமாயிருக்கும். ஆகையால் மறுபடியும் ஸ்தூலரீதியாக உபதேசிக்க லயசிந்தனையைச்[36] சொல்லுகிறேன். மண்காரியமான கடம் உள்ளும்புறமும் மண்ணாகவேயிருக்கிறது. ஆனதால் மண்காரியங்களெல்லாம் மண்ஸ்வரூபமாகவேயிருக்கின்றன. நுரை முதலிய ஜலகாரியங்களெல்லாம் ஜலஸ்வரூபமாகவேயிருக்கின்றன. இப்படியே எது எதின்காரியமோ அது அந்தக்காரணஸ்வரூபத்துக்கு வேறாகிறதில்லை. காரியம் காரணஸ்வரூபமாகவேயிருக்கிறது. சகலப்பிரபஞ்சத்துக்கும் மூலகாரணம் ஈசுவரன். ஆனதால சகலகாரியப்பிரபஞ்சமும் ஈஸ்வரஸ்வரூபத்துக்கு வேறில்லை. சகலப்பிரபஞ்சத்தின் ஸ்வரூபமும் ஈசுவரனே. அந்த ஈஸ்வரன் நான். இந்தப்பிரகாரம் லயசிந்தனையையறிந்து நீ சிந்தனைசெய்.

329. **லயசிந்தனையின் சுருக்கமானகிரமம்:—** ஸ்தூலப்பிர்ம்மாண்டமெல்லாம் பஞ்சீகிருதபூதகாரியம். எது பிருதிவியின் காரியமோ, அது பிருதிவிஸ்வரூபமாயிருக்கிறது, ஜலத்தின் காரியம் ஜலஸ்வரூபம். இவ்விதமாக எந்தப்பூதத்தின் காரியமெதுவோ அது அதன் ஸ்வரூபமாகவேயிருக்கிறது. இவ்விதமாக ஸ்தூலப்பிர்ம்மாண்டமெல்லாம பஞ்சீகிருதபூதஸ்வரூபம்.

---

றபடியினாலும் ஞானிக்குத் திடமான இச்சையுண்டாகிறதில்லை. கயிற்றின்பேரில் ஏறி விளையாடும் வித்தையாடியின் சித்தம் கயிற்றில் பதிந்திருப்பதுபோல் ஸ்வரூபத்தில் லயமடைந்த சித்தத்தையுடைய ஞானிக்கு விஷயபோகத்தில் திட இச்சை உண்டாகாது. ஒருக்கால் மனது விக்ஷேபத்தை யடைந்தாலும் விவேகத்தால் மனது சாந்தியை அடைகிறது.

35. இச்சித்த பதார்த்தம் கிடைத்தால் முகம் பிரசன்னமாகிறது. பிரகிருதத்தில் ஞானமூலமாக அவித்தியாநிவிர்த்தியும், பரமானந்தப் பிராப்தியும் சித்தித்திருந்தால் சிஷ்யனுடைய முகம் பிரசன்னமாயிருக்கும். அப்படியில்லாதபடியால் ஸ்வரூபானந்தத்தின் பிரதிபிம்பமுண்டாகவில்லை.

36. காரியத்தைக் காரணரூபமாக அறிந்து சிந்தனைசெய்தல் லயசிந்தனையாம்.

330. பஞ்சீகிருதபூதம் அபஞ்சீகிருதபூதகாரியம். ஆனதால் அது அபஞ்சீகிருதஸ்வரூபமாகவேயிருக்கிறது, வேறில்லை. அந்தக்கரணம் முதலிய சூக்ஷ்மசிருஷ்டியும் அபஞ்சீகிருத பூதகாரியமாயிருப்பதால் அபஞ்சீகிருதபூதஸ்வரூபமாகவேயிருக்கிறது. அந்தக்கரணம் சகலபூதங்களின் சத்துவகுணகாரியமானதால் சத்துவகுணஸ்வரூபமாயிருக்கிறது. பூதங்களின் ரஜோகுணும்சத்தின் காரியமானபிராணன் ரஜோகுணஸ்வரூபமாயிருக்கிறது. குதேந்திரியம் பிருதிவியின் ரஜோகுணும்சத்தின் காரியமானதால் அது பிருதிவியின் ரஜோகுணஸ்வரூபமாயிருக்கிறது. கிராணேந்திரியம் பிருதிவியின் சத்துவகுணகாரியமானதால் அது சத்துவகுணஸ்வரூபம். இப்படியேரஸனேந்திரியமும் உபஸ்தேந்திரியமும் ஜலத்தின் சத்துவகுணரஜோகுணஸ்வரூபங்கள். நேத்திரமும் பாதமும்தேஜஸின் சத்துவகுணரஜோகுணஸ்வரூபங்கள். துவக்கும் பாணியும் வாயுவின் சத்துவகுணரஜோகுணஸ்வரூபங்கள். சுரோத்திரமும் வாக்கும் ஆகாசத்தின் சத்துவகுணரஜோகுணஸ்வரூபங்கள். இவ்விதமாகச்சூக்ஷ்மசிருஷ்டியெல்லாம் அபஞ்சீகிருதபூதஸ்வரூபமாக இருக்கிறது.

331 இப்படிச் சிந்தனைசெய்து அபஞ்சீகிருதபூதங்களுடையவும் லயசிந்தனை செய்யவேண்டியது. பிருதிவி ஜலத்தின் காரியமாகையால் ஜலஸ்வரூபமாயிருக்கிறது. தேஜஸின் காரியமான ஜலம் தேஜஸ்ஸ்வரூபம். தேஜஸ் வாயுவின் காரியமானதால் வாயுஸ்வரூபம். ஆகாசத்தின் காரியமான வாயு ஆகாசஸ்வரூபம். தமோகுணப்பிரதானமான பிரகிருதியின் காரியமாகிற ஆகாசம் பிரகிருதிஸ்வரூபம்.

332. பிரகிருதிமாயையின் அவஸ்தா விசேஷம். ஆகையால் பிரகிருதிமாயாஸ்வரூபம். ஒரேவஸ்துவுக்குப் **பிரதானம் பிரகிருதி மாயை அவித்தை அஞ்ஞானம்** என்னும் நாமபேதங்களுண்டு. இவைகளில் சகலகாரியங்களையும் தன்னிடத்தில் லயப்படுத்திப் பிரளயகாலத்தில் இருக்கிற உதாசீனஸ்வரூபத்துக்குப் பிரதானமென்று பெயர். சிருஷ்டியின் உபாதான காரணமான, தமோகுணப் பிரதானஸ்வரூபத்துக்குப் **பிரகிருதி**[37] யென்று பெயர். தேசகாலாதி சாமக்கிரிகளன்றியில் இந்திரஜாலத்தால் துர்க்கடபதார்த்தங்களுண்டாகின்றன. இதுபோல அசங்க அத்துவிதீயப் பிரம்மத்தில் இச்சாதிகள் துர்க்கடமாயிருக்கின்றன. அவைகளிருப்பதாகச் செய்வதால் **மாயை** யென்றுசொல்லப்படும். ஸ்வரூபத்தை மறைப்பதால் **அஞ்ஞான** மென்று சொல்லப்ப

---

37. 'பிர' என்றால் சத்துவகுணம். 'கிரு' என்றால் ரஜோகுணம். 'தி' யென்றால் தமோகுணம். ஆகையால் சத்துவகுண ரஜோகுணங்களுடன் கூடின தமோகுணப் பிரதான ஸ்வரூபம் பிரகிருதியாம்.

டும். பிரம்மவித்தையால் நாசமடைவதால் அவித்தை யென்று சொல்லப்படும். சுதந்திரமாக ஒருகாலத்திலு மில்லாமல் சேதனத்தை யாசிரயித்துக் கொண்டே யிருப்பதால் சக்தி யென்றுஞ் சொல்லப்படும். இவ்விதமாகப் பிரகிருதி முதலியவைகள் பிரதானத்தின் பேதங்களானதால் பிரதான ஸ்வரூபமாகவே யிருக்கின்றன.

333. இந்தபிரதானம் பிர்ம்மசேதனத்தின் சக்தியாயிருக்கிறது. புருஷனிடத்திலுள்ள சாமர்த்தியரூப சக்தி புருஷனை விட்டு வேறாயிராததுபோல் சேதனத்திலுள்ள பிரதானரூபசக்தி பிர்ம்மசேதனத்தை விட்டு வேறாக இல்லை.[38] இவ்விதமாகப்பிர்ம்மத்தினிடத்தில் சகல அனாத்மபதார்த்தங்களின லயசிந்தனைசெய்து, "அந்த அத்துவயப் பிர்ம்மமே நான்" என்று சிந்தனைசெய். மகாவாக்கியவிசாரத்தாலுங்கூட எவனுக்குப் புத்தியின் மந்தாதிப்[39] பிரதிபந்தங்களால் அபரோக்ஷ ஞான முண்டாகிறதில்லையோ அவனுக்கு இந்த லயசிந்தனைரூபத்தியானஞ் சொல்லப்பட்டது.

---

38. பிர்ம்மத்தின் சக்தி பிர்ம்மத்துக்கு வேறாயிருக்கும் பக்ஷத்தில் அத்துவைதச் சுருதிக்கு விருத்தமாகும். அபேதமென்றுசொல்லும்பக்ஷத்தில் சக்தி பிர்ம்மரூபமாகவே யாகிறதினால் பிர்ம்மத்துக்கு வேறான சக்தியென்னும் பெயர் வியர்த்தமாகும். ஆகையால் சக்திக்குப் பேதாபேதங்கள் இரண்டுஞ் சொல்லவேண்டும். இருட்டும் வெளிச்சமும் போல் அவ்விரண்டு மோரிடத்திலிரா. ஆகையால் ரஜ்ஜுவினிடத்தில் சர்ப்பத்தின் சம்பந்தம் போல் பிர்ம்மத்தினிடத்தில் கல்பிதபேதமும் வாஸ்தவ அபேதமுமான அநிர்வசனீய தாதாத்மிய சம்பந்தம் இருக்கிறது. கல்பித சர்ப்பம் உண்மையில் அதிஷ்டான ரஜ்ஜுரூபமாகவே யிருப்பதுபோல் சக்தி உண்மையில் பிர்ம்மரூபமாகவே யிருக்கிறது. பிரளய காலத்தில் பிர்ம்மத்தினிடத்தில் வேறொன்று மில்லாவிடினும் மாயாசக்தி இருப்பதால் பிர்ம்மம் அத்துவிதீயமென்று சொல்லகூடாது.

இதற்குச்சமாதானம்:— சுஷுப்திகாலத்தில் ஆத்மாவினிடத்தில் அவித்தை யிருக்கிறது. அது தன் திர்ஷ்டிக்காவது வேறொருவன் திருஷ்டிக்காவது எந்த பிரமாணத்தாலும் ஆத்மாவுக்கு வேறாக தோன்றுகிறதில்லை. ஆகையால் ஆத்மா அத்துவிதீயமாயிருக்கிறது. இதுபோல் பிரளயகாலத்திலும் மித்தையான மாயாசக்தி வேறாகப் பிரதீதியாகிறதில்லை. ஆகையால் அந்தக்காலத்தில் பிம்மம் அத்துவிதீய மாயிருக்கிறது. சிருஷ்டிக்குப் பிறகும் ஜகத்து பிரம்மத்தில் ஆரோபிதமாயிருப்பதால் பிரம்மம் எப்போதும் அத்துவயம். மாயை தமோகுணப்பிரதானமான கிரியாசக்தியுடனும் சத்துவகுணபிரதானமான ஞானசக்தியுடனும் ரஜோகுணபிரதானமான இச்சாசக்தியுடனும் கூடியிருக்கின்றது.

39. இந்தப் பிரதிபந்தங்கள் பஞ்சதசிபிரகரணத்தின் தியான தீபிகையின் 38 முதல் 53 வரைசுலோகங்களில் வித்தியாரண்ய சுவாமிகளால் சொல்லப்பட்டிருக்கின்றன. இவை பூத பிரதிபந்தம், வர்த்தமான பிரதிபந்தம், ஆ

334. தியானத்துக்கும் ஞானத்துக்கும்பேதம்:—ஞானம் பிரமாணத்துக்கும் பிரமேயத்துக்கும் ஆதீனமாயிருக்கிறது, விதிக்கும் புருஷனுடைய இசசைக்கும் ஆதீனமாயில்லை. தியானமானது விதி புருஷனுடைய இச்சை விசுவாசம் ஹடம் இவைகளுக்கு ஆதீனமாயிருக்கிறது. பிரத்தியக்ஷஞானத்தில் பிரமாணம் நேத்திரம், பிரமேயம் கடாதிகள். நேத்திரத்துக்கும் கடத்துக்கும் சம்பந்தமுண்டாகிறதினால் புருஷனுடைய இச்சையன்றியிலும் கடத்தின் பிரத்தியக்ஷஞானமுண்டாகிறது. பிள்ளையார்சதுர்த்தி தினம் சந்திரனைப்பார்க்கக்கூடாதென்கிற நிஷேதமுண்டு, விதியில்லை. ஒருவனுக்கு அன்றைதினம் சந்திரனைப் பார்க்கக்கூடாதென்று இச்சையுண்டானாலும் எவ்விதத்திலாவது நேத்திரத்துக்கும் 40

---

காமி பிரதிபந்தம் என மூவ்வகையாம். இவற்றுள். (1) தன புத்திராதி பிரியவஸ்துக்களின் நாசத்தின் பிறகும் அவைகளை ஸ்மரித்துக்கொண்டிருத்தல் பூதப்பிரதிபந்தமாம். (2) சமஸ்த விஷயங்களிலும் ரூடமான ஆசக்தியாகிற விஷயசக்தி, ஒருவன் சொன்ன அர்த்தம் புத்தியிற்பதியாமலிருக்கிற பிரஞ்ஞாமந்தம், ஆசாரியர் சொன்ன அர்த்தத்துக்கு விபரீத அர்த்தஞ்சொல்லும் குதர்க்கம், நான் பண்டிதன், நான் விருத்தன், நான் சன்னியாசி, இவ்விதமான தேகேந்திரியாதிகளிடத்தில் ஆத்மபுத்திபண்ணுகிற விபரீத துராகிருகம், இந்நான்கும் வர்த்தமான பிரதிபந்தங்களாம். [3] பிரம்மலோகஇச்சை வரப்போகிற ஜன்மங்களுக்கு ஹேதுவான பிராரப்த சேஷங்கள், இவை ஆகாமிப்பிரதி பந்தங்களாம்.

40. ஞானம் மூன்று விதம்- [1] பிராந்திஞானம். [2] ஸ்மிருதிஞானம். [3] பிரமாஞானம். இவைகளில் பிராந்திஞானம் கேவலம் வஸ்துவுக்காதீனமாயிருக்கிறது. ஸ்மிருதிஞானம் முன்பார்த்த வஸ்துவினுடைய மனோமய ஆகாரத்துக்காதீனமாயிருக்கிறது. பிரமாஞானத்துக்கு அந்தர்கதமாயிருக்கிற சுகாதிகளின் ஞானம் நியாயமதத்திலும் வாசஸ்பதிமதத்திலும் மனரூபமான பிரமாணத்துக்கும் சுகாதிரூபமான பிரமேயத்துக்கும் ஆதீனமாயிருக்கிறது. சித்தாந்தத்தில் அதற்கு மனஆ பிரமாணமாக அங்கீகாரம் பண்ணப்படாததினால் சுகாதிகளின் ஞானம் கேவலம் பிரமேயமாகிற சுகாதிரூபவஸ்துவுக்கு ஆதீனமாயிருக்கிறது. மற்றபிரமாஞானங்கள் இந்திரியம் அனுமானம் முதலியபிரமாணங்களுக்கும் பிரமேய ரூபவஸ்துக்களுக்குமுள்ள சம்பந்தத்துக்காதீனமாயிருக்கிறது. இவைகளில் சப்தப்பிரமாணத்தாலுண்டாகிற பிரம்மஞ்ஞானரூப சாப்தீ பிரமா மகாவாக்கியரூப சப்தப்பிரமாணத்துக்கும் பிரத்தியகபின்ன பிரம்மரூபப் பிரமேயத்துக்குமுள்ள லக்ஷணாவிர்த்திரூபப் பரம்பரா சம்பந்த ஞானத்துக்காதீனமாயிருக்கின்றது. இதரபதார்த்தங்களின் சாப்தி பிரமாரூபஞானம் சிலவிடங்களில் சக்தி விர்த்திரூப சம்பந்தத்தின் ஞானத்துக்கும், சிலவிடங்களில் லக்ஷணாவிர்த்திரூப சம்பந்தஞானத்துக்கும் ஆதீனமாயிருக்கின்றது. இவ்விதமாகச்சில ஞானம் ஞேயரூபமான வஸ்துமாத்திரத்துக்கும்

சந்திரனுக்குஞ்சம்பந்தமுண்டானால், சந்திரனுடைய பிரத்தியக்ஷஞானம் அவனுக்குண்டாகும். இவ்விதமாக ஞானம் பிரமாணப்பிரமேயங்களின் ஆதீனமாயிருக்கிறது,[41] விதி இச்சைகளுக்கு ஆதீனமாயில்லை. மேலும் சாலிக்கிராமம் விஷ்ணுரூபமென்று தியானஞ்செய்கிறவனுக்கு உத்தமபலனுண்டாகிறது. சாஸ்திரபிரமாணத்தினால் விஷ்ணுவைச்சதுர்ப்புஜமூர்த்தியாகவும் சங்கசக்கிர கதா பத்ம லக்ஷ்மி சகிதமாயும் அறிகிறான். நேத்திரப் பிரமாணத்தால் சாலிக்கிராமத்தைச் சிலையாக அறிகிறான். ஆயினும் விதிவிசுவாச இச்சைகளால் சாலிக்கிராமம் விஷ்ணுவென்று தியானமுண்டாகிறது.

335. **தியானபேதங்கள்:**—ஆனால் இந்தத்தியானம் அனேக விதமாயிருக்கிறது. (1) சாலிக்கிராமத்தை விஷ்ணுரூபமாகத்தியானிப்பதுபோல் அன்னியவஸ்துவை அன்னியரூபமாகத் தியானிப்பது **பிரதீகத்தியான**மென்னப்படும். (2) வைகுண்டலோகத்தில் வசிக்கிறவிஷ்ணுவைச் சங்கசக்கிராதிசகிதமாயும் சதுர்ப்புஜ மூர்த்தியாயும் தியானிக்கும்போது அன்னியவஸ்து அன்னியரூபமாகத்தியானஞ் செய்யப்படவில்லை. ஆனால் தியானம் தியேயானுசாரமாக இருக்கிறது. வைகுண்டத்தில் வசிக்கிற விஷ்ணுவின் ஸ்வரூபம் பிரத்தியக்ஷமாயில்லை, கேவலம் சாஸ்திரத்தினால் அறியப்பட்டிருக்கிறது. சாஸ்திரத்தில் சங்கசக்கிராதி சகிதமாகவே விஷ்ணுவின் ஸ்வரூபஞ்சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் இந்தத்தியானம் தியேயஸ்வரூபத்தை யனுசரித்தேயிருக்கிறது. விதி விசுவாச இச்சைகளன்றியில் தியானமுண்டாகிறதில்லை. 'இந்த உபாசனை செய்' என்று ஒருவனைப்பிரவர்த்திக்கும்படிச்செய்கிறவசனம் **விதி**யென்று சொல்லப்படும். அந்தவசனத்திலுள்ள சிரத்தைக்கு **விசுவாச**மென்று பெயர். அந்தக்கரணத்தின் இச்சாரூபமான ரஜோகுணவிர்த்திக்கு **இச்சை**யென்று பெயர், இம்மூன்றும் தியானத்துக்கு ஹேதுக்களாயிருக்கின்ற

---

சில பிரமாணப் பிரமேயரூபவஸ்துவின் சம்பந்தத்துக்கும் ஆதீனமாயிருக்கின்றன. இவ்விதமாக ஞானம் வஸ்துவுக்காதீனமாயிருக்கிறது.

41 பிர்ம்மத்தின் பிரத்தியக்ஷ ஞானவிஷயத்தில் பிரத்தியக் அபின்ன பிரம்மமே பிரமேயம். மகாவாக்கியம் பிரமாணம். குருமுகமூலமாய் சிஷ்யன் சிரவணம் செய்வதினால், பிரமாணம் பிரமேயத்தை விஷயமாக்கி சாக்ஷாத்கார ஞானத்தை கொடுக்கிறது. இதில் விதி முதலியவைகளின் அபேக்ஷையில்லை. மகாவாக்கியரூபபிரமாணமன்றியில் ஜிஞ்ஞாசுவின் கேவலம் இச்சையாலாவது, ஹடத்தினாலாவது, குருவினிடத்தில் விசுவாசத்தினாலாவது ஞானம் உதயமாகமாட்டாது. உபாசனை விதி முதலியவைகளை அபேக்ஷிக்கிறது. ஏனெனில் சாஸ்திரவிதியை அனுசரித்துச்செய்யப்படும் உபாஸனைதான்

ன. ஞானத்துக்கு ஹேதுக்களன்று; மேலும் தியானம் ஹடத்தினாலுண்டாகும். ஞானத்தில் ஹடத்தின் அபேக்ஷையில்லை. ஏனெனில் நிரந்தரமான தியேயாகாரமான சித்தவிர்த்திக்குத் தியானமென்று பெயர் விர்த்தியில் விக்ஷேபமுண்டானால் பலவந்தமாக விர்த்தியைஸ்திரப்படுத்த வேண்டும். ஞானரூப அந்தக்கரண விர்த்தியால் ஆவரணபங்கமுடனே. யுண்டாவதால் விர்த்தியை ஸ்திரப்படுத்த வேண்டிய அவசியமில்லை. ணதால் ஹடத்தின் அபேக்ஷையில்லை.

336. **அகங்கிரகத்தியானம்.**— வைகுண்டவாசியான ர்ப்புஜ விஷ்ணுவை த்தியானிப்பதுபோல் 'நான் பிரமம்' என்று தியானிப்பதும் தியேயானுசாரமாக இருக்கிறது, பிரதீகமாயில்லை. ஆனால் இது அகங்கிரகத்தியானமாயிருக்கிறது. தியேயஸ்வரூபத்தைத் தனக்கு அபேதமாகச் சிந்தித்தல் அகங்கிரகத்தியானமென்னப்படும். எவனுக்கு அபரோக்ஷஞானமுண்டாகிறதில்லையோ வேதத்தின் ஆஞ்ஞாரூபவிதியில் விசுவாசம்வைத்துப் பலவந்தமாக இடைவிடாமல் 'நான் பிரமம்' மென்று எவன் அகங்கிரகத்தியானஞ்செய்கிறானோ அவனுக்கும் ஞானமுண்டாகி மோக்ஷமுங்கிடைக்கும்.

## பிரணவஉபாஸனை (337—367)

337. **பிரணவத்தின் அகங்கிரகத்தியானம்:**— வேறுவிதமாய் அகங்கிரக உபாஸனையைச் சொல்லுகிறேன். சீஷனே, பிரணவரூபமாகிற ஓங்காரஸ்வரூபத்தின் அகங்கிரகத்தியானம் **மாண்டூக்கியா**[42] திசுருதிகளை யனுசரித்துச் **சுரேஸ்வராசாரியரால்** சொல்லப்பட்டிருக்கிறது. அதை நீ யனுசரி. சுருக்கமாய் அதன் பிரகாரத்தைச் சொல்லுகிறேன். "**பிரணவாக்ஷரம் பிர்ம்மஸ்வரூபம்.** அந்தப்பிரணவரூபப்பிர்ம்மம் நான்" என்று ஒருக்ஷணங்கூட விடாமல் புத்திவிர்த்தியைத்தரி. இதற்குச்சமானமான வேறு தியானமில்லை. இந்தத் தியானத்தின் விவரம் **சுரேஸ்வராசாரியருடையபஞ்சீகரணக்கி**

---

பலனைக்கொடுக்கிறது. விதியன்றியில் மனதில் தோன்றினபடி செய்யும் உபாசனை பலனைக்கொடுக்கிறதில்லை. ஆகையால் உபாசனை விதி முதலியவைகளுக்கு ஆதீனமாயிருக்கிறது.

42. முதலிய சப்தத்தால் உத்தரதாபனீய பிரச்ன கடவல்லி உபநிஷத்துக்கள் கிரகிக்கத்தக்கவை.

ரந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த வுபாஸனையைச்செய்பவன் அபரப்ரமசாரத்தை யொழிக்கிறான்.

338. பிரணவவுபாஸனை அனேக உபநிஷத்துக்களில் சொல்லப்பட்டிருந்தாலும் மாண்டூக்கிய வுபநிஷத்தில் விசேஷமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. பாஷியக்காரரும் ஆனந்தகிரியும் அந்த உபநிஷத்தின் வியாக்கியானத்தில் உபாஸனையின் விவரத்தைத் தெளிவாய்ச் சொல்லியிருக்கிறார்கள். அந்தவிவரம் வார்த்திகக்காரரால பஞ்சீகரணக் கிரந்தத்திலெழுதப்பட்டிருக்கிறது. ஆயினும் இந்தக்கிரந்தங்களைப்பார்க்க எவன்புத்தி சமர்த்தமாயில்லையோ அவனுக்காகப் பிரணவ உபாஸனையின் விவரம் நாம் எழுதியிருக்கிறோம். உபநிஷத்தில் பிரணவஉபாஸனை இருவகையாய்ச்சொல்லபட்டிருக்கிறது. ஒன்று பரப்பிர்மரூபமாகப்பிரணவத்தைச்சிந்திததல். மற்றொன்று அபரப்பிர்ம்மரூபமாகச்சிந்தித்தல். நிர்க்குணப் பிரமத்துக்குப்பரப்பிர்மமென்றும் ஸகுணப்பிர்மத்துக்கு அபரபிரமமென்றுமபெயர். பரப்பிர்ம்மரூபமாகப்பிரணவத்தைசசிந்திக்கிறவன் மோக்ஷத்தை யுடைகிறான். அபரபிர்ம்மமாகப் பிரணவத்தைச் சிந்தனை செய்கிறவன் பிர்ம்மலோகத்தையடைகிறான். இவ்விதமாக நிர்க்குண ஸகுண பேதங்களால் பிரணவ உபாஸனை இர

339. நிர்க்குண உபாஸனையின் விவரத்தையெழுதுகிறேன். ஸகுணஉபாஸனை விவரம எழுதவில்லை. ஏனெனில் பிர்மமலோகஇச்சையுள்ளவனுக்கு, நிர்க்குணஉபாஸனையினாலும இசசாரூபப்பிரதிபந்தத்தால் ஞானமூலமாக உடனே மோக்ஷமுண்டாகிறதில்லை. ஆனால் பிரம்மலோகமடையப்படுகிறது. அவ்விடத்தில ஹிரண்யகர்ப்பனுடைய போகங்களுக்குச் சமானமான போகங்களை யனுபவித்து ஞானத்தைப் பெற்று மோக்ஷத்தை யடைகிறான். பிர்மமலோகஇச்சையில்லாதவனுக்கு இந்த லோகத்திலேயே ஞானமுண்டாகி மோக்ஷம சித்திக்கிறது. இவ்விதமாக ஸகுணஉபாஸனையின் பலனும் நிர்க்குணஉபாஸனையில் அந்தர்க்கதமாயிருக்கிறது. ஆகையால் நிர்க்குணஉபாஸனையின் விவரஞ்சொல்லு

340. எது காரணகாரியவஸ்துவோ அது ஓங்காரஸ்வரூபமாயிருக்கிறது. ஆனதால் சகலரூபங்களும் ஓங்காரந்தான். சகலபதார்த்தங்களிலும் நாமம் ரூபம் என இரண்டு அம்சங்களுண்டு. அவைகளில் ரூபபாகம் அவ்வவற்றின் நாமபாகத்தை விட்டு வேறாக இருக்கிறதில்லை. ஆனால் நாமஸ்வரூபமே ரூபபாகமாயிருக்கிறது. ஏனெனில் பதார்த்தத்தினுடைய ரூபம் அதாவது ஆகாரத்தின்பெயரால் அந்தப்பதார்த்தம்

கிரகிக்கப்படுகிறது அல்லது தள்ளப்படுகிறது. பெயர் அறியப்படாமல் கேவலம் ஆகாரத்தால் வியவகாரம் சித்திக்கிறதில்லை. ஆனதால் பெயரே முக்கியமானது. ஆகாரமழிந்தாலும் பெயர் நிற்கிறது. 'கடம் நாசமடைந்தாலும் மண் நீர்கிறது. கடம் மண்ணைக்காட்டிலும் வேறன்று, மண்ஸ்வரூபமாகவேயிருக்கிறது. இதுபோல் ஆகாரம் நாசமடைந்தாலும் மண்போல் மிஞ்சுகிற நாமத்தைக்காட்டிலும் ஆகாரம் வேறாகாமல் நாமஸ்வரூபமாகவேயிருக்கிறது. மேலும் கடம் சட்டி பானை முதலியவைகளில் மண் அனுகதமாயிருக்கிறது. கடாதிகள் பரஸ்பரம் வியபசரிக்கிறபடியால் கடாதிகள் பொய். அவைகளில் அனுகதமான மண் சத்தியம். இதுபோல் கடத்தின் ஆகாரம் அனேகம். அவைகளுக்கெல்லாம் "கடம்" என்கிற மூன்றெழுத்துகளுடன் கூடிய பெயர் ஒன்றாயிருக்கிறது ஒருகடத்தின் ஆகாரம் மற்றொன்றுக்கில்லாதபடியால் ஆகாரங்கள் வியபசரிக்கின்றன. எல்லாகடங்களினாகாரத்திலும் ஒரே பெயர் அனுகதமாயிருக்கிறது. ஆனதால் பொய்யான ஆகாரம் சத்தியமான பெயரைவிட்டு வேறாகவில்லை. இவவிதமாக சகலபதார்த்தங்களினாகாரமும் அவ்வற்றினாமத்தை விட்டு வேறாக இல்லை. நாமஸ்வரூபமாகவே ஆகாரமிருக்கிறது. நாமங்களெல்லாம் ஓங்காரத்தைவிட வேறன்று. ஓங்காரஸ்வரூபமே நாமம். ஏனெனில் வாசகசப்தத்துக்கு நாமமென்றுபெயர். உலகத்தில் வழங்குகிற சப்தங்களெல்லாம் ஓங்காரத்தினின்றுண்டாயினவெனச்சுருதியில் பிரசித்தமாய்ச்சொல்லப்பட்டிருக்கிறது. காரியமெல்லாம் காரணஸ்வரூபமாகவேயிருக்கிறது. ஆனதால் ஓங்காரத்தின் காரியமான வாசகசப்தரூபநாமம் ஓங்காரஸ்வரூபமாயிருக்கிறது. இவ்விதமாக ரூபமாகமாகிற பதார்த்தத்தினாகாரம் நாமஸ்வரூபமாயிருக்கிறது. நாமங்களெல்லாம் ஓங்காரஸ்வரூபம். ஆனதால் எல்லாஸ்வரூபமும ஓங்காரமே.

341. எலலாஸ்வரூபமும் ஓங்காரமாயிருப்பதுபோல் எல்லாஸ்வரூபமும் பிர்ம்மமாயிருக்கிறது. ஆனதால் ஓங்காரம் பிர்ம்மரூபம். மேலும் ஓங்காரம் பிர்ம்மத்தின் வாசகம். பிர்ம்மம் வாச்சியம். வாசகத்துக்கும் வாச்சியத்துக்கும் அபேதமிருப்பதாலும் ஓங்காரம் பிர்ம்மரூபம். மேலும் விசாரித்துப்பார்த்தால் பிரமமத்தில் அக்ஷரம் அத்தியஸ்தமாயிருக்கிறது. அதற்குப்பிர்ம்மம் அதிஷ்டானமாயிருக்கிறது. அத்தியஸ்தத்தின் ஸ்வரூபம் அதிஷ்டானத்துக்கு வேறன்று. ஆகையாலும் ஓங்காரம் பிர்ம்மஸ்வரூபமாயிருக்கிறது. ஆனதால் ஓங்காரத்தைப்பிர்ம்மரூபமாகச்சிந்தனைசெய்யவேண்டியது.

342. பிர்ம்மரூப ஓங்காரம் ஆத்மாவுக்கு வேறன்றெனச்சிந்தனைசெய். ஏனெனில், ஆத்மாவுக்கும் பிர்ம்மத்துக்கும் பேதமில்லை. பிர்ம்மத்துக்கு நாலுபாதங்களுண்டு. அப்படியே ஆத்மாவுக்கும் நாலுபாதங்களு

ண்டு. பாதமென்றால் பாகம் அல்லது அம்சம். விராட்டு,[43] ஹிரண்யகர்ப்பன், ஈஸ்வரன்,[44] தத்பதலக்ஷியமான ஈஸ்வரசாக்ஷீ இந்நான்கும் பிரம்மத்தின்பாதங்கள். விசுவன்,[45] தைஜஸன்,[46] பிராஞ்ஞன்,[47] அவம் பதலக்ஷியமான ஜீவசாக்ஷீ இந்நான்கும் ஆத்மாவின் பாதங்களாம். ஜீவசாக்ஷிக்கே துரியமென்றும் பெயர்.

343. **விராட்டு விசுவங்களின் அபேதம்:**— சமஷ்டி (186) ஸ்தூலப்பிரபஞ்சசகித சேதனத்துக்கு விராட்டென்று பெயர். வியஷ்டி (186) ஸ்தூலஅபிமானிக்கு விசுவனென்று பெயர். விராட்டுக்கும் விசுவனுக்கும் உபாதி ஸ்தூலமாயிருப்பதால் விசுவன் விராட்ரூபமே, விராட்டுக்கு வேறன்று.

344. **ஏழங்கங்கள்:**— விராட்ரூபவிசுவனுக்கு ஏழங்கங்களுண்டு. (1) சுவர்க்கலோகம் சிரசு (2) சூரியன் நேத்திரம் (3) வாயு பிராணன் (4) ஆகாசம் மார்பு (5) சமுத்திராதிரூபஜலம் மூத்திரஸ்தானம் (6) பிருதிவீ பாதம் (7) ஹோமம்பண்ணப்படுகிற அக்கினி முகம். இவ்வேழும் விசுவனுடைய அங்கங்கள். மாண்டூக்கிய உபநிஷத்தில் சுவர்க்கலோகாதிகள் விசுவனுடைய அங்கங்களல்லவென்று சொல்லியிருந்தாலும் விராட்டின் அங்கங்களாயிருப்பதாலும் விராட்டு விசுவங்களுக்குப்பேதமில்லாததினாலும் விசுவனுடைய அங்கங்களாகச் சொல்லப்பட்டன.

345. **19 முகங்கள்:**— விராட்டுவிசுவங்களின் 19 முகங்க

---

43. சகல பிராணிகளின் சரீரத்தில் "நான்" என்கிற அபிமானத்தை தரிக்கிறதினால் ஈசுவரன் "வைசுவானரன்" என்று சொல்லப்படுகிறான். இந்த வைசுவானரன் அநேக விதமாய் பிரகாசிக்கிறபடியால் "விராட்டு" என்று சொல்லப்படுகிறான்.

44. சகல ஜீவர்களுக்கும் கர்மானுசாரமாய் பலத்தைக்கொடுப்பதால் ஈஸ்வரன் என்று பெயர்வந்தது.

45. சூக்ஷ்மதேகத்தின் அபிமானத்தை விடாமல் ஸ்தூலதேகத்தில் "நான்" என்னும் அபிமானத்தை யுடைத்தாயிருக்கிற, ஜாகிருதாபிமானியான ஜீவனுக்கு விசுவன் என்றுபெயர்.

46. தேஜ சப்தத்தின் வாச்சியமான அந்தக்கரணத்தை விடாமல் பிராணேந்திரியங்களுடன் கூடி இருக்கிற ஸ்வப்னாபிமானியான ஜீவனுக்கு தைஜஸன் என்று பெயர்.

47. பிராஞ்ஞன = பிர+ அஞ்ஞன். சுஷுப்தியில் ஸ்வப்பிரகாசமான ஆத்மாநந்தத்துடன் அஞ்ஞான விர்த்தி சேர்ந்திருப்பதால் சுஷுப்தி அபிமானிஜீவனுக்கு பிராஞ்ஞன் என்றுபெயர்.

ளாவன:— பிராணன்கள் 5 கர்மேந்திரியங்கள் 5 ஞானேந்திரியங்கள் 5 அந்தக்கரணம் 4 இந்தப்பத்தொன்பதும முகங்கள்போல் போகத்துக்குச் சாதனமாயிருப்பதால் முகங்களென்று சொல்லப்படுகின்றன. ஜாக்கிராவஸ்தையில் இந்தப்பத்தொன்பது முகங்கள்மூலமாக ஸ்தூலசப்தாதிகள் பாஹ்யவிர்த்தியால் கிரகிக்கப்படுகின்றன. ஆனதால் விராட்ரூப விசுவன் ஸ்தூலபோக்தாவென்றும் பாஹ்யவிர்த்தி அதாவது பஹிர்ப்பிரஞ்ஞன் என்றும் ஜாக்கிராவஸ்தையுடன் கூடினவனென்றுஞ்சொல்லப்படுகிறான்.

346. 14 திரிபுடிகள்:— போகசாதனங்களான பிராணாதி 19 முகங்களில் சுரோத்திராதிபத்து இந்திரியங்களும் அந்தக்கரணம்நான்கும் கூடிய பதினான்கும் தங்கள் தங்கள் விஷயங்களையும் தங்கள் தங்கள் தேவதைகளின் சகாயத்தையும் அபேக்ஷிக்கின்றன. தேவதை, விஷயம் இவைகளின் சகாயமன்றியில் கேவலம் இந்த 14 முகங்களால்மட்டும் போகமுண்டாகிறதில்லை. ஆனதால் பஞ்சப்பிராணன்களும் 14 திரிபுடிகளும் விராட்ரூபவிசுவனுடைய முகங்களாகச்சொல்லப்படுகின்றன. முகம தேவதை விஷயம் இம்மூன்றின் சமுதாயத்துக்குத்திரிபுடியென்று பெயர். இந்தத்திரிபுடியைச்சொல்லுகிறேன். சுரோத்திரேந்திரியம் அத்தியாத்மம். அதின் விஷயமாகிற சப்தம் அதிபூதம். திசையின் அபிமானிதேவதை அதிதெய்வம். இவ்விடத்தில் கிரியாசக்தியுடனும் ஞானசக்தியுடனுங்கூடின இந்திரியமும் அந்தக்கரணமும் அத்தியாத்மமென்றும் இவைகளின் விஷயம் அதிபூதமென்றும் இவைகளுக்குச்சகாயமான தேவதை அதிதெய்வமென்றுஞ்சொல்லப்படும். இந்தத்திரிபுடிகள் அடியிற்கண்ட பதகத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

| | இந்திரியம் அத்தியாத்மம் | விஷயம் அதிபூதம் | தேவதை அதிதேவதை |
|---|---|---|---|
| 1 | சுரோத்திரம் | சப்தம் | திக்கு அபிமானி தேவதை |
| 2 | துவக்கு | ஸ்பரிசம் | வாயு அபிமானி தேவதை |
| 3 | நேத்திரம் | ரூபம் | சூரியன் |
| 4 | ஜிஹ்வை | ரஸம் | வருணன் |
| 5 | கிராணம் | கந்தம் | அச்வினிகுமாரர்கள் |

வார்த்திகக்காரசுரேஸ்வராசாரியார் பிருதி வியின் அபிமானி தேவதையைக்கிராணத்தின் அதிதெய்வமாகச்சொல்லியிருக்கிறார். அதுவும் சரியே. ஏனெனில் பிருதிவியினின்றும் கிராணம் உற்பத்தியாகிறது. ஆகையால் பிருதிவி அதிதெய்வமாகச்சொல்லப்பட்டது. மேலும் சூரியனுடைய குதிரையின் மூக்கினின்றும் அச்வினிகுமாரர்களின் உற்பத்தி சொல்லப்பட்டிருப்பதால் மூக்கின் தேவதை அச்வினீகுமாரரென்று சிலர் சொல்லுகிறார்கள்.

| | | | |
|---|---|---|---|
| 6 | வாக்கு | வக்தவ்வியம் | அக்கினிதேவதை |
| 7 | பாணி | பதார்த்தங்களைகிரகித்தல் | இந்திரன் |
| 8 | பாதம் | நடை | விஷ்ணு |
| 9 | குதம் | மலவிஸர்ஜனம் | யமன் |
| 10 | உபஸ்தம் | மைதுனக்கிரியாரூபபசுதர்மத்தின்சுகம் | பிரஜாபதி |
| 11 | மனசு | மனதின் விஷயம் | சந்திரன் |
| 12 | புத்தி | புத்திக்குவிஷயம் அதாவது, ஞானத்துக்கு விஷயம் | பிரகஸ்பதி |
| 13 | அகங்காரம் | அகங்காரத்தின்விஷயம் | ருத்திரன் |
| 14 | சித்தம் | சிந்தனைக்குவிஷயம் | க்ஷேத்திரஞ்ஞனென்கிற சாக்ஷீ |

இந்தப்பதினான்கு திரிபுடிகளும் ஐந்து பிராணன்களும் சேர்ந்து பத்தொன்பதும் விராட்ரூபவிசுவனுடைய முகங்களாம். **விசுவன்விராட்டு அகாரம்இவைகளின் அபேதசிந்தனை.** விராட்டுக்கும் விசுவனுக்கும் பேதமில்லாததுபோல் ஓங்காரத்தின் முதல்மாத்திரையாகிய அகாரத்துக்கும் விராட்ரூபவிசுவத்துக்கும் பேதமில்லை. ஏனெனில் பிர்ம்மத்தின் நாலுபாதங்களில் முதற்பாதம் விராட்டு. ஆத்மா

வின் நாலுபாதங்களில் முதலாவது விசுவன், ஓங்காரத்தின் நான்குமாத்திரைகளாகிற பாதங்களில் முதற்பாதம் அகாரம். ஆகையால் முதலாவதாயிருத்தல் இவைகளுக்குச் சமானதர்மமா யிருப்பதால் விசுவன் விராட்டு அகாரம் இம்மூன்றையும் அபேதமாய்ச் சிந்திக்கவேண்டும்.

348. விசுவதைஜஸபேதாபேதம்:— விசுவனுக்குச் சொல்லப்பட்ட ஏழு அங்கங்களும் பத்தொன்பதுமுகங்களும் தைஜஸனுக்கும் இருப்பதாக அறியவேண்டியது. ஆனால் பேதமென்னவெனில் விசுவனுடைய அங்கங்களும் முகங்களும் ஈசுவரனால் செய்யப்பட்டிருக்கின்றன. தைஜஸனுடைய இந்திரிய தேவதைவிஷயரூபத் திரிபுடிகளும் சிரசுமுதலிய அங்கங்களும் பசேமையமாயிருக்கின்றன. தைஜஸனுடைய போகம் சூக்ஷ்மம். போகமென்றால் சுகதுக்கங்களின் ஞானம். அதினிடத்தில் ஸ்தூலசூக்ஷ்மத்தன்மைகள் சொல்வதுசரியன்று. ஆயினும் பாஹ்யசப்தாதிகளின் சம்பந்தத்தால் சாக்ஷாத்தாக உண்டாகிற சுகதுக்கம் ஸ்தூலமென்றும் மானஸிகசப்தாதிகளின் சம்பந்ததாலுண்டாகும் சுகதுக்கம் சூக்ஷ்மமென்றுஞ் சொல்லப்படும். இந்தக்காரணத்தால் விசுவன் ஸதூலத்தின்போக்தாவென்றும தைஜஸன் சூக்ஷ்மத்தின் போக்தாவென்றும் சுருதியிற்சொல்லப்பட்டிருக்கிறது. ஏனெனில் தைஜஸனுடைய போகத்துக்கு யோக்கியமான சப்தாதிகள் மானஸிகமாயிருப்பதால் சூக்ஷ்மமாயிருக்கின்றன. இவைகளையபேக்ஷித்து விசுவனுடையபோகத்துக்கு யோக்கியமான பாஹ்யசப்தாதிகள் ஸ்தூலமாயிருக்கின்றன. மேலும் விசுவன் பகிர்ப்பிரஞ்ஞன். தைஜஸன் அந்தர்ப்பிரஞ்ஞன். ஏனெனில் விசுவனுடைய அந்தக்கரணத்தின் விர்த்திரூபப்பிரஞ்ஞை வெளியேபோகிறது. தைஜஸனுடைய பிரஞ்ஞை போகிறதில்லை.

349. தைஜஸஹிரண்யகர்ப்பஉகாரங்களின் அபேதசிந்தனை:—விசுவனுக்கும் விராட்டுக்கும் அபேதமிருப்பதுபோல்தைஜஸனையும் ஹிரண்யகர்ப்பரூபமாயறி. ஏனெனில், தைஜஸனுடைய உபாதி சூக்ஷ்மம். ஹிரண்யகர்ப்பனுடைய உபாதியும் அப்படியே. ஆகையால் இவ்விரண்டையும் ஒன்றாக அறி. தைஜஸஹிரண்யகர்ப்பங்கள் ஒன்றென அறிந்து ஓங்காரத்தின் இரண்டாவது மாத்திரையான உகாரத்துக்கும் இவைகளுக்கும் பேதமில்லையென்று சிந்தனைசெய். ஏனெனில் ஆத்மாவின் நாலுபாதங்களில் இரண்டாவது பாதம் தைஜஸன், பிர்ம்மத்தின் இரண்டாவது பாதம் ஹிரண்யகர்ப்பன். ஓங்காரத்தின் மாத்திரைகளில் இரண்டாவது மாத்திரை உகாரம். இரண்டாவதாக இருப்பது மூன்றுக்கும் சமானதர்மமாயிருக்கிறது. ஆகையால் மூன்றையும் ஒன்றாகச்சிந்தனைசெய்.

350. பிராஞ்ஞஈஸ்வரமகாரங்களின் அபேதம்:--பிராஞ்ஞனை ஈசுவரரூபமாக அறி. ஏனெனில் பிராஞ்ஞனுடைய உபாதி காரணம், ஈசுவரனுடைய உபாதியும் காரணமே. ஈசுவரனும் பிராஞ்ஞனும் மூன்றுவது பாதங்கள். ஓங்காரத்தின் மூன்றுவது மாத்திரை மகாரம். இம்மூன்றிலும் மூன்றுவதாயிருப்பது சமானதர்மமாயிருப்பதால் இம்மூன்றையும் ஒன்றாக அறி.

351. இந்தப்பிராஞ்ஞன் பிரஞ்ஞானகனமாயிருக்கிறன். ஏனெனில் ஜாக்கிரஸ்வப்பனங்களிலிருக்கிற ஞானம், சுஷுப்தியில் கனம் அதாவது ஒரேஅவித்தியாரூபமாக ஆய்விடுகிறது. ஆகையால் பிரஞ்ஞானகனமென்று சொல்லப்படுகிறது. மேலும் இந்தப்பிராஞ்ஞன் ஆனந்தபுக்கென்றும் சுருதியிற்சொல்லப்பட்டிருக்கிறது. ஏனெனில் அவித்தையினலாவிருதமான ஆனந்தத்தையிந்தப்பிராஞ்ஞன் புஜிக்கிறன. ஆகையால் ஆனந்தபுக்கென்று சொல்லப்படுகிறன்.

352. தைஜஸன் விசுவன் இவைகளுடையபோகம் திரிபுடியாலுண்டாகிறதுபோல் பிராஞ்ஞனுடைய போகத்துக்கும் திரிபுடியுண்டெனச்சொல்லப்படுகிறது. சேதனத்தின் பிரதிபிம்பசகிதமான அவித்தியாவிர்த்தி அத்தியாத்மம். அஞ்ஞானத்தாலாவிருதமான ஸ்வரூபானந்தம் அதிபூதம். ஈசுவரன் அதிதெய்வம். இவ்விதமாக விசுவன் பகிர்ப்பிரஞ்ஞனுயிருக்கிறன். தைஜஸன் அந்தர்ப்பிரஞ்ஞனுயிருக்கிறன். பிராஞ்ஞன் பிரஞ்ஞானகனனுயிருக்கிறன்.

353. இவ்விதமாக விசுவாதிமூன்றுக்கும் சொன்ன பேதம் உபாதியால் உண்டாகிறது. விசுவனுக்கு ஸ்தூலசூக்ஷ்ம அஞ்ஞானங்களாகிற மூன்று உபாதிகள். தைஜஸனுக்கு சூக்ஷ்ம அஞ்ஞானங்களாகிற இரண்டு உபாதிகள். பிராஞ்ஞனுக்கு அஞ்ஞானமாகிற ஒரே உபாதியாம். உபாதிகளின் ஏற்றக்குறைவால் மூன்றுக்கும் பேதமுண்டாகிறதேதவிர உண்மையில் ஸ்வரூபத்தால் பேதமில்லை.

354. விசுவன் தைஜஸன் பிராஞ்ஞன் இவைகளில் அனுகதமான சேதனம் பாரமார்த்திகத்தில் மூன்றுஉபாதிகளின் சம்பந்தமுமன்றியிலிருக்கிறது மூன்று உபாதிகளின் அதிஷ்டானம் துரியம். இதுபகிர்ப்பிரஞ்ஞனன்று, அந்தர்ப் பிரஞ்ஞனன்று, பிரஞ்ஞானகனமுமன்று, கர்மேந்திரியத்துக்கும் ஞானேந்திரியத்துக்கும் விஷயமன்று, புத்திக்கு விஷயமன்று, எந்தச்சப்தத்துக்கும் விஷயமன்று, இப்படியிருக்கிற துரியத்தைப் பரமாத்மாவின் நான்காவது பாதமாகிற ஈசுவரசாக்ஷியாகிய சுத்தப் பிர்ம்மரூபமாக அறி.

355. இவ்விதமாக ஆத்மாவுக்கு இரண்டுவித ஸ்வரூபங்கள் சொல்லப்பட்டன. ஒன்று பரமார்த்தரூபம். மற்றொன்று அபரமார்த்தரூபம். மூன்று பாதங்கள் அபரமார்த்தரூபம். ஒருபாதமாகிய துரியம் பரமார்த்தரூபம். ஆத்மாவுக்கு இரண்டு ஸ்வரூபங்கள் இருப்பதுபோல் ஓங்காரத்துக்கும் இரண்டு ஸ்வரூபங்களுண்டு. அகார உகார மகாரங்களாகிய மூன்று மாத்திராரூப அக்ஷரங்கள் அபரமார்த்தரூபம். மூன்று மாத்திரைகளில் வியாபித்திருக்கிற அஸ்தி பாதி பிரியரூப அதிஷ்டானசேதனம் பரமார்த்தரூபம். ஓங்காரத்தின் பரமார்த்தரூபம் சுருதியில் அமாத்திரை சப்தத்தால் சொல்லப்பட்டிருக்கிறது. ஏனெனில் பரமார்த்தஸ்வரூபத்தில் மாத்திரைகளின் வியாபகமில்லை, ஆனதால் அமாத்திரையென்று சொல்லப்படுகிறது. இவ்விதமாக இரண்டுஸ்வரூபங்களுடன் கூடிய ஓங்காரத்துக்கும் இரண்டுஸ்வரூபங்களுடன் கூடிய ஆத்மாவுக்கும் உள்ள அபேதத்தையறி.

356. வியஷ்டி சமஷ்டி ஸ்தூலப் பிரபஞ்சத்துடன் கூடிய விசுவன் விராட்டு இவைகளுக்கும் அகாரத்துக்கு முள்ள அபேதத்தை யறி. ஆத்மாவினுடைய பாதங்களில் விசுவன் முதலாவது. ஓங்காரத்தின் மாத்திரைகளில் அகாரம் முதலாவது. ஆனதால் இரண்டையும் ஒன்றாக அறி. சூக்ஷ்மப்பிரபஞ்சசகிதமான ஹிரண்யகர்ப்பரூபத்தைஜஸனை உகாரரூபமாக அறி. தைஜஸன் ஆத்மாவின் பாதங்களில் இரண்டாவது. ஓங்காரத்தின் மாத்திரைகளில் உகாரம் இரண்டாவது. ஆனதால் இரண்டையும் ஒன்றாக அறி. காரண உபாதிசகிதமான ஈசுவரரூபப் பிராஞ்ஞனை மகாரரூபமாக அறி. ஈஸ்வரரூபப் பிராஞ்ஞன் மூன்றாவதாக இருப்பதுபோல் மகாரமும் மூன்றாவதாக இருப்பதால் இரண்டையும் ஒன்றாக அறி. இவைகளில் அனுகதமான பரமார்த்தரூபமாகிய துரியத்தை ஓங்காரத்தின் மூன்றுமாத்திரைகளில் அனுகதமான ஓங்காரத்தின் பரமார்த்தரூபமாகிய அமாத்திரைக்கு வேறாகாததாக அறி. விசுவாதிகளில் துரியம் அனுகதமாயிருப்பதுபோல் அகாராதி மூன்று மாத்திரைகளில் அமாத்திரை அனுகதமாயிருக்கிறது. ஆனதால் ஓங்காரத்தின் அமாத்திரை ரூபத்தையும் துரியத்தையும் ஒன்றாக அறி. இவ்விதமாக ஆத்மாவின் பாதத்தையும் ஓங்காரத்தின் மாத்திரையையும் ஒன்றாக அறிந்து லயசிந்தனை செய்.

357. லயசிந்தனை. இந்த லயசிந்தனையைச் சொல்லுகிறேன்.

விசுவரூப அகாரம் தைஜஸரூப உகாரத்துக்கு வேறாகாமல் உகாரரூபமாகவேயிருக்கிறது. இப்படிச் சிந்தனைசெய்தல் இவ்விடத்தில் லயமென்றுசொல்லப்படுகின்றது. இப்படியே மற்ற மாத்திரைகளிலும் அறியவேண்டியது. எந்த உகாரத்தில் அகாரம் லயமாகிறதோ அந்தத் தைஜஸரூப உகாரத்தைப் பிராஞ்ஞரூப மகாரத்தில் லயஞ் செய்யவேண்டும். இந்த பிராஞ்ஞரூப மகாரத்தைத் துரியரூபமான ஓங்காரத்தின் பரமார்த்தரூபமாகிய அமாத்திரையில் லயஞ் செய்யவேண்டும். ஏனெனில் ஸ்தூலத்தின் உற்பத்தியும் லயமும் சூக்ஷமத்தில் உண்டாகின்றன. ஆகையால் விசுவரூப அகாரம் தைஜஸரூப உகாரத்தில் லயமாகக் கூடும். சூக்ஷமத்தின் உற்பத்தியும் லயமும் காரணத்திலுண்டாகின்றன. ஆனதால் தைஜஸரூப உகாரம் அதின் காரணமாகிற பிராஞ்ஞரூப மகாரத்தில் லயமாகக்கூடும். இந்த விடத்தில் விசுவாதிகளால் சமஷ்டியாகிற விராட்டாதிகளையும் விசுவாதிகளின் திரிபுடிகளையும் விராட்டாதிகளின் திரிபுடிகளையும் அறியவேண்டியது. எந்தப் பிராஞ்ஞரூப மகாரத்தில் உகாரம் லயஞ்செய்யப்பட்டதோ அந்த மகாரத்தைத் துரியரூப ஓங்காரத்தின் பரமார்த்தரூப அமாத்திரையில் லயப்படுத்துக. ஏனெனில் ஓங்காரத்தின் பரமார்த்தஸ்வரூபத்துக்கும் துரியத்துக்கும் பேதமில்லை. இந்தத் துரியம் பிர்ம்மரூபம். சுத்தபிர்ம்மத்தினிடத்தில் ஈஸ்வரனும் பிராஞ்ஞனுங் கல்பிக்கப்பட்டிருக்கின்றன. எது எதில் கல்பிக்கப்படுகிறதோ அது அதின் ஸ்வரூபமாக இருக்கிறது. ஆனதால் ஈஸ்வர சகிதப் பிராஞ்ஞரூப மகாரம் லயமாகக்கூடும். இவ்விதமாக எந்த ஓங்காரத்தின் பரமார்த்தஸ்வரூபமாகிற அமாத்திரையில் எல்லாம் லயப்படுத்தப்படுகின்றனவோ அதுவே நான் என்று ஏகாக்கிரசித்தத்துடன் சிந்தனை செய். ஸ்தாவர ஜங்கம ரூபமாயும் அசங்கமாயும் அத்துவயமாயும் அசம்ஸாரியாயும் நித்யமுக்தமாயும் நிர்ப்பயமாயுமிருக்கிற பிர்ம்மரூபமாகிற ஓங்காரத்தின் பரமார்த்தஸ்வரூபமே நான் என்று சிந்தனைசெய்கிறதினால் ஞானமுண்டாகிறது. இந்த ஓங்காரத்தின் நிர்குணஉபாஸனை ஞானமூலமாக முக்திரூப பலத்தைக் கொடுக்கிறது. இது எல்லாவற்றிலும் உத்தமமானது.

358. **ஓங்காரச்சிந்தனைக்கதிகாரி:—** முன் சொன்னப்பிரகாரம் எவன் ஓங்காரஸ்வரூபத்தை யறிகிறானோ அவன் முனி. அறியாதவன் முனியன்று. ஏனெனில் முனியென்றால் மனனஞ்செய்கிறவன். இந்த

ஓங்காரத்தின் சிந்தனை மனன ரூபமாயிருக்கிறது. ஓங்காரத்தின் சிந்தனைரூப மனனமில்லாதவன் முனியன்று. மாண்டூக்கிய உபநிஷத்தை யனுசரித்துச் சுருக்கமாக ஓங்காரசிந்தனை சொல்லப்பட்டது. நிருசிம்ம தாபினீ முதலிய உபநிஷத்துகளிலும் இது விவரிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஓங்கார சிந்தனை பரமஹம்ஸனுடைய கோப்பிய தனம். பகிர்முக புருஷனுக்கு இதில் அதிகாரமில்லை. அத்தியந்தம் அந்தர்முகியாயிருக்கிறவனே அதிகாரி. கிரகஸ்தனுக்கு இதில் அதிகாரமில்லை. ஸ்திரீதன புத்திரசம்பந்தமில்லாத பரம ஹம்ஸனே அதிகாரி

359. **ஓங்காரத்தியானபலன் (359—360)** :— முன்சொன்னபடி ஓங்காரத்தைப் பிர்ம்மரூபமாகத் தியானஞ்செய்கிறதினால் ஞானமூலமாகமோக்ஷஞ்சித்திக்கிறது. ஆனால் எவனுக்கு இந்தலோகபோகத்திலாவது பிர்ம்மலோகபோகத்திலாவது இச்சையிருக்கிறதோ, ஆனால் எவன் தீவிரமான வைராக்கியமில்லாமல் பலவந்தமாக இச்சையைத் தகைந்து தனபுத்திராதிகளைத்தியாகஞ்செய்து பரமஹம்ஸகுரு உபதேசத்தால் ஓங்காரரூபப்பிர்ம்மத்தைத் தியானஞ்செய்கிறானோ அவனுக்குப்போகஇச்சை ஞானத்திற் பிரதிபந்தகமாயிருக்கிறது. ஆகையால் அவனுக்கு ஞானமுண்டாகிறதில்லை. ஆனால் தியானஞ் செய்கிறதினால் இந்தச்சரீரமழிந்தபின் வேறு சரீரங் கிடைக்கிறது. இந்த லோகபோகங்களின் இச்சையைத் தகைந்துத் தியானஞ் செய்ததினால் இந்தலோகத்தில் வெகுசெல்வத்துடன்கூடிய பரிசுத்தமான சற்குலத்திற் பிறக்கிறான். அப்போது முன்ஜன்மத்தின் இச்சைகளெல்லாம் நிறைவேறி முன்ஜன்மத்தின் தியானசம்ஸ்காரத்தால் மறுபடியும் விசாரத்திலாவது தியானத்திலாவது பிரவிர்த்தியுண்டாகிறது. இதனால் ஞானமுண்டாகி மோக்ஷங்கிடைக்கிறது.

360 பிர்ம்மலோகத்தின் போகங்களில் இச்சயைத்தகைந்து ஓங்காரரூபப் பிர்ம்மத்தின் தியானத்திற் பிரவிர்த்திக்கிறவன் சரீரத்தை விட்டுப் பிர்ம்மலோகத்துக்குப் போகிறான். அவ்விடத்தில் மனுஷர்களுக்கும் பிதிர்க்களுக்கும் தேவதைகளுக்குங் கிடைக்காதச் சுதந்திரத்தின் ஆனந்தத்தையும் ஹிரண்யகர்ப்பனுடையசத்தியசங்கல்பாதிசகல ஐசுவரியங்களையுமடைகிறான்.

361. **பிர்ம்மலோகமார்க்கம்:**—பிர்ம்மலோகம் போகும்மார்க்கம் அடியில் வருமாறு;—பிர்ம்மோபாஸனையில் தத்பரனாயிருக்கிற பு

ருஷன் சாகுங்காலத்தில் இந்திரியங்களும் அந்தக்கரணமும் மூர்ச்சையடைந்து[48] ஒன்றையுமறியச் சமர்த்தமாகாவிட்டாலும் யமதூதர்கள் அவனுடையலிங்கசரீரத்தைக்கொண்டுபோக அவனருகில் வருகிறதில்லை. ஆனால் **அக்கினியபிமானிதேவதை** அவன்மரணசமயத்தில் அவனுடைய லிங்கசரீரத்தை யெடுத்துக்கொண்டுதன்லோகத்துக்குக் கொண்டுபோகிறது. அக்கினிலோகத்திலிருந்து **தினஅபிமானிதேவதை** தன்லோகத்துக்குக் கொண்டுபோகிறது. அங்கிருந்து **சுக்கிலபக்ஷஅபிமானி** தேவதைதன்லோகத்துக்குக்கொண்டுபோகிறது. அங்கிருந்து **உத்தராயணகால** அபிமானிதேவதை தன்லோகத்துக்கும் அங்கிருந்து **ஸம்வத்ஸரஅபிமானி**தேவதை தன்லோகத்துக்கும் அங்கிருந்து **தேவலோகஅபிமானி**தேவதை தன்லோகத்துக்கும் அங்கிருந்து **வாயுஅபிமானி**தேவதைதன்லோகத்துக்கும் அங்கிருந்து **சூரியதேவதை**தன்லோகத்துக்கும் அங்கிருந்து**சந்திர**தேவதைதன்லோகத்துக்கும் அங்கிருந்து **மின்னல்**அபிமானிதேவதை தன்லோகத்துக்கும் இந்தலிங்கசரீரத்தைக் கொண்டுபோகின்றன. இந்த **மின்னல்** அபிமானிதேவதையின் லோகத்தில் ஹிரண்யகர்ப்பனுடைய உத்திரவின்படி ஹிரண்யகர்ப்பலோகத்தில் வசிக்கிறவனும் ஹிரண்யகர்ப்பனுக்குச்சமானமானரூபத்தையுடையவனுமான ஒரு **திவ்விய புருஷன்** இந்த உபாஸகனைக் கொண்டுபோக இவனிடத்தில் வந்துசேருகிறான். இந்த**மின்னல்** அபிமானிதேவதையின் லோகத்திலிருந்து **வருண**லோகத்துக்கு அவன்அந்த உபாஸகனைக்கொண்டுபோகிறான். பின்பு **வருணலோகத்**திலிருந்து **இந்திரலோகம்** வரையில் வருணதேவதையுடனும் ஹிரண்யகர்ப்பலோகவாசியுடனும் உபாசகன்போகிறான் இந்திரலோகமுதல்**பிரஜாபதிலோகம்**வரையில் இந்திரனுடனும்ஹிரண்யகர்ப்பவாசியுடனும் போகிறான். அங்கிருந்து பிரஜாபதி பிர்ம்மலோகம்வரையில் அவ்விருவர்களுடன் போகச்சமர்த்தனாகாதபடியால் உபாஸகன்மட்டு ஹிரண்யகர்ப்பவாசியுடன் **பிர்ம்மலோகத்**துக்குப்போகிறான். பிர்ம்

---

48. மரணசமயத்தில் ஸ்தூல சரீரத்தினின்றும் லிங்க சரீரம் பிரிகிறதினால் சேதன மில்லாமற் போகிறது.ஆனதினால் உபாஸகனுடைய பிராணேந்திரியங்கள் மூர்ச்சை யடைகின்றன. ஆகையால் யாதொன்றும் செய்ய அவைகள் சமர்த்தமாகிறதில்லை. கிரியாசக்தியுள்ளபிராணன்ஸ்வரூபத்தில் ஜடமாயிருப்பதால் அதற்கு இச்சையில்லை. ஆதலால்அதுஎங்கும்போக சமர்த்தமாகிறதில்லை.

மலோகத்தின் அதிபதி ஹிரண்யகர்ப்பன். ஸூக்ஷ்மசமஷ்டியின் அபிமானி சேதனத்துக்கு ஹிரண்யகர்ப்பனென்றும் காரியப்பிர்ம்மமென்றும் பெயர். காரியப்பிர்ம்மத்தின் இருப்பிடத்துக்கும் பிர்ம்மலோகமென்று பெயர்.

**362. சாயுஜ்யமோக்ஷம்:**—மேற்சொன்னபடி ஓங்காரத்தைச் சுத்தபிர்ம்மரூபமாகப் பாவித்து உபாஸனைசெய்கிறவனுக்குச் சுத்தப்பிர்ம்மங்கிடைக்கவேண்டியதவசியமானாலும் சுத்தப்பிர்ம்மம் ஞானத்தினாலேயே அடையப்படும். இச்சைரூபப்பிரதிபந்தத்தால் ஞானமுண்டாகாதவனுக்குக் காரியப்பிர்ம்மத்தின் சாயுஜ்யரூபமோக்ஷங் கிடைக்கிறது. பிர்ம்மலோகத்தை யடைந்த உபாஸகனுக்கு ஹிரண்யகர்ப்பனுடைய விபூதிகளுக்குச்சமானமான விபூதிகள்கிடைக்கின்றன. அவன் சத்தியசங்கல்பனுகிருன். இச்சிக்கிற சரீரம் உண்டாகிறது. இச்சிக்கும் போகங்களெல்லாம் சங்கல்பத்தினாலேயே கிடைக்கின்றன. ஒருசமயத்தில் ஆயிரம் சரீரங்களால் அவ்வவற்றின் போகங்களைத் தனித்தனியே புஜிக்கவேண்டுமென்று இச்சையுண்டானாலும் ஒவ்வொரு போகத்துக்கும் வேண்டிய சாமக்கிரிகளுமுண்டாகின்றன. அதிகமாய்ச் சொல்வானேன். எந்தச்சங்கல்பஞ் செய்தாலும் சித்தியாகிறது. ஆனால் ஜகத்தின் சிருஷ்டிஸ்திதிஸம்ஹாரம் மூன்றுந்தவிர இஸ்வரனுடைய மற்றவிபூதிகளெல்லாங்கிடைக்கின்றன. இதற்குத்தான் சாயுஜ்யமோக்ஷ மென்று பெயர். இப்படி ஹிரண்யகர்ப்பனுக்குச் சமானமாகிறவன் வெகுகாலஞ்சத்தியசங்கல்பனாகித்திவ்வியமான பதார்த்தங்களைப் புஜித்துப் பிரளயகாலத்தில் ஹிரண்யகர்ப்பலோகத்துக்குநாசம் வரும்போது ஞானமடைந்து விதேகமோக்ஷத்தையடைகிருன்.

363 ஓங்காரரூபப் பிர்ம்மத்தை யுபாசிக்கிறவனுக்குப் பிர்ம்மலோகப்பிராப்திமூலமாக மோக்ஷங்கிடைப்பதுபோல்வேறு உபநிஷத்துகளிற் சொல்லிய பிர்ம்மஉபாஸனையினாலும் இதேபலன் உண்டாகிறது. ஆனால் அகங்கிரகஉபாஸனையன்றியில் வேறு உபாஸனையால் பிர்ம்மலோக மடையப்படமாட்டாதென்று சூத்திரக்காரரும் பாஷியக்காரரும்[49] நாலாவது அத்தியாயத்திற் சொல்லியிருக்கிருர்கள். நர்மதையின் பாணங்களைச் சிவரூபமாகவும் சாளிக்கிராமங்களை விஷ்ணுரூபமாகவும்

49. பிரம்மசூத்திரத்தின் (இந்தபக்கத்தில்)

தியானஞ்செய்தல் பிரதீகத்தியானமேதவிர அகங்கிரகத்தியானமன்று. அப்படியே மனதைப் பிர்ம்மரூபமாகவும் சூரியனைப் பிர்ம்மரூபமாகவும் தியானஞ்செய்தல் பிரதீகத்தியானமேதவிர அகங்கிரகத்தியானமன்று. இவைகளாற் பிர்ம்மலோகம் அடையப்படமாட்டாது. சகுணம் அல்லது நிர்க்குணமாயிருக்கிற பிர்ம்மத்தைத்தனக்கு அபேதமாகச் சிந்தனைசெய்தல் அகங்கிரகத்தியானமென்னப்படும். இதனால்தான் பிர்ம்மலோகங்கிடைக்கும்.

364. முன் சொன்னமார்க்கம் உத்தராயணமார்க்கம் அல்லது தேவமார்க்கமென்னப்படும். இந்தத்தேவமார்க்கத்தால் பிர்ம்மலோகத்துக்குப்போன உபாஸகனுக்கு மறுபடியும் சமுசாரமுண்டாகிறதில்லை. ஆனால் அவனுக்கு ஞானமுண்டாகி அவன் விதேகமுக்தியையடைகிறான். அவ்விடத்தில் ஞானசாதனங்களான குரு உபதேசாதிகள் வேண்டியதில்லை. ஆனால் பிர்ம்மலோகத்தில் குரு உபதேசாதி சாதனங்களன்றியிலேயே ஞானமுண்டாகிறது. ஏனெனில் பிர்ம்மலோகத்தில் தமோகுணரஜோகுணங்களின் லேசமுமில்லை. அந்தலோகம் கேவலம் சத்துவகுணப்பிரதானமானது. தமோகுணமில்லாததினால் ஜடத்துவம் ஆலசியம் முதலியவைகள் இல்லை. ரஜோகுணமில்லாததினால் காமக்குரோதாதிரூப ரஜோகுணத்தின் காரியமான விக்ஷேபமில்லை. கேவலம் சத்துவகுணமிருப்பதால் அதின் காரியமான ஞானரூபப்பிரகாசம் அந்தலோகத்தில் முக்கியமாயிருக்கிறது.

365. ஓங்காரத்தைப்பிர்ம்மரூபமாக முதலில் உபாசிக்கிறவன் ஓங்காரத்தின் மாத்திரைகளின் அர்த்தத்தை அடியில் சொல்லுமாறு சிந்தனை செய்யவேண்டியது. ஸ்தூலஉபாதிசகிதமான விராட்டு விசுவன் இவைகளின் சேதனம் **அகாரத்தின்வாச்சியம்.** சூக்ஷ்மஉபாதிசகித ஹிரண்யகர்ப்பன் தைஜஸன் இவைகளின் சேதனம் **உகாரத்தின்** வாச்சியம். காரணஉபாதிசகித ஈசுவரன் பிராஞ்ஞன் இவைகளின் செதனம் **மகாரத்தின்** வாச்சியம். இப்படி அர்த்தத்தைச்சிந்திக்கிறவனுக்குப்பிர்ம்மலோகத்தில் ஸ்மரணையுண்டாகிறது. சத்துவகுணப்பிரதானத்தால் அடியில் கண்டபடி விவேசனமுண்டாகிறது. ஸ்தூலோபாதியால் சேதனத்தில் விராட்விசுவங்கள் பிரதீதியாகின்றன. ஸ்தூலசமஷ்டி திர்ஷ்டியால் விராட்டென்றும் ஸ்தூலவியஷ்டி திர்ஷ்டியால் வி

சுவனென்றும் தோன்றுகின்றன. சமஷ்டி வியஷ்டி ஸ்தூலதிர்ஷ்டியன்றியில் விராட் விசுவபாவங்கள் தோன்றுகிறதில்லை. ஆனல் சேதனமட்டும் விளங்குகிறது. அப்படியே சூக்ஷ்மஉபாதிசகித ஹிரண்யசர்ப்ப தைஜஸசேதனம் உகாரத்தின் வாச்சியமென்றவிடத்தில் சமஷ்டிசூக்ஷ்ம உபாதி திர்ஷ்டியால் சேதனத்தில் ஹிரண்யகர்ப்பனும் வியஷ்டிசூக்ஷ்மஉபாதி திர்ஷ்டியால் தைஜஸனும் விளங்குகிறார்கள். சூக்ஷ்மஉபாதி திர்ஷ்டியன்றியில் ஹிரண்யசர்ப்ப தைஜஸபாவங்கள் தோன்றுகிறதில்லை. அப்படியே மகாரத்தின் வாச்சியம் ஈஸ்வரன் பிராஞ்ஞனென்றவிடத்தில் சமஷ்டியஞ்ஞான உபாதிதிர்ஷ்டியால் சேதனத்தில் ஈஸ்வரனும் வியஷ்டியஞ்ஞான உபாதிதிர்ஷ்டியால் பிராஞ்ஞனும் தோன்றுகிறார்கள். அஞ்ஞான உபாதிதிர்ஷ்டியன்றியில் ஈஸ்வரப்பிராஞ்ஞபாவங்கள் தோன்றுகிறதில்லை. எந்த வஸ்து எதினிடத்தில் வேறுதிர்ஷ்டியால் பிரதீதியாகிறதோ அது அதினிடத்தில் பாரமார்த்திகத்தில் இருக்கிறதில்லை. எதின் எந்தரூபம் வேறுதிர்ஷ்டியன்றியில் பிரதீதியாகிறதோ அது அதின் பாரமார்த்திகரூபமாயிருக்கிறது.

உதாரணம்:— ஒரேபுருஷனிடத்தில் பிதாதிர்ஷ்டியால புத்திரபாவமும், பாட்டன் திர்ஷ்டியால் பவுத்திரபாவமும் விளங்குகின்றன. இந்தப்பாவங்கள் பாரமார்த்திகத்தில் இல்லை. புருஷனுடைய பிண்டமே பாரமார்த்திகத்திலிருக்கிறது. இதுபோல் ஸ்தூலசூக்ஷ்மகாரண உபாதி திர்ஷ்டியால் விராட்விசுவாதிகள் தோன்றுகின்றன. இவைகள் மித்தை. சேதனமட்டும் சத்தியம். இந்தச்சேதனம் யாதொரு பேதமுமில்லாதது. ஏனெனில் விராட்டுக்கும் விசுவனுக்குமிருக்கிற பேதம் உபாதியாலுண்டாயிருக்கிறது. இரண்டுக்கும் உபாதி ஸ்தூலமாயிருந்தாலும் விராட்டுக்கு உபாதி சமஷ்டிஸ்தூலமாயும் விசுவனுக்கு உபாதி வியஷ்டிஸ்தூலமாயுமிருப்பதால் சமஷ்டி வியஷ்டி உபாதியால் இவைகளுக்குப்பேதமேதவிர ஸ்வரூபத்தில் பேதமில்லை. இப்படியே தைஜஸனுக்கும் ஹிரண்யகர்ப்பனுக்கும் சமஷ்டி வியஷ்டி உபாதியால் பேதமேதவிர ஸ்வரூபத்திலில்லை. ஈசுவரனுக்கும் பிராஞ்ஞனுக்கும் சமஷ்டி வியஷ்டி உபாதியால் பேதமேதவிர ஸ்வரூபத்திலில்லை. இவ்விதமாகப்பிராஞ்ஞனுக்கும் ஈசுவரனுக்கும் அபேதம், தைஜஸனுக்கும் ஹிரண்யகர்ப்பனுக்கும் அபேதம், விசுவனுக்கும் விராட்டுக்கும் அபேதமேற்படுகிறது. இவ்விதமாக, ஸ்தூலோபாதியுடன்கூடினவனுக்கும் சூக்ஷ்மோபாதியுடன்கூடினவனுக்கும் காரணஉபாதியுடன்கூடினவனுக்கும் பேதமி

ல்லை. ஏனெனில் ஸ்தூலசூக்ஷ்மகாரண உபாதிதிர்ஷ்டியை விட்டுவிட்டால் சேதனஸ்வரூபத்தில் எவ்விதபேதமும் தோன்றுகிறதில்லை. மேலும் சேதனத்துக்கும் அனாத்மாவுக்குங்கூடப்பேதமில்லை. ஏனெனில் அனாத்மதேகாதிகள் அவித்தியாகாலத்தில் தோன்றுகின்றன. பரமார்த்தத்தில் தோன்றுகிறதில்லை. ஆகையால் அவைகளுக்கும் சேதனத்துக்கும் பேதம் சொல்வது சரியன்று. இவ்விதமாகச்சர்வபேதரகிதமாயும் அசங்கமாயும் நிர்விகாரமாயும் நித்தியமுக்தமாயும் பிரம்மரூபமாயும் இருக்கிற ஆத்மா ஓங்காரத்துக்கு லக்ஷியமாயும் ஸ்வயம்பிரகாசரூபமாயும் இந்த உபாஸகனுக்கு விளங்குகிறது. ஆனதால் ஹிரண்யகர்ப்பலோகத்தில் வசிக்கிறனுக்குச்சமுசாரமுண்டாகிறதில்லை.

366. மகாவாக்கிய விவேகமன்றியில் ஞானமுண்டாகாவிட்டாலும் ஓங்காரத்தின் ஞானமே மகாவாக்கியத்தின் ஞானமாயிருக்கிறது. ஸ்தூலோபாதிசகிதசேதனம் அகாரத்தின் வாச்சியம். ஸ்தூலோபாதிரகிதசேதனம் அகாரத்தின் லக்ஷியம். சூக்ஷ்மோபாதிசகிதசேதனம் உகாரத்தின் வாச்சியம். சூக்ஷ்மோபாதிரகித கேவலசேதனம் உகாரத்தின் லக்ஷியம். காரணஉபாதிசகிதசேதனம் மகாரத்தின் வாச்சியம். காரண உபாதிரகிதகேவலசேதனம் மகாரத்தின் லக்ஷியம். இவ்விதமாக உபாதிசகிதவிசுவாதிகள் அகாராதிமாத்திரைகளின் வாச்சியங்களாம். உபாதிரகிதசேதனம் எல்லாமாத்திரைகளுக்கும் லக்ஷியமாம். அப்படியே நாமரூபசகல உபாதிசகிதசேதனமும் ஓங்காரத்தின் வாச்சியம். நாமரூபஸகல உபாதிரகிதசேதனமும் ஓங்காரத்தின் லக்ஷியம். இவ்விதமாக ஓங்காரத்துக்கும் மகாவாக்கியத்துக்கும் அர்த்தம் ஒன்றாகவேயிருக்கிறது. ஆனதால் ஓங்காரவிவேகத்தால் அத்வைதஞானமுண்டாகிறது. இவ்விதமாக ஆசாரியர்வாக்கினின்றும் சிரவணஞ்செய்து அதிர்ஷ்டியாகிற மத்தியமசிஷ்யன் உபாஸனையில் பிரவிர்த்தித்து ஞானமூலமாகப்பரமபுருஷார்த்தமான மோக்ஷத்தையடைந்தான்.

367. நிர்க்குணஉபாஸனையில்[50] அதிகாரமில்லாதவன் செய்யவே

---

50. வேதாந்தச் சிரவணமனனரூப விசாரத்திற் பிரவர்த்தித்த ஜிஞ்ஞாசு இதர சாதனங்களை தேடவேண்டியதில்லை. இவைகளைவிட்டு வேறுசாதனங்களைத் தேடுகிறவன் ஆருடபதித்னுகிறன். ஆகையால் திடஞானமுண்

ண்டியதென்னவெனில், [51]சகுணஈசுவரனை மனதில் தரிக்கவேண்டியது. சகுண உபாஸனை செய்யாவிட்டால் [52]நிஷ்காமகர்மஞ்செய்து ராமனைப்பூஜிக்கவேண்டியது. நிஷ்காமகர்மஞ்செய்யாவிட்டால் ஸகாமசுபகர்மஞ் செய்யவேண்டியது. அதுவுஞ்செய்யாதசடன் அடிக்கடி ஜனனமரணத்தையடைவான்.

368. ஓங்காரஅர்த்தத்தையறிந்து அதிர்ஷ்டியானவன் கிருதார்த்தனானன். இத்தரங்கத்தைப்படிக்கிறவனைச்சுதிர்ஷ்டியாகக்குருசெய்கிறார்.

ஐந்தாவதுதரங்கம் முற்றிற்று.

ஸ்ரீ:ஓம்

---

டாகிறவரையில் அவன் விசாரந்தான் செய்யவேண்டியது. விசாரத்திற் பிரவிர்த்திக்காதவன் நிர்க்குண உபாஸனை செய்யவேண்டியது. இதுவும் செய்யாதவன் ஸகுண உபாஸனைசெய்யவேண்டியது.

51. மாயாவிசிஷ்ட சேதனரூப காரணப் பிர்ம்மம் அல்லது ஹிரண்யகர்ப்ப வைசுவாநரஸ்ரீ ஹரகௌரீகணேச சூரியாதிரூப காரியப் பிர்ம்மம் அல்லது பிரதிமாதிரூபப் பிரதிநிதிகள் இவைகள் ஸகுண ஈஸ்வரசப்தத்தால் கிரகிக்கத்தக்கவை.

52. பலாபேக்ஷயன்றியில்

# விசாரசாகரம்

## 6-வது தரங்கம்.

### I. ஜாக்கிரதஸ்வப்நங்கள் சமானம் (369—419)

369. பூர்வபீடிகை:— நான்காவது தரங்கத்தில் உத்தமாதிகாரி[1] யின் உபதேசப்பிரகாரஞ் சொல்லப்பட்டது. ஐந்தாவது தரங்கத்தில் மத்தியமாதிகாரியின்[2] உபதேசப்பிரகாரஞ் சொல்லப்பட்டது. இந்தத் தரங்கத்தில் கனிஷ்டாதிகாரியின் உபதேசப்பிரகாரத்தைச் சொல்லுகிறேன். எவனுக்குச் சந்தேகங்கள் விசேஷமாய் ஜனிக்கின்றனவோ அவன் புத்தி தீவிரமாயிருந்தாலும் அவன் கனிஷ்டாதிகாரியென்று சொல்லப்படுகிறான். இந்தத் தரங்கம் யுக்திப்பிரதானமானதால் கேட்ட அர்த்தத்தில் குதர்க்கந்தோன்றுகிறவனுக்கு இந்தத்தரங்கமுபயோகப்படும். குதர்க்கத்தால் தூஷிக்கப்பட்ட புத்தியையுடையவன் கனிஷ்டாதிகாரி. இவனுடைய உபதேசப்பிரகாரம். இந்தத்தரங்கத்திற் சொல்லப்படும். ஐந்தாவது தரங்கத்திற் பிரணவோபாஸனை ஜகத்துற்பத்தி இவைகளின் நிரூபணத்துக்குமுன் (281—284) 'சேதனத்துக்கு வேறான அஞ்ஞானமும் அதின் காரியமும் அனாத்மாவென்றும், அனாத்மபதார்த்தங்களெல்லாம் சொப்பனம் போல மித்தையென்றும்' சொன்னதை தர்க்கதிருஷ்டி கேட்டு, இரண்டு தமையன்மார்களுங் கேள்விகேட்காமல் மவுனமாயிருந்ததைப்பார்த்து தர்க்கதிர்ஷ்டி கேட்கிறான்.

370. கேள்வி (370—371):— மூன் சுத்தமாயறியப்படாத பதார்த்தத்தின் ஞானம் சொப்பனத்தில் உண்டாகிறதில்லை. ஆனால் ஜாக்கிரதத்தில் எதின் அனுபவஞானமிருக்கிறதோ அதின் ஸ்மரணை சொப்பனத்திலுமுண்டாகிறது.[3] ஆகையால் ஸ்மிருதிஞானத்துக்கு விஷயமான ஜாக்கிரதபதார்த்தங்கள் சத்தியமாயிருப்பதால் சொப்பனத்திலுண்டாகிற அவைகளின் ஸ்மிருதிரூபஞானமும் சத்தியமே. ஆகையால் சொப்பனதிருஷ்டாந்தத்தால் ஜாக்கிரதபதார்த்தங்கள் பொய்யென்று சொன்னது சரியன்று.

---

1- 2. 4-வது தரங்கத்தின் 60-வது குறிப்பைப்பார்க்க.

3. இது நையாயிகமதம்.

371. சொப்பனஞானத்திற்கு விஷயமான பதார்த்தம் சத்தியமே தவிர மித்தையல்லவென்பதை வேறுவிதமாய்ப் பிரதிபாதிக்கிறேன். எப்படியெனில், சொப்பனவஸ்தையில் ஸ்தூலசரீரத்தை விட்டு லிங்க[4]சரீரம் வெளியே சென்று சத்தியமான பர்வதம் சமுத்திரம் முதலியவைகளைப் பார்க்கிறது. ஆனதால் சொப்பனம் பொய்யன்று.

372. தரு உத்தரம் (372—419):— பூர்வகாலத்துடன் சம்பந்தப்பட்ட பதார்த்தத்தின் ஞானம் ஸ்மரணையென்னப்படும். முன் பார்த்த யானையைக்குறித்துண்டாகும் 'அந்த யானை' எனகிற ஞானம் ஸ்மரணைரூபம். எதிரில் நிற்கும யானையைக்கண்டு 'இது யானை' என்று உண்டாகும ஞானம் ஸ்மரணையன்று, இது பிரத்தியக்ஷம். சொப்பனத்தில் 'இந்த யானை எதிரில் நிற்கிறது' 'இது நதி' 'இது மலே' என்று ஞானமுண்டாகிறது. ஆகையால் ஜாக்கிரத்திற்பார்த்த பதார்த்தங்களின் ஸ்மரணை சொப்பனத்தில் உண்டாகிறதில்லை. ஆனல் யானை முதலானவைகளின் பிரத்தியக்ஷஞானம் உண்டாகிறது.

373, "ஜாக்கிரதகாலத்தில் அறியப்பட்ட பதார்த்தங்கள்தான் சொப்பனத்தில் அறியப்படுகின்றன. அறியப்படாத பதார்த்தத்தின் ஞானமுண்டாகிறதில்லை. ஆகையால் ஜாக்கிரதபதார்த்தத்தின் ஞானசம்ஸ்காரத்தால் சொப்பனத்தில் ஞானமுண்டாகிறது. சம்ஸ்காரஜன்யஞானம் ஸ்மிருதியென்னப்படும. ஆனதால் சொப்பனத்திலுண்டாகும் ஞானம் ஸ்மிருதிரூபம்". இப்படி ஒருவன் செயயும் ஆக்ஷேபம் சரியன்று. ஏனெனில், பிரத்தியக்ஷஞானமிருவகை. ஒன்று அபிஞ்ஞாரூபப்பிரத்தியக்ஷம். மற்றொன்று பிரத்தியபிஞ்ஞாரூபபிரத்தியக்ஷம். கேவலம் இந்திரிய சம்பந்தத்தாலுண்டாகும் ஞானம் அபிஞ்ஞாப்பிரத்தியக்ஷமென்னப்படும். 'இது யானை' என்று நேத்திரசம்பந்தத்தாலுண்டாகும் யானையின் ஞானம் அபிஞ்ஞாப்பிரத்தியக்ஷம். முந்திய ஞானத்தின் சம்ஸ்காரத்தினலும் இந்திரியசம்பந்தத்தினலும் உண்டாகும் ஞானம் பிரத்தியபிஞ்ஞாப்பிரத்தியக்ஷம். முன் பார்த்த யானை யெதிரில் காணப்படும்போது அந்த யானை இது தான் என்று உண்டாகும் ஞானம் பிரத்தியபிஞ்ஞாபிரத்தியக்ஷம். இவ்விடத்தில் முன் பார்த்த யானையின் ஞானசம்ஸ்காரமும் யானையுடன் நேத்திரசம்பந்தமும் பிரத்தியபிஞ்ஞாபிரத்தியக்ஷத்துக்கு ஹேதுக்களாயிருக்கின்றன. ஆனதால் சம்ஸ்காரஜன்யஞானமே ஸ்மிருதிரூபமாயிருக்கிறதென்கிற நியமமில்லை. பிரத்தியபிஞ்ஞாப்பிரத்தியக்ஷஞானமும் சம்ஸ்காரஜன்யமாயிருக்கிறது. இந்திரியசம்பந்தமன்றியில்

4. சூட்சுமசரீரம்.

கேவலம் சம்ஸ்காரஜன்யஞானம் ஸ்மிருதிஞானமென்னப்படும்.[5] சொப்பனத்தில் யானை முதலானவைகளின் ஞானம் கேவலம் சம்ஸ்காரஜன்யமன்று. ஆனால் அது நித்திரைரூபதோஷஜன்யமாகிறது. யானை முதலானவைகள்போல் சொப்பனத்தில் கல்பிக்கப்பட்ட இந்திரியங்களுமிருக்கின்றன. ஆகையால் அவைகளின் ஞானம் இந்திரியஜன்யமாயிருக்கிறது. சொப்பனபதார்த்தம் (144) ஸாக்ஷீபாஸியமாயிருந்தாலும் இந்திரியஜன்யஞானத்துக்கு விஷயமாகாவிட்டாலும் அவிவேகதிருஷ்டியால சொப்பனஞானம் இந்தியஜன்யமென்று சொல்லப்படுகிறது. இவ்விதமாகச் சொப்பனத்திலுண்டாகும் ஞானம் ஜாக்கிரதபதார்த்தத்தின் ஸ்மரணையன்று.

374. நித்திரைவிட்டு விழித்துக்கொண்ட புருஷன் 'நான் சொப்பனத்தில் யானைமுதலியவைகளைப் பார்த்தேன்' என்று சொல்லுகிறான். சொப்பனத்தில் யானைமுதலியவைகளின் ஸ்மரணை யிருக்கும்பக்ஷத்தில் 'எனக்குச் சொப்பனத்தில் யானைமுதலியவைகளின் ஸ்மரணை யிருக்கிறது, என விழித்துக்கொண்டவன் சொல்லக்கூடும். ஆனால் இப்படி ஒருவரும் சொல்வாரில்லை. ஆகையால் ஜாக்கிரதபதார்த்தங்களின் ஸ்மரணை சொப்பனத்திலுண்டாகிறதில்லை.

375. ஜாக்கிரதகாலத்தில் பார்த்த கேட்ட பதார்த்தத்தின் ஞானந்தான் சொப்பனத்திலுண்டாகிற தென்கிற நியமமில்லை, ஜாக்கிரதகாலத்தில் அறியப்படாத பதார்த்தத்தின் ஞானமும் சொப்பனத்திலுண்டாகிறது. ஜன்மம் முழுமையிலும் பார்க்காததும் கேட்காததுமான ஒரு விலக்ஷணபதார்த்தம் சொப்பனத்தில் தோன்றுகிறது. இதின் ஞானம் ஸ்மரணையன்று.

"இந்த ஜன்மத்தின் பதார்த்தஞானசம்ஸ்காரந்தான் ஸ்மரணைக்கு ஹேது வென்கிற நியமமில்லை. ஜன்மாந்தர ஞான சம்ஸ்காரத்தாலும் ஸ்மரணை யுண்டாகக்கூடும். ஏனெனில் அனுகூல ஞானத்தால் பிரவிர்த்தியுண்டாகிறது. அனுகூலஞானமன்றியில் பிரவிர்த்தி யுண்கிறதில்லை. ஆகையால் ஸ்தன்னிய பானத்தில் பாலர்களுக்குண்டாகிற

---

5. ஸம்ஸ்காரஜன்யஞானத்தை ஸ்மிருதி என்று சொல்லும்பக்ஷத்தில் பிரத்தியபிஞ்ஞா பிரத்தியக்ஷஞானத்திலும் ஸம்ஸ்காரஜன்யஞானமிருப்பதால் அதிவியாப்திதோஷமுண்டாகும். இதை நீக்குவதற்காக கேவலம் ஸம்ஸ்காரஜன்யஞானம் ஸ்மிருதி என்றும் இந்திரிய ஜன்யஞானசகித ஸம்ஸ்காரஜன்யஞானம் பிரத்தியபிஞ்ஞாபிரத்தியக்ஷமென்றும் சொல்லப்படுகின்றன.

முதற் பிரவிர்த்திக்குக் காரணம் வேறு ஜன்மத்திற் செய்த அநுகூலமான அநுபவத்தின் சம்ஸ்காரந்தான். இந்த ஸம்ஸ்காரத்தால் பாலர்களுக்கு அநுகூலத்தின் ஸ்மரணையுண்டாகிறது. ஆனதால் ஜன்மாந்திர ஞானஸம்ஸ்காரத்தாலும் ஸ்மிருதி யுண்டாகக்கூடும். அப்படியே இந்த ஜன்மத்தில் அறியப்படாத பதார்த்தத்தின் ஞானம் ஜன்மாந்திரத்தின் ஞானஸம்ஸ்காரத்தால் சொப்பனத்தில் ஸ்மிருதிரூபமாயிருக்கக்கூடும்". ஆயினும் ஜாக்கிரத காலத்தில் எந்த ஜன்மத்திலும் இருக்கத்தகாதபதார்த்தம் சொப்பனத்தில் பிரதீதியாகிறது. தன் தலையை வெட்டுவதை தன் கண்ணால் பார்ப்பதுபோலும். தன் தலையை வெட்டுவதை எவனும் எந்த ஜாக்கிரதாவஸ்தையிலும் பார்க்கிறதில்லை. ஆகையால் ஜாக்கிரதபதார்த்தத்தின் ஞானஸம்ஸ்காரத்தால் சொப்பனத்தில் ஸ்மிருதி யுண்டாகிறதில்லை. சொப்பனம் ஸ்மிருதி ரூபமென்பதைக் கண்டனை செய்வதில் அனேக யுக்திகளைக் கிரந்தக்காரர்கள் சொல்லியிருக்கிறார்கள். சொப்பனத்தை ஸ்மிருதிரூபமாக நினைப்பதில் முன் செய்த ஆக்ஷேபம் அதிகப் பிரபலமாயிருக்கிறது. ஸ்மிருதிஞானத்தின் விஷயம் எதிரில் பிரதீதியாகிறதில்லை. சொப்பனத்தின் யானை முதலியவைகள் சொப்பனகாலத்தில் எதிரில் தோன்றுகின்றன. ஆகையால் யானை முதலியவைகளின் ஸ்மரணை ஸ்வப்பனத்திலுண்டாகிறதில்லை.

376. 371ல் கண்ட ஆக்ஷேபத்துக்கு உத்தரம் (376—81) — லிங்கசரீரம் வெளியே சென்று சத்தியசமுத்திராதிகளைப் பார்க்கிறதென்று சொன்ன ஆக்ஷேபத்துக்குச் சமாதானம். ஸ்தூல சரீரத்திலிருந்து வெளியே சென்று லிங்கசரீரம் சமுத்திராதிகளைப் பார்க்கும் பக்ஷத்தில் அதுவெளியே போவதால் மரணாவஸ்தையில் சரீரம் பயங்காரமாய்த் தோன்றுவதுபோல் சொப்பனாவஸ்தையிலும் லிங்கசரீரம் இல்லாதபடியால் ஸ்தூல சரீரம் பயங்கரமாயும் பிராணனில்லாத பிணம்போலவும் தோன்றவேண்டும். ஆனால் சொப்பனாவஸ்தையில் அப்படியில்லை. சொப்பனாவஸ்தையில் ஸ்தூலசரீரம், பிராணசகிதமாயும் ஜாக்கிரதத்திற்போல மங்களரூபமாயுமிருக்கிறது. ஆகையால் ஸ்தூல சரீரத்தை விட்டு வெளியே லிங்கசரீரம் சொப்பனாவஸ்தையிற் போகிறதில்லை.

377. ஆக்ஷேபம்:— சொப்பனாவஸ்தையில் பிராணன் வெளியே போகிறதில்லை. ஆனால் அந்தக்கரணமும் இந்திரியமும் வெளியிலுள்ளபர்வதாதிகளுக்குப் போய் அவைகளைப்பார்க்கின்றன. பிராணன் வெளியேபோகாமையினால் ஸ்தூல சரீரம் மரணாவஸ்தையிற்போல் பயங்கரமாயிருக்கிறதில்லை. மேலும் பிராணன் வெளியே போகிறதிலும் யாதொரு பிரயோஜனமுமில்லை. ஏனெனில் பிராணனிடத்தில் ஞான சக்தியில்லை, கிரியாசக்திதானிருக்கிறது. ஆகையால் வெளியேயுள்ள

பதார்த்தங்களையறியச் சமர்த்தமானதுதான் வெளியேபோகிறது. ஞானசக்தி அந்தக்கரணத்திலும் இந்தியத்திலுமிருக்கிறது. பிராணனிற்போல, கர்மேந்திரியத்திலும் ஞானசக்தியில்லை. கிரியாசக்தி தானிருக்கிறது. ஆகையால் பிராணனும் கர்மேந்திரியமும் சரீரத்தில் தங்குகின்றன; அந்தக்கரணமும இந்திரியமும் வெளியே போய்ச் சத்தியபர்வதாதிகளைப் பார்த்து பிராணகர்மேந்திரியங்களிடத்தில் வந்துசேருகின்றன.

378. இந்த ஆக்ஷேபம் சரியன்று. ஏனெனில் ஸ்தூலசூக்ஷ்மங்களுடன் கூடிய சரீரத்தில் பிராணன் பிரதானம். பிராணனன்றியில் சரீரமிருப்பதைப் பார்த்து அதை யொருக்ஷணங்கூட வைத்துக்கொள்ளுகிறதில்லை. வெளியேகொண்டுபோய்த் தகனம் செய்கிறார்கள். தொட்டால் முழுகுகிறார்கள். ஆகையால் ஸ்தூல சரீரத்துக்குப் பிரதானமானது பிராணன். அப்படியே சூக்ஷ்மசரீரத்திலும பிரதானமானது பிராணனே.

பிராணனும் இந்திரியாதிகளும் தங்களுக்குள் யார் சிரேஷ்டமென்று ஒன்றுக்கொன்று விவாதப்பட்டு பிரஜாபதியினிடத்தில் போய்க்கேட்டதாவது — ஸ்வாமின் எங்களுக்குள் யார்சிரேஷ்டன்? அப்போது பிரஜாபதி சொன்னதாவது:— நீங்கள் எல்லாரும் ஸ்தூல சரீரத்திற் பிரவேசித்து ஏவ்வொருவராக வெளியே வாருங்கள். எவன் வெளியேவருகிறதினால் ஸ்தூல சரீரம் அமங்களமாகி விழுந்து போகிறதோ அவன்தான் உங்களுக்குள் சிரேஷ்டன். பிரஜாபதியின் வார்த்தையைக்கேட்டு எல்லாரும் ஸ்தூலசரீரத்திற் பிரவேசித்தார்கள். நேத்திராதி இந்திரியங்கள் ஒவ்வொன்றும் வெளியே வருவதினால் சரீரம் அவ்வவ்விந்திரியரகிதமாய்க் காணப்பட்டது. பிராணன் வெளியே போகப்பிரயத்தனப்பட்டவுடன் சரீரம் விழுந்துபோயிற்று. அப்போது எல்லாருக்கும் ஸ்வாமி பிராணன் தான் என்று எல்லாரும் நிச்சயித்துக்கொண்டார்கள். இந்தக்காரணத்தால் பிராணன் இருக்கிற சரீரத்தில் இந்திரியாதிகளிருக்கின்றன. பிராணன் வெளியே போவதுடன் இந்திரியங்களும் வெளியே போகின்றன. ஆகையால் சூக்ஷ்ம சரீரத்துக்கு அரசன் போல் பிராணனே பிரதானம். பிராணன் போகாமல் அந்தக்கரணமும் இந்திரியங்களும் வெளியே போகிறதில்லை.

379. மேலும் அந்தக்கரணமும் (300) ஞானேந்திரியமும்(302) பூதங்களின் சத்துவகுணகாரியங்கள். அவைகளில் ஞானசக்தி யிருக்கிறதேதவிரக் கிரியாசக்தியில்லை. பிராணனிடத்தில் கிரியாசக்தி யிருக்கிறது. இதின் பலத்தினால் மரணசமயத்தில் லிங்கசரீரம் இந்த ஸ்தூலசரீரத்தை விட்டு லோகாந்திரத்துக்குப் போகிறது. மேலும் பிராணனுடை

ய பலத்தினுல்தான் இந்திரியங்கள் மூலமாக அந்தக்கரணத்தின் விர்த்தி வெளியிலுள்ள கடாதிகளின்சமீபத்திற் சொல்லுகிறது. பிராணனுடைய சகாயமன்றியில் அந்தக்கரணவிர்த்தி வெளியிற் செல்லமாட்டாது. இந்தக்காரணத்தால் யோகசாஸ்திரத்தில் பிராணநிரோதமன்றியில் மனநிரோதமாகிறதில்லை யென்றும் பிராணன் சஞ்சரிப்பதால் மனதுஞ்சஞ்சரிக்கிறதென்றும் பிராணநிரோதத்தால் மனதும் அடங்குகிறதென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் மனதை யடக்குகிறதாகிய ராஜயோகத்தில் இச்சையுள்ளவன் பிராணநிரோதரூப ஹடயோகத்தை யனுஷ்டிக்கவேண்டியது. ஆகையாலும் அந்தக்கரணத்தின் கமனம் பிராணாதீனமாயிருக்கிறது. பிராணன் வெளியே போகாமல் அந்தக்கரணமும் ஞானேந்திரியமும் வெளியே போகிறதில்லை. சொப்பனுவஸ்தையில் ஸ்தூலசரீரம் பிராணசகிதமாய்க் காணப்படுகிறது. ஆகையால் அந்தக்கரணம் சொப்பனத்தில் வெளியேசென்று சத்தியபதார்த்தங்களை யறிகிறது, யென்று சொன்னது சரியன்று.

380. யேனும் ஒருவன் சொப்பனத்தில் தன் சம்பந்தியுடன் கூடிச் சிலவியவகாரங்களைச் செய்கிறான், விழித்துக்கொண்டபின் அந்தச் சம்பந்தியைச் சந்தித்தபோது நாம் இருவரும் இராத்திரி இன்னவியவகாரத்தைச் செய்தோமென்று சொல்லுகிறதில்லை. பூர்வபக்ஷீதியாய் அவன் வெளியே சென்று சம்பந்தியைச் சந்தித்து வியவகாரஞ்செய்திருக்கிறான். அப்படிச்சந்தித்தும் வியவகரித்ததும் சம்பந்திக்கும் தெறிந்திருக்கவேண்டும். சமபந்தியும் இவனைக்கண்டதும அப்படியே சொல்லவேண்டும். ஆனல அனுபவத்தில் அப்படியில்லை. சித்தாந்தத்திலோ சம்பந்தியும்சந்தித்ததும் எல்லாடி உள்ளே கல்பிதங்களாம்.

381. மேலும் வெளியேசென்று சத்தியபதார்த்தங்களைப் பார்க்கும்பக்ஷத்தில் ராத்திரியில் தூங்குகிறவன் தஞ்சாவூர்பட்டணத்தில் மத்தியான்ன சூரியன் பிரகாசிக்கிறதாகவும் தஞ்சாவூர் காவேரிக்கு வடக்கிலிருக்கிறதாகவும் ஸ்வாமிமலை தஞ்சாவூருக்கு மேற்கிலிருக்கிறதாகவும் சொப்பனத்திற்பார்க்கிறான். இப்போது, இராத்திரியில் சூரியன் பிரகாசிக்கிறதில்லை. காவேரிக்கு வடக்கில் தஞ்சவூர் இல்லை. தஞ்சாவூருக்கு மேற்கில் ஸ்வாமிமலை இலலை. ஆகையாலும் சத்தியபதார்த்தங்கள் சொப்பனத்திற் காணப்படுகிறதில்லை. ஜாக்கிரதத்தின் ஸ்மரணை யுண்டாகிறதில்லை. ஈஸ்வரனுல் சிர்ஷ்டிக்கப்பட்ட பர்வதாதிகளின் ஞானமுமுண்டாகிறதில்லை. இவ்விதமாக இரண்டு சங்கைகளுக்கும் உத்தரஞ் சொல்லப்பட்டது.

## சித்தாந்தம்:— ஜாக்கிரத்தும சொப்பனமும் சமம் (382—(419)

382. **சொப்பனத்திலும் திரிபுடித் தோற்றமுண்டு (382—387)** ;— ஜாக்கிரதபதார்த்தத்தின் ஸ்மரணையும், லிங்கசரீரம் வெளியேபோகுதலும் சம்பவிக்காவிட்டாலும் ஜாக்கிரதத்திற்போல்சொப்பனத்திலும் ஞாதா ஞானம் ஞேயம் என்கிற திரிபுடி தோன்றுகிறது. ஆனதால் கழுத்தின் நாடிக்குள் இவைகளெல்லாமுண்டாகின்றனவெனச்சகலபிரமாணங்களுக்கும் பிரதானமானவேதஞ்சொல்லுகிறது. மாண்டூக்கிய உபநிஷத்தில் சொல்லியிருக்கிறதாவது, "ஜாக்கிரதகாலத்தின் பதார்த்தங்கள் சொப்பனத்தில் தொன்றுகிறதில்லை. ஆனல் ரதம், ரதிகள், குதிரைகள், மார்க்கம் இவைகளெல்லாம் சொப்பனத்தில் புதிதாயுண்டாகின்றன". ஆனதால் மலை சமுத்திரம் நதிவனம் கிராமம் பட்டணம் சூரியன் சந்திரன் முதலிய சொப்பனத்திற் பார்க்கப்படும் பதார்த்தங்களெல்லாம் புதிதாயுண்டாகின்றன. சொப்பனத்திற் பர்வதாதிகள் உண்டாகாதபக்ஷத்தில் அவைகளின்பிரத்தியக்ஷ ஞானமுண்டாகக்கூடாது. ஏனெனில் விஷயத்துக்கும் இந்திரியத்துக்கும் அந்தக்கரணவிருத்திக்குமுண்டாகிற சம்பந்தம் பிரத்தியக்ஷஞானத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. ஆகையால் பர்வதாதி விஷயங்கள் இவைகளின் ஞானத்துக்குச் சாதனமான அந்தக்கரணம இந்திரியங்கள் இவைகளெல்லாம் உள்ளே யுண்டாகின்றன.

383. சொப்பனபதார்த்தம் கிளிஞ்சிலில் வெள்ளிபோல் சாக்ஷிபாஸியமாயிருக்கிறது. சொப்பனஞானத்தில் அந்தக்கரண இந்திரியங்களின் உபயோகமில்லை. ஆகையால் ஞேயமான பர்வதாதிகள் சொப்பனத்தில் உண்டாகிறதாக நினைப்பது யுக்தம். ஞாதா ஞானம் இந்திரியங்கள் இவைகள் சொப்பனத்திலுண்டாவதாக நினைப்பது யுக்தமன்று. ஆயினும் எப்படிச்சொப்பனத்திற் பர்வதாதிகள் தோன்றுகின்றனவோ அப்படி இந்திரியம் அந்தக்கரணம் பிராணசக்திதஸ்தூலசரீரம் இவைகளும் தோன்றுகின்றன. ஆனதால் இவைகளும் உண்டாகிறதாக நினைப்பது யுக்தமே.

384. அன்றியும் சொப்பனபதார்த்தங்கள்நேத்திராதிகளுக்கு விஷயங்களாக விளங்குகின்றன. சொப்பனத்தின் பிராதிபாஸிகபதார்த்தங்கள் வியாவகாரிகநேத்திராதிகளுக்கும் விஷயங்களாகமாட்டா. ஏனெனில் சமசத்தையுடைய பதார்த்தங்களோ தங்களுக்குள் சாதகபாதகங்களாயிருக்கின்றனவென 5-வது தரங்கத்தில் (276) பிரதிபாதிக்கப்பட்டி

ருக்கிறது. ஆனதால் வியாவகாரிக நேத்திராதிகள் சரீரத்திலிருந்தாலும் அவைகளுக்கும் சொப்பனபதார்த்தங்களுக்கும் விஷயசத்தையிருப்பதால் அவைகளின் ஞானத்துக்குச்சொப்பனபதார்த்தங்கள் விஷயமாகமாட்டா.

385. அன்றியும வியாவகாரிக இந்திரியங்கள் தங்கள் தங்கள் கோளகங்களை விட்டுக்காரியஞ்செய்வதில் சமர்த்தமாகா. சொப்பனாவஸ்தையில் கைகால்வாக்கு இவைகளின் கோளகங்கள் சலனமிலலாமல் அன்னியனுக்குக்காணப்படுகின்றன. சொப்பனங்காண்கிறவன் கையில் திரவியத்தை யெடுத்துக்கொண்டு சொப்பனத்திலோடுகிறான். ஆனதால் சொப்பனத்தில் இந்திரியங்களினுற்பத்தியை, அவசியம் அங்கீகரிக்க வேண்டியது.

386. அப்படியே சுகம் துக்கம் இவைகளின் ஞானம் இந்தஞானத்துக்காசிரயமான பிரமாதா இவைகள் சொப்பனத்தில் தோன்றுகின்றன. இல்லாத பதார்த்தத்தின் தோற்றம் உண்டாகமாட்டாது. ஆனதால் சகலதிரிபுடிகளும் சொப்பனத்திலுண்டாகின்றன.

387. அநிர்வசனீயக்கியாதியின்ரீதி:— எவ்வளவு பிரமைஞானமுண்டோ அவ்வளவு அதின் விஷயங்களெல்லாம அநிர்வசனீயமாக உண்டாகின்றன. விஷயமன்றியில் யாதொரு ஞானமுமுண்டாகமாட்டாதென்பது சித்தாந்தம். [6] வேறு சாஸ்திரத்தில் ஒரு பதார்த்தம் வேறு ஒரு ரூபமாகத்தோன்றுகிறது பிரமையென்று சொல்லப்படுகிறது. சித்தாந்தத்தில் எப்படிப்பதார்த்தம் இருக்கிறதோ அப்படியே ஞானமுமுண்டாகிறது. ஆகையால் பிரமைஸ்தலத்திலும் விஷயம் அவசியமுண்டாகிறது. விஷயமன்றியில் ஞானமுண்டாகிறதில்லை. இவ்விதமாகச்சொப்பனத்தில் திரிபுடிதோன்றுவதால் எல்லாம் உற்பன்னமாகின்றன.

388. சொப்பனசித்தி (388—89):— இதில் ஒரு சங்கை. சொப்பனத்தில் தோன்றும் பதார்த்தத்தின் உற்பத்தியை அங்கீகரிக்கும்பக்ஷத்தில் சொப்பனதிருஷ்டாந்தத்தால் ஜாக்கிரதபதார்த்தங்கள் பொய்யென்று சித்தாந்தத்திற் சொல்லப்படுவதுபோல் சொப்பனபதார்த்தங்களும் ஜாக்கிரதபதார்த்தங்கள்போல் உற்பத்தியாகிறபடியால் சத்தியமென்றே சொல்லவேண்டும். சொப்பனபதார்த்தங்களினுற்பத்தியை ஒப்பாவிட்டால் இந்தத்தோஷமில்லை. ஏனெனில் ஜாக்கிரதபதார்த்தம்

---

6. இது சிந்தாமணி என்கிற நையாயிகனுடைய மதம். 4-வது தரங்கத்தின் 19-வது குறிப்பைப்பார்க்க.

கள் உற்பத்தியாகித்தோன்றுகின்றன. சொப்பனபதார்த்தங்கள் இல்லாமலே தோன்றுகின்றன. ஆகையால் சொப்பனத்தில் இல்லாதபதார்த்தத்தின் ஞானம் பிரமைரூபமாயிருக்கிறது. அது உற்பத்தியாவதாகநினைப்பது அயுக்தம.

389. இதற்குச்சமாதானம்:— எந்த வஸ்துவின் உற்பத்தியில் எவ்வளவு தேசகாலாதி சாமக்கிரிகளாகிற காரணம் வேண்டுமோ அவ்வளவு சாமக்கிரியன்றியில் உற்பன்னமாகிற வஸ்துபொய்யென்று சொல்லப்படுகிறது. சொப்பனத்தில் யானைமுதலானவைகளின் உற்பத்திக்குவேண்டிய தேசகாலங்களில்லை. நீடித்த காலத்திலும் விஸ்தாரமான இடத்திலும் உண்டாகக்கூடிய யானைமுதலியவை க்ஷணமாத்திரத்தில் சூக்ஷ்மமானகண்டப்பிரதேசத்திலுண்டாவதால் மித்தையாயிருக்கின்றன. சொப்பனாவஸ்தையில் நீடித்தகாலமும் விஸதாரதேசமும் தோன்றினும் அன்னியபதார்த்தம்போல் சொப்பனத்தில் மிகுதியான தேசகாலங்கள் அநிர்வசனீயப்பிராதிபாஸிகமாக உற்பத்தியாகின்றன. ஏனெனில் விஷயமன்றியில் பிரத்தியக்ஷஞானம் உண்டாகிறதில்லை. சொப்பனத்தில் மிகுதியான தேசகாலங்களின் ஞானமுண்டாகிறது. வியாவகாரிகதேசகாலங்கள் சொற்பமாயிருக்கின்றன, ஆனதால் பிராதிபாஸிகமாயுண்டாகின்றன. ஆனால் சொப்பனாவஸ்தையில் உண்டாகிறபிராதிபாஸிகதேசகாலங்கள் சொப்பனாவஸ்தையின் யானைமுதலியவைகளுக்குக்காரணமாகிறதில்லை. ஏனெனில் எது காரணமோ அது முதலிலும் எது காரியமோ அது பிறகும் உண்டாகவேண்டும். சொப்பனத்தின் தேசகாலங்களும் யானைமுதலியவைகளும் ஏகசமயத்திலுண்டாகின்றன. ஆகையால் இவைகளுக்குக்காரணகாரியபாவஞ்சொல்லக்கூடாது. மேலும் வியாவகாரிகதேசகாலங்கள் சொல்பமாயிருக்கின்றன. ஆகையால் யானைமுதலியவைகளுக்கு அவைகள் போதாதவை. ஆனதால் தேசகாலரூபச்சாமக்கிரிகளன்றியில் அவைகளுண்டாவதால் சொப்பனபதார்த்தங்கள் பொய்யாம். மேலும் சொப்பனத்தில் யானைக்குத்தாய் முதலிய சாமக்கிரிகளுமில்லை. சொப்பனத்தில் பிராணிகளின் மாதாபிதாக்கள் தோன்றினும். சொப்பனமாதாபிதாக்கள் புத்திரனுடைய உற்பத்திக்குக்காரணமாகிறதில்லை. ஏனெனில் மாதாபிதா புத்திரன் மூவரும் ஒரேகாலத்திலுண்டாகிறார்கள். ஆகையால் அவர்களுக்குக்காரணகாரியபாவமில்லை. எந்த நித்திரைசகிதமான அவித்தையினின்றும் சொப்பனபதார்த்தங்களுண்டாகின்றனவோ அந்த அவித்தையே அந்தப்பதார்த்தங்களில் மாதிர்ப்பிதிர்ப்புத்திரபாவங்களை யுண்டுபண்ணுகிறது. இவ்விதமாகச்சொப்பனபதார்த்த உற்பத்தியில் நித்திரைதோஷசகித அவித்தையே காரணமாயிருக்கிறதேதவிர வேறுகாரணங்களொன்றுமில்லை.

தோஷசகித அவித்தையாலுண்டாகும் வஸ்து கிளிஞ்சிலில் வெள்ளிபோல் மித்தையாயிருக்கிறது. ஆகையால் சொப்பனபதார்த்தம் சத்தியமன்று, மித்தையே. இதின் உபாதானகாரணம் அந்தக்கரணம் அல்லது சாக்ஷாத்து அவித்தையேயாம். முதற்பக்ஷத்தில் சாக்ஷீசேதனமும் இரண்டாவது பக்ஷத்தில் பிர்ம்மசேதனமும் சொப்பனத்துக்கு அதிஷ்டானங்களாம். இவ்விதமாகச்சொப்பனம் அந்தக்கரணம் அல்லது அவித்தையின் பரிணாமமாயும் சேதனத்தின் விவர்த்தமாயுமிருக்கிறது.

390. இதிலோர்சங்கை:— இரண்டாவது பக்ஷத்தில் பிர்ம்மசேதனம் சொப்பனத்தின் அதிஷ்டானமாயும் அவித்தை உபாதானகாரணமாயும் சொல்லப்பட்டது. அதிஷ்டான ஞானத்தினால் கல்பிதம் நிவிர்த்தியாகிறது (147). சொப்பனத்துக்கு அதிஷ்டானம் பிர்ம்மமானதால் பிர்ம்மஞானமன்றியில் அஞ்ஞானிக்கு ஜாக்கிராவஸ்தையில் சொப்பனம் நிவிர்த்தியாகக்கூடாது.

391. வேறோர்சங்கை:— சொப்பனத்துக்கு அதிஷ்டானம் பிர்ம்மமாயும் உபாதானகாரணம் அவித்தையாயும் இருப்பதுபோல், வேதாந்தசித்தாந்தத்தில் ஜாக்கிராவஸ்தையின் வியாவகாரிகபதார்த்தங்களுக்கும் அதிஷ்டானம் பிர்ம்மம், உபாதானகாரணம் அவித்தை. ஆனதால் ஜாக்கிரதபதார்த்தங்களை வியாவகாரிகமென்றும் சொப்பனபதார்த்தங்களைப்பிராதிபாஸிகமென்றும் சொல்லும்பேதம் இருக்கக்கூடாது. ஏனெனில் இரண்டுக்கும் அதிஷ்டானம் பிரம்மம், உபாதானகாரணம் அவித்தை. ஆகையால் ஜாக்கிரம் சொப்பனம் இரண்டும் வியாவகாரிகமாகவேண்டும், அல்லது பிராதிபாஸிகமாகவேண்டும்.

392. இவ்விரண்டு சங்கைகளுஞ் சரியன்று. 390ல் கண்ட முதல் சங்கைக்குச் சமாதானம் அடியில் வருமாறு:— நிவிர்த்தி இருவகையென 4-வது தரங்கத்தில் (152) கியாதிநிரூபணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. காரண சகித காரியத்தின் விநாச ரூபமான சொப்பனத்தின் அத்தியந்த நிவிர்த்தி ஜாக்கிற தத்தில் பிர்ம்ம ஞானமன்றியில் சம்பவிக்கமாட்டாது. ஆனால் தடியாலடிப்பதால் எப்படிக் கடம் மண்ணில் லயமாகிறதோ அப்படிச் சொப்பனத்துக்குக் காரணமான நித்திராதோஷ நாசத்தினாலும் சொப்பனத்துக்கு விரோதமான ஜாக்கிரத்தினுற்பத்தியாலும்அவித்தையில்லயரூபமான நிவிர்த்தி சொப்பனத்துக்குப் பிர்ம்மஞானமன்றியில் சம்பவிக்கும்.

393. 391ல் கண்ட ஜாக்கிர சொப்பனங்கள் சமம்யென்று சொன்னதுஞ் சரியின்று. ஏனெனில் ஜாக்கிரத்தின் தேகாதிபதார்த்தங்களினுற்பத்தியில் வேறுதோஷமில்லாத கேவலம் அனாதியான அவித்

தையே உபர்தானகாரணமாயிருக்கிறது. சொப்பன பதார்த்தங்களிலோ ஆகியுடன் கூடிய நித்திராதோஷமும் அவித்தைக்குச் சகாயமாயிருக்கிறது. ஆகையால் அன்னியதோஷமில்லாத கேவலம் அவித்தியாஜன்யம் வியாவகாரிகமென்றும் ஸாதிதோஷஸகித அவித்தியா ஜன்யம் பிராதிபாஸிகமென்றுஞ் சொல்லப்படும். சொப்பன பதார்த்தம் நித்திரா தோஷசகித அவித்தியாஜன்யமாயிருப்பதால் பிராதிபாஸிகமாயிருக்கிறது. ஜாக்கிரதபதார்த்தம் அன்னிய தோஷ ரகித அவித்தியா ஜன்யமாயிருப்பதால் வியாவகாரிகமாயிருக்கிறது. இவ்விதமாகச் சொப்பனபதார்த்தத்துக்கும் ஜாக்கிரத பதார்த்தத்துக்கும் விலக்ஷணதைதோற்றுகிறது. ஆனால் இவைகள் யெல்லாம் மூன்றுவிதச் சத்தைகளிருப்பதாக நினைத்து ஸ்தூல திர்ஷ்டியாற் சொல்லப்பட்டன. விசாரதிர்ஷ்டியினுற் பார்க்கின் மூன்றுவிதச்சத்தைகளுமில்லை. ஜாக்கிரசொப்பனங்களில் பரஸ்பர விலக்ஷணதையுமில்லை.

394. வேதாந்த பரிபாஷாதிகிரந்தங்களில் முன்சொல்லியபடி வியாவகாரிகபிராதிபாஸிகபதார்த்தங்களின் பேதம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் மூன்று சத்தைகளும் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன. அப்படியே வித்தியாரண்யஸ்வாமிகளும் சொல்லியிருக்கிறார்கள். எப்படியெனில், தேகாதிபதார்த்தங்களிருவகையாம். ஒன்று ஈஸ்வரசிருஷ்டி. இதுபாஹியம். மற்றொன்று ஜீவசங்கல்பத்தால் உண்டாகிறது. இதுமனோமயமாயும் அந்தரமாயுமிருக்கிறது. இவ்விரண்டில் ஜீவசங்கல்பத்தாலுண்டாகிறஅந்தரமான மனோமயசிருஷ்டி சாக்ஷிபாஸியமாயிருக்கிறது. பாஹியமான ஈஸ்வரசிருஷ்டி பிரமாதாபிரமாணங்களுக்கு விஷயமாயிருக்கிறது. அந்தரமனோமயதேகாதிகளே ஜீவனுடைய சுகதுக்கங்களுக்குக் காரணமாயிருக்கின்றன. பாஹியஈஸ்வரசிருஷ்டி சுகதுக்கங்களுக்குக் காரணமாகிறதில்லை. ஆனதால மனோமயபதார்த்தங்களின் நிவிர்த்தி முமுக்ஷுவுக்கு வேண்டியதேயொழியச் சுகதுக்கங்களுக்குக் காரணமாகாத பாஹியப்பிரபஞ்சத்தின்நிவிர்த்தி வேண்டியதில்லை. உதாரணம்:— இருவர்களின் இரண்டு புத்திரர்கள் தேசாந்திரம் போயிருந்தார்கள். அவர்களில் ஒருவன் இறந்துபோனான். மற்றவன் ஜீவித்திருந்தான். ஜீவித்திருந்த புத்திரன் வெகு திரவியஞ் சம்பாதித்து ஒரு மனிதன் மூலமாகத் தனக்குத் தனங் கிடைத்ததென்று தன்தகப்பனுக்கும் மற்றொருவனிறந்தானென்று அவன்தகப்பனுக்கும் சொல்லியனுப்பினான். இதைக் கேட்டவன் தான் பொல்லாதவனாகாமல் ஜீவித்திருக்கும் பிள்ளையின் தந்தையினிடத்தில் அவன் மகன் மரித்தானென்றும் இறந்தபிள்ளையின் பிதாவிடத்தில் அவன் மகன் ஜீவித்திருக்கிறானென்றும் வெகு பணம் சம்பாதித்திருக்கிறானென்றும்சீக்கிரத்தில் யானையின்மேல் ஆட்டத்துடன் வருவானென்றுஞ் சொன்னான். இந்தக் கபடவார்த்தையைக் கேட்டு ஜீவித புத்திரனு

டைய தகப்பன் வெகு துயரப்பட்டான். இறந்த புத்திரன்தகப்ப ன் வெகு சந்தோஷப்பட்டான். இவ்விதமாக ஈஸ்வராசிதபுத்திரன் ஜீவித்திருந்தும் மனோமயபுத்திரனிறந்துபோய்விட்டபடியால் துக்கமுண்டாயிற்றேயொழியச் சுகமுண்டாகவில்லை. அப்படியே இரண்டாவதான ஈஸ்வராசிதபுத்திரன் இறந்துபோயும் துக்கமுண்டாகவில்லை. புத்திரன் மனோமயஜீவனுடன் கூடியிருப்பதால் சுகமுண்டாகிறது. ஆகையால் ஜீவசிருஷ்டிதான் சுகதுக்கங்களுக்குக்காரணமேயொழிய ஈஸ்வரசிருஷ்டி காரணமன்று. இவ்விதமாக வித்தியாரண்யஸ்வாமிகள் (பஞ்சதசிப்பிரகரணத்தின் த்வைத விவேகப்பிரகரணத்தைப்பார்க்க) ஜீவசிருஷ்டியையும் ஈஸ்வரசிருஷ்டியையும் சொல்லியிருக்கிறார்கள். ஜீவசிருஷ்டி பிராதிபாஸிகம். ஈஸ்வரசிருஷ்டி வியாவகாரிகம். இப்படியே வேறுசிலகிரந்தக்காரர்களும் சத்தையை மூன்றுவிதமாய்ச்சொல்லியிருக்கிறார்கள். சேதனத்தின் சத்தை பாரமார்த்திகம். சேதனத்துக்குவேறான ஜடபதார்த்தங்களின் சத்தையிருவகைத்து. ஒன்று வியாவகாரிகம். மற்றொன்று பிராதிபாஸிகம். சிருஷ்டியின் தொடக்கத்தில் ஈஸ்வரசங்கல்பத்தாலுண்டான கேவலம் அவித்தையின் காரியமான பஞ்சபூதங்களும் அவைகளின் காரியங்களும் வியாவகாரிகசத்தைகள். தோஷசகிதஅவித்தியாகாரியங்களான சொப்பனம் கிளிஞ்சிலில் வெள்ளி முதலியவைகள், பிராதிபாஸிகசத்தைகள். இவ்விதமாக ஜாக்கிரதபதார்த்தங்களுக்கு வியாவகாரிகசத்தையும் சொப்பனபதார்த்தங்களுக்குப் பிராதிபாஸிகசத்தையும் சொல்லப்படுகின்றன.

395. ஆயினும் அனாத்மபதார்த்தங்களெல்லாம் பிராதிபாஸிகங்களாயிருக்கின்றன. ஆகையால் சத்தை இருவகைத்தே. சேதனம் பாரமார்த்திகசத்தை, சேதனத்துக்கு வேறான சகல அனாத்மாக்களும் பிராதிபாஸிகசத்தையாம்.

396. ஜாக்கிரதசொப்பனபதார்த்தங்களுக்குக் கொஞ்சங்கூட விலக்ஷணதை யில்லையென்னும் உத்தமசித்தாந்தத்தைப் பிரதிபாதிக்கிறேன். தேசகாலசாமக்கிரியன்றியில் சொப்பனத்தின் யானைமலைமுதலியபதார்த்தங்கள் உண்டாகின்றன. ஆகையால் அவைகள் மித்தையென்று சொல்லப்படுகின்றன. அப்படியே ஆகாசாதிப்பிரபஞ்சத்தின் சிருஷ்டி பிர்ம்மத்தினின்றும் உண்டாகிறது. அந்தப் பிர்ம்மத்தினிடத்தில் தேசகாலங்களின் லேசமுமில்லை. சொப்பனத்தில் யானை மலை முதலியவைகளுக்கு வேண்டிய தேசகாலங்களில்லாவிட்டாலும் அற்பதேசகாலங்களிருக்கின்றன. ஆகாசாதிகளின், சிருஷ்டியில் அற்பதேசகாலங்கள்கூட இல்லை. ஏனெனில் தேசகாலாதிதபரமாத்மாவினின்றும் ஆகாசாதிகளின் சிருஷ்டி சொல்லப்பட்டிருக்கிறது. தைத்திரீயஉபநிஷத்தில் ஆகாசாதிகளின் சிருஷ்டிகிரமமாகச் சொல்லப்பட்டிருக்கிறது, தேசகாலங்களின் சிருஷ்டி சொல்ல

அதிஷ்டானமாயிருப்பதால் சர்வ பிரபஞ்சத்திலும் காரணதை தோன்றவேண்டும். சிலதிற் காரணதை சிலதிற் காரியதை யெனப்பேதமேற்படக்கூடாது.

402. 3-வது சங்கை:— தேசகாலங்களில் காரணதை யில்லையென்றும் பிர்ம்மத்தில் காரணதை யிருக்கிறதென்றும் இந்த காரணதை தேசகாலங்களில் தோன்றுகிறதென்றும சொல்லுகிறதினால் அன்னியதாக்கியாதி (138) யின் அங்கீகாரமாகும். ஏனெனில் அன்னியவஸ்து அன்னியரூபமாகத் தோற்றல் அன்னியதாக்கியாதியென்று சொல்லப்படும். தேசகாலங்கள் காரணமன்று. ஆனதால் தேசகாலங்கள் காரணத்துக்கு அன்னியமான அகாரணமாயிருக்கின்றன. அகாரணம் அன்னியரூபமாக அதாவது காரணரூபமாகத் தோற்றுவதில் அன்னியதாக்கியாதி அங்கீகரிக்கப்படுகிறது. சித்தாந்தத்தில் அன்னியதாக்கியாதி அங்கீகரிக்கப்படவில்லை. இந்தவிடத்தில் அன்னியதாக்கியாதியை யங்கீகரித்தால் கிளிஞ்சிலில் அநிர்வசனீய வெள்ளியினுற்பத்தியைச சித்தாந்தத்தில் ஒப்பினது நிஷ்பலமாய்விடும். ஏனெனில் அன்னியதாக்கியாதிமதம் இருவகைத்து. (1) ஒரு தேசத்திலிருக்கிற பதார்த்தம் அன்னியதேசத்தில் தோன்றுவது (137) அன்னியதாக்கியாதியாம். ஸ்திரீயின் கையிலிருக்கிற வெள்ளி எதிரிலிருக்கிற கிளிஞ்சிலில் தோன்றுவதுபோலும். (2) ஒரு பொருள் அன்னியரூபமாகத் தோன்றுவது(138)அன்னியதாக்கியாதி. கிளிஞ்சிலே வெள்ளிரூபமாகத்தோன்றுவதுபோலும். இப்படிச சகல பிரமைஸ்தலங்களிலும் அன்னியதாக்கியாதிமதமே ஒவ்வும். அநிர்வசனீயக்கியாதிமதம் ஒவ்வாமற்போம்.

403. 4-வது ஆக்ஷேபம்:—விஷயத்தை யனுசரித்து ஞானமுண்டாகிறது. ஒருவஸ்துவின் ஞானம் வேறுரூபத்தாலுண்டாகமாட்டாது. ஆகையால் ரஜதாகாரமான ஞானத்துக்கு விஷயமான அனிர்வசனீயரஜதமும உற்பத்தியாகிறது. இந்த அத்துவைத சித்தாந்தத்தில் காரணத்துககன்னியமான தேசகாலங்களில் பிர்ம்மத்தின் காரணதையின் ஞானமுண்டாகமாட்டாது. ஏனெனில் தேசகாலங்களில் பிரதீதியாகுங்காரணதை இல்லாமலாவது அல்லது பிர்ம்மத்திலிருந்துகொண்டாவது விளங்கமாட்டாது. தேசகாலங்களிலேயே காரணதையிருந்துகொண்டு விளங்குகிறது. இவ்விதமாக ஆகாசாதிப்பிரபஞ்சத்துக்குந் தேசகாலங்கள் காரணமல்லவென்று சொன்னது அசங்கதம்.

404. 400-சங்கைக்குத்தரம்:— இந்த சங்கை சரியன்று ஏனெனில் பிர்ம்மத்தின் காரணதை தேசகாலங்களில் பிரதீதியாகிறது. செம்பிரத்தும் முதலிய கூடிய ஸ்படிகத்தில் அப்பூவின் சிவப்புவர்ணம்

தோன்றுவதுபோலும். அதிஷ்டானத்தின் சத்தியதை சொப்பனகாலத்தில் மித்தையான யானை பர்வதம் முதலியவைகளில் பிரதீதியாகிறது. ஸ்படிகத்தில் அனிர்வசனீயமான சிவப்புவர்ணத்தினுற்பத்தி அங்கீகரிக்கப்படவில்லை. ஆனால் புஷ்பத்தின் சிவப்புவர்ணம் ஸ்படிகத்தில் தோன்றுகிறது. ஆனதால் வெண்மையான ஸ்படிகம் சிவப்பு ரூபமாய்த் தோன்றுகிறதினால் சிவப்பின் ஞானத்தில் அன்னியதாக்கியாதி தான் அங்கீகரிக்கப்படவேண்டும். அப்படிச் சொப்பனத்தின் மித்தியாபதார்த்தத்தில் சத்தியதைதோன்றுமிடத்தில் அனிர்வசனீயசத்தியதை அந்தப்பொருளில் இருக்கிறதாகச்சொல்வது மெய் பொய்யாயிருக்கிறதென்னும்வசனம்போலாகும். இல்லாதது பிரதீதியாகமாட்டாது. ஆனால் சொப்பனத்தின் அதிஷ்டான சேதனத்தின் சத்தியதை மித்தியாபதார்த்தத்தின் பிரதீதியாகிறது. இப்படி மித்தியாபதார்த்தம் சத்தியரூபமாய்த்தோன்றுகிறதினால் சத்தியத்தின் ஞானத்தில் அந்நியதாக்கியாதியைத்தான் அங்கீகரிக்கவேண்டியது. இப்படியே அதிஷ்டானபிர்ம்மத்தின் காரணதை தேசகாலங்களில் அன்னியதாக்கியாதியாகப்பிரதீதியாகின்றது.

405. இந்த விடத்தில் அன்னியதாக்கியாதியை ஒப்பினால் எல்லாப்பிரமஸ்தலங்களிலும் அன்னியதாக்கியாதியையே ஒப்பவேண்டுமெனும் சங்கை (402) சரியன்று. ஏனெனில் கிளிஞ்சிலில் வெள்ளிதோன்றுகிறவிடத்தில் அன்னியதாக்கியாதியை அங்கீகரிப்பதில் விஷயத்துக்கு விலக்ஷணமான ஞானம் உண்டாகமாட்டாது என்கிறதோஷமிருக்கிறது. சுக்தி வெள்ளிரூபத்தினால் அறியப்படமாட்டாது. ஏனெனில் சுக்தி தேசத்தில் அனிர்வசனீயமாயும் வியாவகாரிகமாயுமிருக்கிற வெள்ளி அன்னியமதத்தில் இல்லை. ஆனால் சுக்தியே இருக்கிறது. இந்தச் சுக்தி சம்பந்தத்தால் அந்தக்கரணவிர்த்தி சுக்தியின் சமானாகாரத்தையடையவேண்டுமே தவிர ரஜதாகாரத்தையடையக்கூடாது. ஆனால் அப்படியில்லாதபடியால் அவித்தையின் பரிணாமமாயும் சேதனத்தின் விவர்த்தமாயுமிருக்கிற அனிர்வசனீய வெள்ளியும் அதன் ஞானமுமுண்டாகின்றன. ஸ்படிகத்தில் சிவப்பு வர்ணத்தின் ஞானமுண்டாகும்போது சிவப்பு புஷ்பம் ஸ்படிகத்துடன் சம்பந்தப்படுகிறது. அதினால் அந்தப்புஷ்பத்தின் சிவப்பு வர்ணம் ஸ்படிகத்தில் பிரதீதியாகிறது. ஏனெனில் அந்தக்கரணத்தின் விர்த்தி, சிவப்புப்புஷ்பாகாரமாகும்போது அந்த விர்த்திக்கு விஷயம் சிவப்பு புஷ்பத்துடன் சம்பந்தப்பட்டஸ்படிகம். அதினால் புஷ்-

பத்தின் சிவப்புவர்ணம் ஸ்படிகத்தில் பிரதீதியாகிறது. அப்போது அந் தக்கரணவிர்த்தி ஸ்படிகத்துடனும் சிவப்பு புஷ்பத்துடனும் சம்பந்தப்ப டுகிறது. சிவப்புப் புஷ்ப சம்பந்தத்தால் விர்த்தி சிவப்பாகாரமாகிறது. அவ்விர்த்தி ஸ்படிகத்துடனும் சம்பந்தப்பட்டிருக்கிறது. ஸ்படிகத்தில் சிவப்பின் சாயை யிருக்கிறது. ஆனதால் புஷ்பத்தின் தர்மமாகிற சிவப் புவர்ணம் ஸ்படிகத்தில் அவ்விர்த்திக்கே விஷயமாகிறது. இவ்விதமாக இரண்டுபதார்த்தங்களுடன் சம்பந்தமிருக்கும்போது ஒன்றின் தர்ம்மம் மற்றொன்றில் பிரதீதியாகிறது. அப்போது அந்நியதாக்கியாதியே அங்கீ கரிக்கப்படவேண்டியது. எப்போது இரண்டுபதார்த்தங்களுடன் சம்ப ந்தமில்லையோ அப்போது அன்னியதாக்கியாதி இல்லை; அநிர்வசனீயக்கி யாதியே ஒப்புக்கொள்ளத்தக்கது. புஷ்பத்துடன் சம்பந்தப்பட்டஸ்படி கத்தில் புஷ்பத்தின் சிவப்புவர்ணம் பிரதீதியாகிறதுபோல் சொப்பனத் தின் யானைமலை முதலியவைகள் அதிஷ்டான சேதனத்துடன் சம்பந்தப் பட்டிருக்கின்றன; ஆனதால் சேதனத்தின் தர்மமாகிய சத்தியதையும் சேதனத்துடன் சம்பந்தப்பட்ட யானை மலை முதலியவைகளிற் பிறதீதி யாகிறது, இது அன்னியதாக்கியாதி. இப்படியே அதிஷ்டான சேதன த்தின் தர்மமாகிய காரணதை அதிஷ்டானசேதனத்துடன் சம்பந்தப்ப ட்ட தேசகாலங்களில் பிரதீதியாகிறது.

406. அதிஷ்டானசேதனம் சகலப்பிரபஞ்சத்துடனும் சம்பந்த ப்படுகிறது. அச்சேதனத்தின் தர்மம் அன்னியதாக்கியாதிரீதியாய் வேறி டத்திற் பிரதீதியானல் சேதனத்தின் காரணதை சகலப்பிரபஞ்சத்திலு ம் பிரதீதியாகவேண்டுமென்று (401)செய்த ஆக்ஷேபம் சரியன்று. ஏ னெனில் சொப்பனத்தில் இரண்டு சரீரங்கள் ஒன்று பிதாரூபமாயும் ஒன்று புத்திரன் ரூபமாயும் தோன்றுகின்றன. அப்போது இரண்டுச ரீரங்களுக்கும் சொப்பனத்தின் அதிஷ்டானசேதனத்துடன் சம்பந்தம் இருந்தாலும் பிதாசரீரத்தில் அதிஷ்டானசேதனத்தின் காரணதை பிரதீ தியாகிறது. புத்திரசரீரத்தில் காரணதை பிரதீதியாகாமல் பிதாஜன்ய புத்திரனென்னும் காரியதை பிரதீதியாகிறது. இவ்விதமாக அதிஷ்டா னசேதனத்தின் சம்பந்தம் எங்குமிருந்தாலும் தேசகாலங்களில் சேதனதர் மமாகிற காரணதையும் மற்றவிடங்களில் காரியதையுந் தோன்றுகின்ற ன.

407. அல்லது அதிஷ்டானசேதனம் அசங்கமாயிருக்கிறது. அது எதற்கும் பாரமார்த்திகத்தில் காரணமாகிறதில்லை. மாயையிலுள்ள ஆ

பாஸன் காரணமாயிருந்தாலும் ஆபாஸனுடைய சொரூபம் மித்தை; எது தானே மித்தையாக இருக்கிறதோ அது வேறொன்றுக்குக் காரணமாகமாட்டாது. ஆகையால் பரமாத்மாவினிடத்தில் பிரபஞ்சத்தின் காரணதை யிருக்கும்பக்ஷத்தில் அது தேசகாலங்களில் பிரமையாற் பிரதீதியாகக் கூடும். பரமாத்மாவினிடத்தில் காரணதையில்லை. பரமாத்மாகாரணதைமுதலியதர்மங்களன்றியில் அசங்கமாயிருக்கிறது. அதின் காரணதை தேசகாலங்களில் தோன்றுவதாகச் சொல்வது சரியன்று. ஆனால் மாயையாலுண்டான அநிர்வசனீய தேசகாலங்கள் அநிர்வசனீயகாரணத்துடன்கூடினதாக விளங்குகின்றன. பாரமார்த்திகத்தில் தேசகாலங்கள் காரணங்களல்ல. புத்திரனில்லாதவன் சொப்பனத்தில் புத்திரனையும் பேரனையும்பார்க்கிறான். அப்போது புத்திரபௌத்திரசரீரங்கள் அநிர்வசனீயமாயிருக்கின்றன. புத்திரசரீரத்தில் பௌத்திரசரீரத்தின் அநிர்வசனீயகாரணதையிருக்கிறது. பாரமார்த்திகத்தில் புத்திரபௌத்திரசரீரங்களுக்குப் பரஸ்பரம் காரணகாரியபாவங்களில்லை. இதுபோல் தேசகாலங்கள் அநிர்வசனீயகாரணங்களாகப் பிரதீதியாகின்றன. பாரமார்த்திகத்தில் தேசகாலங்களுக்கும் ஆகாசாதிப்பிரபஞ்சத்துக்கும் காரணகாரியபாவங்களில்லை

408. இவ்விதமாகத் தேசகாலசாமக்கிரிகளன்றியில் ஜாக்கிரதப்பிரபஞ்சமுண்டாகிறது. ஆனதால் சொப்பனம்போல் ஜாக்கிரதமும் மித்தை. சொப்பனத்தின் ஸ்திரீபுத்திராதிகள் சொப்பனத்திலேயே சுகதுக்காதிகளுக்கு ஹேதுக்களாயிருக்கின்றன. ஜாக்கிரதத்தில் அவைகளில்லை, அப்படியே ஜாக்கிரதபதார்த்தங்களும் சொப்பனத்திலில்லை, ஆகையால் ஜாக்கிரதசொப்பனங்கள் சமம்.

409. ஆக்ஷேபம்:—ஜாக்கிரத்தின்பிறகு சொப்பனமுண்டாகி மறுபடியும் ஜாக்கிரதமுண்டாகும்போது முதல் ஜாக்கிரதத்தின் பதார்த்தம் சொப்பனவியவஹிதஇரண்டாவது ஜாக்கிரதத்திலிருக்கிறது. ஆனால் முதல்சொப்பனத்தின் பதார்த்தம் இரண்டாவது சொப்பனத்திலிருக்கிறதில்லை. ஆகையால் சொப்பனபதார்த்தங்களுக்கும் ஜாக்கிரதபதார்த்தங்களுக்கும்பேதமுண்டு.

410. இந்தச்சங்கை சித்தாந்தத்தை யறியாதவனுக்கு மூடதிர்ஷ்டியாலுண்டாகிறது. ஏனெனில் மூர்க்கனுடைய திர்ஷ்டியாவது:—சமுசாரப்பிரவாகம் அநாதி. அதில் ஜீவனுக்கு ஜாக்கிரஸ்வப்பனசுஷுப்திகளிருக்கின்றன. ஜாக்கிரதகாலத்தில் சொப்பனமும் சுஷுப்தியும் நஷ்டமாகின்றன. சொப்பனகாலத்தில் ஜாக்கிரதமும் சுஷுப்தியும் நஷ்டமாகின்றன. சுஷுப்தியில் ஜாக்கிரஸ்வப்னங்கள் நஷ்டமாகின்றன. ஆனால் ஸ்வப்னசுஷுப்திகளுண்டாகும்போது ஜாக்கிரதகாலத்தின் ஸ்திரீபுத்திரபசுதனாதிகள் நீங்காமல் இருந்துக்கொண்டேயிருக்கின்றன. அவைகளின் ஞானந்தான் நீங்குகிறது. மறுபடியும் ஜாக்கிரதமுண்டாகு

ம்போது முதல் ஜாக்கிரத்திலிருந்த பதார்த்தங்களின் ஞானமுண்டாகிற து. இது அஞ்ஞானியின் திருஷ்டி.

411. சித்தாந்தமென்னவெனில் பதார்த்தங்களெல்லாம் சேத னத்தின் விவர்த்தமாயும் அவித்தையின் பரிணாமமாயும் இருக்கின்றன. ஆனதால் சிளிஞ்சிலில் வெள்ளிபோல் எந்தக்காலத்தில் எந்தப்பதார்த்த ம் பிரதீதியாகிறதோ அந்தக்காலத்தில் அதிஷ்டானசேதனத்தை யாசிர யித்த அவித்தை இருவிதப்பரிணாமங்களையடைகிறது. அவித்தையின் தமோகுணாம்சம் கடாதி விஷயரூபமாகப்பரிணமிக்கிறது. அவித்தையி ன் சத்துவகுணாம்சம் ஞானரூபமாகப்பரிணமிக்கிறது. சேதனத்தையே ஞானமாகச்சொல்லுவதால் சத்துவகுணத்தின் பரிணாமம் ஞானமென்று சொல்லுவது சரியன்றென ஆக்ஷேபிக்கும்பக்ஷத்தில் அதற்குச்சமாதான மென்னவெனில், வியாபகசேதனமெல்லாம் ஞானமன்று, ஆனால் ஆபா ஸசகித விர்த்தியிலாரூடமான சேதனத்தை ஞானமென்று சொல்லுகிறா ர்கள். ஆகையால் சேதனத்தில் ஞானவியவகாரத்தைக்கொடுப்பது விர் த்தியே. சேதனத்திலுள்ள ஞானத்துக்கு உபாதி விர்த்தியே. அதினி டத்திலும் ஞானசப்தம் உபயோகப்படுத்தப்படுகின்றது. கடத்தின் ஞா னமுண்டாயிற்றென்றும் படத்தின் ஞானம் நஷ்டமாயிற்றென்றும் உலக த்தில் சொல்லுகிறார்கள்.[8] அப்போது விர்த்தியிலாரூடமான சேதனத்து க்கு உற்பத்தி நாசங்கள் சம்பவிக்கிறதில்லை. விர்த்திக்குத்தான் உற்பத்தி நாசங்களுண்டாகின்றன. ஞானத்துக்கு உற்பத்திநாசங்கள் சொல்லப் படுவதால் விர்த்தியிலும் ஞானசப்தம் உபயோகப்படுத்தப்படுகிறது. இந்த விர்த்திரூபஞானம் சத்துவகுணப்பரிணாமம். அந்த விர்த்திரூபப்ப ரிணாமத்தில் சேதனத்தின் ஆபாஸம் உண்டாகிறது. கடாதிவிஷயரூப பரிணாமத்தில் சேதனத்தின் ஆபாஸமுண்டாகிறதில்லை. ஏனெனில் விஷ யமும் விர்த்தியும் இரண்டும் அவித்தையின் பரிணாமங்களாயிருந்தாலும் கடாதிவிஷயம் அவித்தையின் தமோகுணப்பரிணாமமாயிருப்பதால் மலி னமாயிருக்கிறது. அதில் ஆபாஸன் உண்டாகிறதில்லை. விர்த்தி சத்து

---

8. சப்தம் உண்டாவதற்குக்காரணம் ஆகாசம். இது எங்கும் வியாபக மாயிருக்கிறது. இது நகாரா மிருதங்கம் முதலிய வாத்தியங்களுடன் சம்பந் தப்பட்டிருக்கிறது. ஆயினும் எப்போது ஒருதடியால் வாத்தியம் அடிக்கப்படு கிறதோ அப்போதுதான் சப்தம் உற்பத்தியாகிறது. மற்றஇடங்களினின்றும் சப்தம் உண்டாகிறதில்லை. இதுபோல புத்திவிருத்தியில் ஆரூடமான சேதனத் துக்கு ஞானம் உண்டாகிறதே தவிர மற்றஇடங்களில் ஞானம் உண்டாகிறதி ல்லை.

வகுணப்பரிணாமமாயிருப்பதால் சுத்தமாயிருக்கிறது. அதில் ஆபாஸமுமுண்டாகிறது. இவ்விதமாக விர்த்தி சேதனத்தின் ஆபாஸத்தைத்தரிக்கத் தகுந்ததாயிருப்பதால் விர்த்தியவச்சின்னசேதனம் ஞானமென்றும் சாக்ஷியென்றும் சொல்லப்படுகிறது. கடாதிவிஷயங்கள் ஆபாஸத்தைக்கிரகிக்கயோக்கியமில்லாமையால் ஞானமென்றும் சாக்ஷியென்றும் சொல்லப்படவில்லை. இவ்விதமாக ஜாக்கிரதத்தின் பதார்த்தங்களும் அவைகளின் ஞானமுஞ்சேர்ந்தேயுண்டாகின்றன, சேர்ந்தே நஷ்டமாகின்றன. இது வேதத்தின் சித்தாந்தம். ஆகையால் ஒரு ஜாக்கிரதத்தின் பதார்த்தம் இரண்டாவது ஜாக்கிரதத்தில் இருப்பதாகச்சொன்னது சரியுன்று.

412. ஆக்ஷேபம்:— சொப்பனத்தினின்றும் விழித்துக்கொண்டவனுக்கு "முன்னே யாதொரு பதார்த்தமிருந்ததோ அதுதான் இது". என்கிற ஞானமுண்டாவதால் ஜாக்கிரதபதார்த்தங்களும் அவைகளின் ஞானமும் ஒரேகாலத்தில் உற்பத்தி நாசங்களை யடைகிறதில்லை. ஆனால் ஞானத்துக்குமுன் பதார்த்தம் இருந்திருக்கிறது. ஞானநாசத்துக்குப்பின்னும் பதார்த்தமிருக்கிறது.

413. சமாதானம்:— ஆயினும் சொப்பன பதார்த்தம் தத்க்ஷணமே யுண்டாகிறது. நான் பிறப்பதற்குமுன்முதல் இந்த மலைசமுத்திராதிகளிருக்கின்றனவெனத் தோன்றுமிடத்தில் தத்க்ஷணத்திலுண்டான பதார்த்தத்தில் வெகுகாலமாயிருப்பதாகப் பிராந்தி யுண்டாகிறது. ஆனதால் எந்த அவித்தையால் மித்தையான மலைசமுத்திரம் முதலியவைகளுண்டாயினவோ அதேயவித்தையால் வெகுகாலஸ்திரத்தன்மையும் ஸ்திரத்தன்மையின் பிரதீதியும் அநிர்வசனீயமாயுண்டாகின்றன. சொப்பனத்தின் பதார்த்தங்கள் இப்படியிருப்பதுபோல் ஜாக்கிரத பதார்த்தங்களும் வெகுகாலமாய் ஸ்திரமாயில்லாவிட்டாலும் அவித்தியாபலத்தினால் மித்தையான ஸ்திரத்தன்மையும் அந்தப்பதார்த்தங்களுடன் உற்பத்தியாகிப் பிரதீதியாகிறது.

414. ஆக்ஷேபம்:— சொப்பனபதார்த்தம் சாக்ஷாத்து அவித்தையின் பரிணாமம். ஜாக்கிரதபதார்த்தம் சாக்ஷாத்து அவித்தையின் பரிணாமமன்று. ஆனால் கடத்தினுற்பத்தி தண்டம் சக்கரம் குலாலன் இவைகளாலுண்டாவதுபோல் சகலபதார்த்தங்களினுற்பத்தியும் அவ்வவற்றின் காரணத்தாலுண்டாகிறதேதவிரச் சாக்ஷாத்து அவித்தையாலுண்டாகவில்லை. அப்படிச் சாக்ஷாத்து அவித்தையின் பரிணாமமாயிருக்

கும்பகத்தில் ஆகாசாதிப்பஞ்சபூதங்களின் கிரமஉற்பத்தி பஞ்சீகரணம்; இதினின்றும் பிர்ம்மாண்டத்தினுற்பத்தி சுருதியிற் சொல்லிய இவைகளெல்லாம் அசங்கதமாய்விடும். ஆகையால் ஈஸ்வர சிருஷ்டியாகிற ஜாக்கிரதபதார்த்தங்கள் தம் தம் உபாதானத்தின் பரிணாமங்களேதவிர, சாக்ஷாத்து அவித்தியா பரிணாமங்களன்று. சொப்பனத்தின் சகலபதார்த்தங்களும் அவித்தியா பரிணாமங்களாயிருக்கின்றன. அவைகளுக்கு ஒரே அவித்தை உபாதானமாகிறதினால் அந்தப்பதார்த்தங்களுக்கும் அவைகளின் ஞானத்துக்கும் ஓரேயவித்தையினின்றும் ஒரேகாலத்தில் உற்பத்தியுண்டாகக்கூடும். ஜாக்கிரதபதார்த்தங்கள் வெவ்வேறு காரணங்களாலுண்டாகின்றன. காரியத்துக்குமுன் காரணமிருக்கிறது, காரணத்தில் காரியம் லயமாகிறது. ஆனதால் கடஉற்பத்திக்குமுன்னும் கடநாசத்துக்குப்பின்னும் மிருத்பிண்டமிருக்கிறது. இவ்விதமாகச் சில பதார்த்தங்கள் அற்பகாலம் ஸ்திரமாயும் சில அதிககாலம் ஸ்திரமாயும் காரியகாரணங்களாயுமிருக்கின்றன. சொப்பனபதார்த்தங்கள் இப்படியில்லை.

415. சமாதானம்:— இந்தச் சங்கை சரியன்று. எனெனில் ஜாக்கிரதபதார்த்தங்களிற்போல் சொப்பனபதார்த்தங்களிலும் காரியகாரணபாவம் தோன்றுகின்றது. ஒருவனுக்குத் தன் மாடு கன்றுபோட்டதுபோலவும் அல்லது தன் ஸ்திரீக்குப் பிள்ளைபிறந்ததுபோலவும் சொப்பனமுண்டாகிறது. அப்போது மாட்டினிடத்திலும் ஸ்திரீயினிடத்திலும் காரணதையும் வெகுகாலஸ்திரதையும் பிரதீதியாகின்றன. கன்றினிடத்திலும் பிள்ளையினிடத்திலும் காரியதையும் அற்பகாலஸ்திரதையும் பிரதீதியாகின்றன. எல்லாம் ஒரேகாலத்திலுண்டாகின்றன. ஒன்று மற்றொன்றுக்குக் காரணமாயில்லை. மாடு, கன்று, ஸ்திரீ, பிள்ளைமுதலியவைகளுக்கு அவித்தையே உபாதானமாயிருக்கிறது. இதுபோல் ஜாக்கிரதத்திலும் சிலது வெகுகாலஸ்தாயீயாகவும் காரணரூபமாகவும் சிலது சொற்பகாலஸ்தாயீயாகவும் காரியரூபமாகவும் சொப்பனத்தில் போலத் தோன்றுகின்றன. எதுவும் எதற்கும் பரஸ்பரம் காரியகாரணமாயில்லை. ஆனால் எல்லாம் சாக்ஷாத்து அவித்தையின் காரியங்களே.

416. சுருதியில் சொல்லிய கிரமசிருஷ்டிக்குச் சுருதியின் அபிப்பிராயம் சிருஷ்டியைப் பிரதிபாதிக்க வேண்டுமென்பதன்று. அத்து

வைதப் போதமே யதின் அபிப்பிராயம். எல்லாப்பதார்த்தங்களும் பரமாத்மாவினின்றுமுண்டாகின்றன. ஆகையால் அவைகள் அதின் விவர்த்தங்களாயிருக்கின்றன. எது எதின் விவர்த்தமாயிருக்கிறதோ அது அதின் சொரூபமாகவே யிருக்கிறது. ஆகையால் சகலநாமரூபங்களும் பிர்ம்மத்துக்கு வேறாகாமல் பிர்ம்மமாகவே யிருக்கின்றன. இந்த அர்த்தத்தைப் போதிக்கிறதற்காக சிருஷ்டி சொல்லப்பட்டது. சிருஷ்டிக்கு வேறு பிரயோசனமில்லை. கிரமசிருஷ்டி சொன்னது ஸ்தூலதிர்ஷ்டியுடையவர்கள் விபரீதக்கிரமமாக லயசிந்தனை செய்யும்பொருட்டுத் தான். அதற்கும் அத்துவைதபோதமே யபிப்பிராயமானதால் கிரமமாகச்சொல்லுதில் அபிப்பிராயமில்லை. சிருஷ்டியில் கிரமமில்லை. எல்லாம் அவித்தையினின்றும் உண்டாகின்றன. அவைகளுடைய பரஸ்பரகாரிய காரணபாவங்களும் பூர்வ உத்தரபாவங்களும் அவித்தையால் உண்டாகும் சொப்பனம்போல் மித்தையாகத் தோன்றுகின்றன. சுருதியில் சொல்லிய அவைகளின் காரியகாரணதையும் பூர்வஉத்தரதையும் லயசிந்தனையின் பொருட்டுத்தான்

417. எப்படிச் சொரூபமோ அப்படியே தியானமென்கிற நியமமில்லை. ஆகையால் ஜாக்கிரத பதார்த்தங்களுக்கு அவைகளுக்குள் காரணகாரியபாவமில்லை. சகலபதார்த்தங்களும் சாக்ஷாத்து அவித்தையின் காரியங்களாயிருக்கின்றன. சிளிஞ்சிலில் வெள்ளிபோலவும் சொப்பனம் போலவும் அவித்தியாவிர்த்தஉபஹிதசாக்ஷியினால் அவைகள் பிரகாசிக்கின்றன. ஆனதால் சகலபதார்த்தங்களுஞ் சாக்ஷிபாஸியங்களாயிருக்கின்றன. ஒரேகாலத்தில் அவிதத்தை ஞானாகாரமாயும் ஞேயாகாரமாயும் பரிணமிக்கிறது. இந்தப்பரிணாமங்கள் ஒரேகாலத்தில் நஷ்டமாகின்றன. ஆகையால் எப்போது பதார்த்தம் தோன்றுகிறதோ அப்போது தோற்றத்துக்கு விஷயமாகிற பதார்த்தம் உண்டாகிறது. இதரகாலத்தில் பதார்த்தமுண்டாகிறதில்லை. இதற்கே திருஷ்டிசிருஷ்டி[9] வாதமென்று பெயர்.

---

9. திருஷ்டிஎன்றால் அவித்தியாவிர்த்திரூபஞானம். இது உண்டாகும் போது சிருஷ்டி அதாவது பிரபஞ்சமுண்டாவதாகச்சொல்வது திருஷ்டி சிருஷ்டிவாதமென்னப்படும். இதற்கு அஞ்ஞாதவாதமென்றும்பெயர். இது பிரஹதாரணியஉபநிஷத்தின் சங்கரபாஷியத்திலும் மாண்டூக்கியஉபநிஷத்தின்காரிகையிலும் வாசிஷ்டத்திலும் வேதாந்தமுக்தாவளியிலும் ஆத்மபுராணத்திலும் அத்வைதசித்திமுதலிய கிரந்தங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது. விஸ்தாரத்தின் பொருட்டும் இந்தக்கிரந்தங்களைப்பார்க்கலாம். விஷயம் பூர்ணமாய் விசாரசாகரத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

418. இந்தப்பக்ஷத்தில் பதார்த்தங்களின் அஞ்ஞாதசத்தையில்லை, ஞாதசத்தைதான் இருக்கிறது. அத்துவைதவாதத்தில் இது சித்தாந்தபக்ஷம். இந்தப்பக்ஷத்தில் இரண்டு சத்தைகளிருக்கின்றனவேதவிர மூன்றில்லை. ஏனெனில் அநாத்மபதார்த்தங்களெல்லாம் சொப்பனம்போல் பிராதிபாஸிகமாயிருக்கின்றன. தோன்றுங்காலந்தவிர வேறு காலத்தில் அநாத்மாவுக்குச் சத்தை யில்லை. ஆகையால் மூன்றாவதான வியாவகாரிகசத்தையில்லை. இந்தப்பக்ஷத்தில் அநாத்மபதார்த்தங்களெல்லாம் சாக்ஷீபாஸியமாயிருக்கின்றன. பிரமாதா பிரமாணங்களுக்கு விஷயமாகயாதொன்றும் இல்லை. ஏனெனில் அந்தக்கரணம் இந்திரியங்கள் கடாதிகள் ஆகிய சகலதிரிபுடிகளும் ஞானமும் சொப்பனம்போல் ஓரேகாலத்தில் உண்டாகின்றன. அவைகளுக்கு விஷயவிஷயீபாவம் சொல்லத்தகாது. கடாதிவிஷயம் நேத்திராதி இந்திரியங்கள் அந்தக்கரணம் இவைகள் ஞானத்துக்குமுன் இருக்கும்பக்ஷத்தில் நேத்திராதிமூலமாக அந்தக்கரணத்தின் விர்த்திரூபஞானம் பிரமாணஜன்யமாகக்கூடும். ஆனல் அந்த அந்தக்கரணம் இந்திரியம் விஷயம் இம்மூன்றும் ஞானத்துக்கு முன்னில்லை. ஆனல் சொப்பனம்போல் ஞானமும் திரிபுடிகளும் ஒரே காலத்திலுண்டாகின்றன. ஆனதால் திரிபுடியினின்றுமுண்டாகிற ஞானம் யாதொன்றுமில்லை. ஆயினும் சொப்பனம்போல் ஞானம் திரிபுடிஜன்யமாகத்தோன்றுகிறது. ஆகையால் ஜாக்கிரதபதார்த்தங்கள் சாக்ஷீபாஸியமாயிருக்கின்றன. பிரமாணஜன்யஞானத்துக்கு விஷயமாகிறதில்லை. ஆகையாலும் ஜாக்கிரதபதார்த்தம் சொப்பனத்துக்குச்சமானமாக மித்தையாயிருக்கிறது.

419. அன்றியும் ஜாக்கிரதத்தில் சிலபதார்த்தங்கள் மித்தியாரூபமாக அறியப்படுகின்றன. சில சத்தியமாக அறியப்படுகின்றன. அநாதிகாலமாய்ச்சில பொருள்களிருக்கின்றன. அவைகளிற் சில நஷ்டமாகின்றன. அவைகளுக்குச் சமானமாய்ச் சில வுண்டாகின்றன. இவ்விதமாகப் பிரபஞ்சதாரை ஒருகாலத்திலும் நாசமடைகிறதில்லை. ஞானமுண்டானவனுக்குப் பிரபஞ்சம் தோன்றுகிறதில்லை. மற்றவனுக்குப் பிரபஞ்சம் தோன்றுகிறது. இந்த ஞானத்துக்கு வேதமும் குருவும் சாதனங்கள் இவைகளால் பரமசத்தியமடையப்படுகிறது. இவ்விதத்தோற்றம் ஜாக்கிரதத்திலுண்டாகிறது. அப்போது சிலபதார்த்தங்களின் மித்தியதை, சிலவற்றின் நாசம், சிலவற்றினுற்பத்தி வேதகுருக்களால் பரமபுருஷார்த்தப் பிராப்தி இவைகளெல்லாம் அவித்தையாலுண்டாகிற சொப்பனம்போல் மித்தையாயிருக்கின்றன. வாஸிஷ்டத்தில் க்ஷணமாத்திரச்சொப்பனத்தில் வெகுகாலத்தோற்றமும் ஜாக்கிரம்போல்ஸ்திரமான பதார்த்தங்களின் தோற்றமும் அவைகளால் வெகுகாலபோகமும் உண்டாகிறதாக அநேக இதிஹாஸங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனதை

யால்ஜாக்கிரதபதார்த்தங்களுக்கும் சொப்பனபதார்த்தங்களுக்கும்கொஞ்சங்கூட விலக்ஷணதையில்லை.[10] ஆத்மாவுக்கு வேறானதெல்லாம் மித்தை

420. தர்க்கதிருஷ்டியின் 3—வது கேள்வி:— ஈஸ்வரசிருஷ்டி அனந்த கல்பமாய்[10(a)] அனாதியாயிருக்கிறது. அதில் ஞானிமுக்தனாகிறான், அஞ்ஞானி பந்தத்தில் இருக்கிறான். ஜாக்கிரம் சொப்பனசமானமாகும்பக்ஷத்தில் சொப்பனம்ஒருக்ஷணம் அல்லது ஒருநாழிகை அல்லது ஒருசாமம் இருக்கிறதுபோல் சமுசாரமும் ஒருக்ஷணம் அல்லது ஒருநாழிகை அல்லது ஒருசாமம் அல்லது கொஞ்சம் அதிககாலம் இருக்கவேண்டும். சொப்பனம்போல் சமுசாரம்சொல்பகாலமிருக்கிறதாக இருந்தால் அனாதிகாலமாயிருக்கிற பந்தமிருக்கக்கூடாது. பந்தநிவிர்த்திரூபமான மோக்ஷத்தின்

---

10. இந்தத்தரங்கத்தின் கடினப்பிரசங்கங்களை அறிய அட்டவணையில் கொடுக்கப்பட்டிருக்கிற சுருக்கம் உபயோகமாகயிருக்கும்.

10 (a) கல்பகால நிர்ணயம்:—

| | | | |
|---|---|---|---|
| 15 | சண்ணிமை பொழுதுகொண்டது | | காஷ்டை 1 |
| 30 | காஷ்டை | ... | கலை 1 |
| 30 | கலை | ... | முகூர்த்தம் 1 |
| 30 | முகூர்த்தம் | ... | இராப்பகலுள்ள நாள் 1 |
| 15 | நாள் | ... | பக்ஷம் 1 |
| 2 | பக்ஷம் | ... | மாதம் 1 |
| 2 | மாதம் | ... | இருது 1 |
| 3 | இருது | ... | அயனம் 1 |
| 2 | அயனம் | ... | வருஷம் 1 |
| 1,728,000 | வருஷம் | ... | கிருதயுகம் 1 |
| 1,296,000 | ... | ... | திரேதாயுகம் 1 |
| 864000 | ... | ... | துவாபரயுகம் 1 |
| 432000 | ... | ... | கலியுகம் 1 |
| 4,320,000 | ... | அல்லது 4 யுகம் சேர்ந்தது | மகாயுகம் 1 |
| 306,720,000 | ... | ... 71 மகாயுகம் ... | ஒருமனுவின்காலம் |
| 4,294,080,000 | ... | ... 994 ... | ... 14 மனுக்களின்காலம் |
| 25,920,000 | ... | ... 6 ... ... | சந்திகள் 2 |
| 4,320,000,000 | ... | ... 1000 ... ... | கல்பம் அல்லது பிர்ம்மாவின் பகல். |
| 8,640,000,000 | ௵ | கொண்டது | பிர்ம்மாவின் நாள் 1 |
| 3,110,400.000,000 | ௵ | ... ... | ௵ 1 |
| 311,040,000,000,000 | ௵ | ... | பிர்ம்மாவின் ஆயிசு அல்லது மஹாகல்பம். |

பொருட்டு ஏற்பட்டிருக்கிற சிரவணாதி சாதனங்களும் நிஷ்பலமாய்வி டும்.

421. முன்சொன்ன சித்தாந்தத்தில் பந்தம் மோக்ஷம் வேதம் குரு இவைகள் அங்கீகரிக்கப்படவில்லை. சேதனம் நித்தியமுக்தமாயிரு க்கிறது. அவித்தையின் பரிணாமங்களும் சேதனத்தில் அனேக விவர்த் தங்களுமுண்டாகின்றன. அவைகளால் ஆத்மாவுக்குக்கொஞ்சங்கூட ஹானியில்லை. ஆத்மா எப்போதும் அசங்கமாயும் ஏகரஸமாயுமிருக்கிற து. இதுவரையில் ஒருவனும் முக்தனானதில்லை; இனிமேலும் ஆகப் போகிறதில்லை. சேதனம் எப்போதும் முக்தமாகவேயிருக்கிறது. அவி த்தைக்கும் அதின் பரிணாமத்துக்கும் சேதனத்துடன் எந்தக்காலத்திலும் சம்பந்தமில்லை ஆனதால் பந்தம் வேதம் குரு சிரவணாதிகள் சமாதி மோக்ஷம் முதலியவைகளின் பிரதீதியும் சொப்பனம்போல் அவித்தியா ஜன்யமாயிருக்கிறது, ஆகையால் மித்தையாயிருக்கிறது. இப்பிரதீதியி ன் வெகுகால ஸ்திரதையும் அவித்தியாஜன்யமே. ஆயினும் இந்தச்சித் தாந்தத்தை யறியாமல் ஸ்தூலதிர்ஷ்டியால் இக்கேள்வி கேட்கப்பட்டது.

422. குருஉத்தரம் (422—660):— சிஷ்யனே, நித்திராதோஷத்தி னால் சொப்பனத்தில் அத்தியயனம் சொல்லுகிறவன், அத்தியயனம், வேதம், சாஸ்திரம், புராணம், தர்மசாஸ்திரம், அத்தியயனம்பண்ணு கிறவன், கர்மம் அதின்பலம் முதலியவைகள் பிரதீதியாகின்றன. அ வ்வெல்லாபதார்த்தங்களிலும் சத்தியமென்கிற பிராந்தியுண்டாகிறது. ஆயினும் சொப்பனத்தின் பதார்த்தங்களெல்லாம் மித்தையாயிருக்கின் றன. இதுபோல ஜாக்கிரதபதார்த்தங்கள் எல்லாம் சத்தியமாகத்தோன் றுவது பிரமையே. உனக்கு நான் குருவாகத்தோன்றுகிறேன். பந்த த்தை நாசஞ்செய்கிற என்னுடைய வேதார்த்தவுபதேசமும் உனக்கு மித்தையாகவே பிரதீதியாகிறது. எப்படி அக்கிரதேவனுக்குச்சொப் பனத்தில் மித்தியாப்பிரதீதிக்கு விஷயங்களான குருவேதாதிகள் அனிர் வசனீயமாயுண்டாயினவோ அப்படி உனக்கு நான்முதலிய சகல அனிர் வசனீயங்களும் மித்தையாய்த்தோன்றுகின்றன.

423. அக்கிரதேவனுக்கு அடியில்கண்டபடிச்சொப்பனமுண்டா யிற்று. அக்கிரதேவன் என்பவன் அனாதிகாலமாய்த்தூங்கிக்கொண்

II. கிருதா இச்சை. தேவன் சுத்தசேதனம். அக்கிரதேவன் இச் சையற்ற சுத்தசேதனம்.

டிருந்தான். அப்போது ஒரு சொப்பனங்கண்டான்.[12] அதாவது:— நான்[13] சண்டாளன், மிகவும் துக்கி, என்னுடைய தேகம், எலும்பு, மஜ்ஜை, இரத்தம், தோல், மாமிசம், மேதைவீரியம் என்னும் ஏழு தாதுக்களால் நிறைந்திருக்கிறது. மகாகோரமாயும் பயங்கரமாயும் பாம்புயானை முதலியவைகளால் நிறைந்துமிருக்கிற வனத்தில்[14] நான் திரிகிறேன். அப்படித் திரிகிற நான் அவ்வனத்தில் வெகு இடங்களைப் பார்க்கிறேன். சில[15] விடங்களில அனேகபயங்கரமான பிராணிகள் என்னைப்பக்ஷிக்க எதிரில் ஓடிவருகின்றன. சிலவிடங்களில் இரத்தம்நிறைந்த தொட்டிகளில் விழுந்த பிராணிகள் ஹாஹாகாரசப்தங்களைச் செய்கின்றன. சிலவிடங்களில் நெருப்பில் காய்ச்சப்பட்ட இருப்புத்தூண்களிற் கட்டப்பட்டுச் சிலர் அலருகிறார்கள். சிலவிடங்களில் சுடுமணல் வழியாய்க் காலில் ஒன்றுமில்லாமல் சிலர் போகிறார்கள். அவர்களை ராஜசேவகர்கள் இருப்புத் தடியால் அடிக்கிறார்கள். இவ்விதமான அனேக பயங்கரமான இடங்களை அவன் பார்த்தான். ஒருகாலத்தில் தானும் அபராதஞ் செய்திருந்தபடியால் சொப்பனத்தில் துக்கத்தையடைகிறான்.

சிலவிடங்களில்[16] திவ்வியமான ஸ்தலங்களைப் பார்க்கிறான். அவ்விடங்களிலுத்தமமான தேவதைகள்[17] இருக்கிறார்கள். அவர்கள் திவ்விய போகத்தை யனுபவிக்கிறார்கள். அமிர்தத்தைப் பார்த்தமாத்திரத்தில் அவர்களுக்குத் திருப்தியுண்டாகிறது. அவர்களுக்குப் பசிதாகங்களாற் பீடையுண்டாகிறதில்லை. மலமூத்திரங்களற்று அவர்கள் சரீரம் பிரகாசமாயிருக்கிறது. உத்தமமான விமானத்திலிருந்துகொண்டு சிலர் ரமிக்கிறார்கள். அந்த விமானங்கள் அவர்களிஷ்டப்படிப் போகின்றன. சிலவிடங்களில் அரம்பை ஊர்வசி முதலிய அப்ஸர ஸ்திரீகள் நாட்டியமாடுகிறார்கள். அவர்கள் சரீரத்தில் யாதொரு தோஷமுமில்லை. ஸ்திரீகளெல்

12. சமுசாரம்.

13. ஸ்தூலசூட்சும தேகங்களின் அபிமானியான ஜீவன்.

14. ஜகத்து சமுசாரம்.

15. நரகவர்ணனை.

16. சுவர்க்கவர்ணனை.

17. வசு ருத்திர ஆதித்தியகணங்கள்.

லாம் சகலகுணங்களுடனுங் கூடியிருக்கிறார்கள்.[18] அவர்கள் சரீரத்தினின்றும் காமத்தைப்பிரகாசிப்பிவிக்கிற உத்தமமான சுகந்தம் வருகிறது. சிலவிடங்களில் அவர்களுடன் சிலதேவதைகள் ரமிக்கிறார்கள். அக்கிரதேவனும் ஒருக்கால் தேவபாவத்தை யடைந்து அவர்களுடன் வெகுகாலம் திவ்வியஸ்தானங்களில் ரமிக்கிறான். தற்செயலாய்[19] இரத்தம் மலம் இவைகளால் நிறைந்த தொட்டியில் முழுகிப்போகிறான்.

ஓரிடத்தில் எல்லாருக்கும் அதிபதியான புருஷனிருக்கிறான்.[20] அவன் உத்தரவின்படி நடக்கிறவர்கள்[21] அவன்முன்பாக நிற்கிறார்கள். சிலருக்கு[22] அந்த அதிபதியும் அவன் சேவகர்களும் சாந்தரூபமாய்த் தோன்றுகிறார்கள். சிலருக்கு[23] மகாபயங்கரரூபமாய்த் தோன்றுகிறார்கள் அவ்வனத்திலிருக்கிறவர்களுக்கு கர்மானுசாரமாய்ப் பலனைக் கொடுக்கிறார்கள். இவ்விதமாக அக்கிரதேவன் சொப்பனத்தில் அனேக இடங்களைப்பார்க்கிறான். வேறுசில விடங்களில் பிராமணர்கள் வேதபாராயணஞ்செய்கிறார்கள்.[24] சிலவிடங்களில் யாகசாலைகளில் உத்தமமான கர்மஞ்செய்கிறார்கள். சில்விடங்களில் உத்தமமான நதி ஓடுகிறது. அதில் புண்ணியத்தின் பொருட்டு ஜனங்கள் ஸ்நானம்பண்ணுகிறார்கள். சிலவிடங்களில் ஞானியான ஆசாரியர் சிஷனுக்குப் பிர்ம்மவித்தையை யுபதேசிக்கிறார். அந்தபிர்ம்மவித்தைக்கற்றுக்கொண்டு வனத்தினின்றும் அவர்கள் வெளியேபோகிறார்ரள்.

---

18. காவியஅலங்காராதி கிரந்தங்களில் சொல்லப்பட்ட ஸ்திரீகளின் 32 லக்ஷணங்கள்.

19. புண்ணியம்நசித்த உடன்.

20. யமதர்மராஜன்.

21. யமதூதர்கள்.

22. புண்ணியபுருஷர்களுக்கு.

23. பாபபுருஷர்களுக்கு.

24. பூலோகவர்ணனை.

இவ்விதமாகச் சொப்பனத்தில் அக்கிரத தேவன் க்ஷணமாத்திரத்தில் அனேக ஆச்சரியமான பதார்த்தங்களைப்பார்க்கிறான். அவனுக்குச் சொப்பனத்தில் மறுபடியும் தோன்றினதாவது, வெகுகாலமாய் நான் இந்தவனத்திலிருக்கிறேன். இந்த வனத்திற்கு ஒருக்காலும் நாசம் வருகிறதில்லை. ஒருக்கால் ஈஸ்வரனுடைய[25] நான்குமுகங்களினின்றும் அனேக பீஜங்கள் வெளியேவந்து அவ்வனம் அவரால் சிருஷ்டிக்கப்படுகிறது. ஜலம்[26] பாச்சுவதால் அவ்வனம் பரிபாலிக்கப்படுகிறது. ஒருக்கால் அவருடைய கோரமான ஹாஸியத்தால் அவர் முகத்தினின்றும் அக்கினி புறப்பட்டு அவ்வனத்தைத்[27] தகிக்கிறது. வனத்தின் உற்பத்தியுடன் நானும் உண்டாகிறேன். வனம் தகிக்கப்படும்போது நானும் தகிக்கப்படுகிறேன். வனம் முழுவதையும்தகித்து ஈசுவரன் மாத்திரமிருக்கிறார். அவர் சரீரத்தில் வனத்தின் பீஜம் தங்குகிறது. இவ்விதமாகச் சொப்பனத்திலேயே அக்கிரத தேவனுக்குவேதச்சிரவணமூலமாய்த் தெரிந்தது.

424. குருவைச்சந்தித்தல்:— தனக்கு அடிக்கடி ஜனனமரணங்களுண்டாவதைக் கேட்டு அக்கிரததேவன் விசாரிக்கிறான். எவ்விதமாக நான் இவ்வனத்தைவிட்டு வெளிப்படுவேன். அப்படி வெளிப்படாவிட்டாலும் இச்சண்டாளத்துவம்[28] எப்போது போய்த் தேவபாவம்[29] எப்படிக் கிடைக்கும். வனத்துக்கு வெளியேபோக வேறுஉபாயமில்லை. பிர்மவித்தையையுபதேசிக்கிற ஆசாரியர்[30] தன் சீஷர்களை வனத்துக்கு வெளியே கொண்டுபோகிறார். இப்படி விசாரபூர்வகமாயறிந்து அக்கிரத

---

25. பிர்ம்மா விஷ்ணு சிவரூபங்களால் ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி சங்காரங்களின் கர்த்தாவாகிற ஈசுவரன்.

26. கர்மானுசாரமாக சுகதுக்கங்களின் அனுபவமாகிற போகத்தைக் கொடுப்பதினால்.

27. பிரளயம் சம்பவிக்கிறது

28. ஜீவபாவம்.

29. பிர்ம்மபாவம்.

30. எவன் சாஸ்திரார்த்தத்தை அறிந்து சாஸ்திரத்திற்செல்லிய ஆசாரங்களைத் தானும் அனுசரித்து ஜனங்களையும் அனுசரிக்கும்படிச்செய்கிறானோ அவன் ஆசாரியனாவான்.

தேவன் சொப்பனத்திலேயே ஆசாரியனை யடைந்தான். அப்படி விதி பூர்வமாய் அடையப்பட்ட சிஷனை ஆசாரியர் தேவவாக்குரூபமான மித்தியா கிரந்தத்தையுபதேசிக்கிறார்.

425. மங்களாசரணம்;—மித்தியாசாரியரால் மித்தியாசிஷனுக்கு உபதேசிக்கப்பட்ட சமுஸ்கிருதக்கிரந்தம்[31] மொழிபெயர்க்கப்படுகிறது. சம்ஸ்கிருதக்கிரந்தத்தை மொழிபெயர்ப்பதில் முதலில் மங்களாசரணம் சொல்லுகிறார். ஏனெனில் மங்களத்தினால் கிரந்தமுடிவுக்குப் பிரதிபந்தங்களாயிருக்கிற விக்கினங்கள் நாசமாகின்றன விக்கினம் என்றால் பாவம். பாவத்தினால் சுபகாரியம் முடிவுபெறுகிறதில்லை. பாவங்கள் மங்களத்தால் நாசமாகின்றன. பாவமற்றவனும் கிரந்தாரம்பத்தில் மங்களம் அவசியம் சொல்லவேண்டும். ஏனெனில் கிரந்தாரம்பத்தில் மங்களஞ்சொல்லாவிட்டால் கிரந்தக்காரனிடத்தில் ஜனங்களுக்கு நாஸ்திகப்பிராந்தி யுண்டாகிக்கிரந்தத்திற் பிரவிர்த்தி யுண்டாகமாட்டாது.

426. மங்களபேதங்கள்:— மங்களம் மூவகைத்து. (1) வஸ்துநிர்த்தேசரூபம் (2) நமஸ்காரரூபம் (3) ஆசீர்வாதரூபம். சகுணமல்லது நிர்குணமான பரமாத்மா வஸ்து என்னப்படும். அதின் கீர்த்தனமே வஸ்துநிர்த்தேசரூபமங்களமென்னப்படும். தன்னுடைய அல்லது சிஷனுடைய வாஞ்சிதவஸ்துவைப் பிரார்த்திப்பது ஆசீர்வாதரூபமங்களமென்னப்படும்.

427. புராணத்தில் கணேசன் தேவீ இவைகளின் ஈசுவரதைப் பிரசித்தமாயிருக்கிறது. ஆகையால் அனீஸ்வரத்தின் சிந்தனையில்லை. புராணத்தில் கணேசனுக்குச் சொல்லப்பட்ட ஜன்மம் ஜீவர்களதுபோல்கர்மபலனல்ல; ஆனால் ராமகிருஷ்ணாதிகள்போல் பக்தர்களை யனுக்கிரகிக்கப் பரமாத்மாவின் ஆவிர்ப்பாவமென்று வியாஸபகவானுடைய முக்கிய அபிப்பிராயம். இந்த விடத்தில் ஒரு இரகசியமிருக்கிறது. பாரமார்த்திகத்தில் ஜீவனும் பரமாத்மாவுக்கு வேறன்று. ஆனால் ஆத்மாவிடத்திலிருக்கப்பட்ட ஜனனமரணாதிபந்தங்களின் அத்தியாஸம் ஜீவனுடைய ஜீவத்தன்மையாம். அந்த ஜன்மாதிபந்தம் கணேசாதிகளுக்குத் தங்களிடத்திற் பிரதீதியாகிறதில்லை. ஆகையால் அவர்கள் ஜீவர்களன்று. கணேசாதிகளுக்கு ஈஸ்வரதை யுண்டு. ஆகையால் கிர

31. குறிப்பான யாதொரு கிரந்தமும் கிரகிக்கத்தக்கதில்லை. இந்த (விசாரசாகர)கிரந்தத்திற்கு மூலஆதாரமான அனேக சம்ஸ்கிருத கிரந்தங்கள் கிரகிக்கத்தக்கன.

ந்தாரம்பத்தில் அவர்களின் சிந்தனை யுக்தமே. ஈஸ்வரன் நாநாரூபமா யிருக்கிறதாகச் சொன்னது எல்லாருக்கும் ஈஸ்வரனை யுண்டெனக்காண்பிப்பதற்குத்தான். ஈஸ்வரபக்தியும் குருபக்தியும் வித்தியாப்பிராப்திக்கு முக்கிய சாதனங்களாயிருக்கின்றன. இந்த அர்த்தத்தையும் ஈஸ்வரனுடைய நாநாரூபத்துவங் காண்பிக்கிறது.

428. நிர்க்குணவஸ்து நிர்த்தேசரூபமங்களம்:— வியாபகமாயும் சத்தியமாயுமிருக்கிற எதின் பிரகாசத்தால் சூரியன் சந்திரன் பிரகாசிக்கிறார்களோ அதாகவும் புத்திக்குச் சாக்ஷியாகவும் சுத்தஸ்வரூபமாகவும் பூர்ணாநந்தரூபமாகவும் இருக்கிற வஸ்துவே நான்.

429. சகுணவஸ்துநிர்த்தேசமங்களம்:— கணபதியின் பெயர் விக்கினங்களை ஸமூலமாக நாசம்பண்ணுகிறது. அவரைச்சிந்திக்காவிடின் தேவதைகளுடைய இச்சைகளுஞ் சித்திக்கிறதில்லை. திரிபுரவதத்தில் இந்த விஷயம் பிரசித்தமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

430. நமஸ்காரரூபமங்களம்;— அசுரர்களைச் சங்கரிக்கிறவர்களாயும் பக்தர்களை யெப்போதும் பரிபாலிக்கிறவர்களாயுமிருக்கிற லக்ஷ்மீபதியான மகாவிஷ்ணுவையும் பார்வதீபதியான பரமசிவனையும் நமஸ்கரிக்கிறேன்.

431. தான் கருதியதைப்பெறும் ஆசீர்வாதரூபமங்களம்:— எந்தச் சக்தியின் பலத்தால் ஈசுவரன் சிருஷ்டிக்கிறாரோ அந்தச் சக்தி இந்தகிரந்தம் முடியும்பொருட்டு என் வாக்கிலிருக்கப் பிரார்த்திக்கிறேன்.

432. சீஷன் கருதியபொருளைப்பெறும் பிரார்த்தனா ரூபமங்களம்:— பந்தத்தை நீக்கிச் சுகத்தைத்தரும் தீனதயாளுவான தாதுகுரு இந்தக் கிரந்தத்தைச் சிரவணபடனங்கள் செய்கிறவனுடைய ஜன்மாதிதுக்கத்தை நிவிர்த்திப் பாராக.

433. வேதாந்த[32] சாஸ்திரகர்த்தாவாகியஸ்ரீவேதவியாஸரை நமஸ்கரித்தல்[33] (433-435):— வனத்தில் காற்றடித்து மரங்களை யசைத்து அலைகளின்

---

32. வேதாந்தமென்றால் உபநிஷத்துக்கள். இவைகளின் தாற்பரியத்தை நிச்சயம் செய்வது பிரம்மசூத்திரம். இதின் கர்த்தா வேதவியாஸர்.

33. மனதினாலும் வாக்கினாலும் சரீரத்தினாலும் தன்னைத்தாழ்த்திப்பிற

முட்களை இறைத்துமனோக்கியமான தாமரைப்பூவைப்பறித்து முட்களிற் போடுகிறது. அந்த புஷ்பத்தைப் பார்த்து அவ்வழியேபோகுமொருவன் இது இங்கிருக்கத்தகாதென்றும் உத்தமமான இடத்திலிருக்கவேண்டுமென்றும் நினைத்து அதைக்கையில் எடுத்துக் கொள்ளுகிறான். மறுபடியும் அவன் யோசிக்கிறதாவது:— இவ்வாயு மறுபடியும் பூக்களை முட்களிற் போடும். ஆனதால் பூக்கள் முட்களில் விழாமலிருக்கும்படி யோருபாயஞ் செய்யவேண்டுமெனக்கருதிச் சூத்திரங்களால் ஒருவலைசெய்து முண்மரத்தைப் பிரித்துவிடுகிறான். அவ்வலையால் புஷ்பங்கள் முட்களில் விழுகிறதில்லை.

434. இதுபோல், பேதவாதியாகிய ஆசாரியரூபவாயு[34] வேதரூபவனத்தில் அர்த்தவாதரூப[35] முட்கள்சகித விருக்ஷத்தினின்றும் ஸகாம கர்மரூபமுட்களைப் பிடுங்கிக் கபடமில்லாமலும் ராகாதிதோஷங்கள் ரகிதனுயுமிருக்கிற சிஷ்யரூப தாமரைப்பூவை சமாதிரூப அதின் ஸ்தானத்தினின்றும் பிடுங்கி ஸகாம கர்ம ரூபமுள்ள வனத்திற் போடுகிறது. அவ்வழியே போகிறவனுக்குச் சமானமான எங்கும் வியாபித்திருக்கிற ஸ்ரீமகாவிஷ்ணு இவன் இவ்விடத்திலிருக்கத்தகாதவனென்றும் தன் ஸ்வரூபத்தையடையத் தகுந்தவனென்றும் நினைத்து வியாஸரூபந்தரித்து அச்சிஷ்யனை உபதேசரூபஸ்தானத்தில் வைத்தார். ஒருவன் கையிலிருக்கிற புஷ்பத்தைப் பிடுங்கக்காற்று சமர்த்தமாகாததுபோல் பிர்ம்மநிஷ்ட ஆசாரியருடைய உபதேசத்தில் இருக்கிறவனைப் பேதவாதி பிரமிக்கும்படிச்செய்யச் சமர்த்தனாகிறதில்லை. ஆகையால் உபதேசமே புஷ்பத்தின் ஆசிரய ரூப இடம். மறுபடியும் வியாஸபகவான் விசாரிக்கிறதாவது; இந்தப் பேதவாதி இதர ஜனங்களையும் ஸகாமகர்ம ரூப முட்களில் போடுவான். ஆகையால் சிஷ்யர்கள் பிரமிக்காமலிருக்கும்படிச் சூத்திர ரூபமான வலையினால் வேதவாக்கியரூப விருக்ஷங்களை விபாகித்தார்.

---

ரைப்புகழ்ந்து துதித்தலும் சிந்தித்தலும் நமஸ்காரமென்னப்படும். இம்மூவிதநமஸ்காரங்களும் உத்தம மத்தியம அதமங்களாயிருக்கின்றன. இவைகளில் மனோநமஸ்காரம் விதை. வாக்குநமஸ்காரம் முளை. சரீரநமஸ்காரம் மரம். குருவின் பிரசன்னதை பலன்.

34. பேதவாதியை ஆசாரியனாகச் சொன்னது ஒருவனைச் சிங்கமென்பதுபோல உபசாரமாத்திரத்தான்.

35. கீதை அல்லது ஸ்துதிவசனம், 1 வது தரங்கம் 39 வது குறிப்பைப்பார்க்க.

435. வனத்திலிருக்கும் முள்மரங்களும் முள்ளில்லாமரங்களும் வலையால் பரிக்கப்பட்டால் பூக்கள் முள்ளில் விழமாட்டா. இதுபோல் வேதத்திலிருவித வாக்கியங்களுண்டு. ஒன்று கர்மத்தைத்துதித்துப் பகிர்முகனைக் கர்மத்திற் பிரவேசிக்கும்படிச்செய்கிறது. மற்றொன்று கர்மபலத்தின் அநித்தியதையைப் போதித்துப் புருஷனை நிவிர்த்தியில் திருப்புகிறது. இவ்வாக்கியாதிகளை வியாஸர் பிரித்துச் சூத்திரத்தினாற் போதிக்கிறதாவது, சகல வாக்கியங்களுக்கும் நிவிர்த்தியில் தாற்பரியமே தவிரப் பிரவிர்த்தியில் ஒருவாக்கியத்துக்கும் தாற்பரியமில்லை. பிரவிர்த்தியைப் போதிக்கிறவாக்கியத்துக்கும் தாற்பரியமென்னவெனில், ஸ்வாபாவிகமாயும் நிஷித்தமாயும் இருக்கிற பிரவிர்த்தியிலிருந்துபுருஷனைத் திருப்பி விஹிதத்திற் புகச்செய்து அந்தக்கரணத்தைச் சுத்தமாக்கிப் புருஷனை ஞான நிஷ்டையில் வைப்பதேயாம். இவ்விதமாகப் பிரவிர்த்திக்கும் நிவிர்த்தியிலேயே தாற்பரியம். அர்த்தவாத வாக்கியங்களால் கர்மபலன் போதிக்கப்பட்டது குளாஜிஹ்வை[36] நியாயத்தினால் தான். பலத்தில் தாற்பரியமில்லை யென்னும் அர்த்தத்தைச் சூத்திரத்தினால் வியாஸர் போதிக்கிறார். சூத்திரங்களால் இந்த அர்த்தத்தைப் புருஷன் அறிந்து ஸகாம கர்மத்தில் பிரவிர்த்திக்கக் கூடாது. நூல்வலை புஷ்பத்தை முள்ளினின்றும் தடுப்பதுபோல் வியாஸருடைய சூத்திரம் ஸகாம கர்மத்தினின்றும் தடுப்பதால் வலைக்குச் சமானமாயிருக்கிறது. நிச்சலதாஸனாகிய நான் ஸ்ரீ வியாஸனை நமஸ்கரிக்கிறேன்.

436. அக்கிரதேவனுடைய முதற்கேள்வி:— ஸ்வாமின், நான் யார் தேகஸ்வரூபமா, தேகத்துக்கு வேறா? நான் மனுஷியனாயிருக்கிறேன். எனக்குச் சரீர மிருக்கிறது. இவ்விரண்டு பிரதீதிகளால் எனக்குச் சந்தேகம் ஜனித்திருக்கின்றது. தேகத்துக்கு வேறென்று தாங்கள் சொல்லும்பக்ஷத்தில் நான் கர்த்தா போக்தாவா அல்லவா? கர்த்தா போக்தா ஆகாவிட்டாலும் நான் சகலசரீரங்களிலும் ஏகமா அநேகமா?

---

36. ஒரு தாய் தன்குழந்தைக்குக் கசப்பான மருந்தைக் கொடுக்க இச்சித்து வெல்லத்தைக்கொடுத்து மருந்தும் தித்திக்குமென்று நம்பச்செய்து மருந்தைச் செலுத்திவிடுகிறாள். இதுகுளாஜிஹ்வை நியாயமெனப்படும். இதுபோல் சுருதியாகிற வேதம் பாமரஜனங்களாகிற குழந்தைகளுக்குக் கர்மபலத்தைத் துதிக்கும் வசனங்களாகிற வெல்லத்தைக் கொடுத்து ஸ்வர்க்காதிகளடையப்படுமென்று போதித்துக் கர்மத்திற்பிரவிர்த்தியுண்டாகும்படிச் செய்கிறது. எப்படித் தாய்க்கு ரோகநிவிர்த்தியிற் கருத்தோ வெல்லம் சாப்பிடுவதிற் கருத்தில்லையோ அப்படி வேதமாகிற தாய்க்குப் பாபநிவிர்த்திமூலமாகச் சித்தசுத்தியில் தாற்பரியமேதவிர ஸ்வர்க்காதிபலத்தில் தாற்பரியமில்லை.

437. ௨-வதுகேள்வி இந்த சமுசாரத்தின் கர்த்தா யார்? இதற்கு யாராவது கர்த்தா வுண்டா? அல்லது இது தானாகவே யுண்டாயிருக்கிறதா? கர்த்தா யிருக்கும்பக்ஷத்தில் கர்த்தா ஜீவனா ஈசுவரனா? ஈஸ்வரனானால் ஈஸ்வரன் ஓரிடத்திலிருக்கிறாரா? அல்லது எங்கும் வியாபித்திருக்கிறாரா? வியாபகமானால் வியாபகமான ஆகாசத்துக்கும் ஜீவனுக்கும் பேதமிருக்கிறதுபோல் ஈஸ்வரனும் ஜீவனும் பின்னமா அபின்னமா.

438. 3-வதுகேள்வி:— முக்திக்குக் காரணம் ஞானமா, கர்மமா உபாஸனையா அல்லது இரண்டா?[37] இரண்டெனும்பக்ஷத்தில் ஞானகர்மங்களா ஞானஉபாஸனைகளா? அல்லது கர்மஉபாஸனைகளா?

439. முதற்கேள்விக்குத்தரம் (439—490):— சிஷனே உன் முதற்கேள்விக்கு உத்தரஞ் சொல்லுகிறேன். நீசத்சித்ஆனந்தஸ்வரூபமாயிருக்கிறாய்.[38] இப்படிச் சொல்லுகிறதினால் நீ தேகத்துக்கு வேறென்று சொல்

---

37. உபாசனை மானசிக கர்மமானதால் "இரண்டா" வென்று கேழ்க்கப்பட்டது.

38. நீ தேகமன்று. ஏனெனில் தேகம் ஜடமாயும் உன்னால் பார்க்கப்பட்டும் அமங்களமாயும் அநித்தியமாயும் விகாரத்தோடுகூடியதாயுமிருக்கிறது நீ சச்சிதானந்த ஸ்வரூபி. (1) தேகத்தின் சுகதுக்கங்கள் உன்னை பாதிக்கிறபடியால் நீயே தேகம் என்று சொல்லும்பக்ஷத்தில் அது சரியன்று. ஏனெனில் தேகதாதாத்மியத்தினால் தேகத்தின் சுகதுக்கங்கள் உன்னுடைய சுகதுக்கங்கள்போல் தோணுகின்றன. தனம் கிடைத்தால் சுகம் உண்டாகிறது. தனம் நஷ்டமானால் துக்கமுண்டாகிறது. லாபநஷ்ட தாதாத்மியத்தினால் சுகதுக்கங்கள் தோணுவதுபோல் தேகதாதாத்மியத்தினால் அவைகள் தோன்றுகின்றன. எப்படி தனம் நீ அன்றோ தனத்துக்கு வேறாயிருக்கிறாயோ அப்படி தேகத்தைக்காட்டிலும் நீ வேறு. நீ தேகமன்று. (2) தேகம் விர்த்தி அடைவதால் நீ தேகமென்று சொல்லும்பக்ஷத்தில் ஜடமான மண்திண்ணையும் சத்தை குப்பை சேருவதினால் விர்த்தியடைவதுபோல் அன்னமயசரீரத்தில் பிரதிதினம் அன்னம் சேருவதினால் தேகம் விர்த்தியடைகிறது. விர்த்தியடைவதினால் மட்டும் திண்ணை சேதனமாகாததுபோல தேகமும் சேதனமாகமாட்டாது. ஆகையால் சேதனமான நீ தேகமன்று. (3) ஜன்மகாலம் முதல்தேகம் அமங்களமாயிருப்பது எல்லாருக்கும் தெரிந்தவிஷயமே. (4) என்சரீரம்ஸ்தூலமாயிருக்கிறது, கிருசமாயிருக்கிறது என்றுசொல்லுவதினால் உன்னைக்காட்டிலும் சரீரம்வேறுஎன்பதும் அதை நீபார்க்கிறவனாயிருக்கிறாய் என்பதும் பிரத்தியக்ஷமாயிருக்கிறது. பார்க்கப்படும் பதார்த்தத்துக்கு பார்க்கிறவன் வேறானதால் நீ தேகமன்று. (5) ஜனனமர

லப்பட்டது. ஏனெனில் தேகம் அசத்ரூபமாயு ஜடரூபமாயும் துக்கரூபமாயுமிருக்கிறது.

440. நீ கர்த்தாபோக்தா வன்று. ஏனெனில் எவனிடத்தில் துக்கமிருக்கிறதோ அவன் துக்கநிவிர்த்தியின்பொருட்டும் சுகப்ராப்தி

---

ணங்களுடன் கூடியிருப்பதால் தேகம் அனித்தியம். (6) பால்யயௌவனகௌமாராதி அவஸ்தைகளுடன் கூடியிருப்பதால் தேகம் விகாரமாயிருக்கிறது. நீ அவிகாரீ பால்யத்தில் கிரீடாசக்தனாயும் யௌவனத்தில் விஷயாசக்தனாயும் வார்த்திகத்தில் சிந்தாயுக்தனாயுமிருப்பதாலும் இவ்வவஸ்தைகளை நீ அநுபவிப்பதாலும் இவைகளுடன் கூடினதேகம் நீ அல்லவென்பதும் தேகம் விகாரத்தொடுகூடினதென்பதும் அநித்தியமாயிருக்கிறதென்பதும் நன்றாய்த்தெரிகிறது. நீ சேதனஸ்வரூபம் சாக்ஷீ. தேகம் நீ இல்லாததினால் நாமரூபஜாதிவர்ணாசிரமாதிகளும் நீ அல்ல, மேலும் தேகம் நீ அல்லவென்பதினால் இந்திரியம் மனது புத்தி பிராணன் இவைகளும் நீ அல்லவென்று அறியத்தக்கது. (1) இந்திரியங்கள் இருக்குங்காலத்தில் நீ பார்க்கிறதினாலும் கேழ்க்கிறதினாலும் நீயே இந்திரியம் என்று சொல்லுவது பிசகு. ஏனெனில் இந்திரியம் ஜடம், பூதகாரியம். இந்திரியம் ஆத்மாவையும் அறியமாட்டாது, வேறுயாதொன்றையும் அறியமாட்டாது. சுரோத்திரேந்திரியமே நீ எங்கே இருக்கிறாய் என்று கேட்டால் நான் இவ்விடத்தில் இருக்கிறேன் என்று சொல்ல அதற்குச் சாமர்த்தியமில்லை. இப்படியே ஒவ்வொருஇந்திரியமும் அசமர்த்தமாயிருப்பதால் இந்திரியங்கள் ஜடங்கள். இவைகள் பூதகாரியமென்பது முன்னமேயே மூலத்தில் தெளிவாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் நீஇந்திரியமல்ல. (2) மனது தெளிவாயிருக்கும்போது பார்க்கிறதினாலும் கேழ்கிறதினாலும் மனதுசஞ்லப்பட்டிருக்கும்போது இவ்வியாபாரங்களில்லாதபடியாலும் நீயே மனது என்று சொல்லும்பக்ஷத்தில் அதுவும் பிசகு. ஏனெனில் என்மனது இப்போது ஸ்திரமாயில்லை என்று சொல்லுவதினால் மனதுவேறுஎன்பது வெளியாகிறது. (3) புத்தியும் அந்தக்கரண பேதமானதால் புத்தியும் நீஅல்ல. (4) பிராணனிருக்குங்காலத்தில் வியாபாரங்கள் நடக்கிறபடியால் பிராணனே நீ என்று சொல்லுவது சரியன்று. ஏனெனில் பிராணன் ஜடம். எப்படி எனில் இரவில்தூங்குங்காலத்தில் திருடன்பொருளை எடுத்துக்கொண்டுபோனால் பிராணன் இருந்தும் அறிகிறதில்லை. ஆகையால் பிராணன் ஜடம். அப்படியானால் தேகத்தில் சேஷ்டை உண்டாகும்படி எப்படி பிராணன் செய்யக்கூடுமெனில் ஜடமான காத்து ஒருவிடத்திலுள்ள பதார்த்தத்தை மற்றொருவிடத்தில் கொண்டுபோய் போடுவதுபோல் ஜடமான பிராணனும் சேஷ்டைசெய்யக்கூடும். ஆகையால் பிராணனும் நீ அன்று. இவ்விதமாக தேகம், பிராணன், இந்திரியம், மனது, புத்தி, இவைகளில் யாதொன்றுமாகாமல் நீ சச்சிதானந்த ஸ்வரூபியாயிருக்கிறாய்.

யின்பொருட்டும் கிரியையைச் செய்கிருன். அவன் கர்த்தாவென்னப் படுகிருன். உன்னிடத்தில் துக்கமில்லாததினுல் (125) துக்கநிவிர்த்தியின் பொருட்டுக் கிரியையைச் செய்கிறவனல்ல. நீ ஆனந்தஸ்வரூபமாயிருக்கிருய். (125) ஆனதால் சுகப்பிராப்தியின் பொருட்டும் நீ கிரியையின் கர்த்தாவாகிறதில்லை. எவன் கர்த்தாவாகிருனே[39] அவனே போக்தாவாகிருன். நீ கர்த்தாவன்று ஆகையால் போக்தாவு மன்று. புண்ணியபாவங்களை யுண்டுபண்ணுகிற கர்மத்தின் கர்த்தாவும் சுகதுக்கங்களின் போக்தாவும் ஸ்தூலசூக்ஷ்மங்களுடன் கூடிய தேகமே நீ யன்று. நீ தேகசாக்ஷீ.

441. ஆனதால் ஆத்மா ஏகம் நாநாவன்று. ஆத்மா கர்த்தாபோக்தாவாகும்பக்ஷத்தில் அனேகமாயிருக்கக்கூடும். ஏனெனில் ஒருவன் சுகியாயிருக்கிருன். ஒருவன் துக்கியாயிருக்கிருன். கர்த்தாபோக்தாவாக ஒருவனே இருக்கும்பக்ஷத்தில் ஒருவனுக்குச் சுகம் அல்லது துக்கம் உண்டாகிறதினுல் எல்லாருக்கும் சுகம் அல்லது துக்கம் உண்டாகவேண்டும். அனுபவத்தில் இப்படியில்லாததினுல் போக்தா அனேகம். ஆத்மா போக்தாவாகாததினுல் (440) ஆத்மா ஒன்றே.

442 சாங்கியமதம் (442—43) சாங்கியமதத்தில் ஆத்மா கர்த்தா போக்தாவாக அங்கீகரிக்கப்படாமல் அநேகமென்று அங்கீகரிப்பது நிரம்பவும் விருத்தமாயிருக்கிறது. ஏனெனில் சாங்கியசித்தாந்தம் அடியில் வருமாறு. சத்துவரஜஸ்தமோகுணங்களின் சமானஅவஸ்தைக்குப் பிரதான மென்று பெயர். இந்தப்பிரதானம் பிரகிருதி யாயிருக்கிறது, விகிருதி யன்று. விகிருதியென்றுல் காரியம், பிரகிருதி என்றுல் உபாதானகாரணம். இந்தப் பிரதானம் மஹத்தத்துவத்தின் உபாதானகாரணமாயிருப்பதால் பிரகிருதியாயிருக்கிறது. அநாதியாயிருப்பதால் இதுவிகிருதியன்று. மஹத்தத்துவம்[40] அஹங்காரம் பஞ்சதன்மாத்திரைகள் இவ்வேழுபிரகிருதிகளும் விகிருதிகளாயிருக்கின்றன. முன்னிற்பது பின்னிற்பதற்குப் பிரகிருதியாயும் பின்னிற்பது முன்னிற்பதற்கு விகிருதியாயுமிருக்கின்றன. தன்மாத்திரைகளும் பஞ்சபூதங்களுக்குப் பிரகிருதிகளாயிருக்கின்

---

39. எது கர்த்தாவோ அதுவே போக்தாவென்பது உலகத்தில் பிரசித்தமாயிருக்கிறது. அந்தக்கரணம் கர்மத்தின் கர்த்தா. ஆகையால் அதுவே கர்மபலமாகிற தன் பரிணமமான சுகதுக்கங்களின் போக்தாவாயுமிருக்கிறது.

40. மாயையினின்றும் சமஷ்டி புத்தி ரூபம் மகத்தத்துவம். இதினின்றும் சாத்விகராஜஸதாமஸபேதங்களோடுகூடிய அகங்காரதத்வம் உண்டாகிறது. இதினின்றும் பஞ்சதன்மாத்திரையுண்டாகிறது.

றன. இவ்விதமாக ஏழுபிரகிருதிகளும் விகிருதிகளாயிருக்கின்றன. பஞ்சபூதங்கள் தசேந்திரியங்கள் மனது இந்தப்பதினாறும் விகிருதிகளாம் பிரகிருதிகளன்று. புருஷன் பிரகிருதிவிகிருதிகள் இரண்டுமன்று. ஏனெனில் ஒன்று ஒருபதார்த்தத்துக்குக் காரணமானால் அது பிரகிருதியாகும். காரியமானால் அதுவிகிருதியாகும். புருஷன் ஒன்றுக்கும் காரணமாகாததினால் பிரகிருதியில்லை. காரியமாகாததினால் அவன் விகிருதியுமன்று. ஆகையால் புருஷன் அசங்கன். இவ்விதமாகச் சாங்கியமதத்தில் 25 தத்துவங்களிருக்கின்றன. தத்துவமென்றால் பதார்த்தம்.

443. சாங்கியமதத்தில்[41] ஈசுவரன் அங்கீகரிக்கப்படவில்லை. சுதந்திரமான பிரகிருதியே ஜகத்துக்குக் காரணமாயிருக்கிறது. புருஷனுடைய போகமோக்ஷங்களின் பொருட்டுப் பிரகிருதியே பிரவிர்த்திக்கிறது. புருஷன் பிரவிர்த்திக்கிறதில்லை. பிரகிருதியின் விஷயரூபபரிணாமத்தால் புருஷனுக்குப் போகமுண்டாகிறது. புத்திமூலமாக விவேகரூபப்பிரகிருதியின் பரிணாமத்தால் மோக்ஷமுண்டாகிறது. புருஷன் அசங்கனாயிருப்பதால் அவனிடத்திற் போகமோக்ஷங்கள் பொருந்தா. ஆயினும் ஞானம் சுகம் துக்கம் ராகம் துவேஷம் முதலியவைகள் புத்தியின் பரிணாமமாயிருக்கின்றன. இந்தப் புத்திக்கு ஆத்மவிவேகமில்லை. அவிவேகமிருக்கிறது. ஆனதால் ஆத்மாவினிடத்தில் பந்தமோக்ஷங்கள் ஆரோபிக்கப்பட்டிருக்கின்றனவே தவிரப் பாரமார்த்திகத்திலில்லை. அவிவேகத்தால் சித்திக்கிறபோகத்தால் சாங்கியமதத்தில் ஆத்மா கர்த்தாவெனச் சொல்லப்படுகிறது. பாரமார்த்திகத்தில் ஆத்மா போக்தாவன்று. புத்தியே போக்தா, புத்தி ஆத்மாவுக்கு வேறு. இந்தஞானத்துக்கு விவேகமென்றுபெயர். இதின் அபாவத்துக்கு அவிவேகமென்று

---

41. சாங்கியம்ஸேசுவரம் நிரீசுவரமென்று இருவகையாம். கர்த்தமருடையவும் தேவஹூதியினுடையவும் புத்திரரானகபிலர்ஸேசுவரசாங்கியர். வேறொரு கபிலர் இருந்தார். இவர் நிரீசுவரசாங்கியர். இவருடையமதத்தில் ஈஸ்வரன் அங்கீகரிக்கப்படவில்லை. ஆனால் பிரகிருதியை ஜகத்காரணமாகவும் புருஷனுடையபோகமோக்ஷங்களுக்குஹேதுவாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த மதம் சரியன்று. ஏனெனில் பிரளயகாலத்தில் சத்துவாதிகுணங்களுடைய சேர்க்கைக்குப்பிரதானம் அல்லது பிரகிருதியென்றுபெயர். சிருஷ்டிகாலத்தில் இந்த அவஸ்தை விடுபட்டு ஜகத்துண்டாகிறது. அந்தப்பிரதானம் ஜடமாயிருப்பதால் அந்த அவஸ்தையைவிட்டுவிட ஸ்வயம் சமர்த்தமாகிறதில்லை. புருஷன் இவருடைய மதப்படிக்கும் அசங்கனாயிருப்பதால் அவனுக்கும் பிரதானத்துக்கும் சம்பந்தமில்லை. சேதனசம்பந்தமன்றியில் ஜடத்தினால் யாதொருகாரியமும் நடக்கிறதில்லை. ஆகையால் மாயையுடன்கூடின ஈஸ்வரனே ஜகத்கர்த்தாவென்று நினைக்கவேண்டியது.

பெயர். இவ்விதமாகச் சாங்கியமதத்தில் ஆத்மா அசங்கமாயிருக்கிறது. சுகாதிகள் புத்தியின் பரிணாமங்களாம், ஆதலால் புத்தியின் தர்மங்களாம். ஆத்மாவும் அநேகம்.

444. மேற்சொல்லியது மிகவும் விருத்தமாயிருக்கிறது. சுகதுக்கங்கள் ஆத்மாவின் தர்மங்களானால் அவைகள் ஒவ்வொரு சரீரத்திலும் பேதப்படுவதால் ஆத்மா பேதப்படக்கூடும். சுகதுக்கங்கள் ஆத்மாவின் தர்மங்களாகாமல் புத்தியின் தர்மங்களாவதால் அவைகளின் பேதத்தால் புத்தியின் பேதம் சித்திக்கிறதேதவிர ஆத்மாவின் பேதம் சித்திக்கவில்லை. ஒரே வியாபகஆகாசத்தில் அனேக வுபாதிகளின் தர்மங்கள் உபாதி ஆகாசமிவைகளின் அவிவேகத்தினால்தோன்றுவதுபோல் ஒரேவியாபக ஆத்மாவில் அனேக புத்திகளின் தர்மங்கள் அவிவேகத்தினால்தோன்றுகின்றன. சாங்கியமதத்தில் இப்படியங்கீகரிப்பது உசிதமாயிருக்கும். ஆத்மாவை அசங்கமாகப் பாவித்து மறுபடியும் அதை யனேகமாகச் சொல்வது நிஷ்பிரயோசனம்.

சில ஆத்மாக்கள் முக்தர்களாயும் சிலருக்குப் பந்தமிருப்பதாயும் பாவித்துப் பந்தமோக்ஷங்களின் பேதத்தால் ஆத்மா பேதப்படுவதாகச் சொல்வதுஞ் சரியன்று. ஏனெனில் பந்தமோக்ஷங்கள் ஆத்மாவினிடத்தில் அங்கிகரிக்கப்பட்டிருந்தால் அவைகளின் பேதத்தால் ஆத்மாவின் பேதம் சித்திக்கும். சாங்கியமதத்தில் அசங்கமான ஆத்மாவினிடத்தில் பந்தமோக்ஷங்கள் அங்கிகரிக்கப்படவில்லை. ஆனால் புத்தியின் அவிவேகத்தால் பந்தமும் புத்தியின் விவேகத்தால் பந்தத்துக்கு மோக்ஷமும் அங்கிகரிக்கப்பட்டிருக்கின்றன. எது அவிவேகத்தாலுண்டாகிறதோ அது விவேகத்தால் நிவிர்த்தியாகிறது. ரஜ்ஜு சர்ப்பம்போல் அது மித்தை: ஆத்மாவினிடத்தில் புத்தியின் அவிவேகத்தால் பந்தமிருக்கிறது. விவேகத்தால் அது நிவிர்த்தியாகிறது. ஆகையால் பந்தம் மித்தை. எப்படி பந்தம் மித்தையோ அப்படி ஆத்மாவின் மோக்ஷமும் மித்தை. எதில் பந்தம் சத்தியமாயிருக்கிறதோ அதற்கே மோக்ஷம் சத்தியமாகும். ஆத்மாவில் பந்தம் மித்தையானதால் மோக்ஷமும் மித்தையே. இவ்விதமாக மித்தையான பந்தமோட்சங்கள் ஆகாசம்போல் ஒரே ஆத்மாவினிடத்திற் பொருந்தும். அவைகளின் பேதத்தால் ஆத்மாவின் பேதம் சித்திக்கவில்லை. ஆகையால் சாங்கியமதத்திற்சொல்லிய ஆத்மாவின்பேதம் அசங்கதம்.[42]

42 சாங்கிய மதத்தில் ஆத்மா நாநாவாயிருப்பதால் ஸஜாதிய சம்பந்தமும் பிரகிருதி நித்தியமாயிருப்பதால் விஜாதிய சம்பந்தமும் கிடைக்கின்றன

## மூன்றுவித நியாயமதங்களும் அவைகளின் கண்டனமும் (445—467)

445. ஆத்மாவியாபகம் (445—456) :— நியாயமதத்திலும் சாங்கியமதத்திற்போலவே ஆத்மாவின் பேதம் அசங்கதமாயிருக்கிறது. ஏனெனில் நியாயசித்தாந்தம் அடியில் வருமாறு:—சுகம் துக்கம் ஞானம இச்சை துவேஷம் பிரயத்தனம் தர்மம் அதர்மம் ஞானசமுஸ்காரம் சங்கியை பரிமாணம் பிரதக்கு ஸம்யோகம் விபாகம் இப்பதினான்கு குணங்களும் ஜீவரூப ஆத்மாவினிடத்திலிருக்கின்றன. சங்கியை பரிமாணம் பிரதக்கு ஸம்யோகம விபாகம் ஞானம் இச்சை பிரயத்தனம் இவ்வெண்குணங்களும் ஈஸ்வரனிடததிலிருக்கின்றன. 'பேதம் என்னவெனில் ஈஸ்வரனுடைய ஞானம் இச்சை பிரயத்தனம் நித்தியமாயும் ஜீவனுடைய ஞானாதிகள் மூன்றும் அநித்தியமாயுமிருக்கின்றன. ஈஸ்வரன் வியாபகமாயும் நித்தியமாயுமிருக்கிறான். ஜீவன் அநேகமாயும் எங்கும் வியாபகமாயும நித்தியமாயும் இருக்கிறான். ஜீவனுடைய ஞானம் அநித்தியமாயிருப்பதால் ஞானகுணமிருக்குங்காலத்தில் ஜீவன் சேதனமாயும் இல்லாதகாலத்தில் ஜடமாயுமிருக்கிறான்.[43]

446. நித்தியபதார்த்தங்கள்:— ஜீவேஸ்வரர்கள்போல் ஆகாசம், காலம், திக்கு, மனது இவைகளும் பிருதிவி, ஜலம், தேயு, வாயு இவைகளின் பரமாணுக்களும் நித்தியமாயிருக்கின்றன. ஜன்னலின் வழியாய் வருங்கிரணத்தில் காணப்படுகிற சூக்ஷ்மமான தூளியின் ஆறிலொருபாகத்துக்குப் பரமாணுவென்றுபெயர். இந்தப்பரமாணு ஆத்மாபோலநித்தி

---

மறுபடியும் ஆத்மா அசங்கமென்று சொல்வது பூர்வோத்தர விரோதமாயிருக்கிறது. ஆத்மா ஒன்றென அங்கீகரித்து அந்தக்கரணபேதத்தால் போகாதிகள் பேதப்படுகின்றன வென நினைப்பதில் யாதொரு தோஷமுமில்லை. மேலும் ஆத்மா அநேகமென்று சொல்வது சுருதி விருத்தமாயிருக்கிறது. அதுவுமன்றியில் ஆத்மாக்களுக்குள் பேதமிருப்பதாகச்சொல்லுகிறவனுக்கு ஒரு கேள்வி:— அதாவது இந்தப்பேதம் பேதசகித ஆத்மாவினிடத்திலிருக்கிறதா அல்லது பேதரகித ஆத்மாவினிடத்திலிருக்கிறதா? இரண்டாவது பக்ஷத்தில் பூர்வோத்தரவிருத்தம் சம்பவிக்கிறது. முதல் பக்ஷத்தில் ஆத்மாசிரயாதிதோஷங்கள் சம்பவிக்கும். ஆகையால் ஆத்மாவினிடத்தில் பேதஞ்சொன்னது சரியன்று பந்த மோக்ஷங்களினாலாவது கர்த்தருத்துவ போக்தருத்வங்களினாலாவது ஆத்மாவுக்கு அநேகத்துவங்கிடைக்கவேண்டும். இவைகளில்லாதபோது அநேகத்துவம் எப்படி சித்திக்கும்.

43. ஆத்மாஜடம் என்பது (472—475)ல் கண்டிக்கப்பட்டிருக்கிறது.

யமாயிருக்கிறது. ஜாதி[44] முதலிய வேறுசில பதார்த்தங்களும் நியாயமதத்தில் நித்தியமாயிருக்கின்றன. வேதத்துக்கு விருத்தமான சித்தாந்தங்களை வெகுவிரயெழுதுவதால் ஜிஞ்ஞாசுவுக்கு உபயோகமில்லை. ஆனதால் அவைகளை யெழுதவில்லை.

447. பிராந்திசம்சாரஹேது:— நான் மனுஷன் பிராமணன் என்று தேகத்தினிடத்தில் ஆத்மப்பிராந்தியுண்டாகிறது. அதனால் ராகத்துவேஷங்களுண்டாகின்றன. இவைகளால் தர்மாதர்மங்களின்பொருட்டுப்பிரவிர்த்தியுண்டாகிறது. இது சரீரத்துடன் சம்பந்தப்படுவதுமூலமாகச்சுகதுக்கங்களுண்டாகின்றன. இவ்விதமாக நியாயமதத்தில் பிராந்திஞானம் ஆத்மாவின் சமுசாரத்துக்கு ஹேதுவாயிருக்கிறது.

448. பிராந்திநிவிர்த்தி:— இந்தப்பிராந்திஞானம் தத்துவஞானத்தால் நிவிர்த்தியாகிறது. சரீரம் முதலிய சகலபதார்த்தங்களைக்காட்டிலும் ஆத்மா வேறுஎன்கிற நிச்சயத்துக்குத் தத்துவஞானமென்றுபெயர். இந்தத்தத்துவஞானத்தால் "நான் மனுஷன் பிராமணன்" என்கிற பிராந்தி நிவிர்த்தியாகிறது. பிராந்திநாசத்தினால் ராகத்துவேஷாதிகளில்லாமற்போகின்றன. இவைகளின் அபாவத்தால் தர்மாதர்மங்களின்பொருட்டுப்பிரவிர்த்தியுண்டாகிறதில்லை. பிரவிர்த்தியின் அபாவத்தால் சரீரசம்பந்தரூபமான ஜன்மமில்லாமற்போகிறது. பிராரப்தம் போகத்தினால நாசமடைகிறது. சரீரசம்பந்தத்தின் அபாவத்தால் 21 துக்கங்கள் நாசமுறுகின்றன. இந்தத்துக்கநாசரூபமே நியாயமதத்தில் மோக்ஷமென்று சொல்லப்படுகிறது. அந்த 21 துக்கங்களாவன:— சரீரம், சுரோத்திரம், துவக்கு, நேத்திரம், ரஸனை, கிராணம், மனம், என்னும் ஆறு இந்திரியங்கள், இவைகளின் விஷயங்கள், இந்திரியங்களாறின் ஞானம், சுகதுக்கங்கள், என்பனவாம். சரீராதிகளும் துக்கத்தையுண்டுபண்ணுகிறபடியால் துக்கமென்றே சொல்லப்படுகின்றன. சுவர்க்காதிகளின் சுகமும் நாசமாகுமென்கிற பயத்தினால் துக்கத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. ஆகையால் அச்சுகமும் துக்கமென்று சொல்லப்படுகிறது.

449. மனம் அனித்தியம்:— நியாயமதத்தில் சுரோத்திரமும்[45]

---

44. இரண்டாவது தரங்கத்தின் 46-வதுகுறிப்பைப்பார்க்க.

45. நியாயமதத்தில் சுரோத்திரம் ஆகாசரூபமாகப் பாவிக்கப்பட்டு நித்தியமாகஎண்ணப்பட்டிருக்கிறது. இது சுருதிவிருத்தம். ஆத்மாவினிடத்திலின்

மனதும்[46] (446) நித்தியமானதால் அவைகளின் நாசம் சொல்லக்கூடாவிட்டாலும் எந்தரூபங்களால் அவைகள் துக்கத்துக்கு ஹேதுக்களாகின்றனவோ அந்தரூபங்கள் நாசமாகின்றன. பதார்த்தஞானத்தை உண்டுபண்ணுகிறதினால் அவைகள் துக்கத்துக்கு ஹேதுக்களாகின்றன. அந்த ஞானத்தை மோக்ஷகாலத்தில் சுரோத்திரமும் மனதுங்கொடுக்கிறதில்லை. ஏனெனில் கர்ணகோளகத்திலிருக்கிற ஆகாசம் சுரோத்திரமென்னப்படும். இக்கர்ணகோளகம் மோக்ஷகாலத்தில் இருக்கிறதில்லை. ஆகையால் ஆகாசரூபமான சுரோத்திரேந்திரியமிருந்தாலும் கோளகமில்லாதபடியால் ஞானமுண்டாகிறதில்லை. இவ்விதமாக ஞானத்தைக்கொடுக்கிற சுரோத்திரேந்திரியத்தின் ஸ்வரூபமே துக்கமாயிருக்கிறது. அதற்கேநாசமுண்டாகிறது.

450. ஆத்மாவின் ஞானம்[47] (450—452).— ஆத்மாவுடன் மனது சேர்வதால் ஞானமுண்டாகிறது. இந்த மனதின் சேர்க்கை நியாயசித்தாந்தத்தில் ஒன்றின் கிரியையாலாவது அல்லது இரண்டின் கிரியைகளாலாவது உண்டாகிறது. பக்ஷிக்கு விருக்ஷத்துடன் சம்பந்தம் பக்ஷியின்கிரியையாலாகிறது. இரண்டு ஆட்டுக்கடாக்கள் ஒன்றோடொன்று முட்டிக்கொள்ளுதல் இரண்டின் கிரியைகளாலுமுண்டாகிறது. இதுபோல் வியாபக ஆத்மாவினிடத்தில் கிரியை ஒருக்காலுமில்லை; மோக்ஷகாலத்தில் மனதிலும் கிரியையில்லை, ஆகையால் ஸம்யோகிக்கக்கூடிய மனதே மோக்ஷகாலத்தில் இல்லாமற்போகிறது.

---

றும் ஆகாசமுண்டாயிற்று. ஆகாசத்தினின்றும் நேத்திராதிகள் போல்சுரோத்திரமுண்டாயிற்று எதற்குஉற்பத்தியுண்டோ அதற்குநாசமுமுண்டு. ஆகையால் சுரோத்திரம் அநித்தியம்.

46. நியாயமதத்தில் மனது நித்தியமென்று சொன்னதும் பிசகு. ஏனெனில் மனது நித்தியமானால் சுஷுப்தியிலும் மனதின் வியாபாரங்கள் தோன்றவேண்டும். ஆனால் அனுபவத்தில் மனது அஞ்ஞானத்தில் லயப்பட்டுப்பொகிறது மறுபடியும் ஜாக்கிறகாலத்தில் வெளிப்படுகிறது. இவ்விதமாக உற்பத்திநாசங்களுடன் கூடிய மனதை நித்தியமாகச்சொல்வது மூடமாத்திரந்தான்.

47. ஆத்மா மனதுஞ் சேர்வதினால் ஞானம் உண்டாகிறதாகச் சொல்லும்பக்ஷத்தில் சுஷுப்தியில் மனது இல்லாததினால் சுகானுபவமுமிருக்கக் கூடாது- ஆனால் நித்திரையினின்று விழித்துக்கொண்டவனுக்குத் தான் சுகமாய் தூங்கினதாக ஞாபகம் வருவதாலும் அறியப்படாத பதார்த்தத்தின் ஞாபகம் உண்டாகமாட்டாதபடியாலும் சுஷுப்தியில் மனதில்லாமலிருந்தும் சுக ஞான மிருப்பது அனுபவசித்தமாயிருக்கிறது. ஆகையால் மனசம்பந்தத்தால் ஆத்

451. வேறு சிலர் துவக்கும் மனதும் சேர்க்கிறதினால் ஞானமுண்டாகிற தென்று சொல்லுகிறார்கள். ஆத்மாவின் ஸம்யோகம் ஞானத்துக்கு ஹேதுவல்ல. சுஷுப்தியில் புரீததம் என்னும் நாடியில் மனது பிரவேசிக்கிறது. அப்போது துவக்குடன் மனது சம்பந்தப்படுகிறதில்லை. இவர்களுடைய மதத்தில் துவக்குடன் சம்பந்தப்படக்கூடிய மனதே ஞானமூலமாகத் துக்கத்துக்கு ஹேதுவாகிறதினால் துக்கமாயிருக்கிறது. கேவலம் மனந் துக்கமன்று. மோக்ஷகாலத்தில் துவக்கு நாசமடைவதால் அத்துடன் சம்பந்தமில்லை. ஆகையால் ஞானமுண்டாகிறதில்லை. மோக்ஷகாலத்தில் மனது இருந்தும் துக்கத்துக்கு ஹேதுவானதும் ஞானத்தை யுண்டுபண்ணுகிறதும்[48] துவக்குடன் சம்பந்தப்படக்கூடியதுமான மனதின் சம்யோக நாசத்தால் மனது நாசமடைகிறது.

452. இவ்விதமாக மோக்ஷகாலத்தில் பரமாத்மாவுக்கும் பின்னமாகவே துக்கரகிதமாகவியாபக ஆத்மா ஜடரூபமாக[49] யிருக்கிறது. ஏனெனில் ஞானகுணத்தினால் ஆத்மா பிரகாசிக்கிறது. ஜீவனுடைய ஞானமெல்லாம் இந்திரிய ஜன்யமாகவேயிருக்கிறது, நித்தியமன்று. இந்திரியஜன்ய ஞானம் மோக்ஷகாலத்தில் நாசமடைகிறது. ஆனதால் பிரகாசமில்லாமலும் ஜட ரூபமாயும் ஆத்மா மோக்ஷகாலத்திலிருக்கிறது. இது நியாய சித்தாந்தம்.

453. நியாயமதத்தில் முன் சொன்னப்பிரகாரம் சுகதுக்கங்களும் பந்த மோக்ஷங்களும் ஆத்மாவுக்கிருக்கிறபடியால் ஆத்மா அநேகம்.

454. மேலும் ஆத்மா எங்கும் வியாபகமாயிருக்கிறது. சகல அற்ப பதார்த்தங்களுடனும் ஸம்யோகமே நியாயமதத்தில் வியாபகத்தின்

---

மாவுக்கு ஞானமுண்டாவதாகச்சொல்வது அயுக்தம். ஆத்மாவின் ஸ்வரூபமே ஞானம். இது நித்தியம்.

48. நியாயமதத்தில் துவக்கும் மனதுஞ்சேர்ந்து ஞானமுண்டாகிறதென்று சொல்வதிலும் யாதொரு சுருதிப்பிரமாணமும் இல்லை. சுஷுப்தியனுபவத்தாலும் ஆத்மாவின் ஸ்வரூபமே ஞானமென்று சித்திக்கிறது.

49. ஆத்மா ஜடமானது அநேக சுருதிகளுக்கு விரோதமாயிருக்கிறது (472—475)ல் கிரந்தக்காரரே சைதன்னிய ரூபத்தை யுக்தியால் ஸ்தாபிக்கிறார்.

லக்ஷணம், ஸஜாதீய விஜாதீயஸ்வகதபேதகங்களின் அபாவம் வியாபகலக்ஷணமன்று. ஏனெனில் நியாயமதத்தில் ஆத்மா நிரவயவமானதானபடியால் ஸ்வகதபேதம் ஆத்மாவினிடத்தில் இல்லாமலிருந்தாலும் ஸஜாதீய விஜாதீய பேதங்களில்லாமலிருக்கவில்லை. ஸஜாதீயமான இரண்டாவது ஆத்மாவுமிருக்கிறபடியால் ஆத்மாவில் பேதம் சித்திக்கிறது. விஜாதீய கடாதிகளுக்கும ஆத்மாவுக்கும் பேதமிருக்கிறது. ஆகையால் ஸஜாதீய விஜாதீய ஸ்வகதபேதங்களின் அபாவம் வியாபகத்தின் லக்ஷணமன்று. ஆனால் சகல அல்பபதார்த்தங்களுடனும் ஸம்யோகமே வியாபகலக்ஷணம்

455. இதிலொருசங்கை. நியாயமதத்தில் ஆத்மாபோல ஆகாசம் காலம் திக்கு இவைகளும் வியாபகமாயிருக்கின்றன. பரமாணு ஸூக்ஷ்மமாயும் நிரவயவமாயும இருக்கிறது. இத்துடன் சகலவியாபகபதார்த்தங்களின் ஸம்யோகஞ்சம்பவிக்காது. ஏனெனில் பரமாணு ஸாவயவமானால் எந்த இடத்திலாவது ஆத்மாவுக்கு சம்யோகஞ்சித்திக்கும். மற்றவியாபகபதார்த்தங்களுக்கும் ஒவ்வோரிடத்தில் ஸம்யோகஞ்சம்பவிக்கும். பரமாணு ஸாவயவமாயில்லாமல் நிரவயவமாயிருக்கின்றது. அதிசூக்ஷ்மமாயுமிருக்கிறது. ஒரே இடத்தில் இத்துடன் சகல வியாபக பதார்த்தங்களின் ஸம்யோகமுஞ்சம்பவிக்கமாட்டாது. ஏனெனில் ஒன்றின் ஸம்யோகத்தால் அவ்விடம் மறைபட்டுப் போகிறது. அவ்விடத்தில் வேறு பதார்த்தத்தின் சம்யோகஞ்சம்பவிக்காது. ஆகையால் அனேகபதார்த்தங்களுக்கு வியாபகத்துவங்கூறுவது சரியன்று. ஏதேனும் ஒன்றிற்கே வியாகபத்துவம் சித்திக்கும்:

456. இந்தச்சங்கை சரியன்று. ஏனெனில் ஸாவயவவஸ்துவின் ஸம்யோகமிருந்தால் அன்னியவஸ்துவின் ஸம்யோகம் விருத்தப்படும். பூமியில் கைவைத்த இடத்தில் கால்வைக்கமுடியாததுபோலும். நிரவயவஸ்துவின் ஸம்யோகம் இடத்தை மறைக்கிறதில்லை. ஆகையால் வேறு வஸ்துவின் ஸம்யோகத்துக்கு விரோதமில்லை. இது அனுபவசித்தம். எந்த இடத்தில் கடத்துக்கும் ஆகாசத்துக்கும் சம்பந்தமிருக்கிறதோ அந்த இடத்திலேயே காலத்துக்குந்திக்குக்குங்கூட ஸம்யோகமிருககிறது.

---

50. நியாய மதத்தின் வியாபக லக்ஷணம் "ஏகமேவாத்துவிதீயம் பிர்ம்ம" என்றும் சுருதியில் சொல்லிய ஸஜாதீய விஜாதீய ஸ்வகதபேத ரகிதம் என்னும் லக்ஷணத்துக்கு விருேதமாயிருக்கிறது; அப்படியே யுக்தி அனுபவங்களுக்கும் விரோதமாயிருக்கிறது.

தாவதொருகடமிருக்குமிடம் ஆகாசகாலதிக்குகளுக்கு வெளியேயிருக்கும்பக்ஷத்தில் அந்த இடத்தில் ஆகாசகால திக்குகளுக்கு ஸம்யோகமில்லாமலிருக்கக்கூடும். ஆனால் இவைகளுக்கு வெளியே யாதொரு தேசமுமில்லை. சகலபதார்த்தங்களுடைய இருப்பிடங்களும் ஆகாசகாலதிக்குகளுக்குள்ளேயே இருக்கின்றன. ஆகையால் சகலபதார்த்தங்களின் இருப்பிடங்களிலும் ஆகாசாதிகளுக்கு ஸம்யோகமிருக்கிறது. இவ்விதமாகப்பரமாணு விஷயத்திலும ஒரே இடத்தில் அனேக நிரவயவ வியாபகபதார்த்தங்களுக்கு ஸம்யோகமுண்டாகக்கூடும். யாதொரு தோஷமுமில்லை. ஆகையால் ஆத்மா அநேகமாயும் எங்கும் வியாபகமாயுமிருக்கிறது.

457. (445—456)கண்டனம்:—(457-458):—சர்வஆத்மாக்களுக்கும் சகலபதார்த்தங்களுடனும் ஸம்யோகம் இருக்கிறதென்பது நியாயசித்தாந்தம். இது சரியன்று. ஏனெனில் வியாபகமான ஆத்மா அனேகமென்று அங்கீகரிக்கும்பக்ஷத்தில் எல்லாசரீரங்களிலும் எல்லா ஆத்மாக்களுக்கும் சம்பந்தத்தை யங்கீகரிக்கவேண்டும் அப்போது இன்னசரீரம் இன்ன ஆத்மாவினுடையதென்கிற நிச்சயமில்லாமற்போம். ஒவ்வொரு ஆத்மாவுக்கும் எல்லாசரீரங்களுமிருக்கக்கூடும்.

458 (1)எவன் கருமத்தினால் எந்தச்சரீரமுண்டாயிற்றோ அந்த ஆத்மாவுக்கு அதுதான்சரீரமென்று ஒருவன் சொல்லும்பக்ஷத்தில் அது சரியன்று. ஏனெனில் எந்தச் சரீரத்தாற் கர்மம் செய்யப்பட்டதோ அந்தக் கருமத்தைச் செய்தவனுடைய முன்சரீரத்திலும் சகல ஆத்மாக்களுக்கும் சம்பந்தமுண்டு. ஆகையால் கர்மமும் சகலஆத்மாக்களுடையதாகவே யாகுமேதவிர ஓராத்மாவினதாக ஆகமாட்டாது. (2) எந்த ஆத்மாவுக்குச் சரீரம் மனதுடன் கூடியிருக்கிறதோ அந்த ஆத்மாவுக்கு அதுதான் சரீரமென்று சொல்லுவதுஞ் சரியன்று. ஏனெனில் சரீரம்போல் மனதுடனும் சகல ஆத்மாக்களுக்கும் சம்பந்தமிருப்பதால் இன்னமனது இன்ன ஆத்மாவினதென்கிற நிச்சயம் இல்லை. எல்லா ஆத்மாக்களுக்கும் எல்லாமனதுமிருக்கக்கூடும் (3) அப்படியே இந்திரியம் எல்லா ஆத்மாக்களுக்குமிருக்கக்கூடும் (4)வெளிபதார்த்தவிஷயத்தில் இது என்னுடையது, இது வேறொருவனது என்கிற வியவகாரம் சரீரத்தைப் பொறுத்ததாயிருக்கிறது. எல்லா ஆத்மாக்களுக்கும் எல்லா சரீரங்களுமிருப்பதால் வெளிபதார்த்தங்களும் எல்லாஆத்மாக்களுடையதுமாகவேயிருக்கும்.

459. மேலும் எந்த ஆத்மாவுக்கு எந்தச்சரீரத்தில் நான் என்னுடையது என்கிறபுத்தியிருக்கிறதோ அந்தச்சரீரமே அந்த ஆத்மாவினது. நான் என்னுடையதென்கிற புத்தி ஒவ்வோராத்மாவுக்குந் தனித்தனியே இருக்குமேதவிர எல்லாஆத்மாக்களுக்கும் பொதுவல்ல. ஒரு தர்மம் ஒரே தர்மியிடத்திலிருக்கும். ஆனால் ஆத்மாவுக்குச்சரீரம் ஒன்

றே எந்த ஆத்மாவுக்கு எந்தச் சரீரமிருக்கிறதோ அந்தச் சரீரத்துடன் சம்பந்தப்பட்ட மனது இந்திரியம வெளிபதார்த்தங்களும் அந்த ஆத்மாவைச் சேர்ந்தவையாம். ஆகையால் வியாபகமான அனேகஆத்மாக்களை யங்கீகரிப்பதில் யாதொருதோஷமுமில்லை.

மேற்சொல்லியதும் சரியன்று. ஏனெனில் நான் என்னும் புத்தி ஒருதேகத்தில் ஒரே ஆத்மாவுக்கிருந்தாலும் நியாயமதத்தில் அது ஒவ்வாது. எல்லாஆத்மாக்களுக்கும் ஒரு சரீரத்தில் நான் என்னும் புத்தியுண்டாகவேண்டியது. ஏனெனில் நியாயமதத்தில் புத்தியென்றால் ஞானம். இந்த ஞானம் ஆத்மா மனது இவைகளின் சம்யோகத்தினாலுண்டாகிறது. மனதுடன் ஸம்யோகம எல்லாஆத்மாக்களுக்கும் இருக்கிறது. ஆனதால் மனதின் ஸம்யோகத்தினால் ஒருசரீரத்தில் ஓராத்மாவுக்குநான் என்னும்புத்தி யுண்டாகிறதுபோல் ஒருசரீரத்தில் எல்லாஆத்மாக்களுக்கும் நானென்னும் புத்தியுண்டாகவேண்டும். மனதின் ஸம்யோகம் எல்லாஆத்மாக்களுடனுமிருந்தாலும் எந்தஆத்மாவில் ஞானத்தைக் கொடுக்கும் அதிர்ஷ்டமிருக்கிறதோ அந்தஆத்மாவுக்கே நானென்னும் புத்தியிருக்கிறது. இப்படி ஒருவன் சொன்னால் எல்லாருக்குமே ஞானமுண்டாகவேண்டும். ஏனெனில் ஆத்மாவை வியாபகமாயும் அநேகமாயுமங்கீகரித்தால் ஒரு சரீரத்தின் சுபாசுபக்கிரியைகளால் ஒரு சரீரத்திலிருக்கும் எல்லாஆத்மாக்களுக்கும் அதிர்ஷ்டம் உண்டாகவேண்டியது. இது முன் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. ஆனதால் ஆத்மாவை வியாபகமாயும் அனேகமாயும் அங்கிகரித்தால் ஒரு தேகத்தில் எல்லாஆத்மாக்களுக்கும் சுகதுக்கங்களின் போகமுண்டாகவேண்டியது. அனுபவத்தில் அப்படியில்லாததனையால் ஆத்மா வியாபகமாயும் அனேகமாயும் இருக்கிறதென்கிற நியாயசித்தாந்தஞ் சரியன்று.[51]

460. சித்தாந்தம் (460—461):— நம்முடைய சித்தாந்தத்தில் கர்த்தாபோக்தா அந்தக்கரணம். இந்த அந்தக்கரணம் அனேகம். இது வியாபகமுமன்று அணுவுமன்று. இதின் பரிமாணம் சரீரத்துக்குச்சமானம். தீபப்பிரகாசம்போல் பெரியசரீரத்தை யடையும்போது அந்தக்கரணம் விகசிக்கிறது. சின்னசரீரத்தில் அதுசங்கோசம்படுகிறது. இவ்விஷயம் சித்தாந்தபிந்துவின் வியாக்கியானத்தில் மதுசூதனஸ்வாமிகளால் பிரதிபாதிக்கப் பட்டிருக்கிறது. எந்த அந்தக்கரணம் எந்தச்சரீரத்திற்சம்

51. எப்படி அனேக இடங்களுக்கு வியாபகத்துவஞ்சொல்வது பிரயோஜனமற்றதோ அப்படிப் பிரதி சரீரத்திலும் கர்த்தா போக்தாவான பிரதியாத்மாவுக்கும் வியாபகத்துவஞ்சொல்வது நிஷ்பிரயோசனம்.

ந்தப்படுகிறதோ அந்த அந்தக்கரணத்துக்கு அந்தசரீரத்தாற் போகமுண்டாகிறது.

461. அந்தக்கரணத்தை வியாபகமாக அங்கீகரிக்கும்பக்ஷத்தில் எல்லாசரீரங்களும் எல்லாருக்குமிருக்கும், போகமும் எல்லாருக்குமுண்டாகும். அந்தக்கரணம் வியாபகமாயில்லாததால் தோஷமில்லை. அந்தக்கரணத்தையணுவாக அங்கிகரித்தால் சரீரத்தின் ஓரிடத்தில் அது இருக்கவேண்டுமென்று அங்கீகரிக்கும்படி நேரிடும். இது சரியன்று. ஏனெனில் ஒரேகாலத்தில் காலிலும் தலையிலும் முள் குத்தினால் இரணடிடங்களிலும் ஒரேகாலத்தில் வேதனையுண்டாகிறது. இது உண்டாகக்கூடாது. ஏனெனில் அந்தக்கரணம் அணுவானால் ஒரேஸ்தானத்தில் ஒருகாலத்திலிருக்கும். எவ்விடத்தில் அந்தக்கரணமிருக்கிறதோ அவ்விடத்தில்தான் வேதனையுண்டாகவேண்டியது. இரண்டிடத்திலுமுண்டாகக்கூடாது. அனுபவத்தில் அப்படியுண்டாவதால் அந்தக்கரணம் அணுவன்று. அது வியாபகமுமன்று. ஆனாலோ சரீரத்துக்குச்சமானமாயிருக்கிறது. ஆகையால் இதற்கு யாதொரு தோஷமுமில்லை. அணுவாயும் வியாபகமாயுமில்லாதது மத்தியமபரிமாணமெனப்படும்.

462. 2-வது நியாயமதம்:— நியாயமதத்தில் சில நவீனர்கள்[52] அங்கீகரிப்பதாவது:— ஆத்மா அனேகம், கர்த்தா போக்தா, வியாபகமன்று. ஆனதால் போகமும் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே எற்படுகிறது. அணுவுமன்று. ஆனதால் இரண்டிடங்களிலும் முள்குத்தினவேதனையுண்டாகாதென்பதில்லை. ஆனால் வேதாந்தமதத்தில் அந்தக்கரணம் மத்தியமபரிமாணமாகச் சொல்லப்பட்டிருப்பதுபோல் ஆத்மாவும் மத்தியமபரிமாணமாயிருக்கிறது. அதினிடத்தில் 14 (445) குணங்களிருக்கின்றன.

463. 462-ன்கண்டனம்:— மேற்சொல்லியமதமுஞ்சரியன்று. ஏனெனில் ஆத்மாவுக்குச்சங்கோசமும் விகாஸமுமங்கீகரிக்கப்படும் பக்ஷத்தில் தீபப்பிரகாசம்போல் ஆத்மா விகாரியாயும் நாசமுள்ளதாகவும ஆகும். அதினால் மோக்ஷத்தைப்பிரதிபாதிக்கிற சாஸ்திரமும் சாதனங்களும் பிரயோஜனமற்றனவாம். மத்தியமபரிமாணத்தை யங்கீகரித்துச்சங்கோசவிகாசங்களை யங்கீகரிக்காவிட்டால் இன்னசரீரத்துக்குச்சமானமாய் ஆத்மா இருக்கிறதென்கிற நிச்சயமுண்டாகமாட்டாது. மனுஷியசரீரத்

---

52. திகம்பரர்கள் ஆத்மாவை மத்தியம பரிமாணமாய்ச் சொல்லுகிறார்கள்.

துக்குச்சமானமென்று சொல்லும்பக்ஷத்தில் ஆத்மா யானையின் சரீரத்தை அடையும்போது முழுதேகத்திலும் ஆத்மா இல்லாமற்போகும். அப்போது எந்தஇடத்தில யானையின் ஆத்மாவில்லையோ அந்தவிடத்தில் வேதனையுமுண்டாகமாட்டாது. யானைசரீரத்துக்குச்சமானமாய் ஆத்மாவையங்கீகரிக்கும்பக்ஷத்தில் யானையைக்காட்டிலும் பெரியசரீரத்தின் ஓரிடத்தில் முன் சொல்லியபடி வேதனையுண்டாகாமற்போகும். எல்லாசரீரங்களுக்கும் பெரிதாகஆத்மாவின் ஆகாரத்துக்குச்சமானமாய் யாதொரு சரீரமுமில்லை. எல்லாசரீரங்களையும் விடப்பெரிதான விராட்சரீரத்துக்குச்சமானமாய் ஆத்மாவைச்சொல்லும்பக்ஷத்தில் விராட்டுசரீரத்துக்குள் சகலசரீரங்களும் அடங்கியிருப்பதால் எல்லாஆத்மாக்களுக்கும் எல்லாசரீரங்களோடும் சம்பந்தமுண்டாகும். அப்போது முன்சொன்ன தோஷம் சம்பவிக்கும். மத்தியபரிமாணமாயிருக்கும் வஸ்து சரீரம்போல் அநித்தியமாகும. ஆகையால் ஆத்மாவும் மத்தியமபரிமாணமானால் அநித்தியமாகும். நம்முடைய மதப்படி அந்தக்கரணம் ஞானத்தினால நாசமடைகிறது; ஆகையால அநித்தியமாயிருக்கிறது. அந்தக்கரணத்தை மத்தியமபரிமாணமாக அங்கீகரிப்பதினால் யாதொரு தோஷமுமில்லை. இவ்விதமாக நவீனதார்க்கிகர்களுடையமதமும் அங்கீகரிக்கத்தக்கதன்று

464. ஆத்மாஅணுபரிமாணம்:— நியாயமதத்தின் வேறொரு கொள்கை:— ஆத்மா அநேகமென்பதும அணுவென்றும் சிலநையாயிகர்கள் சொல்வதுஞ்சரியன்று. ஏனெனில் ஆத்மாவைக்கர்த்தா போகதாவாயங்கீகரிக்கும்பக்ஷத்தில் அந்தக்கரணத்தையணுவென்று சொன்னவிடத்து (461) ஏற்பட்ட தோஷஞ்சித்திக்கும். ஆத்மாவைக்கர்த்தா போக்தாவென்று அங்கீகரிக்காவிடின் ஆத்மா அனேகமென்பது நிஷ்பலமாய்விடும். வியாபகமான ஏராத்மாவையே எல்லாசரீரங்களிலுமிருப்பதாக அங்கீகரிப்பது யுக்தமாயிருக்கும். மேலும் கர்த்தா போக்தாவை யங்கீகரிக்காதபக்ஷத்தில் இந்த நையாயிகனுடைய சித்தாந்தத்தையும் தள்ளும்படி நேரிடும். ஏனெனில் அணுவாதியின் சித்தாந்தமென்னவெனில் ஞானம் சுகம் துக்கம் முதலியவை ஆத்மாவின் தர்மங்களென்பதாம். ஆதலால் ஆத்மாவை யணுவாக அங்கீகரிக்கும்பக்ஷத்தில் சரீரத்தில் எந்தவிடத்தில் ஆத்மா இல்லையோ அந்த இடம் மிருதசயானம். அவ்விடத்தில் வேதனை முதலியவையுண்டாகக்கூடாது.

465. ஆக்ஷேபம்:— ஆத்மா சரீரத்தில் ஓரிடத்திலிருக்கிறது. ஆனால் கஸ்தூரியின் வாஸனைபோல் அதின் ஞானம் முழுசரீரத்திலும் வியாபிக்கிறது. அதனால் சரீர முழுவதிலும் அனுகூல பிரதிகூல ஞானமுண்டாகிறது.

466. உத்தரம்;— இதுவுஞ் சரியன்று. ஏனெனில் எந்தவிடத்தில் குணசகிதமான வஸ்து இருக்கிறதோ அதற்கு வெளியில் குணமிருக்கிறதில்லை. கடாதிகளின் ரூபம் அவைகளுக்கு வெளியிலிராதது போல் ஆத்மாவுக்கு வெளியில் ஞானமிருப்பதாகச்சொல்வது சரியன்று. மேலும் கஸ்தூரியின் சூக்ஷ்மபாகம் எவ்வளவிடத்தில் வியாபிக்கிறதோ அவ்வளவிடத்திலேயே கந்தம் வியாபிக்கிறது. ஆனதால் கஸ்தூரியின் திருஷ்டாந்தமும் சரியன்று. ஆதலால் அணுவென்னும் பக்ஷமும் சரியன்று.

467. சுருதிசருந்து:— சில சுருதிகளில் ஆத்மா அணுவுக்கும் அணுவென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆத்மாவை யறிவது கஷ்டமானதால் அப்படிச்சொல்லப்பட்டது. அத்தியந்தம் அணுவாயிருக்கும் வஸ்துவின் ஞானம் மந்தபுத்தியுள்ளவர்களுக்கு உண்டாகாததுபோல் பகிர்முகபுருஷனுக்கும் ஆத்மாவின் ஞானமுண்டாகமாட்டாது. ஆதலால் ஆத்மாவுக்குச்சமானமென்பதே சுருதியின் அபிப்பிராயமே தவிர ஆத்மாவே அணுரூபமாயிருக்கிறதென்கிற அபிப்பிராயமில்லை. ஏனெனில் அநேக இடங்களில்ஆத்மா வியாபகரூபமென்று வேதம் பிரதிபாதித்திருக்கிறது. ஆகையால் ஆத்மா அணுவன்று. இவ்விதமாக ஆத்மா வியாபகமாயும் நாநாவாயும் அல்லது மத்தியம பரிமாணமாயும் நாநாவாயும் அல்லது அணுவாயும் நாநாவாயுமிருப்பதாக நையாயிகர்களின் மூவிதமான கொள்கைகளும்அசம்பாவிதங்களாயிருக்கின்றன.

468. முடிவானதீர்மானம் (468—70):— இது என்னவெனில் ஆத்மா ஏகமாயும் வியாபகமாயுமிருக்கிறது. அதனிடத்தில் தர்மாதர்மங்கள் சுகதுக்கங்கள் பந்த மோக்ஷங்கள் இவைகளை யங்கீகரிக்கும் பக்ஷத்தில் சிலருக்குச்சுகம் சிலருக்கு துக்கம் சிலருக்குபந்தம் சிலருக்குமோக்ஷம் உண்டாகிறதென்கிற வியவகாரம் ஏற்படக்கூடாது. அப்படி யேற்படுவதால்தர்மாதிகள் புத்தியின் தர்மங்களாயிருக்கின்றன. புத்தி ஜடமாயிருப்[53]பதால் அதனிடத்திலும் சுகாதிகள் இருக்கக்கூடாதெனினும் ஆத்மாவுக்குச்சுகதுக்கங்களில்லை யென்கிற அபிப்பிராயத்தால் புத்திஇருக்கிறதாகச் சொல்லப்பட்டதே தவிரப் புத்திக்கே யுண்மையாய் அந்தத்தர்மாதிகளிரு

---

53. இத்தரங்கத்தின் 38-வது குறிப்பைப் பார்க்க.

ப்பதாக அபிப்பிராயமன்று. புத்தியும் சுகாதிகளும் ஆத்மாவினிடத்தி ல் அத்தியஸ்தங்களாயிருக்கின்றன. எது அதில் அத்தியஸ்தமாயிருக்கிற தோ அது அதில் பாரமார்த்திகத்திலில்லை. ரஜ்ஜுவில் அத்தியஸ்த மான சர்ப்பம் பாரமார்த்திகத்தில் ரஜ்ஜுவில் இல்லாதது போல் புத் தியும் சுகாதிகளும் ஆத்மாவினிடத்திலில்லை. அத்தியஸ்தவஸ்துவும் எத ற்கும் ஆசிரய மாகிறதில்லை. ஆனதால் புத்தியும் சுகாதிகளும் ஆசிரய ங்களாகா. ஆனால் அஞ்ஞானம் சுத்தசேதனத்தில் அத்தியஸ்தமாயிரு க்கிறது. அந்தக்கரணம் அஞ்ஞானஉபஹிதத்தில் அத்தியஸ்தமாயிருக் கிறது. அந்தக்கரணஉபஹிதத்தில் தர்மாதர்மங்கள் சுக துக்கங்கள் ப ந்த மோக்ஷங்கள் அத்தியஸ்தமாயிருக்கின்றன. இவ்விதமாக ஆத்மாவி டத்திலுள்ள தர்மாதிகளின் அதிஷ்டானத்துக்கு அந்தக்கரணம் உபாதி யாயிருக்கிறது. ஆகையால் தர்மம் அந்தக்கரணத்தைச் சார்ந்ததாகச் சொல்லப்படுகிறது.

469. அந்தக்கரணவிசிஷ்டத்தில் தர்மாதிகள் அத்தியஸ்தமாயி ருக்கின்றன வெனச்சொல்லக்கூடாது. ஏனெனில் விசேஷணத்துடன் கூடியது விசிஷ்டமாம். தர்மாதிகளின் அத்தியாஸத்துக்கு அதிஷ்டானமா ன ஆத்மாவுக்கு அந்தக்கரணத்தை விசேஷணமாக அங்கிகரித்தால் அந்த க்கரணமும் தர்மாதிகளுக்கு அதிஷ்டானமாகக்கூடும். ஆனால் இதுசரிய ன்று. ஏனெனில் மித்தியாவஸ்து அதிஷ்டானமாகமாட்டாது. ஆகையா ல் ஆத்மாவினிடத்தில் தர்மாதிகளின் அத்தியாஸத்துக்கு அந்தக்கரணம் விசேஷணமன்று. ஆனால் உபாதியாகவேயிருக்கிறது. உபாதியின் சு பாவமென்னவெனில் தான் சம்பந்தப்படாமலிருந்துகொண்டு தானிருக் குமிடத்திலுள்ள வஸ்துவை யறிந்து கொள்ளும்படிச் செய்வதாம். வி சேஷணத்தின் சுபாவமென்னவெனில், தானிருக்கும் இடத்திலுள்ள வ ஸ்துவைத்தன்னுடன் அறியும்படிச் செய்வதாம், விசேஷணத்துடன்கூ டியது விசிஷ்டமென்றும் உபாதியுடன்கூடியது உபஹிதமென்றுஞ் சொ ல்லப்படும். இந்தப்பிரகாரம் அந்தக்கரணவிசிஷ்டத்தில் தர்மாதிகளை ய த்தியஸ்தமாகச் சொல்லும்பக்ஷத்தில் எவ்வளவிடத்தில் அந்தக்கரணமி ருக்கிறதோ அவ்வளவிடத்திலுள்ள சேதன்பாகமும் அந்தக்கரணமும் இரண்டும் அதிஷ்டானமாகும். இந்த அந்தக்கரணம் தானும்அத்தியஸ் தமாயிருப்பதால் அதிஷ்டானமாகாது, இந்த அபிப்பிராயத்தால் அந்த

க்கரணவுபஹிதத்தில் தர்மாதிகள் அத்தியஸ்தமெனச் சொல்லப்பட்டன. ஆகையால் எவ்வளவிடத்தில் அந்தக்கரணமிருக்கிறதோ அவ்வளவிடத்திலுள்ள சேதனபாகமட்டும் அதிஷ்டானமென்றும் அந்தக்கரணம் அதிஷ்டானமல்லவென்றும் சொல்வது யுக்தமே.

470. இப்படியே அந்தக்கரணமும் அஞ்ஞானவுபஹிதத்தில் அத்தியஸ்தமாயிருக்கிறதே தவிர அஞ்ஞானவிசிஷ்டத்தில் அத்தியஸ்தமாயில்லை. இவ்விதமாக அத்தியஸ்தமான தர்மாதிகளுக்கு ஆத்மா அதிஷ்டானம். அத்தியாஸத்தின் அதிஷ்டானத்துக்கு அந்தக்கரணமுபாதியாயிருக்கிறது. ஆகையால் சுகதுக்காதிகள் புத்தியின் தர்மங்களாய்ச்சொல்லப்பட்டன. அவிவேகத்தினால் அந்தக்கரணம் ஆத்மா இவ்விரண்டிலும் அவைகள் பிரதீதியாகின்றன, அதினால் அந்தக்கரணவிசிஷ்டப்பிரமாதாவின் தர்மங்களாகச்சொல்லப்படுகின்றன. தர்மாதிகள் அந்தக்கரணத்தின் தர்மங்களானாலுமாகக்கூடும் அல்லது அந்தக்கரணவிசிஷ்டப்பிரமாதாவின் தர்மங்களானாலும் ஆகக்கூடும்; அல்லது, ரஜ்ஜு சர்ப்பம்போலவும் சொப்பனபதார்த்தம்போலவும் கந்தர்வபட்டணம்போலவும் ஆகாசத்தின் நீலவர்ணம்போலவும் ஒன்றினுடைய தர்மமுமாகாமலிருக்கவுங்கூடும்; எவ்விதத்திலும் ஆத்மாவின் தர்மங்களாகா. ஆத்மாவினிடத்தில் அத்தியஸ்தமானாலும் எந்த வஸ்து எதினிடத்தில் அத்தியஸ்தமாயிருக்கிறதோ அது அதினிடத்தில் பாரமார்த்திகத்திலில்லை. அத்தியஸ்தமென்றால் கல்பிதம். ஆகையால் ராகத்துவேஷங்கள் பந்தமோக்ஷங்கள் தர்மாதர்மங்கள் இவைகளில்லாமலும் ஏகமாயும் வியாபகமாயும் ஆத்மா இருக்கின்றது.

471. ஆத்மாசத்து:— இந்த ஆத்மா சத்தாயிருக்கிறது. எந்த வஸ்து ஞானத்தினால் இல்லாமற்போகிறதோ அது அஸத்தென்று சொல்லப்படுகிறது. எந்தக்காலத்திலும் எது இல்லாமற்போகவில்லையோ அது சத்தென்று சொல்லப்படும். சகலபதார்த்தங்களுக்கும் அவைகளின் நிவிர்த்திக்கும் ஆத்மா அதிஷ்டானமாயிருக்கிறது. ஆத்மாவுக்கே நிவிர்த்தியுண்டானால் அதற்கு வேறு அதிஷ்டானஞ்சொல்லவேண்டும். ஏனெனில் சூனியத்தில் நிவிர்த்தியுண்டாகமாட்டாது. ஆத்மாவுக்கும் அதின் நிவிர்த்திக்கும் வேறு அதிஷ்டானம் அங்கீகரிக்கும்பக்ஷத்தில் இதற்கும் வேறு அதிஷ்டானம் அங்கீகரிக்கவேண்டும். இவ்விதமாக அனவஸ்தாதோஷம் சம்பவிக்கும். மேலும் ஆத்மாவின் நிவிர்த்தியை அங்கீகரிக்கிறவனுக்

கு ஒருகேள்வி:— இந்த ஆத்மாவின் நிவிர்த்தியை எவனாவது அனுபவித்திருக்கிறானா இல்லையா? அனுபவித்திருக்கிறானென்று சொன்னால் அது ஒப்புக்கொள்ளத்தக்கதல்ல. ஏனெனில் எவன் அனுபவித்திருக்கிறானோ அவனே ஆத்மா. ஆத்மாவே தன்ஸ்வரூபம். அதின் நிவிர்த்தியாகிற அனுபவம் தன் தலையை வெட்டினதைத்தான் அனுபவிப்பதற்குச்சமானமாகும். ஆகையால் ஆத்மாவின் நிவிர்த்தியின் அனுபவம் ஒவ்வாது. ஆத்மாவுக்கு நிவிர்த்தியுண்டாகிறது. ஆனால் அந்நிவிர்த்தியின் அனுபவம் ஒருவருக்குமில்லையென்னும்பக்ஷத்தில் ஆத்மாவுக்கு நிவிர்த்தியே இல்லையென்று சித்திக்கும். ஏனெனில் எந்தவஸ்து எவனாலும் அனுபவிக்கப்படவில்லையோ அது மலடிமகனுக்குச்சமானமாகும். ஆகையால் ஆத்மாவுக்கு நிவிர்த்தியில்லை. ஆகையால் ஆத்மா சத்தாயிருக்கிறது.

472. ஆத்மாசித்து (472—475) ஆத்மா சித்தாக இருக்கிறது. பிரகாசரூபமான ஞானம் சித்தெனப்படும். ஆத்மாவை அப்பிரகாசரூபமாக அங்கீகரிக்கும்பக்ஷத்தில் அனாத்ம ஜடவஸ்துக்களின் பிரகாசம் ஒருக்காலுமுண்டாகமாட்டாது. அந்தக்கரணம் இந்திரியங்கள் இவைகளால் பதார்த்தங்களின் பிரகாசமுண்டாகிறதாகச் சொல்வது சரியன்று. ஏனெனில் அந்தக்கரணமும் இந்திரியங்களும் பரிச்சின்னமாயிருக்கின்றன. ஆகையால் அவைகள் காரியங்களாம். எது பரிச்சின்னமாயிருக்கிறதோ அது கடம்போல் காரியமாயிருக்கிறது. அந்தக்கரணமும் இந்திரியங்களும பரிச்சின்னமாயிருப்பதால் காரியங்களாகின்றன. தேசகாலங்களால் எதற்கு முடிவுண்டோ, அது பரிச்சின்னமென்னப்படும். எது காரியமோ அது ஜடம். அந்தக்கரணமும் இந்திரியங்களும ஜடமாயிருக்கின்றன. இவைகளால் எந்த வஸ்துவும் பிரகாசிக்கமாட்டாது. ஆகையால் எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கிற ஆத்மா பிரகாசரூபமாயிருக்கிறது.

473. ஆத்மா பிரகாசரூபமன்று. அது ஜடம். அதினிடத்தில் ஞானகுணமுண்டு. இந்த ஞானத்தால் ஆத்மாவும் அனாத்மாவும் பிரகாசிக்கின்றன. இப்படிச்சொல்லுகிறவனைக்கேட்கவேண்டியதாவது:— ஆத்மாவின் ஞானகுணம் நித்தியமா அநித்தியமா? (1) நித்தியமென்றுசொல்லும் பக்ஷத்தில் ஆத்மாவின் ஸ்வரூபமே ஞானமென்று சித்திக்கும். ஆத்மா சத்து நித்தியம். ஆத்மாவுக்கு வேறானதெல்லாம் அநித்தியம். ஆகையால் ஞானத்தை ஆத்மாவுக்கு வேறாகச்சொல்லும் பக்ஷத்தில் ஞானம் அநித்தியமாகும். ஞானம் நித்தியமென்று முதலில்

அங்கீகரிக்கப்பட்டிருக்கிறபடியால் ஞானத்தை ஆத்மாவுக்கு வேறாகச்சொல்வது நித்தியம் அநித்தியமென்பதற்கொப்பாகும். ஆகையால் ஞானம் ஆத்மாவுக்கு வேறாகமாட்டாது. இந்த நித்திய ஞானமே ஆத்மஸ்வரூபம். ஞானம் அநித்தியமாயின் ஆத்மாவினிடத்தில் ஒருகாலத்திலிருக்கக் கூடும். ஒருகாலத்தில் இல்லாமலிருக்கக்கூடும். இதனால் ஆத்மாவுக்கு வேறாகவே ஞானமிருக்கக்கூடும். ஞானம் நித்தியமாக அங்கீகரிப்பதினால் ஒருகாலத்திலும் ஆத்மாவைவிட்டுப் பிரியமாட்டாது. மேலும் எது குணமோ அது குணியினிடத்தில் ஒருக்காலிருக்கும் ஒருக்கால் இல்லாமலிருக்கும். வஸ்திரத்தின் நீல மஞ்சள் குணங்கள் ஒருக்கால் வஸ்திரத்திலிருக்கக்கூடும், ஒருக்கால் இல்லாமலுமிருக்கக்கூடும். ஆனதால் எது குணமோ அது (ஆகமாபாயி) வந்துபோய்க்கொண்டிருக்கிறது. ஞானம நித்தியமானதால் ஆகமாபாயியன்று. ஆகையால் ஆத்மஸ்வரூபமே ஞானம்.

474. (2) மேலும் ஞானத்தை அநித்தியமென்று சொல்லும்பக்ஷத்தில் இந்திரியங்களாலாவது அந்தக்கரணத்தினாலாவது ஞானம் உற்பத்தியாகுமென்று சொல்லும்படி நேரிடும். இது சரியன்று. ஏனெனில் சுஷுப்தியில் இந்திரியங்களும் அந்தக்கரணமுமில்லை. சுகத்தின் ஞானமிருக்கிறது. இது இருக்கக்கூடாது. சுஷுப்தியில் சுக ஞானமங்கீகரிக்கப்படாவிடின் விழித்துக்கொண்டவனுக்கு நான் சுகமாய்த்தூங்கினேனென்று அனுபவத்திலுண்டாகும் சுஷுப்திசுகத்தின் ஸ்மரணை யுண்டாகக்கூடாது. எந்தவஸ்து முன்னறியப்பட்டிருக்கிறதோ அதின் ஸ்மரணையுண்டாகும். அறியப்படாத வஸ்துவின் ஸ்மரணை யுண்டாகமாட்டாது. சுஷுப்திசுகத்தின் ஸ்மரணை விழித்துக்கொண்டவனுக்குண்டாவதால் சுஷுப்தியில் சுகத்தின் ஞானமுண்டு. இந்தஞானத்தை யுண்டுபண்ணுகிற இந்திரியாதிகள் சுஷுப்தியிலில்லை. ஆனதால் ஞானம் நித்தியம். ஞானத்தைவிட்டு ஆத்மா ஒருக்காலுமிருக்கிறதில்லை. ஆகையால் ஞானம் ஆத்மாவின் சொரூபம். எப்படி யுஷ்ணத்தை விட்டு அக்கினி ஒருக்காலுமிராதோ ஆகையால் எப்படி யுஷ்ணம் அக்கினியின் சொரூபமாயிருக்கிறதோ அப்படிஞானமும் ஆத்மாவின் சொரூபமாயிருக்கிறது. எது ஆகமாபாயியோ அது குணமாகும். உஷ்ணமும் ஞானமும் ஆகமாபாயிகளன்று. ஆகையால் அவைகள்முறையே அக்கினியினுடையவும் ஆத்மாவினுடையவும் சொரூபங்களாம். எந்த வஸ்து ஒருகாலத்திலிருந்து ஒருகாலத்தி லில்லாமலிருக்கிறதோ அது ஆகமாபாயிஎன்னப்படும்.

475. உற்பத்தியும் விநாசமும் அந்தக்கரண விர்த்திக்கிருக்கின்றன, ஞானத்துக்கில்லை. ஆத்மஸ்வரூபமான ஞானம் விசேஷவியவகா

ரத்துக்கேதுவன்று. ஆனால்ஞானசஹிதவிர்த்தி அல்லது விர்த்தியிலாரூடமான ஞானம் வியவகாரத்துக்கேதுவாயிருக்கிறது. இது அவச்சேதவாதத்தின் ரீதி. ஆபாஸவாதத்தில் ஆபாஸஸஹிதவிர்த்தியால் வியவகாரமுண்டாகிறது. ஆபாஸமூலமாய அல்லது ஸாக்ஷாத்து விர்த்திரூபமாய் ஆத்மஸ்வரூபஞானத்தினால் சர்வ வியவகாரமுஞ் சித்திக்கிறது. இவைகளில்லாவிடின் ஒருவியவகாரமுஞ் சித்திக்கிறதில்லை. இவ்விதமாக எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கிறது ஞானஸ்வரூபஆத்மாவே. அது சித்து.

476. ஆத்மாஆனந்தரூபம் (476-482):— ஆத்மா ஆனந்தரூபமாயிருக்கிறது. அப்படி இல்லாத பக்ஷத்தில் விஷய சம்பந்தத்தினால் தோன்றும் சொரூபானந்தந் தோன்றக்கூடாது. விஷயத்தில் ஆனந்தமில்லையென்பதை முன் 4-வது தரங்கத்தில் (127) சொல்லப்பட்டிருக்கிறது. விஷயத்தில் ஆனந்தமிருக்கும் பக்ஷத்தில், எந்த விஷயத்தினால் ஒருவனுக்குச் சுகமுண்டாகிறதோ அதினாலேயே வேறொருவனுக்குத் துக்கமுண்டாகிறது. நெருப்பைத்தேடுவதினால் அக்கினி கீடத்துக்கும் சர்ப்பத்தைப் பார்க்கிறதினால் சர்ப்பிணிக்கும் ஆண்சிங்கத்தைப் பார்க்கிறதினால் பெண் சிங்கத்துக்கும் ஆனந்தமுண்டாகிறது. ஆனால் மனுஷனுக்குத்[54] துக்கமுண்டாகிறது. இது உண்டாகக்கூடாது. சித்தாந்தத்தில் அக்கினி கீடத்துக்கு நெருப்பைத்தொடுவதில் இச்சை இருக்கிறது. அப்போது சஞ்சல புத்தியில் சொரூபானந்தந் தோற்றுகிறதில்லை. அக்கினி சம்பந்தத்தால் க்ஷணமாத்திரம இச்சை விலகி நிச்சலபுத்தியிற் சொரூபானந்தம் விளங்குகிறது. புருஷனுக்கு அக்கினி சம்பந்தத்தின் இச்சை யுண்டாகிறதில்லை. ஆனால் இதரபதார்த்தங்களினிச்சை இருக்கிறது. அவைகளின் இச்சை அக்கினி சம்பந்தத்தால் நிவிர்த்தியாகிறதில்லை. ஆகையால் சஞ்சலமான அந்தக்கரணத்தில அக்கினி சம்பந்தத்தால் ஆனந்தமுண்டாகிறதில்லை.

---

54: ஒரே விஷயம் சிலதுக்குச் சுகமாயும் சிலதுக்குத் துக்கமாயுமிருக்கிறபடியால் அந்த விஷயம் நியமமாக எல்லாருக்கும் இச்சையிருந்தாலும் இல்லாவிட்டாலும் சுகத்துக்கே காரணமாகிறதில்லை. ஆனால் விஷயஇச்சையுள்ள புருஷனுக்கு விஷயம் அடையப்படுவதால் இச்சை நடைபட்டு விர்த்தி அந்தர்முகமாகி அதில் ஆத்மஸ்வரூபானந்தத்தின் பிரதிபிம்பத்துக்கு விஷயங்காரணமாயிருக்கிறது. ஆகையால் விஷயம் நியமமாய் ஆனந்தத்துக்குக்காரணமாயிருக்கவில்லை. மேலும் விஷயப்பிராப்தியினாலாவது ஏகாந்தத்திலிருக்கிறதினாலாவது இச்சையில்லாமற் போவது பிரதிபிம்பசுகத்துக்கு நியமமாய்க் காரணமாயிருக்கிறது. ஆத்மா ஆனந்தரூபமாயில்லாதபக்ஷத்தில் அந்தர்முகவிர்த்தியில் ஆனந்தமுண்டாகக்கூடாது. ஆகையால் ஆத்மா ஆனந்தரூபம்.

477. இதிலோர் சங்கை:— அந்தக்கரணத்தின் இச்சாரூபவிர்த்தி விஷயப் பிராப்தியால் நாசமடைகின்றது. வேறு விர்த்திக்கு யாதொரு நிமித்தமுமில்லை. ஆகையால் அது உற்பத்தியாகமாட்டாது. விர்த்தியன்றியில் சொரூபானந்தம் தோன்றமாட்டாது. ஆகையால் விஷயத்திலேயே ஆனந்தமிருக்கிறது.

478. இந்தசங்கை சரியன்று:— ஏனெனில் இச்சாரூபமான அந்தக்கரணவிர்த்தி இருக்கவில்லை. அது இருந்தாலும் அதில் ஆனந்தப்பிரகாசமுண்டாகமாட்டாது. ஏனெனில் இச்சாரூபவிர்த்தி ராஜஸம். ஆனந்தப்பிரகாசம் ஸாத்வீகவிர்த்தியில் உண்டாகிறது. ஆயினும், இச்சித்த பதார்த்த மிடையப்பட்டால் அதின் சொரூபத்தை விஷயமாக்குகிற அந்தக்கரணத்தின் ஞானரூபவிர்த்தி சாத்வீகமாயிருக்கிறது. ஏனெனில் சத்துவகுணத்தினின்றும் ஞான முண்டாகிறதென்கிற நியமமுண்டு. இந்த ஸாத்வீக விர்த்தியில் ஆனந்தம் விளங்குகிறது. ஆனால் இந்த ஞானரூபவிர்த்தி பகிர்முகமாயிருக்கிறது. அதற்குப் பிருஷ்டபாகத்திலிருக்கிற அந்தக்கரணவுபகித சேதனஸ்வரூபானந்தம் இந்த விர்த்தியால் அடையப்படுகிறதில்லை. ஆனதால் விஷய உபஹித சேதனரூப ஆனந்தம் விளங்குகிறது. இந்த விஷய உபஹிதசேதநமும் ஆத்மாவுக்கு அன்னியமன்று. ஆகையால் ஆத்மானந்தமே விஷயத்தில் தோன்றுவதாகச்சொல்லப்படுகிறது. இந்த ஞானரூபவிர்த்திக்கு விஷயத்துடன் நேத்திராதிகளின் சம்பந்தம் காரணமாயிருக்கிறது.

479. அல்லது ஞானரூப பகிர்முக விர்த்தியைக்காட்டிலும் வேறு அந்தர்முக விர்த்தியுண்டாகிறது. அதனிடத்தில் அந்தக்கரண உபஹித சேதனரூப ஆனந்தமே விளங்குகிறது. இது உத்தமசித்தாந்தம். இந்தவிர்த்தியினுற்பத்திக்கு இச்சாதிகளின் அபாவமே காரணமாகும். இச்சையற்று ஏகாந்தத்திலிருக்கிற உதாஸீன புருஷனுக்குப்பகிர்முக ஞானரூப விர்த்தி யாதொன்றும் உண்டாகிறதில்லை. ஆனந்தம் விளங்குகிறது. ஆகையால் இச்சாதிகளின் அபாவரூப காரணத்தினால் அந்தர்முகவிர்த்தி ஆனந்தத்தைக் கிரகிக்கிறது. இச்சித்தபதார்த்தம் கிடைத்தபடியால் இச்சாதிகளில்லாமற் போகின்றன. அதினால் அந்தக்கரண உபகித ஆனந்தங்கிரகிக்கப்படுகிறது. இந்தஸ்வரூபானந்தக் கிரகணமும் விஷய ஞானமும் அத்தியந்தம் அவ்வியவஹிதமாயிருக்கின்றன. அதினால் "நான் விஷயத்தில் ஆனந்தம் அனுபவிக்கிறே"[55] னென்கிற பிராந்தி மனுஷனுக்குண்டாகிறது.

---

55. நாய் ஒரு எலும்பைக் கடிக்கும்போது அதின் வாயிலிருந்து இர

480. 478-வது பிரிவில் சொல்லப்பட்டதை விட 479ல் சொன்னது உத்தமமாயிருக்கிறது. ஏனெனில் விஷயத்தின் ஞானரூபவிர்த்தியினின்றும் அந்தக்கரண உபஹித ஆனந்தம் விளங்குவதாகச்சொல்வது சரியன்று. ஆனதால் விஷய வுபஹித ஆனந்தம் விளங்குகிறதாக ஆகும். அப்போது மார்க்கத்திலுள்ள மரத்தின் ஞானரூப விர்த்தியும் சாத்வீகமாயிருக்கிறது. அதினாலும் விருக்ஷ உபஹித சேதனஸ்வரூபானந்தம் விளங்கவேண்டும். அப்படியே சர்வ ஞானத்தினாலும் ஞேய உபஹித சேதனரூப ஆனந்தம் விளங்கவேண்டும்.[56] ஆகையால் அனாத்ம வஸ்துவின் ஞானரூப பகிர்முக விர்த்தியினின்றும் ஞேய உபஹித சேதனஸ்வரூபானந்தம் கிரகிக்கப்படுகிறதில்லை. இவ்விதமாக விஷய சம்பந்தத்தால் ஆத்மஸ்வரூபானந்தம் விளங்குகிறது. ஆத்மா ஆனந்த ரூபமாகாத பக்ஷத்தில் விஷய சம்பந்தத்தால் ஆனந்தம் விளங்கமாட்டாது.[57] ஆகையால் ஆத்மா ஆனந்த ரூபமாயிருக்கிறது.

481. ஆத்மாவுடன் சம்பந்தப்பட்ட வஸ்துக்களில் பிரியமுண்டாகிறது. அவைகளிலும் சமீபத்திலிருப்பவைகளில் அதிகப் பிரியமுண்டாகிறது. இவ்விதமாகப் புறம்பேயுள்ள பதார்த்தங்களையபேக்ஷித்

---

த்தம் வருகிறது. அந்த இரத்தத்தைச் சாப்பிட்டுத்தான் கடிக்கும் எலும்பினின்றும் அது வருவதாக நாய் நினைக்கிறது. இதுபோல் இச்சிதபதார்த்தம் அடையப்படுவதால் இச்சை நிவிர்த்தியாகி அந்தர்முகவிர்த்தியில் சொரூபானந்தம் பிரதிபிம்பிக்கிறது. இதையனுபவிக்கிற புருஷன் விஷயானந்தத்தையனுபவிக்கிறதாக அவிவேகத்தினால் நினைக்கிறான். இந்தப்பிராந்தியால் மேன்மேலும் விஷயத்தையனுபவிப்பதற்காக அவன் பிரயத்தனஞ்செய்கிறான். விவேகிக்கு இந்தப் பிராந்தியில்லாதபடியால் அவன் நிருபாதியான ஆனந்தப் பிராப்தியின்பொருட்டு வேதாந்த விசாராதி விஷயங்களிற் பிரயத்தனஞ்செய்கிறான். விஷயத்தில் தோன்றும் ஆனந்தம் சொரூபானந்தமாகவிருந்தாலும் அது கிரகிக்கத்தக்கதல்ல. விஷயமன்றியில் விசாரத்தாலுண்டாகும் ஆனந்தந்தான் கிரகிக்கத்தக்கது.

56. பாஹ்யபதார்த்தங்களைப் பார்க்கும்போதெல்லாம் அந்தக்கரண விருத்தியின் ஞானரூபசாத்வீக விர்த்தியிருந்தும் ஆனந்தம் தோன்றுகிறதில்லை. இது அனுபவசித்தம். ஆகையால் ஆத்மாநந்தானுபவத்துக்கு அந்தர்முகவிர்த்தி முக்கியமாய் வேண்டியது.

57. ஏனெனில் விஷயம் ஆநந்தத்துக்குக் காரணமல்லவென்பது 4வது தரங்கத்தில் 127 வது பிரிவில் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் விஷய சம்பந்தத்தால் விளங்கும் ஆநந்தத்துக்கு விஷயத்தைத்தவிர வேறு காரணம் இருக்கவேண்டும். இது ஆத்மாவே.

து உள்ளே யுள்ளபதார்த்தங்களில் அதிகப் பிரீதி யுண்டாகிறது. பரம்பரையாக, ஆத்மாவுக்குச் சமீபஸ்தமான புத்திரனுடைய மித்திரனிடத்தில் பிரீதியுண்டாகிறது. புத்திரனுடைய மித்திரனைப்பேக்ஷித்துப் புத்திரனிடத்தில் அதிக பிரீதியுண்டாகிறது. புத்திரனிடத்திற்காட்டிலும் ஸ்தூல சூக்ஷ்ம சரீரத்தில் அதிகப் பிரீதி யிருக்கிறது. இதிலும் ஸ்தூலத்திற்காட்டிலும் சூக்ஷ்மத்தில் அதிகப்பிரீதி யிருக்கிறது. முன் முன் சொல்லப்பட்டவைகளைவிடப் பின் பின் சொல்லப்பட்டவை ஆத்மாவுக்கு அதிக சமீபமானவை. ஆத்மாவின் ஆபாஸம் சூக்ஷ்மத்திலிருக்கிறதே தவிர வேறொன்றிலுமில்லை. ஆகையால் ஆபாஸன் மூலமாக ஆத்மாவுக்குச் சூக்ஷ்மசரீரத்திற் சம்பந்தமிருக்கிறதே தவிர வேறொன்றிலுமில்லை. ஸ்தூலசரீரத்துக்குஞ் சூக்ஷ்மசரீரத்துக்குஞ் சம்பந்தமிருக்கிறபடியால் சூக்ஷ்ம மூலமாக ஸ்தூலத்துடன் சம்பந்தமிருக்கிறது. ஸ்தூலசரீர மூலமாகப் புத்திரனுடன் சம்பந்தமிருக்கிறது. புத்திரன் மூலமாக அவனுடைய மித்திரனுடன் சம்பந்தமுண்டாகிறது. இவ்விதமாக ஆத்மாவுக்கு ஒதுங்கியிருப்பவைகளில்விட ஒட்டியிருப்பவைகளில் அதிகப் பிரீதியுண்டாகிறது. எந்த ஆத்மசம்பந்தத்தினால் பதார்த்தங்களில் பிரீதி யுண்டாகிறதோ அந்த ஆத்மாவிலேயே முக்கியமான பிரீதி யுண்டாகிறது, பதார்த்தங்களிலுண்டாகிறதில்லை. எப்படிப் புத்திரனுடைய மித்திரனிடத்தில் புத்திரன் மூலமாகப்பிரீதியுண்டாகிறதோ ஆகையால் புத்திரனிடத்திலேயே பிரீதி இருக்கிறதோ மித்திரனிடத்தில் இல்லையோ அப்படி ஆத்மாவுக்கு அதிகச்சமீபத்திலுள்ளவைகளில் அதிகப்பிரீதி யுண்டாகிறது. ஆத்மாவினிடத்திலேயே எல்லாவற்றிற்கும் பிரீதியிருக்கிறது. இந்தப் பிரீதி ஆனந்தத்திலும் துக்கஅபாவத்திலும் இருக்கிறது. வேறொன்றிலுமில்லை. மற்றப் பதார்த்தங்களில் உண்டாகிற பிரீதி ஆனந்தத்தின் பொருட்டும் துக்கஅபாவத்தின் பொருட்டுமிருக்கிறது. ஆகையால் ஆனந்தம் துக்கஅபாவம் இவைகளில் தவிர வேறொன்றிலும் பிரீதி யுண்டாகிறதில்லை. ஆகையால் எல்லாருடைய பிரீதிக்கும் விஷயமாகிற ஆத்மா ஆனந்தரூபமாயும் துக்கத்தின் அபாவரூபமாயும் இருக்கிறது. கல்பிதத்தின் அபாவம் அதிஷ்டானரூபமாயிருப்பதேயாம். சர்ப்பத்தின் அபாவம் ரஜ்ஜுரூபமாயிருக்கிறதுபோலும். இவ்விதமாகக் கல்பிதமான துக்கத்தின் அபாவமும் ஆத்மரூபமே. இவ்விதமாக ஆத்மா ஆனந்தரூபமாயிருக்கிறது.

482. நியாயமதத்தில் ஆத்மாவுக்கு ஆனந்தங்குணமாகச்சொன்னது சரியன்று. ஏனெனில் ஆனந்தகுணத்தை நித்தியமாக அங்கீகரித்தால் அது ஆகமாபாயியாகமாட்டாது. ஆத்மாவின் சொரூபமே ஆனந்தமென்று சித்திக்கும். நியாயமதத்தில் நித்தியானந்தமில்லை. அநித்திய

மென்று சொல்லும்பக்ஷத்தில் அனுகூலவிஷயங்களும் இந்திரியங்களும் சம்பந்தப்படுவதினால் ஆனந்தமுண்டாவதாக அங்கீகரிக்கும்படி நேரிடும். அப்போது சுஷுப்தியில் ஆனந்தமுண்டாகக்கூடாது. ஏனெனில் சுஷுப்தியில் விஷயத்துக்கும் இந்திரியத்துக்கும் சம்பந்தமில்லை. ஆகையால் ஆனந்தம் ஆத்மாவின் குணமன்று. ஆனால் ஆத்மா ஆனந்தஸ்வரூபமாயிருக்கின்றது. இவ்விதமாக ஆத்மா சச்சிதானந்தஸ்வரூபமாயிருக்கிறது.

483. இந்தச்சத்சித் ஆனந்தங்கள் பரஸ்பரம் வெவ்வேறன்று.[58] ஆனால் ஒன்றாகவேயிருக்கின்றன. ஆத்மாவின் குணமானால் பரஸ்பரம் வெவ்வேறாகவுமிருக்கக்கூடும். ஆத்மஸ்வரூபமாகவேயிருப்பதால் பின்னப்படுகிறதில்லை. ஒரே ஆத்மா நிவிர்த்தி இல்லாததினால் சத்தென்றும், ஜடத்துக்கு விலக்ஷணமான பிரகாசரூபமாயிருப்பதால் சித்தென்றும், துக்கத்துக்கு விலக்ஷணமான முக்கியப்பிரீதிக்கு விஷயமாயிருப்பதால் ஆனந்தமென்றும் சொல்லப்படும். உஷ்ணமாயும் பிரகாசரூபமாயும் இருக்கிற அக்கினிபோல், ஆத்மா சச்சிதானந்தரூபமாயிருக்கிறது.

484. இந்தச்சச்சிதானந்தஸ்வரூபமே சாஸ்திரத்தில் பிர்ம்மமென்று சொல்லப்படுகிறது. ஆகையால் ஆத்மா பிரம்மஸ்வரூபம். வியாபகமாயிருப்பது பிர்ம்மமென்று சொல்லப்படும். தேசத்தாலெதற்கு முடிவில்லையோ அது வியாபகமெனப்படுகின்றது. ஆத்மா பிர்ம்மத்துக்கு அன்னியமானால் அது தேசத்தினால் அந்தத்தோடுகூடினதாயாகும். எதற்குத்தேசத்தினால் முடிவுண்டோ அதற்குக்காலத்தினாலும் முடிவுண்டு என்பது நியமம். ஆகையால் அது அநித்தியமாகும். எதற்குக்காலத்தினால் முடிவுண்டோ அது அநித்தியமெனப்படும். ஆகையால் ஆத்மா பிர்ம்மத்துக்குப்பின்னமாயில்லை. ஆத்மாவுக்குப்பின்னமாய்ப்பிர்ம்மமிருக்கும்பக்ஷத்தில் அது அநித்தியமாகும். அநாத்மகடாதிகள் ஜடமாயிருக்கின்றன. ஆகையால் ஆத்மாவுக்கு வேறான பிர்ம்மமும் ஜடமாகும். ஆகையால் பிர்ம்மம் ஆத்மாவுக்கு வேறன்று. பிர்ம்மஸ்வரூபமே ஆத்மா.

---

58. சச்சிதானந்தத்தில் சப்தபேதம் அர்த்தபேதமுண்டாயிருந்தாலும் அது பேதமல்ல. அக்கினியினிடத்தில் சிவப்பு உஷ்ணம் பிரகாசமிருக்கின்றன. இம்மூவிதமான சப்தபேதமும் அர்த்தபேதமும் தோற்றினாலும் ஒவ்சகரயாணி சப்தத்தைப்போற்பரியாய நாமசப்தமாகாமல் ஏகார்த்தமாய் விளங்குவதுபோல சச்சிதானந்தமும ஏகார்த்தமாகிய ஆத்மசொரூபத்தை விளக்கிவைக்கிறது.

சத்தென்னும்பெயர் வியவகாரத்தின்பொருட்டுக் கல்பிக்கப்பட்டிருக்கிறது. சச்சிதானந்தங்கள் சத்வஸ்துவின் அவயவங்களல்ல, சொரூபமேயாம்.

பாதி பிரியமென்னும் மூன்று அம்சங்கள் சச்சிதானந்தரூபமாயிருக்கின்றன. ஆகையால் அவைகள் ஆத்மஸ்வரூபம். இவ்விதமாகச் சச்சிதானந்தரூப ஆத்மாவினிடத்தில் நாம ரூபப் பிரபஞ்ச முழுமையும் கல்பிதமாயிருக்கிறது. கல்பித பதார்த்தம் யாதொன்றும் ஆத்மாவின் ஜன்மத்திற்கு ஹேதுவாகமாட்டாது. ஆகையால் ஆத்மா ஜன்மமில்லாதது.

489. எந்த வஸ்துவுக்கு ஜன்மமிருக்கிறதோ அதற்கே சத்தை[59] விர்த்தி பரிணமம் அபக்ஷயம் விநாசமாகிற ஐந்துவித வேறுவிகாரங்களுண்டாகின்றன. ஆத்மாவுக்கு ஜனனமில்லாததினால் மேற்சொல்லிய ஐந்துவித விகாரங்களும் ஆத்மாவுக்கில்லை. இவ்விதமாக ஆத்மா ஜன்மாதி ஆறுவித விகாரங்களற்றதாயிருக்கின்றது.

490. ஆத்மா அசங்கன்:— ஆத்மா அசங்கமாயிருக்கிறது. சங்கமென்றால் சம்பந்தம். இந்தச்சம்பந்தம் ஸஜாதீய விஜாதீய ஸ்வகதபதார்த்தங்களுடனுண்டாகிறது. கடத்துக்கு கடத்துடன் சம்பந்தம் ஸஜாதீயசம்பந்தம். கடத்துக்கு படத்துடன் சம்பந்தம் விஜாதீயசம்பந்தம். ஸ்வகதமென்றால் அவயவ சம்பந்தம். படத்துக்கு நூலுடன்சம்பந்தம் ஸ்வகதசம்பந்தம். ஆத்மா இரண்டு அல்லது அனேகமாயிருக்கும்பக்ஷத்தில் ஸஜாதீயத்துடன் ஆத்மாவுக்குச் சம்பந்தமுண்டாகும். ஆத்மா ஏகமாயிருப்பதால் ஸஜாதீயஆத்மாவுடன் ஆத்மாவுக்குச் சம்பந்தமில்லை. ஆத்மாவுக்கு விஜாதீயம் அனாத்மா. இது கானல்ஜலம்போல் ஆத்மாவில் கல்பிதமாயிருக்கிறது. கல்பிதத்துடன் ஆத்மாவுக்குச்சம்பந்தமொவ்வாது. கானல்ஜலம் பூமியுடன் சம்பந்தப்படுகிறதில்லை. அப்படிச் சம்பந்தமுண்டானால் ஊஷரபூமியின் ஜலத்தினால் பூமிநனையவேண்டும். கானல்ஜலத்தோடு ஊஷரபூமி சம்பந்தப்படாததுபோல் ஆத்மாவில் கல்பிதமான விஜாதீயஅனாத்மாவுடன் ஆத்மாவுக்குச் சம்பந்தமுண்டாகமாட்டாது. ஆத்மாவுக்கு அவயவமிருக்கும்பக்ஷத்தில் அதற்கு ஸ்வகதசம்பந்தமுண்டாகக்கூடும். ஆத்மா நித்தியம். ஆகையால் நிரவயவமாயிருக்கிறது. அதற்கு ஸ்வகதசம்பந்தமொவ்வாது. ஆகையால் ஆத்மா அசங்கன். சிஷனே இவ்விதமாகச்சச்சிதானந்தப்பிர்ம்மரூபமாயும் ஜன்மாதிவிகாரரகிதமாயும் அசங்கமாயுமிருக்கிற ஆத்மாவே நீ. இது 436-வது பிரிவில்கேட்ட கேள்விக்கு உத்தரமாம்.

---

59. "கடம் உண்டாகிறது" என்பது ஜநநவிகாரம். "கடம் இருக்கிறது" என்பது கடத்தின் சத்ரூபவிகாரம். குழந்தை ஜநித்தல், இருத்தல், வளருதல், பாலியாதி அவஸ்தைகளில் ஒன்றைவிட்டு ஒன்றையடைதல், ரோகாதிகளால் க்ஷயத்தையடைதல், மரித்தல், இவ்வாறும் ஷட்விகாரங்களாம்.

491. சமுசாரகர்த்தாயாரென்று 437-வது பிரிவிற்கேட்ட 2-வதுகேள்விக்கு உத்தரம் (491—495):—வியாபகமாயிருக்கிற சேதனத்தை யாசிரயித்துக்கொண்டும் அதை (287—90) யே விஷயமாக்கிக்கொண்டுமிருக்கிற மாயை அதாவது சதசத்துக்கு விலக்ஷணமான அற்புதசக்திரூபமான அஞ்ஞானத்தினின்றும் ஜகத்தினுற்பத்தி நாசங்களுண்டாகின்றன. உற்பத்திநாசங்களைச் சொன்னதினால் ஜகத்தின் ஸ்திதியும் சொன்னதாகும். ஆகையால் எந்தஅர்த்தம் சித்திக்கிறதெனில் மாயையோடுகூடின சேதனம் ஈஸ்வரனென்று சொல்லப்படுகிறது.[60] இந்த ஈஸ்வரன் ஜகத்தினுற்பத்திநாசங்களுக்கு ஹேதுவாயிருக்கிறான். இப்படிச் சொல்வதினால் ஜகத்தைச் சிருஷ்டித்தது யார் அல்லது ஜகத்துத்தானாகவே யுண்டாயிற்ற என்னுங் கேள்விக்கு உத்தரமாயிற்று. ஜகத்துக்குக் கர்த்தா ஜீவனா ஈஸ்வரனா என்பதற்கும் உத்தரஞ்சொல்லப்பட்டது.

492 ஜகத்கர்த்தா ஈஸ்வரன். ஜகத்துத்தானாகவே யுண்டாகவில்லை. கர்த்தாவன்றியில் ஜகத்துண்டாயிருக்கும்பக்ஷத்தில் குசவனன்றியில் கடமுண்டாகக்கூடும். அப்படியில்லாததினால் ஜகத்துக்கு யாராவதுகர்த்தா இருக்கவேண்டும். இந்தக் கர்த்தா சர்வஞ்ஞன். ஏனெனில் எவன் காரியத்துக்குக் கர்த்தாவாகிறானோ அவன் காரியத்தையும் அதின் உபாதானத்தையும் அறிந்து செய்கிறான். ஆகையால் ஜகத்தின் கர்த்தாவும், ஜகத்தையும் அதினுபாதானத்தையும் அறிந்து, ஜகத்தை யுண்டுபண்ணுகிறான். இப்படி யறிந்து செய்கிறதினால் சர்வஞ்ஞன்.

---

60. (1) அசத்காரணவாதிகள் ஜகத்துக்குக்காரணமில்லை யென்றும் (2) சிலர் ஜகத்துக்குக்காரணம் அபாவமென்றும் (3) சிலர் சூனியமென்றும் (4) நையாயிகர்கள் பரமாணுவென்றும் (5) சிலர் காலமென்றும் (6) சார்வாகர்கள் ஸ்வபாவமென்றும். (7) மீமாம்ஸகர்கள் அதிர்ஷ்டமென்றும். (8) பிரத்தியக்ஷவாதிகள் யதிர்ச்சையென்றும் (9) பிரத்தியக்ஷப்பிரமாணவாதிகள் பிருதிவீமுதலியபஞ்சபூதங்களென்றும் (10) சாங்கியமதஸ்தர்கள் பிரகிருதியென்றும் (11) யோகிகள் ஹிரண்யகர்ப்பாதிரூப அசங்கபுருஷனென்றும் (12) சிலர் காலாதிசம்யோகமென்றும் (13) சிலர் பரிணாமபுருஷஜீவனென்றும் (14) சிலர் பிரம்மமென்றும் இவ்விதமாக ஜகத்துக்குக்காரணத்தைப்பலர் பலவிதமாய்ச்சொல்லுகின்றனர். இவைகள் ஒவ்வொன்றிலும் தோஷமுண்டு. எப்படியெனில் (1) ஜகத்துக்குக்காரணமில்லாவிட்டால் கடமும் காரணமில்லாமல் உண்டாகக்கூடும். ஆகையால் அகாரணத்தில் பிரத்தியக்ஷவிரோதரூபதோஷமிருக்கிறது. (2) அபாவம் காரணமானால் அபாவத்திலிருந்து பாவம் உண்டாகுதல் பிரத்தியக்ஷவிரோதரூபதோஷம் (3) சூனியம் காரணமானால் விரையன்றியில் தானியமுண்டாகக்கூடும். ஆகையால் இதில் அசம்பவரூபதோஷம் (4) நிரவயவமாயும் ஜடமாயுமிருக்கிற பரமாணுக்களின் சம்யோகம் அசம்பாவிதம் (5) காலம் எப்போதுமிருந்தும் சகலகாரியங்களும் எப்போதுமுண்டாகாதப

அவன் சர்வவல்லமையுள்ளவன். ஏனெனில் அல்பசக்தியுள்ள ஜீவனால் இந்த ஜகத்து உண்டாகக் கூடுமென்று மனதினாலும் நினைக்கத்தகாது ஆகையால் அற்புதஜகத்தின் கர்த்தா அற்புதசக்திமானாயிருக்கவேண்டும்: இவ்விதமாகஜகத்தின் கர்த்தா சர்வவல்லமையுள்ளவன்.

மேலும் அவன் சுதந்திரன். ஏனெனில் ஸ்வல்பசக்தியுள்ளவன் பராதீனனாவான். ஸர்வசக்தியுள்ளவன் பராதீனனாகான். ஆகையால் அவன் சுதந்திரன். இவ்விதமாக ஜகத்கர்த்தா சர்வஞ்ஞனும் சர்வசக்தனும் சுதந்திரனுமிருக்கிறான். இவன் ஈஸ்வரனென்னப்படுகிறான்.

493. அல்பஞ்ஞனும் அல்பசக்தியுள்ளவனும் பராதீனனும் இருக்கிறவன் ஜீவனென்னப்படுகிறான். அல்பஞானாதிகள் ஜீவனிடத்திலும் பாரமார்த்திகத்தில் இல்லாவிட்டாலும் அவித்தையாலுண்டாகும் மித்தையான அல்பஞானாதிகள் ஜீவனிடத்தில் தோன்றுகின்றன. ஆகையால் அவைகள் ஜீவனிடத்திலிருப்பதாகச் சொல்லப்படுகின்றன. அவித்தையாலுண்டாகும் அல்பஞானாதிகளின் பிராந்தியே ஜீவத்தன்மையாம். இந்தப்பிராந்தி ஈஸ்வரனிடத்தில் இல்லை. ஆனால் ஈஸ்வரனிடத்தில் மாயையாலுண்டாகும் சர்வஞ்ஞாதிகளிருக்கின்றன. இது பின்னால் விஸ்தாரமாய் பிரதிபாதிக்கப்படும். இவ்விதமாக ஜகத்தின் கர்த்தா ஜீவனன்று ஈஸ்வரனே.

494. இந்த ஈஸ்வரன் ஓரிடத்திலில்லாமல் எங்கும் வியாபகமாயிருக்கிறான். ஓரிடத்திலிருக்கிறதாகச்சொல்லும்பக்ஷத்தில் எந்தவஸ்துவுக்குத் தேசத்தால் அந்தமுண்டோ அதற்குக் காலத்தாலும் அந்தமுண்

---

டியால் அகாரணரூபதோஷம் சம்பவிக்கிறது. (6) மலடியிடத்தில் வீரியம் சேர்ந்தும் கர்ப்பத்தை உண்டாக்கும் அதின் ஸ்வபாவம் காணப்படாததினால் ஸ்வபாவம் காரணமன்று. (7) அதிர்ஷ்டம் காரணமானால் இன்னகாரணத்தால் இன்னகாரியம்தான் ஆகும் என்கிற நிச்சயமில்லாமல்போம். (8) எதிர்ச்சை காரணமானால், பிருதிவியாதிபூதங்களன்றில் ஜகத்து உற்பத்தியாவது அசம்பாவிதம். (9) ஜடபிருதிவியாதி பூதங்களே காரணத்தை அபேக்ஷிப்பதால், ஸ்வயம்காரணங்களாகா. (10) ஜடமான பிரகிருதி ஸ்வயம் பிரவிர்த்திக்கமாட்டாது. (11) புருஷன் அசங்கனானால் எப்படிகாரணமாவான். (12) காலாதிகளே ஜடமானதால் அவைகள் காரணமாகா. (13) ஜீவன் காரணமாகான் என்பது மூலத்திலேயேசொல்லப்பட்டிருக்கிறது. (14) நிர்விகாரமான பிர்ம்மம் காரணமாகமாட்டாது. இவ்விதமாக மேல்கண்ட 14 மதங்களிலும் தோஷமிருக்கிறது. மாயாவிசிஷ்ட பிர்ம்மம் காரணமென்று சொல்லுவதில் யாதொரு தோஷமில்லை.

டு. ஆகையால் அது அநித்தியமாகும். எது அநித்தியமோ அது கர்த்தாவினிடத்தினின்றும் ஜனிக்கவேண்டும். ஆகையால் ஈஸ்வரனுக்குங் கர்த்தாவை யங்கீகரிக்கும்படி நேரிடும், ஆனால் ஈஸ்வரனுக்குக்கர்த்தாவுண்டெனச் சொல்லத்தகாது. ஏனெனில் தான் தனக்கே கர்த்தாவாக மாட்டான். அப்படியானால் ஆத்மாசிரயதோஷமுண்டாகும். தானே கிரியைக்குக்கர்த்தாவாயும் தானே கிரியைக்குக்கர்மமாயுமிருப்பது ஆத்மாசிரயம். குயவன் கிரியைக்குக்கர்த்தா. கடம் கர்மம. இதுபோல் கிரியைக்குக்கர்த்தாவும் கர்மமும் வெவ்வேறாயிருக்கின்றனவேதவிர ஒன்றாகா. ஆகையால் ஈசுவரன் தனக்கே கர்த்தாவானால் ஆத்மாசிரயதோஷமிருக்கிறது. காரியத்துக்குப்பெயர் கர்மம். காரியத்தின் விரோதிக்குப்பெயர் தோஷம். ஆத்மாசிரயம் காரியத்துக்கு விரோதமாகையால் தோஷமென்னப்படுகிறது. ஆகையால் ஈஸ்வரனுக்குக்கர்த்தாவாக வேறொன்றை யங்கீகரிக்கும்படி நேரிடும். இந்த வேறுகர்த்தாவும் முதற்கர்த்தாவைப்போல கர்த்தாவினாலுண்டாகவேண்டும். அந்தக்கர்த்தாவையும் முதற்கர்ததாவைபோல் இரண்டாங்கர்த்தாவுக்குப்பின்னமாகச்சொல்லவேண்டும். பிரதமகர்த்தாவான ஈஸ்வரன் துவிதீயகர்த்தாவுக்குக்கர்த்தாவாக அங்கீகரிக்கப்பட்டால் அன்னியோன்னியாசிரயதோஷமுண்டாகும். ஆகையால் வேறு மூன்றாவது கர்த்தாவை யங்கீகரிக்கும்படி நேரிடும். இம்மூன்றாவதற்கு இரண்டாவது கர்த்தாவானால் அன்னியோன்னியாசிரயதோஷமுண்டாகும். முதலாவதானால் சக்கிரிகாதோஷமுண்டாகும். சக்கரத்தின் சுற்றல்போல் முதற்கர்த்தா இரண்டாவதாலும் இரண்டாங்கர்த்தா மூன்றாவதாலும் மூன்றாங்கர்த்தாமுதலாவதாலும் மறுபடியும் முதற்கர்த்தா இரண்டாவதாலுமுண்டாய்க்கொண்டேவரும். இவ்விதமாகக்காரியகாரணபாவங்கள் சுற்றிக்கொண்டேயிருக்கும். சக்கிரிகாஸ்தானத்தில் யாதொன்றுஞ்சித்திக்கிறதில்லை. எல்லாம் பரஸ்பராபேக்ஷையுள்ளவைகளாயிருக்கின்றன. அன்னியோன்னியாசிரயத்தில் இரண்டுக்கும்பரஸ்பராபேக்ஷையுண்டு. ஒன்று சித்திக்காமல் மற்றொன்று சித்திக்கிறதில்லை. ஆகையால் எப்படிக்குயவன் தனக்குக்கர்த்தாவாகிறதில்லையோ ஆனால் வேறொருவனுக்குப் பிதாவாயிருக்கிறானோ அப்படி முதல் கர்த்தாவுக்கு வேறுகர்த்தா இருக்கவேண்டும். குயவனுடைய பிதா தன் புத்திரனிடத்தினின்றும் ஜனிக்கிறதில்லை. வேறு பிதாவினிடத்தினின்றும் ஜனிக்கிறான். இதுபோல் இரண்டாவதுகர்த்தா முதற்கர்த்தாவினின்றும் உண்டாகாமல் வேறொருகர்த்தாவினின்றுமுண்டாவதாகச்சொல்லவேண்டும். குயவனுடைய பாட்டன் பிதாவினிடத்தினின்றும் ஜனிக்காமல் பூட்டனிடத்தினின்றும் ஜனிக்கிறான். இதுபோல் மூன்றாவது கர்த்தாவும் முதலாவது இரண்டாவது கர்த்தாக்களினின்றுமுண்டாகமாட்டான். ஆகையால் நான்காவதான வேறொருகர்த்

தாரை யங்கீகரிக்கவேண்டும். இந்த நான்காவதுக்கும் ஐந்தாவதான ஒரு கர்த்தா வேண்டும். இதினால் அனவஸ்தாதோஷமுண்டாகும். அனவஸ்தையென்றால் தாரை யதாவது தொடர்ச்சி. கர்த்தாவின் தாரையை அங்கீகரித்தால் இன்னகர்த்தா ஜகத்தையுண்டுபண்ணினானென்கிற நிச்சயமில்லாமற்போம். எவனையாவது கர்த்தாவாய் நினைப்பதற்கு யாதொருயுக்தியுமில்லை. இந்தயுக்திஅபாவத்துக்கு வினகமனவிரகமென்று பெயர். மேலும் சிலர் தாரைக்கு முடிவுண்டெனச்சொல்லும்பக்ஷத்தில் எந்தக்கர்த்தாவில் தாரைக்கு முடிவுண்டாகிறதோ அந்தக்கர்த்தாவையே ஜகத்கர்த்தாவாக நினைப்பது யுக்தமாகும். மற்றவைகளெல்லாம் வீணாகும். இதற்குப்பெயர் பிராக்லோபம் அல்லது பூர்வாபாவம். இவ்விதமாக ஈஸ்வரனுக்குத்தேசத்தால் முடிவுண்டெனச்சொல்லும்பக்ஷத்தில் உற்பத்தியை அங்கீகரிக்கவேண்டும். உற்பத்தியை அங்கீகரித்தால் ஆத்மாசிரயாதி ஆறுதோஷங்களுண்டாகின்றன. ஆகையால் ஈசுவரனுக்குத் தேசத்தால் அந்தம் இல்லை. ஈஸ்வரன் வியாபகன் நித்தியன்.

495. இந்தவியாபக ஈஸ்வரனுக்கும் ஜீவனுக்கும் சொரூபத்தில் பேதமில்லை. உபாதியால்தான் பேதமுண்டு. ஏனெனில் அவச்சேதவாதத்தில் மாயாவிசிஷ்டசேதனம் ஈஸ்வரனென்றும் அவித்தியாவிசிஷ்டசேதனம் ஜீவனென்றுஞ்சொல்லப்படும். ஆபாஸவாதத்தில் மாயை ஆபாஸன் இவைகளுடன் கூடின சேதனம் ஈஸ்வரனென்றும் அவித்தை ஆபாஸன் இவைகளுடன் கூடின சேதனம் ஜீவனென்றுஞ்சொல்லப்படும். ஆபாஸவாதத்தில் ஆபாஸசகித அவித்தைக்கும் ஆபாஸசகிதமாயைக்கும் பேதமுண்டு. சேதனங்களுக்குப்பேதமில்லை. அப்படியே அவச்சேதவாதத்திலும் அவித்தைக்கும் மாயைக்கும் பேதமுண்டு. சொரூபத்தில் சேதனத்துக்குப்பேதமில்லை. அஞ்ஞானத்திலுள்ள சேதனப்பிரதிபிம்பம் ஜீவனும். பிம்பம் ஈஸ்வரன். இந்தப்பக்ஷத்திலும் சேதனத்துக்குச் சொரூபத்தில் பேதமில்லை. ஒரேசேதனத்தில் ஜீவேஸ்வரத்தன்மைகள் கல்பிக்கப்பட்டிருக்கின்றன. இது இனி (581—587) ச்சொல்லப்படும். இவ்விதமாக ஜகத்தின் கர்த்தா சர்வஞ்ஞனும் சர்வசக்தனும் சுதந்திரனுமிருக்கிற ஈஸ்வரனே. இந்த ஈஸ்வரன் வியாபகன். ஈஸ்வரனுக்கும் ஜீவனுக்கும் விசேஷணத்தில்மட்டும் பேதமேதவிர ஸ்வரூபத்தில் பேதமில்லை. இது இரண்டாவதுகேள்விக்கு உத்தரமாம்.

## 438-ல் கேட்டகேள்விக்கு உத்தரம் (496—539)

496. மோக்ஷத்துக்குச்சாதனம் ஞானமா? அல்லது கர்மமா? அல்லது உபாஸனையா? அல்லது இரண்டா? இக்கேள்விக்கு உத்தரஞ்சொல்லுகிறேன்: முக்திக்குக்காரணம் கர்மமுமன்று, நியாஸம் அதாவது உபாஸ

னையுமன்று, ஆனால் ஞானந்தான் காரணமாயிருக்கிறது. ஏனெனில் ஆத்மாவினிடத்தில் பந்தம சத்தியமாயிருந்தால அதின் நிவிர்த்திரூப மோக்ஷம் ஞானத்தினாலுண்டாகாமல் கர்மம் அல்லது உபாஸனையாலுண்டாகும். இந்தப்பந்தம் ஆத்மாவினிடத்தில் சத்தியமன்று. ஆனால் ரஜ்ஜுசர்ப்பம்போல் இது மித்தையாயிருக்கிறது. இந்தமித்தை அதிஷ்டானஞானத்தினால்தான் நிவிர்த்தியாகக்கூடும், கர்மம் அல்லது உபாஸனையால் நிவிர்த்தியாகமாட்டாது. ரஜ்ஜுவில் சர்ப்பம் எந்தக்கிரியையாலும் நிவிர்த்தியாகாமல் கேவலம் ரஜ்ஜுஞானத்தினால் நிவிர்த்தியாகிறது போல் ஆத்மாவின் அஞ்ஞானத்தினால் தோற்றும் பந்தமும் அஞ்ஞானமும் ஆத்மாவின் ஞானத்தினால்தான் நிவிர்த்தியாகும்.

497. கர்மமும் உபாஸனையும் சாதனங்கள் அல்ல (497—506):— கர்மத்தின் பலன் மோக்ஷமானால் மோக்ஷம் அனித்தியமாகும். ஏனெனில் கிருஷியாதிகர்மங்களின் பலன் அன்னாதிகள். இவை அநித்தியம். யஞ்ஞாதிகளின் பலனாகிற சுவர்க்காதிகளும் அநித்தியம். இவ்வாறு நியமமிருக்க மோக்ஷமுங் கர்மபலனாக அங்கீகரிக்கப்பட்டால் அது அநித்தியமாகும். ஆகையால் கர்மத்தின் பலன் மோக்ஷமன்று. உபாஸனையின் பலனாக அங்கீகரிக்கும்பக்ஷத்திலும் மோக்ஷம் அநித்தியமாகும். ஏனெனில் உபாஸனையும் மானஸிககர்மந்தான். கர்மபலன் அநித்தியமாயிருப்பதால் உபாஸனாரூப கர்மபலனும் மோக்ஷமன்று.

498. கர்மத்தைச்செய்கிறவனுக்குக்கர்மத்தினால் ஐந்துவித உபயோகங்கள் உண்டாகின்றன. [1] பதார்த்தத்தினுற்பத்தி. [2] பதார்த்த நாசம். [3] பதார்த்தப்பிராப்தி. [4] பதார்த்தத்தின் விகாரம். [5] சமுஸ்காரம் என்பனவாம். அன்னியரூபத்தையடைதலே விகாரமென்னப்படும். மலத்தின் நிவிர்த்தி என்றும் குணத்தின் உற்பத்தி என்றும் சமுஸ்காரம் இருவகைத்து. இவ்வைந்துவித உபயோகங்களும் கர்மத்தினின்றும் உண்டாகின்றன. இவைகளில் யாதொன்றும் முமுக்ஷுவுக்குத்தேவையில்லை. ஆனதால் முமுக்ஷு ஞானத்துக்குச் சாதனமான சிரவணாதிகளில் பிரவர்த்திக்கிறான்; கர்மத்தில் பிரவர்த்திக்கிறதில்லை.

499. குலாலனுடைய கர்மத்தினால் குலாலனுக்குக்கடமுண்டாகிற உபயோகம் இருக்கிறதுபோல் முமுக்ஷுவுக்குக்கர்மத்தினால் மோக்ஷ உற்பத்திரூப உபயோகமில்லை. ஏனெனில் அனர்த்தநிவிர்த்தி பரமான

க்தப்பிராப்திரூபமே மோக்ஷம். இந்த அனர்த்தத்தின் நிவிர்த்தி ஆத்மாவினிடத்தில் நித்தியசித்தமாயிருக்கிறது. ரஜ்ஜுவினிடத்தில் சர்ப்பநிவிர்த்தி நித்தியசித்தமாயிருப்பதுபோலும்.[61] ஆத்மா பரமானந்தஸ்வரூபியாயிருப்பதால் பரமானந்தப்பிராப்தியும் நித்தியசித்தமே.[62] இவ்விதமாகஸ்வபாவசித்தமானமோக்ஷம் கர்மத்தாலுண்டாவதாகச்சொல்வதுசரியன்று. எந்தவஸ்து முன்னிருக்கவில்லையோ அது கர்மத்தாலுண்டாகக்கூடும். இருக்கிறவஸ்துவுக்கு உற்பத்தியுண்டாகமாட்டாது.

500. வேதாந்தசிரவணமும் மோக்ஷத்தினுற்பத்தியின் பொருட்டுச்சொல்லப்பட்டதல்ல. "ஆத்மா நித்தியமுக்தன். செய்யவேண்டியது கொஞ்சங்கூட ஒன்றுங்கிடையாது" இதையறிவதற்காகச்சிரவணமேற்பட்டிருக்கிறது. இதையறிவதினால், செய்யவேண்டும் என்கிற பிராந்தி நிவர்த்தியாய்விடும். வேதாந்தசிரவணத்துக்குப்பிறகும் ஒருகாரியஞ்செய்யவேண்டுமென்று எவனுக்குத்தோற்றுகிறதோ அவன் தத்துவமறிந்தவனல்ல. இக்காரணத்தினால் நித்தியநிவிர்த்தியான அனர்த்தத்தின் நிவிர்த்தியும் நித்தியப்பிராப்தயான ஆனந்தத்தின் பிராப்தியும் வேதாந்தச்சிரவணத்தின் பலன்களென்று தேவகுருவாகிய சுரேஸ்வராசாரியரால் நைஷ்கர்ம்யசித்தியிற் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் மோக்ஷத்தினுற்பத்திரூப கர்மத்தினுபயோகம் முமுக்ஷுவுக்கில்லை.

501. எப்படித்தடியாலடித்தல்ரூபமான செய்கைக்குக் கடநாசரூப உபயோகமிருக்கிறதோ அப்படி முமுக்ஷுவுக்குக்கர்மத்தினால் எந்தப்பதார்த்தத்தின் நாசரூபஉபயோகமும் இருக்கிறதாகச்சொல்லக்கூடாது. ஏனெனில் அன்னியபதார்த்தங்களின் நாசம் முமுக்ஷுவால் இச்சிக்கப்படமாட்டாது. பந்தநாசமே கர்மத்தினுபயோகமாகச்சொல்லவேண்டும். இந்தப்பந்தம் ஆத்மாவினிடத்தில் இல்லை. ஆனால் மித்தையாகத் தோற்றுகிறது. இந்தமித்தியாப்பிரதீதி கர்மத்தினால் நாசமாகமாட்டாது. ஆத்மாவின் யதார்த்தஞானத்தினால் மித்தியாப்பிரதீதி நாசமாகும். ஆகையால் முமுக்ஷுவுக்குப்பதார்த்தத்தின் நாசரூபஉபயோகமும் கர்மத்தினால் உண்டாகமாட்டாது.

---

61. ரஜ்ஜுவினிடத்தில் சர்ப்பம் எப்போதுமில்லை யென்பதுபோல் ஆத்மாவினிடத்தில் அஞ்ஞானரூப அனர்த்தம் எப்போதுமில்லையென்பது நித்தியசித்தமாயிருக்கிறது.

62. வீட்டிலுள்ள புதையல் நித்தியசித்தமாயிருப்பதுபோல் ஆத்மாவின் நிஜரூபமான பரமானந்தமும் நித்தியசித்தமாயிருக்கிறது.

502. கமனரூபகர்மத்தினால் கிராமம் அடையப்படுவதுபோல் மோக்ஷப்பிராப்திரூப உபயோகம் கர்மத்தினாலுண்டாகிறதில்லை. ஏனெனில் நித்தியமுக்தனான ஆத்மாவுக்கு மோக்ஷப்பிராப்தி சொல்வதுசரியன்று. பந்தமிருக்கிறவனுக்கு மோக்ஷப்பிராப்தி சொல்லக்கூடும். ஆத்மாவினிடத்தில் பந்தமில்லாததினால் மோக்ஷபிராப்திரூபமான கர்மத்தினுபயோகம் முமுக்ஷுவுக்கில்லை.

503. சமையல்ரூபகர்மத்தினால் அன்னத்தின் விகாரரூப[63] உபயோகம் சமயல்காரனுக்கு உண்டாகிறதுபோல் முமுக்ஷுவுக்குக் கர்மத்தினால் விகாரரூபஉபயோகமுமில்லை. ஏனெனில் ஆத்மாவினிடத்தில்பந்தத்தை யங்கீகரித்து மோக்ஷதசையில் சதுர்ப்புஜாதிவிலக்ஷணரூபங்கள் அடையப்படுவதாக அங்கீகரிக்கும் பக்ஷத்தில் அன்னியரூபத்தின் பிராப்திரூபவிகாரம் முமுக்ஷுவுக்குக் கர்மத்தினுபயோகமாகும். ஆத்மாவினிடத்திலோ அன்னியரூபப்பிராப்தி அங்கீகரிக்கப்படவில்லை. முமுட்சுவிஷயத்தில் விகாரஞ் சொல்லவேண்டுமானால் 'ஆத்மவிகாரந்தான் சொல்லவேண்டும்.' ஆனால் ஆத்மாவுக்கு அன்னியரூபமடைதலாகிய விகாரம் யாதொன்றுமில்லை. ஆகையால் முமுட்சுவுக்குக்கர்மத்தினாலுண்டாகும் விகாரரூபஉபயோகம் யாதொன்றுமில்லை.

504. எப்படி வஸ்திரத்தைத் தோய்த்தல்ரூபமான கர்மத்துக்கு அழுக்குப்போதல்ரூபமான சமுஸ்காரமுண்டோ அப்படி மலநிவிர்த்திரூப சமுஸ்காரமும் முமுக்ஷுவுக்குக்கர்மத்தினால் உபயோகப்படுகிறதில்லை. ஏனெனில் வேறொன்றின் மலநிவிர்த்தியை முமுக்ஷு இச்சிக்கமாட்டான். ஆத்மாவின் மலநிவிர்த்தியேசொல்லவேண்டும். இந்த ஆத்மா நித்தியசுத்தன், ஆத்மாவினிடத்தில்மலமில்லை. ஆகையால் மலநிவிர்த்திரூபசமுஸ்காரஞ் சித்திக்கவில்லை. அந்தக்கரணத்தின் பாபரூப மலம் நிவிர்த்தியாவதே கர்மத்தினுபயோகமென்று சொல்லும் பக்ஷத்தில் இது சத்தியமே. ஆனால் சுத்தஅந்தக்கரணத்துடன்கூடிய முமுட்சுவின் அந்தக்கரணத்தில் பாபமில்லை. பாபரூபமலநிவிர்த்தியாகிற சமுஸ்காரமும் முமுட்சுவுக்குக் கர்மத்தினால்உண்டாகிறதில்லை. அஞ்ஞானத்தை மலமாகச் சொல்லும்பக்ஷத்தில் அஞ்ஞானம் ஆத்மாவிலிருந்தாலும் அது கர்மத்தினால் நிவிர்த்தியாகமாட்டாது. ஏனெனில் அஞ்ஞானத்துக்கு விரோதமானது ஞானமேதவிரக் கர்மமன்று. ஆகையால் முமுட்சுவுக்கு மலநிவர்த்திரூபசமுஸ்காரமுண்டாகமாட்டாது.

---

63. முன்ரூபத்தைவிட்டு வேறு ரூபத்தை அடைவது விகாரமெனப்படும்.

505. ஏப்படி வஸ்திரத்தைக் காவிஜலத்தில் நனைக்கிறதினால் அதற்குச் சிவப்புவர்ண முண்டாகிறதோ அப்படி முமுக்ஷுவுக்கு எந்தக்கர்மத்தினாலும் குணத்தையுண்டுபண்ணுகிறரூபமான உபயோகம் உண்டாகிறதில்லை. ஏனெனில் வேறெந்தவிஷயத்திலும் குணஉற்பத்தி சொல்லக்கூடாது, ஆத்ம விஷயத்தில்தான் சொல்லும்படி நேரிடும். இந்த ஆத்மா நிர்க்குணம், அதனிடத்தில் குணோற்பத்தியேற்படமாட்டாது. ஆகையால் முமுட்சுவுக்கு குணஉற்பத்திரூபஉபயோகங் கர்மத்தினாலுண்டாகமாட்டாது. உபயோகமென்றால் பலன்.

இவ்வைந்து பலன்களைத்தவிர வேறுபலன்கள் கர்மத்துக்கில்லை. இவ்வித கர்மபலன்களும் முமுட்சுவுக்கு உபயோகமில்லை. ஆகையால் முமுட்சுவானவன் கர்மத்தைவிட்டு ஞானத்துக்குச்சாதனமான சிரவணத்திலேயே பிரவர்த்திக்கிறான்.

506. உபாஸனையும் மானஸீககர்மமானதினால் அதைக்கண்டிப்பதில் வேறுயுக்தி சொல்லப்படவில்லை. இவ்விதமாகக்கேவலகர்மமாவது உபாஸனையாவது மோக்ஷத்துக்கு ஹேதுவன்று. கேவலஞானமே மோக்ஷத்துக்கு ஹேதுவாம்.

507. ஆக்ஷேபம் (507—510):— சிலர்[64] கர்மஉபாஸனைசகித ஞானத்தை மோக்ஷத்துக்கு ஹேதுவாக அங்கீகரிக்கிறார்கள். அவ்விஷயத்தில் யுக்திதிருஷ்டாந்தங்களுஞ்சொல்லுகிறார்கள். ஆகாசத்தில் ஒரிரக்கையால் பக்ஷிகளால் பறக்கமுடியாது. ஆனால் இரண்டு இரக்கைகளால்தான் முடியும். இதுபோல் மோக்ஷலோகத்துக்கும் ஞானரூப ஒருபக்ஷத்தால் போகமுடியாது. உபாஸனாசகிதகர்மம் ஒருபக்ஷம். ஞானம் இரண்டாவது பக்ஷம். உபாஸனையும் மானஸீககர்மமே. ஆகை

64. பிர்ம்ம சூத்திரத்தின் டீகையின் கர்த்தாவாகிய பர்திருஹரி என்னும் பிராசீனவிர்த்திகாரர். இவர் சமுச்சயத்தை ஆதரிக்கிறார். சமுச்சயமென்றால் சேர்க்கை. சமசமுச்சயம் கிரமசமுச்சயமென அது இருவகையாம். ஞானத்துக்குச் சாதனமான சிரவணாதிகளையும் கர்மத்துக்குச் சாதனமான அக்கினிஹோத்திராதிகளையும் ஒரேகாலத்தில் அனுஷ்டித்தல் சமசமுச்சயமாம். அந்தக்கரண சுத்தியின்பொருட்டுப் பிர்ம்மஞானத்தைச் சம்பாதிக்க வேண்டுமென்கிற இச்சையுண்டாகிற பரியந்தம் கர்மத்தைச் செய்தல், பிறகு கர்மவிதிகளையாதரிக்காமல் ஞானத்துக்குச்சாதனமான சிரவணாதிகள் மூலமாக ஞானத்தைச் சம்பாதித்தல் கிரமசமுச்சயமாம். இருவகை சமுச்சயங்களில் சமசமுச்சயந்தள்ளப்பட்டுக் கிரமசமுச்சயம் கிரகிக்கத்தக்கதென வேதத்தின் தாற்பரியமாம். சமசமுச்சயங்கண்டிக்கப்படுகிறதேதவிர கிரமசமுச்சயங்கண்டிக்கப்படவில்லை.

யால் கர்மமும் உபாஸனையும் ஒருபக்ஷமாகச்சொல்லப்பட்டன. இவ்வி ரண்டுபக்ஷங்களால்தான் மோக்ஷலோகத்துக்குப்போகமுடியும்.

508. வேறொருதிருஷ்டாந்தம்:— சேதுதரிசனத்தால் பாபநிவாரண மாகிறது. இச்சேதுதரிசனம் பிரத்தியக்ஷமான ஞானம். சிரத்தாபக்தியு டன் போகவேண்டிய நியமத்தை இது அபேக்ஷிக்கிறது. சிரத்தாதிக ளில்லாதவனுக்குச்சேதுதரிசனத்தினால் பலனுண்டாகிறதில்லை. பல உற்பத்தி விஷயத்தில் சேதுவின் பிரத்தியக்ஷஞானம் சிரத்தாதிநியமங்க ளை யபேக்ஷிக்கிறதுபோல் பிர்மஞானமும் மோக்ஷரூபபலஉற்பத்தியி ல் கர்மஉபாஸனைகளை யபேக்ஷிக்கிறது.[65]

509. கேவலஞானத்தினால் மோக்ஷமுண்டாகுமென்று அங்கீக ரிக்கிறவனும் கர்மஉபாஸனைகளை ஞானத்துக்கு ஹேதுவாகநினைக்கிறான். சுத்தமாயும் நிச்சலமாயுமுள்ள அந்தக்கரணத்தில் ஞானமுண்டாகிறது. இந்த அந்தக்கரணம் சுபகர்மத்தினால் சுத்தமாகிறது. உபாஸனையால் நிச்சலமாகிறது. இவ்விதமாக அந்தக்கரணத்தின் சுத்தி நிச்சலத்தன் மை இவைகள்மூலமாகக் கர்மமும் உபாஸனையும் ஞானத்துக்கு ஹேது வாக அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன.

எப்படி ஞானத்துக்கு ஹேதுவாகக்கர்ம உபாஸனைகள் அங்கீகரி க்கப்பட்டிருக்கின்றனவோ அப்படி ஞானத்தின் பலனாகிற மோக்ஷத்துக் கும் ஹேதுவாக அங்கீகரிக்கப்படுவது யுக்தம். ஜலம் விடுதல் விருக்ஷ விர்த்திக்கும் விருக்ஷத்தின் பலோர்பத்திக்கும் ஹேதுவாகிறது. காட்டி லுள்ள மரங்களின் பலன்கள் ஜலம் விடாமலே யுண்டாகின்றனவெனச் சொல்லும்பக்ஷத்தில், அப்போதும் விருக்ஷத்தின் மூலத்தில் பூமியிலுள் ள ஜலத்தின் சம்பந்தமிருக்கிறது. அதினால் பலனுண்டாகிறது. ஜல சம்பந்தமே யில்லாவிடின் விருக்ஷம் பட்டுப்போம், பலனுமுண்டாக மாட்டாது. இதுபோல் கர்மஉபாஸனைகள் ஞானோற்பத்திக்கும் ஞான த்தின்பலனாகிற மோக்ஷத்துக்கும் ஹேதுவாயிருக்கின்றன. இவ்விதமா கக்கர்மம் உபாஸனை ஞானம் இம்மூன்றும் மோக்ஷத்துக்கு ஹேதுக்க ளாயிருக்கின்றன. ஆகையால் ஞானியுங் கர்மஞ்செய்யவேண்டியது.

510. அல்லது, கர்மஉபாஸனைகள் ஞானத்தைக்காப்பாற்றுவத ற்கு ஹேதுக்களாயிருக்கின்றன. ஏனெனில் கர்மோபாஸனைகளை ஞா னியானவன் விட்டுவிடும்பக்ஷத்தில் உண்டான ஞானமும் ஜலமன்றியவி

65. முதல்தரங்கம் 27-வது குறிப்பைப்பார்க்க.

ருக்கிற மரம்போல் நஷ்டமாய்விடும். ஏனெனில் சுத்தமான அந்தக்கரணத்தில் ஞானமுண்டாகிறது. சுபகர்மத்தைச்செய்யாவிடின் ஞானிக்குப்பாபமுண்டாகும். உபாஸனையைவிடுவதால் அந்தக்கரணம் மறுபடியும் சஞ்சலப்படும். இப்படி மலினமாயும் சஞ்சலமாயுமிருக்கிற அந்தக்கரணத்தில் ஞானம் தங்கமாட்டாது. சுஷ்கபூமியிலுண்டாகும் விருக்ஷம் நிலைத்திருக்காததுபோலும்.

வேறொருதிர்ஷ்டாந்தம்:— சமஸ்காரத்தால் சுத்தம் பண்ணப்பட்ட இடத்தில் வேதாத்தியயனம் செய்யும் பிரமசாரி வசிக்கிறான். எக்காரணத்தினாலாவது அவ்விடம் அசுத்தமாம்பக்ஷத்தில் அவன் அவ்விடத்தை விட்டுவிடுகிறான். இதுபோல் கர்மத்தை விடுவதினால் மலினமாயும் உபாஸனையை விடுவதினால் சஞ்சலமாயுமிருக்கிற அந்தக்கரணத்தில் ஞானம் தங்கமாட்டாது. ஆகையால் கர்மமும் உபாஸனையும் ஞானத்தைக்காப்பாற்றுவதற்கு ஹேதுக்களாகின்றன. இவ்விதமாகக்கர்மம் உபாஸனை ஞானம் இம்மூன்றையும் மோக்ஷத்துக்கு ஹேதுவாக அங்கீகரித்தாலும், அல்லது கேவலம் ஞானத்தை மோக்ஷத்துக்கு ஹேதுவாயும் கர்மோபாஸனைகளை ஞானரக்ஷணைக்கு ஹேதுவாயும் அங்கீகரித்தாலும், இவ்விருபக்ஷங்களிலும் ஞானி கர்மோபாஸனைகளை யனுஷ்டிக்கவேண்டியது. இது சமுச்சயவாதமென்று சொல்லப்படும்.

511. **சமாதானம்**(511—534):—இந்த சமுச்சயவாதம் சரியன்று. ஏனெனில் தேகத்துக்கு வேறாக ஆத்மாவை யறியாதவனுக்குக்கர்மம் ஏற்படுகிறதில்லை. ஏனெனில் ஜன்மாந்திரத்தின் போகத்தின்பொருட்டுக் கர்மத்தைச்செய்கிறான் தேகம் அக்கினியில் தகிக்கப்பட்டுப்போகிறது. அதினால் ஜன்மாந்தரபோகமுண்டாகமாட்டாது. ஆனதால் சரீரத்துக்கு வேறான ஆத்ம ஞானமே கர்மத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. அப்படிச் சரீரத்துக்கு வேறாயிருக்கிற ஆத்மாவே கர்த்தாபோக்தாவாயிருக்கிறானென்னும் ஞானம் கர்மத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. நான் புண்ணியபாபங்களைச் செய்கிறேன், அவைகளின் பலன் எனக்குண்டாகிறது, என எவனுக்கு ஞானம் ஜனிக்கிறதோ அவன் கர்மத்தைச்செய்கிறான். ஞானியோ ஆத்மாவை இப்படி யறிகிறதில்லை. ஆனால் புண்ணியபாபங்கள் சுகதுக்கங்கள் இவைகள் அன்றியிலும் அசங்கமான பிரம்மரூபமாயும் ஆத்மா இருக்கிறது என்கிற ஞானம் வேதாந்தவாக்கியத்தாலுண்டாகிறது. இந்த ஞானம் கர்மத்துக்கு ஹேதுவன்று ஆனால் விரோதமாயிருக்கிறது. ஆகையால் ஞானி கர்மத்தைச் செய்யமாட்டான்.

512. மேலும் கர்த்தா கர்மம் பலன் இவைகளின் பேதஞானம் கர்மத்துக்கு ஹேதுவாம். இந்தக் கர்த்தா கர்மபலன்கள் ஆத்மாவுக்கு

வேருக ஞானிக்குத் தோற்றுகிறதில்லை. எல்லாம் ஆத்மஸ்வரூபமாகவே தோற்றுகின்றன. ஆகையாலும ஞானி கர்மத்தைச் செய்யமாட்டான்.

513. ஞானிக்குக் கர்மம் இல்லையென்பதைப் பாஷியக்காரர் அனேகவிதமாகப் பிரதிபாதித்திருக்கிறார்.

514. கர்மத்துக்கும் ஞானத்துக்கும் பலத்தில் விரோதமுண்டு. ஆகையாலும் ஞானகர்மங்களின் சமுச்சயம் கூடாது. கர்மத்தின் பலன் அநித்தியசமுசாரம். ஞானத்தின் பலன் நித்தியமோக்ஷம்.

515. ஆத்மாவில ஜாதி[66] ஆசிரமம்[67] அவஸ்தை[68] இவைகளின் அத்தியாஸம் கர்மத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. ஏனெனில் அந்தந்த ஜாதி முதலியவைகளுக்குத் தகுந்தபடி வெவ்வேறு வித கர்மங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகையால் ஜாதி முதலியவைகளின் அத்தியாஸம் கர்மத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. ஜாதி முதலியவைகள் தேகதர்மங்கள். கர்மிக்குத்தேகத்தில்; ஆத்மபுத்தி இல்லை. ஆனால் கர்மி ஆத்மாவை தேகத்துக்கு வேருன கர்த்தாவாக அறிகிறான். இது முன் (511) சொல்லப்பட்டிருக்கிறது. ஆனதால் ஆத்மாவினிடத்தில் ஜாதி ஆசிரமஅவஸ்தைகளின் தோற்றம் கர்மிக்குமுண்டாவதாகச்சொல்லக்கூடாது. ஆயினும் கர்மிக்குத்தேகத்துக்கு வேருன ஆத்மாவின் அபரோக்ஷஞானமில்லை. ஆனல் சாஸ்திரத்தினல் பரோக்ஷஞானமட்டுமிருக்கிறது. தேகத்தில் ஆத்மஞானம் அபரோக்ஷமாயிருக்கிறது. தேகத்துக்குவேருன ஆத்மாவின் அபரோக்ஷஞானமிருக்கும்பக்ஷத்தில் அது தேகத்தில் அபரோக்ஷஆத்மஞானத்துக்கு விரோதமாகும. பரோக்ஷஞானத்துக்கும் அபரோக்ஷஞானத்துக்கும்விரோதமில்லை. ஆகையால் தேகத்துக்குவேருன கர்த்தா என்னும் ஆத்மஞானமும் தேகத்தில் ஆத்மபுத்தியும் இரண்டுமே ஒருவனுக்கு இருக்கக் கூடும். திர்ஷ்டாந்தம்:— மூர்த்தியில் ஈஸ்வரஞானம் சாஸ்திரத்தினல் பரோக்ஷமாயிருக்கிறது. பாஷாணபுத்தி அபரோக்ஷமாயிருக்கிறது. இது அதற்கு விரோதமன்று. இரண்டும் ஒருவனுக்கேயுண்டாகின்றன. ரஜ்ஜுவில் எவனுக்குச்சர்ப்பத்தைக்காட்டிலும் அபரோக்ஷபேதஞானமி

---

66. ஜாதிகளாவன:— பிர்மக்ஷத்திரியவைசியசூத்திரர்.

67. ஆசிரமங்களாவன:— பிரமசாரி, கிரகஸ்தன், வானப்பிரஸ்தன் சந்நியாசி.

68. அவஸ்தைகளாவன:— வாலிய, கௌமார, யௌவன, வார்த்திகாதி.

ருக்கிறதோ அவனுக்கு அபரோக்ஷ சர்ப்பப்பிராந்தி நிவிர்த்தியாகிறது ஆகையால் அபரோக்ஷப்பிராந்தி அபரோக்ஷஞானத்துக்கு விரோதமென்றும் பரோக்ஷத்துக்கு விரோதமல்லவென்றும் நியமம் சித்திக்கிறது ஆகையால் தேகத்துக்குப்பின்னமான ஆத்மாவின் பரோக்ஷஞானமும் தேகத்தில் அபரோக்ஷஞானமும் சேர்ந்திருக்கக்கூடும். இவ்விரண்டும் கர்மத்துக்கு ஹேதுக்களாயிருக்கின்றன. ஆத்மா தேகத்துக்குவேறான கர்த்தாவென்கிற ஞானம் கர்மத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. இது பிராந்திரூபமாயிருக்கிறது. வித்துவானுக்குப்பிராந்தி இல்லை. ஆகையால் வித்துவானுக்குக்கர்மாதிகாரமில்லை. தேகத்தில் அபரோக்ஷஆத்மபுத்தி இருக்கும்பக்ஷத்தில் தேகத்தின் தர்மங்களாகிற ஜாதி ஆசிரமஅவஸ்தைகள் பிரதீதியாகும், தேகத்தில் ஆத்மபுத்தியும் வித்துவானுக்கில்லை. ஆனால் ஆத்மா பிரம்மரூபமென்கிற அபரோக்ஷ ஞானமிருக்கின்றது. ஆகையால் ஜாதி முதலியவைகளின் பிராந்தி இல்லாததினாலும் வித்துவானுக்குக்கர்மாதிகாரமில்லை.

516. நான் உபாஸகன், தெய்வம் உபாஸிக்கத்தக்கது என்னும் புத்தியால் உபாஸனை சித்திக்கிறது. வித்துவானுக்கு உபாஸியஉபாஸகபாவங்கள் தோற்றுகிறதில்லை. என்னுடைய தேகாதிகளும் தெய்வத்தின் தேகாதிகளும் சொப்பனம்போல் கல்பிதங்கள் சேதனமொன்றே நிலையானது. இது வித்துவானுடைய நிச்சயம். ஆகையால் ஞானத்துக்கும் உபாஸனைக்கும் விரோதமுண்டு.

517. பக்ஷியின் திர்ஷ்டாந்தமுஞ் சரியன்று. ஏனெனில் பக்ஷியின் இரண்டிறக்கைகளுமொரேகாலத்திலிருக்கின்றன. இவைகளுக்குப் பரஸ்பரம் விரோதமில்லை. ஞானத்துக்குங் கர்மோபாஸனைகளுக்கும் விரோதமுண்டு. ஒரேகாலத்தில் இவைகள் சேர்ந்திருக்கமாட்டா.

518. மோக்ஷத்தில்கர்மோபாஸனைகளின் அபேக்ஷையில்லை..(518-520) சேதுஞானதிர்ஷ்டாந்தமும் ஒவ்வாது. ஏனெனில் சேதுதரிசனம் திருஷ்டபலத்துக்கு ஹேதுவன்று ஆனால் அதிருஷ்டபலத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. பிரத்தியக்ஷமாய்க் காணப்படும் பலம் திருஷ்டபலமென்னப்படும். சாப்பாட்டின் பலனாகிற திருப்தி பிரத்தியக்ஷமாயிருப்பதால் போஜனம் திருஷ்டபலத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. இப்படிச் சேதுதரிசனத்தால் பிரத்தியக்ஷபலன் பிரதீதியாகிறதில்லை. பாபத்தின் நாசரூபபலன் சாஸ்திரத்தினால் அறியப்பட்டிருக்கின்றது. சாஸ்திரத்தினால் அறியப்படும் பிரத்தியக்ஷமாய்ப் பிரதீதியாகாத பலன் அதிர்ஷ்டபலனெ

ன்னப்படும். ஆகையால்யஞ்ஞாதிகர்ம ஸ்வர்காதி அதிருஷ்டபலத்துக்கு ஹேதுவாயிருப்பதுபோல சேதுதரிசனமும பாபநாசரூப அதிருஷ்டபலத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. எது அதிருஷ்டபலத்துக்கு ஹேதுவாயிருக்கிறதோ அது எந்தபலோற்பத்தியில் எந்தச் சாதனத்தை யபேக்ஷிக்கிறதாகச் சாஸ்திரத்தில் செல்லப்பட்டிருக்கிறதோ அச்சாதனசகிதமாய்ப் பலத்துக்கு ஹேதுவாகிறதேதவிரக் கேவலந் தான்மட்டும் ஹேதுவாகிறதில்லை. ஆனதால்சிரத்தை நியமாதிகளுடன் கூடியசேதுதரிசனம் பாபநாசரூப பலத்துக்குஹேதுவாகிறது. சிரத்தாதிகளில்லாத சேதுதரிசனம்பாபநாசத்துக்குஹேதுவாகிறதில்லை. ஏனெனில் சேதுதரிசனத்தினால் பிரத்தியக்ஷமாய் யாதொருபலனும் பிரதீதியாகிறதில்லை. கேவலம் சாஸ்திரத்தினால் பயன் அறியப்பட்டிருக்கிறது. இந்தச் சாஸ்திரம் சிரத்தாதி சகித சேதுதரிசனத்தில் பலனுண்டாகிறதாகச் சொல்லியிருக்கிறது. கேவலதரிசனத்தினால் பலோற்பத்திக்கு யாதொரு பிரமாணமும் இல்லை. ஆகையால் பலோற்பத்தியில் சேதுதரிசனம் சிரத்தை பக்தி நியமாதிகளை அபேக்ஷிக்கிறது.

519. பிர்ம்மவித்தை தன் பலோற்பத்தியில் கர்மோபாஸனைகளை யபேக்ஷிக்கிறதில்லை. ஏனெனில் பிர்ம்மவித்தையின் பலனும் சுவர்க்கம்போல் அதிருஷ்டமான லோகவிசேஷமாகும்பக்ஷத்தில் இந்த லோகவிசேஷமும் கேவலம் பிர்ம்மவித்தையாற் கிடைப்பதாகச் சாஸ்திரத்தினாற் பிரதிபாதிக்கப்பட்டிருக்கமாட்டாது. ஆனால் கர்மோபாஸனாசகித பிர்ம்மவித்தையால் அது கிடைப்பதாகப் பிரதிபாதிக்கப்பட்டிருக்கும். அப்போது பிர்ம்மவித்தையும் சேதுதரிசனம்போல் பலோற்பத்தியிற் கர்மோபாஸனைகளை யபேக்ஷிக்கும். இந்தப் பிர்ம்மவித்தையின் பலனாகிற மோக்ஷம் சுவர்க்கம்போல் அதிருஷ்டமான லோகவிசேஷரூபமாயில்லை. ஆனால் மோக்ஷம் நித்தியப்பிராப்தமாயிருக்கின்றது. பிராந்தியால் பந்தம் பிரதீதியாகிறது. இந்தப் பிராந்தி நிவிர்த்தியே பிர்ம்மவித்தையின் பலன். இது கேவலம் பிர்ம்மவித்தையால் பிர்ம்மவேததாவாகிய ஞானிக்குப் பிரத்தியக்ஷமாயிருக்கிறது. ரஜ்ஜு ஞானத்தால் சர்ப்பப் பிராந்தியின் நிவிர்த்தி எல்லாருக்கும் பிரத்தியக்ஷமாயிருக்கிறது. ஆனதால் பிராந்திநிவிர்த்தி அதிஷ்டானஞானத்தின் திருஷ்டப்பலன். திருஷ்டபலோற்பத்தி எந்தச் சாமக்கிரிகளால் பிரத்தியக்ஷமாய்ப் பிரதீதியாகிறதோ அச்சாமக்கிரிகள் திருஷ்டபலத்துக்கு ஹேதுக்களாகச் சொல்லப்படுகின்றன. துரீ[69] தந்து[70] வேமங்களால்[71] படத்தினுற்பத்தி பிரத்தியக்ஷமா

69. தறி.
70. நூல் படத்தின் உபாதானகாரணம்.
71. நாடா நூலைவைக்குங் குழாய்.

யிருக்கிறது. ஆகையால் துரிதந்துவேஷங்கள் படத்துக்கு ஹேதுக்க ளாகிறன. கேவலம் போஜனத்தினால் திருப்திரூபபலன் பிரத்தியக்ஷ மாய்ப்பிரதீதியாகிறது. ஆகையால் கேவலம் போஜனம் திருப்திக்கு ஹேதுவாயிருக்கிறது. இதுபோல் கேவலம் அதிஷ்டானஞானத்தினா ல் பிராந்திநிவிர்த்தி பிரத்தியக்ஷமாய்ப்பிரதீதியாகிறது. ஆனதால் கே வலம் அதிஷ்டானஞானமே பிராந்திநிவிர்த்திக்கு ஹேதுவாயிருக்கிறது. ரஜ்ஜுஞானம் பிராந்திநிவிர்த்தியால் வேறொன்றையும் அபேக்ஷிக்காதது போல் பந்தப்பிராந்திக்கு அதிஷ்டானமான நித்தியமுக்தஆத்மாவின் ஞா னமும் பந்தப்பிராந்தி நிவிர்த்தியில் கர்மோபாஸனைகளை அபேக்ஷிக்கிற தில்லை.

520. ஞானம்பலமாகிற மோக்ஷத்தை ஸ்வர்க்கம்போல் அதிர்ஷ் டமான லோகவிசேஷமாக அங்கீகரிப்பது வேதவாக்கியத்துக்கு விரு த்தம். ஏனெனில் ஞானியின் பிராணன் எந்தலோகத்துக்கும் போகிற தில்லையென்று வேதத்தில் சொல்லியிருக்கிறது. மேலும் லோகவிசே ஷத்தை அங்கீகரிப்பதினால் ஸ்வர்க்கம்போல் மோட்சமும் அநித்தியமாகு ம். ஆகையால் மோட்சம லோகவிசேஷரூபமன்று. மோட்சத்தை லோ கவிசேஷமாக அங்கீகரிக்கிறவனாலும் கேவலம் ஞானத்தினாலேயே மோ ட்சலோகம் அடையப்படுமென்று அங்கீகரிக்கத்தக்கது. ஏனெனில் "சா ஸ்திரத்தினால் பிரதிபாதிக்கப்பட்ட அர்த்தம் சாஸ்திரானுசாரமாகவே அ ங்கீகரிக்கத்தக்கது. சாஸ்திரம் மோட்சம் கேவலம் ஞானத்தினாலுண்டா வதாகச்சொல்லுகிறது. ஆகையால் கேவலம் ஞானம் மோட்சத்துக்கு ஹேதுவேதவிர கர்மம் உபாஸனை ஞானம் மூன்றுமல்ல.

521. மேலும் விருட்சதிருஷ்டாந்தமும் சரியன்று. ஏனெனில் ஜலம் விடுதல் விருட்சோற்பத்திக்கும் ரட்சணைக்கும் ஹேதுவாயிருந்தா லும் விருட்சத்தின் பலோற்பத்திக்குக்காரணமன்று. வயதானமரத்து க்கு விடப்பட்ட ஜலம் விருட்சத்தின் ரட்சணைக்கு நிமித்தமாகிறதேதவி ரப் பலனுக்காகிறதில்லை. ஜலபுஷ்டியுள்ள விருட்சமே பலத்துக்குஹே துவாயிருக்கிறது; ஜலம் விடுதல் ஹேதுவாயில்லை. இதுபோல் கர்மோ பாஸனைகளும் ஞானோற்பத்திக்கு உபயோகப்படுகின்றனவேதவிர மோ ட்சத்துக்கு உபயோகப்படுகிறதில்லை. ஆகையால் ஞானோற்பத்திக்கு முன்னேயே அந்தக்கரணத்தின் சுத்தியின் பொருட்டும் நிச்சலதையின் பொருட்டும் கர்மோபாஸனைகளை யனுஷ்டிக்கவேண்டியது. ஞானமுண் டானபின் மோட்சத்தின் பொருட்டு இவைகளை யனுஷ்டிக்கவேண்டியதி ல்லை.

ஞானோற்பத்திக்கு முன்னும் எதுவரையில் அந்தக்கரணத்தில் மலவிட்சேபங்கள் இருக்கின்றனவோ அதுவரையில்தான் கர்மோபாஸனைகளை யனுஷ்டிக்கவேண்டியது. எவனுடைய அந்தக்கரணம் சுத்தமாயும் நிச்சலமாயுமாகிறதோ அந்த ஜிஞ்ஞாசுவானவன் சிரவணத்துக்கு விரோதமான கர்மோபாஸனைகளைத்தள்ளவேண்டியது. மலமென்றால் பாவம். இது அசுபவாஸனைக்கு ஹேதுவாயிருக்கிறது. எதுவரையில் மலமிருக்கிறதோ அதுவரையில் அசுபவாசனையிருக்கிறது. அசுபவாசனையற்றுப்போனால் மலமற்றதென்பதும் நிச்சயம். அந்தக்கரணத்தின் சஞ்சலதையும் ஏகாக்கிரதையும் அனுபோகசித்தமாயிருக்கின்றன ஆகையால் உத்தமஜிஞ்ஞாசுவுக்கும வித்துவானுக்கும் கர்மோபாஸனைகள் நிஷ்பிரயோசனமாயிருக்கின்றன.

522. ஞானத்தைககாப்பாற்றும் பொருட்டுக்கர்மோபாசனைகளைச்செய்யவேண்டும். ஜலத்தினால் உண்டாகும் விருக்ஷம் ஜலத்தினால் ரக்ஷிக்கப்படுகிறது. ஜலசம்பந்தமில்லாமற்போனால் வயதான மரமும் பட்டுப்போகிறது. இதுபோல் கர்மோபாஸனைகளாலுண்டாகும் ஞானமும் கர்மோபாஸனைகளாலிரக்ஷிக்கப்படுகிறது. ஞானி கர்மோபாஸனைகளை யனுஷ்டிக்காவிட்டால் அந்தக்கரணம் மறுபடியும் மலினமாயும் சஞ்சலமாயும் போகும். இந்தமலினசஞ்சல அந்தக்கரணத்தில், நீரில்லா நிலத்தின் மரம்போல், ஏற்கனவே உண்டாயிருந்த ஞானமும் நஷ்டமாய் விடும். ஆகையால் ஞானியும் கர்மோபாஸனைகளைச்செய்யவேண்டும். இவ்விதமாக முன் (510) செய்த ஆக்ஷேபம் சரியன்று. ஏனெனில் ஆபாஸசகித அல்லது சேதனசகித நான் அசங்கப்பிர்ம்மம் என்னும் அந்தக்கரணவிர்த்தி வேதாந்தத்தின் பலரூப ஞானமாயிருக்கிறது. அது கர்மோபாஸனைகளன்றியில் நாசமாகும். ஏனெனில் ஒருதரமுண்டாகிற அந்தக்கரணத்தின் பிர்ம்மாகாரவிர்த்தியால் அஞ்ஞானம் பிராந்தி இவைகளின் நாசரூபபலன் அதேசமயத்தில் சித்திக்கிறது. அஞ்ஞானப்பிராந்திகளின் நாசத்துக்குப் பிறகு மறுபடியும் விர்த்தியை ரக்ஷிக்கவேண்டியதவசியமில்லை. மேலும கர்மோபாஸனைகளால் அந்தக்கரணவிர்த்தியும் இரக்ஷிக்கப்படமாட்டாது. ஏனெனில் கர்மோபாஸனைகளையனுஷ்டித்தால் அவைகளின் சாமக்கிரிகளின் விர்த்திரூபஞானமே உண்டாகும். பிர்ம்மஞானமுண்டாகமாட்டாது. வேறுவிர்த்தி யுண்டாவதால் முதல் விர்த்தி தங்கமாட்டாது. ஆனதால் கர்மோபாஸனைகள் ஞானோற்பத்திக்குப் பரம்பரையாய் ஹேதுக்களாயிருக்கின்றன, உண்டான விர்த்திக்கு விரோதிகளாகின்றன. ஆனதால் கர்மோபாஸனைகளால் ஞானமிரக்ஷிக்கப்படமாட்டாது.

523. ஞானிக்குக் கர்மத்தை விடுவதினால் பாபமுண்டாகிறது என்று முன் (510) சொன்னது சரியன்று. ஏனெனில் சுபகர்மத்தைவிடுதல் பாபத்துக்கு ஹேதுவாகமாட்டாது[72] நிஷித்தகர்மத்தையநுஷ்டித்தலே பாபத்துக்கு ஹேதுவாகும். இதை பாஷியக்காரர் வெகுவிதமாய்ப்பிரதிபாதித்திருக்கிறார். ஆகையால் கர்மத்தியாகத்தால் பாபமுண்டாகிறதில்லை. ஞானிக்கோ எவ்விதத்திலும் பாபமுண்டாகமாட்டாது. ஏனெனில் புண்ணியபாபங்கள் இவைகளுக்காசிரயமான அந்தக்கரணம் இவைகள் பாரமார்த்திகத்திலில்லை. அவித்தையால் மித்தையாய் பிரதீதியாகின்றன. இந்த அவித்தையும் மித்தியாப்பிரதீதியும் ஞானவானுக்கில்லை. ஆகையால் சுபகர்மத்தை விடுவதினாலும் அசுபகர்மத்தைச் செய்கிறதினாலும் ஞானிக்குப் பாபமுண்டாகிறதில்லை.

524. இவ்விடத்திலோர் சித்தாந்தம்:— ஞானம் மந்தம் திடம் என இருவகைத்து. சமுசயாதிசகிதஞானம் மந்தமென்னப்படும். சமுசயாதிரகித ஞானம் திடமென்னப்படும். திடஞானமுள்ளவனுக்குச்செய்யவேண்டியதொன்றுமில்லை. ஒருதடவையுண்டாகிய சமுசயமில்லாத அந்தக்கரணத்தின் விர்த்திரூபஞானமே அவித்தையை நாசஞ்செய்துவிடுகிறது. இந்த (விர்த்திரூப) ஞானம் நாசமானாலும் நன்றாயறியப்பட்ட ஆத்மாவில் மறுபடியும் பிராந்தியுண்டாகிறதில்லை. ஏனெனில் பிராந்திக்குக் காரணமான அவித்தை ஒருதடவையுண்டானஞானத்தால் நஷ்டமாய்விடுகிறது. பிராந்தியும் அவித்தையுமில்லாததினால் மறுபடியும் விர்த்திஞானமுண்டாவதிற் பிரயோசனமில்லை. ஜீவன்முக்தியின் ஆனந்தத்தின் பொருட்டு ஒருவன் விர்த்தியினாவர்த்தியையபேக்ஷித்தால் அடிக்கடி அவன் வேதாந்த அர்த்தத்தைச் சிந்தனைசெய்யவேண்டியது. அப்படிச் செய்வதினாலேயே அடிக்கடிப் பிர்ம்மாகாரவிர்த்தியுண்டாகிறது. கர்மோபாஸனைகளால் பிர்ம்மாகாரவிர்த்தியுண்டாகிறதில்லை. ஏனெனில் கர்மோபாஸனைகளந்தக்கரணத்தின் சுத்திநிச்சலதைமூலமாக ஞானத்திற்குபயோகப்படுகின்றன. வேறுவிதமாக அவைகளுபயோகப்படுகிறதில்லை. வித்துவானுடைய அந்தக்கரணத்தில் பாபமும் சஞ்சலதையுமில்லை. அவித்தை ராகத்துவேஷங்கள் மூலமாகப் பாபத்துக்குஞ் சஞ்சலதைக்குங் காரணமாகிறது. இந்த அவித்தை ஞானத்தால் நாசமாகிறது. ஆகையால் வித்துவானுக்குப் பாபமும் சஞ்சலதையுமில்லாதபடியால் கர்மோபாஸனைகளின் உபயோகமில்லை.

---

72. ஏனெனில் அபாவத்திலிருந்து பாவம்உண்டாகமாட்டாது. 100-வது பிரிவைப்பார்க்க.

525. ஆக்ஷேபம்:—ராகத்துவேஷாதிகள் அந்தக்கரணத்தின் சகஜதர்மங்கள். எதுவரையில் அந்தக்கரணமிருக்கிறதோ அதுவரையில் ராகத்துவேஷங்கள் ஞானிக்கும் எவ்விதத்திலும் நாசமாகமாட்டா. இந்தராகத்துவேஷங்களால் ஞானியின் அந்தக்கரணமும் சஞ்சலப்படும். ஆனதால் சஞ்சலதையைப்போக்க ஞானியும் உபாஸனையையனுஷ்டிக்கவேண்டியது. அந்தக்கரணத்தின் சஞ்சலதையால் ஞானிக்கு விதேகமோக்ஷத்தில் ஹானியில்லாவிடினும் சஞ்சலமான அந்தக்கரணத்தில் சொரூபானந்தம் விளங்கமாட்டாது. ஆகையால் சஞ்சலதை ஜீவன்முக்திக்கு விரோதமாயிருக்கிறது. ஆகையால்ஜீவன்முக்தியின் பொருட்டுச் சஞ்சலதையைப்போக்க உபாஸனையையனுஷ்டிக்கவேண்டியது.

526. இந்த ஆக்ஷேபஞ்சரியன்று. ஏனெனில் திடபோதம் எவன் அந்தக்கரணத்திலுண்டாயிருக்கிறதோ அவனுக்குச் சமாதியும் விக்ஷேபமுமொன்றே. ஆகையால் அந்தக்கரணம் நிச்சலமாயிருக்கும்பொருட்டு வித்துவான் யாதொரு பிரயத்தினமுஞ் செய்யவேண்டியதில்லை. ஆயினும் வித்துவானுடைய பிரவிர்த்திநிவிர்த்திகள் பிராரப்தத்துக்கு ஆதீனங்களாயிருக்கின்றன. பிராரப்தகர்மம் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவிதமாயிருக்கிறது. ஜனகாதிகள் போல் சிலவித்துவான்களுககுப் பிராரப்தம் போகத்துக்கு ஹேதுவாகிறது. சுகதேவர் வாமதேவர் போலச்சிலருக்குப் பிராரப்தம் நிவிர்த்திக்கு ஹேதுவாகிறது. எவன் பிராரப்தம் போகத்துக்கு ஹேதுவாகிறதோ அவனுக்குப் பிராரப்தத்தால் போகஇச்சையும் போகசாதனத்தின் பொருட்டு யத்தனமுமுண்டாகின்றன. எவன்பிராரப்தம் நிவிர்த்திக்குஹேதுவாயிருக்கிறதோ அவனுக்கு ஜீவன்முக்தி ஆனந்தஇச்சையுண்டாகிறது, போகத்தில் துக்கமுண்டாகிறது. ஜீவன்முக்தி ஆனந்தஇச்சையுள்ளவன் பிரம்மாகாரவிர்த்திஅடிக்கடியுண்டாகும் பொருட்டு வேதாந்த அர்த்தத்தைச் சிந்தனைசெய்யவேண்டியதேதவிர உபாஸனையை அனுஷ்டிக்கக்கூடாது. ஏனெனில் அந்தக்கரணம் நிச்சலமாயிருப்பதால்மட்டும் பிரம்மானந்தம்விசேஷமாய்விளங்கமாட்டாது, பிரம்மாகாரவிர்த்தியால்த்தான் விளங்கும். இந்தப் பிரம்மாகாரவிர்த்தி வேதாந்தச்சிந்தனையால்த்தானுண்டாகுமே தவிர உபாஸனையாலுண்டாகமாட்டாது. அந்தக்கரணத்தின் சஞ்சலதையும் வித்துவானுக்கு வேதாந்தச்சிந்தனையினாலேயே நீங்கிப்போய்விடும். ஆகையால் அந்தக்கரணத்தின் நிச்சலதையின் பொருட்டும் உபாஸனையில் பிரவிர்த்தியுண்டாகமாட்டாது. இவ்விதமாக எவனுக்குத் திடபோதமுண்டாயிருக்கிறதோ அவனுக்குக் கர்மோபாஸனைகளில் பிரவிர்த்தியுண்டாகிறதில்லை.

527. எவனுக்கு மந்தபோதமிருக்கிறதோ அவனும் மனனநிதித்தியாஸனங்களையே யனுஷ்டிக்கவேண்டியதே தவிரக் கர்மோபாஸனைகளை யனுஷ்டிக்கவேண்டியதில்லை. ஏனெனில் எவனுக்கு மந்தபோதமுண்டாகிறதோ அவன் உத்தமஜிஞ்ஞாசு. இவனுக்கு மனனநிதித்தியாஸனங்களைத்தவிர வேறொன்றுஞ் செய்யவேண்டியதில்லை. இது சாரீரகத்தில் சூத்திரக்காரராலும் பாஷியக்காரராலும் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. வித்துவானுக்கு மனனநிதித்தியாஸங்களு மனுஷ்டிக்கவேண்டியதில்லை[73]. ஜீவன்முக்தியின் ஆனந்தத்தின்பொருட்டு மனனநிதித்தியாஸனங்களில் பிரவிர்த்திக்கிற வித்துவானும் தன் இச்சையாற் பிரவிர்த்திக்கிறான். "நான் வேதாஞ்ஞைப்படி நடக்காதபக்ஷத்தில் எனக்கு ஜனனமரணாதி சமுசாரமுண்டாகும்" என்கிற புத்தியால் செய்யப்படுங் கர்மம் கர்த்தவ்யமென்று சொல்லப்படும். ஜன்மாதிகளின் புத்தி வித்துவான்களுக்குண்டாகிறதில்லை. ஆகையால் தன்னிச்சையால் வித்துவானாலனுஷ்டிக்கப்படும் மனனநிதித்தியாஸனங்கள் கர்த்தவ்யமன்று. இவ்விதமாக மந்தபோதம் அல்லது திடபோதமுண்டானவனுக்குக் கர்மோபாஸனைகள் கர்த்தவ்யமன்று.

528. எவனுக்குப்போதமுண்டாகவில்லையோ ஆனால் ஆத்மாவை அறியவேண்டுமென்கிற தீவிரமான இச்சையிருக்கிறதோ போகத்தில் இச்சையில்லையோ அவனுடைய அந்தக்கரணம் சுத்தமாயிருக்கிறது. ஆகையால் அவனும் உத்தமஜிஞ்ஞாசுதான். போதத்தின் பொருட்டு அவனும் சிரவணாதிகளை அனுஷ்டிக்கவேண்டியதே தவிரக் கர்மோபாஸனைகளை யனுஷ்டிக்கக்கூடாது. ஏனெனில் கர்மோபாஸனைகளின் பலன் அவனுக்கு முன்னேயே சித்தித்திருக்கிறது.

529. ஞானத்தின் சாமானிய இச்சையால் எவன் சிரவணத்திற் பிரவர்த்திக்கிறானோ மேலும் எவன் அந்தக்கரணம் போகத்தில் ஆசக்தியுள்ளதாயிருக்கிறதோ அவன் மந்தஜிஞ்ஞாசு. அவனும் சிரவணத்தை விட்டு மறுபடியும் கர்மோபாஸனைகளில் பிரவிர்த்திக்கவேண்டியதில்லை. கர்மோபாஸனைகளின் பலன்களாகிய அந்தக்கரணத்தின் சுத்தியும் நிச்சலதையும் அவனுக்குச்சிரவணத்தினாலேயே உண்டாகும். சிரவணத்தின் ஆவர்த்தியால் அந்தக்கரணத்தின் தோஷம் நீங்கி இந்த ஜன்மத்திலாவது

---

73. தத்துவத்தையறியாதவன் சிரவணஞ் செய்யவேண்டியது. சமுசயமுள்ளவன் மனனஞ் செய்யவேண்டியது. விபர்யயமடைந்தவன் நிதித்தியாஸனஞ் செய்யவேண்டும். சமுசயவிபர்யயங்களன்றியே தத்துவத்தையறிந்த வித்துவான் செய்யவேண்டியது யாதொன்றுமில்லை.

அல்லது வேறு ஜன்மத்திலாவது அல்லது பிர்ம்மலோகத்திலாவது ஞானமுண்டாகும். கிரவணத்தை விட்டும கர்மோபாஸனைகளிற் பிரவிர்த்திக்கிறவன் ஆரூடபதிதன்[74] என்னப்படுகிறான். இவ்விதமாக ஞானிக்கும் உத்தமஜிஞ்ஞாசுவுக்கும் கர்மோபாஸனைகளில் அதிகாரமில்லை. வேதாந்தச்சிரவணத்தில் பிரவிர்த்தித்த மந்தஜிஞ்ஞாசுவுக்கும் அதிகாரமில்லை.

530. எவனுக்கு ஞானத்தின் இச்சையிருக்கிறதோ, ஆனால் போகத்தில் புத்திபதிந்திருக்கிறதோ, ஆனதாற் சிரவணத்தில் எவன் பிரவிர்த்திக்கிறதில்லையோ, அந்த மந்தஜிஞ்ஞாசுவுக்கு நிஷ்காமகர்மத்திலும் உபாஸனையிலும் அதிகாரமுண்டு.

531. போகத்தில் எவனுக்கு ஆசையிருக்கிறதோ ஞானத்தில் இச்சையில்லையோ அவன் பகிர்முகன். அவனுக்கு ஸகாமகர்மத்தில் அதிகாரமுண்டு. ஆனதால் ஞானிக்குக் கர்மோபாஸனைகளில அதிகாரமில்லை. கர்மோபாஸனைகளுக்கு ஞானம் விரோதமாயிருக்கிறது. கர்மோபாஸனைகளும் அந்தக்கரணத்தின் சுத்தி நிச்சலதை இவைகள் மூலமாக ஞானோற்பத்திக்கு ஹேதுக்களாயிருந்தாலும் ஞானோற்பத்திக்குப் பிறகு க்கர்மோபாஸனைகளையனுஷ்டித்தால் ஞானமும் நஷ்டமாய்விடும். ஆகையால் அவைகள் ஞானத்துக்குவிரோதிகளாயிருக்கின்றன, இச்சைக்கு ஹேதுக்களாயிருக்கிறதில்லை. ஏனெனில் "நான் கர்த்தா யஞ்ஞாதிகளை நான் செய்யவேண்டியது, யஞ்ஞாதிகளுக்குப்பலன் சுவர்க்காதிகள்' இந்தப்பேதபுத்தியால் கர்மஞ்செய்யப்படுகிறது. 'நான் உபாஸகன் 'தெய்வமுபாஸியம்' இந்தப்பேதபுத்தியால் உபாஸனை சித்திக்கிறது. இவ்விரண்டு புத்திகளும் 'எல்லாம் பிர்ம்மமயம்' என்கிற புத்தியை நீக்கிச்சித்திக்கின்றன. ஆகையால் கர்யோபாஸனைகள் ஞானத்துக்கு விரோதிகள்.

532. ஞானி ஆத்மாவை அசங்கனை அறிந்தாலும் தேகத்தின் போஜனாதிவியவகாரங்கள் அல்லது, ஜனகாதிகளின்வியவகாரங்கள்போல், அதிகாராஜ்யபாலனாதிவியவகாரங்கள் இவைகளுக்கு ஞானம் விரோதமன்று. வியவகாரமும் ஞானத்துக்கு விரோதமன்று. ஏனெனில் எந்த ஆத்மஸ்வரூபம் ஞானத்தால் அசங்கம் என்று அறியப்படுகிறதோ அந்தஆத்மாவினிடத்தில் வியவகாரம் பிரதீதியானால் வியவகாரத்துக்கு ஞானமும் ஞானத்துக்கு வியவகாரமும் விரோதமாகும். வித்துவானு

---

74. மோக்ஷத்துக்குப்போகும் ஏணியிலேறி அங்கிருந்து கீழே விழுவோன் ஆரூடபதிதனுவான்.

க்கு ஆத்மாவினிடத்தில் வியவகாரம் பிரதீதியாகிறதில்லை[75]. எல்லாவிய வகாரமும் தேகாதிகளையாசிரயித்துக்கொண்டிருக்கின்றது. ஆத்மாவி னிடத்தில் வியவகாரசகித தேகாதிகளின் சம்பந்தமேயில்லை. இந்தப்பு த்தியுடன் ஞானி சகல வியவகாரங்களையுஞ் செய்கிறான். இக்காரணத் தால் வித்துவானுடையபிரவிர்த்தியும் நிவிர்த்திதானென்று சொல்லப்ப டுகிறது.

533. வேறு வியவகாரங்கள் ஞானத்துக்கு விரோதமாகாதது போல் கர்மோபாஸனைகளையும் அன்னிய பகிர்முகபுருஷர்கள் அனுஷ்டி க்கவேண்டியதற்காக ஆத்மாவையசங்கமாயும் கிரியைகள், தேகம் வாக்கு அந்தக்கரணம் இவைகளையாசிரயித்ததாயும் அறிந்து கர்மோபாஸனைக ளையனுஷ்டிக்கிறவனுடைய ஞானத்துக்கு அவைகள் விரோதமாகா. ஏ னெனில் வித்துவானால் அசங்கமாயறியப்பட்ட ஆத்மாவைக் கர்த்தாவா க அறிந்து எவன் கர்மோபாஸனைகளை யனுஷ்டிக்கிறானோ அவனுடைய ஞானத்துக்கு அவைகள் விரோதமாகும். ஆத்மா அசங்கமென்கிற திட நிச்சயம் கர்மோபாஸனைகளால் வித்துவானுக்கு நீங்குகிறதில்லை. ஆகை யால் ஆபாஸரூபமான[76] கர்மோபாஸனைகள் திடஞானத்துக்கு விரோதமா கா. இக்காரணத்தால் ஜனகாதிகளால் ஆபாஸரூபகர்மஞ் செய்யப்படு கிறது. ஆத்மாவை யசங்கமாக அறிந்து மற்ற வியவகாரங்கள்போல் தேகாதிகளின் தர்மங்களையுமறிந்து வித்துவான் செய்யுஞ் சுபகிரியைகள் ஆபாஸரூபகர்மங்களென்னப்படும். இதற்கும் ஞானத்துக்கும் விரோத மில்லை. ஆத்மா கர்த்தாவென்னும் புத்தியால் எவன் கர்மோபாஸனைசெ ய்கிறானோ அவன் விஷயத்தில் தான் கர்மோபாஸனைகளுக்கும் ஞானத்துக் கும் விரோதமென்று பாஷியக்காரரால் பொதுவாய்ச்சொல்லப்பட்ட கர்மோபாஸனைகளுக்கும் ஞானத்துக்கும் விரோதமென்னும் வசனத்தை யறியவேண்டியது. ஆபாஸரூபகர்மோபாஸனைகளுக்கும் ஞானத்துக்கு ம் விரோதமில்லை.

---

75. ஜகத்து சத்தியமென்கிற ஞானத்தையும் போகத்தையுங்கொடுக்கி ற பிராரப்தம் ஞானத்துக்கு விரோதமாகும். போகமாத்திரத்தால் விஷயம் சத்தியமாகமாட்டாது. ஞானி சகலபதார்த்தங்களையும் மித்தையாக அறிகிறான், ஆனால் அவைகளின் சொரூபத்தை நாசஞ் செய்கிறதில்லை. ஞானியினுடைய ஞா னத்துக்கும் பிராரப்தத்தாலுண்டாகும் வியவகாரத்துக்கும் விரோதமில்லை.

76. ஆத்மாவை அசங்கமாயறிந்தும் கிரியைகள் மனோவாக்குக்காயங்க ளையடுத்தனவென்றுமறிந்தும் செய்யப்படும் கர்மோபாஸனைகள் ஆபாஸரூபங்க ளாம்.

534. ஆயினும் மந்தபோதத்துக்கு ஆபஸ்ரூபகர்மோபாஸனைகள் விரோதிகளாயிருக்கின்றன. ஏனெனில் சமுசயாதிசஹித போதம் மந்தபோதமென்னப்படும். எவன் அந்தக்கரணத்தில் 'ஆத்மா அசங்கன் அல்லது அசங்கனன்று' என்கிற சந்தேகமொருக்கால் ஜனிக்கிறதோ அவன் அடிக்கடி 'ஆத்மா அசங்கன், எனக்குச் செய்யவேண்டியதொன்றுமில்லை' என்கிற பாவத்தைச் சிந்தனைசெய்யவேண்டியது. அப்போது சமுசயம் நீங்கித் திடபோதமுண்டாகும். அப்படிச் செய்யாமற் கர்மோபாஸனைகளைச் செய்தால் உண்டானமந்தபோதமும் நீங்கி நான் கர்த்தா போக்தா என்னும் விபரீத நிச்சயமுண்டாகும் ஆகையால் மந்தபோதமுண்டாவதற்குமுன்னேயே கர்மோபாஸனைகளைச் செய்யவேண்டியதேதவிரப் பிறகு அவைகளைச் செய்யத்தக்கதில்லை. மந்தபோதமுள்ளவன் கர்மோபாஸனைகளைச் செய்தால் உண்டான போதமும் நஷ்டமாய்விடும். திர்ஷ்டாந்தம்:—பக்ஷிதன் முட்டைகளை இரக்கைமுளைக்குமுன்அவயங்காக்கிறது. இரக்கைமுளைத்தபின் காக்கிறதில்லை. அப்படிக் காத்தால் முட்டையிலுள்ள ஜலத்தினால் மிருதுவான இரக்கைகள் உதிர்ந்துவிடுகின்றன. இதுபோல்ஞானோற்பத்திக்குமுன்னேயே கர்மோபாஸனைகளை யனுஷ்டிக்கவேண்டியது. ஞானோற்பத்திக்குப்பின் அனுஷ்டிக்கக்கூடாது. அப்படியனுஷ்டித்தால் குஞ்சு நஷ்டமாவதுபோல் மந்தஞானமும் நஷ்டமாய்விடும். தாய்ப்பக்ஷி முட்டைசம்பந்தத்தினால் நஷ்டமாகாததுபோல் திடபோதம் நஷ்டமாகமாட்டாது. தாய்ப்பக்ஷிக்குமுட்டை பிரயோஜனப்படாததுபோல் திடபோதத்துக்கும் கர்மோபாஸனைகளால் பிரயோஜனமில்லை. இவ்விதமாக மோக்ஷத்தின்பொருட்டு ஞானிக்குச் செய்யவேண்டியது யாதொன்றுமில்லை.

535. சிஷ்யனுக்கு ஆசாரியரால் உபதேசிக்கப்பட்டவிஷயம் வேதானுசாரமாயிருக்கிறது. ஆகையால் இதுயதார்த்தம். சிஷ்யனே இதை நீ நம்புவாயாக. இதையுணர்வதினால் சிரமமன்றியில் அபாரமான ஜனனமரணரூப சமுசாரம் நாசமாய்விடும்.

536. உபதேசித்த அர்த்தத்தின் சுருக்கம் (536—541):—ஜகத்கர்த்தாவான ஈஸ்வரன்உனக்குவேறன்று. நீ சச்சிதானந்தரூபப்பிர்ம்மம். இப்படிஆசாரியர்முன் (439—495) னுபதேசித்ததைமறுபடியும் தயவுடன்சிஷ்யனுக்குச் சொல்லுகிறார். சிஷ்யனே தீனத்தன்மையை விட்டு உன்ஸ்வரூபத்தைப்பார். நீ ஜனனமரணமில்லாத சுத்தப்பிர்ம்மம். பார்க்கப்பட்டவைகளையெல்லாம் பிரகாசிப்பிக்கிறாய். உன் அஞ்ஞானத்தால் ஜகத்தையெல்லாம் நீ சிருஷ்டிக்கிறாய். மறுபடியும் எல்லாவற்றையும் நாசஞ்செய்து நீ நாசமற்றவனாயிருக்கிறாய். மித்தியாப்பிரபஞ்சத்தைப் பார்

த்துக் கொஞ்சங்கூட மனோவருத்தத்தை நீ யடைகிறதில்லை. நீ தேவர்களுக்கெல்லாம் தேவனாயிருக்கிறாய். நீ சுகப்புஞ்சமாயிருக்கிறாய். மாயையினால் உன்னிடத்தில் ஜீவன் ஜகத்து ஈஸ்வரன் மூன்றும் விளங்குகின்றன. ரஜ்ஜுவினிடத்திலும் கிளிஞ்சலிடத்திலும் சர்ப்பமும் வெள்ளியும் விளங்குவதுபோலும்.

537. ஞானசாதனத்தைச் சொல்லுகிறேன். சிஷ்யனே ராகமாகிற பதார்த்தத்திலுள்ள திடமான ஆசக்தியைத் தகித்துவிடு. லோபத்தையொழித்துவிடு. துவேஷத்தைக் கொன்றுவிடு. காமத்தைச்சுட்டுவிடு. ராகம் லோபம் துவேஷம் காமம் இவைகளைச் சொன்னதினால் சகலமான ராஜஸதாமஸவிர்த்திகளுங்கிரகிக்கப்படுகின்றன. ஆனதால் சகலமான ராஜஸதாமஸவிர்த்திகளை நாசஞ்செய்யவேண்டியதென்று அர்த்தம் சித்திக்கிறது. இந்த விர்த்திகள் ஞானத்துக்கே விரோதிகளாயிருக்கின்றன. இவைகளை நாசஞ்செய்யாமல்[77] ஞானமுண்டாகிறதில்லை. ஆகையால் அவைகளின் நிவிர்த்தி[78] ஜிஞ்ஞாசுவுக்கு அவசியம் வேண்டியது. விவேகம் வைராக்கியம் சமாதிஷட்கசம்பத்தி முமுக்ஷுதை இந்நான்கும் ஞானசாதனங்களாயிருக்கின்றன. இவைகளில் விவேகம் முக்கியமானது. ஏனெனில் விவேகத்தினால் வைராக்கியாதிகளுண்டாகின்றன. ஆகையால் ஆசாரியர் இப்போது விவேகத்தையுபதேசிக்கிறார். சிஷ்யனே சமுசாரத்தைக் கானல்ஜலத்துக்குச் சமானமாக மித்தையென்று நீ யடிக்கடி அறிவாயாக. சமுசாரம் மித்தையென்று சொன்னதினால் ஆத்மா மித்தையன்று சத்தியமென விளங்குகிறது. உதாரணம்:— வித்தையாடி பண்ணும் ஜாலவித்தைகளைப் பார்க்குபோது மகனைப்பார்த்துத் தகப்பன் 'மகனே வித்தையாடியாற்காண்பிக்கப்பட்ட மாமரம் முழுமையும் பொய்' என்றான். இப்படிச் சொன்னதினால் வித்தையாடி பொய்யனென மகன் நினைக்கிறதில்லை. ஆனால் அவனைச்சத்தியமாகவே அறிகிறான். இதுபோல் ஜகத்து மித்தையென்று சொன்னதினால் ஆத்மா சத்தியமென்று அறியப்படவேண்டியது. இந்த அபிப்பிராயங்கொண்டு ஆசாரியர் சமுசாரத்

---

77. விஷயத்தில் தோஷதிர்ஷ்டியில் ராகமும் அர்த்தத்தில் அனர்த்ததிர்ஷ்டியால் லோபமும் நாசமாகின்றன. காமாபாவத்தால் குரோதமுண்டாகிறதில்லை. பதார்த்தங்களைச் சிந்திக்காவிடில் இக்சையாகிற காமமுண்டாகிறதில்லை. பாகவதத்தில் 11-வது ஸ்கந்தத்தில் 13-வது அத்தியாயத்தில் ராஜஸதாமஸ விர்த்திகள் நாசமாகும் விதஞ்சொல்லப்பட்டிருக்கிறது.

78. முதலாவது தரங்கம் 15-வது பிரிவிற் சொல்லிய மலவிக்ஷேபதோஷரகித சுத்தாந்தக்கரணம்.

தை மித்தையாகச்சொன்னார். இவ்விதமாக ஜகத்து மித்தை ஆத்மா சத்தியமென்று குரு விவேகத்தையுபதேசித்தார். இந்த விவேகத்தினால் இதரசாதனங்கள் தாமாகவே யுண்டாகின்றன. ஆகையால் விவேகத்தின் உபதேசத்தால் மற்ற சாதனங்களும் உபதேசிக்கப்பட்டதாக அறியத்தக்கவை. இவை ஞானத்தின் பகிரங்கசாதனங்கள். இனி அந்தரங்கசாதனங்களைச் சொல்லுகிறேன். அந்தரங்கசாதனம் சிரவணம். சீஷனே ஞானரூபசூரியனைச் சிரவணத்தினால் சம்பாதித்து அஞ்ஞானரூப இருளை நாசஞ்செய். இருள் உபமானம் அஞ்ஞானம் உபமேயம்.

538. சீஷனே அறியத்தக்க தேகாதிகள் நீயன்று. அறியாத பிர்ம்மமே நீ. விருக்ஷரூபசம்சாரம்[79] மித்தை. ஆகாசத்தில் நீலவர்ணமுங் கூடாரரூபமும் உண்மையில்லாமல் மித்தையாகப் பிரதீதியாவதுபோல் சமுசாரமும் ஆத்மாவினிடத்தில் இல்லாமல் மித்தையாகப் பிரதீதியாகிறது. சுருதிஸ்மிருதிகளில் சமுசாரத்தை விருக்ஷரூபமாகச்சொல்லியிருக்கிறபடியால் இவ்விடத்திலும் விருக்ஷசப்தம் சமுசாரத்துக்கு உபயோகப்படுத்தப்பட்டது.

539. சீஷனே, தேகாபிமானியாயிருக்கிற அஞ்ஞானியும் ஞானியும் பந்தமோக்ஷங்களுக்கு இருப்பிடங்களாம். அஞ்ஞானி பந்தத்துக்கிருப்பிடம். ஞானி மோக்ஷத்துக்கிருப்பிடம். ராகமும் விராகமும் இவைகளின் கொடிமரங்கள். எப்படிக் கொடிமரம் ராஜாவின் பட்டணத்துக்கு அடையாளமாயிருக்கிறதோ அப்படி[80] அஞ்ஞானிக்கு ராகமும் ஞானிக்கு விராகமும் அடையாளங்களாயிருக்கின்றன.

540. அஞ்ஞானியினிடத்திலும் விராகமுண்டாகக்கூடும். ஆனால் ஞானியினுடைய விராகத்துக்கும் அஞ்ஞானியினுடைய ராகத்துக்குமுள்ள பேதத்தைச் சொல்லுகிறேன். சீஷனே, சப்தாதிவிஷயங்களி

79, சமுசாரரூபவிருக்ஷத்துக்கு மாயாவிசிஷ்ட பரப்பிர்ம்மம் மூலம். மகத்தத்துவம் அங்குரம். அகங்காரதத்துவம் தண்டு. பஞ்சதன்மாத்திரைகள் கிளைகள். வேதம் முதலிய சாஸ்திரங்கள் இலைகள். நான்கு புருஷார்த்தங்களும் ரஸம். தர்மாதர்மங்கள் புஷ்பங்கள். ஜன்மமரணாதி துக்கங்கள் பலன். அஞ்ஞான ஜீவனாகிற பக்ஷி போக்தா. வைராக்கியத்தால் தீக்ஷணமாயிருக்கும் ஞானம் அம்மரத்தைப்பிளக்கும் கோடாரி. இவ்விதமாகச்சம்ஸாரமாகிற விருக்ஷம் சாஸ்திரத்தில் அனேகவிதமாய் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது.

80. புகையால் நெருப்பு அனுமானிக்கப்படுவது போல, ராகவிராகங்களால் அஞ்ஞானி ஞானிகள் அறியப்படுகிறார்கள்.

ல் சத்தியமென்கிற பிராந்தியும் ரஜ்ஜுசர்ப்பம்போல் பிரமையென்கிற நிச்சயபுத்தியும் காற்று கொடியை யாட்டுகிறதுபோல் ராகவிராகங்களை யாட்டுவிக்கின்றன, அதாவது சஞ்சலப்படுத்துகின்றன. ஆனால் அவைகளை முற்றிலுமொழிக்கிறதில்லை. விஷயத்தில் சத்தியபுத்தியால் ராகம் ஸ்திரப்படுகிறது. விஷயத்தில் பிரமை புத்தியால் விகாரம் ஸ்திரப்படுகிறது. விஷயம் அசத்தியம், ஆகையால் அதில் சத்தியபுத்தி பிராந்தி ரூபம். பிராந்திஞானமும் அதற்கு விஷயமான மித்தியாவஸ்துவும் இரண்டும் பிரமையென்னப்படும். அஞ்ஞானியின் விராகத்துக்கும் ஞானியின் விராகத்துக்கும் பேதம் எப்படியெனில், அஞ்ஞானியின் விராகம் விஷயத்தில் மித்தியாபுத்தியாலுண்டானதன்று. ஆகையால் அது மந்தமாயிருக்கிறது. விஷயம் மித்தை யென்கிறபுத்தி அஞ்ஞானிக்குண்டாகிறதில்லை. சாஸ்திரத்தினாலும யுக்தியினாலும் விஷயம் மித்தையென்று அஞ்ஞானி அறிந்திருந்தாலும் விஷயம் மித்தையென்கிற அபரோக்ஷபுத்தி ஞானிக்கேயுண்டாகிறதே தவிர அஞ்ஞானிக்குண்டாகிறதில்லை. ஆனதால் அஞ்ஞானிக்கு விஷயத்திலுள்ள பரோக்ஷமான மித்தியாபுத்தியால் அபரோக்ஷமான சத்தியபிராந்தி நிவிர்த்தியாகிறதில்லை. இவ்விதமாக அஞ்ஞானிக்கு விஷயத்தில் விராகமுண்டாகும்போது பரோக்ஷ மித்தியாபுத்தியிருக்கிறது. ஆனால் அதைவிட அபரோக்ஷசத்தியபுத்தி பிரபலமாயிருக்கிறது. ஆகையால் அஞ்ஞானிக்குப் பரோக்ஷமித்தியாபுத்தி விராகத்துக்கு ஹேதுவன்று. ஆனால் பிரபலமான சத்தியபுத்தியால் விஷயத்தில் ராகமுண்டாகிறது. விராகமுண்டாகும்போது அதற்கு மித்தியாபுத்தி காரணமன்று. விஷயத்தில் தோஷதிருஷ்டியால் விராகமுண்டாகிறது. ஞானி சர்வப்பிரபஞ்சத்தையும் அபரோக்ஷமாய் மித்தையாக அறிகிறான். அபரோக்ஷமித்தியாபுத்தியால் அபரோக்ஷசத்தியபுத்திநிவிர்த்தியாய்விடுகிறது. ஆகையால் ராகத்துக்கு ஹேதுவான விஷயத்திலுள்ள சத்தியபுத்தி ஞானிக்கிருக்கவில்லை. விராகத்துக்குஹேதுவான விஷயத்தில் மித்தியாபுத்தி ஞானிக்கிருக்கிறது. ஞானிக்கு விஷயத்தில் சத்தியபுத்தி மறுபடியும் உண்டானால் ராகமும் மறுபடியுமுண்டாகி விராகம் நிவிர்த்தியாய்விடும். அபரோக்ஷமாய் மித்தையென்றறிந்தபதார்த்தத்தில் மறுபடியும் சத்தியபுத்தியுண்டாகிறதில்லை. அபரோக்ஷமாய் மித்தையென்றறிந்த ரஜ்ஜுவிலுள்ள சர்ப்பத்தினிடத்தில் சத்தியபுத்தி மறுபடியும் உண்டாகாததுபோல் ஞானிக்கு மறுபடியும் சத்தியபுத்தியுண்டாகிறதில்லை. இவ்விதமாக ஞானிக்கு ராகஉற்பத்தியும் விராகநிவிர்த்தியும் உண்டாகிறதில்லை. ஆனதால் ஞானியின் விராகம் திடமாயிருக்கிறது. தோஷதிருஷ்டியால் அஞ்ஞானிக்குண்டாகும் விராகம் நிவிர்த்தியாயவிடும். ஏனெனில் எந்தப்பதார்த்தத்தில் தோஷதிருஷ்டியுண்டாகிறதோ அந்தப்பதார்த்தத்திலேயே இதரகாலங்களில் நல்லபுத்தியுமுண்டாகிறது. எல்லாபுருஷர்களுக்கும் பசுதர்மத்தின் முடிவில் ஸ்திரீ

மினிடத்தில் தோஷதிருஷ்டியுண்டாகிக் காலாந்தரத்தில் மறுபடியும் நல்லபுத்தியுண்டாவதுபோலும். இவ்விதமாகத் தோஷதிருஷ்டி நீங்கும்போது அஞ்ஞானியின் விராகமும் நீங்கிப்போம். ஆனதால் அஞ்ஞானிக்குத்திடமான விராகமுண்டாகிறதில்லை. இவ்விதமாக ராகமும் விராகமும அஞ்ஞானிக்கும் ஞானிக்கும்சின்னங்களாய்ச்சொல்லப்பட்டன.

541. வேறு சின்னங்களையும் சொல்லுகிறேன். சிஷனே, வீட்டின்பேரில் யானைமுதலியவைகளின் மூர்த்திகள் இருப்பதுபோல் பந்தமோக்ஷங்களுக்கு இருப்பிடங்களாகிற அஞ்ஞானி ஞானிகளின் அந்தக்கரணங்களில் சாக்ஷ்யசாக்ஷியென்னும் மூர்த்திகள் இருக்கின்றன. அஞ்ஞானியின் அந்தக்கரணத்தில் சாக்ஷ்யரூபமூர்த்தியும் ஞானியின் அந்தக்கரணத்தில சாக்ஷிரூபமூர்த்தியும் இருக்கின்றன. சாக்ஷிக்கு விஷயமான பிரபஞ்சத்துக்குச் சாக்ஷ்யமென்று பெயர். சாக்ஷ்யரூபமூர்த்தி மலினமாயும் சாக்ஷிரூபமூர்த்தி சுத்தமாயுமிருக்கின்றன. 'இவைகளை யூகித்தறிந்து பார்த்தவன் பூர்ணானந்தத்தை யடைகிறான்.' சஞ்சலப்பிரமையை நிஜமென வெண்ணுகிறவன் துக்கமாகிற கிணற்றில் முழுகுகிறான் அசலப்பிர்ம்மத்தின் நிஜஸ்வரூபத்தை யறிகிறவன் ஆனந்தஸ்வரூபத்தை யடைகிறான்.

## மகாவாக்கியானுசாரஞானம் (542—596)

542. ஞானஸ்வரூபம் இதர[81] சாஸ்திரங்களில் அநேகப்பிரகாரமாக அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. ஆனதால் மகாவாக்கியானுசாரமாக ஞானஸ்வரூபத்தைச் சொல்லுகிறேன். சிஷனே, ஜீவேஸ்வரர்களிடத்திலுள்ள அவித்தை மாயை இப்பாகங்களை விட்டு அவைகளின் பேதப்பிரதீதியை நீ நீக்கிவிடு. ஜீவேஸ்வரர்களிடத்திலுள்ள சேதனபாகம் பேதமற்றதென்றறி. இதனால மகாவாக்கியத்தில் பாகத்தியாகலக்ஷணையால் ஜீவேஸ்வரர்களொன்றென அறியத்தக்கதென்று சித்திக்கிறது.

543. பாகத்தியாகலக்ஷணங்களை மேல் பிரஸ்தாபித்திருக்கிறபடியால் அவைகளின் முழுவரலாறுந் தெரியும்பொருட்டு லக்ஷணைகளின் பேதங்களைச் சொல்லுகிறேன். புத்திமானான பண்டிதன் மூன்றுவிதமா

81. சாங்கிய நையாயிக முதலிய.

ன லக்ஷணங்களை யறிகிறான். அவைகளாவன ஜஹற்லக்ஷணை, அஜஹற்லக்ஷணை, ஜஹதஜஹற்லக்ஷணைகளாம். மகாவக்கியத்தில் முதலிரண்டு லக்ஷணைகளும் பொருந்தமாட்டா. பாகத்தியாகலக்ஷணையால் நிஜரூபமான பிர்ம்மஸ்வரூபம் பார்க்கப்படும்.

544. சீஷனுடைய கேள்வி:— சாமானியஞானத்துக்குப்பிறகு விசேஷஞானமுண்டாகும். சாமானியமாய்ப் பிராமணனென்றறிந்தபிறகு அவனுடைய விசேஷஞானமுண்டாவதுபோல்[82] லக்ஷணையின் சாமானியஞானத்துக்குப்பின் ஜஹற் முதலியவைகளின் விசேஷஞானமுண்டாகும். சாமானியஞானமன்றியில் விசேஷஞானமுண்டாகமாட்டாது. ஸ்வாமின், லக்ஷணமென்பது யாது? இதை அடியேன் அறியவில்லை. ஆனதால் லக்ஷணையின் சாமானியரூபத்தைக் காண்பித்துப் பிறகு ஜஹற் முதலியவைகளின் பேதத்தைச் சொன்னால் விசேஷமாயிருக்கும். ஆகையால் தனித்தனியேச் சொல்லியருள்க.

545. குரு உத்தரம்:—சீஷனே, ஏகாக்கிரசித்தத்துடன் நான் சொல்வதைக் கேள். லக்ஷணைகளையும் அவற்றின் பேதங்களையும் அறிவாய். பதத்துக்கும் அர்த்தத்துக்குமுள்ள சம்பந்தம்[83] விர்த்தியெனப்படும். இ

---

82. தமிழன், தெலுங்கன், வைஷ்ணவன் என.

83. கன்றுக்கும் பசுவுக்கும் சம்பந்தமிருக்கிறது, அனேக பசுக்களின் மத்தியிலிருக்கிற தன் தாயைப்பகுத்தறிகிறது. சம்பந்தமன்றியில் சன்றுகுட்டி பகுத்தறியமாட்டாது. ஆகையால் மாட்டுக்கும் கன்றுக்கும் ஜன்யஜனகபாவசம்பந்தமிருக்கிறதாக அறியத்தக்கது. இந்த ஜன்யஜனகபாவரூபமான ஞானத்துக்கு ஹேதுவாயிருக்கிற கன்றுக்குட்டியின் பிரவிர்த்தியும் சமபந்தமென்னப்படும். இதுபோல் சப்தத்துக்குத்தன் அர்த்தத்தில் யாதொரு பிரவிர்த்தியுண்டோ அதுவும் யாதொரு சம்பந்தமுமன்றியிலுண்டாகமாட்டாது. ஆகையால் சப்தத்துக்குத்தன் வாச்சியார்த்தத்துடன் வாச்சியவாசகபாவசம்பந்தமும் லக்ஷியார்த்தத்துடன் லக்ஷியலக்ஷணபாவசம்பந்தமும் இருக்கின்றன. இந்தச்சம்பந்தத்தின் அர்த்தத்திற் பிரவிர்த்தியும் சம்பந்தமெனப்படும். இந்தச் சம்பந்தம் சப்தத்தின் விர்த்தியென்று சொல்லப்படும். இந்த விர்த்திரூப சம்பந்தம் சிலவிடங்களில் சக்திரூபமாயும் சிலவிடங்களில் லக்ஷணரூபமாயுமிருக்கிறது. விர்த்தி சப்தத்துக்கு அநேக அர்த்தங்கள் ஏற்பட்டிருந்தாலும் இந்தப் பிரகரணத்தில் சப்தத்துக்கும் அதின் அர்த்தத்துக்குமுள்ள சம்பந்தமே அறியத்தக்கது,

து இருவகைத்து. ஒன்று சக்திவிர்த்தி[84] மற்றொன்று லக்ஷணாவிர்த்தி[85]. இவைகளின் அர்த்தங்களை விவேகத்துடன் கேட்பாயாக.

---

84. சப்தத்திலுள்ள அர்த்தத்தையறியும்படிச்செய்யும் சாமர்த்தியம் சப்தத்தின் சக்தி யென்னப்படும். இந்தச் சக்தி விர்த்திகாரிய காரணங்களின் மத்தியிலிருக்கும் சமவாய சம்பந்தம் அல்லது தாதாத்மிய சம்பந்தம்போல் சப்தத்துக்கும் அர்த்தத்துக்கும் இரண்டுக்கும் மத்தியிலிருக்கிறது. ஆகையால் இந்த சக்தி சப்தத்துக்கும் சப்தார்த்தத்துக்குமுள்ள சாக்ஷாத் சம்பந்தமாகச்சொல்லப்படுகிறது. இந்த ஸாக்ஷாத் சம்பந்தரூப சக்திவிர்த்தி யோகரூட யோகாரூட வென மூவகையாம். (1) அந்த சப்தத்தில் தன் அவயவங்களுடைய சம்பந்தத்தினால் அர்த்தஞானமுண்டாகும்படிச் செய்ய சாமர்த்தியமிருக்கிறதோ அந்தச்சப்தத்துக்குத் தன் அர்த்தத்துடன் யோக சக்திரூப சம்பந்தமிருக்கின்றது. (உ—ம்) பாதரக்ஷையென்னும்பதத்தில் பாதம் ரக்ஷை யென்கிற இரண்டு அவயவங்களுண்டு. இவைகளின் சேர்க்கையால் முட்களினின்றும் காப்பாற்றுகிறதான செருப்பு, ஜோடு, கட்டையாகிற அர்த்தஞானமுண்டாகிறது. ஆகையால் பாதரக்ஷையென்னும் சப்தத்துக்கும் அதின் அர்த்தத்துக்கும் யோகசக்தி ரூப சம்பந்தமிருக்கிறது. (2) எந்த பதத்தின் அவயவங்களால் அர்த்தஞானமுண்டாகிறதில்லையோ ஆனால் அதற்கு இதுதான் அர்த்தமென்று யாதொரு சங்கேதமிருக்கிறதோ அந்தப்பதத்துக்கு அர்த்தத்துடன் ரூடிசக்திரூப சம்பந்தமிருக்கிறது. இதுவே சப்தத்தின ரூடி விர்த்தி என்று சொல்லப்படுகிறது. (உ—ம்) குல்லாயென்கிறபதத்தில் அதின் அவயவத்தினின்றும யாதொரு அர்த்தஞானமுண்டாகிறதில்லை. ஆனால குல்லாயென்கிற பதத்தினால் தலையைமறைக்கிறரூபமான அர்த்தம் உலகத்தில் சங்கேதத்தால் விளங்குகிறது. இந்தக்குல்லாய் சப்தத்துக்கு அர்த்தத்துடன் ரூடி சக்திரூப சம்பந்தம் இருக்கிறது. (3) எந்தப்பதத்தின் அவயவத்தாலும் அர்த்தமுண்டாகிச்சங்கேதத்தாலும் அர்த்தம் உண்டாகிறதோ அந்தப்பதத்துக்கு அர்த்தத்துடன் யோகாரூடி சக்திரூபசம்பந்தமிருக்கின்றது. (உ—ம்) அங்கரகாபதத்தில் அங்கம் ரக்ஷா என இரண்டு அவயவங்கள இருக்கின்றன. இவைகளின் சேர்க்கையால் சட்டை என்னும் அர்த்தம் விளங்குகிறது. பாதரக்ஷை சரீரத்தின் ஓரங்கத்தை ரக்ஷித்தாலும் அங்கரகா என்று சொல்லப்படுகிறதில்லை. ஆகையால் அங்கரகா என்னும் பதத்தில் இரண்டு சக்திசம்பந்தமுமிருக்கிறது. இவ்விதமாகச்சப்தத்தின் சக்தி விர்த்தி மூன்றுவிதமாயிருக்கிறது. இதற்கேமுக்கியாவிர்த்தியென்றும்பெயர்.

85, லக்ஷணாவிர்த்தி:— சப்தத்தின் சக்திவிர்த்திரூபசம்பந்தத்தால் அறியப்படுகிறசப்தத்தின் சாக்ஷாத்சம்பந்தமான அர்த்தம் சக்கியார்த்தம் என்னப்படும். இந்தச்சக்கியார்த்தத்துக்குச்சம்பந்தமாயும் வக்தாவினுடைய தாற்பரியத்துக்கு விஷயமாயுமிருக்கிற வேறு அர்த்தத்தில் சப்தத்துககு யாதொரு பரம்பராசம்பந்தமுண்டோ அது சப்தத்தின் லக்ஷணாவிர்த்தி என்னப்படும். இந்தலக்ஷணாவிர்த்தியால் அறியக்கூடிய அர்த்தம் லக்ஷியார்த்தமென்னப்படும், சக்கியார்த்தமூலமாகவுண்டாகும் சம்பந்தம் பரம்பராசம்பந்தம் என்னப்படும்.

546. **நையாயிகரீதிப்படி சக்தி லக்ஷணம்:—** (கட) பதத்தைக் கேட்கிறதினால் (கலசரூப) ஒரு பொருள் எல்லாருக்கும் விளங்குகிறது. இது ஈஸ்வர இச்சை. நியாய சாஸ்த்திரத்தில் இந்த இச்சைக்கு சக்தி யென்று பெயர்.

547. **சித்தாந்தப்படிச்சக்திலக்ஷணம்:—** கட பதத்தைக் கேட்கிறவனுக்குக் கலச ரூபப் பொருளின் ஞானமுண்டாகும்படிச் செய்யும் சாமர்த்தியமே கடபதத்தின் சக்தி. இதுபோல் படபதத்தைக் கேட்கிறவனுக்கு வஸ்திரரூபப் பொருளின் ஞானமுண்டாகும்படிச் செய்யும்சாமர்த்தியமே படபதத்திலுள்ள சக்திவிர்த்தி. இப்படியே எல்லாபதங்களிலும் அறியவேண்டியது. உதாரணம்:— நெருப்பில் அதனுடன் சேரும் பதார்த்தத்தைத் தகிக்கும் சாமர்த்திய ரூபசக்தி இருக்கிறதுபோல், சுரோதாவின் கர்ணேந்திரியத்துடன் சேரும் வஸ்துவின் ஞானத்தைக் கொடுக்கும் பதத்திலுள்ள சாமர்த்தியம் சக்தியெனப்படும். சாமர்த்தியம் பலம் ஜோர் இவைகள் பரியாயபதங்கள். அக்கினியில் தகிக்கிற சக்தி இருக்கிறதுபோல் ஜலத்தில் நனைக்கிற சாமர்த்தியமும் தாகத்தைத்தணிக்கும் சாமர்த்தியம் ஒன்றாய் ஓட்டுவிக்கும் சாமர்த்தியமும் உள. இச்சாமர்த்தியமே சக்தியெனப்படும். இவ்விதமாக எல்லா பதார்த்தங்களிலும் அதன் அதன் காரியத்தைச்செய்யும் சாமர்த்தியமிருக்கிறது. இதுவே சக்தி. இதுவேதத்தின் சித்தாந்தம். இதை நிச்சயமாய் மனதிற் கொள்ளுவாயாக. நியாய சித்தாந்தம் தள்ளத்தக்கது.

548. **ஆக்ஷேபம்:—** அக்கினியில் அதன் சொரூபத்துக்கு வேறாக யாதொரு சக்தியுங்காணப்படவில்லை. தகிப்பதற்கேதுவான அக்கினியிலுள்ள சாமர்த்தியமே அக்கினியின் சக்தியென்று முன் (547) சொன்னது சரியன்று. ஏனெனில் தகிக்கும் காரணம் கேவலம் அக்கினியில் தானிருக்கிறது. பிரசித்தமல்லாத சாமர்த்தியம் அக்கினியில் இருக்கிறதாகப் பாவித்து அதனிடத்தில் காரணதையைக் கல்பிப்பதிலும், பிரசித்தமான அக்கினியிலுள்ள காரணதையைத் தியாகம் செய்வதிலும் யாதொரு பிரயோஜனமில்லை. எப்படித் திர்ஷ்டாந்தத்தில் சக்தி சம்பவிக்கவில்லையோ அப்படிப் பதத்தினிடத்திலும் அக்ஷர சமுதாயமாகிற பதத்தின் ஸ்வரூபத்துக்கு வேறாகச் சக்தி விளங்குகிறதில்லை. அச்சக்திக்குப் பிரயோஜனமுமில்லை. ஆகையால் ஈசுவர இச்சாரூபமான நியாய மதத்திற் சொல்லிய சக்தியே.என் புத்திக்கு ஒத்திருக்கிறது.

549. **சமாதானம் (549—51):—** நண்பனே, பிரதிபந்தங்களிருந்தால் நெருப்பு எரிக்கிறதில்லை. உத்தேஜகங்கள் சமீபத்தில் இருந்

தால் நெருப்புடன் சம்பந்தப்படும் பதார்த்தம் பிரதிபந்தமிருந்தாலும் எரிக்கப்படுகிறது. சக்தியன்றியில் கேவலம் அக்கினியே தகிக்குங் காரணமானால் எப்போதும் அதாவது உத்தேஜகங்கள் சகித பிரதிபந்தங்களிருக்கும்போதும், பிரதிபந்தமில்லாதகாலத்தில் போல உத்தேஜகங்கள் ரகிதப் பிரதிபந்தங்களிருக்கும்போதும், நெருப்பு எரிக்கவேண்டும். ஏனெனில் எரிக்குங்காரணமான கேவலம் அக்கினி அக்காலத்திலும் இருக்கிறது. நம்முடைய மதத்தில் இந்த தோஷமில்லை. ஏனெனில் நம்முடைய மதத்தில் அக்கினியின் சக்தி அல்லது சக்தி சகித அக்கினி எரிக்க ஹேதுவாயிருக்கிறது; கேவலம் அக்கினிமட்டும் ஹேதுவாயில்லை. பிரதிபந்தமிருக்கும்போது பிரதிபந்தத்தால் அக்கினி நாசமாகாவிட்டாலும் அல்லது மறைபடாவிட்டாலும் அக்கினியின் சக்தி நாசமாகிறது, அல்லது மறைபடுகிறது. ஆனதால் எரிப்பதற்கேதுவான சக்தி அல்லது சக்திசகித அக்கினி இல்லாததினால் பதார்த்தமெரிக்கப்படுகிறதில்லை. எவ்விடத்தில் பிரதிபந்தத்துக்குச் சமீபத்தில் உத்தேஜகமிருக்கிறதோ அவ்விடத்தில் பிரதிபந்ததால் அக்கினியின் சக்தி நாசமடைந்தாலும் அல்லது மறைபட்டாலும் உத்தேஜகத்தால் மறுபடியும் உண்டாகிறது அல்லது வெளிப்படுகிறது. ஆனதால் பிரதிபந்தங்களிருந்தாலும் உத்தேஜகங்களுடைய மகிமையால் எரிக்குஞ் சக்தி அல்லது சக்திசகித அக்கினி விளங்குகிறது. அதனால் பதார்த்தம் எரிக்கப்படுகிறது. இவ்விதமாகப் பிரதிபந்தத்தால் நாசமடைவதும் உத்தேஜகத்தாலுண்டாவதுமான அக்கினியின் சக்தி எரிப்பதற்கு ஏதுவாயிருக்கிறது; காரியத்துக்கு விரோதமாயிருப்பது பிரதிபந்தமென்னப்படும். பிரதிபந்தமிருந்தும் காரியத்துக்குச் சாதகமாயிருப்பது உத்தேஜகமென்னப்படும். அக்கினிவிஷயத்தில் மணிமந்திரஔஷதங்கள் பிரதிபந்தங்களையும் உத்தேஜகங்களாயுமிருக்கின்றன. மணியாவது மந்திரமாவது ஔஷதமாவது சமீபத்தில் இருந்தால் பதார்த்தம் எரிக்கப்படுகிறதில்லை. இவை பிரதிபந்தங்களாம். எந்த மணிமந்திரஔஷதங்களின் சன்னிதானத்தில் பிரதிபந்தங்களிருந்தும் பதார்த்தம் எரிகப்படுகிறதோ அவைகள் உத்தேஜகங்களாம்.

550. சீஷனே அக்கினியிற்போல் ஜலமுதலியசகலபதார்த்தங்களிலுமுள்ள சக்தியை நீ யறி. சக்தியன்றியில் எந்த ஹேதுவினாலும் எந்தக்காரியமுமாகிறதிலலை. இவ்விதமாகச் சக்தியின் பிரயோஜனஞ் சொல்லப்பட்டது.

551. சக்தியின் அனுபவம்:— அக்கினிக்கு வேறாகச் சக்திகாணப்படவில்லை யென்று முன் (548) சீஷன் கேட்டகேள்விக்குச் சமாதானஞ் சொல்லுவதற்காகச் சக்தியின் அனுபவத்தைக் காண்பிக்கிறேன்: 'இப்

போது இதிற் சக்தியில்லை' 'மறுபடியுஞ் சக்தி யுண்டாயிற்று' என அநுபவம் பிரத்தியக்ஷமாயிருக்கிறது. சித்தாந்தரீதிப்படிச் சக்தியின் சொரூபமும் பிரமாணமும் நிரூபணஞ்செய்யப்பட்டன. இனி இதரமதங்களைக் கண்டிக்கிறேன்.

552. **நியாயமதகண்டனம்:—** பதசக்தி[86] ஈஸ்வரஇச்சாரூபமென்று சொன்னது சரியன்று. ஏனெனில் ஈஸ்வரனுடைய இச்சை ஈஸ்வரனுடைய தர்மமாயிருக்கிறது. ஆனதால் அதுஈஸ்வரனிடத்திலிருக்கிறது. ஆகையால் ஈஸ்வரஇச்சையே பதசக்தியென்று சொல்வது சரியன்று. சக்தி பதத்தின் தர்மமனால் பதத்தின் சக்தியென்று சொல்லக்கூடும். ஆனதால் பதத்தின் சாமர்த்தியரூபமே பதசக்தியாம். ஈஸ்வரனுடைய இச்சை பதத்தின் சமீபத்திலில்லாததினால் அதைப் பதசக்தியெனச் சொல்வது சரியன்று.

553. **வையாகர்ண ரீதிப்படிச் சக்திலக்ஷணம்:—** பதத்தினிடத்திலுள்ள அர்த்தத்தின் யோக்கியதை அதாவது பதார்த்தஞானமுண்டாகும்படிச் செய்யும் ஹேதுவே பதத்தின் சக்தியாம். கடபதத்தில் கலசரூப அர்த்தஞானமுண்டாகும்படியான யோக்கியதையிருக்கிறது. இதுவே சக்தி. இது ஹரிபண்டிதரால் செய்யப்பட்டிருக்கிற வையாகர்ணபூஷணக்கிரந்தத்திலுள்ள செய்யுள்களிற் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது.

554. **வையாகர்ணமதகண்டனம்:—** சீஷனே வையாகர்ண மதத்தில் ஒருபிரபலமான தோஷமிருக்கிறதைக்கேள். அர்த்தஞானமுண்டாகும்படிச் செய்யும் யோக்கியதைக்குச் சக்தியென்று சொல்லும் வையாகர்ணிக்கோர்கேள்வி:— உன்னுடைய மதத்தில் பதத்திற் சாமர்த்தியமிருக்கிறதா இல்லையா? சாமர்த்தியமிருக்கிறதென்று சொல்லும்பக்ஷத்தில் நம்முடைய மதத்தின் ரீதிப்படி சக்திபலத்தால் அது சித்திக்கிறது. வையாகர்ணி பதத்தில் சாமர்த்தியமிருக்கிறதாகச் சொல்லும்பக்ஷத்தில் இந்தலோகப்பிரசித்த சாமர்த்தியரூபசக்தியே பதசக்தியாகக் கொள்ளவேண்டியதேதவிரப் பதத்தில் அர்த்தஞானத்தையுண்டுபண்ணும்படியான யோக்கியதையையே சக்தியாகக்கொள்ளத்தகாது. இதன் கருத்தென்னவெனில் எவன் பதத்திற் சாமர்த்தியத்தை யங்கீகரிக்கிறானோ அச்சாமர்த்திய

---

86. கடத்தைச்செய்யவேண்டுமென்கிற குயவனுடைய இச்சை குயவன் தர்மமேதவிரக்கடத்தின் தர்மமன்று, இதுபோல் பதத்தினுடைய அர்த்தம் விளங்கும்படியான ஈஸ்வரஇச்சை ஈஸ்வரனுடைய தர்மம், ஆகையால் அது ஈஸ்வரனுடைய சக்தியாயிருக்கின்றது, பதத்தினுடைய தர்மமன்று, ஆகையால் அதின் சக்தியுமன்று.

த்திற்கு வேறாகச் சக்தியைக் கொள்வது யுக்தமன்று. சாமர்த்தியரூபமே சக்தியெனக் கொள்வது யுக்தம். ஏனெனில் சாமர்த்தியம் பலம் ஜோர் சக்தி இந்நான்கும் ஒரே வஸ்துவுக்கும் பெயர்களாயிருப்பது லோகப்பிரசித்தம். ஜோரில்லாதவனைப் பலமில்லாதவனென்றும் அல்லது சாமர்த்தியமில்லாதவன் என்றும் அல்லது சக்தியில்லாதவனென்றும் சொல்லுகிறார்கள். மேலும் வறுக்கப்பட்ட விதையைப் பார்த்து இதனிடத்தில் முளைக்கும்படியான சாமர்த்தியமில்லை, பலமில்லை, சக்தியில்லை, அல்லது ஜோரில்லையென்று சொல்லுகிறார்கள். இவ்விதமாகச் சாமர்த்தியமும் சக்தியுமொன்றென்பதுலோகப்பிரசித்தமாயிருக்கின்றது. அக்கினியினிடத்திலும் சாமார்த்தியரூபமே சக்தியென்பது நிச்சயம் ஆகையல் பதத்திற் சாமர்த்தியரூபமே சக்தியென நினைப்பது யுக்தம். பதத்தில் சாமர்த்தியத்தை யங்கீகரித்து அதற்கு வேறான யோக்கியதையைச் சக்தியாகக் கொள்வது உலகவழக்குக்கு விரோதமேதவிர வேறு பயனில்லை. கேவலம் உலகவழக்குக்கு விரோதயாகிறதே பயனாகும்.

555. சாமர்த்தியத்தையே யோக்கியதையாக வையாகர்ணிசொல்லும்பக்ஷத்தில் நம்முடைய மதயேசித்திக்கிறது.

556. சாமர்த்தியத்தை யங்கீகரித்தாற் சாமர்த்தியரூபசக்தி பதத்திலிருக்கக்கூடும். இச்சாமர்த்தியத்தை நாம் அங்கீகரிக்கவில்லை. ஆனதால் அர்த்தஞானத்தை யுண்டுபண்ணக்கூடிய யோக்கியதையே பதத்தின் சக்தியென்று வையாகர்ணிசொல்லும்பக்ஷத்தில்அவனைக் கேட்கவேண்டியதாவது:—சாமர்த்தியம் கேவலம் பதத்திலில்லையா அல்லது நெருப்புமுதலிய சகலபதார்த்தங்களிலுமில்லையா. இரண்டாவது பக்ஷத்தில் நெருப்பு முதலியபதார்த்தங்களில் சாமர்த்தியரூப சக்தி யிருப்பதாகப் பிரதிபாதித்தவிடத்தில் (549) சொன்னயுக்தியால் இந்த ஆக்ஷேபங் கண்டிக்கப்படுகிறது. பதத்திற் சாமர்த்தியமங்கீகரிக்கப்படாதபக்ஷத்தில் அசமர்த்தபதம் அர்த்தஞானத்தைக் கொடுக்கயோக்கியமுள்ளதென்று நிச்சயமாகும். இது அசங்கதம். ஏனெனில் பதம் அசமர்த்தமென்றும் அர்த்தஞானத்தைக்கொடுக்கத்தக்கதென்றும் சொல்வது நபும்சகனுக்கு அமோகவீரியமிருக்கிறதாகச் சொல்வதுபோல் விருத்தமாயிருக்கும். சாமர்த்தியத்தோடுகூடியது சமர்த்தம் எனவும் சாமர்த்தியமில்லாதது அசமர்த்தமெனவும் சொல்லப்படும். அசமர்த்தத்தால் யாதொரு காரியமும் ஆகிறதில்லையென்பது உலகப்பிரசித்தமாயிருக்கிறது. ஆனதால் அசமர்த்தபதத்தால் அர்த்தஞானரூபகாரியமுண்டாகமாட்டாது. ஆகையால் பதத்தில் சாமர்த்தியத்தை ஒப்புக்கொள்ளத்தக்கது. சாமர்த்தியத்தை யொப்புக்கொண்டால் சக்தியும் ஒப்புக்கொள்ளப்பட்டதாகும். இவ்விதமாக அர்த்தஞானத்தை யுண்டுபண்ணுகிறயோக்கியதை

பதசக்தியென்று, சாமர்த்தியரூபமே சக்தி. வையாகரணமதத்தில் வேறு தோஷங்களைப் பார்க்கவேண்டுமானால் தர்ப்பணக்கிரந்தத்தைச் சோதிக்க வேண்டியது. கண்டனங் கடுமையாயிருப்பதால் அக்கிரந்தத்தினின்று இதியெடுத்து எழுதப்படவில்லை.

557. பட்டர்மதப்படிச்சக்திலக்ஷணம்[87] (557—61):— பதத்துக்கு அர்த்தத்துடனுள்ள தாதாத்மியசம்பந்தம்[88] சக்தியென்று பட்டர்மதத்தை

---

87. சங்கரதிக்விஜயத்தில் குமாரிலபட்டரென்றும் பட்டபாதரென்றும் சொல்லப்பட்டவரும் மண்டனமிசிரருடையவும் பிரபாகரருடையவும் குருவாயிருப்பவருமே இவ்விடத்தில் பட்டரென்பதால் கிரகிக்கத்தக்கது.

88. அபாவம், சாதிருசியம், இவைகளுக்கு வேருயும் பிரதியோகியை அபேக்ஷித்துக்கொண்டும், ஞானத்துக்கு விஷயமாயிருப்பது சம்பந்தம் என்று சொல்லப்படும். எதினிடத்தில் எது சேருகிறதோ அப்படிச்சேர்ந்த வஸ்து சம்பந்தத்துக்கு அனுயோகி என்றும் சேரும் வஸ்துசம்பந்தத்துக்குப்பிரதியோகி என்றும் சொல்லப்படும். இந்த சம்பந்தம் அநேகவிதமாயினும முக்கியமாய் (1) சம்யோகம். (2) சமவாயம். (3) தாதாத்மியம். என மூன்று சம்பந்தங்கள் சொல்லப்படுகின்றன.

I. இரண்டு திரவியங்களின் சம்பந்தம் சம்யோகசம்பந்தமாம். இது மூவகைத்து. (1) கர்மஜசம்யோகம். (2) சம்யோகஜசம்யோகம். (3) சஹஜசம்யோகம். எதின் உற்பத்தியில் கிரியை அசமவாயி (நிமித்த) காரணமாயிருக்கிறதோ அது கர்மஜசம்யோகம். இது இருவகை. (1) அன்னியதரகர்மஜம். (2) உபயதரகர்மஜம். ஒன்றின் கிரியையால் உண்டாவது அன்னியதரகர்மஜம். பக்ஷிபரக்கிறதினால் பக்ஷிக்கும் விருக்ஷத்துக்கும் உண்டாகும் சம்பந்தம் போலும். இரண்டு ஆடுகள் சேருவது உபயதரகர்மஜம். சம்யோகரூப அசமவாயிகாரணத்தால் உண்டாவது சம்யோகஜசம்யோகம். கையைமரத்தில்வைப்பதினால் சரீரத்துக்கும் மரத்துக்கும் உண்டாகும் சம்பந்தம் சம்யோகஜசம்யோகமாம். ஜன்மத்திலேயே இருக்கும் சம்பந்தம் சஹஜசம்யோகம். தங்கத்தில் பார்த்திவ பாகத்துக்கும் தைசஸபாகத்துக்குமுள்ள சம்பந்தம் சஹஜசம்யோகமாம்.

II. நித்தியசம்பந்தத்துக்கு சமவாயசம்பந்தம் என்று பெயர். நியாயமதத்தில் குணகுணிக்கும், ஜாதிவியக்திக்கும், கிரியை கிரியாவானுக்கும், காரணகாரியத்துக்கும் உள்ள சம்பந்தம் சமவாயமாம்.

III. நியாயமதத்தில் ஸ்வரூபசம்பந்தத்துக்குப்பெயர் தாதாத்மியம். பூர்வமீமாம்சத்தின் வார்த்திகக்காரரான பட்டருடையமதத்தில் ஸ்வல்பபேதத்தோடுகூடின அபேதத்துக்கு தாதாத்மியமென்றுபெயர். வேதாந்தசித்தாந்தத்தில்பேதாபேதங்களுக்கு விலக்ஷணமான சம்பந்தம் தாதாத்மியமாம். இதற்கே அனிர்வசனீயதாதாத்மியம் என்றும் பெயர். பேதத்துக்கு விலக்ஷணமென்றமையால் வா

யனுசரித்தவர்கள் சொல்லுகிறார்கள். இதை நீ அறி. இந்தத்தாதாத்மிய சம்பந்தம் பேதாபேதரூபமென்று சொல்லுகிறார்கள். அவர்களுடைய

---

ஸ்தவியத்தில் அபேதமும், அபேதத்துக்கு விலக்ஷணமென்றமையால் கல்பித பேதமும் கிரகிக்கப்படுகின்றன. ஆகையால் சித்தாந்தத்தில் கல்பிதபேதத்தோடுகூடிய வாஸ்தவிய அபேதத்துக்கு தாதாத்மியசம்பந்தம் என்றுபெயர். குணகுணீ ஆதிகளில் நியாயமதத்தில் சமவாயசம்பந்தம் சொல்லியிருக்க பட்டருடையமதத்திலும் வேதாந்தத்திலும் தாதாத்மியசம்பந்தம் சொல்லப்படுகிறது. தாதாத்மியசம்பந்தம் மூன்று வகைத்து, (1) சகஜதாதாத்மியம் (2) கர்மஜதாதாத்மியம் (3) பிராந்திஜதாதாத்மியம். (1) சித்து அகங்காரத்தில் பிரதிபிம்பித்து அந்த பிரதிபிம்பமும் அகங்காரமும் கூடித்தப்தாயப்பிண்டம் போல் ஏகரூபமாய் அந்தச்சித்தைப்போலவேதோற்றும். அந்த சித்பிரதிபிம்பத்துடன் கூடிக்கொண்டிருக்கும் அகங்காரத்திற்கே சகஜதாதாத்மியமென்று பெயர். பிறக்கும்போதே இரண்டும் கூடிப்பிறந்தபடியினால் இவ்விரண்டின் தாதாத்மியமே சகஜதாதாத்மியமென்று சொல்லப்படுகிறது. (2) சித்பிரதிபிம்பத்துடன் கூடிக்கொண்டு சித்தைப்போலவே தோற்றப்பட்ட அகங்காரத்திற்கு ஸ்தூலசரீரத்துடன் சம்பந்தம் வந்தபோது கர்மஜதாதாத்மியம் என்று சொல்லப்படும். சாக்கிரத்போகப்பிரதானமானகர்மம் பிறந்தபோது அந்த கர்மஜதாதாத்மியம் பிறக்கின்றது, அந்தக்கர்மம் நசித்தால் அந்தக்கர்மஜதாதாத்மியமும் நசித்துப்போகின்றது, கர்மமுண்டானால் கர்மஜதாதாத்மியமுண்டு, கர்மமில்லாவிட்டால் கர்மஜதாதாத்மியமில்லை. சாக்கிரசுஷுப்திகளைப்பார்க்க. (3) நான் பிராமணன் சூத்திரன் பிர்ம்மசாரி சன்னியாசி என்கிற சித்தவிர்த்தியுடன் கூடியிருக்கிற அகங்காரத்திற்கு அஞ்ஞசப்தார்த்தமான சாட்சியுடன்கூடியதாதாத்மியம் பிராந்திஜதாதாத்மியமாம்: சர்வாபீஷ்டமான ஆத்மச்சொரூபத்தை நானென்று அறியாமல் இப்படி பிராந்தியால் வந்தபடியால்இதற்கு பிராந்திஜதாதாத்மியமென்றுபெயர்வந்தது. நியாயமதத்தில்குணகுணியாதிக்ஸ்தலங்களில் சமவாயசம்பந்தஞ்சொல்லப்படும்போது வேதாந்தத்திலும்பட்டர்மதத்திலும்தாதாத்மியம்சொல்லப்படுகிறது. ஆனால்இவ்விரண்டு தாதாத்மியங்களுக்கும் பேதமுண்டு. கேவலபேதம் இருக்கும்போது தாதாத்மியஞ்சொல்வது சரியன்று. ஏனென்னில் அபேதப்பிரதீதிக்கு விஷயமானது தாதாத்மியமெனப்படும். கேவலபேதமிருக்குமிடத்தில் அபேதப்பிரதீதி சம்பவிக்கமாட்டாது. ஆகையால் தாதாத்மியசம்பந்தத்தில் அபேதம் வேண்டியதாயிருக்கிறது. மேலும் கேவலம் அபேதமிருந்தால் சம்பந்தமே சித்திக்காது. இரண்டு பதார்த்தங்களுக்குச்சம்பந்தஞ்சம்பவிக்கும். தன் சொரூபத்துடன் தனக்குச்சம்பந்தம் சம்பவிக்க

அபிப்பிராயமென்னவெனில் அக்கினியென்னும் பதத்துக்கும் அங்கார மென்னும் அர்த்தத்துக்கும் அத்தியந்தம் பேதமில்லை. அப்படியிருந்தா ல் எப்படி அக்கினிபதத்தால் அத்தியந்தம் பின்னமானஜலம் முதலியவை கள் பிரதீதியாகவில்லையோ அப்படி அக்கினிபதத்தால் அங்காரரூப அர் த்தமும் பிரதீதியாகக்கூடாது. பதத்துக்கு அத்தியந்தம் பின்னமான அ ர்த்தம் பிரதீதியாகிறதில்லை. பதத்துக்குத்தன்னர்த்தத்துடன் அத்தியந் தம் பேதம் இல்லாததுபோல் அத்தியந்தம் அபேதமுமில்லை. அத்திய ந்த அபேதம் வாச்சியவாசகங்களுக்கிருந்தால் அக்கினிபதத்தின் வாச்சிய மான அங்காரத்தால் முகம் சுடப்படுகிறதுபோல் அங்காரத்தின் வாசக மான அக்கினிபதத்தை யுச்சரிப்பதனுலும் முகம் சுடப்படவேண்டும். ஆனுல் பதத்தை யுச்சரிப்பதினுல் முகம் சுடப்படுகிறதில்லை. ஆகையால் அத்தியந்தம் அபேதமுமில்லை. ஆனுல் அக்கினிபதத்துக்கு அங்காரரூப அர்த்தத்துடன் பேதசகித அபேதமிருக்கிறது. பேதமிருப்பதால் முகம் சுடப்படுகிறதில்லை. அபேதமிருப்பதால் அக்கினிபதத்தால் ஜலமுதலிய வைகள்போல் அங்காரத்தின் பிரதீதியுண்டாகாமலிருக்கிறதில்லை. எ ப்படி அக்கினிபதத்துக்கு அங்காரரூப அர்த்தத்துடன் பேதசகித அபே தமிருக்கிறதோ அப்படி உதகம், தகம், ஜீவனம், இந்தப்பதங்களுக்கு ஜலரூப அர்த்தத்துடன் பேதசகித அபேதமிருக்கிறது. அத்தியந்தம் பேதம் இருந்தால் எப்படி உதகமுதலிய பதங்களுக்கு அத்தியந்தம் பின் னமான அக்கினிமுதலியவைகள் உதகம் முதலியபதங்களால் பிரதீதியாக வில்லையோ அப்படி ஜலரூப அர்த்தமும் உதகம் முதலியபதங்களால் பிர

---

மாட்டாது. ஆகையால் சம்பந்தமிருக்குமிடங்களில் எல்லாம் பேதமும் வேண் டியதாயிருக்கிறது. ஆகையால் தாதாத்மியசம்பந்தத்தில் பேதமும் வேண்டிய தாயிருக்கிறது. இவ்விதமாகப்பேதாபேதங்களிரண்டுமென்றியில் தாதாத்மியசம் பந்தம் ஒவ்வாது. பேதாபேதங்கள் ஒரேயிடத்திலிருப்பதும் விருத்தம். ஆ யினும் மேற்சொல்லியபடி கல்பிதபேதசகித வாஸ்தவ அபேதமாகிற தாதாத்மி யசம்பந்தம் ஒரேயிடத்தில் சித்திக்கும். இதுவே அநிர்வசனீயதாதாத்மியசம் பந்தம் என்னப்படும்.

தீதியாகக்கூடாது. பிரதீதியாகிறதினால் அத்தியந்தம் பேதமில்லை. மேலும் அத்தியந்தம் அபேதமுமில்லை. அப்படியிருந்தால் ஜலத்தால் முகத்தில் குளிர்ச்சியுண்டாகிறதுபோல் உதகம் முதலிய பதங்களை யுச்சரிப்பதனாலும் முகத்தில் குளிர்ச்சியுண்டாகவேண்டும். ஆனால் பதத்தினால் குளிர்ச்சியுண்டாகிறதில்லை. ஆகையால் அத்தியந்தஅபேதமில்லை. பேதசகித அபேதமிருப்பதால் இரண்டுதோஷங்களுமில்லை; இவ்விதமாக எங்கும் தன்வாச்சியத்துடன் வாசகபதத்துக்குப்பேதசகித அபேதமிருக்கிறது. இந்தப்பேதசகித அபேதத்தைப்பட்டரையனுசரித்தவர்கள் தாதாத்மியசம்பந்தமென்று சொல்லுகிறார்கள்; பேதாபேதமெனவும் சொல்வார்கள். இந்தப்பேதாபேதரூபதாதாத்மிய சம்பந்தமே சகலபதங்களிலுமுள்ள அதனதன் அர்த்தத்தைக்கொடுக்குஞ்சக்தியாம். தாதாத்மிய சம்பந்தத்துக்கு வேறாகச்சாமர்த்தியரூபசக்தி இல்லை. பேதாபேதத்தில யுக்தி சொல்லப்பட்டது.

558. இனிப்பிரமாணஞ்சொல்லுகிறேன்:— மாண்டூக்கியம் முதலிய வேதவாக்கியங்களில் ஓம் அக்ஷரம் பிர்ம்மமென்று சொல்லப்பட்டிருக்கிறது. வியாகரணரீதிப்படிப்பிரகாசரூபமாயும் எல்லாவற்றையுங்காப்பாற்றுவதாயுமிருக்கிறது ஓம் அக்ஷரத்தின் அர்த்தம். பிர்ம்மமிப்படியிருக்கிறது. ஆகையால் ஓம் அக்ஷரம் பிர்மமத்தின் வாசகம். பிர்ம்மம் வாச்சியம். வாச்சியவாசகங்களுக்குத் தங்களுக்குள் அத்தியந்தம் பேதம் இருந்தால் வாசக ஓம் அக்ஷரத்துக்கும் வாச்சியப் பிர்ம்மத்துக்கும் மாண்டூக்கியாதி உபநிஷத்துக்களில் அபேதஞ் சொல்லப்பட்டிராது. ஆனால் ஓம் அக்ஷரம் பிர்ம்மமென்று அபேதஞ் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் வாச்சிய வாசகங்களின் அபேதத்தில் வேதவசனம் பிரமாணம்.

559. மேலும் உலகவழக்கிலும் வாச்சியவாசகங்களின் பேதஞ் சித்திக்கிறது. எப்படியெனில் அக்கினி முதலியபதங்கள் வாக்கிலிருக்கின்றன. அங்காராதி இவைகளின் அர்த்தங்கள் வாக்குக்கு வெளியில் அடுப்பு முதலியவிடங்களில் இருக்கின்றன. இதுபோல் ஓமென்னும் அக்ஷரரூபபதம் வாக்கிலிருக்கிறது. அதின் அர்த்தமாகிற பிர்ம்மம் வாக்கிலில்லாமல் வாக்குக்கு வெளியில் அதாவது தன் மகிமையிலிருக்கிறது. பிர்ம்மம் வியாபகமாயிருப்பதால் வாக்கிற் பிர்ம்மாபாவமில்லாவிட்டாலும் பிர்ம்மத்தில் வாக்கிருக்கிறதேதவிர வாக்கிற்[90] பிர்ம்மமில்லை. இவ்விதமாகப்பதம் வாக்கிலும் அர்த்தம் வாக்குக்கு வெளியிலும் எல்லாருக்

---

90. சொல்பதேசத்திலிருப்பது வியாப்பியமெனப்படும். அதிகதேசத்

கும் விளங்குகின்றன. ஆகையால் பதத்துக்கும் அர்த்தத்துக்கும் பேதம் லோகப்பிரசித்தமாயிருக்கிறது. இவ்விதமாக வாச்சியவாசகங்களின் பேதத்தில் சர்வலோகாநுபவமும் பிரமாணமாயிருக்கிறது. அவைகளின் அபேதத்தில் வேதவசனம் பிரமாணமாயிருக்கிறது. ஆதலால் பதத்துக்கு அர்த்தத்துடன் பேதாபேதரூப தாதாத்மிய சம்பந்தம் அப்பிரமாணமன்று. ஆனால் பிரமாணசித்தமாயிருக்கிறது.

560. பிரசங்கத்துக்கு அன்னியஸ்தானங்களிலும் பேதாபேத தாதாத்மியசம்பந்தத்தை காண்பிக்கிறார். ரூபம்[91] ரஸம் கந்தம் முதலியவை குணங்களாம். இவைகளின் ஆசிரயம்[92] குணியெனப்படும். ரூபாதிகளின் ஆசிரயமான பூமி குணியாயிருப்பதுபோலும். அநேகங்களிலிருக்கிற ஒரேதர்மம் ஜாதியெனப்படும்.

உதாரணம்:— எல்லாப்பிராமணசரீரங்களிலும் ஒரு பிராமணத்துவமிருக்கிறது. எல்லாச்சூத்திரர்களிடத்திலும் சூத்திரத்துவமிருக்கிறது. எல்லா ஜீவர்களிடத்திலும் ஜீவத்துவமிருக்கிறது. புருஷர்களிடத்தில் புருஷத்துவம் இருக்கிறது. எல்லாக்கடங்களிலும் கடத்துவமிருக்கிறது. உலகத்திலெதற்குப்பிராமணத்துவம் சூத்திரத்துவம் முதலியவைகளைச்சொல்லுகிறார்களோ அதற்கே பிராமணர் சூத்திரர் முதலியஜாதிகளென்றுபெயர். ஜாதிக்கு ஆசிரயமான பிராமணன் முதலியவை வியக்தியென்னப்படுவான். மற்றவைகட்கும் இவ்வாறு கொள்க. போதல் வருதல் முதலியவை கிரியைகளென்னப்படும். இவைகளையுடையவன் கிரியாவான் அதாவது கிரியைக்காசிரயமானவன். இவ்வளவு பதார்த்தங்களுக்கும் தாதாத்மியசம்பந்தமிருக்கிறதென்பதை நீயறிவாயாக.

---

திலிருப்பது வியாபகமென்னப்படும். கடம் வியாப்பியம். ஆகாசம் வியாபகம். வியாப்பியம் வியாபகத்துக்குள்ளும் வியாபகம் வியாப்பியத்துக்கு வெளியிலுமிருக்கின்றன. கடாகாசங்கள் போலும். வாக்கு பிர்ம்மத்தைக்காட்டிலும் கொஞ்சதேசத்திலிருப்பதால் வியாப்பியமாயும் பிர்ம்மத்துக்குள்ளுமிருக்கிறது. பிர்ம்மம் வாக்கைக்காட்டிலும் அதிகதேசத்திலிருப்பதால் வியாபகமாயும் வாக்குக்குவெளியிலுமிருக்கிறது.

91. முதலிய சப்தத்தால் நியாயமதத்திற் சொல்லிய ரூபரஸகந்தங்கள் தவிர பாக்கியான 2 குணங்களையும் கிரகிக்கத்தக்கன.

92. இருப்பிடம்.

561. குணத்துக்கும் குணிக்கும் ஜாதிக்கும் வியக்திக்கும் கிரியைக்கும் கிரியாவானுக்கும் தாதாத்மியசம்பந்தமிருப்பதுபோல் காரணத்துக்கும் காரியத்துக்கும் தாதாத்மியசம்பந்தமிருக்கிறது. தாதாத்மியமென்றால் பேதசகிதஅபேதமாம். நிமித்தகாரணத்துக்கும் காரியத்துக்கும் பேதாபேதரூபத்தாதாத்மியமில்லாமல் அத்தியந்தம் பேதமிருந்தாலும் உபாதானகாரணத்துக்கும் காரியத்துக்கும் பேதாபேதரூபத்தாதாத்மியசம்பந்தமிருக்கிறது. கடத்துக்கு நிமித்தகாரணம் குலாலன் தண்டம் முதலியன. இவைகளுக்கும கடரூபகாரியத்துக்கும அத்தியந்தபேதமிருக்கிறது. ஆனால் உபாதானகாரணமான மண்ணுக்கும் கடமாகிற காரியத்துக்கும் பேதசகிதஅபேதமிருக்கிறது. மண்ணினின்றும் கடம்அத்தியந்தம் வேறுபட்டால் மண்ணினின்றும் அத்தியந்தம் பின்னமான தைலமுண்டாகாததுபோல் கடமுண்டாகக்கூடாது. உபாதானகாரணத்துக்கும் காரியத்துக்கும் அத்தியந்தம் அபேதமிருக்கும்பக்ஷத்திலும் மண்ணினின்றுங் கடமுற்பத்தியாகமாட்டாது ஏனெனில் தன்ஸ்வரூபத்தினின்று தன்னுற்பத்தி யுண்டாகமாட்டாது. ஆனதால் உபாதானகாரணத்துக்கும் காரியத்துக்கும்பேதசகிதஅபேதமிருக்கிறது. ஆகையால் அத்தியந்தம் பேதபக்ஷத்துக்குத் தோஷமில்லை. பேதமிருந்தாலும் அபேதபக்ஷத்துக்குந் தோஷமில்லை. இவ்விதமாக் உபாதானகாரணத்துக்குங்காரியத்துக்கும் பேதாபேதம் யுக்தியாற் சித்திக்கின்றது.

பிரதீதியாலும் உபாதானகாரணத்துக்கும் காரியத்துக்கும் பேதாபேதஞ்சித்திக்கின்றது. இது மண் இது கடம் எனப் பின்னப்பிரதீதியால் பேதஞ் சித்திக்கிறது. விசாரித்துப்பார்க்குமளவில் கடத்துக்குள்ளும்புறமும் மண்ணைவிட வேறொன்றும் பிரதீதியாகவில்லை. ஆனால் மண்ணே பிரதீதியாகிறது. ஆகையால் அபேதஞ் சித்திக்கிறது. இவ்விதமாக உபாதனகாரணத்துக்கும் காரியத்துக்கும் பேதாபேதரூபத் தாதாத்மியசம்பந்தமிருக்கின்றது.

இதுபோல குணத்துக்கும் குணிக்கும் பேதாபேதமிருக்கிறது. கடத்தின் ரூபத்துக்கும் கடத்துக்கும் அத்தியந்தம் பேதமிருந்தால் எப்படிக் கடத்துக்கும் படத்துக்கும் அத்தியந்தம் பேதமிருக்கிறதோ இந்தப் படம் கடத்தையாசிரயிக்காமல் சுதந்திரமாயிருக்கிறதோ அப்படிக் கடத்தின் ரூபமும் கடத்தை யாசிரயிக்காமல் இருக்கவேண்டும். குணத்துக்கும் குணிக்கும் அத்தியந்தம் அபேதமிருந்தாலுங்கூடக் கடத்தின் ரூபம் கடத்தை யாசிரயிக்காமலிருக்கவேண்டும். ஏனெனில் தான்தனக்கேஆசிரயமாயிருக்கமாட்டாது. ஆகையால் குணகுணிகளுக்குப்பேதாபேதரூபத்தாதாத்மியசம்பந்தமிருக்கிறது. ஜாதிக்கும் வியக்திக்கும் அப்படியேகிரியைக்கும் கிரியாவானுக்குமுள்ள பேதாபேதரூபத் தாதாத்

மியசம்பந்தமும் இவ்விதயுக்தியால் அறியத்தக்கது. இதைக் கண்டிக்கிற மதவிஷயமாய் அனேக யுக்திகளுண்டு. அவைகளைச்சொல்வதிற் பயனில்லாமையால் இங்கே எடுத்துக் கூறவில்லை.

562. பட்டர்மதக்கண்டனம்(562—70):— 557க்கு உத்தரம்:— ஒருவஸ்துவுக்கு ஓரேயிடத்தில் பேதா பேதமிருப்பது விரோதமென்று யுக்திமான்கள் கண்டு இதைப்பிசகென்று நினைக்கிறார்கள். இதற்குக் கருத்தென்னவெனில், ஒருகடத்தினிடத்தில் தன்னபேதமும் பிறவஸ்துக்களின் பேதமுமிருந்தாலும் எதின் அபேதமிருக்கிறதோ அதின் பேதமில்லை, எதின் பேதமிருக்கிறதோ அதின் அபேதமில்லை. ஆகையால் ஓரேயிடத்தில் பேதாபேதஞ் சொல்வது விரோதமாயிருக்கிறது. பேதா பேதங்கள் தங்களுக்குள் விரோதிகளாயிருக்கின்றன. ஒருவஸ்துவினிடத்தில் எதற்கு பேதமிருக்கிறதோ அதற்கு அபேதமும் எதற்கு அபேதமிருக்கிறதோ அதற்கு பேதமும் விரோதப்படுவதால வாச்சியவாசகங்கள் குணகுணிகள் ஜாதிவியக்தி கிரியை கிரியாவான் உபாதானகாரணம் காரியம் இவைகளின் பேதாபேத ரூபத்தாதாத்மிய சம்பந்தம் அசுத்தமாகும்.

563. வாக்கில் வாசகமும் வெளியில் வாச்சியமும் இருப்பதால் பேதமும், சுருதியில் ஓம் அக்ஷரம் பிர்ம்மமென்று சொல்லியிருப்பதால் அபேதமும், முன் (558—559) வாச்சியவாசகங்களின் பேதாபேதத்தில் பிரமாணமாகச் சொல்லப்பட்டன. அதற்குச்சமாதானம் இங்கே சொல்லுகிறோம். பிரணவமாகிய ஓம் அக்ஷரத்துக்கும் பிர்மமத்துக்கும் வேதத்தில் அபேதஞ்சொல்லப்பட்டிருக்கிறது. வேதவசனத்துக்கு வாச்சியவாசகங்களின் அபேதத்தில் கருத்தில்லை. ஆனால் அதில் வேறொரிரகசியமான அபிப்பிராயமிருக்கிறது. அந்தஅபிப்பிராயம் பட்டராற்சொல்லப்படவில்லை. ஓம் அக்ஷரம் பிர்ம்மமென்று சொன்னபோது ஓம் அக்ஷரத்துக்கும் பிர்ம்மத்துக்கும் பேதமில்லையென்று அவ்வாக்கியத்தின் தாற்பரியமன்று. ஆனாலோ ஓம் அக்ஷரத்தைப்பிரம்மரூபமாக உபாஸனை செய்யவேண்டியதெனத்தாற்பரியம். எதின் உபாஸனை விதிக்கப்பட்டிருக்கிறதோ அப்படியே உபாஸியத்தின் சொரூபமுமிருக்கவேண்டியதென்பது நியமமில்லை. ஆனால் வஸ்துவின் சொரூபம் விடப்பட்டு வேறுஸ்வரூபமும் அதனிடத்திலுபாஸிக்கப்படக்கூடும். திர்ஷ்டாந்தம்:— சாளக்கிராமத்தையும் பாணத்தையும் விஷ்ணுரூபமாயும் சிவரூபமாயும் உபாஸிக்கும்படிச்சொல்லப்பட்டிருக்கிறது. சங்குசக்கராதிகளுடன் கூடிய சதுர்ப்புஜமூர்த்தி சாளக்கிராமத்திலில்லை. கங்காதரனும், ஜடாதரனும், டமரு, தோல், கபாலசகிதனும், பத்திராமுத்திரையால் சரணக

தியடைந்தவர்களுக்குத்திரிகுணரகிதமான ஆத்மோபதேசம் பண்ணுகி றவனுயுமிருக்கிற மூர்த்தி பாணத்திலில்லை. ஆனால் சாளக்கிராமமும் பாணமும் சிலாரூபங்களாயிருக்கின்றன. சாஸ்திரத்தின் ஆஞ்ஞையால் இவைகளின் சிலாரூபதிர்ஷ்டியை விட்டுச்சாளக்கிராமபாணங்களில் விஷ்ணுரூபத்தையும் சிவரூபத்தையும் உபாசிக்கிறார்கள். ஆனதால் உபாஸனை உபாஸியத்தின் ஸ்வரூபத்துக்காதீனமாகிறதில்லை, ஆனால் விதிக் காதீனமாயிருக்கிறது. சாஸ்திரவசனம் விதிக்கிறதுபோல் உபாஸனை செய்யவேண்டியது. சாந்தோக்கியஉபநிஷத்தில் பஞ்சாக்கினிவித்தியா ப்பிரகரணத்தில் சுவர்க்கலோகம் மேகம் பூமி புருஷன் ஸ்திரீ இவ்வைந்து பதார்த்தங்களையும் அக்கினிரூபமாக வுபாஸிக்கும்படிச்சொல்லியிருக்கிறது. மேலும் சிரத்தை சோமம் மழை அன்னம் வீரியம் இவ்வைந்து பதார்த்தங்களையும் பஞ்சாக்கினிகளின் ஆகுதிகள் ரூபமாக வுபாஸிக்கும்படிச்சொல்லப்பட்டிருக்கின்றது. அவ்விடத்தில் ஸ்வர்க்காதிகள் அக்கினியன்று. சிரத்தாதிகளும் ஆகுதியன்று. ஆயினும் வேதாஞ்ஞையால் ஸ்வர்க்காதிகளை அக்கினிரூபமாயும் சிரத்தாதிகளை ஆகுதிரூபமாயும் பாவித்து உபாஸிக்கிறார்கள். இவ்விதமாக ஓம் அக்ஷரத்தைப் பிரம்மரூபமாக உபாஸிக்கத்தக்கதெனச்சொல்லப்படுகிறது. ஓம் அக்ஷரமே பிர்ம்மரூபமன்று. ஆயினும் பிர்ம்மரூபமாய்ப்பாவிக்கப்பட்டு உபாஸனை சித்திக்கிறது. உபாஸனுவாக்கியத்தில் வஸ்துவின் அபேதம் அவசியமில்லை. ஆனால் பின்னவஸ்துவினுடையவும் அபின்னரூபத்தால் உபாஸனைசித்திக்கும்.

564. விசாரித்துப்பார்க்குமளவில் பிர்ம்மத்தின்வாசகமான ஓம் அக்ஷரத்துக்கும் வாச்சியமான பிர்ம்மத்துக்கும் அபேதம் ஒவ்வும். கடாதி அன்னியபதங்களுக்கும் அவைகளின் ஜடரூப அர்த்தங்களுக்கும் அபேதம் ஒவ்வாது. ஏனெனில் நாமரூபங்களெல்லாம் பிர்ம்மத்திற் கல்பிக்கப்பட்டிருக்கின்றன. பிர்ம்மம் அதிஷ்டானமாயிருக்கிறது. ஓம் அக்ஷரமும் பிர்ம்மத்தின் நாமமாயிருப்பதால் பிர்ம்மத்திற் கல்பிதமாயிருக்கிறது. கல்பிதவஸ்து அதிஷ்டானத்துக்கு வேறாகாமல் அதிஷ்டானரூபமாகவே இருக்கிறது. ஆகையால் ஓம்அக்ஷரம் பிர்ம்மரூபமாயிருக்கிறது. கடாதிபதங்களுக்கு ஜடரூபஅர்த்தங்கள் அதிஷ்டானங்களன்று. ஆனால் வாச்சியசகிதகடாதிபதங்கள் பிர்ம்மத்திற் கல்பிதமாயிருக்கின்றன. பிர்ம்மம் அவைகளின் அதிஷ்டானம். ஆகையால் பிர்ம்மத்துக்கும் மற்றெல்லாவற்றிற்கும் அபேதமிருக்கக்கூடும். ஆனால் கடாதிபதங்களுக்கும் அவைகளின் ஜடரூபவாச்சியார்த்தங்களுக்கும் அபேதம் எவ்விதத்திலும் சித்திக்காது. ஆனதால் பட்டர்மதத்தில் வாச்சியவாசகங்களுக்கு அபேதஞ் சொன்னது அசங்கதம்.

565. வாச்சியவாசகங்களுக்குக் கேவலம் பேதம் அங்கீகரிப்பதில் அடியில் கண்டதோஷம் பட்டதாற் சொல்லப்பட்டிருக்கிறது:—கடபதத்தின் வாச்சியம் கடபதத்தைக்காட்டிலும் அத்தியந்தம் பின்னமாயிருந்தால் கடபதத்தால் அத்தியந்தம் பின்னமான வஸ்திரரூபஅர்த்தம் பிரதீதியாகாததுபோல் கடபதத்துக்கு அத்தியந்தம் பின்னமான கலசரூபஅர்த்தமும் பிரதீதியாகக்கூடாது. மேலும் கடபதத்தைக்காட்டிலும் பின்னமாகவாச்சியத்தைப் பாவித்துக் கடபதத்தால் அது பிரதீதியாகிறதாக நினைக்கும்பக்ஷத்தில் எப்படிக் கடபதத்துக்கு அத்தியந்தம் பின்னமான கலசரூபஅர்த்தம் கடபதத்தால் விளங்குகிறதோ அப்படி அத்தியந்தம் பின்னமான வஸ்திரமும் கடபதத்தால் பிரதீதியாகக்கூடும். இந்தத்தோஷம் சக்தியைஅங்கீகரிக்காதமதத்திலிருக்கிறது. சக்தியை யங்கீகரிக்கிற மதத்திலில்லை. ஏனெனில் கடபதத்தின் வாச்சியம் கலசம்,அதின் அவாச்சியம் வஸ்திராதிகள்,இவ்விரண்டும் கடபதத்துக்கு வேறாயிருக்கின்றன. ஆனால் கடபதத்தில் கலசரூபஅர்த்தஞானத்தைகொடுக்கும்படியான சக்தி யிருக்கிறது. வேறு அர்த்தஞானத்தைக் கொடுக்கும்படியான சக்தியில்லை. ஆனதால் கடபதத்தால் கலசரூப அர்த்தத்துக்கு வேறான அர்த்தம் பிரதீதியாகிறதில்லை. இவ்விதமாக எந்தபதத்தில் எந்தஅர்த்தத்தின் சக்தி யிருக்கிறதோ அதேயர்த்தம் அப்பதத்தால் பிரதீதியாகிறது. வேறுஅர்த்தம் பிரதீதியாகிறதில்லை. ஆகையால் வாச்சியவாசகங்களின் அத்தியந்தபேதத்தில் தோஷமில்லை. அவைகளின் பேதசகிதஅபேதரூபதாதாத்மியசம்பந்தம்சரியன்று. பேதமும்அபேதமும்ஒன்றுக்கொன்றுவிரோதமாயிருக்கின்றன.

566. இப்படியே உபாதானகாரணத்துக்கும் காரியத்துக்கும் பேதசகித அபேதமில்லை. கேவலம் பேதமிருக்கிறது. கேவலம் பேதத்திற் சொன்ன தோஷம் நையாயிகமதத்திலும் சக்திவாதியின்[93] மதத்திலும் இல்லை. ஏனெனில் காரண காரியங்களின் அத்தியந்த பேதத்தில் அடியிற் கண்ட தோஷமிருக்கிறது:— மண்ணினின்று அத்தியந்தம் பின்னமான கடமுற்பத்தியானால் அத்தியந்தம் பின்னமான தைலமும் மண்ணினின்று உற்பத்தியாகக்கூடும். அத்தியந்தம் பின்னமான தைலமுற்பத்தியாகாதபக்ஷத்தில் அத்தியந்தம் பின்னமானகடமும் மண்ணினின்று உற்பத்தியாகக் கூடாது. இந்தத் தோஷம் நையாயிகமதத்திலில்லை. ஏனெனில் சகல வஸ்துக்களினுற்பத்தியில் நையாயிகன் பிராகபாவத்[94]

---

93. சித்தாந்தி.
94. முன்இல்லாமை.

தைக் காரணமாகப்பாவிக்கிறன். கடத்தினுற்பத்தியில் தண்டம் சக்கரம் முதலானவன் காரணமாயிருப்பதுபோல் கடத்தின் பிராகபாவமும் கடத்துக்குக் காரணமாயிருக்கிறது. இப்படியே சகலபதார்த்தங்களின் பிராகபாவமும் சகல பதார்த்தங்களினுற்பத்திக்குக் காரணமாயிருக்கிறது. கடத்தின் பிராகபாவம் கடத்தினுபாதான காரணமான மண்ணிலிருக்கிறதே தவிர வேறொன்றிலுமில்லை. எண்ணெயின் பிராகபாவம் எள்ளிலிருக்கிறதேதவிர வேறொன்றிலுமில்லை. இவ்விதமாகச் சகலகாரியங்களின் பிராகபாவமும் அவைகளின் உபாதானகாரணத்திலிருக்கிறது. எந்தப் பதார்த்தத்தில் எதின் பிராகபாவமிருக்கிறதோ அந்தப் பதார்த்தத்திலிருந்து அது தானுற்பத்தியாகிறதேதவிர வேறொன்றுமாகிறதில்லை. உதாரணம்:— மண்ணில் கடத்தின் பிராகபாவமிருக்கிறதினுல் மண்ணினின்று கடமுற்பத்தியாகிறதேதவிர தைலமுற்பத்தியாகிறதில்லை. எண்ணெயின் பிராகபாவம் எள்ளிலிருப்பதால் எள்ளினின்று எண்ணெயுண்டாகிறதேதவிர கடமுண்டாகிறதில்லை. இப்படிச்சகல காரியங்களினும் பிராகபாவங்காரணமாயிருக்கிறது. ஆனதால் காரணகாரியங்களுக்கு அத்தியந்தம் பேதஞ்சொல்வதால் நையாயிகமதத்தில் தோஷமில்லை.

567. மேலும் சாமர்த்தியரூபசக்திவாதியின் மதத்திலுந் தோஷமில்லை. ஏனெனில் மண்ணில் கடத்தின் சாமர்த்தியரூபசக்தியிருக்கிறதேதவிரத் தைலத்தின் சக்தியில்லை. எள்ளில் எண்ணெயின் சாமர்த்தியரூபசக்தியிருக்கிறதேதவிரக் கடத்தின் சாமர்த்தியரூபசக்தியில்லை. ஆனதால் மண்ணுல் கடமே யுண்டாகிறதேதவிரத் தைலமுண்டாகிறதில்லை. இப்படியே எள்ளால் எண்ணெயே யுண்டாகிறதேதவிரக் கடமுண்டாகிறதில்லை. இவ்விதமாக உபாதானகாரணத்துக்கும் காரியத்துக்கும் அத்தியந்தம் பேதமிருப்பதாக நினைப்பதில் தோஷமில்லை. பேதாபேதம் அசங்கதமாயிருக்கிறது.

568. பேதத்திலும்அபேதத்திலும்பட்டார்சொல்லப்பட்டதோஷங்கள்பட்டர்மதத்தில்நிச்சியமாயுண்டு.எப்படியெனில் பட்டர் பேதசகித அபேதத்தையங்கீகரித்திருக்கிறபடியால்காரணகாரியங்களுக்குப்பேதமாயிருக்கிறதென்றும்அபேதமிருக்கிறதென்றும்சித்திக்கிறது.பேதமிருப்பதால் பேதபக்ஷத்திற் சொன்னதோஷமுண்டு. அபேதமிருப்பதால் அபேதபக்ஷத்திற்சொன்னதோஷமுண்டு. ஆகையாலபேதாபேதம் அசங்கதமாயிருக்கிறது.

569. திருடனுக்குத் திருட்டுதோஷமும் சூதாடிக்குச் சூதாட்டதோஷமும் உள. இவ்விரண்டையும அனுஷ்டிக்கிறவனுக்கு இவ்விருதோஷங்களுஞ் சம்பவிக்கின்றன. இதுபோல் குணகுணிமுதலியவைக

ளின் பேதாபேதங்களை யொப்புக்கொள்ளுவதில் பேதபக்ஷத்திலும் அபே தபக்ஷத்திலுஞ் சொன்ன இரண்டுதோஷங்களுமுண்டாகின்றன. சக்தி வாதியின் மதத்தில் கேவலம் பேதத்தை யங்கீகரிப்பதால் தோஷமில்லை. ஏனெனில் குணியினிடத்தில் குணத்தைத்தரிக்கும் சக்தியிருக்கிறதேத விர வேறில்லை. ஆனதால் பேதபக்ஷத்திற் சொன்ன தோஷம் அதாவது:—கடத்தின் ரூபாதிகள் கடத்துக்குப் பின்னமாயிருப்பதுபோல் கடாதிகளும் கடத்துக்குப் பின்னமாயிருக்கின்றன. ரூபாதிகள்போல் படாதிகளும் கடத்திலிருக்கக்கூடும். அல்லது படாதிகளைபோல் ரூபாதிகளும் இராமலிருக்கக்கூடும். இந்தத் தோஷம் சக்தியை யங்கீகரிக்காதவன் மதத்திலுண்டு. சக்திவாதியின் மதத்தில் கேவலம் பேதத்தை யொப்புக்கொள்வதினாலும் தோஷமில்லை. பட்டர்மதத்தில் பேதாபேதங்களை யொப்புக்கொள்வதினால் இரண்டுபக்ஷங்களின் தோஷங்களும் மேற்சொன்ன திருஷ்டாந்தங்களாற் சித்திக்கின்றன. மேலும் பேதமும் அபேதமும் விரோததர்மங்களானதால் அஸம்பவதோஷம் சித்திக்கிறது. இப்படியே ஜாதிவியக்திகளுக்கும் கிரியாகிரியாவான்களுக்கும் கேவலம்பேதமிருக்கிறது. ஆயினும் வியக்தியில் ஜாதியைத் தரிக்கும் சக்தி யிருக்கிறது. கிரியாவானிடத்தில் கிரியையைத் தரிக்கும் சக்தி யிருக்கிறது. வேறொன்றைத் தரிக்கும் சக்தியில்லை. இவ்விதமாக உபாதானகாரணத்துக்கும் காரியத்துக்கும் குணகுணீமுதலியவைகளுக்கும் பேதாபேதரூபத் தாதாத்மியசம்பந்தம்அஸங்கதமாயிருக்கிறது. எல்லாவற்றிலும் பேதவிஷயத்தில் பட்டராற்சொலலப்பட்ட தோஷத்தைச் சக்தி விழுங்கிவிடுகிறது.

570. வேதாந்தசித்தாந்தத்திலும்காரியம்குணம்ஜாதிகிரியைஇவைகளுக்கும்உபாதானகாரணம்குணீவியக்திகிரியாவான்இவைகளுக்கும்முறையேஅத்தியந்தம்பேதமில்லாமல்தாதாத்மியசம்பந்மே யங்கீகரிக்கப்பட்டிருந்தாலும் வேதாந்தமதத்தில் பேதாபேதரூபத்தாதாத்மியசம்பந்தமில்லை. ஆனால் பேதாபேதங்களுக்கு விலக்ஷணமான அநிர்வசனீய தாதாத்மியசம்பந்தமிருக்கிறது. பேதத்துக்கு விலக்ஷணமாயிருப்பதால் அபேதபக்ஷத்துக்கு தோஷமில்லை. அபேதத்துக்கு விலக்ஷணமாயிருப்பதால் பேதபக்ஷத்துக்குத் தோஷமில்லை. இவ்விதமாகப் பேதாபேதங்களுக்கு விலக்ஷணமான அநிர்வனீயதாதாத்மியசம்பந்தமிருக்கிறது.[95] பேதாபேதரூபத்தாதாத்மியசம்பந்தம்அசங்கதம். ஆகையால்வாச்சியவாசகங்களின் பேதாபேதரூபதாதாத்மியரூபசம்பந்தமே சக்தியென்று சொன்ன பட்டரைச் சார்ந்தவர்களின் மதம் சரியன்று. ஆனால் பதத்தைக் கேட்கிற

95. இத்தரங்கத்தின் 88-வது குறிப்பைப்பார்க்க.

திறைல் அர்த்தஞானமுண்டுபண்ணுகிற பதத்திலுள்ள சாமர்த்தியமே பத த்தின்சக்தியாம். இவ்விதமாகச் சக்தி நிரூபிக்கப்பட்டது.

571, **சக்கியலக்ஷணம்:—** லக்ஷணையின்ஞானத்தில் சக்கிய த்தின் ஞானம் உபயோகமாயிருக்கிறது. ஏனெனில் சக்கியசம்பந்தம் லக்ஷணையின் ஸ்வரூபம். சக்கியத்தை யறியாமல் சக்கியசம்பந்தரூபலக்ஷணையை அறியமுடியாது. ஆகையால் சக்கியத்தின் லக்ஷணத்தைச் சொல்லுகிறேன். எந்தப் பதத்தில் எந்த அர்த்தத்தின் சக்தியிருக்கிறதோ அந்தப்பதத்துக்கு அந்தஅர்த்தம் சக்கியமென்று அறியத்தக்கது. சக்கியார்த்தத்தையே வாச்சியார்த்தமென்று[96] சொல்லுகிறார்கள். உதாரணம்:—அக்கினிபதத்தில் அங்காரரூபஅர்த்தத்தின் சக்தி இருக்கிறது. ஆனதால் அக்கினிபதத்துக்கு அங்காரம் சக்கியார்த்தம் அல்லது வாச்சியார்த்தமென்று சொல்லப்படுகிறது. வாச்சியார்த்தத்தைப் போதிக்கிற பதம் வாசகமென்று சொல்லப்படும்.

572. வாச்சியார்த்தத்தின் சம்பந்தம் லக்ஷணையின் ஸ்வரூபமாம். எந்த அர்த்தம் பதத்தின் சக்தியால் அறியப்படவில்லையோ ஆனால் லக்ஷணையால் அறியப்படுகிறதோ அது பதத்தின் லக்ஷியார்த்தம்[97] என்னப்படும்.

573. **ஜகர்லக்ஷணை:—** வாச்சியார்த்தம் முழுமையும் விடப்பட்டும் அதனுடைய சம்பந்தம் பிரதீதியாகும்போது ஜகர்லக்ஷணை சொல்லப்படுகிறது. கங்கையில் கிராமமிருக்கிறதென்று சொல்லுகிற விடத்தில் கங்கையென்னும் பதத்துக்குக்கரையில் ஜஹர்லக்ஷணை சித்திக்கிறது. ஏனெனில் கங்கையென்னும் பதத்துக்கு வாச்சியார்த்தம் கங்காநதியின் பிரவாகம். பிரவாகத்தில் கிராமமிருப்பது அசம்பாவிதம். ஆகையால் வாச்சியார்த்தம் முழுமையும் விடப்பட்டுக்கரையில் கங்கையென்னும் பதத்துக்கு ஜகர்லக்ஷணை சித்திக்கிறது. வாச்சியத்தின் சம்பந்தத்துக்கு லக்ஷணையென்றுபெயர். "கங்கையில் கிராமம்" என்கிறவிடத்தில் கங்காபதத்தின் வாச்சியமான பிரவாகத்துக்குக்கரையுடன் ஸம்யோகசம்பந்தமிருக்கிறது. ஆகையால் கங்காபதத்தின் வாச்சியத்துக்குக்கரையுடன் சம்பந்தம் லக்ஷணையாம். வாச்சியம் முற்றிலும் விடப்பட்டிருக்கிறது. ஆகையால்[98] ஜகர்லக்ஷணை சொல்லப்பட்டது.

---

96. இதற்கே அபிதேய அர்த்தமென்றும், முக்கிய அர்த்தமென்றும் பெயர்களாம்.

97. இத்தரங்கத்தின் 85-வது குறிப்பைப்பார்க்க.

98. ஜகர்லக்ஷணைக்கோர் உதாரணம்:— ஒருவனுடைய தகப்பன் [illegible]

574. **அஜகர்லக்ஷணை:—** வாச்சியார்த்தசகிதமாய் வாச்சியத்தின் சம்பந்தம் எந்தப்பதத்தினின்றும் அறியப்படுகிறதோ அந்தப்பதத்தில் அஜகர்லக்ஷணை இருக்கிறது. "சிவப்பு ஓடுகிறது" என்னுமிடத்தில் சிவப்பு என்னும் பதத்துக்குச்சிவப்பு வர்ணத்துடன் கூடிய குதிரையின் அஜகர்லக்ஷணை சித்திக்கிறது. ஏனெனில் சிவப்பு என்பது வர்ணம். இது வாச்சியம். கேவலம் வர்ணம் ஓடுகிறது என்பது அசம்பாவிதம். ஆகையால் சிவப்பு என்னும் பதத்தின் வாச்சியமான சிவப்பு வர்ணத்துடன்கூடிய குதிரையில் சிவப்பு என்னும் பதத்துக்கு அஜகர்லக்ஷணை சித்திக்கின்றது. குணத்துக்கும் குணிக்கும் தாதாத்மியசமபந்தம் சொல்லப்படுகிறது. சிவப்பும் ரூபத்தின் பேதமாகிறதினால் குணமாகிறது. ஆனதால் சிவப்பு என்னும் பதத்தின் வாச்சியமான சிவப்பாகிற குணத்துக்குக்குணியாகிற குதிரையுடன் இருக்கிற தாதாத்மியசம்பந்தம் லக்ஷணையாம். வாச்சியம் விடுபடாமல் அதிகம் கிரகிக்கப்படுகிறது. ஆகையால் அஜகர்லக்ஷணை சித்திக்கிறது. [99]

575. **பாகத்தியாகலக்ஷணை:—** பதத்தின் வாச்சியார்த்தத்தில் ஒருபாகம் விடப்பட்டு ஒருபாகம் கிரகிக்கப்படும்போது பாகத்தியாகலக்ஷணை சொல்லப்படுகிறது. இதற்கு ஜகதஜகர் லக்ஷணை யென்றும்பெயர்.

உதாரணம்:— முன் பார்த்த பொருளையே வேறிடத்தில் பார்த்து அது இதுதான் என்று ஒருவன் சொல்லுமிடத்துப்பாகத்தியாகலக்ஷ

---

ல் இல்லாதகாலத்தில் அவனுககுக்கல்லியாணம் நடந்தது. அப்போது வஸ்திரங்கள் கொடுத்து மரியாதைசெய்யுங்காலத்தில் மாப்பிள்ளையின் தகப்பனுக்கு முதலிற்கொடுக்கும்படி ஒருவன் சொல்லுகிறான். மாப்பிள்ளையின் சிற்றப்பன் மட்டும் அங்கிருந்தான். தகப்பன் என்னும் சப்தத்தின் சக்கியார்த்தமான மாப்பிள்ளையைப் பெற்றவன் ஆஜரில்லாததினால் பெற்றவனுக்கு வஸ்திரங்கொடுப்பது அசம்பாவிதம். ஆகையால் பெற்றவனைத்தள்ளி அவனுடன் சம்பந்தப்பட்ட சிற்றப்பன் தகப்பன் சப்தத்தால் கிரகிக்கப்படுகிறான். சகோதர சம்பந்தம் லக்ஷணை. இந்த லக்ஷணையால் அறியப்பட்டசிற்றப்பன் தகப்பன்யென்னும் பதத்தின் லக்ஷியார்த்தம்.

99. அஜகர்லக்ஷணைக்கோருதாரணம்:— வாயிலில் நெல்காயவைத்திருந்த காலத்தில் தாய் பிள்ளையைப்பார்த்து நெல்லை மாடுதின்காமல் பார்த்துக்கொள் என்கிறாள். தாயின் கருத்து நெல்லைத்தின்கும்படியான எந்தமிருக மெனு மாடுயென்னும்பதத்தால் கிரகிக்கத்தக்கது. மாடும்மாடுத்விர இதரமிருகங்களுஞ் சேர்ந்திருப்பதால் அஜகர் லக்ஷணை.

ணை சித்திக்கிறது. ஏனெனில் சென்றகாலத்திலும் வேறிடத்திலும் இருந்த பொருள் அது என்னப்படும். ஆகையால் சென்றகாலத்துடனும் வேறிடத்துடனுங்கூடின பொருள் அது என்னும் பதத்தின்வாச்சியார்த்தம். நிகழ்காலத்திலும் சமீபஇடத்திலுமிருக்கிற பொருள் இது என்னப்படும். ஆகையால் நிகழ்காலத்துடனும் சமீபதேசத்துடனுங்கூடின வஸ்து இது என்னும் பதத்தின் வாச்சியார்த்தம். சென்றகாலத்துடனும் வேறிடத்துடனுங்கூடின பொருளே நிகழ்காலத்துடனும் சமீபதேசத்துடனுங்கூடியிருக்கிறது. இது "அதுவே இது" என்னும் வாக்கியத்தின் வாச்சியார்த்தம். இது சம்பவிக்கமாட்டாது. ஏனெனில் சென்றகாலத்துக்கும் நிகழ்காலத்துக்கும் விரோதமிருக்கிறது. இப்படியே அன்னியதேசத்துக்கும் சமீபதேசத்துக்கும் விரோதமுண்டு. ஆகையால் இரண்டு பதங்களிலும் தேசகாலங்களாகிற வாச்சியபாகங்கள் விடப்பட்டு வஸ்து மாத்திரத்தில் இரண்டு பதங்களுக்கும் பாகத்தியாகலக்ஷணை சித்திக்கிறது.

576. **தத்பதவாச்சியார்த்தம்:—** தத்துவமஸி என்னும் மகாவாக்கியத்தில் லக்ஷணையைக்காண்பிப்பதற்காக தத்-துவம் இப்பதங்களின் வாச்சியார்த்தங்களை வர்ணிக்கிறேன். சர்வசக்திமானும் சர்வஞ்ஞனும் விபுவாயும் ஈசனும் சுதந்திரனும் பரோக்ஷனும் மாயியாயும் பந்தமோக்ஷரகிதனும் இருக்கிறவனே தத்பதத்தின் வாச்சியார்த்தம். சர்வசக்திமானென்றால் சர்வசாமர்த்தியங்களையுமுடையவன். சர்வஞ்ஞனென்றால் எல்லாவஸ்துக்களையுமறிகிறவன். விபுவென்றால் வியாபகன். ஈசனென்றால் எல்லாவற்றையும் ஏவுகிறவன். சுதந்திரனென்றால் கர்மத்துக்காதீனமாகாதவன். பரோக்ஷனென்றால் ஜீவனுடைய பிரத்தியக்ஷஞானத்துக்கு விஷயமாகாதவன். மாயியெனில் மாயையைத்தன் வசத்திலுடையவன். எவனுக்குப்பந்தமுண்டோ அவனுக்கு மோக்ஷமுண்டு. ஈஸ்வரன் பந்தரகிதனானதால் அவனுக்கு மோக்ஷமுமில்லை. மேற்சொல்லிய தர்மங்களுடன்கூடின ஈஸ்வரசேதனம் தத்பதத்தின் வாச்சியார்த்தம்.

577. **துவம்பதவாச்சியார்த்தம்:—** ஈஸ்வரதர்மங்களுக்கு விபரீதமான தர்மங்கள் எதினிடத்திலிருக்கின்றனவோ அந்த ஜீவசேதனத்தை த்துவம்பதத்தின் வாச்சியமாக அறி. இதற்குக் கருத்தென்னவெனில் ஜீவன் அற்பசக்திமான். அல்பஞன். பரிச்சின்னன். அனீசன், கர்மாதீனன் அவித்தியாமோகிதன். பந்தமோக்ஷசகிதன். பிரத்தியக்ஷன். ஏனெனில் தன்ஸ்வரூபம் ஒருவனுக்கும் பரோக்ஷமாயில்லை பிரத்தியக்ஷமாகவேயிருக்கின்றது. ஈஸ்வரனுடைய ஸ்வரூபம் ஈஸ்வரனுக்குப் பிரத்தியக்ஷமாயிருந்தாலும் ஜீவர்களுக்குப் பிரத்தியக்ஷமாயில்லாத

படியால் பரோக்ஷமென்று சொல்லப்படுகிறது. ஜீவனுடைய ஸ்வரூப[100]
த்தை ஜீவனும் ஈஸ்வரனும் இருவரும் அறிகிறபடியல் பிரத்தியக்ஷமெ
ன்றுசொல்லப்படுகிறது. மேற்சொல்லிய தர்மங்களுடன் கூடின ஜீவசே
தனம் துவம்பதத்தின் வாச்சியமென்று சொல்லப்படுகிறது.

578. ஸாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்தில்
உத்தாலகமுனி தன் புத்திரனாகிய ஸ்வேதகேதுவுக்கு ஜகத்
தை யுண்டுபண்ணுகிறவன் ஈஸ்வரனென்று குறிப்பிட்டுத் தத்துவமஸி
யென்றுசொன்னார். இதின் வாச்சியார்த்தமென்னவெனில் தத்என்றால்
அவன் அதாவது ஜகத்தை யுண்டுபண்ணுகிறவனாயும் சர்வசக்திமானாயு
ம் சர்வஞ்ஞாதிதர்மசகிதனாயுமிருக்கிற ஈஸ்வரன், துவம் என்றால் நீ அ
தாவது அற்பசக்திமானாயும் அல்பஞ்ஞாதிதர்மசகிதனாயிருக்கிற ஜீவன்
அஸி யென்றால் இருக்கிறாய். அவன் நீயாயிருக்கிறாயென்று சொல்லு
கிறதினால் ஈஸ்வரனும் ஜீவனும் ஒன்றென்பது வாச்சியார்த்தத்தால் வி
ளங்குகிறது. இது சரியன்று. ஏனெனில் சர்வசக்திமான் அல்பசக்திமான் ச
ர்வஞ்ஞன் அல்பஞ்ஞன் வியாபகன் பரிச்சின்னன் சுதந்திரன் கர்மாதீன
ன் பரோக்ஷன் பிரத்தியக்ஷன் மாயையை ஸ்வாதீனத்தில் வைத்திருப்ப
வன் அவித்தியாமோகிதன் இவ்விருவரும் ஒன்றெனச்சொல்வதுநெரு
ப்பு குளிர்ந்திருக்கிறதென்பதற்குச் சமானமாகும். ஆகையால் லக்ஷ
ணையால் லக்ஷியார்த்தத்தை நல்ல புத்தியுள்ளவனே நீயறி. வாச்சியா
ர்த்தத்தில் விரோதமிருக்கிறது. என் அப்பனே மகாவாக்கியத்தில் ஜ
கர்லக்ஷணையும். அஜகர்லக்ஷணையு மமையா. ஆகையால் பாகத்தியாகல
க்ஷணையைத்தான் அறியவேண்டியது. அதினால் விரோதம் பரிகாரமா
கும்.

579. சகலவேதாந்தத்தாலும் அறியத்தக்கவை சாக்ஷிசேதனமும்
பிர்ம்மசேதனமுமே. இச்சாக்ஷிசேதனமும் பிர்ம்மசேதனமும் துவம்பத
தத் பதங்களின் வாச்சியார்த்தங்களில் பிரவேசிக்கின்றன. ஜகர்லக்ஷணை
யிருக்கிற விடத்தில் வாச்சியம் முழுமையும் விடப்பட்டு வாச்சியத்தின்
சம்பந்தமான வேறொன்று அறியப்படுகிறது. ஆனதால் மகாவாக்கியத்தி
ல் ஜகர்லக்ஷணையை ஒப்பினால் வாச்சியத்திலிருக்கும் சேதனத்தைவிடவே
று புதிதான ஒன்றை அறியவேண்டியதாகும். சேனத்துக்கு வேறான து

100. ஜீவன் தன்னுடைய நிஜரூபமான கூடஸ்தனை மட்டும் அறியாம
லிருந்தாலும் அகம்பதத்தின் வாச்சியமான அந்தக்கரண விசிஷ்டசேதனம் அ
ல்லது ஸ்தூலசூக்ஷ்ம சங்காத விசிஷ்டசேதனம் தான் என்று அறிகிறான். ஆ
கையால் விவேகத்துக்கு முன்னும் தான் விசிஷ்ட சேதனமென்று பிரத்தியக்ஷ
மாயறிகிறான்.

அசத்ஜடதுக்கரூபம் அதையடைகிறதினால் புருஷார்த்தம் சித்திக்கிறதில்லை. ஆனதால் மகாவாக்கியத்தில் ஜகர்லக்ஷணை யொவ்வவில்லை.

580. அன்பனே ஜகர்லக்ஷணையிருக்கும் இடத்தில்வாச்சியார்த்தம் முழுமையும் வைத்துக்கொண்டு அதற் கதிகமாகக் கிரகிக்கவேண்டியது. மகாவாக்கியத்தில் அஜகர்லக்ஷணையை யங்கீகரித்தால் வாச்சியார்த்தம் முழுமையும் வைத்துக்கொள்ளவேண்டும். வாச்சியார்த்தம் மகாவாக்கியத்தில் விரோதசகிதமாயிருக்கிறது. விரோதத்தை நீக்குவதற்காக லக்ஷணையை அங்கீகரிக்கவேண்டியது. அஜகர்லக்ஷணையை யங்கீகரிப்பதால் மகாவாக்கியத்தில் விரோதம் நீங்கவில்லை. ஆகையால் அஜகர்லக்ஷணையுங் கூடாது.

581. **ஆபாஸவாதம்**:---அன்பனே, தத்பதத்தின் வாச்சியம் ஈஸ்வரன், துவம்பதத்தின் வாச்சியம் ஜீவன். இவைகளுக்குள்ளிருக்கிற விரோததர்மங்களை விட்டுச் சுத்தமாயும் அசங்கமாயுமிருக்கிற சேதனத்தை லக்ஷணையால் அறிவதே பாகத்தியாகலக்ஷணை. இவ்விடத்தில் அடியில் கண்டவொரு சித்தாந்தமுண்டு. ஜீவேஸ்வரர்களுடைய ஸ்வரூபங்கள அநேகவிதமாக அத்துவைதக்கிரந்தங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றன. **விவரணக்கிரந்தத்தில்** அஞ்ஞானத்திற் பிரதிபிம்பம் ஜீவனென்றும் பிம்பமீஸ்வரனென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. **வித்தியாரண்யஸ்வாமிகள்** மதத்தில் சுத்தசத்துவகுணஸஹித மாயையில் ஆபாஸம் ஈஸ்வரனென்றும் மலினசத்துவகுணசகிதஅந்தக்கரணத்தின் உபாதான காரணமான அவித்தியாம்சத்தில் ஆபாஸம் ஜீவனென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. பஞ்சதசிப்பிரகரணத்தில் வித்தியாரண்யஸ்வாமிகள் அந்தக்கரணத்தில் ஆபாஸனை ஜீவனென்று சொல்லியிருந்தாலும் அந்தக்கரணத்தின் ஆபாஸனை ஜீவனென்று நினைக்கும் பக்ஷத்தில் சுஷுப்தியில் அந்தக்கரணமில்லாததினால் சுஷுப்தியில் ஜீவனில்லாமற் போகவேண்டியது. பிராஞ்ஞரூபஜீவன் சுஷுப்தியிலிருப்பதால் வித்தியாரண்யஸ்வாமிகளுடைய அபிப்பிராயமென்னவெனில் அந்தக்கரணரூபபரிணாமத்தை யடைகிற அவித்தியாம்சத்திலுள்ள ஆபாஸன் ஜீவன், இந்த அவித்தியாம்சம் சுஷுப்தியிலுமிருக்கிறது. ஆகையால் பிராஞ்ஞனுக்கு அபாவமில்லை.[101] கேவலம் ஆபாஸங்களே ஜீவேஸ்வரர்கள் அன்று. ஆனால் மாயையின் அதிஷ்டான சேதனமும் மாயாசகித ஆபாஸனும் ஈஸ்வரனும். அவித்தியாம்சத்தின் அதிஷ்டானசேதனமும் அவித்தியாம்ச சகித ஆபாஸனும் ஜீ

101. 4-வது தரங்கத்தின் 33-வது குறிப்பைப்பார்க்க.

வனும். ஈஸ்வரவுபாதியில் சுத்தசத்துவகுணமுண்டு. ஆனதால் ஈஸ்வரனிடத்தில் சர்வசக்திசர்வஞ்ஞாதிதர்மங்கள் இருக்கின்றன. ஜீவனுடைய உபாதியில் மலினசத்துவகுணமுண்டு. ஆனதால் ஜீவனிடத்தில் அல்பசக்தி அல்பஞ்ஞாதி தர்மங்களிருக்கின்றன. இதை ஆபாஸவாதம் என்பார்கள்.

582. **பிரதிபிம்பவாதம்:—** விவரணமதத்தில் ஜீவேஸ்வரர்களுக்கு உபாதி ஒரே அஞ்ஞானம். ஆனதால் இவ்விருவரும் அல்பஞ்ஞர்களாயிருக்கவேண்டும். ஆயினும் எந்த உபாதியில் பிரதிபிம்பமுண்டாகிறதோ அதின் சுபாவமென்னவெனில் பிரதிபிம்பத்தில் தன் தோஷத்தை யுண்டுபண்ணுகிறது. பிம்பத்திலுண்டு பண்ணுகிறதில்லை. திர்ஷ்டாந்தம்:— கண்ணுடியாகிற வுபாதியில் முகத்தின் பிரதிபிம்பமுண்டாகிறது. கழுத்தின்பேரிலிருக்கிற முகம் பிம்பம். இப்போது கண்ணுடியாகிற வுபாதியின் பொன்மை கருமை சிறுமை முதலிய பலதோஷங்கள் பிரதிபிம்பத்தில் தோன்றுகின்றனவே தவிர கழுத்தின்பேரிலிருக்கிற முகத்தில் தோன்றுகிறதில்லை. இதுபோல் கண்ணுடிஸ்தானத்திலிருக்கிற அஞ்ஞானத்திலுள்ள பிரதிபிம்பரூபமான ஜீவனிடத்தில் அஞ்ஞானத்தாலுண்டான அல்பஞ்ஞதை முதலிய தோஷங்கள் இருக்கின்றன. பிம்பரூப ஈஸ்வரனிடத்தில் தோஷங்களில்லை. ஆகையால் ஈஸ்வரனிடத்தில் சர்வஞ்ஞதை முதலியவைகளும் ஜீவனிடத்தில் அல்பஞ்ஞதை முதலியவைகளும் இருக்கின்றன.

583. **ஆபாஸவாதத்துக்கும் பிரதிபிம்பவாதத்துக்கும் பேதம்:—** ஆபாஸபக்ஷத்தில் ஆபாஸன் மித்தை. பிரதிபிம்பபக்ஷத்தில் பிரதிபிம்பம் மித்தையன்று, சத்தியம். எனெனில் பிரதிபிம்பவாதியின் சித்தாந்தமென்னவெனில் கண்ணுடியில் தோன்றும் முகத்தின் பிரதிபிம்பம் முகத்தின் சாயையன்று. எனெனில் சாயையின் சுபாவமென்னவெனில் எந்தத்திக்கில் சாயையுடையவன் முகமும் பின்புறமும் இருக்கின்றனவோ அந்தத்திக்கிலேயே சாயையின் முகமும் பின்புறமும் இருக்கின்றன. ஆனல் கண்ணுடியில் பிரதிபிம்பத்தின் முகமும் பின்புறமும் பிம்பத்துக்கு எதிரிடையாயிருக்கின்றன. ஆனதால் கண்ணுடியில் சாயாரூபப்பிரதிபிம்பமில்லை. ஆனல் கண்ணுடியை விஷயமாக்குவதற்காக நேத்திரமூலமாகப்புறப்பட்ட அந்தக்கரணத்தின் விர்த்தி கண்ணுடியை விஷயமாக்கி அதேக்ஷணத்தில் கண்ணுடியினின்று திரும்பிக்கழுத்திலிருக்கிற முகத்தைவிஷயமாக்குகிறது. சுற்றும் வேகத்தினல்கொள்ளிக்கட்டையின்சக்கராகாரந்தோன்றுகிறதுபோலவும், கண்ணுடியையும்முகத்தையும்விஷயமாக்குவதில் விர்த்தியின்வேகத்தால் முகம் கண்ணுடியிலிருக்கிறதாகத்தோன்றுகிறது. ஆனலுண்மையில் முகங்கழுத்தின்

பேரிலேயே இருக்கிறதேதவிரக்கண்ணாடியிலில்லை. மேலும் சாயையுமில்லை. விர்த்திவேகத்தால் கண்ணாடியில தோன்றும் முகம் பிரதிபிம்பம். இவ்விதமாககண்ணாடியாகிற வுபாதிசம்பந்தத்தால் கழுத்தின் பேரிலிருக்கிற முகமே பிம்பரூபமாயும் தோன்றுகிறது. விசாரித்துப்பார்க்குமளவில் பிம்பப்பிரதிபிம்பபாவங்களில்லை. இதுபோல் அந்தக்கரணரூப உபாதிசம்பந்தத்தால் அசங்மான சேதனத்தில் பிம்பமாகிற ஈஸ்வரபாவமும் பிரதிபிம்பமாகிற ஜீவபாவமும் பிரதீதியாகின்றன. விசாரித்துப்பார்க்குமளவில் ஈஸ்வரத்தன்மையும் ஜீவத்தன்மையுமில்லை. அஞ்ஞானத்தால் சேதனத்தில் தோன்றும் ஜீவபாவமே அஞ்ஞானத்திலுள்ள பிரதிபிம்பமென்று சொல்லப்படுகிறது. ஆனதால் பிம்பபாவமும் பிரதிபிம்பபாவமும் மித்தையாயிருக்கின்றன. ஸ்வரூபத்தில் பிம்பப்பிரதிபிம்பங்கள் சத்தியம். ஏனெனில் பிம்பப்பிரதிபிம்பங்களின் ஸ்வரூபம் திர்ஷ்டாந்தத்தில் முகம், தார்ஷ்டாந்தத்தில் சேதனம். இந்த முகமும் சேதனமும் சத்தியம். இவ்விதமாகப்பிரதிபிம்பம் ஸ்வரூபத்தில் சத்தியமாயிருப்பதால் சத்தியமென்று சொல்லப்படுகிறது. ஆபாஸத்தின் ஸ்வரூபமும் சாயையாயிருப்பதால் மித்தை. இதுதான் ஆபாஸப்பிரதிபிம்பவாதங்களின் பேதம்[101 (a)]

584. **அவச்சேதவாதம்:—** சிலகிரந்தங்களில் சுத்தசத்துவகுணசகித மாயாவிசிஷ்டசேதனம் ஈஸ்வரனென்றும் மலினசத்துவகுணசகித அந்தக்கரணத்துக்கு உபாதானமான அவித்தியாம்சவிசிஷ்டசேதனம் ஜீவனென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதை அவச்சேதவாதமென்கிறார்கள்.[102]

585. **பாகத்தியாகந்தான் ஒப்புக்கொள்ளத்தக்கது:—**

---

101. (a) இவ்விரண்டு பக்ஷங்களில் ஆபாஸவாதம்தான் சிரேஷ்டம் ஏனெனில், பிரதிபிம்பபாவத்தில் மோக்ஷத்தின்பிரயத்தனஞ் செய்கிற ஜீவன் மோக்ஷதசையில் இல்லாமல் போவதால், தனத்தை விர்த்திசெய்ய இச்சிக்கும்வியாபாரி மூலதனத்தை இழந்துபோகிறதுபோல், ஜீவஸ்வரூபத்துக்கே ஹானிவருகிறது. இந்த அனர்த்தத்தைஅறிந்தமுமுக்ஷுவுக்கு இந்த மதத்தில் பிரவிர்த்தி யுண்டாகமாட்டாது. ஆகையால் பிரதிபிம்பபக்ஷம் சரியன்று.

102. இந்த அவச்சேதவாதம் கிரகிக்கத்தக்கதல்லவென்று 4-வது தரங்கம் 220-வது பிரிவில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது.

வேதாந்தத்தின் பிரக்கிரியைகளெல்லாம்[103] அத்வைத ஆத்மாவை யறியும் பொருட்டே ஏற்பட்டிருக்கின்றன. ஆனதால் எந்தப்பிரக்கிரியையால் ஜிஞ்ஞாசுவுக்குப் பேதமுண்டாகுமோ அந்தப்பிரக்கிரியையே அவனால் அங்கீகரிக்கத்தக்கது. ஆயினும் **வாக்கியவிர்த்தியிலும் உபதேச ஸஹஸ்ரம்** எனனுங்கிரந்தத்திலும் பாஷியககாரரால் ஆபாஸவாதமே அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது (229). ஆகையால் ஆபாஸவாதந்தான் முக்கியம். இதன்படி மாயை மாயையிலுள்ள ஆபாஸன் மாயையின் அதிஷ்டானசேதனம் இம்மூன்றுஞ்சேர்ந்து சர்வசக்தி சர்வஞ்ஞதை முதலிய தர்மங்களுடன்கூடிய ஈஸ்வரன் என்னப்படும். இதுவே தத்பதத்தின் வாச்சியம். வியஷ்டி அவித்தை அதில் ஆபாஸம அதின் அதிஷ்டான சேதனம் இம்மூன்றுஞ்சேர்ந்து அல்பசக்தி அல்பஞ்ஞதை முதலிய தர்மங்களுடன்கூடிய ஜீவன் என்னப்படும். இதுவே தத்பதத்தின் வாச சியம் வியஷ்டி அவித்தை அதில் ஆபாஸம் அதின் அதிஷ்டானசேதனம் இம்மூன்றுஞ்சேர்ந்து அல்பசக்தி அல்பஞ்ஞதை முதலியதர்மங்களுடன் கூடிய ஜீவன் என்னப்படும். இது துவம்பதத்தின் வாச்சியம். தத்துவமஸி வாக்கியத்தால் இவ்விரண்டும் ஒன்றெனச்சொல்வதுசரியன்று. ஆகையால் ஆபாஸசகித மாயை மாயையாலுண்டான சர்வசக்தி சர்வஞ்ஞதை முதலியதர்மங்கள் இவ்வாச்சியபாகங்கள் தள்ளப்பட்டுச்சேதன பாகத்தில் பாகத்தியாகலக்ஷணை சித்திக்கிறது. இப்படியேஆபாஸசகித அவித்தியாம்சம் அவித்தையாலுண்டான அல்பசக்தி அல்பஞ்ஞதை முதலியதர்மங்கள் இவ்வாச்சியபாகங்கள் தள்ளப்பட்டுச்சேதனபாகத்தில் பாகத்தியாகலக்ஷணை சித்திக்கிறது. இவ்விதமாகப்பாகத்தியாகலக்ஷணையால் ஈஸ்வரன் ஜீவன் இவர்களுடைய ஸ்வரூபத்திலுள்ளலக்ஷியமான சேதனபாகம் ஒன்றெனத்தத்துவமஸி[104] என்னும் மகாவாக்கியம் போதிக்கிறது.

---

103. எல்லாம் என்கிற பதத்தால் (1) காரியகாரண உபாதிவாதம் (2) அவச்சின்ன அனவச்சின்னவாதம் (3) திருஷ்டிசிருஷ்டிவாதம் முதலியவை கிரகிக்கத்தக்கவை. அப்பய்யதீக்ஷிதருடைய "சித்தாந்தலேசம்" என்னும் கிரந்தத்திலும் "விர்த்திப்பிரபாகர" என்னும் கிரந்தத்திலும் இவைகள் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றன.

104. இந்த "தத்துவமஸி" என்னும் வாக்கியம் சம்பந்தத்திரயத்தால் அகண்டார்த்தத்தை போதிக்கிறது. சம்பந்தத்திரயமாவது:— (1) பதங்களுடைய சாமானாதிகரணியம். (2) பதார்த்தங்களுடைய விசேஷண விசேஷ்ய பாவம். (3) பிரத்தியகாத்மபரமாத்மாக்களின் லக்ஷியலக்ஷணபாவம். (1)

சமானாதிகரணிய சம்பந்தமெப்படியெனில்:— அந்த தேவதத்தன் தான் இவன் என்னும் வாக்கியத்தில், அந்த காலத்துடன் கூடின தேவதத்தனைக் குறிப்பிடும் "அந்த" என்னும பதமும், இந்தக்காலத்துடன் கூடின தேவதத்தனைக் குறிப்பிடும் "இந்த" என்னும்பதமும் ஒரே தேவதத்த சரீரத்தில் தாத்பரியப்படுவதால் இரண்டுக்கும் சாமானாதிகரணியம் (அதாவது வெவ்வேறு அர்த்தங்களோடுகூடிய இரண்டு சப்தங்கள் ஒரேபொருளைக்குறிப்பிடுதல்) சம்பந்தம் சித்திக்கிறது. இதுபோல் "தத்துவமஸி" வாக்கியத்தில் பரோக்ஷத்துவாதிகளுடனகூடிய சைதன்னியத்தைக்குறிப்பிடும் "தத்து" பதமும், அபரோக்ஷத்துவாதிகளுடன் கூடிய சைதன்னியத்தைக்குறிப்பிடும் "த்வம்" பதமும் ஒரே சைதன்னியத்தில் தாத்பரியப்படுவதால், இரண்டுக்கும் சாமானாதிகரணியசம்பந்தம் சித்திக்கிறது. (2) விசேஷன விசேஷ்யபாவசம்பந்தம் எப்பிடியெனில்:— பிரித்துக்காண்பிப்பது விசேஷணம், பிரிக்கப்பட்டுக்காணப்படுதல் விசேஷ்யம். "அவன் தான் இவன் (தேவத்தன்)" என்னும் வாக்கியத்தில் "இவன்" சப்தத்தால் விளங்குகிற இந்த காலதேசங்களோடுகூடின தேவதத்தனை இவன் அவன்' சப்தத்தால் விளங்குகிற அந்ததேசகாலங்களோடுகூடின தேவதத்தனைக்காட்டிலும் வேறல்லவென்று எப்போது பிரதீதியாகிறதோ, அப்போது இவன் என்னும் சப்தத்தின் வாக்கியார்த்தத்திலுள்ள பேதத்தை "அவன்" என்னும் சப்தத்தின் அர்த்தம் வேறுபடுததுவதால், "அவன்" என்பது விசேஷணம். "இவன்" சப்தத்தின் அர்த்தம்வேறுபடுத்தப்படுவதால் "இவன்" என்பது விசேஷ்யம், அப்படியே "இவன் தான் அவன் என்னும் வாக்கியததிலும் "இவன்" விசேஷணம், "அவன்" விசேஷ்யம். இவ்விதமாக "அவன் தான் இவன்", "இவன் தான் அவன்" என்கிற வாக்கியங்களில் "அவன", "இவன்" பதங்கள் பரஸ்பரம் விசேஷண விசேஷ்யங்களாயிருப்பதால், விசேஷண விசேஷ்ய பாவரூப சம்பந்தம் சித்திக்கிறது. இந்த திருஷ்டாந்தத்தில் சொல்லியதுபோல் "தத்துவமஸி" என்னும்வாக்கியத்தில் துவம்பதவாச்சியமான அபரோக்ஷத்வ கிஞ்சிஞ்ஞத்வாதிகளுடன் கூடியசைதன்னியம் "தத்" பதவாச்சியமான சர்வஞ்ஞத்வாதிகளுடன்கூடிய சைதன்னியத்தைக்காட்டிலும் வேறல்லவென்று எப்போது பிரதீதியாகிறதோ, அப்போது, "த்வம்" பதார்த்தத்திலுள்ள பேதத்தைதத்சப்தார்ததம் வேறுபடுத்துவதால், தத்சப்தம் விசேஷணம். த்வம் பதார்த்தம் வேறுபடுத்தப்படுவதால் விசேஷ்யம். அப்படியே "த்வம்ததசி" என்னும் வாக்கியத்தில் "த்வம்" விசேஷணம், "தத்" விசேஷ்யம். இவ்விதமாக "தத்த்வமசி", "த்வம்ததசி" இந்த வாக்கியங்களில் "தத்" "த்வம்" பரஸ்பரம் விசேஷண விசேஷ்யங்களாக இருப்பதால், விசேஷண விசேஷ்யபாவரூப சம்பந்தம் சித்திக்கிறது. (3) லக்ஷ்யலக்ஷணபாவசம்பந்தமெப்படியெனில்:— அசாதாரண தர்மத்தை பிரதிபாதிக்கும் வாக்கியம் லக்ஷணம்; அதினால் பிரதிபாதிக்கப்படுவது லக்ஷ்யம். "அவன்தான் இவன் (தேவதத்தன்)" என்னும் வாக்கியத்தில் "அவன்" "இவன்" என்னும் சப்தங்களுடைய விருத்த தர்மங்க

586. மற்ற மூன்று மகாவாக்கியங்களிலும் பாகத்தியாகலக்ஷணை[105]:—'**அயம் ஆத்மா பிர்மமம்**' என்னும், மகாவாக்கியத்தில் ஆத்மபதத்துக்கு ஜீவன் வாச்சியம பிர்ம்மபதத்துக்கு ஈஸ்வரன் வாச்சியம். பிர்ம்மபதத்துக்குச் சுத்தம் வாச்சியம் அல்லவென்றும் ஈஸ்வரனே வாச்சியமென்றும் நாலாவது தரங்கத்தில்(188)பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. முன்சொன்னதுபோல் இரண்டுபதங்களுக்கும் லக்ஷணை இருக்கிறது. லக்ஷியார்த்தம் பரோக்ஷமல்லவென்பதை அறிவதற்காக அயமென்னும்பதம் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. எல்லாருக்கும் பிரத்தியக்ஷமான ஆத்மாவே பிர்ம்மமென்பது வாக்கியார்த்தம். '**அஹம்பிர்ம்மாஸ்மி**' என்னும் மகாவாக்கியத்தில் **அஹம்** பதத்துக்கு ஜீவன் வாச்சியம். பிரம்மபதத்துக்கு ஈஸ்வரன்வாச்சியம். இவ்விரண்டுபதங்களுக்கும் சேதனபாகத்தில் லக்ஷணையுண்டு. நான்பிர்ம்மம் என்பது வாக்கியார்த்தம். **பிரஞ்ஞானம ஆனந்தம்பிர்மம்** என்னும் மகாவாக்கியத்தில் பிரஞ்ஞானபதத்துக்கு ஜீவன் வாச்சியம். பிர்ம்மபதத்துக்கு ஈஸ்வரன் வாச்சியம் லக்ஷணையும் முன்போலவே. லக்ஷியமான பிர்ம்மாத்மா ஆனந்தகுணமுடையவனன்று ஆனந்தரூபமே. இதை யறியும்பொருட்டு ஆனந்தம் என்னும் பதம் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. ஆத்மாவுக்கு அபின்னமான பிர்ம்மம் ஆனந்தரூபமென்றுவாக்கியார்த்தம்.

587. மகாவாக்கியத்தில் பாகத்தியாகலக்ஷணை இருப்பது போல் அன்னியவாக்கியத்திலும் **சத்தியம் ஞானம் ஆனந்தம்** என்னும்பதங்கள் சுத்தப்பிர்ம்மத்தைப் பாகத்தியாகலக்ஷணையால் போதிக்கின்றனவே தவிரச் சக்தியால் போதிக்கவில்லை. ஏனெனில் சுத்தப்பிர்ம்மம் எந்தப்

---

ளாகிற அந்த தேசகாலங்கள், இந்த தேசகாலங்கள் இவைகளுடன் கூடியிருப்பவைகளைத் தள்ளுவதால், தேவதத்தனுடன் கூடின தேவதத்தபிண்டத்தோடு தேவதத்தத்துவத்துடன்கூடிய தேவதத்தவாசகசப்தத்துக்கு லக்ஷயலக்ஷணபாவசம்பந்தம் சித்திக்கிறது. இதுபோல்,"தத்தவமசி" வாக்கியத்திலும்,"தத்" "த்வம்" பதங்களின் விருத்தமான பரோக்ஷத்வ அபரோக்ஷத்வாதிகளுடன் கூடிய தர்மங்களை தள்ளுவதினால், அவிருத்தமான சைதன்னியத்துடன் தத்துவம்பதங்களுக்கு லக்ஷயலக்ஷணபாவரூப சாமானாதிகரணியம் சித்திக்கிறது. ஆகையால் தத்த்வம் பதங்களுக்கும் அவைகளின் அர்த்தங்களுக்கும், விடப்பட்டவிருத்தாம்சபாகங்களில் லக்ஷணமும், அகண்ட சைதன்னியத்தில் லக்ஷயமும் சித்திக்கின்றன.

105. "**தத்துவமசி**" என்னும் வாக்கியம் உபதேசவாக்கியமாம். மற்ற மூன்றும் அனுபவவாக்கியங்களாம். இவைகளின் விசேஷார்த்தம் பஞ்சதசிப் பிரகரணத்தில் சொல்லியபடி வருமாறு:— (1) **தத்துவமஸி**என்பது சாமவே

பதத்துக்கும் வாச்சியமன்று, என்பது சித்தாந்தம். ஆனதால் பதங்களெல்லாம் விசிஷ்டத்திற்கு வாசகங்களாயும் சுத்தத்திற்கு லக்ஷியமாயும் இருக்கின்றன. மாயையின் ஆபேக்ஷிகசத்தியத்தையும் சேதனத்தின் நிரபேக்ஷிகசத்தியத்தையும் சேர்ந்து சத்தியமென்னும் பதத்தின் வாச்சியமாகிறது. நிரபேக்ஷிகசத்தியம் லக்ஷியம். புத்திவிருத்திரூபஞானமும் ஸ்

---

தத்தின் சாந்தோக்கிய உபநிஷத்தின் வாக்கியம். சத் என்பதினால் சிருஷ்டிக்கு முன் ஏகமாயும் அத்துவிதீயமாயும் நாமரூபரகிதமாயும் சிருஷ்டிக்குப்பின்னும் விசாரதிருஷ்டிக்கு இப்படியேயிருக்கும் சத்தென்று அறியத்தக்கது. த்வம்பதத்தால் தேகேந்திரியாதிகளுக்கு அதிகமாயும் இவைகளுக்குச் சாக்ஷியாயிருப்பதினால் இவைகளுக்கு விலக்ஷணமாயுமிருக்கிற சத்ரூப ஆத்மா கிரகிக்கத்தக்கது. அஸிபதத்தால் தத்-த்வம்பதங்களின் சாமானாதிகரண்யத்தால் அடையப்பட்ட பிரம்மஆத்மாக்களின் ஏகத்துவம் அறியத்தக்கது. (2) அதர்வணவேதத்தின் மாண்டூக்கிய உபநிஷத்தின் "அயமாத்மா பிரம்ம" என்னும் வாக்கியத்தில் அயமென்னும் பதத்தால் ஸ்வப்பிரகாசமாயும் அபரோக்ஷமாயுமிருக்கிற ஆத்மா என்று கிரகிக்கத்தக்கது. ஆத்மா என்னும் பதத்தால் அகங்காராதி தேகபரியந்தமுள்ள சங்காதத்துக்கு அதிஷ்டானமாயும் சாக்ஷியாயும் இருப்பதினால் பிரத்தியகாயிருக்கிற சேதனங்கிரகிக்கத்தக்கது. பிரம்மசப்தத்தால் திரிசியமாயிருப்பதால் மித்தையாயிருக்கிற சகல ஆகாசாதி ஜகத்தின் தத்துவம் அதாவது அதிஷ்டானமாயிருப்பதால் இந்த ஜகத்தைப்பாதித்துப் பாரமார்த்திகச் சச்சிதானந்தலக்ஷணங்களுடன் கூடிய சொரூபமென்று கிரகிக்கத்தக்கது. மேற்சொன்ன லக்ஷணங்களுடன் கூடிய பிரம்மம் ஆத்ம (தன்) ஸ்வரூபம். (3) யஜுர்வேதத்தின் பிரகதாரண்யகவுபநிஷத்தில் அகம்பிரம்மாஸ்மி என்னும் வாக்கியத்தில் அகமென்னும் பதத்தால் தேசகாலவஸ்துக்களால் பரிச்சின்னமாகாத பரிபூர்ணமான பரமாத்மாவாயும் சாதனசாதனங்களோடுகூடிப் பிரம்மவித்தையைச் சம்பாதிக்க யோக்கியனையும் புத்திக்குச் சாக்ஷியாயுமிருக்கிற ஆத்மா கிரகிக்கத்தக்கது. பிரம்மசப்தத்தால் ஸ்வபாவத்தில் தேசகாலாதிபரிச்சின்னமில்லாத பரிபூர்ணமான பரப்பிரம்மம் கிரகிக்கத்தக்கது. அஸ்மியென்னும் பதத்தால் சாமானாதிகரண்யத்தால் ஜீவப்பிரம்மங்களின் ஏகத்துவம் ஞாபகப்படுத்தப்படுகிறது. (4) இருக்குவேதத்தின் ஐதரேய உபநிஷத்தின் பிரஞ்ஞானம் பிரம்மமென்னும் வாக்கியத்தில் பிரஞ்ஞானமென்னும் பதத்தால் எந்தச் சைதன்யத்தால் புருஷன் ரூபாதிகளைப்பார்க்கிறானோ சப்தங்களைக்கேட்கிறானோ கந்தத்தையறிகிறானோ சப்தத்தைவசனிக்கிறானோ ரஸத்தையறிகிறானோ அந்தச் சைதன்னியமென்று அறியத்தக்கது. பிரம்மசப்தத்தால் உத்தமமான தேவாதிகளிலும் மத்தியமமான மனுஷர்களிலும் அதமமான மிருகங்களிலும் ஆகாசாதி பூதங்களிலும் உள்ள சைதன்னியம் கிரகிக்கத்தக்கது. ஆகையால் தன்னிடத்திலுமிருக்கிற பிரஞ்ஞானம் பிரம்மமே.

யம்பிரகாசஞானமும் இரண்டுஞ் சேர்ந்தது ஞானபதத்தின் வாச்சியம், ஸ்வயம்பிரகாசபாகம் லக்ஷியம். விஷயசம்பந்தத்தாலுண்டாகிற சுகாகாரமான சாத்விக அந்தக்கரணவிர்த்தியும் பரமப்பிரேமைக்கிடமான ஸ்வரூபசுகமும் இரண்டுஞ் சேர்ந்தது ஆனந்தபதத்தின் வாச்சியம். விர்த்திபாகத்தை விட்டு ஸ்வரூபபாகம் லக்ஷியம். இவ்விதமாகச் சகலபதங்களுக்கும் சுத்தப்பிர்ம்மத்தில் லக்ஷணையுண்டென்று சம்க்ஷேபசாரீரகத்தில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது.

588. சொன்ன அர்த்தத்தை மறுபடியும் சங்கிரகமாய்ச் சொல்லுகிறேன். கங்கையில் கிராமமென்னும் இடத்தில் ஜகர்லக்ஷணை சித்திக்கிறது. சிவப்பு ஓடுகிறது என்னுமிடத்தில் அஜகர்லக்ஷணையை அறி. அதுவேஇது என்னுமிடத்தில் பாகத்தியாகலக்ஷணை சித்திக்கிறது. இதற்கு ஜகாஜகாலக்ஷணையென்றும் பெயர். தத்த்வமஸியாதி மகாவாக்கியங்களில் ஜகர்லக்ஷணையையும் அஜகர்லக்ஷணையையும் தள்ளிப் பாகத்தியாகலக்ஷணையை அறியவேண்டியதென்று நான் சொல்லியிருக்கிறேன். பிர்ம்மம் எந்தப் பதத்துக்கும் வாச்சியமல்லவென்று வேதஞ்சொல்லுகிறது. ஆகையால்எல்லாப்பதங்களிலும் நீ இப்படியே அறியவேண்டியது மாயையின் ஆபேக்ஷிகசத்தும் சைதன்னியத்தின் நிரபேக்ஷிகசத்தும் சேர்ந்து சத்பதத்தின் வாச்சியமாகிறது. இவைகளில் நிரபேக்ஷிகசத்து லக்ஷியம். ஸ்வயம் பிரகாசஞானமும் புத்திவிர்த்திஞானமுஞ் சேர்ந்தது ஞானபதத்தின் வாச்சியமென்று அறி இவைகளில் ஸ்வயம்பிரகாசஞானம் லக்ஷியம், விஷயசம்பந்தத்தாலுண்டாகும் சுகாகாரமான சாத்வீக அந்தக்கரணத்தின் விர்த்தியும் பரமப்பிரேமாஸ்பதமான ஸ்வரூபஸ்திதியுஞ்சேர்ந்தது ஆனந்தபதத்தின் வாச்சியம். இவைகளில் விர்த்திபாகத்தை விட்டுப் பரமப்பிரேமாஸ்பதத்தை ஆனந்தபதத்தின் லக்ஷியமாக அறி. இப்படியே எல்லாப்பதங்களிலும் அறி. சுத்தாம்சமே லக்ஷியம். பாகத்தியாகலக்ஷணையால் எல்லாருக்கும் சம்மதமான பிரமாணஞ் சொல்லப்பட்டது.

589. கேள்வி:— இரண்டு பதங்களிலும் லக்ஷணை நிஷ்பிரயோஜனம்:— மகாவாக்கியத்தில் விரோதத்தைத் தள்ளுவதற்காக இரண்டுபதங்களிலும் லக்ஷணை அங்கீகரிக்கப்பட்டிருப்பதில் ஒருபதத்தில் லக்ஷணையை அங்கீகரிப்பதினாலேயே விரோதம் நிவிர்த்தியாய்விடுமென்றும் இரண்டு பதங்களிலும் லக்ஷணையை அங்கீகரிப்பது நிஷ்பிரயோஜமென்றும் சிலர் சொல்லுகிறார்கள். இதற்குப்பாவம்:— சர்வஞ்ஞதை முதலியவைகளுடன் கூடியதற்கு அல்பஞ்ஞதை முதலியவைகளோடு கூடினதுடன ஏகத்துவம் பொருந்தாவிட்டாலும் ஒருபதத்தின் லக்ஷியமாகிற சுத்

தத்துக்கு விசிஷ்டத்துடன் ஏகத்துவம் பொருந்தும். உதாரணம்:—'சூத்திரமனுஷன் பிராமணன்' என்னுமிடத்தில் சூத்திரத்துவதர்மத்துடன் கூடின மனுஷனுக்குப் பிராமணத்துவதர்மங்களோடு கூடினவனுடன் ஏகத்துவஞ்சொல்வது விருத்தமாயிருக்கிறது. மனுஷன் பிராமணன் என்னுமிடத்தில் சூத்திரத்துவதர்மரகிதமான சுத்தமனுஷனே பிராமணத்துவதர்மசகிதமாயிருப்பதாகச் சொல்வதில் விரோதமில்லை. இதுபோல் அல்பஞ்ஞதை முதலியதர்மங்களுடன்கூடிய சேதனத்துக்கும் சர்வஞ்ஞதைமுதலியதர்மங்களுடன்கூடின சேதனத்துக்கும் ஏகத்துவம் விருத்தமாயிருக்கிறது. ஆனால் ஜீவேஸ்வரவாசகபதங்களின் சேதனத்தில் லக்ஷணையால் சேதனமாத்திரத்துக்குச் சர்வஞ்ஞதை முதலியதர்மங்களோடுகூடினதுடனாவது அல்பஞ்ஞதைமுதலியதர்மங்களுடன் கூடினதுடனாவது ஏகத்துவஞ் சொல்வதில் விரோதமில்லை. ஆகையால் இரண்டுபதங்களிலும் லக்ஷணையை அங்கீகரிப்பதில் யாதொரு யுக்தியுமில்லை.

590. சமாதானம்:— ஒருபதத்தில்லக்ஷணையை அங்கீகரிக்கிறவனுக்கு ஒரு கேள்வி — இரண்டு பதங்களில் எந்தப்பதத்தில் லக்ஷணையிருக்கிறது. நான்கு மகாவாக்கியங்களிலும் முதல் பதத்தில் லக்ஷணையுண்டென்றும் இரண்டாவதில் இல்லையென்றுஞ் சொல்லுகிறாயா? அல்லது இரண்டாவது பதத்தில் லக்ஷணையுண்டென்றும் முதல்பதத்திலில்லையென்றுஞ்சொல்லுகிறாயா? சிஷ்யனே அவனைப்பார்த்து அடியில்வருமாறுசொல்வாயாக. மூடனே முதற்பதத்திலாவது இரண்டாம்பதத்திலாவதுநியமமாக லக்ஷணை இருக்கிறதாக நினைக்கும பக்ஷத்தில் வாக்கியங்கள் பரஸ்பரம் விரோதமாகும். ஏனெனில் "அஹம்பிரம்மாஸ்மி" "பிரஞ்ஞானமானந்தம்பிரம்ம" "அயமாத்மாபிரம்ம" இம்மூன்று வாக்கியங்களிலும் முதலாவது பதம் ஜீவவாசகம். "தத்துவமஸி" வாக்கியத்தில் முதற்பதம் ஈசுவர வாசகம். முதற்பதத்தில் எல்லாவாக்கியங்களிலும் லக்ஷணையை அங்கீகரித்தால் சேதனம் சர்வஞ்ஞதை முதலியவைகளுடன் கூடின ஈசுரனாயிருக்கிறதென்று முதல் மூன்றுவாக்கியங்களுக்கும் அர்த்தமாகும். சேதனம் அல்பஞ்ஞதை முதலியவைகளுடன் கூடின சமுசாரியாகிய ஜீவரூபமென்று தத்துவமஸி என்னும் வாக்கியத்துக்கு அர்த்தமாகும். ஏனெனில் மூன்று வாக்கியங்களிலும் முதற்பதம் ஜீவவாசகம். அதற்குச்சேதனபாகத்தில் லக்ஷணையுண்டு. இரண்டாவதாகிய ஈசுவர வாசகபதத்துக்கு வாச்சியம் கிறகிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதமாகலக்ஷணையை நியமமாக அங்கீகரித்தால் வாக்கியங்க

ளுக்குப் பரஸ்பரம் விரோதமுண்டாகிறது. இப்படியே எல்லாவாக்கியங்களிலும் இரண்டாவது பதத்தில் லக்ஷணையை யங்கீகரிக்கும் பக்ஷத்தில் மூன்று வாக்கியங்களிலும் முதலாவதாகிய ஜீவபதத்தில் வாச்சியத்தையும் இரண்டாவதாகிய ஈசுவர பதத்துக்குச் சேதனபாகத்தில் லக்ஷணையையுங் கிரகிப்பதினுல் அல்பஞ்ஞதை முதலியவைகளுடன் கூடினது சேதனமென்று மூன்றுவாக்கியங்களுக்கும் அர்த்தமாகும். தத்துவமஸி வாக்கியத்தில் முதலாவதாகிய ஈசுவரபதத்தின் வாச்சியத்தையும் இரண்டாவதாகிய ஜீவ பதத்துக்குச் சேதனபாகத்தில் லக்ஷணையையும் அங்கீகரிக்கிறதினுல் சர்வஞ்ஞதை முதலிய தர்மங்களுடன் கூடினது சேதனமென்று தத்துவமஸி வாக்கியத்துக்கும் அர்த்தமாகும். இதனுல் பரஸ்பரம் விரோதமே யுண்டாகும். இவ்விதமாக முதற் பதத்திலாவது இரண்டாவதுபதத்திலாவது லக்ஷணையை நியமமாய் அங்கீகரிப்பது சரியன்று. ஆனதால் ஆசாரியர்கள் இரண்டு பதங்களிலும் லக்ஷணையை ஒப்புக்கொள்ளுகிறார்கள்.

591. ஆக்ஷேபம்:— ஈசுவர வாசக பதத்தில் லக்ஷணை — முதற்பதத்திலாவது இரண்டாவது பதத்திலாவது லக்ஷணையை நியமமாய் அங்கீகரிக்கவேண்டியதில்லை. ஆனுல் ஏல்லா வாக்கியங்களிலும் ஈசுவர வாசகபதத்தில் லக்ஷணையை நியமமாய் அங்கீகரிக்கவேண்டியது. அந்த ஈசுவர வாசகபதம் முதலாவதாகவாவது இரண்டாவதாகவாவது இருக்கக்கூடும். அதினுல் வாக்கியங்களுக்குப் பரஸ்பரவிரோதமில்லை.

592. சமாதானம்:— ஈசுவரவாசக பதத்துக்கே லக்ஷணைசொல்லும்பக்ஷத்தில் சர்வ அனர்த்தங்கள் அல்பஞ்ஞதை பராதீனதை ஜனனமரணங்கள் முதலிய துக்கசாதனங்கள் இவைகளுக்கிருப்பிடமாகிய சமுசாரியாகிய ஜீவன் சுருதிவாக்கியங்களில் ஞேயமாயிருப்பதால் மோக்ஷத்துக்கு ஹானியுண்டாகும். இதற்குப்பாவமென்னவெனில், ஈஸ்வர வாசகபதத்திலேயே லக்ஷணையை அங்கீகரிப்பதினுல் மகாவாக்கியத்துக்கு என்ன அர்த்தமாகுமெனில், தத்பதத்துக்கு லக்ஷியமான அத்வயமாயும் அசங்கமாயும் மாயா மலரகிதமாயும் இருக்கிற சேதனமே காம கர்ம அவித்தை இவைகளுக்கு ஆதீனமாயும், அல்பஞ்ஞதை அல்பசக்தி பரிச்சின்னதை, புண்ணியபாவங்கள், சுக துக்கங்கள், ஜனனமரணங்கள், கமனுகமனங்கள் முதலிய அனந்த அனர்த்தங்களுக்குப் பாத்திர

மாயும் ஆய்விடும். மகாவாக்கியத்துக்கு இப்படி அர்த்தமானால் ஜிஞ்ஞாசுவானவன் இந்த அர்த்தத்தில் புத்தியை ஸ்திரப்படுத்தும்படி நேரிடும். எதில் புத்தி ஸ்திரப்படுகிறதோ அதுவே பிராணவியோகத்துக்குப் பிறகும் அடையப்படுகிறது. ஆனதால் வேதவாக்கிய விசாரத்தால் முமுக்ஷுவுக்கு அனர்த்தமே பிராப்தமாகும் ஆனந்தம் அடையப்படமாட்டாது. ஆனதால் ஈசுவர வாசக பதத்தில் லக்ஷணை இருக்கிறதென்றும் ஜீவவாசக பதத்தில் லக்ஷணை இல்லையென்றுஞ் சொல்லும் நியமம் அசங்கதமாயிருக்கிறது.

593. **ஆக்ஷேபம்:**—ஜீவவாசகபதத்தில் லக்ஷணை:—எல்லா வாக்கியங்களிலும் ஜீவவாசகபதத்தில் லக்ஷணையுண்டு. ஈஸ்வரவாசகத்தில் இல்லை. ஆனதால் புருஷார்த்தத்துக்கு ஹானியில்லை. ஏனெனில் ஜீவவாசகபதத்தில் லக்ஷணையை ஒப்புக்கொள்ளுவதினால் பதத்தின் லக்ஷியமான சேதனபாகம் சர்வசக்திமானும் சர்வஞ்ஞனும் சுதந்திரனும் ஜன்மாதிபந்தரஹிதனுமிருக்கிற ஈஸ்வரரூபமென்று மகாவாக்கியத்துக்கு அர்த்தமாகும். இந்த அர்த்தத்தில் புத்தியை ஸ்திரப்படுத்துவதினால் ஜிஞ்ஞாஸுவுக்கு அதியுத்தமமான ஈஸ்வரபாவமே பிராப்தமாகும். ஆனதால் ஜீவவாசகபதத்தில் லக்ஷணையை நியமமாய் அங்கீகரிக்கவேண்டும்.

594. **சமாதானம்:**—துவம் பதத்தின் லக்ஷியமாகிற சாக்ஷீ எப்படி ஈஸ்வரரூபமாகுமென்பதைச் சொல். துவம்பதத்தின் லக்ஷியத்தை ஈஸ்வரரூபமாகச் சொல்வது சரியன்று. ஆனதால் யதீஸ்வரோத்தமர்கள் இரண்டு பதங்களிலும் லக்ஷணையையொப்புக்கொள்ளுகிறார்கள். இதற்குப் பாவமென்னவெனில் ஜீவவாசகபதத்தில் லக்ஷணையை ஒப்புக்கொண்டு ஈஸ்வரவாசகத்தில் லக்ஷணையை ஒப்புக்கொள்ளாதவனுக்கு ஒருகேள்வி, துவம்பதத்தின் லக்ஷணை வியாபகசேதனத்திலிருக்கிறதா அல்லது எவ்வளவிடத்தில் ஜீவனுடைய உபாதி இருக்கிறதோ அவ்வளவிடத்திலுள்ள சாக்ஷீசேதனத்திலிருக்கிறதா? வியாபகசேதனத்தில் துவம்பதத்தின் லக்ஷணையைச் சொல்வது சரியன்று. ஏனெனில் வாச்சியார்த்தத்தில் எது பிரவேசிக்கிறதோ அதில் பாகத்தியாகலக்ஷணை சம்பவிக்கிறது. வாச்சியத்தில் வியாபகசேதனம் பிரவேசிக்கிறதில்லை. ஆனால் ஜீவனுடைய உபாதியிலிருக்கிற சாக்ஷீசேதனம் வாச்சியத்திற் பிரவேசிக்கிறது. ஆனதால் சாக்ஷீசேதனத்திலேயே துவம்பதத்தின் லக்ஷணை இருக்கிறது. வியாபக

சேதனத்தில் இல்லை. இந்தச் சாக்ஷீசேதனத்தில் எல்லாருடைய இருதயங்களையும் பி ர ் பித்தல் சர்வப்பிரபஞ்சத்திலும் வியாபித்திருத்தல் முதலான ஈஸ்வரதர்மங்கள் சம்பவிக்கமாட்டா. சாக்ஷீ எப்போதும் அபரோக்ஷமாயிருக்கிறது. அதனிடத்தில் பரோக்ஷதை முதலிய ஈஸ்வரதர்மங்கள் சுத்தமாயிருக்கமாட்டா. மேலும் மாயாரகிதமாயிருப்பதை மாயாவிசிஷ்டமாய்ச் சொல்வது சரியன்று. உதாரணம்:—தண்டமில்லாதவனைத் தண்டி என்று சொல்வதும் சம்ஸ்காரரகித துவிஜபாலகனைச் சம்ஸ்காரவிசிஷ்டனாகச் சொல்வதுஞ்சரியன்று. ஆனதால் சாக்ஷீசேதனத்துக்கும் ஈஸ்வரனுக்கும் அபேதஞ்சொல்லும்பக்ஷத்தில் மகாவாக்கியம் அஸம்பவார்த்தத்தைப் பிரதிபாதிக்கிறதாக ஆகும்.

595. இரண்டு பதங்களிலும்லக்ஷணையை ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் தோஷமில்லை. ஏனெனில் இரண்டுபதங்களிலுமுள்ள விருத்ததர்மங்களைத்தள்ளுவதால் மிச்சப்படுவது பிரகாசரூபசேதனம். ஏனெனில உபாதியாலும் அதினாலுண்டாகிற தர்மங்களாலும் சேதனத்துக்குப் பேதமிருக்கிறதே தவிர ஸ்வரூபத்தில் இல்லை. உபாதியையும் அதனாலுண்டாகும் தர்மங்களையும் விட்டுவிடுகிறதினால் இரண்டுபதங்களுக்கும் லக்ஷியமான சேதனம் ஒன்றெனவே சித்திக்கிறது. உதாரணம்:—கடாகாசத்தில் கடதிருஷ்டியை விட்டு மட விசிஷ்ட ஆகாசத்துடன் ஏகத்துவஞ் சம்பவிக்கிறதில்லை, மடதிருஷ்டியையும் விடுகிறதினால் ஏகத்துவஞ் சித்திக்கிறது.

596. ஓதப்புரோதபாவம்:[106]— எல்லா வாக்கியங்களிலும் "தத்துவம்", "துவம்தத்" என்கிற ரீதியாய் ஓதப்புரோதபாவத்தின் ரீதியை அறி. இதினால் வாக்கியத்தின் அர்த்தத்தில் பரோக்ஷபரிச்சின்னப் பிராந்திகள் நிவிர்த்தியாய்விடும். "தத்துவம்" என்று சொல்வதினால் தத்பதத்

---

106. அபேதஞானம் உபதேசிக்கப்பட்டிருந்தாலும் ஒருகாலத்தில் தீக்ஷணமான அபேதஞான அபாவத்தாலும் மாயை அவித்தை இவைகளின் பலத்தாலும் சிஷனுடைய இருதயத்தில் தத்பதார்த்தவிஷயத்தில் பரோக்ஷபிராந்தியும் த்வம்பதார்த்தவிஷயத்தில் பரிச்சின்னப் பிராந்தியும் உண்டாகக்கூடும். இதை நிவிர்த்திசெய்வதற்காக ஓதப்புரோதபாவம் சொல்லப்பட்டது

தின் அர்த்தத்துக்கு துவம்பத அர்த்தத்துடன் அபேதஞ்சொல்லப்பட்டது. துவம்பதத்தின் அர்த்தமாகிற சாக்ஷி நித்தியம் அபரோக்ஷமாயிருக்கிறது. ஆனதால் பரோக்ஷத்தின் பிராந்தி நிவிர்த்தியாகிறது. "த்வமதத்" என்பதினால் துவம்பதத்தின் அர்த்தத்துக்கு தத் பதார்த்தத்துடன் அபேதஞ் சொல்லப்படுகிறது. தத்பதத்தின் அர்த்தம் வியாபகம். ஆனதால் பரிச்சின்னத்தின் பிராந்தி நிவிர்த்தியாகிறது. இதுபோல் "அகம்பிர்ம்ம", பிர்ஞ்ஞானம்பிர்ம்ம", ஆத்மாபிர்ம்ம", இவ்வாக்கியங்களாலும் பரிச்சின்னதை நிவிர்த்தியாகிறது. "பிர்ம்ம அகம்", பிர்ம்ம பிரஞ்ஞானம், பிர்ம்ம ஆத்மா, இவைகளாற் பரோக்ஷதை நிவிர்த்தியாகிறது.

597. சிஷ்யனே, ஜீவப்பிர்ம்மங்களின் ஏகத்துவத்தைச் சகல வேதங்களும் ஸ்மிருதிகளுஞ் சொல்லுகின்றன. இவ்விஷயத்திற் பாகத்தியாகத்தையே யதார்த்தமாயறி. இவ்விதமான குருபதேசத்தைக்கேட்டுச் சிஷ்யனுடனே நிருதநிருத்தியனானான். இதின் யதார்த்தத்தை விசாரிக்கிறவனுடைய துக்கமெல்லாம் நசித்துப்போம். மித்தையான குருவினால் சமுஸ்கிருத பாஷையில் இக்கிரந்தமுபதேசிக்கப்பட்டு இதைக் கேட்கிறதினால் அஞ்ஞானம நிவிர்த்தியாய் விடுகிறது. அக்கிருந்தத்தின் மொழிபெயர்ப்புச் சரியாய்ச் செய்யப்பட்டது. அக்கிறதேவன் சொப்பனத்தில் இவ்வுபதேசத்தைப்பெற்றும் அவன துக்கம் முற்றிலும் நிவிர்த்தியாகவில்லை. அப்போது அக்கிருதநேவன் கேட்கிறான்.

598. ஸ்வாமின் நீங்கள் சொல்லிய கிரந்தத்தை நான் அர்த்தத்துடன் கேட்டேன். ஆனால் துக்கத்துக்குக்காரணமான வனம் எனக்கின்னும் விளங்கிக்கொண்டிருக்கிறது. எந்த வுபாயத்தால் அது நசித்துப்போகுமோ அதைச்சொல்லியருள்க.

599. குரு உத்தரம்:— சிஷன் வார்த்தையைக்கேட்டுக் குரு சொல்லுகிறதாவது; சிஷனே வனம் நசிக்கும்படியான உபாயத்தைக்கேள். இதைத்தவிர வேறுபாயமில்லை. மகாவாக்கியத்தின் அர்த்தத்தைக்கேட்டு நான் அக்கிருதன் என்று உரத்துச்சொல்லென்றார். சிஷன் அப்படியே வாக்கியத்தை விசாரித்து "நான் அக்கிருதன்" என்று உரத்துச்சொன்னான். உடனே நித்திரை யொழிந்து கண்விழித்துக்கொண்டான். அக்கணமே வனம் கிரந்தம் குரு எல்லாம் மறைந்துவிட்டன. வனதுக்

கத்தை மறந்து தான் அக்கிருதன் என்று தெரிந்துகொண்டு அக்கிருதன் ஆகியானுன்.

600. அக்கிருதசேவனுக்கு நித்திரையால் எவ்விதமாய் வனதுக்கமுண்டாயிற்றோ, அப்படியே ஆத்மாவின் அஞ்ஞானத்தால் ஜகத்துக்கம் பிரதீதியாகிறது. எப்படி மித்தையான குருவினுலும் கிரந்தத்தினுலும் மித்தையான வனம் நசித்ததோ அப்படி மித்தையான குருவினுலும் வேதத்தினுலும் மித்தையான ஜகத்துக்கம் நசித்துப்போகிறது. வாக்கியங்களின் லக்ஷியார்த்தத்தை யறிந்து ஜிஞ்ஞாசு பூர்ணகிருதகிருத்தியனுகிறுன். தீனதயாளுவாயும் நிராவரணமாயுமிருக்கிற தானுவே நான.

6-வது தரங்கம் முற்றும்.

ஹரி:ஓம்

# விசாரசாகரம்

## 7-வது தரங்கம்.

### ஜீவன்முக்தி[1]விதேகமுக்தி[2]வர்ணனை (601—47).—

601. பூர்வபீடிகை:—உத்தமமத்தியமகனிஷ்டாதிகாரிகளான மூவரும் குருபதேசத்தைக் கேட்டு யாதொரு சம்சயமன்றியில் ஆத்மாவே பிர்ம்மமென்னும் உத்தமமான ஞானத்தை யடைந்தார்கள். குரு மூவருக்கும் ஒரேகாலத்திலுபதேசஞ் செய்திருந்தாலும் உத்தமமான பிர்ம்மசாக்ஷாத்காரஞானம் தத்துவதிர்ஷ்டிக்குண்டாயிற்று.

602. ஞானிந்த வியவகாரத்தில் நியமமில்லை:-மரத்தின் காய்ந்த சருகுகள் காற்றினால் அங்குமிங்கும் பறந்து ஓடுகிறதுபோல் பிராரப்த விசேஷத்தால் ஞானிகிரியைகளைச்செய்கிறதாகக் காணப்படுகிறான். ஒருகாலத்தில் குதிரைவண்டியிலேறித் தோட்ட முதலியவைகளைப்பார்க்கிறான். ஒருக்கால் காலில் ஒன்றுமில்லாமல் நடக்கிறான் அவன் படுக்கையோ அனேகவிதம். போகபோஜனாதிகள் ஒருகாலத்திலுத்தமமாயிருக்கின்றன. ஒருக்கால் போஜனமன்றியில் மலையின் குகையிலிருந்துகொண்டு கற்றரையிற் படுத்துக்கொண்டு இரவைப்போக்குகிறான். ஒருக்கால் இவனை ஆயிரம் பெயர்கள் நமஸ்கரிக்கிறார்கள். ஒருகாலத்தில் இவன் உபயலோகப்பிர்ஷ்டன் என்று கர்மியால் நிந்திக்கப்படுகிறான். எவன் இவனைப் பூஜிக்கிறானோ அவன் சுகிருதத்தையடைகிறான். தோஷதிருஷ்டியுடன் இவனைப்பார்க்கிறவன் பாவத்தையடைகிறான். இவ்விதமாக ஞானியின் வியவகாரம் நியமமன்றியிலிருக்கிறது. தத்துவத்தைப் பூர்ணமாயறிந்தவனுக்குப் பிரமையும் சந்தேகமுமுண்டாகமாட்டா. அவனுக்குச் செய்யவேண்டியது யாதொன்றுமில்லை. அவனுடைய பேதப்பிரமைகளெல்லாம் நசித்துப்போயின. வேதப்பிரமாணத்தால் ஸ்வயம் பிரகாசமான அத்துவயப் பிர்ம்மத்தின் ஞானம் உண்டாயிருக்கிறது.

---

1. பிரஞ்சப் பிரதீதியுடன் அத்வைதப்பிர்ம்ம ஸ்வரூபமாயிருத்தல் ஜீவன்முக்தியாம்.

2. பிரபஞ்சப் பிரதீதியன்றியில் அத்வைதப் பிர்ம்மஸ்வரூபமாயிருத்தல்விதேக முக்தியாம்.

603. **ஆக்ஷேபங்கள் (603—639):—** ஞானிக்கு வியவகார விஷயத்தில் நியமமுண்டென்று சிலர் சொல்லுகிறார்கள். துக்கத்துக்குக்காரணமான திரிபுடியைத்தள்ளிச் சமாதி விஷயத்தில் ஞானி பிரயத்தனஞ்செய்கிறான். சொற்பவியவகாரமிருக்குமேயானால் அது பசிதாகங்களைத் தீர்க்கும்பொருட்டாயிருக்கும். சமாதிக்கு அதிகமான சுகம் யாதொன்றுமில்லை. திரிபுடியால் துக்கந்தான் ஜனிக்கிறது. இக்காரணத்தால் ஞானி சமாதிக்குப் பிரயத்தனம் அடிக்கடி பண்ணுகிறான். சமாதி சுகத்தைவிட்டுப் பிரமிக்கிறவன் நாய்க்கொப்பாவான். **கவுடபாதாசாரியாருடைய காரிகையில்** சமாதிப் பிரகாரம் விவரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விதமாய ஞானியானவன் விக்ஷேபத்தைப் போக்கிச் சகல சுகத்தையும் அடைகிறான். சமாதிசுகம் அஷ்டாங்கமன்றியிலுண்டாகிறதில்லை. அவைகளைச் சொல்லுகிறேன் கேள். இயமநியமாதிகள் பத்து ஆஸனங்கள் அநேகம். பிராணாயாமம் அநேகவிதம். பிரத்தியாகாரம், தாரணை, தியானம், ஸவிகல்பசமாதிஇவ்வஷ்டாங்க சாதனங்களால் நிர்விகல்பசமாதி அனுஷ்டிக்கத்தக்கது.

604. இவ்வாறு சமாதியை யனுஷ்டிக்க வேண்டுமென்பதைக் கேட்டு, இவர்கள் பேய்பிடித்தவர்களெனப் பிதற்றுகிறார்கள் என்று நினைத்துத் தத்துவதிர்ஷ்டியானவன் ஒன்றும் பேசாமல் சிரித்தான்.

605. சித்தாந்தம்:— ஞானிக்குச சரீர வியவகார நியமமில்லை. ஏனெனில் ஞானியின் வியவகாரத்தில் அஞ்ஞானம் அதின் காரியமான ராகத்துவேஷங்கள் இவைகளில்லை. ஆனால் ஞானிக்குப் பிராரப்தகர்மத்தின் சேஷமிருக்கிறது. இதுவே அவனுடைய வியவகாரத்துக்குக்காரணமாயிருக்கிறது. இப்பிராரப்தகர்மம ஒவ்வொருவனுக்கும் ஒவ்வொரு விதமாயிருக்கிறது. ஆனதால் ஞானிக்கு பிராரப்தகர்மம் ஜன்யவியவகாரத்தில் நியமமில்லை. இது சித்தாந்த பக்ஷம்.

606. ஆக்ஷேபம்:— சிலர், சொல்லுகிறதாவது:— ஞானிக்கு வியவகாரத்தில் யாதொரு கர்மத்தின் நியமமுமில்லை. ஆனால் ஞானிக்கு நிவிர்த்தியின்பொருட்டு நியமமுண்டு. பிரவிர்த்தியுண்டானால் தேகஸ்திதியின் பொருட்டுப் போஜனத்துக்காகப் பிக்ஷையிலும் மானங்காக்கக் கௌபீனக் கிரகணத்திலுந்தான் பிரவிர்த்தி யுண்டாகிறது. ஏனெனில் ஞானமுண்டாவதற்குமுன் ஜிஞ்ஞாஸாகாலத்தில் விஷயத்தில் தோஷதிர்ஷ்டியால்[3] வைராக்கிய முண்டாகிறது. இந்த வைராக்கியம்

---

3. ஜன்மம், மிருத்யு, ஜரை, வியாதி, இவைகளில் துக்கத்தையும்தோஷத்தையும்பற்றி சாஸ்திரத்தினாலும், தன் அனுபவத்தினாலும் ஆலோசித்தல் தோஷதிர்ஷ்டியாம்.

ஞானமுண்டான பிறகும் தோஷ திர்ஷ்டியாலும் விஷயத்தின் மித்தியாபு த்தியாலு மிருந்துகொண்டிருக்கிறது. அபரோக்ஷமாய்ப் பொய்யென்ற றிந்து பதார்த்தத்தில் சத்திய புத்தி யுண்டாகிறதில்லை. தோஷ திர்ஷ் டியால் ராகமுண்டாகிறதில்லை. பிரவிர்த்தி ராகத்தாலுண்டாகிறது. ஞானிக்கு ராகமில்லாததினாலே பிரவிர்த்தி யுண்டாகிறதில்லை. சரீரபோ ஷணையின்பொருட்டுப் போஜனாதிகளிற் பிரவிர்த்தி ராகமன்றியில் பிராரப்த கர்மத்தாலுண்டாகிறது.

607. **கர்மம்:—** கர்மம் மூன்றுவிதம்.[4] (1) **சஞ்சிதம்.** (2) **ஆகாமியம்.** (3) **பிராரப்தம்.** இவைகளில் முன் சரீரத்திற் செ ய்யப்பட்டுப் பலனுக்கு வராமலிருப்பது சஞ்சிதமாம். எதிர்காலத்துக் கர்மம் ஆகாமியாம். முன்சரீரத்திற் செய்யப்பட்டு வர்த்தமானசரீரத்து க்கு ஏதுவாயிருக்குங் கர்மம் பிராரப்தமாம். இவைகளில் சஞ்சிதகர்மம ஞானத்தால் நசித்துப்போகிறது. ஞானிக்கு ஆத்மாவினிடத்தில் கர்த்தி ருத்துவப்பிராந்தி இல்லை.[5] ஆனதால் அவனுக்கு ஆகாமி கர்மமில்லை. எந்தப் பிராரப்தகர்மத்தால் ஞானியின் சரீரமுண்டாயிற்றோ அந்தப் பி ராரப்தகர்மம் சரீரஸ்திதிக்குக் காரணமான பிக்ஷைமுதலியவைகளிற் பிரவிர்த்தியுண்டாகும்படிச் செய்கிறது. பிராரப்தகர்ம போகமன்றி யில் நாசமடையாது.

---

4. ஒரு குடித்தனக்காரன் தனக்குக்களஞ்சிய முதலான நெல்லில் மிகுதி யைச்சேர்க்கட்டிவைத்துக்கொஞ்சம் சாப்பாட்டுக்காகக்குதிரில் போட்டுக்கொ ள்ளுகிறான். இந்த நெல்லைச்சாப்பிட்டுக்கொண்டே மறுபடியும் சாகுபடி செய் யத்தொடங்குகிறான். விளைகிற நெல்லை மறுபடியுஞ்சேருடன் சேர்க்கிறான். இது போல் ஜன்மாந்தரத்திற் செய்த கர்மங்கள் அந்தக்கரணஉபகித சாக்ஷியினி டத்திலுள்ள அஞ்ஞானத்தின் ஆவரணசக்தியாகிற சேரிலிருக்கின்றன. இக்கர் மங்கள் சஞ்சிதங்கள் என்னப்படும். இவைகளினின்றும் சிலகர்மங்கள் பரிப க்குவமாகி வர்த்தமான சரீரத்தைக்கொடுக்கிறவையாயும் சுகதுக்கபலன்களைத்த ருகிறவையாயும் அஞ்ஞானத்தின் விக்ஷேபசக்தியை ஆசிரயித்துக்கொண்டிரு க்கின்றன. இவைகள் பிராரப்தகர்மங்களாம். வர்த்தமான சரீரத்திற் செய்ய ப்பட்டு இனி பலனுக்கு வரக்கூடிய கர்மங்கள் ஆகாமிகளாம்.

5. ஏனெனில், "நான் அசங்கன், அகர்த்தா, அபோக்தா" என்கிற நிச் சயபலம் ஞானிக்குஉண்டு. ஆகையால் இந்த பலத்தால் செய்யப்படும் கர்ம மே அவனை ஒட்டமாட்டாது. இவைகளின் பலனை இச்சிக்கிறவனுக்குத்தான் போகங்களுண்டாகும்.

608. அபரோக்ஷாநுபூதி விவேகசூடாமணி முதலிய கிரந்தங்களில் சொல்லியிருக்கிறதாவது:— சஞ்சித ஆகாமி கர்மங்கள் போல் ஞானிக்குப் பிராரப்தகர்மமும் இல்லை. ஆனதால் போஜனமுதலிய பிரவிர்த்திகளும் ஞானிக்குச் சம்பவிக்கமாட்டா. இதற்குக் கருத்தென்னவெனில் ஞானியின் திர்ஷ்டிக்கு ஆத்மாவினிடத்தில் கர்மம் அதின் பலன் இவைகளின் சம்பந்தமில்லை. ஆனதால் ஆத்மாவினிடத்தில் எல்லாக்கர்மங்களும் நிஷேதிக்கப்பட்டிருக்கின்றன வென்கிற அபிப்பிராயத்தால் பிராரப்தம் நிஷேதிக்கப்பட்டிருக்கிறது. ஞானத்துக்குமுன் செய்த பிராரப்தத்துக்கு ஞானியின் சரீரத்தில் போகமுண்டாகமாட்டாதென்கிற அபிப்பிராயத்தால் பிராரப்தம நிஷேதிக்கப்படவில்லை. ஏனெனில் ஞானியின் சஞ்சிதகர்மம் ஞானத்தால் நாசமடைகிறது என்றும், ஆகாமியின் சம்பந்தமில்லை யென்றும், பிராரப்தம் போகத்தால் நசித்துப்போகிறதென்றும் சூத்திரக்காரர் சொல்லியிருக்கிறார். ஆனதால் பிராரப்தபலத்தால் சரீரபோஷணை சம்பந்தமான கிரியைகள் மாத்திரம் ஞானியினிடத்தி லிருக்கின்றனவேதவிர அதிகமாயில்லை.

609. கர்மம் அனேகவிதம். ஒருகர்மம் அனேக சரீரங்களையுண்டுபண்ணக்கூடும். இப்பெயர்ப்பட்ட கர்மத்தாலுண்டான முதல்சரீரத்தி லொருவனுக்கு ஞானமுண்டானால் அந்த ஞானிக்கு வேறு சரீரங்களும் பிராரப்தமாகும். ஏனெனில் எது பலத்தைக் கொடுக்க ஆரம்பித்திருக்கிறதோ அது பிராரப்தமென்னப்படும். அது போகமன்றியில் நசித்துப்போகிறதில்லை. அநேக சரீரங்களுக்கு ஹேதுவான கர்மம் ஒன்றாக இருக்கிறது. அதனாலுண்டான முதற்சரீரத்திலேயே ஞானமுண்டாகிறது. ஞானத்துக்குப் பிறகும் அந்தக் கர்மத்துக்குப் பலனாகிற அனேக சரீரங்களுண்டாகவேண்டியதா யிருக்கின்றன. ஆகையால் ஞானிக்கும் வேறுசரீரங்கள் உண்டாக வேண்டியதுதான். மேலும் பிராரப்தகர்மத்தின் பலனுக்காக எத்தனை சரீரங்களுண்டாகவேண்டுமோ அத்தனைசரீரங்களும் ஞானிக் குண்டாகின்றன. பிராரப்தபோகத்துக்கு அதிகமாக வுண்டாகிறதில்லை. ஆனதால் ஞானமும் ஸபலமாகிறது என்று ஒருவன் சொல்லக்கூடும்.

610. இது சரியன்று, ஏனெனில் வேதசித்தாந்தமென்னவெனில் ஞானியின் பிராணன் வேறு லோகத்திலாவது இவ்வுலகத்தில் வேறுசரீரத்திலாவது போகிறதில்லை என்பதாம். ஆனால் அவ்விடத்திலேயே அந்தக்கரணமும் இந்திரியங்களும் லீனமாய்விடுகின்றன, பிராணன் போகாமல் வேறு சரீரம் அடையப்படுகிறதில்லை. ஆனதால் ஞானிக்கு பிராரப்தசேஷத்தால் வேறு சரீர முண்டாகு மென்று சொன்னது சரியன்று. முன் ஆக்ஷேபத்துக்கு (609) ச்சமாதானம் என்னவென்றால்,

ஒருகர்மத்தால்[6] அனேக சரீரங்களுண்டாகும்படியாயிருந்தால் கடைசியான சரீரத்தில்தான் ஞானமுண்டாகுமேதவிர முன் சரீரங்களிலுண்டாகமாட்டாது. ஏனெனில் அனேக சரீரங்களை யுண்டுபண்ணுகிற பிராரப்தமே ஞானத்துக்குப் பிரதிபந்தகமாயிருக்கிறது. விஷயத்தில் ஆசக்தி மந்தபுத்தி பேதவாதிவசனத்தில் விசுவாசம், இவைகள் ஞானத்துக்குப் பிரதிபந்தங்களாயிருப்பதுபோல் விலக்ஷணப்பிராரப்தமும்[7] ஞானத்துக்குப் பிரதிபந்தகமாயிருக்கிறது. ஞானத்தின் பிரதிபந்தங்களிருக்க ஞானசாதனங்களான சிரவணாதிகளிருக்கும்போது பிரதிபந்தம் நிவிர்த்தியாகிறதினால் முதல் ஜன்மத்தில் செய்த சிரவணாதிகளாலேயே வேறுசரீரத்தில் ஞானமுண்டாகிறது. உதாரணம்:— **வாமதேவர்** பூர்வஜன்மத்தில் சிரவணாதிகளைச் செய்தார். பிராரப்தத்தின் பலமாகிய ஒரு சரீரம் பாக்கியாயிருந்தபடியால் ஞானமுண்டாகவில்லை. வர்த்தமான சரீரம் போய் வேறு சரீரம் அடையப்பட்டு முன்ஜன்மத்தில் செய்த சிரவணாதிகளினாலேயே அவருக்குக் கர்ப்பத்தில் ஞானமுண்டாயிற்று. ஆகையால் ஞானத்துக்குப் பிறகு வேறு சரீரத்தின் சம்பந்தமுண்டாகமாட்டாது. வர்த்தமான சரீரத்தின் சேஷ்டைகள் பிராரப்தத்தால் உண்டாகின்றன. அப்போதும் சரீரபோஷணைக்கு எவ்வளவு கிரியைகள் வேண்டுமோ அவ்வளவே உண்டாகின்றன. ராகத்தால் அதிகச் சேஷ்டைகளுண்டாகிறதில்லை. ஆகையால் ஞானி யாதொரு பிரவிர்த்தியும் இல்லாமலிருக்கிறான்.

---

6. சிலகர்மங்கள் அனேக ஜன்மங்களுக்கு ஹேதுக்களாகின்றன. பிர்ம்மஹத்தியென்னுங்கர்மம் நரகதுக்கானுபவத்துக்குப்பிறகு நாய் சர்ப்பம் முதலிய பத்து ஜன்மங்களைக்கொடுக்கிறது. கார்த்திகைமாஸத்தில் பௌர்ணமியில் ஸ்வாமிதரிசனஞ்செய்தல் ருத்தி சம்பத்துக்களுடன் கூடிய ஏழுபிராமண ஜன்மங்களைக்கொடுக்கிறது. இவ்விதமாக அனேக ஜன்மங்களுக்குக்காரணமான ஒரேகர்மம் பிராரப்தரூபத்தினால் பலத்தைக்கொடுத்து ஆகாமிப்பிரதிபந்தமாயிருக்கிறது. சிரவணாதி விசாரரூப ஞானசாதனங்களில் பிரவிர்த்தித்த புருஷனுக்கும் இந்தப்பிரதிபந்தமிருக்கும்வரையில் ஞானமுண்டாகிறதில்லை. ஆகையால் இந்தக்கர்மத்தின் பலமாகிற கடைசியான ஜன்மத்தில்தான் ஞானமுண்டாகிறதென்று நினைக்கத்தக்கது. ஏனெனில் பிராரப்தகர்மம் போகமன்றியில் நாசமாகிறதில்லை. ஞானத்தின் பிறகு வேறு ஜன்மங்களுமுண்டாகிறதில்லை. ஆகையால் கடைசியான ஜன்மத்தில்தான் ஞானமுண்டாகிறது. இதரஜன்மங்களிற் செய்த விசாரம் வியர்த்தமாய்ப்போகிறதில்லை. பரதனுடைய பிராரப்தம் மூன்று ஜன்மங்களைக்கொடுத்தது. சாதனசாமக்கிரிகளிருந்தும் அவருக்கு ஞானமுண்டாகவில்லை. மூன்றுவது ஜன்மத்திலுபதேசமன்றியில் முன்செய்த விசாரத்தால் அவருக்கு ஞானமுண்டாயிற்று.

7. ஜன்மாந்திரத்துக்கு ஹேதுவான பிராரப்தசேஷம்.

611. இவ்விதமாக நிவிர்த்திப் பிரதானமாகவே ஞானியின் வியவகாரமிருக்கிறது. இதிலோர்சங்கை:— மனதின் சுபாவம் அதிசஞ்சலமானது. ஒன்றையும் பிடித்துக்கொள்ளாமல் மனது ஸ்திரமாகிறதில்லை. ஏதையாவது பிடித்துக்கொள்ளுகிறதினால் மனது ஸ்திரப்படுகிறது. ஆகையால் மனது ஏதையாவது பிடித்துக்கொள்ளும் பொருட்டு ஞானிக்குப் பிரவிர்த்தியுண்டாகும்.

612. சமாதானம்:— சமாதியில்லாத புருஷனுக்கு மனது சஞ்சலப்பட்டாலும் சமாதியால் மனது ஜயிக்கப்படும். ஞானி சமாதியில் மனதின் ஸ்திரதையை யடைகிறான். ஆகையால் ஞானிக்கும் பிரவிர்த்தியுண்டாகிறதில்லை.

613. **சமாதியின் அஷ்டாங்கங்கள் (613—637)**:— சமாதி எட்டு அங்கங்களுடன் கூடியிருக்கின்றது. அவைகளாவன:—(1) **இயமம்.** (2) **நியமம்.** (3) **ஆசனம்.** (4) **பிராணாயாமம்.** (5) **பிரத்தியாகாரம்.** (6) **தாரணை.** (7) **தியானம்.** (8) **ஸவிகல்பசமாதி.**

614. **இயமம்**[8]:— (1) அஹிம்சை. (2) சத்தியம். (3) திருடாமை. (4) பிர்ம்மசரியம். (5) அபரிக்கிரகம். இவ்வைந்தும் இயமமென்று சொல்லப்படும்.

615. நியமம்[9]:— (1) சௌசம். (2) சந்தோஷம். (3) தவம். (4) ஸ்வாத்தியாயம். (5) ஈஸ்வரப்பிரணிதானம். இவ்வைந்தும் நியமமாம்.

---

8. இவ்விடத்தில் யமாதிகளின் லக்ஷணம் ஹடயோகானுசாரமாய் சொல்லப்பட்டிருக்கிறது. இராஜயோகானுசாரமாய் அவைகளின் அர்த்தம் ஸ்ரீசங்காராசாரியருடைய அத்வைதானுபூதி கிரந்தத்திலிருந்து இவ்விடத்தில் எழுதப்படுகிறது. எல்லாம் பிர்ம்மமென்று அறிவதினால் இந்திரியங்களை விஷயங்களில் போகாமல் செய்தல் யமம். கேவலம் அஹிம்சைக்கு யமமென்று பெயரில்லை.

9. அந்தக்கரணவிர்த்தியை விஜாதியமான பிரபஞ்சத்தில் போகாமல்ச் செய்து சஜாதியமான பிர்ம்மத்தில் செல்லும்படிச்செய்தல் நியமமேதவிர, கேவலம் சௌசாதிகள் நியமமன்று.

616. ஞானசமுத்திரக்கிரந்தத்தில் பத்துவித இயமமும் பத்துவித நியமமும் சொல்லப்பட்டிருக்கின்றன. இது புராணரீதியாம். வேதாந்தசாஸ்திரப்படி இயமநியமங்களில் ஐந்துபேதங்களே யுள.

617. ஆசனம்[10]:— ஆசனங்களின் பேதம் அநேகம். அவைகளில் (1) ஸ்வஸ்திகம். (2) கோமுகம். (3) வீரம். (4) கூர்மம். (5) பத்மம். (6) குக்குடம். (7) உத்தானம். (8) கூர்மகம். (9) தநுஷம். (10) மத்ஸ்யம். (11) பசிமதானம். (12) மயூரம். (13) சவம். (14) சிம்மம். (15) பத்ரம். (16) சித்தம் முதலிய 84 ஆசனங்கள் யோகக்கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. இவைகளின் லக்ஷணங்களும் அவைகளில் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. இக்கிரந்தம் விரியுமென்னும் பயத்தினாலும் வேதாந்தத்தில் அவைகளினுபயோகம் அதிகமாயில்லாததினாலும் அவைகளின் லக்ஷணங்களை இவ்விடத்தில் விவரிக்கவில்லை. மேற்சொல்லிய ஆசனங்களிலும் சிம்மம், பத்ரம், பத்மம், சித்தம், இந்நான்கும் முக்கியமானவை.

618. சித்தாஸனம்:— மேற்சொல்லிய நாலு ஆசனங்களிலும் சித்தாசனம் மிகவும் சிரேஷ்டமானது. அதின்லக்ஷணமாவது:— இடது குதிகாலை குதைமாணிகளின் சந்தியில் அழுத்திக்கொண்டு வலது குதிகாலை மாணியின்பேரிலழுந்திக்கொண்டு புருவங்களின் மத்தியில் திருஷ்டியைச்செலுத்திக்கட்டைபோல் நிமிர்ந்து சலனமன்றியில் சரீரமிருப்பது சித்தாசனமாம். சிலர் இதின் லக்ஷணத்தை வேறுவிதமாகவும் சொல்லுகிறார்கள். இடது குதிகாலைக்குதை மாணிகளின் மத்தியில் வைக்காமல் மாணியின்பேரில் வைக்கவேண்டியது. அதின்பேரில் வலது குதிகாலை வைக்கவேண்டியது. மற்ற லக்ஷணங்கள் முன் போன்றனவே. இந்தச்சித்தாசனமும் முக்கியதுபோல் அதிக சிரேஷ்டமானதுதான். ஏனெனில் சில ஆசனங்கள் ரோகங்களை நாசஞ்செய்கின்றன. சில ஆசனங்கள் பிராணாயாமாதி சமாதி அங்கங்களுக்குச்சாதகங்களாயிருக்கின்றன. சித்தாசனம் சமாதியின் ஆசனமாயிருக்கிறது. ஆகையால் இது அதிகச் சிரேஷ்டமானது. இதற்கே **வஜ்ஜிராஸன**மென்றும் **முக்தாஸன**மென்றும் **குப்தாஸன**மென்றும் பெயர்களாம்.

619. பிராணாயாமம்[11]:— ஆசனசித்தியின் பிறகு பிராணாயா

---

10. எந்த ஸ்திதியில் பிர்ம்மசிந்தனை சுகமாய் எப்போதும் ஆகுமோ, அதுவே ஆசனம். கேவலம் கம்பளாதிகள் ஆசனமன்று.

11. சித்தாதி சகலபாவங்களையும் பிர்ம்மமாகபாவித்து எல்லாவிருத்திகளையும் தகைப்பது பிராணாயாமம்.

மம் செய்யவேண்டியது. இந்தப்பிராணாயாமம்[12] அனேகவிதம். ஆயினும் அதின் லக்ஷணம் சுருக்கமாய்ச்சொல்லப்படும். மூக்கின் இடது துவாரத்தின் மூலமாக இடையென்னும் நாடியால் வாயுவைப்பூரிக்கவேண்டியது. இது பூரகம்[13] என்னப்படும். மூக்கின் வலது துவாரத்தால் காற்றைவிடவேண்டியது. இது ரேசகமென்னப்படும்[14]. சுஷும்னையால் காற்றையடக்கவேண்டியது. இது கும்பகமென்னப்படும்[15]. பூரகரேசககும்பகங்களுக்குப்பிராணாயாமமென்று பெயர். இந்தப்பிராணாயாமம் இருவகைத்து. ஒன்று அகர்ப்பம் மற்றொன்று ஸகர்ப்பம். பிரணவோச்சாரணையன்றியில் செய்யும் பிராணாயாமம் அகர்ப்பமென்னப்படும். பிரணவோச்சாரணசகிதமான பிராணாயாமம் ஸகர்ப்பமென்னப்படும்.

620. பிரத்தியாகாரம்:—விஷயங்களினின்றும் சகல இந்திரியங்களையுந்தகைப்பது பிரத்தியாகாரமென்னப்படும்[16].

621. தாரணை:— இடைவிடாது அந்தக்கரணம் ஒரேரீதியாயிருத்தல் தாரணையென்னப்படும்[17].

622. தியானம்:— அத்துவிதீயவஸ்துவினிடத்தில் விட்டுவிட்டுச்செல்லும் அந்தக்கரணத்தின் பிரவாகத்துக்குத்தியானமென்றுபெயர்[18]

---

12. சிலர் பிராணாயாமத்தை (1) பாஹ்ய (2) ஆப்பியந்தர (3) ஸ்தம்பவிர்த்தியெனச்சொல்லுகிறார்கள். சுவாசம் உள்ளிழுக்கப்பட்டு அதின் கதிநின்றுபோகுதல் ஆப்பியந்தரம். சுவாசம் வெளியேவிடப்பட்டு கதி நின்றுபோகுதல் பாஹ்யம். உள்ளிலும் வெளியிலும் கதி ஒரேகாலத்தில் நின்றுபோகுதல் ஸ்தம்பவிர்த்தியாம்.

13. "நான் பிர்ம்மம்" என்னும் விர்த்திபூரகம்.

14. அனாத்மாவான பிரபஞ்சத்தை நிஷேதிப்பது ரேசகம்.

15. அகண்டாகாரவிர்த்தியில் சலனமில்லாததுதான் கும்பகம்.

16. சப்தாதி விஷயங்களிலும் ஆத்மஸ்வருபத்தைப்பார்த்தல் பிரத்தியாகாரம்.

17. மனம்போகிற விஷயங்களில் எல்லாம் பிர்ம்மத்தைப்பார்த்து அதையே அனுசந்தானம் செய்வது தாரணை.

18. "நான் பிர்ம்மம்" என்கிற அகண்டாகாரவிர்த்தியில் சலிக்காமல் இருப்பது தியானம்.

623. **சமாதி:—** உண்டாயிருக்கும் சம்ஸ்காரங்களின் திரஸ்காரமும் அடங்கியிருக்கும் ஸம்ஸ்காரங்களின் பிரகடமுமுண்டாகி அந்தக்கரணம் ஏகாக்கிரமாய்ப்பரிணமித்தல் சமாதியென்னப்படும்.[19]

624. **சமாதிபேதங்கள்,—** இச்சமாதி இருவகையாம். ஒன்று ஸவிகல்பசமாதி. மற்றொன்று நிர்விகல்பசமாதி. ஞாதிரு, ஞானஞேயரூபமான திரிபுடி விளக்கத்துடன் அத்துவிதீயப் பிர்ம்மத்தினிடத்திலிருக்கிற அந்தக்கரண விர்த்தியின் நிலைமைக்கு ஸவிகல்ப சமாதியென்று பெயர். இந்த ஸவிகல்பம் இருவகை. ஒன்று சப்தாநுவித்தம். மற்றொன்று சப்தானனுவித்தம். "அகம்பிர்ம்மாஸ்மி" என்னும் சப்தத்துடன் கூடியது சப்தாநுவித்த சமாதியாம். சப்தரகிதமானது சப்தானனுவித்தசமாதியாம். திரிபுடித்தோற்றமன்றியில் அகண்டப் பிர்ம்மாகாரமான அந்தக்கரணவிர்த்தியின் நிலைமைக்கு நிர்விகல்ப சமாதியென்று பெயர். இவ்விதமாக ஸவிகல்ப நிர்விகல்பரூபத்தால் சமாதி இருவகையாகிறது.

625. **ஸவிகல்பத்துக்கும் நிர்விகல்பத்துக்கும் பேதம்:—** இவைகளில் ஸவிகல்ப சமாதி சாதனமாயிருக்கிறது. நிர்விகல்ப சமாதி பலமாயிருக்கிறது. சாதனரூப ஸவிகல்பசமாதியில் திரிபுடிரூபத்துவைதம் பிரதீதியாகிறது. ஆயினும் இந்தத்துவைதம் அடியில் கண்டபடிப் பிர்ம்மரூபமாகப் பிரதீதியாகிறது. மண்விகாரத்தை மண்ரூபமாக அறிவதால் விவேகிக்கு மண்விகாரமாக கடாதிகள் பிரதீதியாகின்றன. ஆனால் மண்ரூபமே பிரதீதியாகிறது. இதுபோல் ஸவிகல்ப சமாதியில் திரிபுடித்துவைதம் பிர்ம்மரூபமாகவே பிரதீதியாகிறது. நிர்விகல்ப சமாதியிலும் ஸவிகல்ப சமாதியிற்போல் திரிபுடித்துவைதமிருந்தாலும் அது பிரதீதியாகிறதில்லை. திர்ஷடாந்தம்,— ஜலத்தில் உப்பைக்கரைத்தால் உப்பு இருந்தும் நேத்திரத்துக்கு அது பிரதீதியாகிறதில்லை. இவ்விதமாக ஸவிகல்ப நிர்விகல்பசமாதிகளுக்கு என்ன பேதமென்றிக்கேட்டில் ஸவிகல்பசமாதியில் பிரம்மரூபமாகத்துவைதம் பிரதீதியாகிறது. நிர்விகல்பசமாதியில் திரிபுடிரூபத்துவைதம் பிரதீதியாகிறதில்லை.

626. **சுஷுப்திக்கும்நிர்விகல்பசமாதிக்கும்பேதம்—** சுஷுப்தியில் அந்தக்கரணத்தின் விர்த்தி பிர்ம்மாகாரமாகிறதில்லை. நிர்

---

19. அந்தக்கரணவிர்த்தி விஷயத்திற் செல்லாமலும் அகண்டபிர்ம்மாகாரமாகி, தியாதிருத்தியேயாகாரவிர்த்தியின் அந்தியில் இருப்பது சமாதி.

விகல்பசமாதியில் பிர்ம்மாகாரமான அந்தக்கரணத்தின் விர்த்தி இருக்கிறது. அந்தக்கரணம்[20] இல்லாமலில்லை. இவ்விதமாகச் சுஷுப்தியில் விர்த்திசகித அந்தக்கரணத்தின் அபாவமுண்டு. நிர்விகல்பசமாதியில் விர்த்திசகித அந்தக்கரணமிருந்தும் பிரதீதியாகிறதில்லை. நிர்விகல்பசமாதியில் அந்தக்கரணத்தின் பிர்ம்மாகாரவிர்த்திக்கு ஸவிகல்ப ஸமாதியின் அப்பியாஸம் ஹேதுவாம். ஆகையால் சாதனரூபமான எட்டங்கங்களில் ஸவிகல்பசமாதி சேர்க்கப்பட்டிருக்கிறது. நிர்விகல்பஸமாதி பலனாயிருக்கிறது.

627. **நிர்விகல்பசமாதி இருவகை:—** நிர்விகல்பசமாதியும் இருவகைத்து. ஒன்று **அத்துவைதபாவனாரூபம்.** மற்றொன்று **அத்துவைதாவஸ்தானரூபம்.** அத்துவைதப் பிர்ம்மாகாரமான அந்தக்கரணத்தின் அஞ்ஞானவிர்த்திசகித நிர்விகல்பசமாதி அத்துவைத பாவனாரூப நிர்விகல்ப சமாதியென்று சொல்லப்படும். இந்தச்சமாதியில் அப்பியாஸம் அதிகமாகிறதினால் பிர்ம்மாகாரவிர்த்தியும் சாந்தமாய்விடுகிறது. ஆனதால விர்த்திரகிதமான நிர்விகல்பசமாதிக்கு அத்துவைதாவஸ்தான ரூபநிர்விகல்ப சமாதியென்று சொல்லப்படும். எப்படிக் காய்ச்சின இரும்பின்பேரில் விடப்பட்ட ஜலத்திவலை அவ்விரும்பிலேயே பிரவேசிக்கிறதோ அப்படி அத்துவைதபாவனாரூபசமாதியின் திடமான அப்பியாஸத்தால் அத்தியந்தபிரகாசமான பிரம்மத்தினிடத்தில் விர்த்தி லயமாய்விடுகிறது. இந்த அத்துவைத அவஸ்தானரூப நிர்விகல்பசமாதிக்கு அத்துவைதபாவனாரூபநிர்விகல்பசமாதி சாதகமாயிருக்கிறது. அத்வைதாவஸ்தான ரூப நிர்விகல்பம் பலம்.

558. **அத்துவைத அவஸ்தானரூபசமாதிக்கும்சுஷுப்திக்கும்பேதம்:—** சுஷுப்தியில் விர்த்தி அஞ்ஞானத்தில் லயமாகிறது.

---

20. அக்கினியின் உபாதானகாரணம் வாயு. அக்கினியின் உற்பத்தி ஸ்திதி நாசங்கள் வாயுவுக்கு ஆதீனமாயிருக்கின்றன. ஆகையால் வாயு சுத்தமாய் இல்லாதபக்ஷத்தில் விளக்கு அணைந்துபோம். ஆகையால் காற்று அதிகமாயில்லாதவிடத்திலும் சொற்பமாயிருக்கிறவிடத்திலும் தீபம் சலிக்காமலெரிகிறது. இதுபோல் சமாதியிலும் அந்தக்கரணம் சுத்தமாயில்லாதபக்ஷத்தில் சரீரமில்லாமற்போய் விழுந்துபோகும். ஆகையால் மனம் புத்தி சித்த அகங்காராதிகளின் விர்த்திகளில்லாமல் 'அந்தக்கரணம் சூக்ஷ்மமாய்ச்சமாதியிலிருக்கிறது. மேலும் சமாதியிலிருந்து எழுந்திருந்த காலத்தில் சமாதியின் ஸ்மரணை இருப்பதாலும் அனுபவிக்கப்படாததின் ஸ்மரணை உண்டாகமாட்டாதபடியாலும் சமாதிகாலத்தில் விர்த்தி இருந்ததாகவே அனுமானிக்கப்படுகிறது.

அத்துவைத அவஸ்தானரூபசமாதியில் விர்த்திபிர்மமப்பிரகாசத்தில் லயமாகிறது[21]. மேலும் சுஷுப்தியின் ஆனந்தம் அஞ்ஞானவிருதமாயிருக்கிறது. சமாதியில் பிர்ம்மானந்தம் ஆவரணமன்றியில் விளங்குகிறது.

629. நிர்விகல்பசமாதியின்விக்கினங்கள். (629—637)

(1) லயம்:—ஆனால் நிர்விகல்பசமாதியில் நான்கு விக்கினங்களிருக்கின்றன. அவைகளைப் போக்கும்பொருட்டு அவைகளின் சொரூபத்தைச் சொல்லுகிறேன். லயம் விக்ஷேபம் கஷாயம் ரஸாஸ்வாதம் என விக்கினங்கள் நான்காம். ஆலஸ்யத்தினாலாவது நித்திரையினாலாவது விர்த்தியில்லாமலிருப்பதற்கு லயமென்றுபெயர். இந்த லயத்தால் சுஷுப்திக்குச் சமானமான நிலமையுண்டாகின்றது. பிர்ம்மானந்தம் விளங்குகிறதில்லை. ஆகையால் நித்திரை ஆலஸ்யம் முதலிய காரணங்களால் எப்போது விர்த்தி அதினுபாதானமான அந்தக்கரணத்தில் லயமாகிறதோ அப்போது யோகீ சாவதானப்பட்டு நித்திரைமுதலியவைகளைத் தகைத்து விர்த்தியை எழுப்பவேண்டியது. இந்த லயரூபவிக்கினத்துக்கு விரோதமான நித்திரை ஆலஸ்ய முதலியவைகளை நிரோதஞ்செய்து விர்த்தியை எழுப்பி விடுவதற்குக் கவுடபாதாசாரியர்[22] சித்தசம்போதனமென்று பெயரிட்டிருக்கிறார்.

630. விக்ஷேபம்:—இப்போது விக்ஷேபத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறேன். பூனை முதலியவைகளின் பயத்தால் சிட்டுக்குருவிகள் வீட்டுக்குள் பிரவேசிக்கின்றன. அப்போது பயத்தால் துக்கமுற்று அக்குருவிகள் அக்கிரகத்திற்குள் இன்னஇடத்தில் இருக்கலாமென்று அறிகிறதில்லை. ஆகையால் மறுபடியும் வெளியேவந்து பயத்தை அல்லது மரணரூபதுக்கத்தை யடைகின்றன. இதுபோல் அனாத்மபதார்த்தங்களை

---

21. இவ்விடத்தில் ஒராக்ஷேபம்:— விர்த்தி நிர்விகாரமான பிர்ம்மத்தில் லயமாகுவதாக எப்படிச்சொல்லலாம். சமாதானம்:— மேற்சொல்லியதிருஷ்டாந்தத்தில் ஜலத்திவலை அதின் உபாதானகாரணமாகிய அக்கினியில் லயமாகிறதேதவிர இரும்பில் லயமாகிறதில்லை. ஆயினும் காய்ச்சின இரும்பில் லயமாயிவிட்டதாக உபசாரத்தால் சொல்லப்படுகிறது. இதுபோல பிர்ம்மப்பிரகாசம் விளங்குகிற நிமத்தியத்தினால் விர்த்தி லயமாகிறதினால் பிரம்மப்பிரகாசத்திலேயே லயமாகிறதாகச்சொல்லுவது உபசாரமாத்திரமே.

22. கவுடபாதாசாரியருடைய மாண்டூக்கிய உபநிஷத்தின் காரிகையில் இது சொல்லப்பட்டிருக்கிறது.

த் துக்கஹேதுக்களாக அறிந்து அத்துவைதானந்தத்தை விஷயமாக்குவதற்காக விர்த்தி அந்தர்முகமாயாகிறது. அப்போது விர்த்திக்கு விஷயமான சேதனம் அதிசூக்ஷமமாயிருக்கிறது. ஆகையால் கொஞ்சகாலமாவது விர்த்தி அந்தர்முகமாயில்லாவிடில் சேதனஸ்வரூபானந்தத்தை யடையாமல் விர்த்தி அக்கணமே பகிர்முகமாய்விடுகிறது. இந்தப் பகிர்முக விர்த்திக்கு விக்ஷேபமென்று பெயர். இந்தவிர்த்தி ஸ்திரப்படாதவரையில் சொரூபானந்தம் அடையப்படமாட்டாது. ஆகையால் அந்தர்முகவிர்த்தி யுண்டானாலும் எவ்வளவுகாலம்விர்த்தி பிர்ம்மாகாரமாகவில்லையோ அவ்வளவுகாலம் பாஹியபதார்த்தங்களில் தோஷபாவத்தால் விர்த்தியைப் பகிர்முகமாகும்படி யோகிவிடக்கூடாது. ஆனால் விர்த்தியை அந்தர்முகமாகவே நிறுத்தவேண்டியது. விக்ஷேபரூபவிக்கினத்துக்கு விரோதமான யோகியின் பிரயத்தனத்துக்குக் கவுடபாதாசாரியார் சமமென்று பெயரிட்டிருக்கிறார்.

631. **கஷாயம்:**—ராகாதிதோஷத்துக்குக் கஷாயமென்றுபெயர். ராகாதிதேஷங்கள் இருவகை. ஒன்று பாஹியமாம். மற்றொன்று அந்தரமாம். வர்த்தமானகாலத்திலிருக்கிற புத்திரன் ஸ்திரீ தனாதி விஷயங்கள் பாஹியமாம். சென்றகாலத்தை யல்லது வருங்காலத்தைச் சிந்தனைசெய்கிறரூடமான மனோராச்சியம் அந்தரமாம். இவ்விருவகை ராகாதிகளும் சமாதியிற் பிரவர்த்திக்கயோகிக்கு உண்டாகமாட்டா.

632. **அந்தகரணத்தின் 5 பூமிகைகள்:**— எனினில் சித்தத்துக்கு ஐந்துபூமிகைகளுண்டு. அவைகளில் (1)க்ஷேபபூமிகை (2)மூடதாபூமிகை(3)விக்ஷேபபூமிகை (4)ஏகாக்கிரபூமிகை (5)நிரோதபூமிகை என்பனவாம். உலகவாசனை[23] தேகவாசனை[24] சாஸ்திரவாசனை[25] மு

23. என்னை உலகம் நிந்திக்கக்கூடாது. எல்லாரும் என்னை துதிக்கவேண்டும். இந்த ஆசைக்கு உலகவாசனை யென்றுபெயர்.

24. ஸ்தூலசூக்ஷ்மதேகங்களின் ரோகாதிரூபமலங்களை ஔஷதாதிகளால் நிவர்த்திசெய்து தேகங்களுக்கு புஷ்டி அழகு முதலியவைகளைச்சம்பாதிக்கவேண்டியது. தீர்த்தயாத்திரை முதலியவைகளால் பாபங்களை நிவர்த்திசெய்து புண்ணியபாபங்களைச்சம்பாதிக்கவேண்டியது. இப்படிப்பட்ட ஆசைக்கு தேகவாசனை யென்று பெயர்.

25. சகலசாஸ்திரங்களையும் தெரிந்துக்கொள்ளவேண்டும் என்கிற ஆசைக்குச் சாஸ்திரவாசனையென்று பெயர்.

தலிய ரஜோகுணப்பரிணாமங்களாகிற திடமான அனாத்ம வாசனையை விக்ஷேபமென்பார்கள். நித்திரை ஆலஸ்யம் முதலிய தமோகுணப்பரிணாமங்களை மூடதை எனபார்கள். தியானத்திற் பிரவர்த்தித்த சித்தம் ஒருகாலத்தில் வெளியே செல்வது விக்ஷேபமென்னப்படும். அந்தக்கரணத்தின் அதீதபரிணாமமும் வர்த்தமான பரிணாமமும் சமானாகாரமாகிறதை ஏகாக்கிர பூமிகையென்பார்கள்.

ஏகாக்கிரதையின் லக்ஷணம் யோகசூத்திரத்தில் **பதஞ்சலி**பகவானால் சொல்லப்பட்டிருப்பதற்குப் பாவமென்னவெனில் சமாதிகாலத்தில் யோகியின் அந்தக்கரணத்தில் ஏகாக்கிரதை யுண்டாகிறது. இந்த ஏகாக்கிரதை விருத்தியின் அபாவரூபமன்று. ஆனால் சமாதிகாலத்தில் அந்தக்கரணத்தின் பரிணாமமெல்லாம் பிர்ம்மத்தையே விஷயமாக்குகிறது. ஆனதால் அந்தக்கரணத்தின் அதீதபரிணாமமும் வர்த்தமானபரிணாமமும் கேவலம் பிர்ம்மாகாரமாகிறதினால் சமானாகாரமாகிறது. இந்த ஏகாக்கிரதையின் பெருக்கத்துக்கு நிரோதமென்றுபெயர். இவ்வைந்து பூமிகைகளும் அந்தக்கரணத்துக்குண்டு. பூமிகையென்றால் அவஸ்தையாம்.

இவ்வைந்து பூமிகைகளும் கூடின அந்தக்கரணத்துக்கு முறையே க்ஷிப்தம் மூடம் விக்ஷிப்தம், ஏகாக்கிரம் நிருத்தம் என்றும் பெயர். இவைகளில் க்ஷிப்த மூட அந்தக்கரணங்களுக்குச் சமாதியில் அதிகாரமில்லை. விக்ஷிப்தஅந்தக்கரணத்துக்கு அதிகாரமுண்டு. ஏகாக்கிரநிருத்த அந்தக்கரணங்கள் சமாதியில் சித்தமாகவே யிருக்கின்றன. இவ்விதமாக யோகசாஸ்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.

633. ஆக்ஷேபம்:—ராகாதிதோஷசகித அந்தக்கரணம் க்ஷிப்தமாகவே இருக்கிறது. இந்த க்ஷிப்தஅந்தக்கரணத்துக்கு யோகத்தில் அதிகாரமில்லை. ஆகையால் ராகாதிதோஷரூபகஷாயம் சமாதிக்கு விக்கினமென்று[26] சொல்வது சரியன்று.

---

26. ஓரிடத்திற்போக ஒருவனுக்கதிகாரமிருந்தால் யாதானுமோர் காரணத்தினால் அவனுக்குத்தடையுண்டாகக்கூடும். அதிகாரமேயில்லாதவனுக்குத் தடையுண்டாவதாக எப்படிச்சொல்லக்கூடும். இதுபோல் க்ஷிப்தாந்தக்கரணத்துக்குச்சமாதியில் அதிகாரமிருக்கும்பக்ஷத்தில் ராகாதிதோஷங்களாகிற கஷாயத்தால் சமாதிக்கு விக்கினமுண்டாகும். ஆனால் க்ஷிப்தாந்தக்கரணத்துக்குச்சமாதியில் அதிகாரமேயில்லை. ஆகையால் அதற்கு ராகாதிரூபகஷாயம் விக்கினமாக எப்படியாகும்.

634. **சமாதானம்:**—ஆயினும் இதற்குச் சமாதானமென்னவெனில், பாஹ்யமாகவாவது ஆந்தரமாகவாவதிருக்கும் ராகாதிகள் க்ஷிப்தஅந்தக்கரணத்திலேயே[27] யுண்டாகின்றன. இந்த அந்தக்கரணத்துக்கு அதிகாரமில்லை. ஆயினும் அனேகஜன்மங்களில் முன் அநுபவிக்கப்பட்டிருந்த பாஹ்ய ஆந்தரராகத்வேஷங்களின் சூக்ஷ்மசம்ஸ்காரம் விக்ஷிப்தாதி அந்தக்கரணத்திலும் இருக்கக்கூடும், ஆகையால் ராகத்வேஷங்களுக்குக் கஷாய மென்றுபெயரில்லை. ஆனல் ராகத்வேஷாதிகளின் சம்ஸ்காரத்துக்குக் கஷாயமென்று பெயர். இந்தச் சமுஸ்காரம் அந்தக்கரணமிருக்கும் வரையில் நீங்குகிறதில்லை. ஆகையால் சமாதிகாலத்திலும் அந்தக்கரணத்திலிருக்கிறது. ஆனல் ராகத்வேஷாதிகளின் உத்பூதசமுஸ்காரம் சமாதிக்கு விரோதம். அநுத்பூதம் விரோதமன்று. உத்பூதமென்றால் வெளிப்படை, அநுத்பூதம் என்றால் அடக்கம். சமாதியில் பிரவர்த்தித்த யோகிக்கு ராகத்வேஷங்களின் சமுஸ்காரம் வெளிப்பட்டால் விஷயத்தில் தோஷதிர்ஷ்டியால் அதை யவன் அமுத்திவிடவேண்டியது.

635. விக்ஷேபத்துக்கும் கஷாயத்துக்கும் பேதமென்னவெனில், பாஹ்யவிஷயாகாரவிர்த்திக்கு விக்ஷேபமென்று பெயர். யோகியின் பிரயத்தனத்தினல் விர்த்தி அந்தர்முகமாகியும் ராகாதிகளின் உத்பூதசமுஸ்காரத்தால் அந்தர்முகமான விர்த்தியும் தகையப்பட்டுப் பிர்ம்மத்தை விஷயமாக்காதபொழுது அவ்விர்த்திக்குக் கஷாயமென்றுபெயர். விஷயத்தில தோஷத்தைப் பார்த்து யோகி பிரயத்தனம பண்ணுகிறதினல் கஷாயவிக்கினம் நிவிர்த்தியாய்விடும.

636. **ரஸாஸ்வாதம்**(636—637):—யோகிக்குப் பிர்ம்மானந்தத்தின் அநுபவமுண்டாகிறது. விக்ஷேபரூபதுக்கத்தின் நிவிர்த்தியின் அநுபவமுமுண்டாகிறது. சிலருக்குத்துக்கநிவிர்த்தியினலேயும் ஆனந்தமுண்டாகிறது. திர்ஷ்டாந்தம்:— சுமையைத்தூக்கிக்கொண்டிருக்கிறவனுக்குச் சுமையை இறக்குவதனல் ஆனந்தமுண்டாகிறது. அப்போது

---

27. ராகாதிகள் பாஹ்யம் ஆந்தரம் வாசனரூபமென மூவகையாம் பாஹ்யப்பிரவிர்த்திக்கு ஹேதுவானது பாஹ்யம், அல்லது உத்யுக்தம். மனேராச்சியரூபமானது ஆந்தரம், அல்லது ஆசாரூபம். ஜன்மாந்தரத்தில் அநுபவித்தராகாதிகளின் ஸம்ஸ்காரம் வாஸனரூபம். இது பாஹ்யாந்தரபேதத்தால் இருவகையாம். இவைகளின் விவரம் ஜீவன்முக்திவிவேகமென்னுங்கிரந்தத்தில் வித்தியாரண்யஸ்வாமிகளால் சொல்லப்பட்டிருக்கிறது.

ண்டான ஆனந்தத்துக்கு சுமையாலுண்டான துக்கத்தின் நிவிர்த்திதவிர வேறு காரணமில்லை. இந்தத்துக்கநிவிர்த்தியால் 'எனக்கு ஆனந்தமுண்டாயிற்றென்று அவன் சொல்லுகிறான். ஆகையால் துக்கநிவிர்த்தியும் ஆனந்தத்துக்கு ஏதுவாகிறது. இது போல் யோகிக்குச் சமாதியில் விக்ஷேபத்தாலுண்டான துக்கநிவிர்த்தியினின்றும் ஆனந்தமுண்டாகிறது. இதின் அனுபவத்துக்கு ரஸாஸ்வாதமென்று பெயர். இவ்வனுபவத்திலேயே யோகி திருப்தியடைந்துவிட்டால் சகலமான உபாதிகளுமற்றப் பிர்ம்மானந்தாகாரவிர்த்தி அவனுக்குண்டாகமாட்டாது. ஆனதால் அதின் அனுபவம் சமாதியில் உண்டாகமாட்டாது. ஆனதால் துக்கநிவிர்த்தியாலுண்டாகும் ஆனந்தத்தின் அனுபவரூப ரஸாஸ்வாதமும் சமாதியில் விக்னமாகும். இச்சித்தபதார்த்தம் கிடைக்காவிட்டாலும் விரோதநிவிர்த்தியால் ஆனந்தமுண்டாகிறதென்பதற்கு வேறு திருஷ்டாந்தம். பூமியில் புதையலிருக்கிறது. அதுபொல்லாத விஷசர்ப்பத்தால் காக்கப்பட்டிருக்கிறது. புதையலை எடுப்பதற்குமுன்னும் அதையடைவதற்குத் தடையாயிருந்த சர்ப்பத்தை யொழிப்பதினாலானந்த முண்டாகிறது. அப்போது சர்ப்பநிவிர்த்தியாலுண்டான ஆனந்தத்தில் ஒருவன் திருப்தியடைந்து, புதையலெடுக்கும் முயற்சியை விட்டுவிட்டால் புதையல் கிடைத்தாலுண்டாகுமானந்தமுண்டாகாது. இதுபோல், அத்துவைதப்பிர்ம்மரூபமாகிறது புதையல். தேகாதியனாத்ம பதார்த்தங்களின் பிரதீதிரூப விக்ஷேபம் சர்ப்பம். விக்ஷேபரூபசர்ப்பத்தின் நிவிர்த்தியால் உண்டாகும் அவாந்தரானந்தரூபரஸத்தின அனுபவம ஆஸ்வாதனம். இது புதையல் ரூபமான அத்துவைதப் பிர்ம்மத்தை யடைவதாலுண்டாகும் மகானந்தத்தைபடைவதற்குப் பிரதிபந்தகமாயிருப்பதால் விக்னமென்று சொல்லப்படுகிறது.

637. ரஸாஸ்வாதத்தின் வேறொரு அர்த்தம்:—ஸவிகல்பசமாதிக்குப் பிறகு நிர்விகல்பசமாதியுண்டாகிறது. ஸவிகல்பசமாதியில் திரிபுடி பிரதீதியாகிறது. ஆனதால் ஸவிகல்பசமாதியின் ஆனந்தம் திரிபுடிரூப உபாதிசகிதமாயிருப்பதால் ஸோபாதிகமென்று சொல்லப்படுகிறது. நிர்விகல்பசமாதியில் திரிபுடி பிரதீதியாகிறதில்லை. ஆகையால் நிர்விகல்பசமாதியில் நிருபாதிகானந்த முண்டாகிறது. இவ்விதமாக ஸவிகல்பசமாதிக்குப் பிறகும் நிர்விகல்பசமாதிக்கு முன்னும் ஸவிகல்பசமாதியின் ஸோபாதிகானந்தம் தியாகப்பண்ணப்படாமல் அனுபவிக்கப்படுகிறது. இது ரஸாஸ்வாதமென்னப்படும். ஆனதால் விக்ஷேபநிவிர்த்தியாலுண்டாகும் ஆனந்தத்தின் அனுபவம், அல்லது ஸவிகல்பசமாதியின் ஆனந்தானுபவமும் ரஸாஸ்வாதமென்னப்படும்: இவ்விருவித ரஸாஸ்வாதங்களும் நிர்விகல்பசமாதியின் பரமானந்தானுபவத்துக்கு விரோ

களாவதால் விக்னங்களாகின்றன: ஆகையால் ரஸாஸ்வாதத்தையுந் தள்ளவேண்டும்.[27(a)] இவ்விதமாக நிர்விகல்பசமாதியில் நான்கு விக்கினங்களிருக்கின்றன. இந்நான்கு விக்கினங்களும் சமாதியின் ஆரம்பத்திலுண்டாகின்றன. ஆனதால் சாவதானமாய் இவைகளைத் தகைத்துச் சமாதியில் பரமானந்தத்தை வித்துவான் அடைகிறான். இவனையே ஜீவன்முக்தனென்று சொல்லுகிறார்கள்.

638. இவ்விதமாக ஞானியின் சித்தம் நிராலம்பமாயிருக்கிறதில்லை. பிராரப்தபலத்தால் சமாதியினின்றும் எழுந்திருந்தாலும் சமாதியில் அநுபவித்தபரமானந்தத்தின் ஸ்மரணை இருக்கிறது. ஆனதால் எழுந்திருந்த காலத்திலும் ஞானியின்சித்தம் நிராலம்பமாயில்லை. போஜனாதிகளிலிருக்கும் ஞானியின் பிரவிர்த்தி கேவலம் பிராரப்தத்தாலுண்டாகிறது. ஆனால் போஜனாதிவியவகாரங்களில் ஞானி துக்கமிருக்கிறதாக நினைத்துப் பிரவர்த்திக்கிறான். ஏனெனில் போஜனாதிகளிற் பிரவிர்த்தியும் சமாதிசுஷுப்திகளுக்கு விரோதியாயிருக்கிறது. சரீர ஸம்ரக்ஷணையின் பொருட்டுப் போஜனாதிகளிற் பிரவிர்த்தியும் எவனுக்குத் துக்கரூபமாய்ப் பிரதீதியாகிறதோ அவனுக்கு அதிகப் பிரவிர்த்தியுண்டாகிறதில்லை. இவ்விதமாக அனேக ஆசாரியர்கள் இந்தபக்ஷத்தை யங்கீகரித்திருக்கிறார்கள். ஜீவன்முக்தியின் ஆனந்தமும் பாஹ்யப் பிரவிர்த்தியிலுண்டாகிறதில்லை. ஆனால் நிவிர்த்தியிலுண்டாகிறது. ஆனதால் ஜீவன்முக்தியின் சுகத்தை யிச்சிக்கிற ஞானிக்குப் பாஹ்யப்பிரவிர்த்தி யுண்டாகிறதில்லை. (603–638)

க்குச்சமாதானம்(639—647)

639. ஆயினும் ஞானிக்கு நிவிர்த்தியிலும்நியமமிருப்பதாகச் சொல்வதுசரியன்று. ஏனெனில் நிவிர்த்தியில் அல்லது பிரவிர்த்தியில் வேதத்தின் ஆஞ்ஞாரூபவிதி ஞானிக்கு ஏற்படவில்லை. ஆகையால்

27 (a). (1) அகண்டவஸ்துவை அவலம்பிக்காத சித்தவிருத்தியின் நித்திராரூப லயம். (2) அகண்டவஸ்துவை அவலம்பிக்காமல் வேறு வஸ்துவை அவலம்பிக்கும் சித்தவிருத்தியின் விக்ஷேபம். (3) லயவிக்ஷேபங்களிராவிடினும் ராகாதிவாசனையால் சித்தவிருத்தி அகண்டவஸ்துவை அவலம்பிக்காமலும் ஸ்தம்பமாயிருப்பதுமான கஷாயம். (4) அகண்டவஸ்துவை அவலம்பிக்காமல் சவிகல்பசமாதியின் ஆனந்தத்துடன் திருப்தியடைகிற சித்தவிருத்தியின் ரஸாஸ்வாதம்.

ஞானி நிரங்குசன்.[28] ஞானிக்கு வியவகாரம்[29] பிராரப்தத்தாலுண்டாகிறது. எந்த ஞானியின் பிராரப்தம் பிக்ஷாபோஜனமாத்திரபலத்துக்கு ஹேதுவாகிறதோ அவனுக்குப் பிக்ஷாபோஜனமாத்திரத்திற் பிரவிர்த்தியுண்டாகிறது. எவன் பிராரப்தம் அதிக போகத்துக்கு ஏதுவாகிறதோ அவனுக்கு அதிகத்திலும் பிரவிர்த்தியுண்டாகிறது.

640. **ஆக்ஷேபம்:**—எவன் பிராரப்தம் பிக்ஷாபோஜனமாத்திரத்துக்கு ஹேதுவாகிறதோ அவனுக்குத்தான் ஞானமுண்டாகும். எவன் பிராரப்தம் அதிக வியவகாரத்துக்கு ஹேதுவாகிறதோ அவனுக்கு ஞானமுண்டாகமாட்டாது. ஆகையால் பிக்ஷாபோஜனதிவியவாரங்களைக்காட்டிலும் அதிக வியவகாரம் ஞானிக்குண்டாகக்கூடாது. எவனுக்கு அதிகப்பிரவிர்த்தியிருக்கிறதோ அவன் ஞானியன்று.

641. **சமாதானம்:**—இப்படி ஒருவன் சங்கிப்பது சரியன்று. ஏனெனில் **யாஞ்ஞவல்கியர் ஜனகாதிகள்** ஞானிகளாகச் சொல்லப்படுகிறார்கள். சபையில் ஜயமடைந்து தனத்தைச் சேர்க்கும் வியவகாரம் யாஞ்ஞவல்கியருக்கும் ராஜ்யபரிபாலனவியவகாரம் ஜனகருக்கும் சொல்லப்பட்டிருக்கின்றன. மேலும் வாசிஷ்டகிரந்தத்தில் அனேக ஞானிகளின் வியவகாரம் அனேகவிதமாயச் சொல்லப்பட்டிருக்கிறது.

---

28. விஷயானந்தம் தனக்கதிகமான ஆனந்தத்தை அபேக்ஷிக்கிறபடியால் ஸாங்குசமாயிருக்கிறது. ஞானியின் ஆனந்தம் பிர்ம்மானந்தத்துக்கு வேறாகாதபடியால் நிரங்குசமாயிருக்கிறது.

29. ரஜ்ஜுஞானத்தால் சர்ப்பப்பிராந்தி பாதிக்கப்படுகிறதுபோல் அதிஷ்டானபிர்ம்மஞானத்தால் அகங்காராதி ஜகத்பிராந்தி பாதிக்கப்பட்டாலும் சர்ப்பஞானத்தினாலுண்டான பயகம்பனாதிகள் காலதாமசத்தில் நிவிர்த்தியாகிறதுபோல் பிராரப்தகர்மத்தின் போகம் பிராப்தம் முடிந்தபிறகு நிவிர்த்தியாகிறது. மந்தாந்தகாரத்தில் மறுபடியும் ரஜ்ஜுவானது சர்ப்பரூபமாய்ப்பிரதீதியாகிறதுபோல் போககாலத்தில் நான் மனுஷியன் முதலிய பிரதீதி எப்போதாவது ஞானிக்குண்டாகிறது. உபாதானமான அஞ்ஞானம் நிவிர்த்தியானபின்பு பிரபஞ்சம் ஞானிக்குக்காணப்படுவது அயுக்தமாயிருந்தாலும், எப்படி மாட்டைப்புலியென்று நினைத்து அதன்பேரில் பாணம் விட்டபிறகு மாடென்று அறிவதினால் வேறுபாணங்கள் போடப்படாமலிருந்தாலும் போட்டபாணத்தின் வேகம் சாந்தமாகாதோ வேகமுள்ளவரையில் போய்த்தீருமோ அப்படி வேகத்துக்குக்காரணமான தனுசுஸ்தானத்திலிருக்கிற அஞ்ஞானமும் இதரபாணங்களின் ஸ்தானத்திலிருக்கிற சஞ்சிதக்கிரியமாண கர்மங்கள் நாசமடைந்தாலும் கைவிட்டுப்போன பாணஸ்தானத்திலிருக்கிற பிராரப்தத்தின் வேகஸ்தானத்திலிருக்கிற காரியம் இருந்துகொண்டேயிருக்கும்.

ஆகையால் ஞானிக்குப் பிரவிர்த்தியிலாவது நிவிர்த்தியிலாவது நியாயமில்லை. யாஞ்ஞவல்கியர் சபையில் ஜயமடைந்தபிறகு வித்வத்சந்நியாஸரூப நிவிர்த்தியைத் தரித்தார். அன்றியும் பிரவிர்த்தியில் துக்கத்துக்கு ஹேதுவான அனேக தோஷங்களையுஞ் சொல்லியிருக்கிறார். ஆயினும் யாஞ்ஞவல்கியருக்கு வித்வத்சந்நியாஸத்துக்குமுன்[30] ஞானமில்லையென்று சொல்லக்கூடாது. ஆனால் ஞானம் முன்னேயே இருந்தது. ஆனால் வித்வத்சந்நியாசத்துக்கு முன் ஜீவன்முக்தியின் ஆனந்தம் அடையப்படவில்லை. ஆகையால் ஜீவன்முக்தியின் ஆனந்தத்தை யடைவதற்காகச் சேர்த்துவைத்ததையெல்லாம் தியாகம்பண்ணிவிட்டார். யாஞ்ஞவல்கியருடைய பிராரப்தம் முதலில் அதிகபோகத்துக்கு ஏதுவாயும் பின்னால் சொற்ப போகத்துக்கு ஏதுவாயுமிருந்தது. ஆகையால் முதலில் யாஞ்ஞவல்கியருக்குத் துக்கமில்லாத அதிகபோகமும் பின்னால் துக்கத்தால் சர்வபோகத்தியாகமும் சம்பவித்தன. ஜனகருடைய பிராரப்தம் மரணபரியந்தம் ராஜ்யபரிபாலனாதி விசேஷபோகத்துக்கு ஹேதுவாயிருந்தது. ஆகையால் எப்போதும் தியாகமே சம்பவிக்கவில்லை. போகத்தில் துக்கமும் அவருக்குண்டாகவில்லை. வாமதேவாதிகளுடைய பிராரப்தம் சொல்பபோகத்துக்கு ஹேதுவாயிருந்தது. போகத்தில் துக்கம் அவர்களுக்கு எப்போதும் இருந்தபடியால் பிரவிர்த்தியின் அபாவமே சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் சிகரத்துவஜனுக்கு ஞானத்துக்குப் பிறகு அதிகப்பிரவிர்த்தியுண்டானதாக வாசிஷ்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதமாக ஞானிகளுக்கு அனேகவிதமான விலக்ஷணவியவ

---

30. எல்லாவற்றையுமொழிந்தவன் சந்நியாசி. இவர்கள் ஹம்ஸன் பரமஹம்ஸனென இருவகையினர். தீவிரவைராக்கியத்துடன்கூடிய ஹம்ஸசந்நியாஸம் குடீசக பஹூதக பேதத்தால் இருவகைத்து. தீர்த்தாடனஞ்செய்யமுடியாதவன் குடீசகன். தீர்த்தாடனஞ்செய்கிறவன் பஹூதகன். பரமஹம்ஸ சந்நியாஸம் விவிதிஷா, வித்வத்சந்நியாஸமென இருவகைத்து. ஞானத்துக்கு முன் தோஷதிர்ஷ்டியாலுண்டாகும் தீவிரதரவைராக்கியத்தினால் ஜிஞ்ஞாஸுவாற் செய்யப்படும் சந்நியாஸம் தீவிரதரமெனப்படும். ஞானத்துக்குப்பிறகு தோஷதிர்ஷ்டி மித்தியாதிர்ஷ்டிகளாலுண்டாகும் தீவிரவைராக்கியத்தினால் வித்வான் செய்யுஞ்சந்நியாஸம் வித்துவத்சந்நியாஸமெனப்படும்.

காரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஞானிகளுக்கெல்லாம்ஞானமொன்றே.[31] அதின்பலமாகிற மோக்ஷமும் ஒன்றுதான். பிராரப்தபேதத்தால்[32] வியவகாரம் பேதப்படுகிறது. வியவகாரம் குறைவதால் ஜீவன்முக்தியின் சுகம் அதிகப்படுகிறது. வியவகாரம் அதிகரித்தால் ஜீவன்முக்தியின் சுகங்குறையும்.

642. ஆக்ஷேபம்: இவ்விஷயத்தில் சிலர் சங்கிக்கிறதாவது ஜீவன்முக்தியின் சுகத்தை விட்டுத் துச்சமான போகத்திற் பிரவிர்த்திக்கிறவன் விதேகமோக்ஷத்தையும் விட்டு வைகுண்டாதி லோகங்களை யிச்சித்து அந்தலோகங்களுக்குப் போகக்கூடும்.

---

31. ஞானம் எல்லாருக்கும் சமம் என்பதில் அடியில்கண்டச்லோகத்தைச்சொல்லுவார்கள். "கிருஷ்ணோபோகீ, சுகஸ்தியாகீ, ராஜானௌ, ஜனகருகவௌ, வசிஷ்டக்கர்மகர்த்தாசத ஏதே ஞானின: சமா:" இதின் அர்த்தம்:— கிருஷ்ணன் போகி, சுகர் தியாகி, ஜநகரும் ராமரும் இராஜக்கள், வசிஷ்டர்கர்மகர்த்தா, இவ்விதமாக இவர்களுடைய பிராப்தபேதத்தால் வியவஹாரம் வெவ்வேறாக இருந்தாலும், ஞானவிஷயத்தில் எல்லாரும் சமானமாயிருக்கிறார்கள்.

32. "அஹம்பிர்ம்மாஸ்மி" என்று ஞானமுண்டாகும் காலத்திலேயே, அவித்தையாகிற உபாதானகாரணம் நாசமடைந்து, அதின்காரியமான ஜகத்து சிதாபாசன் இவைகள் பாதிக்கப்படுகின்றன. ஆயினும், பிராரப்தமாகிற நிமித்தியம் இருக்கிறவரையில் ஞானத்தால் பாதிக்கப்படும் தேகம், ஜகத்து, சிதாபாசன் முதலியவைகளும் அநுவிர்த்தித்துக்கொண்டே அதாவது பிரதீதி ஆயிக்கொண்டே இருக்கின்றன. பிராரப்தம் முடிந்தபோது இவைகளின் பிரதீதியும் முடிவு பெறுகின்றது. இதுவே விதேஹ மோக்ஷம்.

பிராப்தம் உத்தம, மத்தியம, கனிஷ்ட, அதமதர, அதமதமவென ஐந்து வகையாம். எப்போதும் அதாவது ஜனனமுதல் மரணம்வரையில் நிவிர்த்திக்கேதுவான பிராரப்தம் உத்தமம். சுகதேவர் வாமதேவர் ஸனகாதிகளின் பிராப்தம்போலும். முதலிற் பிரவிர்த்திக்கும் பிறகு நிவிர்த்திக்கும் ஹேதுவாயிருக்கும் பிராப்தம் மத்தியமம். யாஞ்ஞவல்கியர் முதலியவர்களின் பிராரப்தம்போலும். எப்போதும் பிரவிர்த்திக்கு ஹேதுவானது கனிஷ்டப்பிராரப்தம். ஜனகாதிகளின் பிராரப்தம்போலும். முதலில் நிவிர்த்திக்கும் பிறகு பிரவிர்த்திக்கும் ஹேதுவானது அதமதரம். சிகரத்துவஜ, அலர்க்க, ரகுகண, பிரியவிரத, முதலியவர்களின் பிராரப்தம் போலும். இஷ்டப்படி நடத்தல், பேசுதல், புசித்தல் முதலிய பிரமாதங்களுக்கு ஹேதுவானது அதமபிராரப்தம்.

643. இந்தச் சங்கை சரியன்று ஏனெனில் ஜீவன்முக்திசுகத்தின் தியாகமும் போகத்திற் பிரவிர்த்தியும் ஞானிக்குப் பிராரப்தபலத்தால் சம்பவிக்கின்றன. விதேகமோக்ஷத்தியாகமும் பரலோககமனமும் சம்பவிக்கிறதில்லை. ஏனெனில் ஞானியின் பிராணன் வெளியிற் போகிறதில்லை. ஆகையால் பரலோககமனம் சம்பவிக்கிறதில்லை. மேலும் விதேகமோக்ஷத்தியாகமும் சம்பவிக்கிறதில்லை. ஏனெனில் ஞானத்தால் அஞ்ஞானம் நிவிர்த்தியாகிப் பிராரப்தபோகத்துக்குப் பிறகு ஸ்தூலசூக்ஷ்ம சரீராகாரமான அஞ்ஞானம் சேதனத்தில் லயப்படுவதற்கு விதேகமோக்ஷமென்று பெயர். மூலஅஞ்ஞானம் பாக்கியிலிருந்தாலாவது நிவிர்த்தியான அஞ்ஞானம் மறுபடியும் உண்டானாலாவது விதேகமோக்ஷஞ் சித்திக்கமாட்டாது. இந்த மூலஅஞ்ஞானத்துக்கு ஞானம் விரோதமாகையால் அஞ்ஞானம் பாக்கியில் தங்கமாட்டாது. பிரமாணத்தால் நாசமடைந்த அஞ்ஞானம் மறுபடியும் உண்டாகமாட்டாது. ஆகையால் விதேகமோக்ஷம் சித்திக்காமற் போகமாட்டாது. விதேகமோக்ஷத்தியாகத்திலும் பரலோககமனத்திலும் ஞானிக்கிச்சையு முண்டாகமாட்டாது. ஏனெனில்ஞானிக்கு இச்சை கேவலம் பிராரப்தத்தாலுண்டாகின்றது. எந்தச் சாமக்கிரிகளன்றியில் பிராரப்தபோக முண்டாகமாட்டாதோ அந்தச் சாமக்கிரிகளைப் பிராரப்தங் கொடுக்கிறது. இச்சையன்றியில் போகமுண்டாகிறதில்லை. ஆகையால் ஞானியினிச்சையும் பிராரப்த பலன். அன்னியலோக சம்பந்தம் அல்லது இந்த லோகத்தில் அன்னிய சரீரங்களுடன் சம்பந்தம் ஞானிக்குப் பிராரப்தத்தாலும் உண்டாகிறதில்லையென்பது இந்தத்தரங்கத்தில் முன் 610 பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் ஞானிக்குப் பிராரப்தத்தால் விதேகமோக்ஷத்தியாகத்திலும் அல்லது பரலோககமனத்திலும் இச்சையுண்டாகிறதில்லை.

644. ஜீவன்முக்தி சுகத்துக்கு விரோதியான வர்த்தமான சரீரத்திலுள்ள அதிகபோக இச்சை பிக்ஷாபோஜனாதிகளில் இச்சைபோல் ஜனகாதிகளுக்கு இருந்ததாகச் சொன்னவிடத்தில் ஒரிரகசியமிருக்கிறது. ஞானியின் பாஹ்யப்பிரவிர்த்தி ஜீவன்முக்திக்கு விரோதமன்று. ஆனால் ஜீவன்முக்தியின் விலக்ஷணசுகத்துக்கு விரோதியாயிருக்கிறது. ஏனெனில் ஆத்மா நித்தியமுக்தமாயிருக்கிறது. அவித்தையினால் பந்தம் பிரதீதியாகிறது. எந்தக்காலத்தில் ஞானமுண்டாகிறதோ அந்தக்காலத்தில் அவித்தையாலுண்டான பந்தப்பிரமை நிவிர்த்தியாகிறது. ஞானமுண்டானால் மறுபடியும் பந்தப்பிராந்தி யுண்டாகிறதில்லை. பந்தப்பிராந்தி இல்லாமல் சரீரசகிதமாயிருப்பதற்கு ஜீவன்முக்தியென்று பெயர். தேகாதிகளின் பிரவிர்த்தியிலும் நிவிர்த்தியிலும் ஞானிக்கு ஆத்மா

விஷயிடத்தில் பந்தப்பிராந்தியுண்டாகிறதில்லை. ஆகையால் பாஹ்யப்பிரவிர்த்தியாலும் ஜீவன்முக்தி நிவிர்த்தியாகிறதில்லை. ஆனால் பாஹ்யப்பிரவிர்த்தியில் ஜீவன்முக்தனுக்கு விலக்ஷணசுக முண்டாகிறதில்லை. ஏகாக்கிரமான அந்தக்கரணபரிணாமத்திற் சுகமுண்டாகிறது. இந்த ஏகாக்கிரபரிணாமம் பாஹ்யவிர்த்தியிலில்லை. இவ்விதமாகப் பிராரப்தபேதத்தால் ஞானிக்கு வியவகாரம் அநேகவிதமாயிருக்கிறது. ஆனால் எவனுடைய பிராரப்தம் அதிகப்பிரவிர்த்திக்கு ஹேதுவாயிருக்கிறதோ அது [33] மந்தப்பிராரப்தமென்று சொல்லப்படுகின்றது. ஏனெனில் அதிகப்பிரவிர்த்தி ஏகாக்கிரதைக்கு விரோதியாயிருக்கிறது. ஏகாக்கிரதையின்மையில் நிருபாதிகானந்தம் பிரதீதியாகிறதில்லை. இது சமாதிநிரூபணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

645. ஞானிக்குச் சகல அநாத்மபதார்த்தங்களிலும் மித்தியாபுத்தியுண்டாகிறது. அவனுக்கு ராகமுண்டாகிறதில்லை. ஆகையால் பிரவிர்த்தியுண்டாக மாட்டாதென்று முன் 541 செய்த சங்கை சரியன்று. ஏனெனில் எப்படித் தேகத்தில் மித்தியாபுத்தியே ஞானிக்குண்டாகிறதோ அப்பொழுதும் தேகத்துக்கு அநுகூலமான பிக்ஷாதிகளில் கேவலம் பிராரப்தத்தால் எப்படிப் பிரவிர்த்தியுண்டாகிறதோ அப்படி எந்த ஞானிக்கு அதிக போகத்தின் பொருட்டுப் பிராரப்தமிருக்கிறதோ அந்த ஞானிக்கு அதிகப்பிரவிர்த்தியே யுண்டாகிறது. எப்படி வித்தையாடியின் வேடிக்கையை மித்தையென்றறிந்து அதைப் பார்க்க எல்லா ஜனங்களும் பிரவிர்த்திக்கிறார்களோ அப்படி ஸர்வபதார்த்தங்களிலும் ஞானிக்கு மித்தியாபுத்தியிருந்தும் பிரவிர்த்தி யுண்டாகிறது.

646. ஆக்ஷேபம்:— எவனுக்கு எந்தப்பதார்த்தத்தில் தோஷதிர்ஷ்டியிருக்கிறதோ அந்தப்பதார்த்தத்தில் அவனுக்குப் பிரவிர்த்தியுண்டாகமாட்டாது. ஞானிக்கு அநாத்மபதார்த்தத்தில் தோஷதிர்ஷ்டியிருக்கிறது. அவனுக்கு ராகமில்லை ஆகையால் பிரவிர்த்தி யுண்டாகமாட்டாது.

647. சமாதானம்:—இந்த ஆக்ஷேபமும் சரியன்று. எந்த அபத்தியஞ்செய்வதில்ரோகியால் அன்வயவியதிரேகங்களால் தோஷமிருப்பதாக நிச்சயிக்கப்பட்டிருக்கிறதோ அந்த அபத்தியத்தில் பிராரப்தத்தா

---

33. கிலிஷ்டம்.

ல் ரோகிக்குப் பிரவிர்த்தி யுண்டாகிறதுபோல், பிராரப்தத்தால் ஞானிக்குச் சர்வவியவகாரங்களிலும் தோஷதிர்ஷ்டியிருந்தும் பிரவிர்த்தி யுண்டாகிறது. இவ்விதமாக ஞானியின் வியவகாரத்துக்கு நியமமில்லை. இத்தப்பக்ஷம் விஸ்தாரமாய் திருப்திதீபிகையில்[34] வித்தியாரண்யஸ்வாமிகளாற் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் தத்துவதிர்ஷ்டியின் வியவகாரம் நியமமில்லாமலிருக்கிறது. சமாதிரூப நியமவிதியைகேட்டுத்தத்துவர்ஷ்டிஹாஸ்யம்பண்ணினான்.

648. தேசகாலாதிஅபேக்ஷையன்றியில் தத்துவதிர்ஷ்டியின் மரணம்:—கொஞ்சகாலம் சஞ்சாரஞ்செய்து நல்ல ஞானமடைந்ததத்துவதிருஷ்டியானவன் பிராரப்தபோகங்களை யனுபவித்தான். பிறகு அவன் பிராணன்லீனமாய்விட்டது. பிராரப்தபோகத்துக்குப் பிறகு ஞானியின் பிராணனுக்குக் கமனமில்லாததினால் தத்துவதிர்ஷ்டியின் பிராணன் லீனமானதாகச்சொல்லப்பட்டிருக்கிறது. ஞானி சரீரத்தை விடுவதில் காலவிசேஷங்களின் அபேக்ஷையில்லை. உத்தராயணத்திலாவது தக்ஷிணாயனத்திலாவது சரீரத்தை விடக்கூடும். எவ்விதத்திலும் அவன் முக்தனே. அப்படியே தேசவிசேஷத்தின் அபேக்ஷையுமில்லை. காசிமுதலிய புண்ணிய தேசங்களிலாவது அந்தியந்தம் பாவக்ஷேத்திரங்களிலாவது ஞானி தேகத்தை விடக்கூடும். எவ்விதத்திலும் அவன் முக்தனே. அப்படி

---

34. திருப்தி தீபிகையில் (136—173) சுலோகங்களில் பிரதிபாதிக்கப்பட்ட அர்த்தம் அடியில் சுருக்கமாய் எழுதப்படுகிறது. ஜகத்மித்தை யென்ற புத்தியால் விஷயமும் போக்தாவும் இல்லாமற்போகின்றன. எண்ணெயில்லா ததீபம்போல் சந்தாபம் நிவிர்த்தியாய்விடுகிறது. தனம் ஸ்திரீ முதலியவைகளில் தோஷத்தைப்பார்க்கும் ஞானி அவைகளில் இச்சை எப்படி வைக்கக்கூடும். பசியால் வருந்தும் புருஷன்கூட விஷத்தைச்சாப்பிடுகிறதில்லை. மிருஷ்டான்னபோஜனம் பண்ணினவனா விஷத்தையுண்பான்? பிராப்தம இச்சா, அனிச்சா, பரேச்சாபேதத்தால் மூவகையாம். அபத்தியம் திருட்டு இவைகளிற் பிரவேசித்தல் இச்சாபிராரப்தம். பிரகிருதிபலத்தால் பிரவேசித்தல் அனிச்சாபிராரப்தம். பிறருடைய இச்சையால் பிரவிர்த்தித்தல் பரேச்சாபிராரப்தம். இராசாக்களால் கட்டளையிடப்பட்டவன் பிரியமன்றியிலும் காரியத்தில் பிரவிர்த்திக்கிறதுபோல இச்சையில்லாவிட்டாலும் ஞானிக்கு பிராரப்தத்தால் பிரவிர்த்தியுண்டாகும். வறுக்கப்பட்ட விதைசாப்பிட யோக்கியமானாலும் முளைக்கயோக்கியமில்லாததுபோல இச்சை அல்பபோகத்துக்குக்காரணமானாலும் விஷயமான பதார்த்தம் மித்தை யென்று அறியப்பட்டிருக்கிறபடியால் அது வியஸனத்துக்குக்காரணமாகிறதில்லை.

யே ஆஸனவிசேஷங்களின் அபேக்ஷையு மில்லை. பூமியில் ஸபாஸனத்திலிருந்து கொண்டாவது சிதாசனத்திலிருந்துகொண்டாவது சரீரத்தை விடக்கூடும். அப்படியே சாவதானமாய்ப் பிர்ம்மசிந்தனை செய்துகொண்டாவது அல்லது வியாதியால் வியாகூலனாய் ஹாஹாசப்தஞ்செய்துகொண்டாவது தேகத்தை விடக்கூடும். எவ்விதத்திலும முக்தனே ஏனெனில் எந்தக்காலத்தில் ஞானத்தால் அஞ்ஞானம நிவிர்த்தியாய்விட்டதோ அந்தக்காலத்திலேயே ஞானி முக்தனாய்விட்டான். ஆனதால் ஞானிக்கு விதேகமோக்ஷத்தில் தேசகாலஆஸனாதிகளின் அபேக்ஷை யில்லை. எப்படி ஞானிக்குத் தேகவியோகத்தில் தேசகாலாதிகளின் அபேக்ஷை யில்லையோ அப்படிச் சிரவணத்திலும் தேசகாலஆஸனாதிகளின் அபேக்ஷை யில்லை.

649. உபாஸகனுக்குத் தேசகாலாதிகளின் அபேக்ஷை யுண்டு. பீஷ்மாதிகள் ஞானிகளாகச் சொல்லப்படுகிறார்கள். பீஷ்மர் உத்தராயணம் வருகிறவரையில் பிராணத்தியாகம் செய்யவில்லை. ஆயினும் பீஷ்மாதிகள் அதிகாரிபுருஷர்களாம். ஆனதால் உபாஸகர்களுடைய உபதேசத்தின்பொருட்டு அவர்கள் காலவிசேஷத்தை யபேக்ஷித்தார்கள். வசிஷ்டர் பீஷ்மர் முதலியயோர் அதிகாரிகளாயிருந்தபடியால் அவர்களுக்கு அநேக ஜன்மங்கள் உண்டாயின, ஏனெனில் அதிகாரிபுருஷனுக்கு ஒரு கலப பரியந்தம் பிராரப்த மிருக்கின்றது. கல்பம் முடியாதவரையில் விதேகமோக்ஷ முண்டாகிறதில்லை. கல்பத்துக்குள்ளேயே அவர்களுக்கு இச்சாபலத்தால் அனேகசரீரங்க ளுண்டாகின்றன. ஆயினும் ஆத்மஸ்வரூபவிஷயத்தில் அவர்களுக்கு ஜனனமரணப் பிராந்தியுண்டாகிறதில்லை. ஆகையால் அவர்கள் ஜீவன்முக்தர்கள். இந்த அதிகாரிபுருஷர்களின் வியவகாரம் எல்லாம் பிறருடைய உபதேசநிமித்தியமேயாம். ஞானிகளின் வியவகாரத்தில் வேறு யாதொரு நியமமுமில்லை. இந்த அபிப்பிராயத்தால் தத்துவதிருஷ்டியின் தேக வியோகத்தில் தேசகாலாதிகள் யாதொன்றுஞ்சொல்லப்படவில்லை.

650. தேசகாலஅபேக்ஷையுடன் அதிருஷ்டியின் மரணம்:—எப்படி ஞானிக்குத் தேசகாலங்களின் அபேக்ஷையில்லையோ அப்படி உபாஸகனுக்கு விபரீதமாயிருக்கிறதென்று அறியவேண்டியது. உத்தமமான தேசங்களிலும் உத்தமமான உத்தராயணாதி காலங்களிலும் உபாஸகன் சரீரத்தை விட்டால் உபாஸனை பலிக்கிறது. ஞானிக்கு மரணசமயத்தில் சாவதான மிருப்பதால் ஞேயத்தின் ஞாபக மிருக்கவேண்டுமென்கிற அபேக்ஷையில்லை. உபாஸகனுக்கு மரணசமயத்தில் தியானிக்க வேண்டிய ஸ்வரூபத்தின் ஸ்மரணையின் அபேக்ஷை யிருக்கிறது. எந்தத்தியேயத்தை முன்தியானஞ் செய்திருக்கிறானோ அந்தத் தியேயத்தின் ஞாபகமே

மரணசமயத்திலுண்டானால் உபாஸனை பலிக்கிறது. எப்படித் தியேயத்தினை ஸ்மரணை யபேக்ஷிக்கப்படுகிறதோ அப்படித் தியேயப்பிர்ம்மத்தைய டையப் 5 வதுதரங்கத்திற்சொல்லப்பட்டமார்க்கத்தின் ஸ்மரணையும் வேண்டியதாயிருக்கிறது. ஏனெனில் மார்க்கசிந்தனையும் உபாஸனைக்கு அங்கமாம். ஞானத்தின்பொருட்டுஞ் சிரவணத்தில் தேசகாலஆஸனாங்களின் அபேக்ஷையில்லை. தியானத்தில் உத்தமமான தேசம் நிரந்தரமான காலம் சித்தாதி ஆஸனங்கள் இவைகள்வேண்டியவைகளாயிருக்கின்றன. இரண்டாவது சிஷ்யனை அதிர்ஷ்டியானவன் கங்காதீரத்தை மிகவும் [35] உத்தமமான இடமாகக்கண்டு அவ்விடத்தில் ஏகாந்தத்தில் பிர்ம்மத்தியானஞ்செய்து சாஸ்திரரீதிப்படித் தேகத்தை விட்டான். முன் சொன்ன மார்க்கத்தின்படிப் பிர்ம்மத்துடன்கூடிய அதிகஆனந்தத்தை யடைந்தான். தியானத்தில் உத்தமதேசாதிகளின் அபேக்ஷையிருப்பதால் அதிர்ஷ்டிக்குக் கங்காதீரவாசமும் மரணசமயத்தில் யோகசாஸ்திரப்படித் தேகவியோகமும் சொல்லப்பட்டன.

651. தர்க்கதிர்ஷ்டியின்நிச்சியம்:— (651—678) மூன்றாவது சிஷ்யனாகிய தர்க்க திர்ஷ்டியானவன் குருமூலமாகவுபதேசம் பெற்று, கேட்டவிஷயத்தில் இதர சாஸ்திரங்களின் விரோதத்தைத் தள்ளுவதற்காக சகல சாஸ்திரங்களின் அபிப்பிராயத்தையும் விசாரித்து அடியில்வருமாறு நிச்சயஞ்செய்தான். சகல சாஸ்திரங்களின்பிரயோஜனம் மோக்ஷம். மோக்ஷத்துக்குச்சாதனம் ஞானம். இந்த ஞானம் அத்வைய நிச்சய ரூபம். பேத நிச்சயம் யதார்த்த ஞானமன்று. சாஸ்திரங்களெல்லாம் சாக்ஷாத்தாகவாவது பரம்பரையாகவாவது பிர்ம்மஞானத்துக்கு ஹேதுக்களாயிருக்கின்றன.

ஸமஸ்கிருதத்தில் பதினெட்டுப் பிரஸ்தானங்களிருக்கின்றன. அவைகளில் சிலகர்மத்தைப் பிரதிபாதிக்கின்றன. சில விஷயசுகத்தை யடையுமுபாயத்தைச் சொல்லுகின்றன. சில பிர்ம்மத்துக்கு அன்னியமானதேவதைகளையுபாஸிக்கும்படிப் போதிக்கின்றன. ஞானத்தின் பொருட்டேற்பட்டிருக்கிற நியாய சாங்கியாதி சாஸ்திரங்களும் பேதஞானத்தையே யதார்த்தஞானமாகச் சொல்லுகின்றன. ஆகையால எல்லாம்

---

35. வித்வானுக்குத்தேகத்தியாக விஷயத்தில் தேசகாலாதிகளின் அபேக்ஷையில்லாமலிருந்தாலும் யோகாப்பியாஸபலத்தால் வித்துவான் சுபரீதியாய்த்தேகத்தைவிட இச்சிக்கிறான். இவைகளையவசியமெனக்கருதி அவன் தேடுகிறதில்லை.

அத்வைதப் பிர்ம்மத்தையே போதிக்கிறதாகச் சொல்லுவது சரியன்று. ஆயினும் சகலசாஸ்திரங்களையுஞ் செய்தவர்கள் சர்வஞ்ஞர்களாயும் கிருபாநிதிகளாயுமிருக்கிறார்கள்: ஆனதால் அவர்களாற்செய்யப்பட்ட மூலசூத்திரங்களின் அர்த்தம் வேதானுசாரமாகவேயிருக்கிறது. ஆனால் இவைகளின் வியாக்கியானக்காரர்கள் பிராந்தர்களா யிருந்தபடியால் மூலசூத்திரக்காரருடைய அபிப்பிராயங்களுக்கு விலக்ஷணமாய் அர்த்தம் பண்ணியிருக்கிறார்கள். ஆனால் மூலசூத்திரங்களின் அர்த்தம் வேதத்துக்கு விருத்தமாயில்லை. சகல சாஸ்திரங்களின் அர்த்தமுமே வேதானுசாரமாகவே யிருக்கிறது. இதைத் தர்க்கதிருஷ்டியானவன் உத்தம சம்ஸ்காரத்தால் நிச்சயம் பண்ணுகிறான்.

652. **வித்தையின் 18 பிரஸ்தானங்கள்**:[36]-வேதங்கள் 4, உபவேதங்கள் 4, வேதாங்கங்கள் 6, புராணம், நியாயம், மீமாம்சை, தர்மசாஸ்திரம், என ஸம்ஸ்கிருதபாஷாரூபவித்தையில் 18 பேதங்களுள. இவைகளுக்குப் பிரஸ்தானங்களென்று பெயர்.

653. **நான்குவேதங்களுக்கும் பிர்மஞ்ஞானத்தில் தாற்பரியம்**:— இருக்கு, யஜுர், சாம, அதாவணம், யென[37] வேதங்கள் நான்காம். இவைகளில் சிலவசனங்கள் ஞேயப்பிர்ம்மத்தைப் போதிக்கின்றன. சில ரிபோகததைப் போதிக்கின்றன. சில கர்மத்தைப்போதிக்கின்றன. கர்மத்தைப் போதிக்கிற வேதவசனத்துக்கும் அந்தகரணசுத்திமூலமாக ஞானமே பிரயோஜனமாம். பிரவிர்த்தியில் எந்தவேதவசனத்துக்கும் அபிப்பிராயமில்லை; ஆனால் நிஷித்தத்தில் ஸ்வாபாவிகமாய்ப்பிரவிர்த்திப்பவனின்றும் தகைப்பதில் அபிப்பிராயமாம். ஆகையால்

---

36. வித்தையின் அங்கங்களுக்குப் பிரஸ்தானங்களென்றுபெயர். இவை அக்கினிபுராணத்தில் ஆம்பத்திற் சொல்லப்பட்டிருக்கின்றன.

37. இருக்வேதத்தில் 21 சாகைகளும், யஜுர்வேதத்தில் 109 சாகைகளும், சாமவேதத்தில் 1000 சாகைகளும், அதர்வணவேதத்தில் 50 சாகைகளுமுள. ஒருமரத்தையுடையவன் தன்பிள்ளைகளுக்கு அதன் கிளைகளைப்பிரித்துக் கொடுப்பதுபோல் வியாஸபகவான் வேதத்தை நான்கு பாகங்களாக்கி அவைகளில் பலசாகைகளைக்கல்பித்து ஒவ்வொருசாகைக்குறிய விதிகளையும் ஏற்படுத்தினார். எத்தனை சாகைகளுண்டோ அத்தனையுபநிஷத்துகளுண்டென முக்திகோபநிஷத்திலும் மகாவாக்கியரத்னவளியிலுஞ்சொல்லப்பட்டிருக்கிறது. சாகை

அபிசாராதி கர்மத்தைப் பிரதிபாதிக்கிற அதர்வண வேதத்துக்கும் நிவிர்த்தியில் தாற்பரியமாம். த்வேஷத்தால் சத்துருவைக் கொல்லவேண்டுமென்று ஒருவன் பிரவிர்த்தித்தால் அவனைத் தலையை வெட்டுவதினாலாவது சுடுவதினாலாவது கொல்லாமலிருப்பதற்காக அபிசார கர்மங்களாகிற ஸ்யேனயாகாதிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. சத்துருவைக் கொல்லும்பொருட்டேற்பட்ட கர்மம் அபிசாரமெனப்படும். ஸ்யேனமென்னும் யஞ்ஞம் இப்பேர்ப்பட்டது. ஸ்யேனயாகத்தைப்போதிக்கிற வேதவசனத்துக்குச் சத்துருவைக் க்கொல்ல இச்சிக்கிறவன் ஸ்யேனதியாகத்தில் பிரவிர்த்திக்கலாமென்று அர்த்தமன்று. ஆனால் சத்துருவைக்கொல்ல இச்சிக்கிறவன் ஸ்யேனயாகத்துக்குப்பின்னமான சிரச்சேதனம் முதலிய கொல்லுமுபாயங்களில் பிரவிர்த்திக்கக் கூடாதென்பதாம் இவ்விதமாக ஸ்யேனயாகத்தைப் போதித்த வேதத்துக்கு த்துவேஷத்தாற்கொல்லவேண்டுமென்றுண்டான இச்சையினின்று திருப்பவேண்டுமென்கிற அபிப்பிராயமே தவிரப் பிரவிர்த்திக்கவேண்டுமென்கிற அபிப்பிராயமன்று. ஏனெனில் பிரவிர்த்தி த்வேஷத்தாலுண்டாயிருக்கிறது வேறு விதமாக பிரவிர்த்தி உண்டாகவேண்டுமென்பது வேதவாக்கியத்துக்கு கருத்தன்று.[38] இவ்விதமாக அதர்வண வேதத்துக்கெல்லாம் நிவிர்த்தியில் தான்தாற்பரியமாம். மற்றமூன்று வேதங்களில் கர்மத்தைப் போதிக்கும் வாக்கியங்களுக்கு அந்தக்கரணசுத்திமூலமாக ஞானத்திலுபயோகமுண்டென்பது ஸ்பஷ்டமாயிருக்கிறது.

---

கள் 1180 ஆகையால் உபநிஷத்துகளும் 1180 உண்டு. இவைகளில் 840 உபநிஷத்துக்கள் கர்மத்தைப்போதித்துக்கர்மகாண்டமெனச்சொல்லப்படுகின்றன. 232 உபநிஷத்துகள் தியேயப்பிர்ம்மத்தைப்போதித்து உபாஸனகாண்டமெனச்சொல்லப்படுகின்றன. 108 உபநிஷத்துகள் ஞேயப்பிர்ம்மத்தைப்போதிக்கின்றன. இவைகள் வேதத்தின் அந்தியபாகமானதினாலும் வேதத்தின்சாரமான அர்த்தத்தைச்சொல்லுகிறபடியினாலும் வேதாந்தமென்றும் ஞானகாண்டமென்றுஞ்சொல்லபபடுகின்றன. இந்த 108 உபநிஷத்துகளில் (1) ஈச (2) கேன (3) கட (4) பிரச்ன (5) முண்டக (6) மாண்டூக்கிய (7) தைத்திரீய (8) ஐதரேய (9) சாந்தோக்கிய (10) பிரகதாரண்யக உபநிஷத்துக்கள் முக்கியமானவை. இவைகளில் ஐதரேயம் இருக்குவேதத்தினது. ஈசாவசியமும் பிரகதாரணியகமும் சுக்லயஜுர்வேதத்தின. கடவல்லியும் தைத்திரீயமும் கிருஷ்ணயஜுர்வேதத்தின. கேனமும் சாந்தோக்கியமும் சாமவேதத்தின. முண்டகமும் மாண்டூக்கியமும் அதர்வணவேதத்தின.

38. பிரவிர்த்தியில் வேதத்துக்கு அபிப்பிராயமிருக்கும்பக்ஷத்தில் சிரச்சேதனம் முதலியவை எப்படி சத்துருவைக்கொல்ல உபாயங்களோ அப்படி சியேனயாகமும் உபாயமாகமுடியும். அப்போது வேதவசனத்தில் விசேஷமில்லை. ஆகையால் பிரவிர்த்தியில் வேதத்துக்கு அபிப்பிராயமில்லை.

654. **நான்குபவேதங்கள்:— ஆயுள்வேதம்:— ஆயுளவேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம், அர்த்தவேதம்,** என்று உபவேதங்கள் நான்காம். இவைகளில் ஆயுள்வேதத்தின் கர்த்தாக்கள் பிர்ம்மா, பிரஜாபதி, அச்வினீ குமாரர்கள், தன்வந்திரி முதலியவர்களாம். சரகம் வாக்படம் முதலிய சிகிச்சா சாஸ்திரங்களும் ஆயுள் வேதமே. வாத்ஸ்யாயனரால் செய்யப்பட்ட காம சாஸ்திரமும் ஆயுள்வேதத்தில் அந்தர்ப்பூதமாயிருக்கிறது. ஏனெனில் காமசாஸ்திரத்துக்கு விஷயமான வித்தையாதியின் ஸ்தம்பனாதிகளும் சரகாதிகளால் ஆயுள்வேதமென்று சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த ஆயுள் வேதத்துக்கு வைராக்யத்திலேயே அபிப்பிராயம். ஏனெனில், ஆயுள்வேதத்தின் ரீதியாய் ரோகாதிகள் நிவிர்த்தியானாலும் மறுபடியும் ரோகாதிகளுண்டாகிறபடியால் லௌகிக வுபாயங்களெல்லாம் துச்சமாயிருக்கின்றன. இந்த அர்த்தத்தில் தான் ஆயுள்வேதத்தின் நோக்கம். ஔஷதம் தானம் முதலியவைகளால் புண்ணிய முண்டாகி அந்தக்கரணசுத்திமூலமாக ஞானத்திற்கு ஆயுள்வேதமுபயோகப்படுகிறது.

655. **தனுர்வேதம்.— விசுவாமித்திரராற் செய்யப்பட்ட தனுர்வேதத்தில்** ஆயுதம் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. **(1) முக்தம். (2) அமுக்தம். (3) முக்தாமுக்தம். (4) யந்திரமுக்தம்.** என ஆயுதங்கள் நாலுவகையாம். சக்கராதிகள் கையால் விடப்படுவதால் முக்தமென்றும், கத்தி முதலியவை அமுக்தமென்றும், ஈட்டி முதலியவைகள் முக்தாமுக்தமென்றும், ரவை முதலியவைகள் யந்திரமுக்தமென்றும் சொல்லப்படும். இவ்வகையான ஆயுதங்களில் முக்தத்துக்கு அஸ்திரமென்றும், அமுக்தத்துக்குச் சஸ்திரமென்றும் பெயர். இந்த நான்குவித ஆயுதங்களுக்கும் பிர்ம்மா, விஷ்ணு, பசுபதி, பிரஜாபதி, அக்கினி, வருணன், முதலிய தேவதைகளும் மந்திரங்களுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. க்ஷத்திரிய குமாரர்களும் அவைகளை யனுசரித்த பிராமணர்களும் அதிகாரிகளென்று சொல்லப்படுகிறார்கள். இவைகள் (1) பதாதிகள். (2) ரதாரூடர்கள். (3) அசுவாரூடர்கள். (4) கஜாரூடர்களென நாலுவகையினர். யுத்தத்தில் மங்கள சகுனங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. மேற்சொல்லிய விஷயங்களெல்லாம் தனுர் வேதத்தின் முதற் பாகத்திற் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆசாரியனுடைய லக்ஷணமும் அவரிடத்திலிருந்து சஸ்திரத்தைக் கிரகிக்கிற ரீதியும் இரண்டாம் பாகத்திற் சொல்லப்பட்டிருக்கின்றன. குரு சம்பிரதாயமாயடையப்பட்ட சஸ்திரத்தின் அப்பியாஸமும் மந்திர சித்தி தேவதாசித்தி பிரகாரங்களும் மூன்றாம் பாகத்திற் சொல்லப்பட்டிருக்கின்றன. சித்தியான மந்திரத்தின் பிரயோகம் நான்காம் பாகத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்வளவு விஷயங்கள் தனுர்வேதத்தில் அடங்கியிருக்கின்றன. இந்தத்தனுர் வேதம் பிர்ம்மா பி

ரஜாபதி முதலியவர்களிடமிருந்து விசுவாமித்திரருக்குக் கிடைத்தது. இவர் இதைப் பிரசித்தஞ் செய்தாரேயொழியப் புதிதாயுண்டுபண்ணவில்லை. துஷ்டர்கள் திருடர்கள் முதலியவர்களினின்று ஜனங்களை யிரக்ஷிக்கவேண்டியதர்மத்தை தனுர்வேதம் க்ஷத்திரியர்களுக்குப் போதிக்கிறது. ஆகையால் இதின் கருத்தும் அந்தக்கரணசுத்திசெய்து ஞானமூலமாகமோக்ஷத்தை தருவதேயாம்.

656. **காந்தர்வவேதம்:**—இது **பரதரா**ற் பிரசித்தப்படுத்தப் பட்டிருக்கிறது. இதில் ஸ்வரம் தாளம் மூர்ச்சனை இவைகள் சஹிதம் நடனம் வாத்தியம் இவைகள் விஸ்தாரமாய் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. தேவதைகளின் ஆராதனை மூலமாக நிர்விகல்பசமாதி சித்திப்பதே காந்தர்வவேதத்தின் பிரயோஜனமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் இதுவும் அந்தக்கரணத்தை யேகாக்கிரஞ்செய்து ஞான மூலமாக மோக்ஷத்தைக் கொடுக்கின்றது.

657. **அர்த்தவேதம்:**—இது அநேகவிதமாம். நீதிசாஸ்திரம் அசுவசாஸ்திரம், சிற்பசாஸ்திரம், பாகசாஸ்திரம் முதலிய தனசம்பாதனத்துக்கு உபயோகமான உபாயங்களைப் போதிக்கும் சாஸ்திரங்களெல்லாம் அர்த்தவேதமென்னப்படும்.[39] தனம் சம்பாதிப்பதில் சகலவுபாயங்களையு மறிந்தவனுக்கும் பாக்கியமன்றியில் தனங்கிடைக்கிறதில்லை. ஆகையால் அர்த்தவேதத்துக்கும் வைராக்கியத்திலேயே கருத்தாம்.

658. வேதாங்கங்கள் **(658—664)**:— (1) சிக்ஷை (2) கல்பம் (3) வியாகரணம் (4) நிருக்தம் (5) சோதிடம் (6) பிங்களம் இவ்வாறும் வேதத்துக் குபயோகமாயிருப்பதால் வேதாங்கங்களாகச் சொல்லப்படுகின்றன.

659. **சிக்ஷை:**—இதைச் செய்தவர் **பாணினீ**, வேதசப்தங்களில் அக்ஷரங்களின்ஸ்தானங்களின் ஞானம், **உதாத்தானுதாத்தஸ்வரித** ஸ்வரங்களின்[40] ஞானம் இவைகள் சிக்ஷையாலுண்டாகின்றன. வேதத்தின் வியாக்கியானரூப அனேகப் பிரதிசாக்கியமென்னுங் கிரந்தங்களும்சிக்ஷைக் கந்தர்பூதமா யிருக்கின்றன.

---

39. இதற்கு ஸ்தாபத்திய வேதமென்றும் பெயர்.

40. உச்ச நீச சமமான ஸ்வரங்கள்.

660. **கல்பசூத்திரம்:—** கல்பசூத்திரங்களினின்றும் வேதத்தில் போதிக்கப்படுகிற கர்மங்களை யநுஷ்டிக்கும் ரீதி யறியப்படுகிறது. யஞ்ஞத்தைச் செய்துவைக்கும் பிராமணன் ரித்விக்கென்று சொல்லப்படுகிறான். அவ்வாறு செய்யப்படவேண்டிய அநேக கர்மங்களைக் கல்பசூத்திரம் போதிக்கிறது. இந்தக் கல்பசூத்திரத்தைச் செய்தவர்கள் **காத்தியாயனர் ஆஸ்வலாயனர்**[41] முதலியமுனிகளாம். கல்பசூத்திரமும் வேதத்துக் குபயோகமாயிருக்கிறபடியால் வேதாங்கமாயிருக்கிறது.

661. **வியாகரணம்:—**வியாகரணத்தால் வேதசப்தங்களின் சுத்தஞான முண்டாகிறது. இந்த வியாகரணம் சூத்திரரூபமாய் எட்டு அத்தியாயங்களில் **பாணினீ** யென்னும் முனியாற் செய்யப்பட்டிருக்கிறது. **காத்தியாயனரும் பதஞ்சலியும்** வார்த்திகம் பாஷியம என்கிற வியாக்கியானங்களை மேற்படிச் சூத்திரங்களுக்குச் செய்திருக்கிறார்கள். வேறு வியாகரணங்களில் வேதசப்தங்கள் விசாரிக்கப்படவில்லை. ஆகையால் புராணாதிகளுக்கு அவைகளுபயோகப்பட்டாலும் வேதத்துக் குபயோகப்படவில்லை. பாணினியாற் செய்யப்பட்ட வியாகரணம் வேதாங்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

662. **நிருக்தம்:—யாஸ்கர்** என்னும் முனி 18 அத்தியாயங்களில் நிருக்தத்தைச் செய்திருக்கிறார். அதில் வேதமந்திரங்களில் பிரசித்தங்களாயில்லாத பதங்களின் அர்த்தங்கள் போதிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் வைதீக அப்பிரசித்தபதங்களின் அர்த்தஞானத்தி லுபயோகப்படுகிறதினால் நிருக்தமும் வேதாங்கமாயிருக்கிறது. ஸம்ஞையைப் போதிக்கிற ஐந்து அத்தியாயங்களிலுள்ள நிகண்டு என்னுங் கிரந்தத்தை யாஸ்கர் செய்திருக்கிறார். இதுவும் நிருக்தத்துக்கு அந்தர்ப்பூதமாயிருக்கிறது. **அமரசிம்மர் ஹேமர்** முதலியவர்களாற் செய்யப்பட்ட ஸம்ஞா போதககோசங்களெல்லாம் நிருக்தத்துக்கு அந்தர்ப்பூதமாயிருக்கின்றன

663. **சோதிடம்:—ஆதித்தியர் கார்க்கியர்** முதலியவர்களாற் செய்யப்பட்ட சோதிடமும் வேதாங்கமாயிருக்கிறது. ஏனெனில் வைதீக கர்மத்தை யாரம்பிப்பதிற் காலத்தின் ஞானம் வேண்டியதாயிருக்கிறது. இந்தக் காலஞானம் சோதிடத்தாலுண்டாகிறது. ஆகையால் வேதாங்கமாயிருக்கிறது.

---

41. கல்பசூத்திரங்கள் ஆறுவகை. (1) ஜைமினியாற் செய்யப்பட்டது ஜைமினீயம். (2) ஆச்வலாயனராற் செய்யப்பட்டது ஆச்வலாயனம். (3) ஆபஸ்தம்பராற் செய்யப்பட்டது ஆபஸ்தம்பம். (4) போதாயனராற் செய்யப்பட்டது பௌத்தாயனம். (5) காத்தியாயனராற் செய்யப்பட்டது காத்தியாயனீயம். (6) வைகானஸராற் செய்யப்பட்டது வைகானஸீயம்.

664. **பிங்களம்:**—பிங்களமுனியாற் செய்யப்பட்ட எட்டு அத்தியாயங்கள் அடங்கிய சூத்திரத்தில் சந்தஸ் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அதினுற் வேதத்திற் சொல்லிய காயத்திரீ முதலிய சந்தங்களின் ஞான முண்டாகிறது. ஆகையால் பிங்களர் சூத்திறமும் வேதாங்கமாகவே இருக்கிறது. இவ்விதமாக வேதாங்கங்கள் ஆறும விவரிககப்பட்டன. வேதத்துக்குபயோகப்படாத சிலவிஷயங்களும பிரசங்கத்தில நிரூபிக்கப்பட்டன. அவைகள் பிரதானமாயெடுத்துச் சொல்லப்படவில்லை. வேதத்தின் பிரயோஜனமே இவ்வாறங்கங்களின்பிரயோஜனமாம்.

665. **புராணங்கள் உபபுராணங்கள்:**—புராணங்கள் 18. இவைகள் வியாஸரென்னும் முனியாற் செய்யப்பட்டன. அவையாவன:—(1) பிர்ம்ம (2) பத்ம (3) வைஷ்ணவ (4) சைவ (5) பாகவத (6) நாரதீய (7) மார்க்கண்டேய (8) ஆக்னேய (9) பவிஷிய (10) பிர்ம்மவைவர்த்த (11) லைங்க (12) வாராஹ (13) ஷ்கந்த (14) வாமன (15) கூர்ம (16) மத்ஸ்ய (17) கருட (18) பிர்ம்மாண்டபுராணங்களாம். இப்பதினெண்புராணங்களும் வியாஸரார் செய்யப்பட்டன. காசிபுராணமுதலிய வேறு அனேகபுராணங்களுமுண்டு. இவைகள் உபபுராணங்களாம். சிலர் உபபுராணங்களும் 18எனச் சொல்லுகிறார்கள். அது சரியன்று. உப்புராணஙகள் அநேகமுள. **பாகவதங்கள் 2.** ஒன்று வைஷணவம், மற்ருென்று பகவதீபாகவதம். ஒவ்வொன்றிலும் பதினெண்ணுயிரங் கிரந்தங்களுள. ஒவ்வொன்றிலும் 12 ஸ்கந்தங்களுள. ஆனால் இவைகளில் ஒன்று புராணம் மற்ருென்று உபபுராணம். இவ்விரண்டும் வியாஸராலேயே செய்யப்பட்டன. ஆகையால இரண்டும் பிரமாணங்களே. வியாஸர் புராணங்களைச் செய்ததுபோல் சிலஉபபுராணங்களையும் செய்திருக்கிருர். சிலஉபபுராணங்கள் பராசரர் முதலிய வேறுசர்வஞ்ஞமுனிகளாற் செய்யப்பட்டிருக்கின்றன. ஆகையால் உபபுராணங்களும் பிரமாணங்களே. உபநிஷத்தின் கருத்தே புராண உபபுராணங்களின் தாற்பரியமாம். இது இனி (694—703)பிரதிபாதிக்கப்படும்.

666. **நியாயவைசேஷிக சூத்திரங்கள்:**— கௌதம முனியால் நியாயசூத்திரம் ஐந்து அத்தியாயமாகச செய்யப்பட்டிருக்கிறது. இதில் யுக்திதான் பிரதானம். யுக்திசிந்தனைகளால் எவனுக்குத் தீவிரபுத்தியுண்டாயிருக்கிறதோ அவன் மனனம்பண்ணுவதிற் சமர்த்தனுகிருன். ஆகையால் யுக்திப்பிரதானமான நியாயசூத்திரத்துக்கும் மனனம்மூலமா

கவேதாந்தஜன்யஞானமே பலனாகிறது. கணாதரென்னும்முனி பத்து அத்தியாயங்களில் வைசேஷிகசூத்திரங்களைச் செய்திருக்கிறார் இவை ந்யாயத்தில் அந்தர்ப்பூதமாயிருக்கின்றன.

667. தர்மமீமாம்சை:— மீமாம்சை இருவகையாம். ஒன்று தர்மமீமாம்சை[42], மற்றொன்று பிர்மமீமாம்சை[43]. தர்மமீமாம்சையைப் பூர்வமீமாம்சையென்றும பிர்மமீமாம்சையை உத்தரமீமாம்சையென்றும சொல்வார்கள். தர்மமீமாம்சை 12 அத்தியாயத்தில் ஜைமினி என்னும் முனியால் செய்யப்பட்டிருக்கின்றது. கர்மத்தையனுஷ்டிக்கும்விதம் இதிற் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் விதியுடன் கர்மத்திற் பிரவிர்த்திப்பது தர்மமீமாம்சையின் பலன். கர்மத்திற் பிரவிர்த்திக்கிறதினால் அந்தக்கரணசுத்தியும் அதினின்று ஞானமும் ஞானத்தால் மோக்ஷமு முண்டாகின்றன. இவ்விதமாகத் தர்மமீமாம்சைக்கு மோக்ஷமே பலனாகிறது. தர்மமீமாம்சையின் 12 அத்தியாயங்களில் அர்த்தபேதமிருக்கிறது. அது கடினமாயிருப்பதால் இவ்விடத்தில் எழுதப்படவில்லை. ஜைமினியால் நாலு அத்தியாயங்களில் சங்கர்ஷணகாண்டஞ் செய்யப்பட்டிருக்கிறது. இதில் உபாஸனை சொல்லப்பட்டிருக்கிறது. சங்கர்ஷணகாண்டமும் தர்மமீமாம்சையில் அந்தர்ப்பூதமாயிருக்கிறது.

668. பிர்மமீமாம்சை :—இது நான்கு அத்தியாயங்களாகச் செய்யப்பட்டிருக்கிறது. இதின் கர்த்தா வியாஸர். ஒவ்வொரு அத்தியாயத்திலும் நாலு பாதங்களுள. முதல் அத்தியாயத்தின் கருத்தென்னவெனில் உபநிஷத்துகளெல்லாம் பிர்மத்தைத்தவிர வேறொன்றையும் பிரதிபாதிக்கிறதில்லை. உபநிஷத்துவாக்கியங்களில் மந்தபுத்திபுருஷாகளுக்கு விரோதங்கள் தோன்றுகின்றன. இவைகளுக்குப் பரிகாரம் இரண்டாவது அத்தியாயத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. மூன்றாவது அத்தியாயத்தில் ஞானம் உபாஸனை இவைகளின் சாதனங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. நான்காவது அத்தியாயத்தில் ஞானஉபாஸனைகளின் பலன் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தப் பிர்மமீமாம்ஸாரூப சாரீரக சாஸ்திரமே சர்வசாஸ்திரங்களிலும் பிரதானமானது. முமுக்ஷு இதையே அங்கீகரிக்கத்தக்கது. இதற்கு வியாக்கியானரூபக் கிரந்தங்கள் அ

---

42. எதில் தர்மம் விசாரிக்கப்படுகிறதோ அது தர்மமீமாம்சை.

43. எதில் பிர்ம்மம் விசாரிக்கப்படுகிறதோ அது பிர்ம்மமீமாம்சை.

சோகங்களா[44] ர்க்கின்றன. ஆயினும்ஸ்ரீசங்கராசாரியாரால் செய்யப்பட்ட பாஷியரூப வியாக்கியானமே முமுக்ஷுக்களால் கேட்கத்தக்கது. அதின்ஞானமூலமாக மோக்ஷபலன் சித்தமாய்க்கிடைக்கும்

669. **ஸ்மிருதிகள்:—மனு, யாஞ்ஞவல்கிய, விஷ்ணு, யம, அங்கிரா, வஸிஷ்ட, தக்ஷ, ஸம்வர்த்த, சாதாதப, பராசர, கௌதம, சங்க, லிகித, ஹாரீத, ஆபஸ்தம்ப, சுக்கிர, பிரஹஸ்பதி, வியாஸ, காத்தியாயன, தேவல, நாரத,** முதலிய, ஸர்வஞ்ஞரிஷிகளால் வேதானுசாரமாக ஸ்மிருதிகளென்னும் கிரந்தங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. ஸ்மிருதியே தர்மசாஸ்திரமாம். இதில் வர்ணாசிரமங்களின் காயிக வாசிக மானஸிக தர்மங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இதற்கும் அந்தக்கரணசுத்தி மூலமாக ஞானமுண்டாகி மோக்ஷம்சித்திப்பதே பிரயோஜனமாயிருக்கிறது. **வியாஸரால் மகாபாரதமும் வால்மீகரால் ராமாயணமும்** செய்யப்பட்டிருக்கின்றன. இவைகளும் தர்மசாஸ்திரத்தில் அந்தர்ப்பூதமாயிருக்கின்றன. தேவதைகளை யாராதிக்கும் பொருட்டு ஏற்பட்டிருக்கிற **மந்திரசாஸ்திரமும்** தர்மசஸ்திரத்தில் அந்தர்ப்பூதமாயிருக்கிறது. தேவதைகளின் ஆராதனைக்கு அந்தக்கரணசுத்தி பிரயோஜனமாயிருக்கிறது. இப்படியே **சாங்கியசாஸ்திரம், யோகசாஸ்திரம், வைஷ்ணவ** தந்திரம், சைவ தந்திரம், முதலியவைகளும் தர்மசாஸ்திரத்தில் அந்தர்ப்பூதமாயிருக்கின்றன. ஏனெனில் மானஸிகதர்மம் இவைகளில் நிருபிக்கப்பட்டிருக்கிறது.

---

44. சாரீரகசூத்திரமென்பது பிர்ம்மசூத்திரமாம். இதில் 555 சூத்திரங்களுண்டு. இதைப்பற்றின வியாக்கியானங்கள் அடியிற்கண்ட பதகத்தால் விளங்கும்.

| நெ. | கர்த்தா. | இன்னதின் பேரில் வியாக்கியானம். | கிரந்தத்தின் பெயர். | கிரந்தசங்கியை. |
|---|---|---|---|---|
| 1 | ஸ்ரீசங்கரர் | பிர்ம்மசூத்திரம் | சாரீரகபாஷியம் | 10,000 |
| 2 | பத்மபாதாசாரியர் | சாரீரகபாஷியம் | விஜயாபிதண்டினி | அக்கினிபாதையில்அழிந்தது. |
| 3 | ஸ்ரீசங்கரர் | ஷை | பஞ்சபாதிகா | 5500 |

| | | | | |
|---|---|---|---|---|
| 4 | ஸ்ரீபிரகாசாத்ம சரணர் | பஞ்சபாதிகா | விவரணம் | 14000 |
| 5 | சந்நியாஸி | விவரணம் | சந்தீபனம் | 25000 |
| 6 | வாசஸ்பதிமிசிரர் | சாரீரகபாஷியம் | பாமதீநிபந்தம் | 12000 |
| 7 | கங்காதரஸ்வாமி | பாமதிநியந்தம் | கல்பதரு | 14000 |
| 8 | நாநாசாஸ்திரி | கல்பதரு | பரிமளம் | 9000 |
| 9 | சந்நியாஸி | சாரீரகபாஷியம் | பிர்ம்மவித்தியா பரணம் | 26000 |
| 10 | ஆனந்தகிரி | ஷை | ஆனந்தகிரீயம | 1800 |
| 11 | ராமாசிரமர் | ஷை | ரத்னப்பிரபா | 11000 |
| 12 | சர்வஞ்ஞாத்மர் | ஷை | சம்க்ஷேபசாரீரகம் | 2500 |
| 13 | மதுசூதனஸ்வாமி | சம்க்ஷேபசாரீரகம் | ஷை | 15000 |
| 14 | ராமாசிரமர் | ஷை | ஷை | 12000 |
| 15 | மதுசூதனஸ்வாமி | சூத்திரபாஷியம் | கல்பலதா | 4500 |
| 16 | ராமாசிரமர் | பிர்ம்மசூத்திரம் | ராமாசிரமீ | 6000 |
| 17 | நாராயணபட்டர் | ஷை | சூத்திரவிர்த்தி | 4000 |
| 18 | அப்பையதீக்ஷதர் | ஷை | ஷை | 2000 |
| 19 | சங்கராநந்தர் | ஷை | ஷை | 1500 ம் 192 அதிகரணசூத்திரமும் |
| 20 | வித்தியாரண்யர் | அதிகரணசூத்திரம் | அதிகரணரத்னமாலா | 400 |
| . | | | ஷை டீகை | 4000 |
| 21 | ரகுநாதசாஸ்திரி | பிர்ம்மசூத்திரம் | சங்கரபாதபூஷணம் | 7000 |

ஆக வியாக்கியானங்களின் மொத்தம் 203400.

சங்கராசாரியருடைய பாஷியமன்றியில் ராமானுஜபாஷியம் மத்துவபாஷியம் பாஸ்கராசாரியபாஷியம் விஷ்ணுஸ்வாமீ பாஷியம் விஞ்ஞானேந்திர பிக்ஷு பாஷியம் நீலகண்ட பாஷியம் முதலியவைகளுமுண்டு. தந்திரக்கிரந்தங்களில் உபாஸனை விதிக்கப்பட்டிருக்கிறது.

670. **சாங்கியசாஸ்திரம்:— கபிலர்** சாங்கியசாஸ்திரத்தை ஆறு அத்தியாயத்தில் எழுதியிருக்கிறார். இதின் முதல் அத்தியாயத்தில் விஷயம் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது அத்தியாயத்தில் மகத்தத்துவம் அகங்காரம் முதலியவைகள் பிரதானத்தின் காரியங்களாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. மூன்றாவது அத்தியாயத்தில் விஷயத்தினின்றும் வைராக்கியமுண்டாவது சொல்லப்பட்டிருக்கிறது. நான்காவது அத்தியாயத்தில் விரக்தர்களுடைய சரித்திரஞ்சொல்லப்பட்டிருக்கிறது. ஐந்தாவது அத்தியாயத்தில் ஆக்ஷேபங்கள் கண்டிக்கப்பட்டிருக்கின்றன. ஆறாவது அத்தியாயத்தில் முதலைந்து அத்தியாயங்களின் சுருக்கஞ் சொல்லப்பட்டிருக்கிறது. பிரகிருதி புருஷர்களின் விவேகத்தால் புருஷனின் அஸங்கன் என்னும் ஞானம் சாங்கியசாஸ்திரத்தின் பிரயோஜனமாம் இந்தச் சாஸ்திரமும் த்வம்பதத்தின் லக்ஷியார்த்தசோதனை மூலமாக மகாவாக்கியஜன்ய ஞானத்திலுபயோகப்படுவதால் மோக்ஷமே பலனாயிருக்கிறது.

671. **யோகசாஸ்திரம் பதஞ்சலிமுனியால்** நாலு அத்தியாயங்களாக எழுதப்பட்டிருக்கிறது. இவர் சேஷாவதாரம். ஒரு ரிஷி சந்தியோபாஸனை செய்துகொண்டிருக்கும்போது அவருடைய அஞ்சலியில் தோன்றிக் கீழேவிழுந்தபடியால் பதஞ்சலியெனப்பெயரிடலாயிற்று. அவர் சரீரத்தின் ரோகரூப மலத்தை நிவிர்த்திக்கும் பொருட்டுச் சிகித்ஸாகிரந்தத்தைச் செய்திருக்கிறார். அசுத்தபதங்களின் உச்சாரணரூபமான வாக்கின் மலத்தைப் போக்கப் பாணினீயின் வியாகரணத்துக்குப் பாஷியஞ் செய்திருக்கிறார். விக்ஷேபரூப அந்தக்கரணமலத்தைப் போக்க யோகசூத்திரங்களைச் செய்திருக்கிறார். இதின் முதல்பாகத்தில் சித்தவிருத்தியின் நிரோதரூப சமாதியும் அதின் சாதனமான அப்பியாஸம் வைராக்கிய முதலியவைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. இரண்டாவது அத்தியாயத்தில் விக்ஷேபசித்தமுள்ளவர்களுக்கு இயம,நியம,ஆஸன,பிராணாயாம,பிரத்தியாகார,'தாரணை,தியானம்,ஸவிகல்பசமாதியாகிய எட்டுச சாதனங்களாகிற சமாதியின் அங்கங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. மூன்றாவது பாகத்தில் யோகியின் விபூதிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. நான்காவது பாகத்தில் யோகத்தின் பலனாகிற மோக்ஷஞ் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதமாக யோகசாஸ்திரமும் ஞானசாதனமான நிதித்தியாஸனமூலமாக மோக்ஷத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. சாரீரக சூத்திரத்தில் செய்யப்பட்டிருக்கிற சாங்கியயோககண்டனமானது உபநிஷத்துக்கு விருத்தமான சாங்கியசூத்திரங்களின் வியாக்கியானத்தை யுத்தேசித்தே செய்யப்பட்டிருக்கிறதேதவிர மூலசூத்திரத்தை யுத்தேசித்துக் கண்டனஞ்செய்யப்படவில்லை. அப்படியே நியாய வைசேஷிக சூத்திரங்களின் கண்டனையும் விருத்தவியாக்கியானத்தை யுத்தேசித்தே யேற்பட்டிருக்கிறது.

672. **பஞ்சராத்திரம்**:—**நாரதரால்** பஞ்சராத்திரமென்னுந் தந்திரமெழுதப்பட்டிருக்கிறது. அதில் வாசுதேவனிடத்தில் அந்தக்கரணம் நிலைநிறுத்தப்பட்டிருக்கிறது. இதற்கும் அந்தக்கரணம் ஸ்திரப்பட்டு ஞானமூலமாக மோக்ஷமுண்டாவதே பலனாயிருக்கிறது. வைஷ்ணவக்கிரந்தங்களெல்லாம் பஞ்சராத்திரத்தில் அந்தர்ப்பூதமாயிருக்கின்றன. இந்தப் பஞ்சராத்திரம் தர்மசாஸ்திரத்தில் அந்தர்ப்பூதமாம்.

673. **பாசுபததந்திரம்**:—பாசுபததந்திரத்தில் பசுபதியினுடைய ஆராதனை சொல்லப்பட்டிருக்கிறது. இதின் கர்த்தா **பசுபதி**. இதற்கும் அந்தக்கரணத்தின் நிச்சலதைமூலமாக மோக்ஷசாதனமான ஞானம் பலனாயிருக்கிறது.

674. **சைவக்கிரந்தங்கள்**:—சைவக்கிரந்தங்களெல்லாம் பசுபதி தந்திரத்தில் அந்தர்ப்பூதமாயிருக்கின்றன. **கணேச, சூரிய, தேவீ** இவர்களினுபாஸனையைப் போதிக்கும் கிரந்தங்களும் சித்தைகாக்கிரதைமூலமாக ஞானத்தைத் தருகின்றன. இவைகளெல்லாம் தர்மசாஸ்திரத்தில் அந்தர்ப்பூதமாயிருக்கின்றன.

675. **தேவீயுபாஸனை**:—தேவீயுபாஸனையைப் போதிக்கும் கிரந்தங்களில் இரண்டுசம்பிரதாயங்களுண்டு. இவைகளிலொன்று **தக்ஷிண** சம்பிரதாயம். மற்றொன்று **உத்தர** சம்பிரதாயம். உத்தரசம்பிரதாயத்துக்கு **வாமமார்க்க**மென்று பெயர். இவைகளில் தக்ஷிணசம்பிரதாயமாய்ப் போதிக்கப்பட்ட வுபாஸனை தர்மசாஸ்திரத்துக்கு அந்தர்ப்பூதமாயிருக்கின்றது. வாமமார்க்க வுபதேசம் தர்மசாஸ்திரத்துக்கு விரோதமாயிருக்கின்றது. ஆகையால் அது அப்பிரமாணமாம். வாமதந்திரம் பரமசிவனாற் செய்யப்பட்டிருந்தாலும் சகலசாஸ்திரங்களுக்கும் வேதத்துக்கும் விரோதமாயிருக்கிறது. ஆகையால் அது பிரமாணமன்று. விஷ்ணுவாற் பவுத்தாவதாரத்திற் செய்யப்பட்ட நாஸ்திகக்கிரந்தம் வேதத்துக்கு விருத்தமாயிருப்பதால் அப்பிரமாணமாயிருப்பதுபோல் சிவனாற் செய்யப்பட்டவாமதந்திரமும் வேதத்துக்கு அத்தியந்தவிருத்தமாயிருக்கிறது. மத்தியம் முதலிய அசுத்தமான பதார்த்தங்களைக் கிரகிக்கலாமென்று இதிற் சொல்லியிருக்கிறது. உலகத்தை வஞ்சிக்கும்பொருட்டு உத்தமபதார்த்தங்களின் பெயரை மலினபதார்த்தங்களுக்குக் கொடுத்திருக்கிறார்கள். மத்தியத்துக்குப் பெயர் தீர்த்தம். மாமிசத்துக்குப் பெயர் சுத்தம். மத்தியபானபாத்திரத்துக்குப் பெயர் பத்மம். வெங்காயத்துக்குப் பெயர் வியாஸர். வெள்ளைப்பூண்டுக்குச் சுகதேவரென்று பெயர். மத்தி

யம் செய்கிறவனுக்குப்பெயர் தீக்ஷிதர். வைசியாதி சண்டாளஸ்ரீகளைப் பிரயாகைவாசி காசிவாசியென்றும்பெயரிட்டிருக்கிறார்கள். பைரவிசக்கிரம் மத்தியில் இருக்கிற சாண்டாளாதிகளை பிராமணர் என்கிறார்கள். அத்தியந்தம் வியபசாரஸ்திரீக்கு யோகினீ யென்றும் வியபசாரிக்கு யோகி யென்றும் பெயர். இப்படிப்பலவிதமாய் வாமமார்க்கத்தின் வியவகாரம் நிஷித்தமாயிருக்கிறது. பூஜாகாலத்தில் பலதோஷங்களுடன் கூடிய ஸ்திரீயை உத்தமசக்தியென்று சொல்லுகிறார்கள். பரஜாதியாயும் பகிஷ்டையாயும் இருக்கிற ஸ்திரீயைத்தேவியாகப்பாவித்துப் பூஜிக்கிறார்கள். அவளாற் குடிக்கப்பட்டு மிச்சமான மத்தியத்தைக் குடிக்கிறார்கள். அதிகமாய்க் குடித்து அவள் வாந்திசெய்தால் அதைப்பூமியில் விடாமல் சிரத்தையுடன் ஆசாரியர்சகிதமாய்க் குடிக்கிறார்கள். இவ்வாந்தியைப் பைரவீ என்கிறார்கள். நாக்கை யோனியில் வைத்துக்கொண்டு மந்திரம் ஜபிக்கிறார்கள். மத்தியம்மாமிசம் மத்ஸியம் முததிரை மந்திரம் இவ்வைந்து மகாரங்களையும் போகமோக்ஷத்தின் பொருட்டுச் சேவிக்கிறார்கள். முதலாவது இரண்டாவது மூன்றாவது மகாரங்களை யப்பிரசித்தப்பெயர்களால் வியவகரிக்கிறார்கள். இவைமுதலிய வாமதந்திரத்தின் சகலவியவகாரங்களும் இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் ஒருவனைப் பிருஷ்டனாக்கி விடுகின்றன. இவ்விதமாகக் காதுகுத்திக் கொண்டிருக்கிற யோகிகள், அவதூதகோசாயிகள், அநேக சந்நியாசிகள், பிராமணர்கள் முதலியோர்கள் வாமமார்க்கத்தை யனுஷ்டித்தாலும் உலகத்தாலும் வேதத்தாலும் நிந்திக்கப்பட்டதாக அறிந்து, இம்மார்க்கத்தை இரகசியமாய் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். வாமமார்க்கத்தைக் கேட்ட மிலேச்சனுக்கும் மயிர்கூச்சலுண்டாகிறது. இப்படி நிந்திக்கப்பட்டதாயிருக்கிறது வாமமார்க்கம். சாப்பிடக்கூடாததெல்லாம் இதிற் சொல்லப்பட்டிருக்கிறது. நிறம்பவும் நிந்திக்கத்தக்க விஷயங்கள் எழுதத்தகாமையால் அவைகளைப்பற்றி இங்கே விவரமாய்ச்சொல்லவில்லை. வாமதந்திரம் சர்வவிதத்திலுந் தள்ளத்தக்கது.

676. **நாஸ்திகமதம்**:—இதுவுந்தள்ளத்தக்கது. இதில்(1) **மாத்தியமிக**[45](2)**யோகாசார**[46](3)**சௌத்திராந்திக**[47](4)**வைபாஷிக**[48]

---

45. சூனியவாதி. 317-வது பிரிவைப்பார்க்க.

46. க்ஷணிகவிஞ்ஞானவாதி. 315-வது பிரிவைப்பார்க்க.

47. பாஹ்யபதார்த்தத்தை அனுமானத்துக்கு விஷயமாகச்சொல்லுகிறவன்.

48. பாஹ்யபதார்த்தத்தை பிரத்தியக்ஷப்பிரமாணத்துக்கு விஷயமாகச்சொல்லுகிறவன்.

(5)**சார்வாக**[49](6)**திகம்பர**[50] வென ஆறுபேதங்களுள. இவ்வறும் வேதத்தைப் பிரமாணமாயொப்புக்கொள்ளுகிறதில்லை. இவ்வறுவருடைய சித்தாந்தமும் ஒன்றுக்கொன்று வித்தியாஸப்படுகின்றது. எப்படியெனில் மாக்த்தியமிகன் சூன்யவாதி. யோகாசாரனுடைய மதத்தில் விஞ்ஞானத்துக்கு வேறான பதார்த்தம் யாதொன்றுமில்லை. விஞ்ஞானமே தத்துவம். இந்த விஞ்ஞானம் க்ஷணிகமாயிருக்கிறது. ஸௌத்திராந்திகமதத்தில் விஞ்ஞானத்தினுகாரம் பாஹியபதார்த்தமாகிற விஷயமன்றியி லுண்டாகிறதில்லை.ஆனதால் விஞ்ஞானத்தால் பாஹியபதார்த்தங்கள் அனுமானிக்கப்படுகின்றன. இவ்விதமாக ஸௌத்திராந்திக மதத்தில் பாஹியபதார்த்தம் அனுமானப்பிரமாணத்துக்கு விஷயமாயிருக்கிறதேதவிரப் பிரத்தியக்ஷமாயில்லை. மேலும் ஸ்திரமாயுமில்லை. ஆனால் எல்லாபதார்த்தங்களும் க்ஷணிகமாயிருக்கின்றன. வைபாஷிகமதத்தில் பாஹியபதார்த்தம் க்ஷணிகமாயிருந்தாலும பிரத்தியக்ஷப் பிரமாணத்துக்கு விஷயமாயிருக்கிறது. இதுவே ஸௌத்திராந்திகத்துக்கும் வைபாஷிகதுக்கு முள்ளபேதம. இந்நான்கும் **சுகத**[51] ருடையது. சார்வாகமதத்தில் பதார்த்தம் க்ஷணிகமன்று. ஆனால் இம்மதத்தில் தேகமே ஆத்மா. திகம்பர்மதத்தில் தேகமாத்மாவன்று. ஆத்மா தேகத்தைக்காட்டிலும் வேறானது. ஆனால் தேகத்தின் பரிமாணம் எவ்வளவுண்டோ அவ்வளவு ஆத்மாவின் பரிமாணமாம். இவ்விதமாக இம்மதங்களில் பேதமிருக்கிறது. இன்னும் அநேக பேதங்களுண்டு. எல்லாம் வேதவிருத்தமாயிருக்கின்றன. ஆகையால் இம்மதங்களை விசேஷமாய்ச் சொல்லவுமில்லை, கண்டிக்கவுமில்லை. இவ்விதமாக வாமமார்க்க நாஸ்திகமதக்கிரந்தங்கள் ஸம்ஸ்கிருதத்தில் எழுதப்பட்டிருந்தாலும் வேதத்துக்குப் பாஹியமாயிருக்கின்றன. ஆகையால் வேதானுசாரியாயிருக்கிற வித்தையின் பிரஸ்தானங்கள் பதினெட்டேயாம்.

677. **சாகித்தியாதிகள்**[52]:—**மம்மடர்** முதலியவர்களாற் செய்யப்பட்ட சாகித்தியக்கிரந்தமும் காமசாஸ்திரத்தில்[53] அந்தர்ப்பூதமாயிரு

---

49. தேகாத்மவாதி. 311-வது பிரிவைப்பார்க்க.

50. மத்தியபரிமாணவாதி. 462-வது பிரிவைப்பார்க்க.

51. பௌத்தர் (211).

52. அலங்காரகிருந்தம்.

53. 654-வது பிரிவைப்பார்க்க.

க்கிறது. அப்படியே சகல காவியங்களும் சிலகாமசாஸ்திரத்திலும் சில[54] தர்மசாஸ்திரத்திலும் அந்தர்ப்பூதமாயிருக்கின்றன.

678. **தீர்மானம்:**—இவ்விதமாக அஷ்டாதசப்பிரஸ்தானங்களும் பிர்ம்மஞானமூலமாக மோக்ஷத்துக்கு ஹேதுக்களாயிருக்கின்றன. சில சாக்ஷாத்[55]ஞானத்துக்கு ஹேதுக்களாயும் சிலபரம்பரையாக ஞானத்துக்கு ஹேதுக்களாயும் இருக்கின்றன. இதுவே சகலசாஸ்திரங்களின் அபிப்பிராயமென்று தர்க்கதிருஷ்டி நிச்சயித்தான். உத்தரமீமாம்சை தவிர மற்ற சாஸ்திரங்களெல்லாம் ஜிஞ்ஞாசுவால் தள்ளத்தக்கவையென்று சாரீரகத்திற் சூத்திரக்காரராலும் பாஷியக்காரராலும் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் வேறுசாஸ்திரங்களும் மோக்ஷத்துக்குபயோகமென்று சொன்னது சரியன்று. ஆயினும் சாரதனைக் கிரகிக்கும் திருஷ்டியால் தர்க்கதிருஷ்டியானவன்மேற்சொல்லிய சாரமான நிச்சயஞ்செய்தான்.

679. **தர்க்கதிருஷ்டி வித்துவானுடன்சேர்தல்:**—குருமுகமாகக் கேட்கப்பட்ட அர்த்தத்தில் புத்திஸ்திரப்படுவதற்காகச் சகல சாஸ்திரங்களின் அபிப்பிராயத்தையும் விசாரித்தும் தர்க்கதிருஷ்டிக்கு மறுபடியுஞ் சந்தேக முண்டாயிற்று. அதாவது சாஸ்திரத்துக்குத் தான் நிச்சயித்த அபிப்பிராயந்தானோ வேறோ வெனச்சங்கித்தான். ஏனெனில் தர்க்கதிருஷ்டி கனிஷ்டாதிகாரி யென்று சொல்லப்பட்டதினால் அடிக்கடிக் குதர்க்கத்தாற் சந்தேகமுண்டாகிறது. இதை நிவிர்த்திக்கும்பொருட்டுத் தன்னிச்சயத்தை வேறு வித்வான்களுடைய நிச்சயத்துடன் ஒத்துப்பார்க்கும்படிப் புறப்பட்டுப் போனான். தர்க்கதிருஷ்டியின் வசனத்தைக் கேட்டு நீ சொன்னதெல்லாம் முக்கியசித்தாந்தமென்று வித்வான்கள் சொன்னார்கள். இவ்விதமாகதர்க்கதிருஷ்டிச்சகலசமுசயங்களு மற்று அபரோக்ஷ பிர்ம்மத்தை யறிந்து ஜகத்து பந்தமோக்ஷங்களெல்லாம் மித்

---

54. பகவத் சரித்திரத்தை பிரதிபாதிக்கும் காவியகிரந்தங்கள்.

55. பசித்தவர்களுடைய பசியைப்போக்கித் திருப்தியாக்குவதற்குப் பக்குவமாகிய அன்னமே சாக்ஷாத்சாதனமாயும் உழவு முதலிய பயிர்களே பரம்பரா சாதனமாயுமிருப்பதுபோல அக்கியானத்தைப்போக்கி ஆத்மானுபவதிருப்தியை கொடுப்பதற்கு சிலகிரந்தங்கள் நிஷ்காமகர்மத்தை போதிக்கிறமூலமாக பரம்பரா சாதனமாயும் சில ஞானத்தை போதிக்கிறமூலமாக சாக்ஷாத் சாதனமாயுமிருக்கின்றன.

தையெனத் தெரிந்துகொண்டான் பிராரப்தம் கொஞ்சஞ் சேஷமிரு ந்தபடியால் தாய்தந்தையரையும் தன்வீட்டையும் சீக்கிரத்தில் பார்க் கவேண்டுமென்கிற இச்சையுண்டாயிற்று.

680. **ஞானியின் இச்சை, இச்சையின்மை:—** ஞானிக்கு ச்சகலவியவகாரங்களும் அஞ்ஞானிக்குண்டாவதுபோல் பிராரப்தத் தாலுண்டாகின்றனவென முன் (639) சொல்லப்பட்டது. ஆகையால் இச்சைசம்பவிக்கிறது. மேலும் ஞானிக்கு இச்சையுண்டாகிறதில்லை யென்று சில சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கிறது. ஞானியின் அ ந்தக்கரணம் பதார்த்தத்தின இச்சாரூபப்பரிணாமத்தையடைகிறதில்லை யென்பது இதற்கபிப்பிராயமன்று. ஏனெனில் அந்தக்கரணத்துக்கு இச்சாதிகள் சகஜதர்மங்களாம். அந்தக்கரணம் பூதங்களின் (300) சத் துவகுணகாரியமென்று சொல்லப்பட்டிருந்தாலும் ரஜோகுணதமோ குணசகித சத்துவகுணத்தின் காரியமாயிருக்கிறதே தவிரக்கேவலம் சத் துவகுணத்தின் காரியமாகவில்லை. அப்படியிருந்தால் அந்தக்கரணத்து க்குச் சஞ்சலிக்கும் சுபாவமிருக்கக்கூடாது. அப்படியே காமக்குரோ தாதி ராஜஸவிர்த்தியும் நித்திரைமுதலிய தாமஸவிர்த்தியும் எந்த அந்தக் கரணத்துக்கு முண்டாகக்கூடாது. அப்படியுண்டாவதால் அந்தக்கர ணம் கேவலம் சத்துவகுணத்தின் காரியமன்று. ஆனால் அப்பிரதானமா ன ரஜோகுணதமோகுணசகிதப்பிரதானமான சத்துவகுணத்தையுடைய பூதங்களினின்றும் அந்தக்கரணமுண்டாயிருக்கிறது. ஆகையால் அந்த க்கரணத்தில் முக்குணங்களுமிருக்கின்றன. இம்முக்குணங்களும் அந்த க்கரணமிருக்குமிடமெல்லாம் சமமாகவில்லை. ஆனாலேற்றக்குறைச்ச லாயிருக்கின்றன. ஆகையால் குணங்களின் ஏற்றக்குறைவால் ஒவ்வொ ருவனுடைய சுபாவமும் ஒவ்வொருவிதமாயிருக்கிறது. இவ்விதமாக அந்தக்கரணம் முக்குணங்களின் காரியமாயிருக்கிறது.

எது பரியந்தம் அந்தக்கரணமிருக்கிறதோ அது வரையில் ரஜோ குணத்தின் பரிணாமரூபமான இச்சையில்லாமலிருக்கமாட்டாது. ஆகை யால் ஞானிக்கு இச்சையுண்டாகிறதில்லை யென்பதற்கு அபிப்பிராயமெ ன்னவெனில் ஞானி அஞ்ஞானி இருவருக்கும் இச்சை சமானமாகவேயி ருக்கிறது. ஆனால் அஞ்ஞானி இச்சாதிகளை ஆத்மதர்மமாக அறிகிறான். ஞானிக்கு இச்சையுண்டாகுங்காலத்திலும் இச்சையை ஆத்மதர்மமாக அவன் அறிகிறதில்லை; ஆனால் காமம், சங்கல்பம், சந்தேகம், ராகம், து

வேஷம், சிரத்தை, பயம், லஜ்ஜை, இச்சை முதலியவைகள் அந்தக்கரணத்தின் பரிணாமங்களாயிருப்பதால் அந்தக்கரணதர்மங்களென்று அறிகிறான். இவ்விதமாக இச்சைகளிருந்தும் ஆத்மாவின் தர்மமாக இச்சாதிகள் ஞானிக்குப்பிரதீதியாகிறதில்லை. ஆகையால் ஞானிக்கு இச்சையில்லையென்று சொல்லப்பட்டது. அப்படியே மனதினாலும் வாக்கினாலும் சரீரத்தினாலும் செய்யப்படும் வியவகாரங்களெல்லாம் ஞானிக்கு ஆத்மாவினிடத்திற் பிரதீதியாகிறதில்லை. ஆனால் கிரியைகளெல்லாம் மனோவாக்குச்சரீரங்களுக்குரியன; ஆத்மா அசங்கனென்பது ஞானியின் நிச்சயம். ஆகையால் ஞானி சகலவியவகாரங்களின் கர்த்தாவாயிருந்தும் அகர்த்தாவே. இக்காரணத்தால் சுருதியிற் சொல்லியிருக்கிறதாவது, ஞானத்துக்குப்பிறகு இச்சரீரத்திற் செய்யப்படும் சுபாசுபகர்மங்களுக்கு இவைகளின் பலனாகிற புண்ணியபாவங்கள் சம்பந்தப்படுகிறதில்லை என்பதாம். பிராரப்தபலத்தால் அஞ்ஞானிக்குண்டாவதுபோல் ஞானிக்கும் சகலவியவகாரங்களும் அவைகளின் இச்சையும் சம்பவிக்கின்றன.

681. **சுபசந்ததிராஜாவின்கதை:— (681—89)** சுபசந்ததிராஜாவின் பிள்ளைகள் வீட்டை விட்டுப்புறப்பட்டுப்போனதும் அவர்களுடைய பின் சரித்திரமுஞ்சொல்லப்பட்டன. இப்போது அவர்கள் தகப்பன் சரித்திரத்தைச்சொல்லுகிறேன். பிள்ளைகள் வீட்டைவிட்டுப் போனபிறகு ராஜாவுக்குத்தீவிர வைராக்கியமில்லாததினால் வியோகதுக்கமுண்டாயிற்று. மந்தவைராக்கிய மிருந்தபடியால் விஷயபோகத்திற் சுகமுண்டாகவில்லை. பிள்ளைகள் போய்விட்டபடியால் ராஜ்யத்தை விட்டுப்போகவும் முடியவில்லை. ஆகையாலும் துக்கமுண்டாயிற்று. தீவிரவைராக்கிய மிருந்தால ராஜ்யத்தையநாதையாய் விட்டுப்போவான். வைராக்கியம்தீவிரமின்றி மந்தமாயிருந்தபடியால் ராஜ்யத்தை விட மனம்வரவில்லை. போகத்தில் ஆஸக்தியுமிருக்கவில்லை. ஆகையால் இருவிதத்திலுந்துக்கமே யுண்டாயிற்று. மந்தவைராக்கியத்தின் பலனாகிற உபாஸ்யத்தை யறிந்துகொள்ளவேண்டுமென்கிற இச்சையுண்டாயிற்று.

682. **சுபசந்ததியின்கேள்வி:—** மந்தவைராக்கியம் சுபசந்ததிக்குண்டானதே அவனுக்குப்பெரும்பாக்கியம். இதனால் அவனுக்கு எந்தத்தெய்வம் உபாஸிக்கத்தக்கதென்று அறிந்துகொள்ள இச்சையுண்டாயிற்று. பிறகு ஸ்ரேஷ்டவித்வான்களை வரவழைத்து அவர்களைத்தகுந்த ஆஸனங்களில் உட்காரவைத்து அவர்களைப்பார்த்து, புருஷார்த்

த்தத்தையுடைவதற்காக எல்லாஜனங்களாலும் ஆராதிக்கத்தக்கதாயும் தாக்கம் விழிப்பற்றதாயும் பக்தர்களை யெப்போதும் பரிபாலனம் பண்ணுகிறதாயுமிருக்கிற தெய்வமெது என்றுகேட்டான்.

683. விஷ்ணு உபாஸகனுடைய உத்தரம்:— அரசன் வார்த்தையைக்கேட்டுப் பண்டிதரில் ஒருவன் அரசனை நோக்கிச்சொல்லத்தொடங்கினன். கேளும் அரசனே, சகலவேதாந்த சிரோமணியான வாசுதேவனைச்சிவன், பிரமன், நித்தியம் சேவிக்கிறார்கள். வாசுதேவன் பரோபகாரி, பக்தருக்கு ஹிதஞ்செய்பவர். சங்கு, சக்கர, கதா, பத்ம தாரீ, மங்களஸ்வரூபி, தயாநிதி. இப்பேர்ப்பட்ட மகாவிஷ்ணுவானவர் நிஜபக்தர்களை யறிந்து அவர்களுக்கு க்ஷேமத்தை யுண்டுபண்ணுகிறார். சக்தி, கணேசர், சூரியன், சிவன் இவர்களெல்லாம் அவராஞ்ஞைப்படி நடக்கிறார்களென பாரதம், பத்மபுராணம், நரசிம்மதாபனீ, ராமதாபனீ, கோபாலதாபனீ என்னுமுபநிஷத்துகளும் சொல்லுகின்றன. விஷ்ணு சொரூபத்தினின்றும் ஜகத்துமுழுமையுமுண்டாகிறது. பீடாதிதுக்கங்களை அவர் பரிகரிக்கப்பட்டவர். இவரை எல்லாரும் ஆராதிக்கிறார்கள். பல அவதாரங்களை தரித்து தேவர்களுக்குச் சகாயஞ்செய்திருக்கிறார். ஆகையால் விஷ்ணுவே உபாஸிக்கத்தக்கவர். விஷ்ணுவுக்குச்சமானமாய் உபாஸிக்கத்தக்கவேறொரு தெய்வமில்லை. விஷ்ணுவுக்குச் சிவன் உத்தமபக்தனாயிருந்தாலும அவன் உபாஸிக்கத்தக்கச் சொரூபத்தைத் தரிக்கவில்லை. சிவன் சவம்[56]போல் அமங்களஸ்வரூபி. ஆகையால் அவனை நாம் தியானிக்கிறதில்லை. சாம்பல், டமரு, யானைத்தோல், மண்டையோடு, இவைகளைத்தரிக்கப்பட்டவன், யாருக்குத்தான் க்ஷேமத்தையுண்டுபண்ணப்போகிறான். அவனுடைய பிள்ளையும் அப்படித்தானென்றறி. கணங்களுக்கெல்லாஞ் சிரேஷ்டனாயிருக்கிற கணபதி மனுஷியமிருகரூபங்களைத்தரிக்கிறான். ஜடமாய்த்தேவியைத்தியானிக்கிறவர்கள் அந்த ரூபத்தைத்தரிக்கிறார்கள். தேவீ நிந்திக்கத்தக்கவளாயும் அசுசியாயும் கபடஸ்வரூபியாயும் தோஷமூர்த்தியாயும் பராதீனமாயுமிருக்கிறாள். இப்பேர்ப்பட்ட மூர்த்தியை விரும்புகிறவன் மிருகவத்தாய் இவளைச்சேவிக்கட்டும். இச் சூரியனோ இராப்பகலாய் ஓய்வில்லாமல் அலைகிறான். இவனை யுபாஸிக்கப்பட்டவனும் இவனைப்போல்

56. பிணம்.

தான் அலேவான். ஆகையால் மற்ற எல்லாதேவதைகளேயு மொழித்து எப்போதும் விழிப்புள்ளவராயிருக்கிற மகாவிஷ்ணுவே சேவிக்கத்தக்கவ ரென்று அறியத்தக்கது. நாரதபஞ்சராத்திரத்தில் விஷ்ணு பூஜாக்கி யாணவிதிகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. விஷ்ணு உபாஸனேதவிர வேறு நான்குபாஸனேகள் உலகத்தில் விளங்குகின்றன. இவைகளில் ஒவ்வொன்றையும் நிஷேதித்ததினுல் ஸ்மார்த்த உபாஸனேயும் நிஷேதிக்க ப்பட்டதாக ஆய்விட்டது. ஏனெனில் ஐந்துதேவதைகளேயும் சமபுத்தி யுடன் உபாஸிப்பதற்கு ஸ்மார்த்த உபாஸனேயென்று பெயர். சிவன் மு தலிய நாலு தேவதைகளும் விஷ்ணுவுக்குச் சமானமல்லவென்று நிஷே திக்கப்பட்டிருக்கிறபடியால் ஸ்மார்த்தவுபாஸனேயும் நிஷேதிக்கப்பட்ட தாயிற்று.

684. **சிவஉபாஸகன்:**— சைவஉபாஸகன் மேற்சொன்ன தைக்கேட்டுக்கோபங்கொண்டு கண் சிவந்து சொல்லுகிறதாவது:— அ ரசனே, என் வார்த்தையைகேளும். நான் சொல்வதற்கு அனேகப்பிர மாணங்களுண்டு. கேட்கப்பட்டவையெல்லாம் கொடுத்தருளும் பரமசி வனுக்குச்சமானம் யார். மகாவிஷ்ணுவால் யாசிக்கப்பட்டுத்தன்னுடை ய சகல ஐசுவரியங்களேயுங்கொடுத்துத்தான் பஸ்மத்தைத்தரித்தார். இக் காரணத்தினுலேயே தோலேயும் மண்டையோட்டையும் தரித்தார். அ வருக்கு நல்லது பொல்லாதது கிடையாது. அவருக்கெல்லாஞ்சமந்தா ன். அவதூதசந்நியாசிகளுக்கு மோக்ஷமார்க்கத்தையுபதேசிக்கிருர். வை ராக்கியத்துக்குச்சமானமான சுகங்கிடையாது. வைராக்கியமுள்ளவர் கள் காசியில் வசித்து மரணமடைந்தால் சீக்கிரத்தில் சாயுஜ்யமோக்ஷத் தையடைகிருர்கள். கஷ்டமானதானகர்ப்பவாசத்திற் மறுபடியுஞ்செல் லுகிறதில்லே. அவர்கள் சிவனுக்குச்சமானமாகிச் சர்வபோகங்களேயும னுபவிக்கிருர்கள். லிங்கசரீரத்தை விட்டுப்பிர்ம்மத்தையடையும்படியா ன அத்வைதபோதத்தைப்பரமசிவன் செய்கிருர். உயர்வு தாழ்வு பார் க்காமல் அவர் முக்தியளிக்கிருர். அவருக்குச்சமானமான தாதா ஒருவ ருமில்லே. பக்தியுள்ளவர்களேயும் இல்லாதவர்களேயுஞ்சமமாயிரக்ஷிக்கி ருர். விஷ்ணுவின் சுபாவத்தை நாம் கேள்விப்பட்டிருக்கிருேம். அவ ர் பக்தர்களே மாத்திரமிரக்ஷிக்கிருரென்பது உலகப்பிரசித்தமாயிருக்கிற து. ஹரிசேவகன் அரன்சேவியனென்று வியாஸர் கந்தபுராணத்திற் சொல்லியிருக்கிருர். இராமேச்சுரத்தில் இராமச்சந்திரன் பரமசிவனே ப்பூஜித்திருக்கிருர். பத்மபுராணத்திற் சகலதேவர்களேயும்விட ஹரி சி

ரேஷ்டரென்று சொன்னதற்குத் தாற்பரியம் அப்படியன்று. ஏனெனில் பாரததாற்பரியத்தைப்பார்க்குமளவில் சிவனுக்கும் ஈசுரத்துவம் பிரதீதியாகிறது. அப்பையதீக்ஷிதரென்னும் வித்துவான் சகலபுராணங்களுக்கும் இதிஹாஸங்களுக்குந் தாற்பரியம் எழுதியிருக்கிறார். பாரதத்தில் அவர் சொல்லியிருக்கிறதாவது:— அசுவத்தாமாவால் நாராயணாஸ்திரம் ஆக்கினேயசாஸ்திரமும் பிரயோகப்படுத்தப்பட்டபோது வெகு சேனைகள் மரித்தும் பஞ்சபாண்டவர்களில் ஒருவரும் மரிக்கவில்லை. அப்போது ரதத்தைவிட்டுத் தனுர்வேதத்தையும் ஆசாரியனையும் திரஸ்கரித்து வனத்துக்குப்போனார். அப்போது வியாஸர் அவனை சந்தித்துச்சொல்லுகிறார்:— ஓய்ப்பிராமணனே நீர் ஆசாரியனையும் வேதத்தையும் நிந்திக்கலாகாது. இந்த அர்ச்சுனனும் கிருஷ்ணனும் நரநாராயணரூபங்கள். இவர்கள் சிவனைப்பூஜித்திருக்கிறபடியால் இவர்களுடைய பக்திக்கதீனமாகித் திரிசூலியான மகாதேவன் இவர்களுடைய ரதத்துக்கு முன்னின்று, இவர்கள்பேரில் பிரயோகிக்கப்படும் சஸ்திராஸ்திரங்களின் சாமர்த்தியத்தை நாசஞ்செய்கிறார். இவ்விதமாக மகாபாரதத்தில் மகாதேவருடைய கிருபையால் நாராயணரூபகிருஷ்ணனுக்கு விபூதியுண்டானதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் விஷ்ணுசரித்திரத்தைப்பிரதிபாதிக்கும் கிரந்தம சிவனுடைய ஆதிக்யத்தைப்பிரதிபாதிக்கிறது. ஏனெனில் அக்கிரந்தத்தில் விஷ்ணு சேவியனாகச்சொல்லப்பட்டிருக்கிறது. பாரதத்தைக்கொண்டு விஷ்ணு சிவபக்தன் என்று தெரியவருகிறது. ஆகையால் எந்தச்சிவனைப்பூஜிக்கிறதால் விஷ்ணு சேவியனானே அந்தச்சிவன் பரமசேவியனாகிறார். இவ்விதமாக அப்பையதீக்ஷிதரால் சகலவைஷ்ணவக்கிரந்தங்களைக்கொண்டும் சிவனே பிரதிபாத்தியனென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஹரியானவர் பக்தர்களுக்குள் உத்தமமானவர். சிவனுக்கே மகாதேவனென்றும் மகேசனென்றும் பெயர். இதரதேவர்களுக்குத்தேவரென்றும் ஈசுரரென்றும்பெயர். சிவமென்றால் மங்களமென்று பொருள். சிவத்துக்கு அன்னியமானதெல்லாம் அசிவம். சிவனுக்கு அன்னியமானதெய்வங்களெல்லாம் அசிவங்கள் அமங்களஸ்வரூபிகள். இந்த அமங்களரூப தெய்வங்களைவிட்டு மங்களஸ்வரூப சிவனை யுபாஸிக்கவேண்டியது. விஷத்தைப்பார்த்து மற்றெல்லாதேவர்களுக்கும் பயமுண்டாயிற்று. அப்போது அவ்விஷத்தைக்கண்டத்திற் கொண்டு பயத்தைப்போக்கினார். இவருடைய குமாரரான கணேசர் சகல விக்கினங்களையும் போக்குகிறார். காரியத்தின் குணமெல்லாம் காரணத்திலிருப்பதால் விக்கினங்களையெல்லாம் நாசம் பண்ணு

றவர் சிவனென்றறியவேண்டியது. ஜனனமரணங்களாகிற [illegible]ரூப விக்கினங்களும் சிவத்தியானத்தால் நாசமாமென்று அறியத்தக்கது. இவ்விதமாகச்சதாசிவனே சிரேஷ்டனாகிறபடியால் சேவிக்கத்தக்கவன். பாசுபததந்திரத்தில் சிவபூஜாவிதிகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. அவ்விதிப்படித் தியானித்தால் சிவனடியை தரிசிக்கக்கூடும். நாரதபஞ்சராத்திரமதம் சூத்திரபாஷியத்திற் கண்டிக்கப்பட்டிருக்கிறது. அப்படியே இராமானுஜாதிகளின் நவீனவைஷ்ணவமதமும் கலபதருவின்[57] டீகாவாகிற பரிமளத்திற் கண்டிக்கப்பட்டிருக்கிறது.

685. **கணேசபூஜகனுடைய உத்தரம்:—** கணேசன் சிவன் புத்திரனென்று சொன்னதையும் காரணத்தின் குணம் காரியத்திலிருப்பதாகச்சொன்னதையுங்க்கேட்டுகணேசபூஜகன் கோபத்துடன் சொல்லுகிறதாவது:— "அரசனே, நான் சொல்லும் பதார்த்தத்தைக்கேட்க. இவ்விருவரும் பொய்யை நிஜமெனச்சாதிக்கிறார்கள். கணேசன் சிவபுத்திரனென்றும் பராதீனனென்றுஞ்சொல்லியிருக்கிறார்கள். இவ்விஷயமாய் வியாஸர் புராணத்திற்சொல்லியிருக்கிற ஒருகதையைச்சொல்லுகிறேன் கேட்க:— திரிபுரசங்காரஞ்செய்ய அரியராதி எல்லாதேவர்களும் போனார்கள். கணேசனைப்பூஜிக்காதவரையில் திரிபுரர்கள் தோற்கடிக்கப்படவில்லை. பிறகு மனவருத்தமுற்று எல்லாரும் கணேசனையாராதித்துத்திரிபுரர்களை ஜயித்தார்கள். எவனைபூஜித்ததினால் இவர்கள் ஜயமடைந்தார்களோ அவனே சேவிக்கத்தக்கவனென்று அறியவேண்டியது. தசரதனுக்கு ராமன் புத்திரனாயிருந்ததுபோல் பரமசிவனுக்குக்கணபதி புத்திரராயிருநது விக்கினங்களைப்போக்கினார். கணேசபுராணத்தில் வியாஸர் சொல்லியிருக்கிறதாவது:— எல்லாவற்றிற்குங்கணேசனே காரணம். அவருடைய துதிக்கையிலிருந்து அரி அரன் விதி ரவி சக்தி முதலானவர்களெல்லாம் ஜனித்தார்கள். எவர்கள் க்ஷணமாத்திரம் இவரைத்தியானிக்கிறார்களோ அவர்களுடைய விக்கினங்களெல்லாம் உடனே ஒழிகின்றன. இப்படி இரவும்பகலும் விழிப்புள்ளவராயிருக்கிற விநாயகக்கடவுளைப்பக்தியுடன் நிஷ்காமகர்மமாய் பஜிக்கவேண்டியது.

686. **தேவீபக்தனுடைய உத்தரம்:—** கணேசன் சக்திக்குக்காரணமென்று சொன்னதைக்கேட்டுப்பகவதீபக்தன் கர்ச்சித்து அரசனைப்பார்த்துச்சொல்லத்தொடங்குகிறான். அரசனே என் சத்தியமா

---

57. இந்த தரங்கத்தின் 44-வது குறிப்பைப்பார்க்க.

ன வசனத்தைக்கேட்க:— இம்மூவருஞ்சொன்னதெல்லாம் அப்பிரமாணம். சக்தியன்றியில் தேவர்களெல்லாம் பிணத்துக்குச்சமானமாவாரென்று அறியத்தக்கது. சக்தியில்லாத அசமர்த்தனால் எந்தக்காரியம் முடியும். சக்தியையுபாஸித்தவர்கள்தான் அதிகாரியாகிறார்கள். ஹரிஹரன் சூரியன் கணபதி இவர்களிடத்தில் இவ்விதமாகச்சக்தி காணப்படுகிறது. பிரபஞ்சத்தில் எதைசசக்தியென்று சொல்லுகிறார்களோ அதுவே பகவதியின் ரூபமென்று அறியத்தக்கது. பகவதிக்கு இரண்டு ரூபங்களுண்டு. ஒன்று சாமானியம், மற்றொன்று விசேஷம். எல்லாப்பதார்த்தங்களிலுமுள்ள அவ்வவற்றிற்குரிய காரியத்தைச்செய்யுஞ் சாமர்த்தியரூபசக்தி பகவதியின் சாமானியரூபமாம். அஷ்டபுஜாதி விசேஷணங்களுடன் கூடிய மூர்த்தியிலுள்ள சக்தி விசேஷசக்தியாம். சாமானியரூபசக்தியின் அம்சங்கள் எண்ணிறந்தவை. எவனிடத்தில் சக்தியின் அம்சம் குறைவாயிருக்கிறதோ அவன் அற்பசக்திமான் அசமர்த்தன் என்னப்படுகிறான். எவனிடத்தில் சக்தியின் அம்சம் அதிகமாயிருக்கிறதோ அவன் சமர்த்தன் என்னப்படுகிறான். விஷ்ணு சிவன் முதலியவர்களிடத்தில் சக்தியின் அம்சம் அதிகமாயிருக்கிறபடியால் அவர்கள் சமர்த்தரென்று சொல்லப்படுகிறார்கள். இவ்விதமாயப்பகவதியின் சாமானியரூபசக்தியம்சத்தின் மிகுதியால் விஷ்ணு, சிவன், கணேசன், சூரியன் இவர்களுடைய மகிமை பிரசித்தமாயிருக்கிறது. பிராணனன்றியில் சரீரம் அமங்களமாயிருப்பதுபோல் சக்தியன்றியில் சகலதேவர்களும் அமங்களஸ்வரூபிகளாவார்கள். ஆனதால் எந்தச்சக்தியின் மிகுதியால் தேவர்களுடைய மகிமை பிரசித்தமாயிருக்கிறதோ அம்மகிமை சக்திக்குரியதேதவிர தேவர்களுக்குரியதன்று. விஷ்ணு சிவன் முதலியோர் பகவதியின் சாமானியரூபசக்தியை விசேஷமாயுபாஸித்தபடியால் அவர்களிடத்தில் சக்தியின் விசேஷமான அம்சங்காணப்படுகிறது.

பகவதியினுடைய நிராகாரரூப சக்திக்கு அநேக அம்சங்களிருப்பதுபோல ஸாகாரரூபசக்திக்கும் அநேக அம்சங்களுண்டு. இவைகளில் காளீரூபம் பிரதானம். மாகேச்வரீ, வைஷ்ணவீ, ஸௌரீ, கணேசீ முதலியவைகளும் பிரதானஅம்சங்களே. பகவதீயுபாஸனையால் விஷ்ணுவுக்கு வைஷ்ணவீ யென்னும் பகவதீயின் அம்சங்கிடைத்தது. இப்படியே மற்றதேவதைகளுக்கும் பகவதீயின் உபாஸனையால் மாகேஸ்வரீ முதலிய அம்சங்கள் கிடைத்தன. விஷ்ணுவும் சிவனும் பகவதீயின் முக்கிய பக்தர்களாயிருக்கிறார்கள். ஏனெனில் தியானஞ்செய்வோர் தியேயரூபத்தையடைவதே தியானத்தின் பரம அவதியாகும். விஷ்ணுவுக்கும் சிவனுக்குமுபாஸனையால் தியேயரூபங்கிடைத்தபடியால் இவர்கள் முக்கிய உபாஸகர்கள்.

மதனத்தால் அமிர்தமுண்டானபோது, சுராசுரர்களுடைய விவாதத்தைத்தீர்க்க விஷ்ணுவுக்குச்சாமர்த்திய மில்லாமற் போயிற்று. அப்போது தன்னுபாஸியரூபமான பகவதீயின் அமசத்தைத்தியானஞ்செய்து தானே யந்த ரூபத்தை யடைந்தார். அந்த ரூபத்தின் மகாத்மியத்தால் அசுரர்களும் விஷ்ணுவுக்கு அநுகூலமானார்கள். சிவனுஞ் சமாதியிற் பகவதியைத்தியானஞ்செய்து தன் பாதி சரீரம் ஸ்திரீரூபமடையப்பெற்றார். விக்ஷேபத்தால் சமாதி முடிவுபெற்றபடியால் முழுசரீரமும் ஸ்திரீரூபமாகவில்லை. பகவதீயின் பக்தர்களான ஹரிஹரர்களைப்போல் பகவதீயை யார்தானுபாஸிக்கப்போகிறார்கள். ஆயினும் மகாமாயையைத்தியானிக்கிறவன் பூர்ணபுருஷார்த்தத்தைச்சீக்கிரத் திலடைவான். ஒரேயிடத்தில் போகமோக்ஷங்களை யடையும்படியான வேறு சாதனம் ஜகத்திலில்லை. பகவதீபக்தன் சகலபோகங்களையும் அனுபவித்துங்கர்ப்பவாசத்தையடைகிறதில்லை. சிவதந்திரத்தில சுகத்தைத்தரும் சக்தியாராதனை விவரிக்கப்பட்டிருக்கிறது. முன்னோர்கள் பஞ்சமகாரங்களையும் அனுஷ்டித்திருக்கிறார்கள். பலராமனும் கிருஷ்ணனும முதல்மகாரத்தை எப்போதும் பானம்பண்ணினார்கள். மகாரங்களைச்சேவிக்கும் விதிகள் பரமசிவனால் பரோபகாரத்தின் பொருட்டுச்சொல்லப்பட்டிருக்கின்றன. சிவவசனத்தை மனதில் தரிக்கிறவன் இச்சரீரத்திலேயே போகமோக்ஷங்களையடைகிறான். வியாஸர் பாகவதத்தைச்செய்திருக்கிறார். உபபுராணத்திற் காளியை வர்ணித்திருக்கிறார். பகவதீயின் பக்திதான் மேலாகக்கொள்ளப்பட்டிருக்கின்றது. ஹரி ஹரன் சூரியன் கணேசன் முதலியோர் பகவதியைத்தான் தியானஞ்செய்கிறவர்கள். முதல் மகாரத்தைச்சேவித்து உன்மத்தர்களாகிச்சக்தியைப்பூஜிக்கிறார்கள். ஜகத்ஜனனீயாகியதேவியே விழிப்புள்ளவளாயிருக்கிறாள். இவளைச்சேவிப்பதால் பரமானந்தம் அடையப்படுகிறது.

687. **சூரியபக்தனுடைய உத்தரம்:—** பகவதியின் மகாத்மியத்தைக்கேட்டு கோபங்கொண்டு சூரிய பக்தன சொல்லுகிறான். அரசனே என்னுண்மையான வசனத்தைக்கேட்க.— நான் கோடிப்பிரமாணங்கள்செய்து உண்மையுரைக்கிறேன். இவர்களுடைய மதங்களெல்லாம் மிகவும் பாபகரிகளாயும் இழிவானவைகளாயும் இருக்கின்றன. ஜகத்திற் கெட்டவையெல்லாம் தேவீமார்க்கத்தில் உத்தமமாகச்சொல்லப்பட்டிருக்கின்றன. மலின மத்தியம் தீர்த்தமென்றும், மாமிசம் சுத்தமென்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. விபரீதத்தைச்சொல்லும் சிவதந்திரம் அனுஷ்டிக்கத்தக்கதன்று. தக்ஷிண சம்பிரதாயஞ் சிரேஷ்டமாகையால் எல்லாராலும் அனுஷ்டிக்கதக்கதாயிருநதாலும் சூரியனன்றியில் எல்லாம் அந்தகமாம். எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கிறவன் சூரியன். அவன் இல்லாவிட்டால் எங்கும் இருள் கவிந்துகொள்ளும். ஜ

கத்திலுள்ள மற்றப்பிரகாசங்கொடுக்கும் வஸ்துக்களெல்லாம் சூரியனு டைய அம்சங்களே. சூரியனைப்போல் ஒருவனும் உபகாரஞ் செய்கிறதில் லை. பிறருடைய ஹிதத்தின்பொருட்டேத்தான் ஆகாசத்தில் ஓயாமல் அலைகிறான். சகல காரியங்களும காலாதீனமாயிருக்கின்றன. சென்றகாலம, நிகழ்காலம், வருங்காலமென்றுகாலம் மூவகையென அறிவினர் சொல்லுகிறார்கள். சூரியகதியால் சகல காரியங்களும் பூர்த்தியாகின்றன. எல்லாம் சூரியனிடத்திலிருந்தேயுண்டாகின்றன. அவர் கோபத்தால எலலாம பஸ்மமாகின்றன. இவருக்கு ஸாகாரம் நிராகாரமென இரண்டு ரூபங்களுண்டு. நிராகாரப்பிரகாசம் சகல நாம ரூபங்களிலும் வியாபித்திருக்கிறது. எதை வேதாந்திபார்[58] சப்தத்தால் வியவகரிக்கிறாரோ அது நிராகாரப பிரகாசரூபமான சூரியனுடைய சாமானியரூபம. இது ஜகத்துக்கெல்லாம அதிஷ்டானம். இதின் அஞ்ஞானத்தினால் ஜகத் ரூப விவர்த்தமுண்டாகிறது. இந்த நிராகாரப்பிரகாசமும் அந்தக்கரண விர்த்தியில் அதின் பிரதிபிம்பமுமசேர்ந்தது ஞானமென்று சொல்லப்படும. அகமபானுவென்று அந்தக்கரண விர்த்தி பிரகாசிக்கும்போது அஞ்ஞானம் நிவிர்த்தியாகி ஜகத்தும்நிவிர்த்தியாகிறது.

சூரியனுடைய ஸாகார ரூபத்தைச்சொல்லுகிறேன் கேட்க:— பிராதக்காலத்தில் அவருடைய தேஜஸ் பிரகாசிக்கிறது. சந்திரன் நக்ஷத்திராதிகளும் அவருடைய அம்சங்களே. சூரியனுடைய இரண்டு ரூபங்களின் நிராகாரம் ஞேயம் ஸாகாரம் தியேயம். இவைகளுக்கே வேதாந்தத்தில் நிர்க்குண ஸகுணப் பிர்மமங்களென்றும் பெயர். சூரியனிடத்தில் ஒருக்காலத்திலும் அந்தகாரமென்கிற லேசமுமில்லை. அவரைப் பார்த்தே எல்லாரும் தங்கள் கர்மத்தைச் செய்கிறார்கள். இவ்விதமாக விழிப்புள்ள சூரியனையுபாஸிக்கிறதினால் அந்தகாரம ஒழிந்துபோம். மற்ற தேவதைகள் விழிப்புள்ளவர்களென்று சொன்னது மித்தையென்று அறியவேண்டியது.

688. **ஸ்மார்த்தமதம்:—** ஐந்து உபாஸகர்கள் பரஸ்பர விருத்த வசனங்களைச் சொன்னதுபோல் அநேக பண்டிதர்களும் தங்கள்

---

58. பா

தங்கள் புத்திக்கெட்டியபடி விருத்த[59] அபிப்பிராயங்களையே தெரிவித்தார்கள். ஸ்மார்த்த பண்டிதன் மேற்கண்ட ஐந்து தேவதைகளிடத்திலும் பேதபுத்தி கொள்ளாவிட்டாலும் அவனுடைய மதமும் இவர்களின் மதங்களுக்கெல்லாம் விரோதமாயிருக்கிறது. எனெனில், வைஷ்ணவனுடைய மதமென்னவெனில், விஷ்ணுவுக்குச் சமானமான வேறு தெய்வமில்லை. எல்லாரும் விஷ்ணு பக்தர்களே. விஷ்ணுவின் ராம கிருஷ்ண நாராயணன் முதலிய நாமங்களுக்குச் சமானமாய இதர தெய்வங்களின் நாமங்களை எவன் நினைக்கிறானோ அவன் நாமாபராதி[60]. அவனுக்கு ராமாதி நாமோச்சாரணங்களின் யதார்த்தபலனுண்டாகிறதில்லை. இப்படியே சைவ மதத்திலும் சிவனுக்குச்சமானமான வேறு தெய்வமில்லை. சிவனுடைய நாம உச்சாரணத்தின் பலன் விஷ்ணு நாம உச்சாரணத்தாலுண்டாகிறதில்லை. இவ்விதமாக எல்லாருடைய மதங்களிலும் அவரவர்களின் உபாஸிய தெய்வத்துக்குச் சாதனமாய வேறு தெய்வமில்லை. ஸ்மார்த்த மதத்திலோ எல்லா தேவர்களுஞ்சமமே. ஆகையால் ஸ்மார்த்தமதமும் மேற்சொல்லிய ஐந்து மதங்களுக்கும் விருத்தமாயிருக்கின்றது.

689. ஆறு சாஸ்திரங்களின் பரஸ்பரவிருத்தம்:— இப்படியே, சாங்கியம், பாதஞ்சலம், நியாயம், வைசேஷிகம, பூர்வ மீமாம்சை உத்தரமீமாம்சை எனஇவ்வாறு சாஸ்திரங்களின் மதங்களும் பரஸ்பரம் விருத்தங்களாயிருக்கின்றன. எனெனில்[61] சாங்கிய சாஸ்திரத்தில் ஈஸ்

---

59. யோகமதம், நையாயிகமதம், ஹிரணியகர்ப உபாசகமதம், விராட் உபாசகமதம், பிரஜையை இச்சிக்கிறவர்களின்மதம், இம்மதங்களின்படி உபாசிக்கத்தக்க ஈசுவரஸ்வரூபத்தைப் பற்றி 2-வது தரங்கம் 38-வது குறிப்பைப்பார்க்க.

60. (1) சத்புருஷர்களின் நிந்தை. (2) அசத் புருஷர்களிருக்குமிடத்தில் நாமத்தின் மகிமையைச்சொல்லுதல். (3) விஷ்ணுவைச்சிவனுக்கு வெருக அறிதல். (4) சிவனை விஷ்ணுவுக்கு வேருக அறிதல். (5) சுருதிவாக்கியத்தில் அசிரத்தை. (6) சாஸ்திரவாக்கியத்தில் அசிரத்தை. (7) குருவாக்கியத்தில் அசிரத்தை. (8) நாமமகிமையிற் பிரமை. (9) அநேகபாபங்களை நாசம்பண்ணுகிறநாமம் தன்னுடையதாக இருக்கிறதென்கிற விசுவாசத்தினால் நிஷித்தகர்மங்களைச் செய்தல் விகிதகர்மங்களை விடுதல். (10) இதர, தேவதைகளின் நாமங்களையும் பகவானுடைய நாமத்துக்குச் சமானமாயறிதல் இப்பத்தும் நாமாபராதங்கள்.

61. இதனால் நிரீசுவர சாங்கியம் அறியத்தக்கது, 443-வது பிரிவைப்பார்க்க.

வரன் அங்கீகரிக்கப்படவில்லை. பிரகிருதி புருஷர்களின் விவேக ஞானத்தால் சமாதிரூபயோகமன்றியிலேயே மோக்ஷமுண்டாவதாக நினைக்கப்பட்டிருக்கிறது. பாதஞ்சல சாஸ்திரத்தில் ஈசுவரனும் சமாதியால் மோக்ஷமும் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் சாங்கியமும் பாதஞ்சலமும் விருத்தங்களாயிருக்கின்றன. நியாய மதத்தில்[62] நான்கு பிரமாணங்களும் வைசேஷிக மதத்தில்[63] இரண்டுபிரமாணங்களுமிருப்பதால் இரண்டும் விருத்தங்களாயிருக்கின்றன. நியாய வைசேஷிகங்களுக்குள் வேறு விரோதங்களுமுண்டு. ஜிஞ்ஞாசுவுக்கு அவைகள் அவசியமில்லாமையால் அவைகளையிங்கெழுதவில்லை. பூர்வ மீமாம்சையில் ஈஸ்வரனும் மோக்ஷரூப நித்திய சுகமும் அங்கீகரிக்கப்படவில்லை. ஆனால் கர்மத்தாலுண்டாகும் விஷய சுகமே புருஷார்த்தமாயிருக்கின்றது. உத்தரமீமாம்சையில் மோக்ஷமும் ஈஸ்வரனும் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறார்கள். விஷயசுகம் புருஷார்த்தமன்று. உத்தரமீமாம்சையின் மதம் இக்கிரந்தத்தில் வியக்தமாகச்சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் சர்வசாஸ்திரங்களின் மதங்களும் பரஸ்பரம் விருத்தங்களாயிருக்கின்றன. வேறு சாஸ்திரங்களில் பேதவாதமட்டுஞ்சொல்லப்பட்டிருக்கிறது. இதிலோ பேதம் கண்டிக்கப்பட்டும் அபேதம் பிரதிபாதிக்கப்பட்டுமிருக்கிறது. இவ்விதமாகச் சகல சாஸ்திரங்களின் சித்தாந்தங்களும் பரஸ்பரம் விருத்தங்களாகின்றன.

690. தர்க்கதிருஷ்டி தகப்பனையடைதல்:— இவ்விருத்த வசனங்களைக்கேட்டு அரசனுக்கு நூதன சமுசயங்களுண்டாயின. இவர்களுள் யார்சொல்லுவதுண்மை. எல்லாரும் யுக்திப் பிரமாணங்களுடனே பேசுகிறார்கள். இவ்வித சமுசயமாகிற சோகத்தினால் துக்கமுற்ற அரசன் மனதில் உபாஸிக்கத்தக்க தெய்வம் இன்னதென்று தோன்றாமற்போயிற்று. இச்சந்தேகத்தை யெவனிடத்திற் சொல்லுகிறது. ஜகத்திலுள்ள சாஸ்திரநிபுண பண்டிதர்கள் சொல்லும் விருத்தவசனங்களைக் கேட்டு வெகுகாலம் யோசனையில் முழ்கியிருந்தான். இப்படியிருக்கையில தர்க்கதிருஷ்டி தகப்பனிடம் வந்தான். இருவரும் பரஸ்பராலிங்கனஞ்செய்துகொண்டனர். புத்திரன் தகப்பனை விதிப்படி நமஸ்கரித்தான். தகப்பன் பிரியத்துடன் ஆசீர்வதித்து ஆசனங்கொடுத்தான்.

---

62. பிரத்தியக்ஷம், அனுமானம், சாப்தம், உபமானம் (213).

63. பிரத்தியக்ஷம், அனுமானம் (211).

691. **தர்க்கதிருஷ்டியின் கேள்வி:—** தகப்பன் சிந்தையில் மூழ்கி யிருப்பதைக் கண்டு ஐயா, என்னயோசனை, முகம் பிரசன்னமாயில்லையே என்று தர்க்கதிருஷ்டி வினவினான்.

692. **சுபசந்ததி உத்தரம்:—** புத்திரன் வசனத்தைக்கேட்டு தன் யோசனைக்குக் காரணமான சகல விர்த்தாந்தங்களையும் அவனுக்குச்சொன்னான். எந்ததெய்வம்உபாஸிக்கத்தக்கதென்று தெறியவில்லை. யென்றான்.

693. **தர்க்கதிர்ஷ்டியின்உபதேசம்** (693—707)·— தர்க்கதிருஷ்டி தகப்பன் வார்த்தையைக்கேட்டு அவனுக்குச் சுபமுண்டாகக்கருதிச் சொல்லுகிறான். காரணரூபம் உபாஸ்யமென்றும் காரியரூபம் துச்சமென்றும் அறியத்தக்கவை. காரண ரூபத்தின் நாமங்கள் பல. இது வேதத்தின் முக்கிய சித்தாந்தம். இதிஹாஸபுராணங்களில் வியாஸர் சொல்லியசித்தாந்தமும் இதுவே தவிர வேறில்லை. இந்தமர்மத்தைப்பண்டிதர்களறியாமல் பிறர் மதத்தைக்கண்டிக்கிறார்கள். பாரதத்துக்கு வியாக்கியானமெழுதின **நீலகண்டபண்டிதர்** அவ்வியாக்கியானத்தின் ஆரம்பத்தில் இப்பிரசங்கத்தைச் செய்திருக்கிறார். அவ்விடத்திலேயே உத்தமமான சுருதி சித்தாந்தங்களையு முள்ளபடிச்சொல்லி யிருக்கிறார்.

694. **புராணத்திற் சொல்லிய ஸ்துதி நிந்தைக்கு அபிப்பிராயம்:—** சகல புராணங்களின் கர்த்தாவான வியாஸர் ஸ்கந்தபுராணத்திற் சிவனுக்கு ஸ்வதந்திராதி ஈஸ்வரதர்மங்களுண்டெனச் சொல்லியிருக்கிறார். இதர தேவதைகளுக்குச் சிவகிருபையால் எல்லாவிபூதிகளுங்கிடைக்கிறதாகவுஞ் சொல்லியிருக்கிறார். ஆகையால் இவர்களுக்கு ஜீவதர்மம் சொல்லப்பட்டது. இப்படியே வைஷ்ணவமான பத்மபுராணத்தில் விஷ்ணுவுக்கு ஈஸ்வரத்துவஞ் சொல்லப்பட்டிருக்கிறது. இன்னுஞ் சில புராணங்களிலும் உபபுராணங்களிலும் கணேசாதி தேவதைகளுக்கு ஈஸ்வரத்துவஞ் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதமாக வியாஸர் வாக்கியத்தில் விரோதம் பிரதீதியாகிறது.

695. ஆயினும் இதற்குச் சமாதானமென்ன வெனில், எல்லாரும் ஈஸ்வரர்கள்தான். எந்தப்பிரகரணத்தில் இதரதெய்வம் நிந்திக்கப்பட்டிருக்கிறதோ அதின் நிந்தையால் அதை யுபாஸிக்கத்தகாதென வியாஸர் அபிப்பிராயமன்று. ஆனல் வைஷ்ணவ புராணத்திற் சிவாதி

தேவதைகளின் நிந்தைவிஷ்ணுவின் ஸ்துதி இவைகள் விஷ்ணுஉபாஸனையிற் பிரவிர்த்தியுண்டாக ஹேதுக்களாயிருக்கின்றன. இவ்வாறே, சிவபுராணத்திற் செய்த விஷ்ணுவாதிகளின் நிந்தைக்கும் இவைகளினுபாஸனைகளை விட்டுவிடவேண்டுமென்கிற கருத்தன்று. ஆனால் அந்நிந்தைச் சிவஉபாஸனையிற் பிரவிர்த்தியுண்டாகும் பொருட்டேயாம். ஒரு பிரகரணத்தில் இதரதேவதையின் நிந்தை அதினுபாஸனையைத் தள்ளுவதற்காக ஏற்பட்டிருக்கும்பக்ஷத்தில் எல்லாதேவதைகளினுபாஸனைகளையுந் தள்ளும்படிநேரிடும். ஆகையால் அன்னியதேவதையின் நிந்தையதினுபாஸனையை விட்டு விடுவதற்காக ஏற்படவில்லை; ஆனால் ஒருதேவதையைச் சிறப்பிக்க ஏற்பட்டிருக்கிறது.

696. **திருஷ்டாந்தம்:**—வேதத்தில் அக்கினி ஹோத்திரத்துக்கு இரண்டு காலங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஒன்று சூரியோதயத்துக்கு முன்னும் மற்றொன்று சூரியோதயத்துக்குப் பின்னுமே. முற்காலப்பிரசங்கத்தில் பிற்காலம் நிந்திக்கப்பட்டிருக்கிறது. பிற்காலப்பிரசங்கத்தில் முற்காலம் நிந்திக்கப்பட்டிருக்கிறது. அக்கினிஹோத்திரத்தை விட்டுவிடவேண்டுமென்கிற அபிப்பிராயம் நிந்தைக்கிருக்குமேயானால் இவ்விரண்டு காலங்களிலும் ஹோமத்தை விட்டு விடும்படி நேரிடும். ஆனால் நித்தியகர்மத்தை விடலாகாது. ஆகையால் முற்காலத்தின் ஸ்துதியின் பொருட்டுப் பிற்காலநிந்தையும் பிற்காலஸ்துதியின் பொருட்டு முற்காலநிந்தையுஞ் செய்யப்பட்டிருக்கின்றன. இதுபோல், ஒருதெய்வத்தினுபாஸனப்பிரசங்கத்தில் இதரதேவதையின் நிந்தைக்குத் தாற்பரியம் அத்தெய்வத்தின் சிறப்பே தவிர இதரதெய்வத்தின் நிந்தையன்று.

697. **ஐந்துதேவதைகளினுபாஸனைக்கும் ஒரேபலன்** சாகாபேதத்தால் சிலர் உதயத்துக்கு முன் ஹோமஞ் செய்கிறார்கள், சிலர் உதயத்துக்குப் பின் செய்கிறார்கள். இருவருக்கும் பலன் ஒன்றே. இதுபோல் இச்சாபேதத்தால் ஐந்து தேவதைகளுக்குள் எதை யுபாஸித்தாலும் ஐந்துபாஸனைகளாலும் பிரம்மலோகமேயடையப்படும். அவ்விடத்தில் போகங்கள் அனுபவிக்கப்பட்டு விதேகமோக்ஷம் சித்திக்கிறது. விஷ்ணுமுதலிய தேவதைகளினுபாஸனையால் வைகுண்டாதி லோகங்கள் அடையப்படுமென்று புராணங்களிற் சொல்லியிருக்கிறதேதவிர பிர்ம்மலோகம் அடையப்படுவதாய்ச் சொல்லப்படவில்லை. ஆயினும் உத்தமஉபாஸகர்கள் விதேகமுக்திக்கு அதிகாரிகளாயிருப்பதால் தேவயான மார்க்கத்தின் மூலமாய்ப் பிர்ம்மலோகத்துக்கே போகிறார்கள். ஆனால் ஒரேபிர்ம்மலோகம் விஷ்ணுஉபாஸகனுக்கு வைகுண்டரூபமாயும் அங்குள்ளவர்கள் சதுர்ப்புஜங்களோடுகூடினவர்களாகவும் பிரதீதியாகிறார்

கள். தானுஞ் சதுர்ப்புஜனுகவே யாகிருன். அப்படியே சிவோபாஸக னுக்குச் சிவலோகமும் அங்குள்ளோர் திரிநேத்திரஸ்வரூபிகளாகவும் பிர தீதியாகிருர்கள். தானும் அப்படியே பிரதீதியாகிருன். இவ்விதமாக எல்லாவுபாஸகர்களுக்கும் பிர்ம்மலோகமே அவரவர்களின் உபாஸ்யஸ்வ ரூபத்துக்குத் தகுந்தபடியே பிரதீதியாகிறது. ஏனெனில் தேவயானமா[64] ர்க்கமன்றியில் மற்றமார்க்கங்களிற் போகிறவன் மறுபடியும் சமுசாரத்தி ற்கு வருகிருனென்பதும் தேவயானமார்க்கமொன்றே பிர்ம்மலோகத்து க்குப் போவதென்பதும் நியமம். ஆகையால் விதேகமோக்ஷத்துக்கு யோ க்கியர் களானஉபாஸகர்களெல்லாம் பிர்ம்ம லோகத்துக்குப் போகிருர் கள். இந்தப் பிர்ம்மலோகத்தில் உபாஸகனுடைய இச்சானுசாரமாகச் சகலசாமக்கிரிகளுடன் அப்பிர்ம்மலோகமே உபாஸகனுக்குப் பிரதீதியா கும்படியான அற்புதமகிமையிருக்கிறது. இவ்விதமாக ஐந்துதேவதைகளி ன் உபாஸனைகளுக்கும் பலனென்றே.

698. பரமாத்மா வினிடத்தில் நாமரூபங்கள்:—முன் சொன்ன விஷயத்திலோராக்ஷேபம். ஐந்து தேவதைகளுக்கும் நாமரூ பங்கள் வெவ்வேறுய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஈஸ்வரனே ஒரு வன். ஒரு ஈஸ்வரனுக்கு அனேக ரூபங்களிருக்கமாட்டா. இதற்குச் சமாதானம்:—பாரமார்த்திகத்தில் நாமரூபங்கள் யாதொன்றும் பரமாத் மாவினிடத்திலில்லை. மந்தபுத்தியுள்ளவர்களின் உபாஸனையின் பொரு ட்டு நாமரூபரகித பரமாத்மாவுக்குக் கல்பிதநாமரூபங்களேற்பட்டிருக் கின்றன. ஆகையால் ஒரேபரமாத்மாவினிடத்தில் மாயையாற் கல்பிக்கப்

---

64. தேவயானம், பிதிர்யானம், ஜாயஸ்வ மிரியஸ்வ இப்பேதங்களா ல் சமுசாரமார்க்கங்கள் மூன்று. சூரியமண்டலத்தைப் பேதித்துக்கொண்டு ப்பிர்ம்மலோகத்துக்குப்போகுதல் தேவயானம். இதற்கே அர்ச்சிமார்க்கமென் றும் பெயர். சந்திரமண்டலத்தைப் பேதித்துக்கொண்டு இந்திரலோகரூபமா ன பிர்ம்மலோகத்துக்குப் போகும் மார்க்கம் பிதிர்யானம் அல்லது தூமமார்க்க மென்று சொல்லப்படும். அடிக்கடி ஜனனமரணங்களுக்குக் காரணமான மிரு த்தியுலோகத்துக்குப் போவது ஜாயஸ்வ் மிரியஸ்வமார்க்கம். இம்மூன்றும் ச முசாரமார்க்கங்களாம். நான்காவதாகிய பிர்ம்மஞானரூபமார்க்கம் மோக்ஷ மார்க்கமாம்.

விசாரசாகரத்தின்

குறிப்பு முற்றிற்று.

ஹரி: ஓம்.

---

பட்ட நாமரூபங்கள் அநேகமுண்டாகின்றன. இவ்விதமாய்ச் சர்வபுராணவாக்கியங்களின் விரோதமும் நிவிர்த்தியாய்விடுகிறது

699. **புராணதாற்பரியம்** (699—700):—புராணவாக்கியங்களில் விரோதசங்கைக்கு முக்கியசமாதானம் அடியில் வருமாறு.—விஷ்ணு சிவன் கணேசன் தேவி சூரியன் முதலிய ஒவ்வொருநாமமும் காரணபிர்ம்மத்தினதாம். காரியப்பிர்ம்மத்துக்கும் இந்நாமங்களுண்டு. மாயாவிசிஷ்டகாரணத்தைப் பிர்ம்மமென்கிறார்கள். காரியமான ஹிரண்யகர்ப்பத்தையும் பிர்ம்மமென்கிறார்கள். இவ்விதமாகக் காரணப்பிர்ம்மத்தையும் காரியபிர்ம்மத்தையும விஷ்ணு சிவன் முதலிய பதங்கள் குறிப்பிடுகின்றன. இப்படியே இப்பதங்களுக்கு நாராயணன் நீலகண்டன் விக்கினேசன் சக்தி பானு முதலிய அநேகப்பிரதிபதங்களுண்டு. இவைகளெல்லாம் காரணகாரியப்பிர்ம்மங்களிரண்டையும் போதிக்கின்றன. சில காரணப்பிர்ம்மத்தையும் சிலகாரியப்பிர்ம்மத்தையும் சந்தர்ப்பத்துக்குத் தகுந்தபடி க்போதிகின்றன. திருஷ்டாந்தம்:— சைந்தவபதம் குதிரையையும் உப்பையும் குறிப்பிடுகிறது. போஜனசந்தர்ப்பத்தில் அது உப்பையும் நடைசந்தர்ப்பத்தில் குதிரையையுங் குறிப்பிடுகிறது. இது போல்வைஷ்ணவபுராணத்தில் விஷ்ணு நாராயணன் முதலிய பதங்கள் காரணப்பிர்ம்மத்தையும் சிவன் கணேசன் முதலிய பதங்கள் காரிய பிர்ம்மத்தையுப் போதிக்கின்றன.

700. ஆகையால் வைஷ்ணவக்கிரந்தத்தில் விஷ்ணுஸ்துதிக்கும் சிவாதிகளின் நிந்தைக்கும் அபிப்பிராயமென்னவெனில், காரணப்பிர்ம்மம் உபாஸிக்கத்தக்கது. காரியப்பிர்ம்மம் உபாஸிக்கத்தக்கதன்று. ஸ்கந்தபுராணாதி சைவக்கிரந்தங்களில் சிவன் மகேசன் முதலிய பதங்கள் காரணப்பிர்ம்மத்தையும் விஷ்ணுகணேசன் தேவி சூரியன் முதலிய பதங்கள்காரியப்பிர்ம்மத்தையும் போதிக்கின்றன. ஆகையால் இந்தப்புராணங்களிலும் காரணப்பிர்ம்மத்தின் ஸ்துதியும் காரியப்பிர்ம்மத்தின் நிந்தையும் இருக்கின்றன. இப்படியே கணேசபுராணத்தில் கணேசபதம் காரணப்பிர்ம்மத்துக்கும் விஷ்ணுசிவன்முதலியபதங்கள் காரியப்பிர்ம்மத்துக்கும் வாசகங்களாயிருக்கின்றன. ஆகையால்காரணத்தின் ஸ்துதியும் காரியத்தின் நிந்தையும் இருக்கின்றன. இப்படியே காளீபுராணத்தில் காளீ தேவிமுதலிய பதங்கள் காரணப்பிர்ம்மத்தையும்விஷ்ணு சிவன் முதலிய பதங்கள் காரியப்பிர்ம்மத்தையும் போதிக்கின்றன. ஆகையால் காரணத்தின் ஸ்துதியும் காரியத்தின் நிந்தையு மிருக்கின்றன. இப்படியே ஸௌரபுராணத்தில் சூரியன் பானு முதலிய பதங்களால் காரணப்பிர்ம்மமும் விஷ்ணு சிவன்முதலியபதங்களால் காரியப்பிர்ம்மமும் போதிக்கப்படுகி

ன்றன. ஆகையால் காரணப்பிர்ம்மத்தின் ஸ்துதியும் காரியப்பிர்ம்மத்தின் நிந்தையுமிருக்கின்றன. இவ்விதமாகச்சகலபுராணங்களிலும் காரியகாரணங்களின் ஸம்ஞாரூபச் சங்கேதபேத மிருக்கிறது. எடுத்துக்கொள்ளும் படியாயும் தள்ளும்படியாயுமிருக்கிற அர்த்தத்தில் பேதமில்லை. சகலபுராணங்களிலும் காரணப்பிர்ம்மத்தினுபாஸனை யெடுத்துக்கொள்ளத்தக்கது. காரியப்பிர்ம்மத்தினுபாஸனைத்தள்ளத்தக்கது. ஆகையால் சகலபுராணங்களும் ஒரேகாரணப்பிரம்மத்தினுபாஸனையைப் போதிக்கின்றன. இவைகளுக்குள் விரோதமில்லை

701 **மூர்த்திபூஜையின் கருத்து**(701–702):—சதுர்ப்புஜமூர்த்தி, திரிநேத்திரமூர்த்தி, ஸதுண்டமூர்த்தி அஷ்டபுஜமூர்த்தி முதலியவை மாயையின் பரிணாமமாயும் சேதனத்தின் விர்த்தமாயும் இருப்பதால் காரியங்களாயிருக்கின்றன. இவைகளினுபாஸனையுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. ஆயினும் இந்தச் சதுர்ப்புஜாதிமூர்த்திகளின் மாயாவிசிஷ்டகாரணத்தை விசாரித்துப்பார்க்குமளவில் யாதொரு பேதமுமில்லை ஆகையால் இவைகளினாகாரத்தைப் பாதித்துக் காரணரூபத்தால் இவைகளை யுபாசிப்பது கருத்தாம். ஏனெனில் ஆகாரம காரியம். ஆகையால் அது துச்சம். காரணம் சத்தியம். எவனுடைய மந்தப்பிரஞ்ஞை ஆகாரத்திலேயே ஸ்திரமாயிருக்கிறதோ அவன் சாஸ்திரத்திற் சொல்லிய ஆகாரத்தையே உபாஸிக்கவேண்டியது. அதினால் பிரஞ்ஞை நிச்சலமாகிக் காரணப்பிர்ம்மத்தி னுபாஸனையில் ஸ்திரப்படுகிறது.

702 **காரணப்பிர்ம்மஉபாஸனை**:—பிர்ம்மம் ஜகத்தின்காரணம். சத்தியகாமம், சத்தியசங்கலபம், சர்வஞ்ஞம், சுதந்திரம், சர்வப்பிரேரகம், கிருபாளு, இப்படி ஈசுவரதர்மங்களைத் தியானிக்கவேண்டியது. மூர்த்தியைத்தியானிக்க வேண்டுமென்பது சாஸ்திரத்தின் கருத்தன்று. சாஸ்திரத்தில் அனேகமூர்த்திகளைப் பற்றிச் சொல்லியது உபாஸனையின் பொருட்டன்று. ஆனால் எல்லாமூர்த்திகளுங் காரணப்பிர்ம்மத்தி னுபலக்ஷணங்களே. எந்தவஸ்து எதின் ஏகதேசத்திலும் ஏககாலத்திலும் வியாவர்த்தகமாயுமிருக்கிறதோ அது உபலக்ஷண மென்னப்படும். 'காகமுட்கார்ந்திருப்பது தேவதத்தன் வீடு' என்னும் வாக்கியத்தில் தேவதத்தன் வீட்டுக்குக்காகம் உபலக்ஷணமாயிருக்கிறது. ஏனெனில் வீட்டின் ஒரு பக்கத்திலும் எப்போதாவதொருகாலத்திலும் காகம் உட்காருகிறது. எப்போதும் உட்காருகிறதில்லை. இதரக் கிரகங்களினின்றும் தேவதத்தன் கிரகம் வியாவர்த்தகமாயிருக்கிறது. இதுபோல் ஜகத்தின் காரணம் பிர்ம்மம். இதின் ஏகதேசத்தில் எப்போதாவது மூர்த்தியிருக்கிறது. சது

ர்ப்புஜாதி மூர்த்திகள் காரணப்பிர்ம்மத்திலேயே இருக்கின்றனவேதவிர வேறிடத்தில் இல்லை. ஆகையால் வியாவர்த்தகங்களாயிருக்கின்றன. ஆனபடியால் உபலக்ஷணங்களாயிருக்கின்றன. உபலக்ஷணத்தின் பிரயோஜனம் விசேஷிய வஸ்துவின் ஸ்வரூபஞானம் உண்டாவதாம். எப்படிக் காகத்தால் தேவதத்தன் வீடு குறிப்பிடப்படுகிறது தவிரவேறு பிரயோசனமில்லையோ அப்படியே மூர்த்திகளின் சதுர்ப்புஜாதி ஆகாரங்களால் நிராகாரமான காரணப்பிர்ம்மங் குறிப்பிடப்படுகிறதேதவிர அவைகளுக்கு வேறுபிரயோஜனமில்லை.

703. மந்தப்பிரக்ஞையுள்ளவர்கள் சாஸ்திரத்தின் கருத்தை யறியாமல் ஆகாரங்களில் சத்தியபுத்தி வைக்கிறார்கள்; மேலும் சியாலஸாரமேய நியாயத்தால் பரஸ்பரம் கலகஞ்செய்கிறார்கள். ஸ்திரீயின் சகோதரனுக்கு ஸ்யாலனென்று பெயர். நாயக்கு ஸாரமேயமென்று பெயர். நியாயமென்றால் திருஷ்டாந்தம். ஒரு ஸ்யாலனுடைய பெயர் உத்பாலகன். அவன் விரோதியின் பெயர் தாவகன், ஒருவன் வீட்டிலிருந்த நாய்க்கும் பெயர் தாவகன். மற்றொரு வீட்டிலிருந்த நாய்க்குப் பெயர் உத்பாலகன் இப்படியிருக்க முதல்வீட்டுக்காரனுடைய ஸ்திரீமுதல்முதல் புருஷன்வீட்டுக்கு வந்தவுடன் மேற்கண்ட இரண்டுநாய்களும் சண்டையிட்டுக் கொண்டன. அப்போது தாவகனை விட்டு உத்பாலகனைத்துரத்தும்படிச் சொன்னான். இதையந்தப்புதிய ஸ்திரீ கேட்டுத்தன் சகோதரனாகிய உத்பாலகனைத் தான் தன் புருஷன் துரத்தச்சொன்னானென நினைத்து நாயகன் பேரில் வருத்தப்பட்டாள். எப்படிப் புருஷனுடைய அபிப்பிராயத்தையறியாமல் சாமானஸம்ஞையாற் பிரமித்து ஸ்திரீ துக்கித்தாளோ அப்படி வைஷ்ணவக் கிரந்தத்தில் சிவன் முதலிய பெயர்களால் காரியப்பிர்ம்மம் நிந்திக்கப்பட்டிருக்கிறதென்கிற அபிப்பிராயத்தை யறியாமல் சைவர்கள் துக்கிக்கிறார்கள். அப்படியே விஷ்ணுநாமத்தால் காரியப்பிர்ம்மம் நிந்திக்கப்பட்டிருக்கிறதென்பதை யறியாமல் வைஷ்ணவர்கள் துக்கிக்கிறார்கள். சகல புராணங்களுக்கும் அபிப்பிராயமென்னவெனில் காரணப்பிர்ம்மம் உபாஸிக்கத்தக்கது. காரியப்பிர்ம்மம் தள்ளத்தக்கது. மாயாவிசிஷ்டசேதனம் காரணப்பிர்ம்மமாம். மாயையாலுண்டான காரிய விசிஷ்டசேதனம் காரியப் பிர்ம்மமாம். இக்கருத்து பாரத வியாக்கியான ஆரம்பத்திலெழுதப்பட்டிருக்கிறது. சகலவேதாந்தங்களின் சித்தாந்தமும் இதுவே.

704. **சுபசந்ததியின்கேள்வி;—** சுபசந்ததி தன் குமாரன் வார்த்தையைக் கேட்டுப் புராணங்களின் விரோத சங்கைக்குச் சமாதானமடைந்து மனதிற் சுகமடைந்தான். ஆறு சாஸ்திரங்களின் பரஸ்பர

விரோதசங்கை நீங்காமையால் விசேஷ சுகமடையவில்லை. எந்த சாஸ்திரார்த்தத்தை யங்கீகரிக்கலாமோ அச்சத்தியமான சாஸ்திரம் யாதெனமைந்தனே வினவினன்.

705. தர்க்கதிருஷ்டிஉத்தரம் (705—707):— தகப்பனுருடைய வார்த்தையைக்கேட்டுப் பரமப்பிரமாணமான வார்த்தையைச் சொன்னான். உத்தர மீமாம்ஸையினுபதேசம் கொஞ்சங்கூட வேதவிருத்த மல்லவென்றான். மற்ற ஐந்து சாஸ்திரங்களும் வேத விருத்தங்களாயிருப்பதால் அவைகளை யசுத்தங்களாயறியவேண்டியது. அவைகளில் சில அம்சங்கள் வேதானுசாரிகளாயிருப்பதால் மந்தாதிகாரிகள் அவைகளை யனுஷ்டிக்கிறார்கள். ஆறு சாஸ்திரங்களின் கர்த்தாக்களும் சர்வஞ்ஞரென்று சொல்லப்படுகிறார்கள். சாங்கியத்தின் கர்த்தா கபிலர். பாதஞ்சலத்தின் கர்த்தாபதஞ்சலி. இவர் சேஷாவதாரம். நியாய சாஸ்திரத்தின் கர்த்தா கௌதமர். வைசேஷிகத்தின் கர்த்தா கணாதர் பூர்வ மீமாம்சையின் கர்த்தா ஜைமினி. உத்தர மீமாம்சையின் கர்த்தா வியாஸபகவான். இவைகளின் மகாத்மியங்களெல்லாம் பிரசித்தமாயிருக்கின்றன. ஆனதால் இவர்களுடைய வசனசாஸ்திரங்களும சமானப்பிரமாணங்களாகவே இருக்கவேண்டியது. ஆயினும் சகலவாக்கியங்களிலும் வேதவாக்கியம் பிரபலப் பிரமாணமானது. ஏனெனில் வேதத்தின் கர்த்தா சர்வஞ்ஞனான ஈசுவரன். அவரிடத்தில் பிரமை சந்தேகம் முதலிய தோஷங்கள் கிடையா. இச்சாஸ்திரங்களின் கர்த்தாக்கள் ஜீவர்கள். இவர்களிடத்திற் பிரமைமுதலியதோஷங்கள் உண்டாகக்கூடும். சாஸ்திரக்காரர்களும் சர்வஞ்ஞர்களாகச் சொல்லப்பட்டிருந்தாலும் அவர்களுடையசர்வஞ்ஞதை யோகமாகாத்மியத்தாலுண்டாயிருக்கிறது. ஆகையால் இவர்கள் யுஞ்சானயோகிகள். ஈசுவரனுடைய சர்வஞ்ஞதை ஸ்வபாவ சித்தமாயிருக்கிறது. ஆகையால் ஈசுவரன் யுக்தயோகி. சிந்தனை செய்வதால் பதார்த்தஞானமுண்டாகிறவனுக்கு யுஞ்சானயோகியென்று பெயர். எப்போதும் எல்லாப்பதார்த்தங்களும் அபரோக்ஷமாய்ப் பிரதீதியாகிறவனுக்கு யுக்தயோகி யென்று பெயர். ஈஸ்வரன் இப்பெயர்ப்பட்டவர். யுக்தயோகியால் செய்யப்பட்ட வேதந்தான் பிரபலம். யுஞ்சானயோகிகளாற் செய்யப்பட்ட சாஸ்திரங்களெல்லாம் துர்ப்பலம். ஆகையால் வேதானுசாரமானசாஸ்திரமேபிரமாணம். வேதவிருத்தம் அப்பிரமாணம், ஐந்து சாஸ்திரங்கள் எப்படிவேதவிருத்தமென்பது சாரீரகாதி

கிரந்தங்களில்விவரமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது. உத்தரமீமாம்சை எவ்விதத்திலும் வேதவிருத்தமன்று. ஆகையால் அது பிரமாணமானது. மற்றசாஸ்திரங்களும் சில அம்சங்களில் வேதத்தை யனுசரித்திருக்கிறதைப் பார்த்து மந்தபுத்தியுள்ளவர்கள் இவைகளில் விசுவாசம் வைக்கிறார்கள். ஆனால் அனேக அம்சங்களில் அவை வேதவிருத்தங்களாயிருப்பதால் தள்ளத்தக்கன. சில அம்சங்களில் வேதானுசாரிகளாயிருப்பதால் முழுமையும் அங்கிகரிக்கத்தக்கவையென்று சொல்லும் பக்ஷத்தில் ஜயினசாஸ்திரமும் அஹிம்சாம்சத்தில் வேதானுசாரியாயிருப்பதினால் அதுவும் அங்கிகரிக்கத்தக்கதாகும். ஆனால் ஜயினசாஸ்திரமோ தள்ளத்தக்கதேதவிர அங்கிகரிக்கத்தக்கதல்ல. சுகதர் ஈஸ்வரனுடைய அவதாரம். அவரைப் புத்தரென்றுஞ் சொல்வார்கள். அவருடைய வசனமும் வேதத்துக்குச் சமானமாய்ப் பிரமாணமாயிருக்கவேண்டியது. ஆயினும் வஞ்சிக்கும் இச்சை அவருக்கிருந்தபடியால் அவருடைய வசனம் எவ்விதத்திலும் அப்பிரமாணமே. ஆகையால் எல்லா அம்சங்களிலும் வேதத்தையனுசரித்திருக்கிற உத்தரமீமாம்சையே எவ்விதத்திலும் முமூக்ஷுவால் அங்கிகரிக்கத்தக்கது. உத்தரமீமாம்சை வியாசரால் சூத்திரரூபமாய்ச் செய்யப்பட்டு (668) அதின் வியாக்கியானமும் அநேகரால் அநேகவிதமாய்ச் செய்யப்பட்டிருந்தாலும் பூஜ்யபாதரான சங்கரராற்செய்யப்பட்ட வியாக்கியானமே வேதானுசாரியாயிருக்கின்றது. மற்ற வியாக்கியானங்கள் அப்படி யில்லை. இது 5 வதுதரங்கத்தில் (252—54) பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் மற்ற ஐந்துசாஸ்திரங்களும் அப்பிரமாணங்களே.

706. **இதரசாஸ்திரங்கள் அப்பிரமாணம்:**—இந்தத் தரங்கத்தில் முன்சகலசாஸ்திரங்களும் மோக்ஷத்துக் குபயோகங்களென்று சொன்னது தர்க்கதிர்ஷ்டியின் சாரத்தைக் கிரகிக்கும் விவேகத்தால்தான் ஒருவன்சத்துரு கத்தியால் அவனைவீசினான். அப்போது இரத்தம் வெளியே வந்து ரோகம் நிவிர்த்தியாகிவிட்டது. அப்போது சாரத்தைக் கிரகிக்கும் புருஷன் கத்தியைவீசினவன் தனக்கு உபகாரஞ் செய்ததாக நினைக்கிறான். இதுபோல் இதரசாஸ்திரங்களாலும் எவ்விதத்திலாவது அந்தக்கரணத்தின் சுத்தியும் நிச்சலதையும் உண்டாகி புருஷன் நிவிர்த்தியடைந்து வேதானுசாரமாய்நிச்சயம்செயதால் மோக்ஷமுண்டாகும். எவ்விதத்திலும் இதரசாஸ்திரங்களில் விசுவாசம் வைத்தால் **அந்தகோலாங்கூல** நியாயப்படி அவன் அனர்த்தத்தை யடைவான். ஆகையால்சகல சாஸ்திரங்களையுந் தள்ளி அத்வைதவியாக்கியானரீதிப்படி உத்தரமீமாம்சையே அங்கிகரிக்கத்தக்கது.

707 **அந்தகோலாங்கூலநியாயம்:**—ஒருபணக்காரனுடைய ஆபரணம் பூண்டபுத்திரனைத் திருடர்கள் காட்டுக்குக் கொண்டுபோய் ஆ

பரணங்களைப் பிடுங்கிக்கொண்டு அவன்கண்ணையுங் கெடுத்துவிட்டுபோய் விட்டார்கள். அப்போது அழுதுகொண்டிருந்த அப்பையனைத் தயையற்றவனும்வஞ்சனையுற்றவனுமுள்ள ஒருவன் சந்தித்து ஒருகொழுத்த காளையின் வாலையவன்கையிற் கொடுத்து இதை விடாமற் பிடித்துக்கொண்டு போனால் ஊர்போய்ச்சேரலாமென்றான். ஏற்கனவே துயருற்ற அந்தப்பையன் இவ் வார்த்தையை நம்பிப் பெருந்துக்கமடைந்து நஷ்டமாய்ப்போனான். இதுபோல் விஷயரூப சோரன் ஒருவன் விவேகரூப நேத்திரத்தைக் கெடுத்துச் சமுசாரரூபவனத்தில் கொண்டுபோய் விடுகிறான். அப்போது தயையற்றவனும் வஞ்சகனுமிருக்கிற பேதவாதி அன்னிய சாஸ்திரங்களின் சித்தாந்தத்தில் அவனுக்கு விசுவாசம் வரும்படிச் செய்து தன்னுடைய உபதேசமே அவனுக்குப் பரமசுகத்துக்குக் காரணமாகுமென்றும் அதைவிடக்கூடாதென்றுஞ் சொல்லுகிறேன். இதை நம்பிப் புருஷார்த்தசுகத்தை யிழந்து ஜனனமரணரூப மகத்தான துக்கத்தை யனுபவிக்கிறான். ஆகையால் இதர சாஸ்திரங்கள் தள்ளத்தக்கன.

708. இவ்விதமாகச் சுபசந்ததி யென்னும் அரசன் தார்க்கதிருஷ்டியின் வசனத்தைக் கேட்டுச் சகல சந்தேகங்களும் துக்கங்களுமற்றவனாய்ப் பூர்ணானந்தத்தை யடைந்தான். காரணப்பிர்ம்ம உபாஸனையில் சித்தத்தை ஸ்திரப்படுத்தினன். தார்க்கதிருஷ்டியைத் தன்னுண்மையான குருவாகப் பாவித்து ராஜ்யமுழுமையையும் அவனுக்குங் கொடுத்தான். தார்க்கதிருஷ்டி புத்திரனாயிருந்தாலும் உத்தமமான உபதேசத்தைச் செய்தபடியால் அவன்குருஸ்தானத்தை யடைந்தான். அது பிர்ம்மவித்தையின் மகாத்மியம்.

709. **சுபசந்ததியின் மரணம்:**—கொஞ்சகாலங்கழித்தபின் அரசன் பிராணனை விட்டு முனிகளடையும் பிர்ம்மலோகத்தை யடைந்தான். அரசனுடைய மரணத்துக்குத் தேசகாலங்கள் சொல்லப்படவில்லை. இதற்கு அபிப்பிராய மென்னவெனில் உபாஸகனுடையமரணத்தில் தேசகாலங்களின் அபேக்ஷையில்லை. பகலில் மரித்தாலும் இரவில் மரித்தாலும் தக்ஷிணாயனத்தில் இறந்தாலும் உத்தராயணத்திலிறந்தாலும் சுத்த இடத்திற் செத்தாலும் எவ்விதத்திலும் உபாஸனையின் பலத்தால் தேவயானமார்க்கமூலமாகப் பிர்ம்மலோகத்துக்குப் போகிறான். மேலும் அதிர்ஷ்டியின் விஷயத்தில் முன்(650)தேசகாலங்களின் அபேக்ஷையுண்டென்று சொன்னது யோகசகித உபாஸகனை யுத்தேசித்தேயாம். கேவலம் ஈஸ்வரனைச் சரணமடைந்த உபாஸகனுக்குத் தேசகாலங்களின் அபேக்ஷையில்லை. இந்த அர்த்தத்தைச் சூத்திரக்காரரும் பாஷியக்காரரும் பிரதிபாதித்திருக்கிறார்கள்.

**710. தர்க்கதிருஷ்டியின் அந்தம்:**—அதிஞானநிபுணனான தர்க்கதிருஷ்டி யாதொரு பற்றின்றியிலும முறைப்படி இராஜ்யபாரம பண்ணிவந்து பிர்ம்மநிஷ்டையிலிருந்துகொண்டு பிராரப்தம் முடிந்தவுடன் உண்மையான பரமபதத்தையடைந்தான். ஆத்மா பரமாத்மாவுடன் ஐக்கியமாய்விட்டது. தேகம் தகனஞ்செய்யப்பட்டுச் சாம்பலாய்விட்டது.

கூடஸ்தனுக்குப் பரமாத்மாவுடன் எப்போதும் அபேதமிருந்தாலும் உபாதியாலுண்டான பேதமுண்டு. உபாதிலயத்தால் இந்தப் பேதமுமில்லாமற் போகிறது. பரமாத்மாவுடன் அபேதஞ் சொன்னதற்கு அபிப்பிராயமென்னவெனில் விதேகமுக்தியில ஈஸ்வரனுடன அபேதஞ் சித்திக்கிறதே தவிர சுத்தசேதனமாகிய பிர்ம்மத்துடன் அபேதஞ்சித்திக்கிறதில்லை. இது சாரீரகபாஷ்யத்தில் 4-வது அத்தியாயத்தில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. அவ்விடத்திற் சொல்லியிருக்கிறதாவது விதேகமுக்தியில் சத்தியசங்கல்பாதிகளை அடையப்படுமென்று **ஜைமினி** மதத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது. **ஔடுலோமி** மதத்தில் சத்தியசங்கல்பாதிகளின் அபாவஞ்சொல்லப்பட்டிருக்கிறது. **சித்தாந்த** மதத்தில் சத்தியசங்கல்பாதிகளின் பாவாபாவங்களிரண்டுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. இதற்கு அபிப்பிராயமென்னவெனில், விதேகமுக்தியில் ஈஸ்வரனுடன் அபேதமுண்டாகிறது. ஈஸ்வரனுடைய சத்தியசங்கல்பாதிகள் விதேகமுக்தியில் உண்டென்று இதர ஜீவர்களால் வியவகரிக்கப்படுகின்றது. இந்த ஈஸ்வரன் பாரமார்த்திகத்தில் சுத்தன். அவரிடத்தில் யாதொரு குணமுமில்லை. ஆனல் அவர் நிர்க்குணன். ஆகையால் சத்தியசங்கல்பாதிகளில்லை. சமுசாரதசையில் ஜீவனும் பாரமார்த்திகத்தில் நிர்க்குணமாயும் சுத்தமாயுமிருந்தாலும ஜீவனுக்குச சமுசாரதசையில் அவித்தையால் கர்த்திருத்வபோக்திருத்வங்கள் பிரதீதியாகின்றன. ஈஸ்வரனுக்கு எக்காலத்திலும் தன்னிடத்திலாவது வேறிடத்திலாவது சமுசாரம பிரதீதியாகிறதில்லை. ஆகையால் ஈஸ்வரன் எப்போதும் அசங்கன், நிர்க்குணன், சுத்தன், ஆகையால் ஈஸ்வரனுடன் எந்த அபேதமுண்டோ அந்த அபேதம் சுத்தப்பிர்ம்மத்துடனுமுண்டு. ஈஸ்வரனுடன் அபேதமுண்டென்றும் சுத்தப்பிர்ம்மத்துடனில்லையென்றும் நினைக்கும்பக்ஷத்தில் ஈஸ்வரனுக்குச் சுத்தப்பிர்ம்மத்துடன் ஐக்கியம் ஒருக்காலத்திலுமுண்டாகமாட்டாது. ஏனெனில் ஜீவனைப்போல் ஈஸ்வரனுக்கு உபதேசத்தாலுண்டாகும் ஞானமும் விதேகமோக்ஷமும் ஒருக்காலுமுண்டாகமாட்டா.

அவருடைய ஸ்வாபாவிகரூபஞ் சுத்தமன்று. ஆனதால் ஜீவனைக்காட்டிலும் கொஞ்சங்குறைவாக ஈஸ்வரனும் சதா பத்தனென்று சித்தியாகும். ஆகையால் அடியில் வருமாறு நினைக்கத்தக்கது. ஈஸ்வரனுக்கு ஆவரணமில்லை. ஆகையால் உபதேசஞானத்தின் அபேக்ஷையில்லை. ஆவரணமில்லாமையாற் பிராந்தியில்லை. ஆகையால் ஈஸ்வரன் நித்தியஸர்வஞ்ஞன். நித்தியமுக்தன். மாயையும் அதின் காரியமும் ஆத்மாவினிடத்திற் பிரதீதி யாகிறதில்லை. ஆகையால சதா அசங்கன், சுத்தன், இவ்விதமாக ஈஸ்வரனுடன் அபேதமே சுத்தசேதனத்துடன் அபேதமாம். திருஷ்டாந்தத்தாலும் இது விளங்கும். மடத்திற் கடமில்லாமற் போகும்போது மடாகாசத்தில் கடாகாசம் லயமாகிறது. மகாகாசத்தில் லயமாகிறதில்லை. இதுபோல் வித்துவானுடைய சரீரம் ஈஸ்வரனாற் செய்யப்பட்ட பிர்ம்மாண்டத்தில் நஷ்டமாகிறது. பிர்ம்மாண்டமெல்லாம் ஈஸ்வரசரீரமாகிய மாயையில் அந்தர்ப்பூதமாயிருக்கிறது. வித்துவானுடைய ஆத்மா விதேகமோக்ஷத்தில் பிர்ம்மாண்டத்துக்கு வெளியேபோகிறதில்லை. இவ்விதமாய் ஈஸ்வரனுடன் அபேதஞ் சித்திக்கிறது. ஆனால் எப்படி மடாகாசத்துடன் கடாகாசத்துக்கு அபேதஞ் சித்திக்கிறதோ இந்த மடாகாசம மகாகாசரூபமாகவே இருக்கிறதோ அப்படி ஈஸ்வரனுடன் அபேதஞ் சித்திக்கிறது. இந்த ஈஸ்வரன் சுத்தப்பிர்ம்மமே. ஆகையால் சுத்தப்பிர்ம்மம் அடையப்படுகிறது.

711. இவ்விதமாக அனேக இரத்தினங்கள் அடங்கியதும் வேதாந்த சித்தாந்தங்கள் அடங்கியதுமான விசாரசாகர மெழுதப்பட்டு விவேகத்துடன் பிரகடஞ் செய்யப்பட்டது. வியாகரணசாஸ்திரம் முழுமையும் பார்த்தேன். சாங்கிய நியாயசாஸ்திரங்களையும் வெகு சிரமப்பட்டுப் பார்த்தேன். அத்துவைதக் கிரந்தங்கள் முழுமையும் பார்த்தேன். பார்க்காத கிரந்தமொன்றுமில்லை, இதர மதஸ்தர்களுடைய சித்தாந்தங்களையும் ஆராய்ந்துபார்த்தேன். வேதங்களையும் முழுதும் பார்த்தேன். இந்தப் பாஷாக்கிரந்தம் என்னாற் செய்யப்பட்டது. இதை யெழுதுவதில் நான் வெட்கப்படவில்லை. பரோபகாரசிந்தையே இதை எழுதியதற்குக் காரணம். வியாகரணமன்றியில் ஸம்ஸ்கிருதகிரந்தங்களை மந்தபுத்தியுள்ளவர்கள் படிக்க முடியாது. இந்தக் கிரந்தத்தை வருத்தமின்றியில் படித்துப் பரமானந்தத்தை யடையக்கூடும்.

712. **கிரந்தமுடிவு:**—தில்லிமாநகரத்துக்கு மேற்கில் 18 கோசத்தில் கிஹடௌளி என்னுங்கிராமத்தில் இந்தக்கிரந்தகர்த்தா இருந்தார். ஞானிகள் விதேகமுக்தியில் பரமாத்மாவுடன் ஐக்கியமாகிறார்கள். இப்போது குருவை நமஸ்கரித்து ஓய்வடைகிறேன்.

713. **மங்களம்:**—அகண்டமாயும் சச்சிதாநந்தமாயும் வாக்கு க்கும் மனதுக்கும் எட்டாததாயும் எல்லாவற்றிற்கும் ஆதாரமாயும் இருக் கிற பரப்பிரம்மத்தை நமஸ்கரிக்கிறேன்.

714. நானே பரப்பிரம்மம். என்னிடத்தில் எல்லாம் கல்பிக்க ப்பட்டிருக்கின்றன. இப்படி எந்த குருவின் கிருபையால் அறியப்பட் டதோ அந்த குருவை நமஸ்கரிக்கிறேன்.




ஹரி:ஓம் தத் சத்

வேலமயிலுந் துணை.

ஓம்.

---

# முகவுரை

"தியாஸபி" அல்லது "பிர்ம்மஞான சங்கம்" என்ற பெயருடன் முக்கியமாய் இந்தியாவிலும் இதரதேசங்களிலும் அநேகசபைகள் ஏற்பட்டு, அறம் பொருள் இன்பம் வீடு என நான்குவித புருஷார்த்தங்களை கோரினவர்களே இச்சங்கத்திலுள்ளவர்களில் அனேகர் நமது தேசத்திய வேதசாஸ்திர புராணாதிகளான கிரந்தங்களில் மிகுதியான சிரத்தையை உண்டுபண்ணிவருகிறதை எல்லோரும் கவனித்திருக்கலாம். நமது முன்னோர்களாகிய மகாரிஷிகள் வெகுநீண்டகாலமாய் கண்டறிந்து அனுஷ்டித்து மகாசித்திகளேயும் முக்தியையும்பெற்ற மாக்ஷிமைதங்கிய இப்பரதக்கண்டத்தின் தக்காலநிலைமை மிகவும் பரிதாபிக்கத்தக்கதென்பதற்கு சற்றேனும் ஐயமில்லை. பலகாரணங்களால் இத்தேசத்தில் "தத்வஞானஸ்வரூபம்" முற்றிலுமில்லாமல் ஒளித்து நாஸ்திகபுத்தியும் விபரீதபாவமும் விருத்தியடைந்து வருகிறதை தேசாபிமானிகள் ஒப்புக்கொள்ளவேண்டும். புண்யபூமியான நமது தேசத்தின் கதியானது இவ்விதமாகும்பக்ஷத்தில் இதரதேசங்களைப்பற்றி சொல்லவேண்டியதில்லை. ஆர்யசித்தாந்தம் வேதாந்தம் யோகம் முதலியவைகளின் தத்வங்களேயும் ரகஸ்யங்களேயும் உண்மையில் குருசிஷ்ய பாரம்பர்யமாய் உபதேசம் செய்யப்பட்டு, தன்னிலே குலையாமல் காப்பாற்றிவருகிற மகாத்மாக்களுடைய சங்கம் இப்பொழுதும் பரம இரகஸ்யமாயிருந்துவருகிறது. அனேக ஜன்மங்களில் அடைந்த மனோபரிபக்வத்தினுல் மகாஞானத்தையும் அஷ்டசித்திகளேயும் அம்மகாத்மாக்கள் அடைந்திருக்கிறார்கள். முன்போல் அம்மகான்கள் ஜனங்களுடன் கலந்து வசிக்கக்கூடாமையால் வனவாசத்தையடைந்தும், அவர்கள் இருக்கிறார்கள் என்பதை சந்தேகிக்கும்படி நேர்ந்த கலிகாலத்தின் தன்மையை நினைத்த ஒவ்வொரு ஆர்யவம்சஸ்தனும் துக்கமடையாமலிரான். இந்திரியங்களுக்கு புலப்படுகிற சரீரத்தைக்காட்டிலும அழிவற்ற சரீரி இருக்கவேண்டுமென்கிற நம்பிக்கையும் ஞானமுமில்லாமல் நாஸ்திகபுத்தி விருத்தியடைந்துவருகிறபடியால் இம்மை மறுமையிலும் புண்யபாபங்களிலும் ஜனங்களுக்கு பொருள்படாமல் அர்த்தவாதமாக எண்ணப்படுகின்றது. மனோவாக்கு காயாதிகளால் ஒவ்வொரு க்ஷணத்திலும் கோடானுகோடியாய் செய்துவருகிற கர்மங்களின் பலனை நாமே அனுபவித்து தீர்க்கவேணுமென்கிற சிந்தை சற்றேனுமில்லை. வெளிவேஷத்தை முக்கியமாகக்கொண்ட எண்ணிறந்தமதமும் அததற்கு வயிற்றுப்பிழைப்பு நிமித்தியம் மதாசாரியர்களென்ற வேஷதாரிகளும் நாள்தோறும் விருத்தியடைந்தும் என்தெய்வம் உன்தெய்வமென்றும் என்மதம் சிரேஷ்டம் உன்மதம் பிசகு என்றும் மூட ஆவேசத்தினுல் த்வேஷம் பாராட்டிவருகிறார்கள். இப்பொழுது நடக்கிறது கலியுகமானுலும் முதல் 5000 வருஷம் வரையில் சென்ற த்வாபரயுகத்தின் சந்தியாகாலமா

கணிக்கப்பட்டு ஸ்ரீமத்பாகவதம் முதலிய கிரந்தங்களில் இதற்கப்பால் விஷ்ணுகலைகுறைந்து கலியின் கோலம் முற்றிலும் வியாதாரப்படுமென்று சொல்லப்பட்டிருக்கின்றது. வரப்போகிற அந்தகாரத்திலிருந்து ஜனங்களை கைதூக்கிவிடும்பொருட்டு, இதுவரையில் பரம இரகஸ்யமாகக் காப்பாற்றி தர்மவிவிர்த்தியையும் லோகோபகாரத்தையும் சர்வகாலமும் கோறிக்கொண்டிருக்கிற மகாத்மாக்கள் இந்த ஸந்தியாகாலத்தை நல்ல சமயமென்று எண்ணி அப்யாஸங்களையும் யோகத்தையும் பற்றின உண்மையான தத்வங்களை இப்பிரம்மஞானசங்கத்தின் வழியாய் பரமகிருபையுடன் வெளியிட்டுவருகிறார்கள். ஏனென்றால் சிலவியாதிகளுக்கு ஔஷதம் கொடுக்கிறதற்கு இன்னவளவு காலஞ்செல்லவேண்டுமென்றும் இவ்வித ஔஷதத்திற்கு இன்ன அனுபானபத்யமென்றும் வயித்தியசாஸ்திரத்தில் ஏற்பட்டிருந்தாலும் திடீரென்று தோஷம் கண்டவிடத்தில் அதிவீரியமான அனேக ஔஷதங்களை உடனேகொடுத்து தோஷத்தை நிவிர்த்திசெய்து பிறகு வியாதியை கொஞ்சம் கொஞ்சமாய் சாந்தப்படுத்த நேராயிருக்கிறது. அதுபோல த்வாபரயுகசந்தியாகிற புருஷனுக்கு பூர்ணவயதும 4-5 வருஷத்திற்குள் முடியப்போகிறமாதிரதமும் கலிபுருஷன் தன்னுடைய ஸ்வரூபத்துடன் பிறக்கப்போகிற காலமும் ஒன்றுகூடின இக்காலத்தில் அதர்மம், நாஸ்திகபுத்தி என்றதோஷங்கள் தலையெடுத்துக்கொண்டிருக்கிறபடியால் சஞ்சீவியான தத்துவோபதேசத்தை வலுவில் மகாத்மாக்கள் புகட்டிவருகிறார்கள். இதைப்போல சமயம், 4-5 வருஷம் சென்றபின் கிடைப்பது மகா அரிது. கிருபையுடன் அம்மகாத்மாக்களளிக்கும் ஔஷதத்தை உட்கொண்டு தோஷநிவிர்த்திசெய்துகொள்ளாமல், புத்தியீனமையால் பிரம்மஞானசங்கத்தையும், உலகத்தில் தர்மவிர்த்தியையும், ஆஸ்திகபுத்தியும் விருத்தியடையுமொருட்டு விடாமுயற்சியுடன் அதுசெய்துவருகிற பிரயத்தனங்களையும் வீணென்று சிலரும், அந்யமதசித்தாந்தமென்றுசிலரும் கிறிஸ்துமதத்தை விருத்திசெய்ய இது நூதனவழி என்றும சிலர்களும வீணான தூஷணைசெய்துவருகிறார்கள். இதுவும் காலத்தின் கோலமேயன்றி வேறில்லை. மேலும இவ்வித விபரீதபுத்திக்கு இன்னும் முக்கியகாரணங்கள் (1) பிரம்மஞானசங்கத்தின் வழியாய் இக்காலத்தில் வெளியிடப்பட்டுவரும் கிரந்தங்கள் விசேஷமாய் தேசபாஷைகளில் இல்லாமல் சகலதேசங்களுக்கும் பொதுவாய் விளங்கிவருகிற ஆங்கிலேயபாஷையிலிருப்பதும (2) மதமென்றவுடனாவேசத்தால் இத்தேசத்தில் தத்வவிசாரணையன்றி வெகுகாலமாய் வெளிவேஷத்தை முக்கியமாக எண்ணிவரும அப்பியாஸதோஷம (3) மகாத்மாக்கள் தங்கள் சிஷ்யர்களில் "மாடம்பிளாவட்ஸ்கி" என்றும் புண்ணியவதியை இக்காலத்தில் அனுப்பி உலகமெங்கும் பிரமஞானசங்கத்தை ஸ்தாபித்துவரும் உள்கருத்தை உள்ளபடி அறியாமை, என யூகிக்கப்படும். அம்மகாத்மாக்

கள் இச்சங்கத்தின் வழியாய் வெளியிட்டிருக்கும் அனேக அபூர்வகிரந்தங்களையும் இச்சங்கத்தின் கொள்கைகளையும் அனுஷ்டானங்களையும் நேரில் தெரிந்து கொள்ளும்படி பாக்யத்தை பெற்ற இந்த கிரந்தகர்த்தாவானவர் அவைகள் சகலமதங்களுக்கும் ஸர்வசாஸ்திரங்களுக்கும் சம்மதமாய் இருப்பதாக தான் எண்ணங்கொண்ட அபிப்பிராயத்தை இத்தேசத்திலுள்ளவர்கள் யாவரும அனுமதித்து அனுஷ்டிக்கும்பொருட்டு அவைகளை சுருக்கமாய் தமிழில் மொழிபெயர்த்து எழுதியிருக்கிறார். மேலும் "பிர்ம்மஞானசச்சுருக்கமென்ற" இந்தக்கிரந்தத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிற சிலதத்துவங்களை உண்மையாய் அறிந்து கொண்டால் உபநிஷத்துகளிலும் புராணாதிகளிலும் சொல்லியிருக்கும் இரகஸ்யபாகங்களும் அவைகளில் போதமாகாதவிடத்தில் அர்த்தவாதமென்று சிலரும், அஸம்பாவிதமான கட்டுக்கதைகளென்று அனேகரும் பிரஸ்தாபித்துவருகிற விஷயங்களும், அர்த்தபுஷ்டியுள்ள மகாதத்துவங்களாக போதமாகும் என்பது இந்த கிரந்தகர்த்தாவின் துணிவு. இந்த புஸ்தகத்தில் சொல்லப்பட்டிருக்கும் சில இரகஸ்யமான தத்துவங்களுக்கு வெளிப்படையாய் ஏற்பட்டிருக்கிற மதக்கிரந்தங்களுக்கும் கொஞ்சம் வித்தியாஸமிருப்பதாய் பார்வைக்குத்தோன்றினாலும் ஒரு மதத்தின் உள்கருத்திற்கும் வித்தியாஸப்படமாட்டாது என்பது நிச்சயம். ஆகையால் இந்த கிரந்தத்தைப் படிக்கும் புண்ணியவான்கள் இது முதலாவது பதிப்பானபடியால் சொல்பிழை வாசகப்பிழை முதலியவைகளை மன்னித்து இதிலடங்கிய கருத்தையும் தங்கள் தங்கள் மதசாஸ்திரங்களின் தத்துவார்த்தத்தையும் நிஷ்பட்சவாதமான மனதுடன் விசாரித்து ஒப்பிட்டுப்பார்த்து தங்கள் தங்கள் அபிப்பிராயத்தை வெளிப்படுத்தவேண்டுமென்றும் இந்த கிரந்தகர்த்தாவினால்பிரார்த்திக்கப்படுகிறது. இந்தகிரந்தத்தை இத்தேசத்தார் ஆங்கீகரிக்கும்பட்சத்தில் இதில் சுருக்கமாய் பிரஸ்தாபித்திருக்கிற ஒவ்வொரு பாகத்தையும் விஸ்தரித்திருக்கும் அனேக கிரந்தங்களிலிருந்து சவிஸ்தாரமாக எழுதசித்தனாக இருக்கும்.

விதேயன்

ஏ. சிவராவ்.





# பிர்ம்மஞானச்சுருக்கம்

## விஷயசூசக அனுக்கிரமணிகை

### முதல்அத்தியாயம்



### இரண்டாவதுஅத்தியாயம்.

---

மூன்றாவது அத்தியாயம்—மனிதன்

---

நான்காவது அத்தியாயம்.

மரணம் பிந்தின ஸ்திதி.

ஐந்தாவது அத்தியாயம் புனர்ஜன்மம்



ஆறவது அத்தியாயம் கர்மம்



ஏழாவது அத்தியாயம்

தர்மம்

# பிரம்மஞானச்சுருக்கத்தின் பிழைதிருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தல் |
|---|---|---|---|
| 5 | 24 | காரி | காரிய |
| 7 | 36 | சேர்ந்திருந்த | சேர்ந்திருந்தா |
| 9 | 18 | சத்ரூபம | சத்ரூபம் |
| 10 | 2 | பாபபாவனை | பபபாவனை |
| 13 | 14 | காரணரூபமாயும் | காரணரூபமாயும் |
| 15 | 13 | சூட்சும் | சூட்சும |
| 16 | 27 | வர்ந் | வர்க்க |
| 18 | 19 | பிரமமாண்டபதத்துக்கு மு [ன் | 42 லக்ஷம் சேர்க்கவேண்டி [யது |
| 20 | 22 | மனிதனுடைய | மனிதனுடைய |
| 23 | 19 | கோளகங்களில் | கோளகங்கள் |
| 24 | 22 | படிச்சே | படிச |
| 26 | 30 | பொருட்டான்தக | பொருட்டுத்தான். |
| 27 | 30 | மனைதயு | மனைதயும |
| 29 | 10 | சேறுமல் | சேராமல் |
| 30 | 16 | செய்வதும | செய்தும |
| 35 | 25 | எர்க | ஏந்த |
| 38 | 19 | பிரிறி | பிரிகிற |
| 44 | 28–9 | மரூபத்தில் | காமரூபத்தில் |
| 49 | 9 | பூலோகத்துக்கு | பூலோகத்துக்கு |
| 50 | 1 | 26 | 126 |
| | 32 | சமுபதம | சப்தம் |
| | 32 | பதார் | பதார்த் |
| 52 | 2 | யாய | யாய் |
| 56 | 30 | பென்லால | பென்ஸலால் |
| 58 | 18 | பேர் | பேர |
| 60 | 20 | வருவதற்கு என்னும் பதத் [திற்குப்பின் | முன் என்னும் பதத்தைச் [சேர்க்கவும |
| 65 | 18 | விடுகிறது | விடுகிறது |
| 66 | 3 | சங்கை | சங்கை |
| 71 | 25 | மனிதனுடைய | மனிதனுடைய |
| 73 | 8 | தடவிட்டு | தைவிட்டு |
| | 9 | தைிலும் | டத்திலும் |
| 75 | 11 | வேண்டியகர் | வேண்டியகா |
| 78 | 18 | களோள | தளோர |
| 81 | 3 | படிய்சயெ | படிச்செய்ய |
| | 15 | மேலேச | மேலேஸ் |



[பிர்ம்மஞான முக்கியதத்துவங்களை என் புத்திக்கு எட்டினமட்டில் நான் கிரகித்தபடி அவைகள் அடியில் வருமாறு விவரிக்கப்பட்டிருக்கின்றன.]

ஓம்.

# பிர்ம்மஞானச்சுருக்கம்.

## முதலாவது அத்தியாயம்.

---

1. பிர்ம்மஞானமென்பது பிர்ம்மத்தினுடைய ஞானமென்று அர்த்தமன்று, திவ்யஞானம் அல்லது கேவலஞானம் என்பது பொருள். இது பெறக்கூடிய அறிவின் முடிவு. இதற்குமேல் அறியக்கூடியதாய் யாதொன்றுமில்லை. இது அநாதியாயுள்ள சகலபாஷ்யமதங்களுக்கும் சாஸ்திரங்களுக்கும் மூலாதாரமான குப்தவித்தை அல்லது இரகஸிய நூல். சகலமதங்களின் லக்ஷியார்த்தங்களையும் ஒத்துப்பார்க்கின், சகலத்துக்கும் ஒரே ஆதாரமாகவிளங்குவது இதுவே. பற்பலமதக்கிரந்தங்களிலும் அநுஷ்டானங்களிலும் காணப்படுகிற விஷயங்களெல்லாம் இந்த குப்தவித்தையின் தத்துவங்களையே விளக்குவிக்கின்றன. சகலமதஸ்தர்களும் ஸர்வவியாபகமான மூலகாரணத்தால் ஜகத்து விளங்குவதாய் வியவகரிப்பதால், அதைப்பிரதிபாதிக்கும் ஞானமும் ஒன்றாகவே இருக்கவேண்டுமென ஊஹிக்கக்கூடியது.

2. இந்த குப்தவித்தை பெரும்பான்மை இந்தியாவிலிருந்த பூர்வீக இருஷிகளாலும், சிறுபான்மை இதரதேசமகான்களாலும், அநுபவிக்கப்பட்ட அநுபவங்களை ஆதாரமாய்க்கொண்டு அறியப்பட்ட உண்மையே. ஒரு பதார்த்தத்தின் ஞானம் அதைக்கிரகிக்கும் இந்திரியத்தைப்பொருத்திருக்கவில்லையா? சூட்சுமமான கர்ணேந்திரியம் அதிசூட்சுமமான சங்கீதசாரத்தைக்கிரகிக்கிறதுபோல் சாதாரணமான கர்ணேந்திரியம் கிரகிக்கிறதில்லை. பிறப்புமுதல் கண் இல்லாதவனுக்கு வர்ணஞானமே இருக்கமாட்டாது. ஆகையால் ஞானசாதனங்கள் எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாயும் தீக்ஷணமாயும் இருக்கிறதுகளோ அவ்வளவுக்கு அவ்வளவு ஞானவிஷயம் அதிகப்படுகிறது. பூர்வீக இருஷிகள் எல்லாரிடத்திலும் பீஜரூபமாயிருக்கிற அனேகசாதகங்களை ஒருவித சிட்சையால் பக்குவப்படுத்தி அவைகள் மூலமாக பிர்ம்மாண்டத்தின் தத்துவங்களை அதாவது சமஸ்தத்துக்கும் மூலகாரணம், ஜகத்து, ஜீவன், ஜனனம், மரணம், மோக்ஷம் முதலியவைகளின் இரகசியங்களை அறிந்திருந்தார்கள். இருஷிகளும் நம்மைப்போலவே மாதுர்க்கர்ப்பத்திலிருந்து பிறந்த மனிதர்களாயினும் ஸ்வப்பிரயத்தனத்தால் ஞானிகளானவர்கள். இந்த ஞா

னமானது வேறு கற்பனையாயாவது அனுமானமாயாவது இராமல் அதனை அடையவேண்டிய சாதனங்களைச்சாதிக்க விரும்பினேரால் பிரத்தியக்ஷமாய அனுபவித்து அடையப்படுகிறதென்று இவர்கள் சொல்லுகிறார்கள்.

3. இவ்விதமாய் அறியப்பட்ட தத்துவங்களின் இரகசியங்கள் எக்காலத்திலும் ஜனங்களுக்கு உபயோகப்படவேண்டும் என்கிற கருத்துடன் இவைகளை வேதத்திலும், உபநிஷத்துகளிலும் சொல்லியிருக்கிறார்கள். அவர்களுக்குப்பின்னிருந்த யோகிகளும் மகான்களும் தங்களுடைய ஸ்வானுபவங்களால் மேற்சொல்லிய இரகசியங்களின் உண்மையை ஸ்தாபித்துவந்தார்கள். இப்போது இருக்கும் ராஜயோகிகளும் அப்படியே செய்கிறார்கள். ராஜயோகம் ஒருவித சிட்சையை அபேக்ஷிக்கிறதினாலும் காலவிசேஷத்தை அபேக்ஷிக்காததினாலும், இந்த சிட்சைக்கு உட்படுகிறவர்கள் எக்காலத்தில் ஜனித்திருந்தாலும் அவர்களுக்கு அது சுவாதீனமாய்விடுகிறது. ஆகையால் இப்போதும் ராஜயோகிகள் இருக்கக்கூடும். மேலும் இவர்களின் பரம்பரை இருப்பதாகவே இந்துக்களின் அபிப்பிராயம். இந்துதேசத்தில் எந்தவிடத்தில் இவர்களைப்பற்றிப்பேசினாலும் ஜனங்கள் இவர்களைப்பார்க்காவிடினும் இல்லையென்று சொல்லமாட்டார்கள்.

4. வேதங்களுக்கும் உபநிஷத்துகளுக்கும் இரண்டு அர்த்தங்களுள. ஒன்று வாச்சியார்த்தம் அதாவது பதத்தின் அர்த்தத்தால் தொனிப்பது. மற்றொன்று லக்ஷியார்த்தம் அதாவது ஊகிக்கத்தக்க இரகசியமான கருத்து. இவைகளில் வாச்சியார்த்தம் எல்லாருக்கும் தெரியும்படியாயிருந்தாலும் லக்ஷியார்த்தம் சிலருக்குமட்டும் விளங்குவதால் சாதாரணஜனங்களுக்கு இரகசியமாகவே இருக்கிறது. இதற்கு முக்கியமான காரணமென்னவெனில் (1) விஷயத்தைக்கிரகிக்கச்சக்தி இல்லாதவனுக்கு அதைசசொல்லியும் பிரயோஜனமில்லை. (2) அசத்ஜனங்களுக்கு சிலதத்துவங்களின் ஞானம் கிடைக்குமேயாயின், அந்த ஞானத்தை அவர்கள் துர்விநியோகப்படுத்தி பிரபஞ்சத்தில் துக்கத்தையே அபிவிர்த்தி செய்வார்கள். ஒரு இடத்தில் உள்ள பொருளை வேறு இடத்துக்குக் கொண்டுபோவது ஆகர்ஷணசக்தி. பணத்தில் வெகு ஆசையுள்ள அயோக்கியனுக்கு இச்சக்தி இருக்குமேயாயின் ஊரில் அவன் பணத்தை வைப்பானே. எல்லாப்பணங்களையும் தன்னிடத்தில் ஆகர்ஷிப்பதினால் அவன் லோகஹிம்சைக்குக்காரணமாவானேதவிர வேறில்லை. மேலும் குழந்தைகளிடத்தில் தீப்பெட்டியைக்கொடுத்தால் தீபம் ஏற்றமட்டும் தீக்குச்சியை உபயோகப்படுத்தவேண்டுமென்கிற ஞானமில்லாததினால் விளையாட்டில் வீட்டை எரித்துவிடக்கூடும். ஆகையால் எந்தவிஷயமும் சத்துபயோகஞ் செய்பவனுக்கே சொல்லவேண்டியதேயொழிய மற்றவனிடத்தில் அது துக்கத்துக்கு ஹேதுவாகும். இக்காரணங்களால் வேதாந்த விஷயங்கள் இரகசியமாக வைக்கப்பட்டிருக்கின்றன.

5. வேதங்களின் லக்ஷியார்த்தங்களையும் இரகசியங்களையும் உபநிஷத்துக்கள் சொல்லுகின்றன. வேதங்களைக்காட்டிலும் இவைகள் மூன்று மடங்கு அதிகமாயிருந்தன. ஆதியில் வேதங்கள் தேவாலயங்களில் பிராமணர்களின் சுவாதீனத்தில் இருந்தன. அக்காலத்தில் சகல பிராமணர்களுக்கும் எல்லாஉபநிஷத்துகளும கிடைக்கும்படி இருந்தன. நாளாவிர்த்தியில் இவர்களுடைய யோக்கியதையும குறைய ஆரம்பித்தது. சுமார் 2500 வருஷத்துக்கு முன் கபிலவஸ்துவின் அரசனான கௌதமர் சமாதியில் அந்த இரகசியங்களைத்தெரிந்துகொண்டு தத்துவங்கள் எல்லாருக்கும பொதுவானவை என்று நினைத்து சில தத்துவங்களை எல்லாருக்கும் சிலதுகளை தகுந்த யோக்கியமான சிஷ்யர்களுக்கும் சொல்லத் தொடங்கினார். பிறகுதான் பிராமணர்கள் தங்களுடைய அருமையான தனம் வெளியாய்விடுவதைக்கண்டு உபநிஷத்துக்கிரந்தங்களைச்சுருக்கி அவைகளிலுள்ள முக்கியமானபாகங்களை அப்புறப்படுத்திவிட்டார்கள். இப்போது விளங்கும் உபநிஷத்துகள் அந்த பாகங்கள் தவிர மட்டுமே. இவைகளைத்தவிர அநேக இரகசியசாஸ்திரங்களையும் வியாக்கியானங்களையும் அப்புறப்படுத்திவிட்டார்கள். இதில் அவர்களுக்கு யாதொரு கெட்ட எண்ணமுமில்லை. சத்பாத்திரமான சிஷ்யனுக்கு இந்த இரகசிய சாஸ்திரத்தைச்சொல்லிக்கொடுத்து குருசிஷ்யபரம்பரையாய் இதைப்பரிபாலனம்பண்ணி வருகிறார்கள். இந்த இரகசியத்தைக்கிரகிக்கவும் அதைச்சத்துபயோகம் செய்யவும் ஜனங்களிடத்தில் சாமர்த்தியம் காணப்படுவதற்குத்தகுந்தபடி இந்த குப்தவித்தையை மகான்கள் வெளியிடுகிறார்கள்.

6. கல்கிபுராணம் ஸ்ரீமத்பாகவதம் முதலிய கிரந்தங்களில் கலியுகந்தோன்றி ஐயாயிரமாண்டுக்கப்பால் விஷ்ணுகலை குறைந்துவிடுகிறதென்றும் ஜனங்களுக்குத்தர்மசிந்தையும் புண்ணியபாபமென்கிற அறிவும் முற்றிலுமில்லாமல், ஜடவஸ்துக்களில் சாஸ்வதபுத்தியுண்டாகி விபரீதமடைவார்களென்றும் நம்முடைய முன்னோர்களாகிய ஞானிகள் தங்களுடைய திவ்விய ஞானத்தினால் அறிந்து குறிப்பிட்டிருந்ததற்கு அனுகூலமாய்க்காலஸ்திதியுமிருந்துக்கொண்டுவருகிறது. விதியை மதியால் முற்றிலும் வெல்லக்கூடாதாயினும் அதின் வலிமையை ஒருவிதமாக மாற்றலாமென்பது ஞாயமானதாலும, இந்த ஜன்மத்தில் ஒருவன் செய்யும் முயற்சியானது வீணாகாமல் மறுஜன்மத்தில் பலனைக்கொடுக்கிறதென்று "விட்டகுறை தொட்டகுறை" என்னும் பழமொழியால் சுலபமாய் நாம் அறியக்கூடியதாலும், அணைந்துபோகிற தீபம் ஓங்குகிற நியாயப்படி குறையப்போகிற விஷ்ணுகலை ஓங்கும் இச்சமயத்தில், கிரகிக்கும் புத்தி தீக்ஷணமாயிருப்பதால் ஜனங்களுக்கு தத்துவமார்க்கத்தைக்காட்டி வரப்போகிற அந்தகாரத்திலிருந்து கரையேற்றலாம் என்று நினைத்து

# பிர்ம்மஞானச்சுருக்கம்

மாடேம் ப்ளாவாட்ஸ்கி என்னும் புண்ணியவதி மூலமாக 1875-ஹு நவம்பர்-மீ 17-உ பிர்ம்மஞான சபையை ஜீவகாருண்யம் பொருந்தியமகான்கள் ஸ்தாபித்தார்கள். தத்துவவிவேசகத்துக்காக ஏற்பட்டிருக்கிற பிரதானமானசங்கம் சென்னப்பட்டணத்திலும் அதின்கிளைகள் இந்தியாவில் 143-ம் யாக்கியான ஆசியாகண்டத்தில் 25-ம் யூரோப்தேசத்தில் 30-ம் அமேரிகாதேசத்தில் 67-ம் சில்லரை 14 மாக பிரபஞ்சம் முழுவதும் வியாபித்திருக்கின்றன. கிளைகள் நூதனமாயும் ஸ்தாபிக்கப்பட்டுவருகின்றன.

7. இச்சங்கத்தின் உத்தேசங்கள் மூன்று:—

(1) யாதொருபேதமன்றியில் ஜனங்களுக்குள் பிராதருபாவத்தை ஸ்தாபித்து அதை அபிவிர்த்திசெய்வது.

(2) ஆசியாகண்டத்தில் விளங்கிவரும் ஸம்ஸ்கிருதம் முதலிய பாஷைகளில் ஜனங்களுக்கு ஆஸக்தியை உண்டுபண்ணி, அப்பாஷைகளில் எழுதியிருக்கப்பட்ட மதக்கிரந்தங்கள் சாஸ்திரங்கள் முதலியவைகளில் ஜனங்களின் ஞானத்தை அபிவிர்த்திசெய்வது.

(3) பிர்ம்மாண்டத்திலும் பிர்ம்மாண்டமாகிய மனிதனிடத்திலும் அடங்கிய சகலஇரகசியசக்திகளையும்கண்டுபிடிப்பது.

8. சகோதரபாவத்தை ஸ்தாபிப்பதே ஒவ்வொருமதத்தின் கருத்து. ஆனால் இந்தக்கருத்து அனுஷ்டானத்தில் நிறைவேரவில்லை. ஒவ்வொரு மதஸ்தர்களும் மோக்ஷத்தை அடையத்தங்கள் மதத்தில் சொல்லிய மார்க்கமே சரியானதென்றும் மற்ற மார்க்கங்கள் பிசகு என்றும் நினைத்து இதரமதஸ்தர்களைத் துவேஷிக்கிறார்கள். இத்துவேஷத்தால் பட்டப்பகலில் வெகு கொலைகள் நடந்ததையும் நாம் சரித்திரங்களில் பார்த்திருக்கிறோம். ஒருமதஸ்தர்க்குள்ளாகவே ஒருவர்க்கொருவர் பாராட்டிவரும் சத்துருபாவமும் ஒருஜாதியாருக்கும் மற்றஜாதியார்களுக்கும் நேரிடும் உயிர்ச்சேதமுள்ளகலகங்களும் நாள்தோறும் விர்த்தியாய்வருகின்றன. இக்காரணங்களால் சகோதரபாவம் அதாவது சகல பிராணிகளிடத்திலும் அன்பு விசேஷமாய் நிறைவேறாமல்போய்விட்டது. உலகத்திலுள்ள மானிடப்பிரவிகள் எல்லாம் எங்கும் நிறைந்த பரமாத்மாவின் முக்கியாம்சமானதால் நாமெல்லோரும் பெரியகுடும்பிகளென்ற ஒரே அறிவினால் ஐக்கியமுற்று ஒருவரையொருவர் சகோதரராக அபிமானித்துப் பொதுவான க்ஷேமம் நம்மதென்று ஒவ்வொருவரும் நினைத்து நடந்தால் உலகத்தில் எவ்வளவு க்ஷேமமும் தர்மமும் ஓங்கிச்செழிக்கும். ஆனால் இவ்வித அறிவு உலகமெங்கும் பரவிப் பலனை அடைய முயற்சிப்பது அசாத்தியமென்றும், ஏட்டில் எழுதி ஆனந்தமடைந்து சொப்பனங் காணமட்டி-

ல் யோக்கியமென்றும் சிலர் நினைப்பார்கள். இச்சிறந்த அறிவை நிலைநாட்ட ஜகத்துண்டானகாலம் முதல் பிரயத்தினப்பட்டும் இந்தச் சிறந்த ஔஷதத்தைக் கருத்தில் கொண்டும் பற்பலகாலங்களில் பரமாத்மா அவதாரஞ்செய்தும் அக்காலநிலைமைக்குத்தக்கபடி பல மதங்களை யேற்படுத்தியும் இன்னும் சித்தியாகவில்லையென்று சிலர் அதைரியமடையலாம். ஆனால் இச்சிறந்த ஔஷதத்தில் வீரியமில்லையென்று சொல்லக்காரணமில்லை. ஏனென்றால் பலதேசத்திலும் அதர்மம மேலிட்டகாலத்தில் தோன்றிய அவதாரபுருஷர்கள் மனோவியாதிகொண்ட ஜனங்களுடைய அம்மனநோயைப்போக்கி தர்மத்தையும் நல்லொழுக்கத்தையும் நிலைநாட்டக் கருதி காலதேசவர்த்தமானங்களுக்குத்தக்கபடி சகோதரபாவமென்னும் தத்வமாகிற ஒரேதாய்ச்சரக்கைக்கொண்டு சூர்ணம், பஸ்மம், லேகியம், கஷாயம்போல பலவிதமாக அவரவர்களுக்கு மாதுரியமுண்டாகும்படிச் செய்து புராணம் இதிஹாஸாதிகளான பத்தியங்களுடனும் அனுபானங்களும் உபயோகித்துவந்தார்கள். நாளாவிர்த்தியில் இத்தாய்ச்சரக்கு மறந்துபோய்விட்டது. இக்காலத்தில் மறுபடி இந்த சகோதரபாவத்தை அங்கீகரிப்பதால் ஒருவருக்கு ஒருவருடன் உள்ள துவேஷம் நீங்கி மற்படியும் ஜகத்தில் சுகமே மேவிடுமென்பதில் சந்தேகமில்லை.

9. சகோதரபாவத்தை ஸ்தாபிக்கவேண்டுமென்பதினால் எல்லாமதங்களும் ஒன்றாகப்போகவேண்டுமென்பதும் அல்லது பந்திபோஜனம் முதலியவைகளில் ஜனங்களுக்கு ஒத்துமை உண்டாகவேண்டுமென்பதும் கருத்தன்று. உண்பது உடுப்பது முதலியவை பிரகிருதிஸ்வபாவத்தால் வேறுபட்ட ஸ்தூலதேகத்தின் காரியங்கள். சகோதரபாவமோ வேற்றுமையற்ற காரணசரீரலக்ஷணம். ஆதலால் நல்லறிவு, தத்துவஞானம் இவைகளினடியாகப்பிறக்குஞ் சகோதரபாவம், ஸ்தூலதேகத்தின் காரியங்களில் ஒருமைப்பாடன்றியே நிலைபெறக்கூடும். பிரகிருதி ஸ்வபாவத்தாலேயே வேறுபட்டிருக்கிற ஸ்தூலதேககாரியங்களில் ஜனங்களுக்கு ஒத்துமை உண்டாவது அவசியமில்லை. ஒரு இந்துகுடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும் அவரவர்களுக்குரிய தொழில்களைப் பலவாறாகச்செய்துவந்தாலும், உணவு உடுப்புமுதலியவைகளில் ஒவ்வொருவருடைய ஸ்வபாவம் வேறுபட்டாலும், குடும்பத்தில் தாயார் பாட்டியார் முதலிய பெரியோர்கள் தொட்டுமோரக்கூடாத புராதனம் முதலிய அசாஸ்திரீயமான ஆகாரங்களை அக்குடும்பத்திலுள்ள சிறுவர்கள் புசித்துவந்தாலுங், குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும் மற்றவர்களைத் தம் குடும்பத்தின் அ

ங்கமாகபாவித்து அபிமானித்து வருவதுபோல இச்சபையில் சேர்ந்தோர் நடையுடை பாவனைகளிலும ஜாதி ஆசாரங்களிலும் பலவாறாக ஏற்பட்டிருந்தாலும் தாமெல்லோரும் ஒரே ஆதிகாரணத்திலிருந்துண்டான ஒரே வம்சஸ்தர்கள் என்கிற நிச்சய அறிவினால் சகோதரபாவம் சித்திக்கு மென்று அந்த அறிவை உலகத்தில் நிலைநாட்ட முயன்றுவருகிறார்கள்.

10. உலகத்தில் பலவாறாக ஏற்பட்டிருக்கிற சங்கங்களில் பிரவேசிக்க ஒருவனுக்குத் தகுதியுண்டாக்குவது மதம், குலம், தொழில், கல்வி, சமபத்து, இவைகளே. இச்சங்கத்திலோ ஜனங்களிடத்தில் சகோதராபிமானமும் சத்தியசங்கல்பமுமே போதுமானவை. இதரசங்கங்களில் ஒருவன் மற்றவர்களுடைய கொள்கைக்கு வேறாகச் சொப்பனத்திலும் எண்ணக்கூடாது. இச்சங்கத்திலோ வென்றால் அவரவர்களுடைய மதங்களும கொள்கைகளும் அவரவர்களுக்கு உரித்தானவை யென்றும் ஒருவருடைய கொள்கையாலாவது அல்லது ஆசாரத்தினாலாவது ஜனங்களுடைய க்ஷேமத்திற்கும் பொதுநன்மைக்கும குறைவு நேரிடக்கூடியதானாலொழிய அவைகளில் மற்றவர்கள் தலையிட்டுக்கொள்ள நியாயமில்லை யென்பதும் இச்சங்கத்தின் முக்கியமான கொள்கையாய் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது.

11. இக்கருத்தின்படி பிரதிருதத்தில் இச்சபையில் சேர்ந்திருக்கும் ஹிந்துக்கள், மகம்மதியர்கள், கிருஸ்துவர்கள், பார்சிகள் முதலிய மதஸ்தர்கள் அவரவர்களின் கொள்கைகளின்படி நடந்து வந்தபோதிலும் தத்துவவிசாரணைவிஷயத்திலும் பிறருடைய சுகதுக்கவிஷயங்கள் விஷயத்திலும் ஒன்றாகச்சேர்ந்து அனுகூலமான காரியத்தையே செய்து வருகிறதினால் சகோதரபாவத்தை அனுஷ்டானத்தில் காண்பிக்கிறார்கள். இந்த விநோதமான காட்சியை இச்சங்கத்தில் தவிர வேறு சங்கத்தில் பார்ப்பது அரிது. இதில் சேர்ந்தவர்கள் ஒவ்வொரு வருஷத்திலும் ஒருஇடத்தில் (முக்கியமாய்ச் சென்னபட்டணம் லந்தன், நியூயார்க்கு) கூடிவருவதே இதற்குப் பிரத்தியக்ஷப் பிரமாணம்.

12. (2) பரப்பிர்ம்மத்தினின்றும் சகலமும் உண்டானபடியால் சகோதரபாவம் இருக்கவேண்டுமென்று முன் சொல்லப்பட்டது. இந்த விஷயமாய்த தத்துவங்கள் முன்னோர்களால் சம்ஸ்கிருதம் முதலிய பிராசீன கிரந்தங்களில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. மேலும் சமஸ்கிருத பாஷைதான் ஆதியான தெய்வபாஷை. இதில்தான் பூர்வீக மகான்கள் ஆதிகாலமுதல் தங்களுடைய, அனுபவங்களால் தெரிந்துகொண்ட சகலதத்துவங்களையும் சொல்லியிருக்கிறார்கள். இந்த சம்ஸ்கிருத பாஷையிலிருக்கப்பட்ட கிரந்தங்கள் மற்றப்பாஷாக்கிரந்தங்களைவிட வெகு அதிகம்.

இக்கிரந்தங்களைப்பார்த்து உண்மையை அறியாமலிருப்பதே சகோதரபாவத்தின் குறைவுக்குக் காரணம். ஆகையால் அக்கிரந்தங்களில் ஜனங்களுடைய புத்தி திரும்பும்படிச் செய்வது இரண்டாவது உத்தேசம். இந்த உத்தேசத்தின்படி வெகு கிரந்தங்கள் சம்ஸ்கிருதம் தெரியாதவர்களுடைய உபயோகத்திற்காக மொழிபெயர்க்கப்பட்டு வருகின்றன. விசாரசாகர மொழிபெயர்ப்பும் இக்கருத்தை அனுசரித்ததேயானது. வேதாந்த ரத்தினமான பகவத்கீதை அனேக பாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. யூரோப் தேசத்தில் மட்டும் பலபாஷைகளில் அது விளங்குகிறது. இதினால் அவ்விடத்திலுள்ள ஜனங்களின் நோக்கத்தை ஊகிக்கலாம்.

13. (3) சரீரமே ஆத்மாவென்பதும் மரணத்துக்குப்பின் யாதொன்றுமில்லை என்பதும் அனேகருடைய கருத்து. இது பிசகு. சரீரத்தைத்தவிர ஆத்மா வேருண்டு. அந்த ஆத்மாவுக்கு அணிமாதி அனேக சக்திகளுள. அச்சக்திகளால் ஆத்மா வெகு காரியங்களை முடிக்கலாம். ஜனனமரணாதி சம்சாரத்தை ஜீவன் தாண்டலாம். இதற்கு மார்க்கங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இவ்விஷயங்களில் புத்தியை செலுத்த வேண்டுமென்பது மூன்றாவது கருத்து.

14. இம்மூன்று கருத்துகளைக் கொண்ட இச்சங்கமானது சகோதரபாவத்தையும் நமது தேசத்தின் பிராணாதாரமான நல்லொழுக்கத்தையும் நியாயமான காரியங்களை நிச்சயத்துடன் விடாமுயற்சியுடனும் அஞ்சாமலும் செய்யவேண்டுமென்பதையும் எடுத்துரைத்து வருவதுடன் மேற்றிசையிலுள்ள நிரீசுவர வாதிகளால் இதுவரையில் கண்டறியப்பட்டிருக்கிற சாஸ்திரங்களுக்கெட்டாமல் நமது வேதாந்த முதலான சாஸ்திரங்களையும் யோகமார்க்கங்களையும் சித்திகளையும் கூடியமட்டில் தெளிவாய் எடுத்துக் காட்டுகிறது. சர்வமதசம்மதமாயும் சர்வ சாஸ்திரங்களால் ஒப்புக்கொள்ளத் தக்கதாயும் ஜனங்கள் அறிந்து கரையேற அவசியமானதுமான பொதுவான தத்துவங்களைமட்டும் உபதேசித்து இப்படி பொதுவாயுள்ள பிரமாணங்களால் துவேஷபுத்தியையும் தற்பெருமையையும் நீக்கி இவ்வித தத்துவங்களை கொஞ்சங்கொஞ்சமாய் அடக்கிக்கொண்டிருக்கிற பற்பல மதங்களில் அவரவர்கள் மதங்களில் அவரவர்களுக்கு சிரத்தையை உண்டாக்கி மற்றமதங்களில் ஜனங்களுக்கு சமபுத்தியை யேற்படுத்தி சகோதரபாவத்தை நிலைநாட்ட முயற்சி செய்து கொண்டு வரும் இச்சங்கத்தால் நமக்கு நன்மையே தவிர வேறில்லை.

15. மேற்சொல்லியபிர்ம்ம ஞானசபையில் இரண்டு வகுப்புகளுள. (1) ஆந்தரம் (2) பாஹியம். பாஹியவகுப்பில் சேரப்பட்டவன்தான் ஆந்தரவகுப்புக்குத் தகுந்தவனாகிறான். இவன் எந்தமதத்தில் சேர்ந்திருந்த

லும் அல்லது நாஸ்திகனாயிருந்தாலும் மேற்சொல்லிய 3 உத்தேசங்களில் முதலே மட்டுமாவது அபிமானிக்க வேண்டியது. சகோதரபாவத்தை ஒப்புக் கொள்ளாதவனுக்கு இச்சபையில் இடமில்லை. ஆந்தரவகுப்பில் சேரப்பட்டவன் அவ்வகுப்பின் நிபந்தனைகளை அவசியம் அனுசரிப்பதுடன் ஸ்வப்பிரியவிஷயத்தில் தன்னுடையசகலஅபிமானத்தையும் விட்டு மற்றவர்களின் நன்மைக்காகவே சகலபிரயத்தனமும் செய்யவேண்டியது.

16. பிர்ம்மஞானமென்பது ஒன்று உண்டென்பதையும் அதின் தத்துவங்களை அறிந்து அவைகளை அனுஷ்டானத்துக்குக் கொண்டுவருகிறபடி பிர்ம்மஞானமார்க்கத்தில் செல்லக்கூடுமென்பதையும் காண்பிப்பதற்குத்தான் இந்தசபைஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இதில்ஒருவன் சேர்ந்தமாத்திரத்தில் ஞானியாவான் என்று நினைப்பது வீணாசை.

17. பிர்ம்மஞானவிசாரத்தில் இச்சபைமூலமாக ஆங்கிலேயதேசத்தில் அதிகப் பிரவிர்த்தியுண்டானதற்குக் காரணமென்னவெனில் அடியில் கண்டவிஷயங்கள் எல்லாம் இதின் தத்துவங்களால் நன்றாய் விளங்குகின்றன. அவையாவன:—இந்த பூலோகம் தவிரமற்றலோகங்களின் பிரயோஜனம் அவைகளில் ஜீவனம் முதலியவை பூகம்பங்கள் முதலியவைகளாலுண்டாகும் பிரளயங்கள். நமக்குவேறானஜன வர்க்கங்கள் முன்காலங்களிலிருந்ததற்கு சாட்சியமான கட்டிடங்கள் முதலியவை, மனிதர்களுக்குள் உள்ளவித்தியாசங்கள். சகலமதங்களிலுமுள்ள வித்தியாசங்கள், துக்கம், துக்ககாரணம். அதைநிவிர்த்தி செய்யும் பிரயத்தனம் எப்போதும் சாத்தியப்படாமை,பாக்கியம் தாரித்திரியம் புத்திமூடத்தனம் மூடவம்சத்தில் அதிமேதாவிகளின் ஜனனம், அகாலமரணம், சூக்ஷ்மதிருஷ்டி சாதாரணமானமதங்களெல்லாம் எல்லாரையும் திருப்திசெய்யாமை மேற்சொல்லிய விஷயங்களைப்போல விஷயங்களைத் திருப்தியாய் விளக்கிவைப்பதினால் இவ்விடத்தில்விட யூரோப் அமேரிகாதேசங்களில் ஜனங்களின் பிர்விர்த்தி அதிகமாயிருக்கிறது. இப்படிப்பட்ட பிர்ம்ம வித்தியாசாஸ்திரத்தின் முக்கியதத்துவங்களை அடியில்வரும் அத்தியாயங்களில் விவரிப்போம்.

முதலாவதுஅத்தியாயம்

முற்றிற்று

# பிர்ம்மஞானச்சுருக்கம்

## இரண்டாவது அத்தியாயம்

### பரப்பிர்ம்மம்முதல்மனிதன்வரையில்

18. எங்கும் எக்காலங்களிலும் வியாபித்துக்கொண்டும் சேதநாசேதனங்களுக்கு ஆதாரமாயும், ஸ்வயம் அநாதாரமாயும், நிர்விசேஷணமாயும், ஒரு தத்துவம இருக்கிறது. இது பரப்பிர்ம்மம் என்னப்படும். மாண்டூக்கிய உபநிஷத்தில் சொல்லியபடி இது மனதிற்கும் வாக்குக்கும் எட்டாதது. மனதும் வாக்கும் வியக்தாவஸ்தைகள், வியக்தத்தால் அவ்வியக்தம் இருக்கவேண்டுமென்று சித்திக்கிறது. வியக்தம் அஸ்திரமாயிருப்பதால் ஸ்திரமானது ஒன்று இருக்கவேண்டும். இது சமஸ்தத்தையும் அடக்கிக்கொண்டிருக்கவேண்டும். இதின் வாஸ்தவஸ்திதியை அறிய மனதினால் முடியாவிட்டாலும் இதில் நின்றும் விளங்கிய விவர்த்தபதார்த்தகுணங்களால் இதின் ஸ்வரூபம் இன்னவிதமாயிருக்கக்கூடுமென்பதை ஊகிக்கலாம். பிரகிருதி புருஷர்கள் இதின் பலதோற்றங்களே இவைகள் வெவ்வேறு அல்ல. சகல வியக்தாவஸ்தைகளிலும் விளங்கும் சின்மாத்திரம் இதுவே. விளங்கும் ஸ்தானமாகிய சித்தாகாசமும் இதுவே. ஸ்ரீசங்கராசாரியர், பிர்ம்மசூத்திரத்தின் 23-வது சூத்திரத்தின் வியாக்கியானத்தின் கடைசியில் சொல்லியபடி வேறு அதிஷ்டாதா இல்லாதபடியால் பரப்பிர்ம்மமே கர்த்தா அதாவது புருஷன். மேலும் வேறு உபாதானமில்லாதபடியால் பரப்பிர்ம்மமே பிரகிருதி. இது சுத்த சதுரூபம். இது ஞாதாவன்று. ஞானமுமன்று, ஞேயமுமன்று. ஆனால் சகலஞாத்ருஞானஞேயங்களுக்கும் மூலகாரணமானது. அசங்கமாயும் அபாரமாயுமிருக்கிற இந்த சத்தைத்தவிர வேறு யாதொன்றும் சத்தியமன்று.

. 19. இதின் வியக்தாவியக்தஸ்வரூபங்கள் விஷ்ணுபுராணத்தில் அடியிற்கண்டபடி விவரிக்கப்பட்டிருக்கின்றன. பிர்ம்மம், மூர்த்தம், அமூர்த்தமென்று சுபாவத்தில் இருவகைப்படும்; மூர்த்தமாவது சரீரத்தோடுகூடியது. அது ஹிரணியகர்ப்பன் முதலான பத்தஸ்வரூபம். அமூர்த்தமாவது சரீரமில்லாதது; அது முக்தஸ்வரூபம்; இந்த ஸ்வரூபம் பரமென்று சொல்லப்படும். முந்தினது அபரமென்று சொல்லப்படும். இப்படி மூர்த்தாமூர்த்தமயமான பிரபஞ்சமெல்லாம் பிரமபாவனை கருமபாவனை உபயபாவனை எனமூன்றுவகைப்பட்டபாவனைகளாயிருக்கின்றன. பாவனையாவது பொருள்களை இடைவிடாது நினைத்தல். பிரமபாவனையா

வது பிர்ம்மத்தைப்பாவித்தல். கருமபாவனை கருமத்தைப் பாவித்தல். உபாயபாவனையாவது இரண்டையும் பாவித்தல். சநந்தனாதியோகிகள் பிரமபாவனையோடுகூடினவர்கள். தேவர்களாதியாய்த் தாவராந்தமாக நின்றவரெல்லாம் கருமபாவனையோடுகூடினவர்கள். ஹிரணியகர்ப்பன் முதலானவர்கள் போதமும் அதிகாரமும் உடையவர்களாகையால் உபயபாவனைகளோடுகூடினவர்கள். விசேஷமான ஞானகர்மங்கள் யாவும் கூடியிருக்காமலிருக்குமளவில் முன் சொல்லப்பட்ட விசுவரூபமான பிர்ம்மம் இருக்கின்றது. தேவமனுஷியாதிபேதஞானத்தினாலே ஞானம் வேறுபட்டிருக்கிற முன் சொல்லப்பட்ட ஜீவர்களைக் காட்டிலும் பரமென்று சொல்லப்பட்ட ரூபம் வேறாயிருக்கிறது. அது ஜாதி முதலான சகல பேதங்களும் இல்லாததாய் வாக்குக்கு எட்டாததாய் குறைவு முதலான விகாரங்களன்றி ஒருபடிபட்டதாய்ச் சுயம்பிரகாசமாயுள்ள ஞானஸ்வரூபமான வஸ்து. அது பிர்ம்மமென்கிற பேருள்ளது. அதுதான் பரமாத்மாவான ஸ்ரீ விஷ்ணுவினுடைய அமூர்த்தமான ஸ்வரூபம்; முன் சொல்லப்பட்ட விசுவரூபத்தைக்காட்டிலும் விலக்ஷணமாய்ச் சர்வோத்தமமாயிருப்பது இதுவே. இதைச் சிந்திக்க சாத்தியப்படமாட்டாது. ஸ்ரீ வாசுதேவாம்சமாய் பிரஜாபதியாயிருக்கிற ஹிரணியகர்ப்பனும் மருத்துக்களும் வசுக்களும் ருத்திரரும் சூரியனும் நக்ஷத்திரங்களும் கிரகங்களும் கந்தர்வரும் யக்ஷரும் தைத்தியர் முதலான பேர்களும் சகலமான தேவயோனி விசேஷங்களும் மனுஷியரும் பசுக்களும் பருவதங்களும் சமுத்திரங்களும் நதிகளும் விருக்ஷங்களும் மற்றுமுள்ள சகலபூதங்களும் பூதங்களின் காரணங்களும் இப்படிப் பிரதானமுதலாக விசேஷமீறாக நிற்பதும் சேதனாசேதனஸ்வரூபமாய் ஏகபாதமுள்ளதும் இரண்டு பாதமுள்ளதும் அநேகபாதமுள்ளதும பாதமில்லாததுமான சகலமும் ஸ்ரீஹரிபகவானுடைய மூர்த்தஸ்வரூபம். இது சிந்திக்கக்கூடியதானாலும் மூன்று பாவனைகளுள்ளதாகையால் சுத்தமன்று. பிர்ம்மாதி ஜீவசாதங்கள் மூர்த்தமென்று சொல்லப்படும். அது அழிவற்றதாகையால் க்ஷரமென்று பெயர் பெறும். முக்தஸ்வரூபமானது அமூர்த்தமென்று சொல்லப்பட்டு அழியாதாகையால் அக்ஷரமென்று பேர் பெறும்.

20. இந்த சத்ரூப பிர்ம்மத்தில் ஒரு நியாயப்படி ஒருகாலத்தில் சலனமுண்டாகி ஒருகாலத்தில் ஸ்திரத்தன்மையுண்டாகிறது. இப்படி உண்டாகவேண்டிய காரணத்தைமட்டும் நாம் அறியோம். சலனமுண்டாகுங்காலம் பிரவிர்த்திகாலமென்றும், மன்வந்திரம் என்றும், பிர்ம்மத்தின் பகல்காலமென்றும், ஸ்திரத்தன்மையுள்ளகாலம் நிவிர்த்திகாலமென்றும், பிரளயகாலமென்றும், பிர்ம்மத்தின் இராக்காலமென்றும், சொல்லப்படும். நம்முடைய அனுபவத்தில் பகலும் இரவும் சுறுசுறுப்பும் ஓய்வும் ஜெனனமும்மரணமும் நாம் பார்ப்பதுபோல, பிர்ம்மாண்ட

த்திலும் மன்வந்திரப்பிரளயகாலங்கள் மாறி மாறி வருகின்றன. மன்வந்திரகாலத்தில் எல்லாம் அனேக நாமரூபங்களோடு கூடின வியக்தாவஸ்தையை அடைந்து பிரளயகாலத்தில் மறுபடியும் ஏகரசமாகி பிர்ம்மத்திலேயே லயமடைகிறது. இப்படி அனாதிகாலமாய் நடந்துவருகிறது.

21. பிரளயத்திற்கு முடிவிலும் மன்வந்திரத்துக்கு முன்னும் பரப்பிர்ம்மத்தின் ஒரு அம்சத்துக்குச்சலனமுண்டாகிறது. இந்த அம்சத்துக்குப்பெயர் நாராயணன். இதுவும் அமூர்த்தஸ்வரூபம். இதுவும அசங்கமாயிருக்கிறது. அசங்கமாயும் அபாரமாயுமிருப்பதற்குச்சிருஷ்டிக்கும் தன்மை சொல்லக்கூடாது. ஏனெனில், அகண்டபதார்த்தத்தில் கண்டத்துவஞ்சம்பவிக்கமாட்டாது. சிருஷ்டியால் சங்கம் ஏற்படுகிறது. ஏனெனில் சிருஷ்டி செய்பவர் சிருஷ்டிக்குமுன் ஒரு கல்பனைசெய்து பிறகுதான் தனக்கு அன்னியமான ஒன்றைச்சிருஷ்டிக்கக்கூடும். அசங்கமானதற்கு சங்கம் எப்படி ஒவ்வும். ஆகையால் அசங்கமான நாராயணனும் சிருஷ்டி கர்த்தாவன்று.

22. இந்த அவ்வியக்த நாராயணனிடத்தில் நின்றும் வியக்தஸ்திதியை அடையும்பொருளுக்குச்சிலர் ஈசுவரன் என்றும், சிலர் பிரத்தியகாத்மாவென்றும், சிலர் சதுர்முகப்பிர்ம்மாவென்றும் சொல்லுகிறார்கள். இது பிரகிருதியும புருஷனும் கூடிய அவஸ்தையாம். பிர்ம்மாண்டத்தின் உபாதானகாரணமான பிரகிருதியும நிமித்தகாரணமான சைதன்னியமாகிற புருஷனும இரண்டும் சேர்ந்திருக்கும ஸ்திதி இதுவே. சிருஷ்டிக்கு மூலகாரணம் இதுவே. புருஷனும் பிரகிருதியும புருஷப்பிரகிருதியின் இரண்டுவித வியக்தசோற்றங்களே.

23. மன்வந்திராரம்பத்தில்தான் ஈசுவரன் தன்னுடைய முக்கியஸ்திதியை விடுகிறான். ஈசுவரனே முதலாவது ஞாதா. மற்ற ஞாதாக்கள் எல்லாம் ஈசுவரனுடைய பிரதிபிம்பங்கள். பரப்பிர்ம்மம் போல் இவர் அறியப்படக்கூடாதவரன்று. இவரை அறியவேண்டியதற்காகவே சகல மதங்களிலும் சகல அனுஷ்டானங்களும் ஏற்பட்டிருக்கின்றன. இவர் இந்திரியங்களுக்கு விஷயமன்று; பரப்பிர்ம்மசத்துவத்துக்கு வேறன்று. ஆயினும் பிரத்தியக்ஸ்வரூபத்தால் பரபிர்ம்மத்துக்கு வேறாகவே இருக்கிறார். இவரே சச்சிதானந்த ஸ்வரூபம். சகல சிருஷ்டியும் இவரிடத்தில் ஆரம்பித்து இவரிடத்தில் லயமடைகிறது. பிரகிருதி புருஷர்களில் புருஷரூபமாக அதாவது சைதன்னிய ரூபமாகச்சொல்லவேண்டியது இந்த ஈசுவரனையே.

24. முதல் ஞாதாவான ஈசுவரனுடைய திருஷ்டிக்குக்கூட பரப்பிர்ம்மம் ஸ்வயமாக அதாவது தான் உள்ளபடி தெரியாமல் ஒரு பதார்

த்திரால் மூடப்பட்டதுபோலக்காணப்படுகிறது. இந்த மூட்டத்திற்கு மூலப்பிரகிருதி என்று பெயர். ஒரு பதார்த்தத்தின் குணமே அந்த பதார்த்தமாகாததுபோல் மூலப்பிரகிருதியே பரப்பிரம்மமன்று. நாமறியும் குணங்களைத்தவிர வேறு குணங்களை நாம் அறிய முடியாதபடியால் மூலப்பிரகிருதியின் ஸ்வரூபத்தை நாம் உள்ளபடி அறியோம். சகல பதார்த்தங்களுக்கும் உபாதான காரணமானது இந்த மூலப்பிரகிருதி. இதில் நின்றும் வியக்த ஸ்திதியை அடையும் பிரகிருதிகுணங்கள் தாம் நமக்குத்தெரியும்.

25. ஈசுவரனிடத்தில் நின்றும் 7 தேவதைகள் ஜனிக்கிறார்கள். அவர்களுக்குப் பெயர் அனுபாதகர்கள். அவர்களுடைய சமஷ்டிக்குப் பெயர் மஹத்தத்துவம். மன்வந்திராரம்பத்தில் பரப்பிர்ம்மம் ஞாதாவான ஈசுவரனாயும், மூலப்பிரகிருதியாயும் விளங்கின பிறகு ஈசுவரன் மூலமாகத்தன்சக்தியை வெளிப்படுத்துகிறது. சூரியனுடைய தேஜஸ் சூரியனில்லாதகாலத்திலும் இருந்துங்கூட, சூரியோதயமானபிறகுதான் சூரியன் மூலமாக வெளியாவதுபோல பரப்பிர்ம்மத்தின் சக்தியும் ஈசுவரன் மூலமாக வெளிப்படுகிறது. இந்தச் சக்தி பகவத்கீதையில் தைவீப்பிரகிருதி என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதுவே சகலசக்திகளுக்கும் மூலகாரணம். பராசக்தி, ஞானசக்தி, இச்சாசக்தி, கிரியாசக்தி, குண்டலினிசக்தி, மந்திரசக்தி, இவைகள் இதில் அடங்கியிருக்கின்றன. இந்தச் சக்தியே மகாசைதன்னியம் என்னப்படும். மூலப்பிரகிருதியில் சகல நாமரூப பேதங்கள் உண்டாவதற்குக் காரணம் இதுவே மூலகாரணம். விஷ்ணுபுராணத்தில் அடியில் வருமாறுசொல்லப்பட்டிருக்கிறது. "உலகமெல்லாம் பரப்பிர்ம்மஸ்வரூபியான ஸ்ரீவிஷ்ணுவின் சக்தியால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. முன்பு சுத்த ஞானஸ்வரூபமென்று சொல்லப்பட்டது பரமான விஷ்ணுசக்தி. இரணியகர்ப்பன் முதலாகச் சொல்லப்பட்டது க்ஷேத்திரஞ்ஞன் என்னும் பெயருள்ள அபரமான சக்தி. இவ்விரண்டுமல்லாமல் அவித்தை யென்றும் கருமமென்றும் சொல்லப்பட்ட மூன்றும் சக்தியுமுண்டு. இதனாலே சூழப்பட்டுத்தான் க்ஷேத்திரஞ்ஞன் என்னும் சக்தி பரவிநிற்கிற சகல சம்சாரதாபங்களையும் பெறுகின்றது. மேலும் இதனாலே மறைக்கப்பட்டுத்தான் சம்சாரம் தாரதம்மியமுள்ளதாய்க் காணப்படுகின்றது. எப்படியெனில் அசேதனங்களில் அந்தச் சக்தி மிகவும் அற்பமாயிருக்கிறது. தாவரங்களிலே அதற்குக் கொஞ்சம் அதிகமாயும் ஊருஞ்சந்துக்களில் அதற்கு மேற்பட்டதாயும் இவ்வாறே பக்ஷிகள் மிருகங்கள் பசுக்கள் மனிதர் நாக கந்தர்வ யக்ஷாதிகள் தேவதைகள் ஆகிய இவர்களிலே மேன் மேல் அந்தச் சக்தி அதிகமாயிருக்கின்றது.

26. பிரளயகாலத்தில் ஈசுவரன் மூலப்பிரகிருதி தைவீபிரகிருதியாகிய சக்தி இம்மூன்றும் ஏகாசமாய்ப் பரபிர்ம்மத்தினிடத்தில் லயமு

டைந்திருந்தன. சிருஷ்டிகாலத்தில் இவைகள் வெளிப்பட்டு இவைகள் மூலமாக பிர்ம்மாண்டமும் வெளியாகிறது. இது எவ்விதமாய் ஆகிறதெனில் ஈசுவரனுடைய மனதில் இனி உண்டாகப்போகிற பிர்ம்மாண்டத்தின் பாவனை உதிக்கிறது. இந்த பாவனையை தைவீப்பிரகிருதி கிரகித்து மூலப்பிரகிருதியுடன் சேர்ப்பிவிக்கிறது. தைவீப்பிரகிருதி மூலப்பிரகிருதியுடன் கலந்துதான் இந்தப் பிர்ம்மாண்டத்தை வெளிப்படுத்துகிறது. மண்ணினின்றும் உண்டாகுங் கடவிஷயத்தில் சக்கரதண்டாதிகள் குயவனுக்குச் சாதகமாயிருப்பதுபோல் பிர்ம்மாண்டத்தைப் பிரகிருதியினின்று உண்டுபண்ணுவதில் தைவீப்பிரகிருதி ஈசுவரனுக்குச் சாதகமாயிருக்கிறது. இது அன்றியில் யாதொன்றும் நடக்கமாட்டாது. மேலும் ஈசுவரனுடைய மனதிலிருந்த காரணரூபமான பாவனை பிர்ம்மாண்டமாகிற,காரியரூபமாக விளங்கினபடியால் பிர்ம்மாண்டம் மூலப்பிரகிருதியினிடத்தில் ஸ்தூலரூபமாயும் தைவீப்பிரகிருதியினிடத்தில் சூட்சுமரூபமாயும் ஈசுவரனிடத்தில் காரணரூபமாயும் இருப்பதாகச் சொல்லலாம். மூலபாவனையைத் தள்ளிப் பார்க்குமளவில் பிர்ம்மாண்டம் காணப்படாததினால் சமஸ்தமும் பாவனாகாரியமே. பரப்பிர்ம்மம் ஈசுவரன் மூலப்பிரகிருதி தைவீப்பிரகிருதி இந்நான்குமில்லாதவிடம் யாதொன்றுமில்லை.

27. இந்தப்பிர்ம்மாண்டம் 7 வித விகாரங்களை அடைகிறது. இவைகளே சப்தப்பிரகிருதிகளாக நம்முடைய சாஸ்திரங்களில் விளங்குகின்றன. முதல் மூன்றும் அரூபமாயும் மற்ற நான்கும் ரூபமாயுமிருக்கின்றன. பிர்ம்மாண்டத்தின் 7-வது விகாரமானதுதான் இப்போது நமக்குக் கோசரமாயிருப்பது. ஒவ்வொரு விகார அவஸ்தையின் குணமும் வெவ்வேறு. முதல் அவஸ்தையிலிருந்து 7-வது அவஸ்தைவரையில் ஒவ்வொன்றிலும் அதிக ஸ்தூலதை கொஞ்சங்கொஞ்சமாக விருத்தியாகி 7-வது அவஸ்தையில் நமக்குக் கோசரமான ஸ்தூலதை விளங்குகிறது. ஓரே பதார்த்தம் ஆவிரூபமாயும் ஜலரூபமாயும் பனிக்கட்டிரூபமாயுமிருப்பதுபோல பிர்ம்மாண்டத்தின் பற்பல விகாரமான அவஸ்தைகளை அறிய வேண்டியது.

28. இந்த அவஸ்தைகளுக்கு லோகங்கள் என்றும் அல்லது பூமிகைகள் என்றும் பெயர். முதல் பூமிகை சைதன்னிய ஸ்வரூபம். அதின் உபாதியான 2-வது பூமிகையாகிற புத்தியன்றியில் அதையறிய மகாத்மாக்களாலும் முடியாது. 3-வது பூமிகை மானஸிகம். இதில்தான் ரூபம் வியக்தமாக முதல் முதல் காணப்படுகிறது. மேலும் பிரத்தியக்ஸ்வரூபஞாதா வெளிப்படுகிறான். பிரகிருதி *அதிசூட்சுமமாயிருந்தாலும் இந்த பூமிகையில் உருவத்தோடுகூடியிருக்கிறது. இதில் ஞாதா ஞேயத்தை அபேக்ஷிக்கிறான். 4-வது பூமிகை சரீரசம்பந்தமான இச்சைகள். இவைகள் இப்பூமிகையில் ரூபங்களோடுகூடியிருக்கின்றன. 5-வது

பூமிகை பிராணன். 6-வது பூமிகை நம்முடைய ஸ்தூலத்தைவிட சொல்பம் சூட்சுமமாயிருக்கிறது. ஒவ்வொரு பூமிகைகளின் விசேஷணங்களும் வெவ்வேறு. ஒரு தோலின் பேரில் ஒருதோலிருக்கிறதுபோல் இந்த பூமிகைகள் இருப்பதாக நினைக்கக்கூடாது. இவைகள் பிரஞ்ஞாபேதங்களே. இந்த பிரஞ்ஞையும் 7 விதமாய் விளங்குகிறது.

29. இந்தப் பூமிகைகளே விஷ்ணு புராணத்தில் பூலோகாதி லோகங்களாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. காலாலேநடந்துபோகத்தக்கதாய்ப் பூமி சம்பந்தமான வஸ்து எதுவுண்டோ அதுவெல்லாம் பூலோகமென்னப்படும். பூமிக்கும் சூரியனுக்கும் நடுவில் சித்தாதி முனிவர்கள் வாசம்செய்யும் இடம் எவ்வளவுண்டோ அதுதான் புவர்லோகம். துருவனுக்கும் சூரியனுக்கும் நடுவாய் உள்ள இடம் சுவர்க்கலோகம். இம்மூன்றும் கல்பந்தோறும் உண்டாக்கப்படுவதால் கிருதகம் என்றும், ஜனலோகம், தபோலோகம், சத்தியலோகம் இம்மூன்றும் கல்பந்தோறும் உண்டாக்கப்படாமையால் அகிருதகம் என்றும் சொல்லப்படும். இந்த கிருதகம் அகிருதகம் என்கிற இரண்டின் நடுவில் மஹர்லோகம் இருக்கின்றது அது கல்பத்தின் முடிவில் ஜனசூன்யமாகிறதே தவிர சொரூபம் நசிப்பதில்லை. ஆகையால் கிருதாகிருதம் என்று சொல்லப்படும். ஒவ்வொன்றுக்கும் இரண்டு தோற்றமிருப்பதால் லோகங்கள் மொத்தத்தில் 14 ஆகின்றன. இந்த மேலேழு லோகங்களும் பாதாளங்களாகிய கீழ் ஏழு லோகங்களும பிரம்மாண்டத்தின் பரப்பு என்னப்படும். இவைகளுக்கே ஞானஞான தசைகள் என்றும் பெயர். வேதாந்த சாஸ்திரப்படி எல்லாம் ஞானஸ்வரூபமாயிருப்பதால் பல தோற்றங்களும் ஞானத்தையே பொறுத்திருக்கின்றன.

30. இந்தப் பிர்ம்மாண்டத்தில் அநேக சூரியமண்டலங்களுள. நம்முடைய சூரியமண்டலத்தைப்பற்றி மட்டும் நாம் கவனிப்போம். பிர்ம்மாண்டத்தில் முக்கியமான நான்கு தத்துவங்கள் சொல்லப்பட்டதுபோல சூரியமண்டலததிலும், முக்கியமாய் 4 தத்துவங்களுள. (1) வைசுவாநரம். இது ஸ்தூலப்பிரபஞ்சமட்டும் அன்று. எந்த ஸ்தூல பீஜத்தினின்றும் ஸ்தூலபிரபஞ்ச முண்டாகிறதோ அதுவே இது. (2) ஹிரண்யகர்ப்பம். வைசுவாநரம்போல் இதுவும் சூட்சுமப்பிரபஞ்சத்துக்கு ஆதாரமான சூட்சுமபீஜம். (3) சூத்திராத்மா. ஸ்தூல சூட்சும பீஜங்களுக்குக் காரணமான மூலாதாரமான காரணபீஜம். (4) மூலப்பிரகிருதியே.

31. நம்முடைய சூரியமண்டலத்தில் செவ்வாய் புதன் முதலிய கிரகங்கள் அநேகமுள. ஒவ்வொன்றுக்கும் 7 அவஸ்தைகளிருப்பது

போல நம்முடைய பூலோகத்துக்கும் 7 அவஸ்தைகளுண்டு. இந்த அவஸ்தைகளுக்கு விஷ்ணு புராணத்தில் துவீபங்கள் என்று பெயரிடப்பட்டிருக்கிறது. தத்கால ஸ்திதியில் பூமிக்கு ஜம்புதுவீபம் என்று பெயர். மற்ற ஸ்திதிகள் பிலக்ஷத்துவீபம சால்மலத்துவீபம் குசத்துவீபம் கிரௌஞ்சத்துவீபம் சாகத்துவீபம புஷ்கரத்துவீபம் எனப்பெயரிடப்பட்டிருக்கின்றன. இவ்வேழும் சேர்ந்து கிரகமாலிகை எனப்படும்.

32 இந்தப் பூமியின் கிரகமாலிகையில் பூமியின் தத்காலஸ்திதி நான்காவது. இதற்கு முன்னிருக்கும் 3 ஸ்திதிகளையும் பின் வரப்போகிற 3 ஸ்திதிகளையும் நாம் அறியமாட்டோம். ஸ்திதிகள் எல்லாம் பிரஞ்ஞா பேதங்களே. இந்த ஸ்திதிகளை அறியும் பொருட்டுத் தேவையான இந்திரியங்கள் பக்குவமாகாதவரையில் அவைகள் தெரியமாட்டா. ஸ்வப்னப்பிரபஞ்சத்தை விஷயமாக்குவதற்கு நம்முடைய ஜாக்கிராவஸ்தையிலுள்ள இந்திரியங்கள் உபயோகப்படாமல் வேறு சூட்சும இந்திரியங்களால் ஸ்வப்னப் பிரபஞ்சத்தை அறியவேண்டியதா யிருப்பதுபோல, பூமியின் மற்ற அவஸ்தைகளையும் அவைகளிலுள்ள ஜீவ நிலைமைகளையும் அறிய வேறு சாதனங்கள் தாம் வேண்டியவை. இவைகளைப் பக்குவப்படுத்தினவர்களே இந்த விவரங்களை அறிவார்கள்.

33. இவ்வேழு ஸ்திதிகளில் முதல் ஸ்திதி யுண்டாகி ஸ்வல்பகாலத்துக்குப்பிறகு இரண்டாவது ஸ்திதியுண்டாகிறது. இப்படியே 7 ஸ்திதிகள் உண்டாகின்றன. இவைகளில் சைதன்னியம் வரிசையாய் ஒருதரம் சுற்றிவருவதற்கு ஒரு சுற்று என்று பெயர். இவ்விதமாக 7 தரம் சுற்றினபிறகு இதரகிரகமாலிகைகளுக்குச் சைதன்னியம் போகிறது. அப்போது கிரகத்துக்கே பிரளயம் நேரிடுகிறது. முதல் 3 சுற்றுகளில் இந்தபூமி உண்டாகி ரூபத்தை அடைகிறது. நான்காவது சுற்றில் இது கட்டியாகி ஸ்திரப்படுகிறது. பாக்கியான மூன்று சுற்றுகளில் மறுபடியும் முன்போலவே சூட்சுமரூபத்தை அடைகிறது. மகாசைதன்னியம் நம்முடைய பூமியில் முதலில் 3 வித அவ்வியக்தமான பௌதிகரூபங்களிலும், பிறகு பாஷாணங்களிலும், பிற்கு கந்தமூலங்களிலும் பிறகு மிருகங்களிலும், கடைசியில் மனிதர்களிலும் பிரவேசித்து விளங்குகிறது. இதுவே ஜீவசிருஷ்டிக்கிரமம். விஷ்ணுபுராணத்தில் பாஷாணசிருஷ்டி ஸ்தாவரசிருஷ்டியென்றும் கந்தமூலசிருஷ்டி முக்கியசிருஷ்டியென்றும், மிருகசிருஷ்டி திரியக்சிருஷ்டியென்றும், மானிடசிருஷ்டிக்கு முன்னிருக்கும் மானிடரூபசிருஷ்டி ஊர்த்வசுரோதஸ்சிருஷ்டி யென்றும், மானிடசிருஷ்டி அர்வக்சுரோதஸ் சிருஷ்டி யென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. வாஸ்தவ்வியத்தில் பரப்பிரம்மமாகிய சுத்தசைதன்னியத்தைத்தவிர வேறு யாதொன்றும் சத்தியமாயில்லை. இந்த சின் மாத்திரமே சிருஷ்டிக

தையும் அறிவார்கள். பிரஞ்ஞை வெவ்வேறுவிதமாய் இருக்குமென்பதற்கு உதாரணம்:—பசிதாகங்களை உணர்ந்து அடி, காயம், முதலியவைகளை உணரும்போது ஸ்தூலசரீரமாகிற ஸ்தூலதத்துவத்தில் மனிதனுடைய பிரஞ்ஞை விளங்குகிறது. யுத்தகளத்தில் அவனிருக்கும்போது சரீரத்தைமறந்து தன் பிரஞ்ஞையை மனோவிகாரபூமிகையில் அவன் நிறுத்துகிறான். ஆகையால் காயத்தால் ஸ்தூலசரீரத்துக்குண்டாகும் வருத்தத்தை அவன் அறிகிறதில்லை. யுத்தம் முடிந்தபின் அவனுடைய பிரஞ்ஞை ஸ்தூலசரீரத்துக்குத்திரும்பி வந்து வலியை அறிகிறது. ஒருவன் தத்துவவிசாரம் ஏகாக்கிரசித்தத்துடன் செய்து கொண்டிருக்கையில் பசி தாகம் முதலியவைகளையும், விருப்பு வெருப்பு முதலிய மனோவிகாரங்களையும் பூர்ணமாக மறந்து விடுகிறான். அவன் மனது அக்காலத்தில் ஆலோசனையாகிற பூமிகையில் பற்றுதலை அடைந்து விளங்குகிறது. இவ்விதமாக மனிதன் வெவ்வேறு ஸ்திதியில் இருந்துகொண்டு மற்றவைகளை மறந்து விடக்கூடும். காமம், குரோதம், வித்தியாப்பியாசம், தத்துவவிசாரம் முதலியவைகள் பலமாயிருக்கும்போது, அவைகளில் தத்பரனான ஒரேமனிதன் வெவ்வேறாகக்காணப்படுகிறான். நம்முடைய பிரஞ்ஞையிலுண்டாகும் ஒவ்வொரு விதகியாசமும் நம்மை வெவ்வேறாகக்காண்பிப்பதால் ஒவ்வொரு பேதத்துக்கும் தனித்தனியே பெயர் கொடுக்கும்படி நேரிடுகிறது. மனிதனுடைய தத்துவங்களை விசாரிப்பதினால் அவன் இப்படிப்பட்டவன், அவனுடைய சக்திகள், அவைகளால் சாத்தியமானவை, இவைகளெல்லாம் நன்றாய் விளங்கும். அவனைப்பிரித்தறியாவிட்டால் இவைகள் நன்றாய் விளங்கா. மனிதனுடைய 7 தத்துவங்கள் அல்லது அம்சங்களாவன:— (1) ஸ்தூலசரீரம். (2) லிங்கசரீரம். (3) பிராணன். (4) காமம். (5) மனது. (6) புத்தி. (7) ஆத்மா. தாரகராஜயோகத்தின்படி இவ்வேழு அம்சங்களை (1) ஸ்தூல உபாதி. (2) சூட்சுமஉபாதி. (3) காரணஉபாதி. (4) ஆத்மா என 4 விதமாய்ப்பிரிக்கலாம். இவைகளையே 5 கோசங்களாகவும் பிரிக்கலாம். அடியில்கண்ட பதகம் இந்த பல விபாகங்களை விளக்குவிக்கும்.

| குப்தவித்தையின்படி தத்துவங்கள். | வேதாந்தத்தின்படி கோசங்கள். | தாரகராஜயோகத்தின்படி உபாதிகள். |
|---|---|---|
| 1. ஸ்தூலசரீரம். | அன்னமயகோசம். | ஸ்தூலஉபாதி. |
| 2. லிங்கசரீரம். 3. பிராணன். | பிராணமயகோசம். | |
| 4. காமம். 5. மனது. { அசுத்தம் சுத்தம் } | மனோமயகோசம். விஞ்ஞானமயகோசம். | சூட்சுமஉபாதி. |
| 6. புத்தி. | ஆனந்தமயகோசம். | காரணஉபாதி. |
| 7. ஆத்மா. | ஆத்மா. | ஆத்மா. |

மேல்கண்ட 7 அம்சங்களில் முதல் நான்கு நசித்துப்போவதாலும் பாக்கி மூன்றும் நாசமடையாமலிருப்பதாலும் இவைகள் க்ஷர அக்ஷர வென இரண்டு வகுப்புகளாகப் பிரிக்கப்படுகின்றன. ஒருமாலையின் பல மணிகளில் நுழையும் நூல் ஒன்றாகவிருப்பதுபோல அநேகஜன்மங்களில் சம்பந்தப்படுவது ஆத்மா புத்தி மனதே. இதுவே க்ஷேத்திரஞ்ஞன் பாரமார்த்திகஜீவன் கூடஸ்தன். மற்ற நான்கும் ஸ்தூலசரீரத்தின் மரணமுதல் காளாவிர்த்தியில் நசித்துப்போய் வேறு சரீரங்களின் உற்பத்திக்கு உபயோகப்படுகின்றன. இந்த 7 தத்துவங்களின் விஷயம் அடியில் விவரிக்கப்பட்டிருக்கிறது.

## 1. வது அம்சம் ஸ்தூலசரீரம்.

44. பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகிற மனிதனுடைய ஸ்தூலசரீரம் முதலாவது அம்சமாகச் சொல்லப்படுகிறது. இது வேதாந்தத்தின் அன்னமயகோசம். ஞானேந்திரியகோளகங்கள், கர்மேந்திரியகருவிகள், மூளை, நரம்பு, எலும்பு முதலியவைகளுடன் கூடிய ஸ்தூலசரீரம் அநேகஸ்தூலஅணுக்களால் உண்டாயிருக்கிறது. மலை, செடி, மிருகம், மனிதன் இவர்களுடைய ஸ்தூலரூபத்திலுள்ள அணுக்கள் ஒரேவிதமாயிருப்பதுடன் ஜீவரூபமாயுமிருக்கின்றன. எல்லாம் பிரம்மமயமாயிருக்கிற பிர

ம்மாண்டத்தில் நிர்ஜீவமான அணு யாதொன்றுமில்லை. இனி மேற்சொல்லப்போகிற 3-வது அம்சமான பிராணனுக்கிறமேஸ்திரியின் உத்தரவின்படி கொத்தர்களாகிற அணுக்கள் சரீரமாகிற வீட்டைக் கட்டுகின்றன. இதற்கு வேண்டிய செங்கல் முதலியசாமான்களும் ஜீவரூபஅணுக்களே.,

45. ஜடசரீரத்தின் இயல்பான பிரஞ்ஞை இந்த அணுக்களுடையது. இரத்தத்தினின்றும் தங்களுக்கு வேண்டியதை எடுத்துக்கொண்டு தேவையில்லாததை தள்ளிவிடுதல் இவ்வணுக்களின் அறிவைக் காண்பிகிக்கிறது. இந்த அறிவு நம்முடைய அறிவன்று. ஒரு காயத்தின் வலியை நம்முடைய மூளை அறிகிறது. ஆனால் அணுக்கள் நம்முடைய அறிவன்றியிலேயே சதையை வளரச்செய்வதில் தங்கள் பிரஞ்ஞையைக் காண்பிக்கின்றன.

46. ஸ்தூலசரீரத்தின் மரணமும் பின் ஸ்திதியும் 87-வது பிரிவில் விவரிக்கப்படும்.

## 2- லிங்கசரீரம்.

47. இரண்டாவது அம்சம் லிங்கசரீரம். வேதாந்தத்தின் இரண்டாவது கோசமாகிய பிராணமயகோசம் லிங்கசரீரத்தையும் 3-வது அம்சமாகிய பிராணனையும் அடக்கிக்கொண்டிருக்கிறது. சூட்சுமசரீரமென்பதில் ஒரு அம்சத்துக்குமேல் சேர்ந்திருப்பதால இரண்டாவதைக்குறிப்பிட லிங்கசரீரமென்னும் பதமே உசிதமாகும்.

48. நம்முடைய 5 இந்திரியங்களுக்குக் கோசரமாயிருக்கும் பொருளைக்காட்டிலும் சூட்சுமமாயிருக்கிற பொருளால் இந்த லிங்கசரீரம் உண்டாயிருக்கிறது. இதை லிங்கப்பொருளென்று சொல்லலாம். இது ஸ்தூலபூமிகையை அடுத்த லிங்கபூமிக்கு உரியது. இது கட்டி ரூபமாயும் ஜலரூபமாயும் வாயுரூபமாய்மிருக்கிற பொருளைவிட சூட்சுமமாம். இந்த லிங்கபூமிகையில்தான் அதி சூட்சுமமான பதார்த்தங்கள் சப்தங்கள் விளங்குகின்றன.

49. இந்த லிங்கசரீரம் எந்த ஸ்தூலசரீத்தைச் சேர்ந்திருக்கிறதோ அதின் சரியான பிரதியாம். இதில் நின்றும் அது பிரிபடக்கூடும். ஆனால் ஸ்தூலத்தை விட்டு அதிதூரம் அது போகமாட்டாது. அப்படி பிரிபட்டகாலத்தில் ஒரு வெண்மையான தந்துவால் ஸ்தூலஞ்சேர்ந்திருப்பதாக

சூட்சுமதிருஷ்டியுள்ளவர்களுக்குத் தெரியவருகிறது. ஸ்தூலத்துக்கும் லிங்கத்துக்கும் சம்பந்தம் வெகு நெருக்கமாயிருப்பதால் லிங்கத்தில் உண்டாகும் காயம முதலியவை ஸ்தூலத்தில் காணப்படுகின்றன.

50. ஸ்தூலத்தின் உயிர்வியாபாரங்கள் லிங்கத்தைப்பொருத்திருக்கின்றன. லிங்கம் பிராணனுக்கு உபாதி அதாவது வாஹனமாயிருக்கிறது லிங்கம் பிரிபடுவதற்குத்தகுந்தபடி ஸ்தூலத்தில் ஜீவவியாபாரங் குறைகிறது. ஆகையால் உயிர்வியாபாரம் அதாவது சரீரசேஷ்டைகளுக்கு முக்கியஸ்தானம் லிங்கசரீரமே. இதனால் பிராணமயகோசத்தில் லிங்கசரீரத்தையும் பிராணனையும் சேர்த்த காரணம் தெளிவாகும்.

51. யூரோப்பு அமெரிகா தேசங்களில் இந்த லிங்கதேகத்தின் வியாபாரம் இப்போது நன்றாய்த் தெரியவருகிறது. மனிதனுடைய ஆகாரம்போல் ஒரு ஆகாரம் தோன்றுங்காலத்தில் இந்த லிங்கசரீரம்தான் பிரத்தியக்ஷமாகிறது. யாதொரு சம்பந்தமன்றியில் ஒரிடத்திலுள்ள பதார்த்தம் மற்றொரு இடத்தில் வைக்கப் படுதல் இதின் செய்கையே. இந்த ஸ்தூலபூமிகையில் இந்த லிங்கசரீரத்துக்கு அறிவு இல்லாதபடியால் இதின் செய்கைகள் யாதொரு பிரயோசனத்தையும் உத்தேசித்திரா. இந்த லிங்கத்தை இஷ்டப்படி உபயோகப்படுத்த சாதாரண ஜனங்களுக்கு முடியாது.

52. இந்திரியங்களின் ஸ்தூல கோளகங்களில் ஸ்தூல சரீரத்திலும் சூட்சும கோளகங்கள் லிங்கசரீரத்திலுமிருக்கின்றன. இந்திரியங்கள் சூட்சுமகோளகங்கள் மூலமாக வியவஹரிக்கின்றன. லிங்கசரீரம் ஸ்தூல பதார்த்தத்தையும் பிரஞ்ஞையையும் இணைக்கும் பாலம்போலிருக்கிறது. வெளியிலுள்ள பொருள் ஸ்தூல சரீரத்துடன் சம்பந்தப்பட்டு அவ்விடத்திலுள்ள அணுக்களில் அசைவை உண்டாக்குகிறது. இந்த அசைவு லிங்கசரீரத்திலுள்ள இந்திரியங்களின் சூட்சும அணுககளில் அசைவை உண்டாக்குகிறது. இவ்வசைவின் அலைகள் மனதின் அதிசூட்சுமமான அணுக்களில் மோதி அவைகளில் சலனமுண்டாக்குகின்றன. மறுபடியும் இந்த கடைசியான அசைவு ஸ்தூலமூளையின் அணுக்களில் மோதி நம்முடைய மூளைபிரஞ்ஞை உண்டாகிறது. பிறகுதான் நாம் வெளிப்பதார்த்தத்தை அறிந்ததாக நினைக்கிறோம். தூக்கத்தில் ஸ்தூலபதார்த்தத்தினின்றும் அசைவு புறப்படாமல் லிங்கபூமிகையில் உண்டாகிமறுபடியு

61 இது வரையில் மனிதனுடைய நசுவரமான 4 அம்சங்களை அடக்கிக்கொண்டிருக்கிற ரூபம் அறியப்பட்டது. இந்த அம்சங்கள் மிருகத்துக்கு மிருக்கின்றன. இந்த அம்சங்களுடன் மட்டும் கூடியிருப்பதெல்லாம் மிருகஸ்வரூபம். ஒவ்வொரு அம்சமும் வெகுகாலமாக விருத்தி அடைந்துவந்து கடைசியில் மிருகரூபம் ஜனித்தது. ஸ்வாபாவிகமான சைதன்னியபலத்தால் இவ்வளவு விருத்தியாயிருந்தபோதிலும் அந்தச்சைதன்னியத்தின் சாக்ஷாத்தான சம்பந்தமன்றியில் இந்த மிருகரூபம் திவ்வியரூபமாக ஏது வில்லாமலிருந்தது. விதை ரூபமாக இருந்த மற்ற மூன்று அம்சங்கள் வெளியாகும்பொருட்டு இந்த மிருகரூபம் தேவாம்சத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தது. ஜீவனுடைய ஸ்தூலசரீரத்தைப் பூமியும் லிங்கசரீரத்தைச் சில பிதிர்க்களும் பிராணனைச் சூரியனும் கொடுத்தார்கள். மனது கூடுவதற்குமுன் இந்நான்குஅம்சங்களின் சேர்க்கையாலுண்டான சரீரத்தில் உணர்ச்சி இருந்தாலும் ஸ்வயமாய் யாதொருவியாபாரத்தையுஞ்செய்ய ஏது வில்லாமலிருந்தது. ஆகையால் மனதுஎ்கிற மனிதனுடைய வரவை இவைகள் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

## 5- மனது

62. இந்த 5-ம் அம்சமான மனது வெகு முக்கியமானதால் அதைச் செவ்வையாய்க் கவனிக்கத்தக்கது. இந்த மனது இரண்டு தன்மையுள்ளது. அல்ப புத்தியுள்ளவன் பெரும்புத்தியுள்ளவனென்று உலகத்தில் விளங்குவதால் உயர்ந்தமனது தாழ்ந்தமனது அல்லது அசுத்தமனது சுத்தமனதுஎன இது இரண்டு விதமாகிறது. இந்த அசுத்த மனதுடன் காமம் சேர்ந்து வேதாந்தத்தில் மனோமயகோசமாகிறது. சுத்தமனது வேதாந்தத்தின் விஞ்ஞானமய கோசமாம்.

63. மனது என்னும் பதம் "மன்" என்னும் சமுஸ்கிருத பகுதியினின்றும் வருகிறது. "மன்" என்றால் நினைத்தல், பாவித்தல். மன்னையுடையவனானதால் மனிதன் என்கிற பெயர் விளங்குகிறது. இந்த மனதையுடையவனை இப்பிரசங்கத்தில் மனதாகவே வியவஹரிப்போம்.

64. பரப்பிர்ம்மத்தின் அம்சம்போல அம்சத்தை உடைத்தானதாயும், ஆனால் அதனுடன் ஐக்கியமாகும்படியான சுத்தாம்ச மில்லாததாயும், இந்த ஐக்கியத்தை அடையும்பொருட்டுதான் தத்ஸ்வபாவத்தைச் சுத்

தப்படுத்துவதாயும், இதற்காக ஒவ்வொரு அனுபவத்தையும் சம்பாதிக்கும்பொருட்டு ஒவ்வொரு பூமிகையிலும் அனேக ஜன்மங்களை எடுக்கிறதாயும் ஒரு தெய்வம் இருக்குமேயாயின் அதுவே மனதாகும். மானசபுத்திரன் என்று இதற்குப் பெயர். க்ஷேத்திரஞ்ஞன் பாரமார்த்திக ஜீவன், கூடஸ்தன் என இதற்கு வேறு பெயர்களாம். இது பிரகிருதி ரூபமன்று. புருஷரூபம். அநேக ஜன்மங்களில் அநேக ரூபங்களைத் தரித்து தான்மட்டும் ஒன்றாகவே இருப்பது இந்த மனதே.

65. முதல் 4 அம்சங்களால் கட்டப்பட்ட சரீரமாகிற வீடு தயாராயிருக்கும்போது மானசபுத்திரர்களாகிற அக்கினிஷ்வத் பிதுருதேவதைகள் வீடுகள் காலியாயிருப்பதைக்கண்டு தங்களுடைய அபிவிர்த்தியின் பொருட்டு அவைகளில் பிரவேசித்தார்கள். இதுதான் ஜீவனுக்கு சரீரத்தில் முதல் ஜன்மம். ஆத்மாவைப்போல் அதிசுத்தமாயில்லாதபடியால் மறுபடியும் ஆத்மாவுடன் சேரும்பொருட்டு அநேக ஜன்மங்களை இந்த மானசபுத்திரர்கள் எடுக்கிறார்கள். இந்த மானஸ புத்திரனே 5-வது அம்சம். நான் என்னும் பதம் இதற்கே உபயோகப்படுகிறது.

66. தனக்காகஏற்பட்டிருக்கிற வீட்டைக்கண்டவுடன் தன்னுடைய அதிசூட்சுமமான அம்சம் ஸ்தூல அணுக்களுடன் சேராதெனக்கண்டு மனது தன்னுடைய ஒரு பாகத்தைப் பிரித்து வெளியிடுகிறது. இதுசூட்சும அணுக்களால் தன்னை மூடிக்கொண்டு கர்ப்பத்திலுள்ள சிசுவின் லிங்கசரீரத்துடன் கலந்து அதினுடைய மனதாகப் பரிணமிக்கிறது. இப்படிப் பிரிக்கப்பட்டபாகம் மனதின் பிரதிபிம்பம் அல்லது சாயை அல்லது கிரணம் அல்லது அசுத்தாம்சம் அல்லது சிதாபாசன் எனச் சொல்லப்படும். இதுவே வியாவஹாரிகஜீவாத்மா. மூலமனது சுத்தமானது. ஒவ்வொரு ஜன்மத்திலும் மனதுஇரண்டு பாகங்களாகப் பிரிந்து சுத்தமானது ஆத்ம விஷயத்திலும் அசுத்த மானது பிராபஞ்சிகவிஷயத்திலும் செல்லுகிறது. அசுத்தமனது காமத்துடன் கலந்து காமமனதாகிறது. மரணத்துக்குபின் இரண்டுபாகங்களும்சேர்ந்து மனது மறுபடியும் ஒன்றாய்விடுகிறது.

## 6- அசுத்தமனது

67. வியாவஹாரிகஜீவன் மேற்சொல்லிய முதல் 4 அம்சங்களில் மூழ்கிஒருபக்கத்தில் காமத்தையும் மற்றொரு பக்கத்தில் சுத்தமனதையு

பிடித்துக் கொண்டிருக்கிறான். காமத்துக்குப் பூராவாகச் சுவாதீனப்பட்டுப்போவதும் அல்லது தன்னுடைய ஸ்தானத்துக்குச் சாத்விகானுபவங்களுடன் போய்ச்சேருவதும் ஒவ்வொரு ஜன்மத்திலும் தீர்மானிக்கவேண்டியதாக இருக்கிறது. ஜீவித்திருக்கையில் காமமும் அசுத்தமனதும் சேர்ந்திருக்கின்றன. காமம் உணர்ச்சிகளையும் மனோபாகம் அவைகளை அறியும்சக்தியையும் கொடுக்கின்றன. இதினால்தான் நமக்குச் சாதாரணமானமூளைப்பிரஞ்ஞை ஜனிக்கிறது. அந்தக்கரணத்தின் விர்த்திபாகம் விஷயத்தின் ஆவரணத்தைநீக்கி சிதாபாசபாகம் விஷயத்தை பிரகாசிப்பிக்கிறதாக விசாரசாகரத்தில் சொல்லியது இந்தகாம-மனதின் வியாபாரமே. அக்கிரந்தத்தைப்பார்க்கவும்.

68. தீபத்தினுடைய பிரகாசம் வர்த்தியையும் எண்ணெயையும் பொறுத்திருப்பதுபோல மனதின் பிரகாசமும் மூளையையும் காமத்தையும் பொறுத்திருக்கிறது. காமமானது வெகு பலமுள்ளதாக இருந்தால் மனதின் பிரகாசத்தைமறைத்து விடும். அப்படியே மூளை பக்குவமாகாமலிருந்தால் மனதின் பிரகாசம் ஸ்வல்பமாயிருக்கும். நல்லசங்கீதம் பாடகனுடைய சாமர்த்தியத்தையும் வாத்தியத்தையும பொறுத்திருக்கிறது. இவைகளில் ஒன்று குறைவாக இருந்தாலும் நல்ல நாதம் ஜனிககமாட்டாது. ஒரு ஜீவனுக்கும் மற்றொரு ஜீவனுக்கும் ஸ்வரூபத்தில் பேதமில்லை. ஒருவனைப் பெரியமனுஷியனாக்குவதும் ஒருவனை அல்பனாக்குவதும் மனதின் தேஜஸைப் பிர்திபிம்பிக்கும் மூளையின் ஸ்திதியும் தர்க்காலகாமாதிகளுமே.

69. ஜனங்கள் தர்க்காலத்தில் அடைந்திருக்கும் ஸ்திதியில் பெரும்பான்மையாய்ச்சுத்தமனது விளங்குகிறதில்லை. எப்போதாவது ஒருகாலத்தில் அது விளங்குவது அதிமேதாவிகளுடைய செய்கைகளால் தெரியவருகிறது. மனதின் பிரகாசம் நமக்கு தாராளமாய் எட்டாமற் செய்யும் பிரதிபந்தங்களை நிவிர்த்திக்க அந்தக்கரணசுத்தி முக்கியமான சாதகம். சரீரம் ஒவ்வொரு ஜீவனுக்கும் இருப்பிடம். அதில் நான் என்னும் அபிமானத்தை அசுத்தமனது உண்டுபண்ணுகிறது. இதினால் மற்ற ஜனங்களைக் காட்டிலும் தான் வேறு என்கிற பிராந்திஞானம் ஜீவனுக்கு ஜனிக்கிறது. பிராபஞ்சிகபதார்த்தங்களின் பொய்த்தோற்றங்களால் பிரமையை அடைந்து, தான் பிறந்த இடத்தை அசுத்தமனது மறந்துவிடுகிறது. சுகதுக்காதிகளை மிருகஸ்வபாவத்திற்கும் இந்திரியங்களுக்கும்

கொடுப்பது இதுவே. இது அன்றியில் உணர்ச்சி உணர்ச்சியாகவே இருக்கும். மூன்றுகாலங்களிலும் உணர்ச்சி சுகதுக்காதிகளை அறிவது மனதிற்கே சாத்தியம்.

## 7 அசுத்தமனதின் பிரவிர்த்தி.

70. அசுத்தமனது காமத்துடன் கலந்து பிராபஞ்சிக சுகதுக்காதிகளை அடைகிறதென்று முன் (67) பொதுவாய்ச் சொல்லப்பட்டது. மனது பிரவிர்த்திக்கும் விதத்தை இனி செவ்வையாய் விசாரிப்போம். மனதின் பிரகாசம் விளங்குதல் மூளையையும் காமத்தையும் பொருத்திருக்கிறதென்று முன் (68) சொல்லப்பட்டது. பரமாணுக்கள் சிறியதான கும்பல்களாகி இவைகளால் மூளை உண்டாகிறது. இந்த அணுக்கள் ஒன்றோடொன்று சேருமதும் ஆனால் ஜீவஸ்வபாவத்தால் கும்பல்களாக சேர்க்கப்பட்டுமிருக்கின்றன. ஆனதால் அவைகளில் அசைவு உண்டாக ஆஸ்பதமிருக்கிறது. காமமனது மூளையின் அணுக்களில் சலனத்தை உண்டாக்கி நம்முடைய மூளை பிரஞ்ஞைக்கு ஹேதுவாகிறது. காமக்குரோதாதி மனோவிகாரங்கள் எல்லாம் இந்த காமமனதின் பிரவிர்த்திகளாம். மூளையின் அணுக்கள் சுத்தமாயும் காமத்தின் முக்கிய கோளகங்களான ஈரல், மண்ணீரல் முதலிய அவயவங்களும் சுத்தமாயிருந்தால் மூளை மூலமாக வெளியாகும் காமமனதும் சுத்தமாயிருக்கும். ஆனால் அணுக்கள் பக்குவப்படாமலும், மயக்கத்தை உண்டுபண்ணும்படியான மத்தியபானாதிகள் விடவியவஹாரங்கள் இவைகளால் இரத்தம் அசுத்தப்பட்டும் போயிருந்தால் அப்போது விளங்கும் மனோவியாபாரம் அதிதுச்சமாயிருக்கும். முக்கியமாய்க் கவனிக்கவேண்டியது என்னவெனில் காமமனது தேகத்தை அடுத்திருக்கிறது என்பதும் அது மூளைமூலமாக வியவஹரிக்கிறதென்பதும் மூளையின் பக்குவத்துக்குத் தகுந்தபடி மனதின் பிரகாசம் தெரியும் என்பதுமே. இந்த ஞானம் இனிச்சொல்லப்போகிற புனர்ஜன்மவிஷயத்தைத் தெளிவாய் அறியச் சாதகமாயிருக்கும்.

71. விலங்கிலிருந்து விடுபடுவதற்குத்தகுந்தபடி ஒருவன் ஸ்வேச்சாவியவஹாரத்தை அடைவதுபோல், இந்த அசுத்தமனது காமத்தில் நின்றும் விலகவிலக இச்சரீரத்துக்கு அரசனாகி அதன் மேன்மையான அம்சத்தை வெளிப்படுத்துகிறது. சரீரத்துக்கு வேண்டியவைகளை இச்சிப்பது காமத்தின் குணம். இந்த காமத்தால் மனது பந்தத்தை அடைகிறது. இந்த பந்தத்தில் நின்றும் விடுபடுவதற்குத்தகுந்தபடி அது சுவா

னத்தை அடைகிறது. காமமாகிற அசுரனை ஜயித்துக்காலால் அவனை மிதிக்காதவரையில் மனதிற்கு மோக்ஷம் கிடைக்கமாட்டாது. அசுத்த மனது எவ்வளவுக்கு எவ்வளவு காமாணுக்களால் கௌவ்வப்படாமலும் தடைபடாமலுமிருக்கிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு அதின்மூலமாக அதிசூட்சுமமான சுத்தமனதின் பிரகாசம் சரீரத்தில் சம்பந்தப்பட்டு மூளைமூலமாகப்பிரபஞ்சத்தில் விளங்கும். அப்போதுதான் அந்த மனிதன் மற்றவர்களைவிட சிரேஷ்டனாகிறான். சுத்தமனது மேலான நிலைமையில்தான் வியவஹாரிக்கக்கூடுமானதால், மிருகரூபத்துடன் கலந்து நாசமடைவதும், அல்லது தான் பிறந்த இடத்துக்குப்போய்ச்சேருவதும் அசுத்தமனதின் ஸ்வேச்சையில் இருக்கிறது. அந்தக்கரணவிர்த்தியை ஆத்மபரமாக நோக்கும்படிச்செய்து ததாகாரமானவர்கள்தான் ஞானிகள்.

72. இந்த அசுத்த மனது அடியில்கண்ட மூன்று செய்கைகளில் ஒன்றைச்செய்யக்கூடும். (1) விடாதமுயற்சியால் தன் மூலஸ்தானத்தை அடையக்கூடும். (2) அந்த ஸ்தானத்தை அடையப்பிரயத்தனம் செய்வதும் பிரகிருதியுடன்சம்பந்தப்பட்டுப்பிராபஞ்சிக வியவஹாரங்களிலும் பிரவேசிக்கக்கூடும். இதுதான் சாமான்னிய ஜனங்களின் ஸ்திதி. (3) காமத்தினால் நன்றாய் கௌவ்வப்பட்டு காமத்துடன் ஒன்றாகி த்தன் மூலஸ்தானத்தைச்சுத்தமாய் மறந்து விட்டு அதினின்றும் நன்றாய்ப் பிரிபடக்கூடும்.

73. முதல்பக்ஷம்:— மூலஸ்தானத்தை அடைவது வெகு ஜன்மங்களுக்குப்பிறகுதான் சாத்தியம். ஒவ்வொரு ஜன்மத்திலும் கொஞ்சம் கொஞ்சமாகப்பிரகிருதி சம்பந்தத்தில் நின்றும் விடுபட்டுப்பிராபஞ்சிகப்பிரமை முற்றிலும் நீங்கினபிறகு அசுத்தமனது தன் தாயுடன் சேர்ந்து விடுகிறது. சரீரசம்பந்தமான அனுபவங்கள். யாவற்றையும் சம்பாதித்துவிட்டபடியால் மறுபடியும் சரீரத்துடன் சம்பந்தப்படவேண்டிய ஆவசியம் யாதொன்றுமில்லை. ஜீவகாருணியத்தால் பரோபகாரநிமித்தம் இப்படிப்பட்ட ஞானி இஷ்டப்படி அவதரிக்கக்கூடும்.

74. இரண்டாவது பக்ஷம்:— இச்சரீரமே யுத்தபூமி. ஆத்ம இச்சையும் பிராபஞ்சிக இச்சையும் யுத்தவீரர்கள். இந்த யுத்தத்தில் சுத்தமனதின் தேஜோபலத்தால் அசுத்தமனது காமத்தைச்சில சமயங்களில் ஜயித்தாலும், மறுபடியும் மாயாபலத்தால் காமத்துடன் கலந்துவிடுகிற

து. இப்படி அடிக்கடி ஜீவித்திருக்குங்காலத்தில் நடக்கிறது. பகவத்கீதையில் சொல்லிய குருக்ஷேத்திரமாகிற யுத்தபூமி இந்தச்சரீரமே. பஞ்சபாண்டவர்களும், துரியோதனுதிகளும் இருபக்கத்து யுத்தவீரர்கள். கிருஷ்ணபகவானே பரமாத்மா. கிருஷ்ணனுடைய தேஜோபலத்தினுல் ஜீவனுகிற அர்ச்சுனன் காமாதிகளாகிற துரியோதனுதிகளை ஜயித்துவிட்டு மோக்ஷமடைகிறுன். ஆத்மபரமாயும் அனுத்மபரமாயும் பிரவிர்த்திக்கும் புத்தியையுடையவனுக்கு மரணத்திற்குப்பின்வரும் ஸ்திதி 108-வது பிரிவுமுதல் விவரிக்கப்படும்.

75. மூன்றுவதுபக்ஷம்:— சுத்தமனதுடன் ஐக்கியமாவது வெகு அபூர்வம்போல் காமத்துடன் ஒன்றுய்விடுவதும் வெகு துர்லபம். ஆயினும் இப்பேர்ப்பட்ட ஸ்திதி சாத்தியமே. காமத்தில் அசுத்தமனது முழுகிப்போனவுடன் கொஞ்சங்கொஞ்சமாக அதின் மூலஸ்தானமாகிய சுத்தமனதின் சம்பந்தம் குறைந்து கடைசியில் சுத்தமாய்விட்டுப்போகிறது. அப்போது தேவாம்சம் சுத்தமாய் விலகி மிருகாம்சம்தான் மிச்சப்படுகிறது. மற்ற சாதாரணமிருகங்களைக்காட்டிலும்இந்த மிருகரூபம் வெகுபயங்கரமானது. ஏனெனில் சாதாரணமிருகங்களில் மனதின் தேஜஸு சுத்தமாய் வெளியாகாமலிருக்க, இந்த மிருக-மனிதரூபத்தில் மனதின் பிரதிபிம்பம் இருந்துகொண்டிருக்கிறது. இந்த பலத்தால் மிருகங்களால் செய்யப்படக்கூடாத பயங்கரமான செய்கைகள் எல்லாம் இந்த மிருக—மனிதனுல் செய்யப்படக்கூடும். அன்பு, இரக்கம், பூததயை முதலிய குணங்களின் லேசங்கூட இராத மிருகம்போல் திரிகிறஜனங்கள் இந்த பயங்கரமான ஸ்திதிக்கு வரும் பாதையில் இருப்பதாக நிச்சயித்துக்கொள்ளலாம். இப்பேர்ப்பட்டவருடைய காமமானது ஒவ்வொரு ஜன்மத்திலும் அதிக துச்சமான ஸ்திதியில் விருத்தியடைந்து கடைசியில் ஓய்வடைந்து நசித்துப்போகும். இதின் அணுக்கள் வேறு ஜீவனுக்கு உபயோகப்பட்டுப்போகின்றன. மானசபுத்திரன் ஆதியில் சுவீகரித்த சரீரத்தால் யாதொரு பிரயோசனமுள்ள அனுபவமும் கிடைக்கவில்லை. ஜன்மம் வியர்த்தமாய்விட்டது. மரணத்துக்குப்பின் இதின் ஸ்திதி (105—6) வது பிரிவில் விவரிக்கப்படும்.

76. சுத்தமனதின் பிரவிர்த்தியை விவரிப்பதற்குமுன் 4-5-வது அம்சங்களின் ரூபங்களைப்பார்ப்போம். (1) சூட்சும அணுக்களால் செய்யப்பட்ட ஒருவித சரீரத்துடன் ஜீவித்திருக்கையிலேயே ஸ்தூலசரீரத்தை விட்டுச்சித்பிரகாசத்துடன் ஜீவன் மனோவேகத்துடன் வெகுதூரம்

போய் அவ்விடத்திய பதார்த்தங்களை அறிந்து அந்த அறிவைஸ்தூலமூளைக்குக்கொடுத்து அதின் மூலமாக இதரஜனங்களுக்கும் அதைத்தெரிவிக்கக்கூடும். இப்படி அறியப்பட்ட பதார்த்தத்தின் ஸ்மரணை சாதாரணமாய்ஜீவனுக்குத்தங்கமாட்டாது. ஏகதேசத்தில் இந்தஞாபகம் ஸ்தூலமூளையில் இருக்கக்கூடும். இப்படிச் சஞ்சரிக்கும் சரீரத்துக்கு காமமனோரூபம் என்று பெயரிடலாம். இது இரண்டாவது அம்சமான லிங்கசரீரமன்று என்பதை நன்றாய் அறியவேண்டியது. லிங்கசரீரம் மரணத்துக்கு முன் ஸ்தூலத்தை விட்டுப் பிரியமாட்டாது. அதில் அறிவுமில்லை. இந்தக்காம-மனோ-ரூபம் ஸ்தூலத்தை விட்டு வெகுதூரம் போகக்கூடும். குழந்தையிடத்தில் அதிபிரீதி வைத்த தாய் குழந்தையை விட்டு பிரிந்து வெகுதூரத்தில் மரணமடையும்போது குழந்தைக்குப் பிரத்தியக்ஷமாகி சங்கதிகளைச்சொல்லுவதாய் வாஸ்தவத்தில் நேரிட்டிருக்கிறது. குழந்தைக்குத் தோன்றின ரூபம் தாயின் ஸ்தூலசரீரமன்று தாயின் காமமனது ரூபமே. அநேக ரோகங்களிலும் தூக்கத்திலும் இந்த ரூபம் ஸ்தூலத்தை விட்டுப்பிரிகிறது. மரணத்திற்குப் பிறகு தோன்றும் காமரூபம் இந்தக்காமமனது ரூபமன்று என்பதைக்கவனிக்கவேண்டியது.

77. (2)மாயாவிரூபம் என்பது வேறு ஒரு சூட்சுமசரீரம இது மஹான்களுடைய சுவேச்சையால் உண்டாகிறது. இச்சரீரத்துக்கு அவர்களுக்குத் தோன்றும் ரூபத்தை அவர்கள் கொடுக்கிறார்கள். இச்சரீரத்தில் தங்களுடைய பூர்ணப் பிரஞ்ஞையையும் மேலானதத்துவங்களையும் செலுத்தி அக்காலத்தில் அச்சரீரமே ஸ்தூலம்போல விளங்கும்படிச்செய்கிறார்கள். ஸ்தூலத்தின் பாரமன்றியில் வேண்டிய இடத்துக்குப் போகவும் இஷ்டப்படிப்பிறருக்குத் தெரியும்படி அல்லது தெரியாமலிருக்கும்படிச் செய்யவும் அவர்களுக்குச் சகஜம். தங்களுடைய ஸ்தூலசரீரம் இருக்கும் இடம்தவிர வேறுஇடங்களில் செய்யவேண்டிய வேலையை இந்த மாயாவிரூபசரீரத்தினால் தான் அவர்கள் செய்கிறார்கள். எந்தக் காரியத்துக்காக அவர்கள் அதை உண்டாக்கினார்களோ அந்தக் காரியம் முடியும்வரையில்மட்டும் அந்தச் சரீரம் இருப்பதால் அது மாயாவிரூபமென்றுசொல்லப்படுகிறது. சுத்தமனதினால் உண்டாவதால் இதற்கு பாவனாசரீரமென்றும் பெயர்.

## 8-சுத்தமனது

78. இப்போதும்மனிதன் அடைந்திருக்கும் நிலைமையில் நாசமற்ற சிரஞ்சீவியான மனது இந்த ஸ்தூல பூமிகையில் விளங்கமாட்டாதென்ப

தை இதுவரையில் சொல்லியவைகளினின்றும் ஊகிக்கலாம். ஆயினும் அசுத்தமனதில் அதின் தேஜஸால் விளங்கும் அதின் சிலசக்திகளை நாம் அறியலாம். ஸ்வேச்சாசக்தி அசுத்தமனது மூலமாக விளங்குவதாக முன் (71) சொல்லப்பட்டது. மஹத்தத்துவத்தில் நின்றும் உண்டான மனதில்தான் சுவேச்சாசக்தி இருக்கிறது. நம்முடைய காமக்குரோதாதிகளாகிற கீழ்பாகத்தை நம்முடைய மனதாகிற மேல்பாகத்தால் நாம் அடக்கி ஆளலாம் என்றும் ஞானம் நமக்கு இருக்கிறதல்லவா? இந்த ஞானம் மனதின் சக்தியன்றோ. நாம் காமமன்று, மனதே என்றுமட்டும் ஒருதரம் நிச்சந்தேகமாய் ஒருவன் அறிந்தானேயாகில் காமம் அவனுடைய லகாமுக்குள் அடங்கியிருப்பதில் தடையென்ன.

79. கிரியாசக்தியால் இச்சித்த பாவங்களுக்கு உருவம் கொடுத்தல் சுத்தமனதின் சக்தியே. மஹத்தத்துவத்தின் அம்சமான மனது நித்தியமுக்தமாய்ப்பூதபவிஷியத்வர்த்தமானங்களின் ஞானத்தை அடக்கிக்கொண்டிருக்கிறது. அசுத்தமனது சுத்தமனதுடன் சேர்ந்தவுடன் பூர்ண ஞானசக்தியை அடையவேண்டியதில் சந்தேகமில்லை.

80. சுத்தாசுத்தமனும்சங்களின் வித்தியாசம் இப்போது செவ்வையாய்த்தெரியவரும். யுக்திசாதகமன்றியில் தத்துவத்தை அறியும் சக்தி சுத்தமனதினது. இது சாக்ஷாத்காரஞானம், சுயஅறிவு. பலவிஷயங்களைப்பார்த்து யுக்தியால் பகுத்தறிவது அசுத்தமனதின் காரியம். இது மூளையின் ஸ்திதியைப்பொருத்தது. தெரிந்தவைகளினின்றும் தெரியாதவைகளையும், தெரியாதவைகளினின்றும் தெரிந்தவைகளையும் ஊகித்தல் அசுத்தமனதின் சக்தி. சுயவறிவானது அந்தர்முகவிர்த்தியாலுண்டாகும் சாக்ஷாத்காரஞானம். காமவிகாரபலத்தினுல் இந்த சாக்ஷாத்காரஞானம் வெளிப்படாமல் மூடப்பட்டுப்போகிறது. காமத்தால் சஞ்சலிக்கிற அந்தக்கரணத்தில் மனதின் தேஜஸ் பார்க்கப்படமாட்டாது. அதின் வார்த்தைகள் எச்சரிக்கைகள் இவைகள் கேழ்க்கப்படமாட்டா. மனச்சாட்சி என்பது இருக்கிறதாகவே தெரியமாட்டாது. சஞ்சலிக்கும ஜலத்தில் சூரியப்பிரதிபிம்பம் தெரியாததுபோலும், அலைகளின் இரைச்சலில் வேறுசப்தம் கேழ்க்கப்படாததுபோலும் காமஅலைகள் ஓய்வடைந்து அந்தக்கரணம் ஸ்திரப்பட்டால்தான் தேவாம்சமாகிய ஆத்மஸ்வரூபம் விளங்கும்.

வஸ்தையே பிரம்மாண்டத்தின் மேலான 3 பூமிகைகள் அரூபமாயும் பிரளய காலத்திலும் இருக்கிறதுபோல மனிதனுடைய ஆத்மா புத்தி மனது இவைகளும் அரூபமாயும் மற்ற 4 தத்துவங்கள் நசித்துப்போன பிறகும் இருக்கின்றன. பரமாத்மாவும் பிரத்தியகாத்மாவும் இருப்பதுபோல மனதும், மஹத்தத்துவமும் சம்பந்தப்பட்டிருககின்றன. க்ஷரமாகிய காமம் பிராணன் லிங்கசரீரம் ஸ்துலசரீரம் இவைகள் பிர்ம்மாண்டத்தின் கீழான 4 பூமிகைகளுடன் சம்பந்தப்பட்டிருக்கின்றன. காமபூமிகையைப்பற்றி அதிகவிவரம் தெரியவில்லை. அரூபம் ரூபமாவதற்கு இதுவே முக்கியசாதகம். பிராணபூமிகையே பிர்ம்மாண்டத்தில் 4 பூமிகைளுக்கும் அதிஷ்டானம். சமுஷ்டி ஜீவாம்சமே மனிதனிடத்தில் பிராணனுக விளங்குகிறது. மனிதனுடைய லிங்கசரீரம் பிர்ம்மாண்டத்தின் லிங்கபூமிகையுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது. அப்படியே ஸ்தூல சரீரமும் ஸ்தூல பிர்ம்மாண்டமும் சம்பந்தபட்டிருக்கின்றன. இந்தச்சம்பந்தத்தால் அறியவேண்டியது என்னவெனில் ஒன்றுசமுஷ்டிஎன்பதும் மற்றொன்று வியஷ்டிஎன்பதும் ஆகையால். ஒன்றின்தர்மங்கள் எல்லாம் மற்றொன்றிலும் இருக்கின்றனவென்பதுமே.

மூன்றாவது அத்தியாயம்

முற்றிற்று

---

# பிர்ம்மஞானச்சுருக்கம்

## நான்காவது அத்தியாயம்.

### மரணம் பிந்தினஸ்திதி.

85. பிர்ம்மாண்டத்தின் பிரவிர்த்தி நிவிர்த்திகாலங்களாகிய மந்வந்திரமும் பிரளயமும் மனிதனுடைய பிரவிர்த்திகாலமும் இதுவரையில் சொல்லப்பட்டன. இனி மனிதனுடைய மரணமும் பிந்தினஸ்திதியும் விவரிக்கப்படும். இது பிர்ம்மாண்டத்தின் பிரளயத்துக்கு ஒத்திருக்கிறது.

86. மனிதனுடைய 7 தத்துவங்களில் முதல் மூன்று அதாவது ஆத்மா, புத்தி, மனது இவைகள் நாசரகிதமாயும், மற்றநான்கும் அதாவது காமம், பிராணன், லிங்கசரீரம், ஸ்தூலசரீரம் இவைகள் நாசசகிதமாயுமிருக்கின்றன. முதல்பாகம் அக்ஷரம், இரண்டாவது க்ஷரம். இந்த இரண்டு பாகங்களையும் சேர்ப்பது மனது. இது ஒவ்வொரு ஜன்மத்திலும் சுத்தம அசுத்தமென இரண்டாகப்பிரிந்து அசுத்தபாகம் சரீரத்துடன் சம்பந்தப்பட்டு காம-மனதாக விளங்குகிறது. இந்தககாம-மனது ஒருபக்கத்தில் சுத்தமனதுடனும் ஒருபக்கத்தில் காமத்துடனும் சம்பந்தப்பட்டு மனிதனுடைய பந்தமோக்ஷங்களுக்குக்காரணமாவதால் முக்கியமாயிருப்பதுபோல் மரணத்துக்குப்பிறகும் இந்த காம-மனதை முக்கியமாய்க்கவனிக்கவேண்டியது.

### ஸ்தூலத்தின்கதி.

87. தாயாருடைய கர்ப்பத்தில் பிறக்கப்போகிற சிசுவின் சூட்சுமரூபம் ஸ்தூலாணுக்களால் ஸ்தூலரூபத்தை அடைகிறது. இதுமுதல் பிரதிக்ஷணமும் இந்த ஸ்தூல அணுக்கள் சரீத்துக்கு வந்துகொண்டும் போய்க்கொண்டுமிருக்கின்றன. வெளியேபோன அணுக்கள் கந்தமூல, மிருக, மனுஷியசரீரங்களை உண்டுபண்ண உபயோகப்படுகின்றன. இந்த அணுக்களெல்லாம் ஜீவரூபங்கள். இவைகள் வெவ்வேறாயினும் சிறிய கூட்டங்களாகிச்சரீத்தை உண்டுபண்ணி உள்ளும் புறமும் வந்துபோய்க்கொண்டு மனிதனையும் அவனைச்சுற்றிலுமுள்ள பிரபஞ்சத்தையும் சேர்க்கும் பாலம்போலிருக்கின்றன. பிராணனுடைய ஆஞ்ஞையின்படி இவைகள் ஒரு சரீரமாகப்பரிணமிக்கின்றன. மேஸ்திரியான பிராணன் பின்வாங்கிச்சரீரத்தை விட்டுப்பிரியும்போது கொத்தர்களான அணுக்களாகிற ஜீவர்கள் ஒருவனுடைய அதிகாரத்துக்கும் உட்படாமல் வில

பிப்போய்விட்டபடியால் தங்கள் தங்கள் இஷ்டப்படி பிரவிர்த்திக்கத் தொடங்குகின்றன. இவ்வித அதிகப்பிரவிர்த்தியால் அணுக்களின் சேர்க்கையால் உண்டான சரீரமாகிற கட்டடம் இவைகளின் பிரிவால் சிதறிப் போகிறது. இதுவே ஸ்தூலசரீரத்தின் மரணம். பிணம் அழுகிப் போவதே இவைகளின் அதிகப்பிரவிர்த்திக்கு அடையாளம். லிங்கசரீரத்தை உபாதியாக உடைத்தாயிருக்கிற பிராணன் லிங்கசரீரமூலமாக ஸ்தூலத்துடன் சம்பந்தப்பட்டிருக்கிறான். என்று முன் (55) சொல்லப்பட்டிருக்கிறது. இந்த லிங்கசரீரத்துடன் பிராணன் பிரிந்தவுடன் அதாவது ஸ்தூலத்தையும் லிங்கசரீரத்தையும் இணைக்கும் தந்து அறுபட்டவுடன் மரணம் சம்பவித்து மனிதனுடைய 6 தத்துவங்கள் மட்டும் மிச்சப்படுகின்றன. ஸ்தூலசரீரத்தின் அணுக்கள் வெவ்வேறாகப்பிரிந்து வேறு சரீரங்களில் சேர்ந்துபோகின்றன. ஒருசரீரத்தின் மரணமே வேறு சரீரத்தின் உற்பத்தியாக முடிகிறது. நாமமறுபடியும் இந்தக்கர்மபூமிக்கு வரும்போது இந்த அணுக்களில் சிலவற்றையே சந்திக்கலாம். ஆனால் அதைப்பற்றி இப்போது விசாரமில்லை. அணுக்கள் பிரிந்துபோவதே ஸ்தூலசரீரத்தின் மரணமென்பதை மட்டும் கவனிக்கவேண்டியது

## லிங்கசரீரத்தின்கதி.

88. ஸ்தூலசரீரத்துக்குச்சரியான பிரதி இந்த லிங்கசரீரம். ஸ்தூலத்துக்கு மரணம் வருவதுபோல், லிங்கசரீரத்துக்கும் ஒன்றாய்க்கூடியிருந்த சூட்சுமாணுக்கள் பிரகிறதினால் மரணம் சம்பவிக்கிறது. உயிர் உபாதியாகும் லிங்கசரீரம் மரணசமயத்தில் ஸ்தூலசரீரத்தைவிட்டு வெளியாகி முன்சொல்லிய வெண்மையான தந்து அறுபட்டு கடைசியான சுவாசம் வெளியேபோய் மனிதன் இறந்தான் என்று சொல்லப்படுகிறான். சரீரம் கனக்கிறதினால் லிங்கம் வெளியே போய்விட்டதாக ஊகிக்கலாம் இதின் மூலமாய்ச்சரீரத்தில் சலனாதிகளை உண்டுபண்ணின பிராணன் வெளியே போய்விட்டபடியால் இச்சலனாதிகளும் இல்லாமல்போகின்றன. இது அனுபவசித்தம். தந்து அறுபடாத காலத்திலும் லிங்கசரீரம் வெளிப்பட்டிருந்தால் சலனாதிகள் மட்டாகவே இருக்கின்றன.

89. லிங்கசரீரம் ஸ்தூலத்தைச் சுத்தமாய் விட்டுப் பிரிந்தபிறகு, அதை விட்டு அது வெகுதூரத்துக்குப் போகிறதில்லை. சாதாரணமாய் அது பிணத்துக்கு மேல்மிதந்துகொண்டிருக்கிறது. சில சூட்சுமதிருஷ்டியுள்ளவர்களின் கண்ணுக்கு லிங்கசரீரம் ஒருவித ஊதா ஆகாரமாய் காணப்படுகிறது. பிணம் புதைத்தவிடத்தில் சிலருக்குக் காணப்படும் ஊதா ஆகாரமும்லிங்கசரீரமே. மரணசமயத்திலும் மரணத்துக்குப்பிறகும் சிலருக்குத் தோன்றும் ரூபம் இதுவே.

90. மரணம் சம்பவித்தவிடத்தில் அதிகதுக்கம் வெளிப்படாதவரையில் ஜீவனுடைய பிரஞ்ஞை சாந்தமாயும் ஸ்வபனத்தில்போலுமிருக்கிறது. இவ்விடத்தில் கவனிக்கவேண்டியது யாதெனின் லிங்கசரீரம் பிரியும்போதும, பிரிந்தவுடனும் அவ்விடத்தில் அதிக சப்தமிருக்கக்கூடாது. ஏனெனில், அக்காலத்தில், அதாவது, சுவாசம் இழுக்க ஆரம்பமானதுமுதல் பிராணன் போகுமவரையில் இந்த ஜன்மத்தில் நடந்த விஷயங்களெல்லாம் ஜீவனுடைய திருஷ்டிமுன்பாக ஏககாலத்தில் வருகின்றன. பிறகு இவைகளின் சேர்க்கை ஆகாசத்தில் பதிந்து விடுகின்றன. சித்திரகுப்தனுடைய ரிகார்டுகள் என்பது இவையே. இச்சமயத்தில்தான் சென்ற ஜன்மத்தின் புண்ணியபாவங்களின் கணக்குவழக்குகள் பார்க்கப்பட்டு இனி வரவேண்டிய ஜன்மத்தை ஜீவன் தீர்மானிக்கிறான் அதிபலமான குணவிசேஷங்களெல்லாம மறுஜன்மத்தில் பிறவிக்குணங்களாக வருகின்றன. தன்னுடைய முழுச்சரித்திரத்தையும் ஏககாலத்தில் பார்த்து ஒரு தீர்மானத்துக்கு வருங்காலத்தில் ஜீவனைத்தொந்தரவு செய்யக்கூடாதபடியால் அவ்விடத்தில் பிரலாபங்கள் இருக்கக்கூடாது. ஆகையால்தான்சாகிறசமயத்தில் சப்தமிருக்கக்கூடாதென்று ஜனங்கள் சொல்லுகிறார்கள். இப்படிப்பின் சங்கதிகளைப் பார்த்தபிறகு ஜீவனுடைய பிரஞ்ஞை தூக்கத்தில் போல் விளங்குகிறது.

91. சாகிற மனிதன் சாகுங்காலத்தில் அதிதீவிரமான இச்சையை தரித்திருந்து அது நிறைவேறாமல் போயிருந்தால் சிலசமயங்களில் வீட்டிலாவது சமீபத்திலாவது லிங்கசரீரம் காணப்படும். அப்படிக் காணப்பட்ட காலத்தில் அதின் பிரஞ்ஞை முன் சொன்னபடி தெளிவாயிருக்க மாட்டாது. கேட்டகேள்விக்கு உத்தரம் வரமாட்டாது.

92. நாளாகநாளாக மேலான 5 தத்துவங்களும் லிங்கசரீரத்தினின்றும்பிரிபடுகின்றன. முன் ஸ்தூலசரீரம் பிரேதமானதுபோல் இப்போது லிங்கசரீரமும் பிரேதமாகிறது. ஸ்தூலப்பிரேதத்துக்குச் சமீபத்திலேயே லிங்கப்பிரேதமும் இருந்துகொண்டு அத்துடன் இதுவும் நாசமடைகிறது. பிணத்தைப்புதைக்கிறவிஷயத்தில் எலும்புகளின் அணுக்கள் பிரிபட ஆரம்பிக்கிறவரையில் லிங்கசரீரத்தின் அணுக்கள் பிரிபட்டுகொண்டு வருகின்றன. தகனம் செய்யும்விஷயத்தில் ஸ்தூலலிங்கங்கள் அதிசீக்கிரமாய்ப் பிரிபடுகின்றன. இப்படிப் பிரிந்த அணுக்கள் இதரநூதன ஸ்தூலலிங்க சரீரங்களின் உற்பத்திக்கு உபயோகப்படுகின்றன.

93. பிணத்தைப் புதைப்பதினால் சில்ஜீவர்கள் தீவிரமான பிராபஞ்சிக வாசனையால் தாம் விட்ட கூடாகிறசரீரத்துக்குத்திரும்பி வரப்பிரயத்தனம் செய்யக்கூடும் அதின் மூலமாக ஜனங்களுக்குத் துக்கமே ஜனிக்

கும். அணுக்கள் வேறு சரீரத்துக்கு உபயோகப்படுவதும் தவக்கப்படும். ஆகையால் தகனம் செய்யும் விஷயத்தில் ஸ்தூலலிங்க அணுக்கள் சீக்கிரமாய்ப் பிரிபட்டு இதர சரீரத்துக்குச் சீக்கிரத்தில் உபயோகப்படுவது மன்றியில் தாமஸமாய்ப்பிரிவதினால் உண்டாகும் தீங்குகளுமில்லாமல் போகின்றன. ஆகையால் புதைப்பதற்குத்தகனம் செய்வதே எல்லாருக்கும்·குணம். இந்த தத்துவத்தை அறிந்தபடியால்தான் இந்துக்கள் சாதாரணமாய்ப்புதைக்கிறதில்லை. இதின் நன்மையை அறிந்துதான் இப்போது யூரோப்பு அமெரிகாதேசங்களிலும் தகனம் செய்யத்துவக்கம் செய்திருக்கிறார்கள்.

## பிராணன்-காமம்-காமலோகம்.

94. ஸ்தூலலிங்கசரீரங்களினின்றும் பிரிந்தபின் மற்ற 5 தத்துவங்களும் காமலோகத்துக்கு வருகின்றன. லோகம் என்றால் இடம், ஸ்தானம், காமமென்பது சரீரத்திலுள்ள இச்சைமுதலிய மனோவிகாரங்களின் அம்சம். ஆகையால் காமலோகமென்பது இவைகள் இருக்கக்கூடியஸ்தானம். இது புவர்லோகம் என்னப்படும். இது பிர்ம்மாண்டத்தின் ஒருபாகம். இந்த காமலோகத்தில் ஸ்தூலலிங்கதேகங்களை விட்டுவிட்ட பூலோகத்தில் ஜீவித்திருந்த சகல மிருக மாணிட ஜீவன்களும் இன்னும் அனேக தேவவர்க்கங்களும் வசிக்கின்றன. இப்பூலோகத்தில் அநேக வர்க்கங்கள் வசிப்பதுபோல் காமலோகத்திலும் அநேகவர்க்கங்கள் உண்டு. இதில் வசிப்பவர்களுக்குப் பிரஞ்ஞையுண்டு. ஆகாசமும் வாயுவும் கலந்திருப்பதுபோல் இந்தலோகமும் பூலோகமும் கலந்திருக்கின்றன. ஆனால் இரண்டு லோகங்களின் பிரகிருதிஸ்திதி வேறுபடுவதால் ஒருலோகத்திலுள்ளவர்கள் மற்றொருலோகத்திலுள்ளவர்களை அறிகிறதில்லை. சிலசக்திகளைப்பக்குவப்படுத்துவதினால் பூலோகத்திலுள்ளவர்கள் புவர்லோகத்திய விஷயங்களை அறியலாம்.

95. இந்தப் புவர் லோகத்தில் இரண்டாவது மரணம் சம்பவிக்கும்வரையில் மிருகங்களும் மனிதர்களும் தங்குகிறார்கள். மிருகங்களுக்கு சூட்சும அணுக்கள் பிரிந்தவுடனும் மனிதனுக்கு ஆத்ம—புத்தி—மனது பிரிய ஆரம்பித்த உடனும் இரண்டாவது மரணம் சம்பவிக்கிறது.

96. இந்தக்காமலோகத்தில் ஜீவன் முதலில் 5 தத்துவங்களோடும் கூடியிருக்கிறான். ஜலம் நிறைந்தகுடம் குளத்தில் அமுழ்க்கப்பட்டு உடைபட்டால் குடத்துக்குள் இருந்தஜலம் குளத்துஜலத்துடன் கலந்துபோவதுபோல சமஷ்டிப் பிராணனின்றும் கிரகிக்கப்பட்ட வியஷ்டிப்பிராணன் தன் உபாதியாகிய லிங்கசரீரம் பிரிபட்டவுடன் சமஷ்டியுடன் கலந்துபோகிறது.

97. இந்தப் பிராணன் விலகினவுடன் ஆத்ம—புத்தி-மனதின் சேர்க்கையாகிற ஜீவன் கடைசியான உடுப்பாகிய காமரூபத்துடன் கூடி இருக்கிறான். ஜீவித்திருக்கும் காலத்தில் பூலோகத்தில் காமம் ரூபமின்றியில் இருந்தது. புவர்லோகத்திற்குரிய பிரகிருதியுடன் கலந்து காமம் ஒரு ரூபத்தைத்தரிக்கிறது. அவ்விடத்திலுள்ள சில தேவதைகளையும் இழுத்துக்கொண்டு தன் ஸ்வபாவத்துக்குத் தகுந்த ரூபத்தைக் காமம் புவர்லோகத்தில் தரிக்கிறது. இதுவே ஜீவனுடைய 3-வது உடுப்பாகச் சொல்லப்படுகிறது. இது ஜீவனை மூடிக்கொண்டிருக்கிறது. இந்த லோகத்திலிருக்கும் வரையில் சாதாரணமாய் எல்லாருடைய பிரக்ஞையும் முன் சொன்னதுபோல ஸ்வல்பமாயும் தூக்கத்திலிருப்பதுபோலும் இருக்கிறது. இந்தப் பிரக்ஞாவஸ்தையிலிருந்து ஜீவன் சுவர்க்கத்துக்குப் போகும் முன் கொஞ்ச காலம ஜீவன் பிரக்ஞையை யிழந்து விடுகிறது. சுவர்க்கத்துக்குப் போனபின் பூலோகத்திலிருந்த பிரக்ஞையை மறுபடியும் அடைகிறது.

98. சுவர்க்கலோகத்துக்குப் போகும்முன் புவர்லோகத்தில் காமரூபத்தின் நிலைமையைப் பார்ப்போம். காமரூபம் காமத்தால் நிலைபெறுகிறது. காமம்பலமாயிருந்தால் காமரூபமும் பலப்படும். காமம் ஸ்வல்பமாயிருந்தால் காமரூபமும் உபாயமாயிருக்கும். காமரூபம் சீக்கிரத்தில் நாசமடைவதும் அல்லது வெகுகாலம் நிடித்திருப்பதும் அதின் பலத்தைத்தான் பொறுத்திருகிறது.

99. முந்தின அத்தியாயத்தில்(72) வது பிரிவில் மனது பிரபஞ்சவாசனையை விட்டு ஆத்மாவுடன் சேரப் பிரயத்தனம் செய்யக்கூடும் என்றும், அல்லது சிலசமயங்களில் ஆத்மபரமாகவும் சில காலங்களில் பிரபஞ்சத்திலும் முழுகி யிருக்கலாம் என்றும், அல்லது ஆத்ம ஞாபகமில்லாமலேயே சுத்தப்பிரகிருதியுடன் மட்டும் சம்பந்தப்படக்கூடுமென்றும் சொல்லப்பட்டது. காமலோகத்தில் இம்மூவித மனதையுடைய ஜீவனுடைய ஸ்திதியும் அடியில் வருமாறு.

100. (1) சுத்த அந்தக்கரணத்துடன் ஒருவன் ஜீவித்திருந்தால் அவனுடைய காமம் அதிக பலமுள்ளதாக இராதபடியால் காமலோகத்தில் அதற்கு அதிகப் பிரவிர்த்தி இருக்கமாட்டாது. ஜீவித்திருக்கையில் காமமும் அசுத்தமனதும் சேர்ந்திருந்தன. காமம்பலமாயில்லாதபடியால் அது மனதினால் சுத்தப்படுத்தப்படுகிறது. காமத்தின் சுத்தாம்சத்தை மனது கிரகித்து விடுவதால் அசுத்தாம்சத்தைத் தள்ளி அதை விட்டுவிலக மனதிற்கு வெகு வருத்தமிருக்கமாட்டாது. ஜீவன் மெள்ள மெள்ளத் தன்னுடைய சாத்வீகானுபவங்களைக் கிரகித்துக் காமலோகத்தில் நின்று ம் சுவர்க்கலோகம் போகப் பிரயத்தனம் செய்கிறான். இதுதான் இரண்

டாவது மரணம். ஜீவனுக்கு யாதொரு தொந்திரவும் கொடுக்காதவரை யில் சாவதானமாய் இந்த இரண்டாவது மரணமடைந்து சுவர்க்கத்துக்கு வந்தவுடன் ஜீவன்விழித்துக்கொள்ளுவான்.

101. தொந்திரவு வரக் காரணமென்ன? எப்படி வரக்கூடும். பந்து ஜனங்களுடையவும் சிநேகிதர்களுடையவும் பிரலாபங்கள் தங்கள் சரீரங்களிலுள்ள காமத்தைச் சலனம் பண்ணுவது மூலமாக மரணமடைந்த ஜீவனுடையகாமத்தில் சலனம் உண்டுபண்ணி, தன்மூலஸ்தானமாகிற சுத்த மனதுடன் அசுத்தமனது சேருவதற்கு முன், தூங்கிக்கொண்டிருக்கிற அந்த அசுத்தமனதை எழுப்பக்கூடும். அப்படி விழித்துக்கொண்ட அசுத்தமனது ஜீவித்திருந்த காலத்தில் நடந்த சங்கதிகளை எல்லாம் ஞாபகத்துக்குக் கொண்டுவரக்கூடும். அநேகசமயங்களில் இந்த ஜீவனுக்கு இந்த விழிப்பால் வெகு வருத்தமும் உண்டாகும். இந்தக்காமலோகத்தை விட்டுப் போவதும் தவக்கப்படுவதால் ஜீவனுடைய சுவேச்சாவியவஹாரத்துக்கும் தடங்கல் நேரிடுகிறது. சுவர்க்கத்துக்குப் போகும்முன் சுவல்பகாலத்துக்குள்தான் இந்தப் பூலோகசம்பந்தம் உண்டாகக்கூடும். ஏகதேசத்தில் காமரூபத்துடன் கலந்திருக்கும் ஜீவன் பூலோகத்திலுள்ளவர்களுக்குச்சங்கதிகளைச் சொல்லக்கூடும். ஆனால் இதனால் ஜனங்களுக்கு உபகாரமானது மட்டும் வெகு துர்லபம். சாதாரணமாய்ச்சுவர்க்கத்துக்குப்போகுமுன் பிரஞ்ஞை பங்கமாய்விடுகிறது. அதிகதீவிரமான ஆசை சில சமயங்களில் ஜீவனைப்பூலோகத்துக்கு இழுக்கக்கூடும். ஆனால் சுத்த அந்தக்கரணமுள்ள ஜீவனுக்கு ஆசை அதிகபலமாயிராதபடியால் நம்முடைய பிரலாபங்களால் யாதொரு தொந்திரவும் கொடுக்காதவரையில் அவர்கள் ஸ்வஸ்தமாகத்தூங்கி இரண்டாவது மரணவிஷயத்தில் யாதொரு வருத்தத்தையும் அடையாமல் சுவர்க்கலோகத்துக்குப் போகக்கூடும். ஜீவன் அப்படிப்போனபிறகு காமலோகத்தில் காமரூபம் மட்டும் தங்கி நாளாவிர்த்தியில் அதின் அணுக்களும் பிரிந்துபோகின்றன. இப்படிப்பிரிந்துபோகும் அணுக்கள் மறுபடியும் கூடுவதை (124) வது பிரிவில் பார்க்க.

## உ-சாதாரணஜனங்களின்காமலோகஸ்திதி.

102. ஜீவன் காமலோகத்துக்கு வந்தவுடன் இவனுடைய இச்சைகள் முன் (97) சொன்னபடி ரூபத்தைத்தரித்து இந்த ஜீவனை மறைத்துக்கொள்ளுகின்றன. இந்த ரூபம் அதிசூட்சுமஅணுக்களால் உண்டாகிறது. விஷயபோகங்களில் ஆசக்தி அடைந்திருந்த அசுத்தமனது தன்னால் உண்டுபண்ணப்பட்ட வலையிலிருந்து சீக்கிரத்தில் விடுபட்டுத்தன் மூலஸ்தானத்துக்குப்போகமாட்டாது, இந்தக்காமரூபம் க்ஷீணகதியை

அடையாதவரையில் அசுத்தமனது அதைவிட்டுப்பிரிபடாதது சுத்தமனதுடன் ஒன்றாகத்தாமஸமாகிறது.

103. காமலோகத்தில் ஜீவனும் காமமும் சேர்ந்திருக்கும்வரையில் அந்த ஜீவன் பூலோகத்துக்குத்திரும்பிவரக்கூடும். இப்படித்திரும்பிப்போவதையும் ஜீவன் அபேக்ஷிக்கக்கூடும். ஏனெனில் பூலோக விஷயங்களில்தான் அந்த ஜீவனுடைய மனது பற்றுதலை அடைந்திருக்கிறது. தன்னுடைய சுத்தமான ஸ்தானத்திலிருந்துகொண்டு திருப்தியையும் ஆநந்தத்தையும் அடைய மனது கொடுத்துவைக்கவில்லை. ஆகையால் இதுவரையில் தீராத ஆசைகளைத்தீர்த்துக்கொள்ளும் பொருட்டு ஜீவன் மறுபடியும் பூலோகத்துக்கு இழுக்கப்படக்கூடும். இப்படி இழுக்கப்பட்டால் காமலோகத்தில் ஜீவனுடைய வாசம் நீடிக்கிறது. காமரூபம் பலப்படுகிறது. அதற்கும் ஜீவனுக்கும் உள்ள சம்பந்தம் விடுபடுகிறதில்லை. ஆகையால் ஜீவனுடைய சுவேச்சாகமனதுக்கு விரோதம் வருகிறது.

104. (3) கெட்டநடத்தையுள்ளவர்களும் வெகு காமக்குரோதாதிகளை உடையவர்களும் காமலோகத்தில் வெகுகாலம் தங்குகிறார்கள். மறுபடியும் பூலோகசுகங்களைப்பெறவேண்டுமென்கிற ஆசை அவர்களுக்கு வெகு பலமாகவே இருக்கிறது. இந்த ஆசைகளை நேரில் பூர்த்திசெய்துகொள்ள அவர்களுக்கு முடியாதபடியால் பூலோகவாசிகள் மூலமாகத்திருப்தி அடைகிறார்கள். இவர்களுக்கு வசப்பட்டுப்போனவர்களின் கதி அதோகதியே. பிசாசுபிடித்தவனுடைய இரத்தத்தை பிசாசு பானம்பண்ணி அவனைக்கிருசமாக்கிவிடுவது சாதாரணமாய்த்தெரிந்தவிஷயமே.

105. தற்கொலையாலாவது, பிறராலாவது, தற்செயலாலாவது மரணமடைந்தவர்கள் காமலோகத்திலுள்ள ஒரு வகுப்பு வாசிகள். பூலோகத்தில் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிற இயற்கையான காலம் முடியும்வரையில் அவர்கள் காமலோகத்தில் 6-7-வது தத்துவங்கள் (புத்தி-ஆத்மா) அன்றியில் பிரிந்திருக்கிறார்கள். மரணத்தைக்கொடுத்தகாரணம் காமலோகத்தில் இவர்களின் ஸ்திதியைத்தீர்மானிக்கிறது. மரணத்தினால் சம்சாரதுக்கத்தினின்றும் விலகலாமென்று நினைத்துத்தற்கொலை செய்துகொண்டவர்கள் பூலோகவாசிகள் மூலமாகத்தங்கள் ஆசைகளைத்தீர்த்துக்கொள்ளுகிறார்கள். தங்களுக்கு பூலோகத்தில் ஏற்பட்ட காலமுடியும் வரையில் இப்படிச்செய்துகொண்டு பிறகு 6-7 அம்சங்கள் முழுமையும் இழந்து விடுவார்கள்.

106. தற்செயலாய் மரணம் சம்பவித்த விஷயங்களில் நாசரகிதத த்துவங்களும் நாசசகிததத்துவங்களும் ஒன்றோடொன்று சேரமுயலுகி ன்றன. நல்லவர்களாயின் இயற்கையானகாலம் முடியும் வரையில் சமா தியில் இருந்ததுபோல இருந்து பிறகு சுவர்க்கத்துக்குப்போகிறார்கள். கெட்டவர்களாயின் அக்காலம் வரையில் அங்குமிங்கும் திரிந்துகொண் டு ஜனங்களைக்கெட்ட செய்கைகளில்ப்பிரவிர்த்திக்கும்படிச்செய்து அ வைகள் மூலமாகத்திருப்தி அடைந்து பிறகு வேறு ஸ்தானத்துக்குக் கொண்டுப்போகப்பட்டு அவ்விடத்தில் வெகு வருத்தமடைந்து நாசமா கிவிடுகிறார்கள். கொலைகாரன் பூலோகத்தில் பயப்படத்தக்கவன். இ வனுக்கு மரணதண்டனை கொடுப்பதினால் இவன் புவர்லோகத்திலிருந் தாலும் அதிகமாய்ப்பயப்படததக்கவனாகிறான்.

107. துன்மார்க்கத்தாலும், அதிகப்படிப்பினாலும், பெரியசங்கதி க்காக தன்னைத்தானே பலிகொடுப்பதினாலும் உண்டாகும் அகாலமரண ம் காமலோகத்தில் ஜீவனை வெகுகாலம் நிறுத்திவைக்கும். மரணந்தே டின கருத்தே காலத்தையும் கதியையும் நிர்ணயிக்கும். சித்தப்பிரமை யால் தற்கொலை செய்பவன் காமலோகத்தில் தூங்கிவிடுகிறான்.

108. காமரூபமாகிற மேல்மூடி க்ஷயித்தவுடன் ஜீவன் காமலோக த்திலிருந்து சுவர்க்கலோகத்துக்குப்போகிறான். சுத்தமனது அசுத்தம னதைத் தனக்குள் இழுத்துவிடுகிறது. புனர்ஜன்மம் கிடைக்கும் வரை யில் மனது ஒன்றாகவே இருக்கிறது. அசுத்தமனதுடன் தனக்கு அ னுகுணமாயிருக்கிற சாத்வீகானுபவங்களையும் சுத்தமனது ரக்ஷித்துவி டுகிறது. வயலிலிருந்து குடியானவன் வரவழைக்கப்படுகிறான். அதிக அறுப்பு அறுத்திருந்தாலும் சரி, ஸ்வல்பமாக அறுத்திருந்தாலும் சரி, அறுத்த பலனுடன் குடியானவன் வந்துவிடுகிறான். காமலோகத் திலிருந்து ஜீவன் போனபிறகு பூலோகவாசிகளுடன் சேரமுடியாது. ஆ னால்சிலவிலக்குகளுண்டு. இவைகளைப்பின் பார்ப்போம்.

## காமரூபம்.

109. ஜீவன் பிரிந்தபிறகு மிச்சப்படுவது காமரூபம். இது ஜீவ னுடைய கடைசியான உறை.பூர்வஜன்மம் சுத்தமாயிருந்தால் இந்த கா மரூபத்தில் அதிக பலமில்லாமல் சீக்கிரத்தில் அதின் அணுக்கள் சிதறிப் போகின்றன. பிரபஞ்ச இச்சை முதலியவைகள் அதிக பலமாயிருந்தா ல் பூவுடன் சேர்ந்த நாருக்குப் பூபோனபிறகும் சிலகாலம் வாசனை இரு ப்பதுபோல் ஜீவன் போய்விட்டும் சிலகாலம் இந்த ரூபத்துக்கு உணர்ச் சி முதலியவைகள் இருப்பதாகவும் பிரஞ்ஞாபாசமும் தோன்றும். ஜன்

மம் கெட்டதாக இருப்பதால் அனுகுணமான பூலோகவாசிகளிருக்குமி டத்துக்கு இழுக்கப்பட்டு கொஞ்சகாலம் பலத்தைத்தேடி ஜீவிக்கலாம். கடைசியில் காமரூபத்தின் அணுக்கள் சிதறிப்போகவேண்டியதே தவிர வேறில்லை. சில சமயங்களில் இந்த ரூபத்தைச் சில பிசாசுகள் கைப்பற்றிக்கொள்ளக்கூடும். இதனால் ஜனங்களுக்கு உபத்திரவம் அதிகமே.

110. இந்த காமலோகவாசம் சில மணி நேரம் முதல் சுமார் 25—30 வருஷ வரையில் இருக்கக்கூடும்.

111. இந்த காம ரூப அணுக்கள் புதிதாயி யாதொரு காரியத்தை யும் செய்யச் சக்தமாகிறதில்லை. ஆகாசத்தில் விதைகள் தொங்கிக்கொண்டிருப்பதுபோல இவைகள் இருக்கின்றன. ஜீவன் புனர்ஜன்மம் எடுக்கும் காலத்தில் இந்த அணுக்கள் வந்துசேர்ந்துவிடுகின்றன.

## சுவர்க்கலோகம்

112. ஒவ்வொரு கல்பத்திலும் ஜீவன் புதிய ஜனன மரண ரூப சம்சார யாத்திரையை ஆரம்பிப்பதற்குமுன் ஒருதேவதைபோலிருக்கிறான். (இவ்வித யாத்திரைகள் அநேகமாய்விட்டன). அவன் சுத்தமாயும் கிரியாரகிதமாயுமிருக்கிற சைதன்னியமன்று. சென்ற கல்பங்களில் பிரகிருதி சம்பந்தத்தால் அவன் புத்தியை அடைந்திருக்கிறான். ஆனால் பிரகிருதியைப் பூர்த்தியாகச் சுவாதீனப்படுத்திக்கொள்ளும்படியான புத்தியை அவன் அடைந்திருக்கவில்லை. ஆகையால் அவனுடைய அஞ்ஞானம் பிரகிருதி மாயைக்கு அவனை உட்படுத்துகிறது. ஊதாக்கண்ணாடி மூலமாகப் பதார்த்தங்களைப் பார்க்கிற சிசுவுக்கு அவைகள் ஊதாவாகத் தெரியவருவதுபோல், மனிதனுக்கும் மாயை தோன்றுகிறது. சரீரத்தைத் தரிப்பதின் பிரயோசனம் என்னவெனில் பிரகிருதி சம்பந்தப்பட்டாலும் அதின் மாயையால் மயக்கத்தை யடையாமல் பிரகிருதியை உள்ளபடி பார்த்து அறிவதே. இந்த சம்சாரசாகரத்தில் இரண்டு நிலைமைகள் மாறிமாறிவருகின்றன. பிரகிருதியால் சுத்தமாய்ச் சூழப்பட்டு இப்பூமியில் ஸ்வல்பகாலம் இருத்தல் ஒன்று. இந்த காலத்தை உத்தேசித்துச் சுவர்க்கத்தில் வெகுகாலம் இருத்தல் மற்றொன்று. இந்தச் சுவர்க்கலோகத்திலும் பிரகிருதியால் சூழப்பட்டாலும் அது சூட்சுமமாயிருப்பதுமன்றிப் பூலோகத்தில் போல் அவ்வளவு மயக்கத்தையும் உண்டுபண்ணுகிறதில்லை. இந்த இரண்டாவது நிலைமைதான் ஜீவனுடைய சாதாரண நிலைமையாகச் சொல்லலாம். ஏனெனில் சுவர்க்கத்தில் வாசஞ்செய்யும் காலமும் நீடித்திருக்கிறது; தன்னுடைய தெய்வாம்சத்துக்கு அதிகமாய் விலகிப்போகவில்லை; சூட்சுமப் பிரகிருதி சம்பந்தப்பட்டாலும் அதின் மாயையால் மயக்கம் அதிகமாகவில்லை. மெள்ளமெள்ளப்படிப்

படியாக அனுபவங்கள் திரும்பிவரச்சுத்தப் பிரகிருதி ஜீவனை மயக்கடிக்கமுடியாமல் அவனுக்குச் சுவாதீனப்பட்டுப்போகிறது. இந்தச் சுவர்க்கலோக வாசமே ஜீவனுக்குச் சத்தியமானது. தேன் ஈயானது பல புஷ்பங்களினின்றும் தேனைக் கிரகித்து ஒன்றாய்ச்சேர்த்து சக்கையான புஷ்பத்தை எறிந்துவிடுவதுபோல் பல ஜன்மங்களிலும் பிரவேசம்பண்ணுகிற ஜீவன் ஒவ்வொரு ஜன்மத்தின் சாரத்தைக் கிரகித்துச்சேர்த்துக் கடைசியில் சுத்தத் தெய்வமாக ஆய்விடுகிறான்.

113. காமரூபத்தில் நின்றும் பிரிபட்டு சாத்வீகானுபவங்களுடன் ஜீவன் சுவர்க்கத்துக்கு வந்து சேருகிறான். அதுவரையில் பிரஞ்ஞை பங்கமாகவே இருக்கிறது. சேர்ந்தபின் பழையபிரஞ்ஞையை அடைகிறான். இவ்விடத்தில் புது அனுபவங்கள் யாதொன்றுமில்லை. பூலோகத்தின் பழைய அனுபவங்களின் பலன்கள்தான் இவ்விடத்தில் அனுபவிக்கப்படுகின்றன. பூலோகத்தைக்காரணபூமியாகச் சொன்னால் சுவர்க்கலோகத்தைக் காரியபூமியாகச் சொல்லலாம். உழுதவிடத்தில் விதையை ஒருக்ஷணத்தில் போடுகிறோம். அநேக மாதங்கள் சென்றபின்தான் அவைகள் கதிராகின்றன. விதைக்கு அநேகமடங்கு அதிகமாகவே கதிர் இருக்கிறது. விதை எந்தச்சாதியோ அச்சாதியே பலனும் கிடைக்கிறது. இதுபோல பூலோகத்தின் ஸ்வல்பகாலத்திலுள்ள அனுபவங்களாகிற காரணத்துக்குத்தக்கபடி ஸ்வர்க்கலோகத்தில் வெகுகாலபலன் கிடைக்கிறது. காரணங்கள் அநேகமாயிருந்தால் பலன்களும் அப்படியே நீடித்தவைகளாயிருக்கும். நிறைவேறாத ஆசைகளெல்லாம் இவ்விடத்தில் திருப்தி அடைகின்றன.

114. பிரகிருதிசம்பந்தமானவை யெல்லாம் பூலோகத்திலும் புவர்லோகத்திலும் விடப்பட்டிருக்கின்றன. சுவர்க்கலோகத்தில் பலன் கொடுக்கும்படியான விதை பூலோகத்தில் ஸ்வல்பமாய் விதைக்கப்பட்டிருந்தால் பலனும் ஸ்வல்பமாய்க்கண்டு ஜீவனுடைய அபிவிர்த்திக்கு வேண்டிய ஆகாரம் போராமலிருப்பதால் அந்த அபிவிர்த்தியும் தாராளமாயிருக்கமாட்டாது. ஆகையால் தான் சுவர்க்கலோகத்துக்கு உபயோகப்படும்படியான விதைகளை விசேஷமாய் விதைத்திருக்கவேண்டியது. சாத்வீகஅனுபவங்களையே தாராளமாய்ச் சம்பாதித்திருக்கவேண்டும். பூலோகமே ஜீவனுடைய அபிவிர்த்தியை நிர்ணயம் செய்கிறது. சுவர்க்கத்தில் ஜீவன் இவைகளைப் பரிசீலனைசெய்து அவைகளின் சாரத்தை மறுஜன்மத்தின் உபயோகத்துக்காகச் சேர்த்துவைக்கிறான். ஒருவன் சம்சாரபந்தத்தைச் சேதிக்கப் பெரியகத்தியுடன் வருவானேயாகில் சுவல்ப அனுபவமுள்ளவன் சிறியகத்தியுடன்வருகிறான். எவ்விடத்திலும் கொண்டுவரப்பட்டகத்தி அவனவன் செய்துகொண்டதே யொழிய வேறில்லை. ஒரு

வன் ஒருபெரிய பரோபகாரவிஷயத்தைச் செய்ய உத்தேசித்து மரண மடைந்தால் சுவர்க்கத்தில் அந்த உத்தேசத்தால் உண்டாகும் ஆநந்தத்தை அடைந்து பாவனையையும் பலப்படுத்தி மறுஜன்மத்தில் தகுந்த தேசகாலசாமக்கிரிகள்கிடைத்த உடன் அந்த உத்தேசத்தை நிறைவேற்றுவான். மனதில் கொண்ட பாவனைக்கு ஸ்தூலரூபம் கொடுப்பது மனதின் சிர்ஷ்டியே. ஆகையால் சுவர்க்கலோகத்தில் காலஹரணமாகாமல் அதில் செலவழியும காலமெல்லாம் ஜீவனுடைய நன்மைக்கே ஏற்படுகிறது.

115. எப்போதும் பிரவிர்த்தி இருக்கமுடியாதபடியால் சுவர்க்கத்தில் ஜீவன் ஸ்வஸ்தமாக இருக்கிறான். இவ்விடத்தில் துக்கத்துக்கு ஆஸ்பதமில்லை. சுவர்க்கலோகப்பிரவேசம் அந்த லோகத்தில், ஜனனமாகச் சொல்லலாம். ஜீவனுக்குப் பூலோகத்தில் ஜனனம் வளருதல் க்ஷயித்தல் மரித்தல் முதலிய 6 விகாரங்கள் இருப்பது போல சுவர்க்க லோகத்திலும் அவைகள் உண்டு. சுவர்க்க லோகத்தில் மரணமே பூலோகத்தில் ஜனனம்.

116. சுவர்க்கலோகமென்பது ஒரு இடமன்று: இது ஒருஸ்திதி. இதுஒவ்வொருவனாலும் செய்துகொள்ளப்பட்டது. ஆகையால் ஒவ்வொருவனுடைய சுவர்க்கானுபவமும் ஒவ்வொருவிதமாயிருக்கும். சுவர்க்கத்தை ஒரு இடமாய் நினைக்கும் பக்ஷத்தில் அதில் வசிப்பவர்களுக்கு தாரதம்மியமில்லாமல் போகும். சுவர்க்கானுபவம அவரவர்களின் புண்ணியத்தையே பொறுத்திருக்கிறபடியால் சுவர்க்கத்தை ஸ்திதியாகவே நினைக்க வேண்டியது.

117. இந்த ஸ்திதியிலும் அநேக உட்பிரிவுகளுண்டு. மொத்தமாய் இவைகளை ரூப அரூப லோகங்களாகப்பிரிக்கலாம். அரூப லோகமே திருபவனம் என்று சொல்லப்படுகிறது.

118. பூலோகத்தில் ஜனித்த பின் மறுபடியும் தாயார்வயிற்றில் நுழையமுடியாததுபோல சுவர்க்கலோகத்தில் ஜனித்தபின் மறுபடியும் புனர் ஜன்மம் வரும் வரையில் பூலோகத்துக்கு வரமுடியாது. சென்ற ஜன்மத்தின் ஞாபகம்பூர்த்தியாக இருந்தாலும் புனர்ஜன்மகாலத்தில் தான் ஜீவன் பூலோகத்துக்கு வரமுடியும்.

119. அசுத்தமனதின் அனுபவங்கள் பூலோகத்துடன் போய்விட்டாலும், சுவர்க்கலோகத்திலிருக்கும் ஜீவன் தான் மரணமடைந்ததாகவாவது தன்னுடைய பிரீதிக்கு விஷயமானவர்களினின்றும் பிரிந்திருப்பதாகவாவது நினைக்கிறதில்லை. அவர்களுடன் கூடவே இருப்பதாகவும் தன்னுடைய அன்பைக்காண்பித்துக்கொண்டே இருப்பதாகவும் நினைக்

கிறான். இதைப்பிரமையாக நினைக்கக்கூடாது. ஜீவன் இக்காலத்தில் மானசிக நிலைமையில் இருப்பதால் மானசிக தர்மமான அன்பு முதலிய வைகளைக் காண்பிக்க முடியாது. இந்த அன்பு ஸ்வப்னத்திலும் வேறுவிதங்களாலும் தெறியும். சிசுக்களுக்குவரும் ஆபத்துகளை இறந்து போன தாயின் அன்பு அல்லாமல் எதுதான் நீக்குகிறது. மேலும் இந்த அன்பு மறுஜன்மத்தில் இருவர்களையும் ஒரே இடத்தில் சேர்த்துவிடுகிறது. சுவர்க்கசுகம் எவ்விதமானதாக இருந்தபோதிலும், பிராபஞ்சிக துக்கம் சுவர்க்கவாசியான ஜீவனுக்குத் தெரியமாட்டாதென்பது நிச்சயம். ஏனெனில் சுவர்க்கத்தில் ஜீவன் மானசிக பூமிகையில் இருக்கிறான். ஆகையால் ஸ்தூல்பூமிகையில் நடக்கும் சங்கதிகளை ஜீவன் அறியமாட்டான். மானசிக பூமிகை பூலோகத்திலிருப்பவர்களுக்கும் சுவர்க்கத்துக்குப்போன ஜீவனுக்கும் ஒன்றாகவே இருப்பதால் சுவர்க்கவாசியான ஜீவன் தான்நேசித்தவர்களுடைய துக்கத்தைமட்டும் அறியாமல் அவர்களால் சூழப்பட்டிருக்கிறது. அவர்கள் மரணமடைந்ததால் முன் சுவர்க்கத்துக்குப்போயிருந்த ஜீவனைக்காணவேணுமென்பது இல்லை. இது குப்தவித்தையின் நிச்சயம்.

120. ஜீவன் சுவர்க்கத்தில் சுதந்திரத்தை அடைந்திருக்கிறபடியாலும் தான் ஆத்மஸ்வரூபமாயிருக்கிறபடியால் சர்வஞ்ஞதை அடையக்கூடுமே என்று கேட்கும்பட்சத்தில் இது முடியாது. ஏனெனில் சுவர்க்கலோகம் ராஜஸதாமஸஅம்சங்கள் நீங்கலான சாத்வீகபூலோகத்தொடர்ச்சியே. எப்படி இந்த ஜன்மத்தில் பிரகிருதிபந்தத்தால் நாம் சர்வஞ்ஞர்களாக இருக்கவில்லையோ அப்படியே சுவர்க்கத்திலும் இருக்கமுடியாது.

121. சுவர்க்கானுபவம் எல்லாருக்கும் உண்டாவெனில் மரணத்துக்குப் பிறகு யாதொன்றுமில்லை என்று நிச்சயமாய் நம்புகிறவனுக்கு இந்த அனுபவம் இல்லாமல் போய்விடும். ஒருஊரிலிருந்து மற்றொரு ஊருக்குப்போகிறவன் தூக்கத்தில் மத்தியிலுள்ள கிராமங்களை அறியாமல் போகக்கூடியது போல் மரணத்துக்குப்பின் யாதொன்றுமில்லைஎன்று நம்பினவன் புனர்ஜன்மகாலம்வரையில் தூங்குகிறவன்போலிருந்துவிடுகிறான். சுவர்க்கானுபவநஷ்டமே இவனுடைய அவநம்பிக்கையின் பலனாகிறது.

122. சுவர்க்கத்தில் நூதனமான செய்கை யாதொன்றுமில்லாவிட்டாலும் ஒருவிதத்தில் ஞானம் அபிவிர்த்தியாகக்கூடும். ஒருவன் ஜீவிக்கையில் சரீரசம்பந்தமில்லாத விஷயங்களில் வெகு ஆசக்திகொண்டவனாக இருந்தால் உதாரணம் சங்கீதம், சித்திரம்எழுதுவது, கவனம் செய்தல் இவைபோல்வன விஷயங்களில் தீவிரமான புத்தியை உடையவ

ளாக இருந்தால் இக்கபுத்தியை அவன் அதிகப் பக்குவப்படுத்தக்கூடும். பூலோகத்திலிருக்கும்போது விளங்காததான நூதனஞானத்தைமட்டும் சுவர்க்கலோகத்தில்சம்பாதிக்க முடியாது. சுவர்க்கலோகத்தில் இப்படிப் பக்குவம் அடைந்ததற்கு அடையாளம சிலர் பிறந்தவுடனே அநேகமாகவித்தனத்தைக் காண்பிப்பதேயாம.

123. சுருக்கமாய்ச் சொல்லின் மரணத்துக்கு பிறகு பிரஞ்ஞை முதலில் பங்கப்பட்டும் பிறகு முன்போலவுமிருக்கக்கூடும். சிலர்விஷயத்தில் சுத்தமாய் இல்லாமலிருக்கக்கூடும.

## பூலோகத்துக்கு திரும்புதல்

124. சுவர்க்க லோக வாசகாலம அவரவர்களுடைய புண்ணியத்தை பொறுத்ததென்று முன்சொல்லப்பட்டது.. ஒருமரணத்துக்கும் மறுஜன்மத்துக்கும் மத்தியில் சுமார் 1500 வருஷ செல்லுகின்றன. இந்த வாஸகாலம் முடிந்த வுடன் மறுபடியும ஜீவன் பூலோகத்திற்கு திரும்புகிறான். அப்படித் திரும்பிவருகையில்தான் சுவர்க்கத்தில் சம்பாதித்த அனுபவங்களையும் முன் (122) பிரஸ்தாபித்தபடி புதிதாய்ச் சம்பாதித்தஞானத்தையும்ஜீவன் கொண்டுவருகிறான். சுவர்க்கத்தின் வாசலைத்தாண்டிவருகையில்தான் முந்தியஜன்மத்தில் விதைத்திருந்தபாபபீஜங்களைச்சந்திக்கிறான். சுவர்க்கத்திலிருக்கையில் துக்கரகிதமாயிருந்தாலும் செய்தபாபம் நசித்துப்போகாமல்பலன் கொடுக்கக் காத்துக் கொண்டிருக்கிறது. பூமியில் விதைத்த விதைகள் சுவல்பகாலம் பூமியில் இருந்து பிறகு முளைக்கிறது போல பாபங்களும் ஜீவன் சுவர்க்கத்திலிருக்கும்போது ஒன்றும் செய்யாமலிருந்து சூட்சுமசரீரம் உண்டாகும்காலத்தில் இத்துடன் கலந்துகொள்ளுகின்றன. அந்தகுணங்களுடன் ஜீவன் பூமியில ஜனிக்கிறான். ஜீவன் சுத்தமாகிறவரையில் இந்த ஜனனமரணரூப சம்சாரம் நடந்துகொண்டுவருகிறது.

## நிர்வாணம்.

125. பூலோகவாசத்துக்கு சுவர்க்கம் எப்படியோ அப்படியே புநர்ஜன்மசமுகத்துக்கு நிர்வாணம் என்பது இருக்கிறது. இந்தமேன்மையான ஸ்திதியைப்பற்றிப்பிரஸ்தாபிக்க இவ்விடத்தில் முடியாது. இது கடைசியான பூர்ணப்பிரஞ்ஞையுள்ள ஸ்திதியென்றுமட்டும் இவ்விடத்தில் சொல்லப்படுகிறது. மோக்ஷம் அல்லது நிர்வாணத்திற் சென்றவன் மறுபடியும் வேறு மகாமன்வந்திரத்தில் அந்த ஸ்திதியை விட்டுப்பிரவிர்த்தி மார்க்கத்தில் செல்லுகிறான்.

## 25. பூலோகத்துக்கும் மற்றலோகங்களுக்கும் சம்பந்தம்.

I. ஸ்தூலத்தைமட்டும் விட்டுப்பிரிந்தபிறகு:— லிங்கசரீரத்தில் ஜீவன் சுவல்பகாலமிருக்கக்கூடும். மரணசமயத்தில் தீவிரமாய்த்தரித்திருந்த எண்ணத்தை இச்சரீரத்திலிருந்து வெளியிடக்கூடும். ஆனால் இது வெகு அபூர்வம். லிங்கசரீரத்தைவிட்டு ஜீவன் போனபிறகு லிங்கசரீரம் பிணமாய் விடுவதால் அது யாதொன்றும் செய்யமாட்டாது. ஆனால் அதை அப்படிச்செய்யும்படிச்செய்யக்கூடும். இந்த மார்க்கம் அறிந்தவர்கள் வெகு ஸ்வல்பம்.

II. ஜீவன் காமலோகத்திலிருக்கும்போது:— இந்தலோகவாசகாலத்தை நிஷ்கரிக்கமுடியாது. காமரூபத்தால் ஜீவன் தன்னை மூடிக்கொண்டு சிலருடைய ஸ்தூலசூட்சுமாம்சங்களையும் உபயோகித்துக்கொண்டு ஜீவித்துக்கொண்டிருப்பவருடன் கலந்து தனக்குமட்டும் தெரிந்த விஷயத்தையும் அல்லது தனக்கும் வேறு ஒருவருனுக்கும் தெரிந்த விஷயத்தையும் சொல்லக்கூடும். இச்சம்பந்தத்தால் வரும் தீங்கு முன்னமேயே பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

III. சுவர்க்கத்தில் ஜீவனிருக்கையில்:—இந்த ஜீவன் பூலோகவாசிகளுடன் சம்பந்தப்படக்கூடிய விஷயம் முன்சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் பூலோகவாசி சுவர்க்கலோகவாசியுடன் சேரக்கூடுமென்பதைப்பற்றி அதிக விவரம் தெரியவில்லை. மானசிகதர்மமானதால் அப்படிசிலசமயங்களில் கூட்டைவிட்டு ஜீவன்சேரக்கூடும் என்று தோன்றுகிறது. எவ்விதத்திலும் சரீரசகிதஜீவன்தான் சரீரரகிதஜீவனிடம் இழுக்கப்படுகிறானேயொழிய சரீரரகிதன்கீழ்வருகிறதில்லை. காமலோகத்தில் அல்லது சுவர்க்கலோகத்தில் சரீரரகிதஜீவன் இருக்கும்வரையில் இப்படிச் சரீரசகிதத்தை இழுக்கக்கூடும். இக்காலங்களில்ஒருஜீவனுடையஸ்திதியை மட்டும் அறியலாமேதவிர எல்லா ஜீவர்களுடைய ஸ்திதியையும் அறியமுடியாது.

IV இதரசம்பந்தங்கள்:—

(1) சுத்தகாமரூபத்துடன்:—கொஞ்சகாலம் இதுமனதுடன்கூடியதுபோல காணப்பட்டுச்சங்கதிகளைச்சொல்லும்.

(2) அசுத்த மனோகாமஙகள்:— இவைகளின் சம்பந்தம் வெகு அபூர்வம்.

(3) பஞ்சபூதகணங்களுடன்:—சம்பந்தம் செய்கிறதும் பதார்

தங்களை ஒரு இடத்திலிருந்து ஒரு இடத்தில் வைப்பதும் இப்படிப்பட்ட செய்கைகள் எல்லாம் இவைகளுடையது.

(4) நிர்மாணகாயர்களுடன்:— அதிசுத்த அந்தக்கரணமுள்ளவனுடன்தான் நிர்மாணகாயன் சம்பந்தப்படக்கூடும். ஸ்தூலசரீரம் தவிர மற்ற சகல அம்சங்களையும் உடைத்தாயிருந்து பூலோகவாசிகளின் நன்மைக்காகவே பூலோகத்திலிருப்பவர்கள் நிர்மாணகாயர்கள்

(5) ஜீவித்திருக்கும் ஞானிகளுடன்:— அதிசுத்தாந்தக்கரணம் அவசியம்.

(6) தன் ஆத்மாவுடன்:—சுத்த அந்தக்கரணமுள்ள ஜீவன் மனப்பூர்வமாய்த் தன் ஆத்மாவுடன் சேரப்பிரயத்தனப்படுகையில் ஆத்மா தன் தேஜஸால் அவன் பிரக்ஞையைப் பிரகாசிப்பிக்கக்கூடும்.

நான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

# பிர்ம்மஞானச்சுருக்கம்

## ஐந்தாவது அத்தியாயம்.

### புனர்ஜன்மம்

127. புனர்ஜன்மமென்பது அநாதிகாலமாய் பெரும்பான்மை யர்ப் அநேகமதங்களில் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. 538 வது வருஷ முதல் கிருஸ்துமதக்கொள்கையில் ஒன்றாக இல்லாமல் சுத்தமாய் எடுபட்டுப் போய்விட்டது. யூரோப்பு தேசத்து ஜனங்களுக்கு மறுபடியும் இதில் இப்போது நம்பிக்கை ஜனித்திருக்கிறது.

### புனர்ஜன்மத்தின் அர்த்தம்.

128. இந்தப்பதம் புன:—மறுபடியும் ஜன்மம் என இரண்டு பதங் களினின்றும் வருகிறது. மறுபடியும் ஜனித்தல் என்பதால் ஜனிக்கும் பதார்த்தம் ஒன்று இருக்கவேண்டுமென்றும் ஜனனபூமிமட்டும் வெவ்வே றாக இருக்கவேண்டுமென்றும் பதத்தினால் விளங்குகிறது. வேறுபடும் ஜனனஸ்தானம் அடிக்கடி மாறுவதால் ஜனிக்கும் பதார்த்தத்தை உத்தே சித்து அது நசுவரமென்றும் ஜனிக்கிற பதார்த்தம் ஒரு ஜன்மத்துக்கு மேலிருப்பதால் ஜனனஸ்தானத்தை உத்தேசித்து ஸ்திரமென்றும் விளங் குகின்றன. பகவத்கீதையில் இரண்டாவது அத்தியாயத்தில் அர்ச்சுனனை ப்பார்த்து ஸ்ரீபகவான் சொல்லுகிறார்:—நித்தியனும் நாசமற்றவனும் அறியப்படாதவனும் தேகத்தை உடையவனுமாயிருக்கிற ஆத்மாவினு டைய இந்த தேகங்கள் முடிவை உடைத்தானவைகளாகச் சொல்லப்படு கின்றன. எவனொருவனைத்தான் கொல்லுகிறதாக நினைக்கிறானே அல்ல து எவன் ஒருவனால் கொல்லப்பட்டவனாக அறிகிறானோ அவ்விருவர்களு ம் அறிந்தவர்களன்று இவன் கொல்லுகிறவனல்ல கொல்லப்படுகிறவனும ல்ல. ஆத்மா பிறப்பற்றவன் நாசமற்றவன் ஒரேவிதமாயிருக்கிறவன்முன் னோன் ஆகையால் தேகமானது கொல்லப்பட்டபோதிலும் ஆத்மாகொல்ல ப்படுகிறதில்லை. பிறக்கிறதுமில்லை. இறக்கிறதுமில்லை. உண்டாய் மறுபடி யும் இருக்கப்போகிறதுமில்லை உண்டாய் மறுபடியும் உண்டாகப்போகிற தில்லை. மனிதன் எப்படிப் பழைய துணிகளை எறிந்து விட்டுப் புதியதுணி களைக் கிரகிக்கிறானோ அப்படி ஆத்மாவும் பழையஉடல்களை விட்டு வே று புதிய உடல்களைத் தரிக்கிறான். இதினால் தேகம் நாசமுள்ளதென்று

ம் தேகத்தை யுடையவன் நாசமற்றவன் என்றும் வெளியாகிறது. மானிடதேகத்திலிருந்து மிருகதேகத்திலும் பிறக்கக்கூடுமென்று சிலசாத்திரங்களில் சொல்லியிருந்தாலும் மனுஷிய சரீரத்தில் ஒருதரம் பிரவேசித்த ஆத்மா மறுபடியும் மிருகசரீரத்தில் பிரவேசிக்கமாட்டாதென்பதை இனி (132) விவரிப்போம். குப்தவித்தியாசாஸ்திரத்தின்படி சைதன்னியம் மனுஷிய சரீரத்தில் பிரவேசித்த பிறகு அது நாசமடைந்தபின் ஸ்வல்பகாலத்துக்குபிறகாவது, வெகுகாலத்துக்குப்பிறகாவது, வேறுமானிடசரீரத்தில் பிரவேசிக்கிறது என்பதே புனர்ஜன்மமாம். ஒருதந்துவில் அநேகமணிகள் கோர்க்கப்பட்டதுபோல் ஒரே சைதன்னியவிஷயமாய் அநேக சரீரங்கள் ஒன்றோடொன்று சேர்க்கப்பட்டிருக்கின்றன.

## புனர்ஜன்மமெதுவெடுக்கிறது-

129. அநேக மானிடஜன்மங்களில் ஜீவஸ்வபாவமுள்ள ஒரு பதார்த்தம்வசிப்பதே புனர்ஜன்மமென்று தெரிந்துகொண்டபிறகு அப்படி ஜனிக்கும் பதார்த்த மெது வென்று அறியத்தக்கது. இதற்கு மூதல் முதல் சரீரத்துடன் சம்பந்தம் எப்படி வந்ததென்பதை முக்கியமாய்த் தெரிந்துகொள்ளவேண்டியது. சப்தாம்சப் பிரகரணத்தில் (82-3) சச்சிதானந்தரூபமான ஆத்மபுத்தியே சகலசிருஷ்டிக்கும் மூலஆதாரமென்று சொல்லப்பட்டது. இந்தச் சரீரம் அநேககோடிவருஷமாய்ப் பக்குவமாய்க் கொண்டுவந்ததென்று முன்சொல்லப்பட்டது. இரண்டரைமன்வந்தரம் வரையிலும் மனுஷியசரீரம் மிருகரூபமாகவே இருந்து ஸ்தூலசரீரம் லிங்கசரீரம் பிராணன் காமம் இந்நான்கும் மிருகங்களுக்கும் மிருகரூபமனிதனுக்கும்இருந்தன. சைதன்னியமில்லாதவிடம் யாதொன்று மில்லாவிட்டாலும் அச்சைதன்னியம் மேன்மேல் விளங்க மிருகசரீரத்தில் தகுந்த உபாதிஇல்லாமலிருந்தது. மஹத்தத்துவத்தினின்றும் அபிவிர்த்தியாய்க் கொண்டுவரும்மானசிக புத்திரர்கள் இந்த மிருகரூபமானிட சரீரத்தைக் கண்டு இவைகள் தங்களுக்குத் தகுந்தவாசஸ்தானமென்று நினைத்து இரண்டரை மன்வந்திரமுதல் மூன்றரை மன்வந்திரம் வரையில் இவைகளில் குடிவந்துகொண்டிருந்தார்கள். இப்போதுதான் மனதின் பிரவேசத்தால் மிருகமானிடரூபம் சுத்தமனுஷிய ரூபமாயிற்று. மனதாகிற மானஸபுத்திரன் முதல் சரீரத்தில் சம்பந்தப்பட்டதுபோல ஒவ்வொரு சரீரத்திலும் அவதரிக்கிறான். மனிதன் என்கிறபதமே மனதின் சம்பந்தத்தை வியக்தமாய்த்தெரிவிக்கிறது.

130. இந்தமனிதனே தேவாம்சத்தையும் மிருகாம்சத்தையும் இணைக்குங்கட்டு. தான் ஸ்வயம் ஞானஸ்வரூபமாயிருந்தாலும் தன் சம்பந்தம்பெற்ற சரீரமாகிற உபாதியைச்சுத்தப்படுத்தி அதின் மூலமாக ஸ்வா

ப்ரம்மஞானத்தைச் சம்பாதிக்கும்பொருட்டே அனேக ஜன்மங்களை இந்த மானஸபுத்திரன் எடுக்கிறான். ஆகையால் ஜன்மங்கள் மனதுக்கே ஏற்பட்டிருக்கின்றன. ஆத்ம-புத்தி-மனதாகிற சேர்க்கைதான் ஜன்மம் எடுப்பதாகச்சிலர் சொல்லுவார்கள். இதில் பிசகு யாதொன்றுமில்லாவிட்டாலும், ஆத்ம-புத்தி அகண்டமாயும் எல்லாருக்கும் பொதுவாயுமிருப்பதால் விவேசனை செய்து பார்க்கின் மனதுக்கே ஜனனம் உண்டாவதாகச் செம்மையாகவிளங்கும். ஒரே ஜன்மத்தில் அநேக விஷயங்களினின்றும் ஒரு சாரத்தை நாம கிரகிப்பது போல அனேக ஜன்மங்களின் சாரத்தினின்றும் மனதானது தீர்மானமான ஞானத்தைச்சம்பாதிக்கிறது. இப்படிச்சம்பாதித்து மறுபடியும தன் ஸ்தானமாகிய பரமபதத்தை அடைவதற்கே புனர்ஜன்மம் ஏற்பட்டிருக்கிறது.

## புனர்ஜன்மம் எடுக்காதது எது.

131. மானசபுத்திரன் குடிவருமுன் மனுஷிய சரீரம் ஆகாரத்தைத் தரித்துக்கொண்டு வந்தது என்று முன் கண்டோம். மனதின் தேஜஸைப்பெற்றிராத ஜன்மம் முதல் பைத்தியக்காரனாக இருக்கிறவன் அவனுடைய ரூபம் மானிடமாயிருந்தாலும் அவன் மிருகத்துக்குச்சமானமாயிருக்கிறான். ஆகையால் இரண்டுவாக்கங்களையும் பேதப்படுத்தி காண்பிப்பது மனதே. இது மூளைமூலமாகத்தான் சக்திகளை வெளியிடுகிறதென்பது முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. மிருக-மானிடரூபம் மாதிரு கர்ப்பத்திலிருந்து ஜனிக்கிறது. மனது அத்துடன் கலந்து கொள்ளுகிறது. ஒரேமனது ஒரு ஜன்மத்தில் ராமனுடைய மூளைமூலமாகவும், ஒரு ஜன்மத்தில் கிருஷ்ணனுடைய மூளைமூலமாகவும் இப்படியே ஒவ்வொரு ஜன்மத்திலும் அதின் மிருக மானிட மூளைமூலமாகவும் வியா ரிக்கிறது. ஒவ்வொரு ஜன்மத்திலும் ஜனிக்கும் மூளை வெவ்வேறாக இருக்க அத்துடன் கலந்துவரும மனம் ஒன்றாகவே இருக்கிறது. அநேக உடுப்புகளைத்தரிக்கிற ஒருவன், தானே அந்த உடுப்புகள் ஆகாதது போல அநேக தோல் உடுப்புகளாகிற ஸ்தூலசரீரம், லிங்கசரீரம், காமரூபம் இவைகளைத்தரிக்கிற மனது அவைகளாகாது. ஸ்தூலசரீரம் முதலியவைகளின் அணுக்கள் பிரிந்துபோவதையும் வேறு சரீர உற்பத்திக்கு உபயோகப்பட்டுப்போவதையும முன் பார்த்திருக்கிறோம். ஆகையால் இவைகளுக்குப் புனர்ஜன்மம் சொல்லக்கூடாது. நாசமடையாத மனதுக்கே சொல்லவேண்டும்.

## மனிதன் மிருகமாகக்கூடுமா?

132. ஒருவன் ஒரு ஜன்மத்தில் மனிதனாக இருந்து மறு ஜன்மத்தில் மிருகமாக ஜனிக்கக்கூடுமென்று சிலர் சொல்லுகிறார்கள். ஒவ்வொரு ஜன்மத்திலும் பிரவேசித்துவருவது மனதேதவிர வேறில்லையென்றும், மிருகசரீரம் தங்களுடைய காரியத்துக்கு உபயோகப்படாததினால் இர

ண்டங்களை மன்வந்திரத்துக்குப்பின் மிருகமானிடசரீரத்தில மானசபுத்திரர்கள் பிரவேசித்து மனிதர்களை ஆக்கினுர்களென்றும் முன் சொல்லப்பட்டிருக்க, அப்போதே உபயோகப்படாத மிருகசரீரத்தில் இப்போது அவர்கள் எப்படிப்பிரவேசிக்கக்கூடும். ஆனல் ஜடபரதர் மான்ரூபமாகப்பிறந்தபடியால் மனிதன் மிருகமாகவும் ஜனிக்கக்கூடுமேயென்று ஆக்ஷேபித்தால் இதற்கு மனுஸ்மிருதியில் (12 அத்தியாயம் 40 சுலோகம்) என்ன சமாதானம் சொல்லியிருக்கிறதெனில், 'சத்துவரஜஸ்தமோகுணங்களில் சத்துவகுணம் தேவாம்சத்தையும், ரஜோகுணம் மானிட அம்சத்தையும், தமோகுணம் மிருகாம்சத்தையும் அடைகின்றனவேதவிர முக்குணங்களுடன் கூடினவன் மறுபடியும் மிருகமாகவே பிறக்கிறுன் என்பது அல்ல. ஒருவனை நரியென்று சொல்லுவதில் அவன் நரிவயற்றில் நரிரூபமாகப்பிறந்திருக்கிறுன் என்பது எப்படி நம்முடைய கருத்தல்லவோ ஆனுல் அவனுடைய கபடம் நரியின் கபடத்துக்குச் சமானமாக இருப்பதால் அவனை நரியாகச்சொல்லுகிறேமோ அப்படி மனிதன் மிருகமாகப்பிறக்கிறுன். என்பதையும் அறியவேண்டியது. பிரம்மவித்தையின்படி மனது மிருகரூபசரீரத்தில் பிரவேசிக்கமாட்டாது. ஒரு மானிடசரீரத்திலிருந்து வேறு மானிடசரீரத்தில் பிரவேசிப்பதே புனர்ஜன்மமாதலால் இது மனதிற்கு ஏற்பட்டிருக்கிறதேதவிர மிருகத்துக்கு ஏற்படவில்லை.

## புனர்ஜன்மம் உண்டாகும்விதம்

133. பிரம்மாண்டத்தின் தத்துவங்களும் அதாவது பூமிகைகளும் மனிதனுடைய தத்துவங்களும் சம்பந்தப்பட்டிருப்பதாக முன் சொல்லப்பட்டது.மனது மஹத்துவத்தின் அம்சமானதால் அதின் சக்திகளும், மனதிற்கு உண்டு. மஹத்தத்துவம் ரூபத்துக்கு ஆதாரம்.ஆகையால் மனதும் தன் சக்தியால் பாவனைக்கு ரூபம் கொடுக்கக்கூடும். மனதில் உதிக்கும் பாவத்துக்குக் கல்தச்சன், தச்சன், சித்திரக்காரன், கல்லிலும கட்டையிலும் படத்திலும் உருவத்தை கொடுக்கிறுர்களல்லவா? ஒருவன், மனேபாவத்தை அவன் சரீர. லக்ஷணத்திலிருந்து நாம் அறியவில்லையா? ஸ்தூலாணுக்களுக்கு மனேபாவம் தன் ரூபத்தை கொடுக்காதவரையில் இது எப்படி சாத்தியம். ஸ்தூலாணுக்களே மனேபாவத்தால் ரூபதைத்தரிக்கும்படி இருந்தால், சூக்ஷுமாணுக்களுக்கு வேண்டிய ரூப

த்தை மனோபாவம் தருவதில் சந்தேகமென்ன. ஆகையால் உருவத்தை க்கொடுக்கும் சக்தி மனதிங்கே இருக்கிறது. பிர்ம்மாண்டத்தில் 7 பூமிகைகளுண்டு. இதில் மனம் 5-வது. இவ்வேழிலும் முன் வருவதைபி ன் வருவதைப்பார்க்கிலும் ஸ்தூலம். பாவம் மனோதர்மம். ஆனதால் ஜனிக்கப்பட்ட ஒவ்வொருபாவம் மானசிக பூமிகையில் ரூபத்தைத்தரிக் கிறது. அதினின்றும் காமமானசிக நிலைமைக்கு வந்து அவ்விடத்தில் ஸ்வல்பஸ்தூலமாகிறது. அதினின்றும் லிங்கநிலைமைக்கு வந்து இன் னும் கொஞ்சம் ஸ்தூலமாகிறது. சமயம் வரும் வரையில் இந்தப் பூமி கையில் தான் அந்த பாவம் இருந்து சமயம் வந்தவுடன் ஸ்தூலாணுக்களு டன் கலந்து சாதாரண ஜனங்களுக்கு பிரத்தியக்ஷமாக ஒரு ரூபத்துட ன் அது விளங்குகிறது. கண்ணுக்குகோசரமாகாத அதி சூட்சுமமான பதார்த்தமும் ஸ்தூலமாகி பிரத்தியக்ஷமாவதற்கு ஜல உதாரணத்தைப் பார்க்க. கண்ணுக்குத்தெரியாத சில ஆவிகள் கண்ணுக்குத்தெரியும்படி யான சில ஆவிகளாகி பிறகு ஜலரூபமாகி ஜலம் பனிக்கட்டியாவதைப் பிரத்தியக்ஷமாய்ப் பார்க்கிறோம். ஆகையால் சூட்சுமரூபம் ஸ்தூலத் தை தரிக்குமென்பதில் சந்தேகமென்ன. இதுபோல், மனோபாவம் ஜ னித்தவுடன் எங்கும் நிறைந்த பிரகிருதியுடன் கலந்து அதிசூட்சுமமான ரூபத்தைத்தரிக்கிறது. ஆவியாவது போல காமமன நிலைமையில் ரூப ம் தரித்து ஜலமாவதுபோல லிங்கபூமிகையில் சூட்சும ரூபத்தையும் ஜலக்கட்டிபோல் ஸ்தூலபூமிகையில் ஸ்தூலரூபத்தையும் தரிக்கிறது. அப்பிரத்தியக்ஷம் பிரத்தியக்ஷமாகும் என்பதும் கந்தமூலாதிகளைப் பார் க்கிறதினாலும் தெரியும். அப்பிரதியக்ஷமான சில வாயுக்களைக் கிரகி க்காமல் எப்படி இவைகள் வளர்கின்றன. ஆகையால் அதிசூட்சுமமான ரூபங்கள் அதிஸ்தூல ரூபத்தைத் தரிப்பது சகஜம். ஆகையால் ஸ்தூல வியவஹாரங்களெல்லாம் சூட்சும காரணங்களின் காரியங்களேள் தவிர வேறில்லை. குப்தவித்தையின்படி இந்த ஸ்தூல தேகமும் சூட்சும கா ரணத்தின் காரியமே. பாத்திரத்தை வார்க்கிற வார்ப்புக்காரனுடைய மண்குகைபோலிருக்கும் லிங்கசரீரமாகிற குகையில் ஸ்தூல சரீரம் வார் க்கப்படுகிறது. சித்திரத்தின் பாவத்தை மனசில் தரிக்கிறவன் அந்தப் பாவத்துக்குக் காகிதத்தில் முதலில் பென்ஸிலால் சூட்சுமரூபத்தைக்கொ டுத்துப் பிறகு வர்ணம் முதலியவைகளால் ஸ்தூலரூபத்தைக்கொடுப்ப து போல், சூட்சுமபாவம லிங்கசரீரமாகி ஸ்தூலசரீரமாகிறது.

134. நம்முடைய வியவகாரத்தில் பிரதிக்ஷணமும் நாம் மனோபாவங்களை உண்டுபண்ணிக் கொண்டே இருக்கிறோம். இந்தப் பாவங்கள் நம்மைச் சுற்றியிருக்கும் ஆகாசத்தில் பதிந்து க்ஷணத்துக்கு க்ஷணம் விர்த்தியடைந்துக்கொண்டே வருகின்றன. இவைகளின் சேர்க்கைப்பலன் தான் மனிதனுடைய குணமாக விளங்குகிறது. மரண சமயத்தில் அதிக சூட்சுமமான சரீரங்கள் ஸ்தூலத்தைவிட்டுப் பிரிகின்றன. லிங்க சரீரம் மட்டும் ஸ்தூலத்தைப்போல நாசமடைகிறது. பழைய அனுபவங்களின் காரியமான பாவனா சரீரத்தின் ஸ்திதியைப்பற்றி அதிக விவரம் சாதாரண ஜனங்களுக்குச் சொல்லப்படவில்லை. ஆயினும் நிச்சயமாய் எல்லாருக்கும் தெரியவருவது யாதெனின் புனர் ஜன்மகாலம் வருவதற்குமுன் இந்தப்பாவனா சரீரம் லிங்க நிலைமைக்கு வந்து அந்நிலைமையின் அணுக்களைத் தரித்து இனி ஜனிக்கப் போகிற ஸ்தூலசரீரத்துக்கு லிங்க சரீரமாகத்தயாராயிருக்கிறது. ஸ்தூல மூளையும் ஸ்தூல சரீரம்போல் இந்த லிங்க சரீரத்தால் உண்டாவதால் இந்த மூளையின் ஆகாரமும் முந்தின மனோபாவங்களைப் பொறுத்திருக்கிறது. நல்ல மனிதன் அன்பு முதலிய பரோபகார பாவங்களையே உண்டு பண்ணுகிறான். இவைகள் புனர் ஜன்மகாலத்தில் லிங்கரூபத்தைத்தரித்து அனுகுணமான இடங்களில் ஸ்தூல ரூபமாய் வெளியாகி விர்த்தியாகின்றன. கெட்டமனிதன் ஸ்வப்பிரயோஜனத்தையே உத்தேசித்து ஸ்வப்பிரயோஜன சம்பந்தமான பாவங்களையே உண்டுபண்ணுகிறான். புனர் ஜன்ம காலத்துக்கு முன் இந்தப் பாவங்கள் லிங்கரூபத்தைத்தரித்து அவைகளுக்கு அனுகுணமான இடங்களில் ஸ்தூலரூபத்தை யெடுத்துமனிதனாகக் காணப்படுகின்றன. ஆகையால் இப்போது காணப்படுகிறமனுஷிய ஆகாரம் முன் உண்டு பண்ணின பாவங்களின் காரியமே தவிரவேறில்லை. பிறவிமுதல் காணப்படும் மனோகுணங்கள் முந்தின காரணங்களின் காரியங்களே. இப்படியே இந்த ஜன்மம் மறுஜன்மத்தையும் இப்படியே மேன்மேலும் ஜன்மங்கள் உண்டாகின்றன. ஒவ்வொரு ஜன்மத்திலும் மனதின் ஆவிர்ப்பாவம் அபிவிர்த்தியாகிக்கொண்டே வருவதில் மனது தான் நிரந்தரமானதென்றும் நசித்துப்போகும் சரீரம் நாமல்லவென்றும் மனிதனுக்குத் தெரியவந்து இந்தப்பாவனை பலப்படபலப்பட மிருகஸ்வபாவம் குறைய்க்குறைய கடைசியாக சுத்ததெய்வரூபத்தை மனிதன் அடைகிறான்.

135. புனர்ஜன்மத்தின் பிரயோஜனம்முன் சொல்லியபடி இது யாதெனின் மிருக—மனுஷியரூபத்தைத் தெய்வரூபத்துக்கு உபயோக

மர்கும்படியான கருவியாக ஒழுங்குபடுத்தித் திருத்துவதேயாம். மன் தே. இந்தச் சிட்சையில் சம்பந்தப்பட்டிருக்கிறது. இப்படித்தெய்வா ம்சம் அடையும் மார்க்கமெப்படியெனில்:—மிருக-மானிடரூபத்தில் மானஸ்புத்திரன் குடிவந்தகாலத்தில் அந்த வீடு நாம் அறியும் ஸ்தூலாணுக்களால் கட்டப்படவில்லை. இப்படிப்பட்ட சரீரத்திலுள்ள மூளை மூலமாக வியவகரிக்கும் மனது தன்னுடைய சர்வதிருஷ்டி சர்வஞ்ஞதை முதலான குணங்களை விளங்கும்படிச் செய்கிறது. நம்முடைய தற்கால மூளை மூலமாக விளங்குகிற மானசிக குணங்கள் அக்காலத்தில் விளங்கவில்லை. ஸ்தூலாணுக்களுடன் சேர்ந்தபிறகுதான் இந்தமானசிககுணங்கள் தோன்றுகின்றன. அக்காலத்தில் சரீரங்கள் வெகு சூட்சுமமான அணுக்களால் செய்யப்பட்டிருந்தபடியால் வெகுஇலேசான மறைவிலுள்ள பதார்த்தங்கள் வருத்தமன்றியில் தெரியவருவதுபோல் ஒருசரீரத்தின் மனதில் விளங்கும் பாவங்களை வேறுசரீரத்திலுள்ள மனது தானுக்வே அறியும்படி இருந்தது. இப்படிப்பட்ட சரீரத்தில் சாக்ஷாத்ஞானமே ஜனித்துக்கொண்டிருந்தது. காலம் செல்லச்செல்ல மனோபாவங்கள் ஸ்தூல அணுக்கள்மூலமாக விளங்கும்படி நேரிட்டபோது ஸ்தூலாணுக்களில் மனோபாவங்கள் முன்போல சீக்கிரத்தில் பதிய முடியாமல் யுக்தியாலும் பாஷையாலும் ஒருசரீரத்தினின்று மற்றொருசரீரத்துக்குப் பேர்கும்படி நேரிட்டது. சூட்சுமத்தைப்பார்த்தல் கேட்குதல் முதலியவை சூட்சுமசரீரமூளையின் தர்மங்கள். ஸ்தூலத்தைமட்டும் அறிவது நம்முடைய ஸ்தூலமூளையின் தர்மம். இதுவரையில்மனதின் சக்திகள் சூட்சுமத்துவாரா ஸ்தூலமூளைமூலமாக வெளியாய்க்கொண்டு வந்தன. இந்த மூளை பக்குவமானவுடன் வருத்தமன்றியில் சூட்சுமபாவங்களை உடனுக்குடனே முன்போல் அறிவது மூளையின் மேல்விர்த்தி லக்ஷணம். இப்போது சூட்சுமபாவத்தை அறியாமல் மத்தியில் இழந்திருந்த சக்தியும், மூளைமூலமாக விளங்கும் சக்தியும் இரண்டும் விளங்குகின்றன. இச்சக்திகள் விருத்தியாகமனதின் சாட்சாத்ஞானசக்திகளெல்லாம் நேரில் விளங்குகின்றன. இப்படிச்சாட்சாத்தாக விளங்கும் சக்தியையுடையவர்களில் சிலர் இக்காலத்திலும் காணப்படுகிறார்கள். இவர்களை மஹான்கள் எனப்படுகிறார்கள். இவர்களுடைய சரீரம் இவர்களை எவ்விதத்திலும் பந்தத்துக்கு உட்படுத்துகிறதில்லை. இவர்களுடைய ஆஞ்ஞையை நிறைவேற்றத்தான் இந்தச்சரீரம் இருக்கிறது. மனது தன் நிலைமையில் சாதாரணமாய் வியவஹரிக்கக்கூடும், மற்றநிலைமைகளில் விய

வஹரிக்கமாட்டாது. ஆகையால் எல்லாநிலைமைகளிலும் வியவஹரிப்பதற்கு எல்லாநிலைமைகளிலுமிருந்து அனுபவங்களைச் சம்பாதிக்கவேண்டியது. அப்போதுதான் எல்லாநிலைமைகளிலுமிருந்து வியவஹரிக்கும் சாமர்த்தியம் ஜனிக்கும். இதின்பொருட்டுத்தான் அதிசூட்சுமமான மானஸபுத்திரர்கள் சரீரத்துடன் சேர்ந்து அதின்மூலமாய் அனுபவத்தைச்சம்பாதிக்கிறார்கள். இதுதான் புனர்ஜன்மங்களின் முக்கியப்பிரயோஜனம்.

136. பிரகிருதியை சுத்தமாய் ஜயித்து எல்லாநிலைமைகளிலும் இருக்கக்கூடிய மஹாபுருஷன் அடியிற்கண்ட இரண்டுகாரியங்களில் ஒன்றைச்செய்யக்கூடும். இந்த லோகத்தில் தெரிந்துகொள்ளவேண்டியதெல்லாம தெரிந்துகொண்டுவிட்டபடியால் மேல் அபிவிர்த்திக்கும் மோக்ஷதசைக்கும் இதர நிலைமைகளைத்தேடலாம். அல்லது, தன் சொந்த மோக்ஷத்தைவிட்டு ஜனோபகாரார்த்தமாய் மறுபடியும் தன் சுவேச்சையால் வேண்டிய சரீரத்தைத்தரித்து ஜனங்களையும் மோக்ஷமார்க்கத்தில் சேர்ப்பிவிக்கப்பிரவிர்த்திக்கலாம். இவர்களுக்கு நிர்மாணகாயர்கள் என்று பெயர். இப்படிப்பட்டவர்கள் இப்போதுமிருக்கிறார்கள். ஜனனமரணாதி சம்சாரசக்கரத்தினின்றும் விடுபட்டதுபோல மற்றஜனங்களும் விடுபடவேண்டுமென்று புத்திகொள்ளும் மஹாபுருஷர்களை உண்டாக்குவதே புனர்ஜன்மத்தின் பிரயோஜனம்.

## புனர்ஜன்மகாரணம்.

137. பிர்ம்மாண்டமுதல் சகலவஸ்துக்களும் வியக்தாவ்யக்தஸ்திதிகளை அடைகின்றன; அதாவது சிலகாலங்களில் பிரத்தியக்ஷமாயும், சிலகாலங்களில் அப்பிரத்தியக்ஷமாயுமிருக்கின்றன. இவைகளுக்குப்பிர்ம்மத்தின் பகல்காலமென்றும் இரவுகாலமென்றும் பெயர். இப்படி நிலைமைகள் மாறி மாறி வரவேண்டியகாரணம்மட்டும் நாம் அறியோம். இருக்குவேதத்தில் (X-129) காமமே காரணமாகச்சொல்லப்பட்டிருக்கிறது. காமத்தால்தான் வியக்தநிலைமை அடையப்படுகிறது. தேவதைகள் இந்தக்காமத்துடன் சேர்ந்தவுடன், அது பலப்படுகிறது. "இச்சாமாத்திரம் பிரபுசிருஷ்டி" என்று சொல்லியபடி இந்தக்காமமே பிர்ம்மாண்டமுதல் எதுவும் விஜரிம்பிப்பதற்குக்காரணமாகிறது. இந்தக்காமமே புனர்ஜன்மத்துக்கும் காரணமென்பது பகவத்கீதையில் (4-வது அத்தியாயம்) சொல்லப்பட்டிருக்கிறது. "எவனுடைய கர்மங்கள் ஆசையும் சங்கல்பமும் அற்றிருக்கின்றனவோ அவனை விவேகியாக ஞானிகள் சொல்லுவார்கள். காமத்தில் ஆசையைவிட்டுச்சரீரச் செய்கைகளைச் சரீரத்தால் செய்துக்கொண்டு மோக்ஷத்துக்கு அவன் பாத்திரனாகிறான். அதாவது, புனர்ஜன்மத்திற்குப்பாத்திரனாகிறதில்லை."

138. புனர்ஜன்மத்துக்கு இச்சையே காரணமானதால் இதைக் கொல்லவேண்டுமென்பது இப்போது நன்றாயத் தெரியும். ஆயினும் சகல அனுபவஞானத்தையும் அடையும்பொருட்டே பிரகிருதி புருஷசம்பந்தம் ஆதிமுதல் உண்டாயிருக்கிறபடியால் இச்சையை விடுவென்பதினால் எல்லா இச்சையையும் விட்டு விடவேண்டுமென்பது கருத்தன்று. தன் சரீரசம்பந்தமான இச்சைகளையும் அபிமானத்தையும் விட்டுத்தன் அபிமானத்திற்குச் சகலபிராணிகளும் பாத்திரர்களாகவேண்டியதென்பதே கருத்து. தன்னிடத்திலும் தன்னைச் சேர்ந்தவைகளிடத்திலும் அபிமானத்தை விடவேண்டியதென்பதினால் அவைகளைத் துவேஷிக்கவேண்டியதென்பது கருத்தன்று. தான் உள்பட சகலபிராணிகளிடத்திலும் அபிமானம் ஒரேவிதமாய் இருக்கவேண்டுமென்பதேயாம். கர்மம்செய்யாவிட்டால் சரீரங்கூட நசித்துப்போகுமானதால் கர்மபலாபேக்ஷையை விட்டுவிடவேண்டுமென்பதே கருத்து. மோக்ஷத்துக்குக் காரணம் ஆத்மஞானம், இது நிஷ்காமகர்மமன்றியில் ஜனிக்கமாட்டாது. ஆகையால் கர்மத்தைச் செய்யவேண்டியது. அதின் பலத்தில் ஆசையைமட்டும் விட்டுவிடவேண்டியது. காரணம் காரியத்தைக் கொடுக்காமல் போகமாட்டாது. ஆசையை உண்டுபண்ணினால், அதுதீராமல் நிவர்த்தியாகமாட்டாது. ஸ்தூலப் பிராபஞ்சிக ஆசை சாகும்முன் நிறைவேறாமல் இருந்தால், அது ஸ்தூலபூமியில் நிறைவேறவேண்டுமாகையால் அதின் பொருட்டு ஸ்தூலபூமிக்கு அவசியம் வரவேண்டும். இப்படி வருவதற்கு ஸ்வர்க்கலோகத்தில் வசிப்பதாக முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. எப்படி எப்பொழுதும் வேலை செய்ய முடியமாட்டாதோ அல்லது எப்போதும் போஜனம் செய்துகொண்டே இருப்பது முடியமாட்டாதோ அப்படி எப்போதும் பிரபஞ்சத்திலேயே இருப்பதுமுடியாது. ஜீவனுக்கு ஸ்வல்ப சாந்தி வேண்டியது. இதற்காகவே சுவர்க்க லோகவாசம் ஏற்பட்டிருக்கிறது. சிரமபரிஹாரம் ஆனபின்தான் மறுபடியும் வேலையை ஆரம்பிக்கமுடிவதுபோல் சுவர்க்கத்தில் சிரமபரிஹாரம் செய்து கொண்டு ஜீவன் மறுபடிபூலோகத்தில் ஜனிக்கத்தயாராவான். ஜனன்மரணரூப சம்சாரச்க்ரத்தின் முடிவில் கடைசியான 7 ஜன்மங்களில்தான் ஜீவன் இந்தச்சுவர்க்கலோகசிரமபரிஹாரத்தை அபேக்ஷிக்கிறதில்லை. அது அனடந்திருக்கும் பலம் சிரமத்தை ஜெயித்து விடுகிறது

139. ஜனனபூமி, சாதி, குலம் முதலியவை எதினால் தீர்மானிக்

கப்படுகின்றன. மனது இவைகளை சுவேச்சையால் தேடுகிறதா? அல்லது நிர்பந்தத்தாலா? அல்லது வாசனாபலத்தாலா? கர்மபலத்தால் முன் ஜன்மத்தில் இது அடைந்திருந்த குணங்களுக்கு அனுகூலமாயும், முன் விதைத்தவிதையின் பலத்தை அனுபவிக்கத்தகுந்ததாயுமிருக்கிற இடத்தில்தான் ஜனனம் சம்பவிக்கிறது.

140. ஸ்திரீபுருஷரூப பேதங்களைக்கொடுப்பது யாதெனில், எல்லாகுணங்களும் ஆவிர்ப்பாவத்தை அடைந்து அபிவிர்த்தியாகுவதே புனர்ஜன்மத்தின் பிரயோஜனமானதினாலும்; ஸ்திரீபுருஷர்களிடத்தில் வெவ்வேறு குணங்கள் காணப்படுவதாலும், இப்போது காணப்படாத குணங்களை அபிவிர்த்திசெய்யும்பொருட்டு இப்போது ஸ்திரீரூபமானால் மறு ஜன்மத்தில் புருஷரூபமும், அப்படி இப்போது புருஷரூபமானால் மறு ஜன்மத்தில் ஸ்திரீரூபமும் சாதாரணமாய் விளங்கும் என்று தோன்றுகிறது. இந்த விஷயத்தில் நிச்சயஞானம் சாதாரணஜனங்களுக்குக்கொடுக்கப்படவில்லை.

## புனர்ஜன்ம அவசியம்.

141. மனிதன் ஒரு தடவைதான் ஜனிக்கிறான் என்றும், அந்த ஒரு ஜன்மமேமரணத்துக்குப்பின் நித்யஸ்திதியை நிர்ணயஞ்செய்கிறதென்றும் சிலர் நினைக்கிறார்கள். சம்சாரத்தின் பாரத்தை வகிக்கும் சாமர்த்தியம் பால்யத்தின் ஒருநாள் அனுபவத்தால் கிடைக்குமா? இதுபோலப்பூர்ணஞானத்தைச்சம்பாதிக்கவும் சகல அனுபவங்களைப்பெறவும் ஒரு ஜன்மத்தின் 70 ௵ போதா. சிருஷ்டியில் மனிதன் அடையவேண்டிய பிரயோசனத்தையும் அதற்காக அவன் எடுத்துக்கொள்ளும் பிரயத்தனத்தையும் ஆலோசித்துப்பார்த்தால் மேற்சொல்லியது நன்றாய் விளங்கும். எங்கும் விர்த்தி அம்சமே பிரத்தியக்ஷமாய்த்தெரிவதால், மனிதனும் தன் ஸ்திதியிலிருந்து தெய்வத்தின் ஸ்திதியை அடைவதும் பிரம்மாண்டதத்துவங்களை அறிவதுமே அவன் அடையவேண்டிய முக்கியப்பிரயோசனமாக இருக்கிறது. இதற்குத்தற்காலத்தில் அவனுக்கு இருக்கும் சிட்சை என்னவெனில் ஒருவித நிலைமையில் ஸ்வல்ப அனுபவமும் ஸ்தூல இந்திரியங்களால் அடையப்படும் ஞானமுமே. இந்த சிட்சையுடன் இறந்தமாத்திரத்தில் பூர்ணஞானிகளை அடையயோக்கியனா?

142. இந்த அயோக்கியத்தன்மை அடியில்கண்ட மூன்று காரணங்களில் ஒன்றால் நிவிர்த்தியாகக்கூடும்.

(1) மரணமே அதை நிவிர்த்திக்கக்கூடும்.

(2) மரணத்துக்குப் பிறகு ஒருவித சிட்சை.

(3) அடிக்கடி பூலோகத்தில் ஜன்மமெடுப்பது. மரித்தமாத்திரத்தில் ஞானஐசுவரியாதிகள் கிடைக்குமாயின் எல்லாருடைய பின்தின ஸ்திதியும் ஒரே விதமாய் இருக்கவேண்டும். இது யுக்திக்கு விரோதம். நூதன சிட்சையும் அடியில் கண்ட 9 விஷயங்களால் ஒவ்வாது. ஆகையால் புனர்ஜன்மத்தையே அங்கீகரிக்கவேண்டும். இந்தவிஷயங்களைப் புனர்ஜன்மம் திருப்தியாக விளக்கிவைத்தால் இந்த மதமே சரியானதாகும். அவைகளாவன:—

(1) இந்த லோகத்தில் இத்தனை விதமாய் ஜீவன் ஜீவிக்கக்கூடுமென்னும் ஞானம் குறைவாகஇருக்கும். ஒவ்வொருவிதமான அநுபவத்தையும் அடையாதவரையில் பூர்ணனுபவி என்று ஒருவனைச் சொல்லக்கூடாது. ஒருஜன்மம் சகலமான அநுபவங்களையும் கொடுக்கமாட்டாதென்பது எல்லாருக்கும் தெரிந்தவிஷயமே.

(2) ஜீவஇரக்கம் பரோபகாரம் மனோதைரியம் பொறுமை நன்றிஅறிவு முதலிய உத்தமகுணங்கள் பூர்ணமாய் விளங்க ஜனங்களுடன் சம்பந்தத்தைப் பூர்ணமாய் அபேக்ஷிக்கிறது. மரணத்துக்குமுன் இவைகள் பக்குவமாய் விளங்காமல் போய்விட்டால் இக்குறையை புனர்ஜன்மமே நிவிர்த்திக்கும்.

(3) ஒருஜன்மத்தில் தன்னுடைய ஸ்திதியால் தான்கொண்ட ஆசைகளைத் திருப்திசெய்து கொள்ள முடியவில்லை யென்றுமட்டும் ஒருவன் அறியக்கூடும். எந்தஸ்திதியிலும துக்கநிவர்த்தியும் சுகப்பிராப்தியும் உண்டாகமாட்டாதென்பதற்கு எல்லாஸ்திதிகளிலு மிருந்து பரிக்ஷை பார்க்கவேண்டியது. காலாந்தரத்தில் பிரகிருதிசம்பந்தத்தால் ஆசை தீரமாட்டாதென்பதை ஜீவன் அறிந்து ஆத்மாவுடன் சேரப் பிரயத்தனம் செய்கிறான்.

(4) நாம் சரீரம் அன்று என்று அறிந்தவர்கள் வெகுஸ்வல்பம். அநாத்மப் பிராந்தி நீங்காமல் ஆத்மஞானம் சித்திக்கமாட்டாது. பிராந்தி ஒருநாளில் அல்லது ஒருஜன்மத்தில் நீங்கமாட்டாது. ஆகையால் அநேக ஜன்மம் வேண்டியது.

(5) சகோதரபாவம் ஒரு ஜன்மத்தில் நன்றாய்ப் பிடிபடமாட்டாது. எல்லாம் பரப்பிர்ம்மத்தின் அம்சங்கள். ஒன்றும் மற்ற எதிலும் நின்றும் பிரிந்திருக்கவில்லை. இந்த ஞானம் பேதஞானமிருக்கும்வரையில் விளங்கமாட்டாது. இதற்கு ஒருஜன்மம் போதாது.

(6) ஏழையானவன் பணக்காரனுடைய அனுபவங்களை இச்சித்திருந்தால் பணக்காரனுடைய நிலைமையிலிருந்துதான் இந்த ஆசை தீர வேண்டும். ஆகையால் இது அடிக்கடிப்பூலோகத்துக்கு இழுக்கும். இதினால் மரணத்துக்குப்பிந்திய சிட்சை தடைபடும்.

(7) ஜன்மம் ஒன்றானால் சுத்த நியாயம் கிடைக்கமாட்டாது. எந்த எந்த நிலைமையில் எந்த எந்த காரியங்கள் செய்யப்படுகின்றனவோ அந்தந்த நிலைகளில்தான் அவைகளின் பலன்கள் அனுபவிக்கப்பட வேண்டுமென்பது நியாயம். அடித்தவனுக்கு மனோவருத்தம் சரியானபலன் அன்று. அடிக்குப்பிரதி அடியே சரியானபலன். அப்படியே நன்மையும். ஒரு ஜன்மத்தில் இந்தப்பலன்களுக்கு அவகாசமில்லாவிடில் அநேக ஜன்மங்கள் வேண்டியது அவசியம்.

(8) பூர்ணத்தன்மை அடைவதற்கு அநேக சிட்சைகள் வேண்டியது. மரணத்துக்குப்பிறகு சிட்சை ஒருவிதமாய் மட்டுமிருக்கக்கூடுமானதால், புனர் ஜன்மம் அவசியம் வேண்டியது.

(9) ஒவ்வொரு சிசுவும் ஒவ்வொரு சரீரத்துடனும் நூதனமாக சிருஷ்டிக்கப்படுமேயானால், தாய் தந்தைகளிடமிருந்து கர்ப்பத்தில் கிரகித்த அம்சங்களையே அது அபிவிர்த்தி செய்யக்கூடும். அநேகஜன்மங்களிலிருந்து அது வருவதாக இருந்தால் அவைகளில் சம்பாதித்திருந்தவைகளையும் கூடவேகொண்டுவந்து அவைகளை மேன்மேல் அபிவிர்த்தி செய்யக்கூடும். இப்படி அபிவிர்த்தியாவதால் கடைசியில் தெய்வாம்சம் கிடைக்கும். புனர்ஜன்மம் இல்லாவிடின் இதற்கு இடமில்லை.

மேற்சொல்லிய 9 விஷயங்களையும் யோசித்துப்பார்க்குமளவில் ஒரு ஜன்மம் ஜீவனுக்குப்போதாதென்பது நன்றாய் விளங்கும்.

## புனர்ஜன்மருசு

143. புனர்ஜன்மமுண்டு யென்பதற்கு அநேக ருஜுக்கள் உண்டு. சில மற்றும் அடியில் குறிக்கப்பட்டிருக்கின்றன.

(1) தங்களுடைய முந்திய ஜன்மங்களை சிலர் அறிகிறார்கள். 10-வது த்துக்கு முன் நாம் இருக்கவில்லை என்று நாம் நம்பும்படி நம்மை ஒருவரும் செய்யமுடியாததுபோல முந்தின ஜன்மங்கள் அவர்களுக்கு இருந்திருக்கவில்லை யென்று அவர்கள் நம்பும்படி செய்ய ஒருவராலும் முடியாது.

(2) தாய்தந்தைகளிடத்தில் காணப்படாத குணங்கள் சிசுக்களிடத்தில் காணப்படுவதால் அவைகள் முந்தியஜன்மங்களினின்றும் தொடர்ந்து வந்திருக்கவேண்டும்.

(3) யோக்கியன் வம்சத்தில் அயோக்கியனுடைய ஜன்னம், அப்படியே அயோக்கியன் வம்சத்தில் யோக்கியனுடைய ஜன்னம், ஒரு தாயின் வயற்றில் பிறந்தவர்களில் குணங்கள் வெவ்வேறாய்த்தோன்றல். இவையெல்லாம் புனர்ஜன்மத்தையே அபேக்ஷிக்கின்றன.

(4) இரட்டைப்பிள்ளைகள் பார்வைக்கு ஒன்றாய் இருந்தாலும், கர்ப்பத்திலும் சேர்ந்திருந்தாலும், அவர்களுடைய புத்திபேதத்துக்குக் காரணம் முந்தியஜன்மத்தில் விட்டகுறையேதவிர வேறில்லை. பாலியத்தில் தாய்க்குக்கூட பேதம் தெரியாமல் அவர்களுடைய உருவம் இருக்கக்கூடும். வயது சென்றபின் மனதின் பிரவிர்த்தி பலப்பட பலப்பட உருவமும் ஸ்வல்பம் வித்தியாசத்தைக்காண்பிக்கிறது. இந்தவித்தியாசத்துக்கு முந்தினஜன்மத்தின் மனோவிர்த்தியின் சாரம்தவிர வேறு என்ன காரணமிருக்கக்கூடும்.

(5). ஒரு தாயின் வயற்றில் பிறந்த அநேகர்களில் ஒரு சிசு அதிமேதாவியாயிருப்பதற்கு இதைத்தவிரக்காரணமில்லை.

(6) ஒரு விஷயம் இரண்டு பிள்ளைகளுக்குச் சொல்லப்பட்டால் ஒருவன் சீக்கிரத்தில் கிரகிப்பானேன் மற்றொருவன் தாமஸமாய் கிரகிப்பானேன். முந்திய ஜன்மத்தில் சிட்சை யடையப்பட்டதும் அடையப்படாததுமே இந்த வித்தியாசத்துக்குக் காரணமாகும்.

(7) யுக்திசாதனமன்றியில் தத்துவத்தைச் சொன்னமாத்திரத்தில் சாக்ஷாத்தாய் அறிவது யுக்திசாதனங்கள் முன்னமேயே அடையப்பட்டிருக்கவேண்டும் என்பதைக் காண்பிக்கிறது.

(8) பிறவிமுதல் காணப்படும் தாரித்திரியம் பாக்கியம் ரோகம்முதலியவைகாரணமன்றியில் நேரிடுமா?

(9) ஜனன மிருப்பதற்கு மரணமுமுண்டு. ஜீவன் மரணமில்லாத மோக்ஷத்தை அடையலாமானால் அவன் முந்திய ஜனனமில்லாமலுமிருக்கவேண்டும்.

(10) பூலோகத்தில் சிலவிடங்களில் ஜனங்கள் புத்திஹீனர்களாயும் சிலவிடங்களில் புத்திமான்களாயும் ஜனித்து மரிக்கிறார்கள். முன் சொன்னவர்களின் புத்தி பக்குவமாவதற்கு அடிக்கடி ஜனனம் வேண்டியது.

(11) சரித்திரத்திலும் 1500 வருஷங்களுக்கு முன் இருந்தவர்களே மறுபடியும் வருவதாய்த் தோன்றுகிறது.

(12) சில மானிடவர்க்கங்கள் நாசமடைந்து வருகின்றன. அவ்வர்க்கத்திலுள்ள ஸ்திரீகள் மலடிகளாகிக் குழந்தைகள் பிறப்பதே துர்லபமாய்க் கடைசியில் அந்தவர்க்கமே இல்லாமல் போய் விடுகிறது. இதற்குக் காரணமென்ன, புனர்ஜன்மவாதி சொல்லுவதாவது:—அந்த வர்க்கத்தில் அடையக்கூடிய அநுபவஞானத்தை ஜீவன் அடைந்து விட்டபடியால் மறுபடியும் அதில் ஜனனம் எடுக்கப்பிரயோஜனமில்லை. ஆகையால் நூதன வர்க்கத்தில் ஜீவன் பிறக்கிறான். இந்த புதுவர்க்கத்தின் ஜனனமும் பழையவர்க்கத்தின் நாசமும் புனர்ஜன்மத்தால் தான்விளங்கும்.

இன்னும் அநேக ருஜுக்களைக் காட்டக்கூடும். கிரந்தம்விரியும் என்னும் பயத்தால் மேற்சொல்லியவை போதுமானவை.

## ஆக்ஷேபசமாதானங்கள்

144. (1) பூலோகத்தில் நாம் இதற்கு முன் வசித்திருந்தால் அதை நாம் அறியாததற்குக் காரணமென்ன. அப்படி இருந்திருந்தால் ஸ்மரணை இருக்கக்கூடும்.

*சமாதானம்:*—ஸ்மரணை என்பது மூளையின் சக்தி. மூளையில் பதிந்திருக்கும் விஷயத்தினை ஸ்மரணை வரக்கூடும். மூளையில் பதியப்படாதது எப்படி ஞாபகத்துக்கு வரக்கூடும். நம்முடைய மூளை நம்முடைய ஸ்தூலசரீரத்தில் ஒருபாகம். ஸ்தூலசரீரம் நாசமடைவதால் ஸ்தூலமூளையும் நாசமாகிவிடுகிறது. ஆகையால் இப்போதிருக்கும் மூளை நாம்முந்தினஜன்மத்தில் பெற்றிருந்த மூளையன்று. ஆகையால் இந்த மூளைமூலமாக முந்தியஜன்மத்திய விஷயம் ஞாபகத்துக்கு எப்படி வரக்கூடும். முந்திய ஜன்மத்தின் ஞாபகம் பெறவேண்டுமானால் இரண்டு ஜன்மங்களையும் எது சேர்க்கிறதோ அதாவது எது இரண்டிலும் சம்பந்தப்படுகிறதோ அதின் சாதகம் வேண்டியது. ஒவ்வொருசரீரத்துடனும் மனது கலந்து கொள்ளுகிறதென்றும் அதற்கே புனர்ஜன்மம் இருக்கிறதென்றும் முன் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் முந்தியஜன்மத்தின் ஞாபகம் சுத்தமனதின் பலத்தால் தான் கிடைக்கக்கூடும். அது அமுங்கியிருக்கும் வரையில் அசுத்தமனது முந்தினசங்கதிகளை அறியமாட்டாது.

(2) ஜனகணிதிப்படி ஒரு காலத்தில்விட வேறு ஒருகாலத்தில் அதிக ஜனங்கள் காணப்படவேண்டிய காரணமென்ன?

*சமாதானம்:*—ஜகத்தின் ஜனகணிதி எப்போதும் எடுக்கப்படவில்லை. ஆகையால் அதிகம் என்று எப்படி நிச்சயமாய்ச் சொல்லலாம். ஜன்மம் எடுத்தவர்களை காட்டிலும் ஜன்மம் எடுக்கவேண்டியவர்கள் அதிகமாயிருப்பதால் பிரபஞ்சத்தில் ஒருகாலத்தில் அதிகஜனங்கள் இருக்கக்கூ-

டும். இந்த லோகம் பிர்ம்மாண்டத்தில் ஒருபாகம் ஒருபட்டணத்தில் ஒரு வீடுபோலும். வீட்டுக்கு வரும் ஜனங்கள் அதிகமானாலும் குறைவானாலும்பட்டணத்திலுள்ள ஜனசங்யையில் வித்தியாசம் வருகிறதில்லை.

(3) நல்ல குலத்தில் அயோக்கியன் ஜனிப்பானேன்? முன் செய்த கர்மபலன்தான் இதற்குக்காரணம். இப்படிஅநேக ஆக்ஷேபங்களும் சமாதானங்களும் உள—கிரந்தம் விரியும்என்னும்பயத்தால் எழுதப்படவில்லை.

## ஐந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

# பிர்ம்மஞானச்சுருக்கம்

## ஆறுவது அத்தியாயம்.

### கர்மம்

145. முந்தின தரங்கத்தில் மனிதன் தன்னுடைய அசுத்தர்ம்சங்களைப் போக்கி தெய்வபாவத்தை அடையும் பொருட்டு அடிக்கடி பூமியில் ஜனிக்கிறான் என்று சொல்லப்பட்டது. இந்தப் புனர்ஜன்மத்தை நிர்ணயம் செய்வது கர்மம். காரணத்துக்குத் தக்கபடி காரியம் தவறாமல் ஜனிக்கும் என்பதே கர்மத்தின் ஸ்வரூபம். இந்தக் காரியகாரணநியமத்தை ஸ்தாபிப்பது யாதெனில் காரணமன்றியில் காரியமில்லை என்பதும் காரணத்தை அனுசரித்துக் காரியம் இருக்கிறதென்பதும், ஒன்று இருந்தால் மற்றொன்று இராமல் போகமாட்டாது என்பதுமே. கர்மம் என்றால் கிரியை. ஆயினும் கிரியையையும் அதின் காரியமான பலனையும் இணைக்கும் நியமம் கர்மம் என்றும் சொல்லப்படுகிறது. ஒவ்வொருவனுடைய நடத்தையின்படி பலன் கொடுப்பதே நியாயம். இதுவேகர்மம். ஜனங்களுடைய கிரியைகளை ஒழுங்குபடுத்தும் யமனே இந்தக் கர்மம (யமயதீதியம:) பக்ஷபாதமன்றியில் பலனைக் கொடுப்பதால் சமவர்த்தியென்றும் தர்மராஜன் என்றும் யமன் சொல்லப்படுகிறான். ஆகையால் இது அறிவுள்ள நீதிபோலிருக்கிறது.

146. இது இன்னதென்று நாம் அறியக்கூடாவிட்டாலும் இதின் செயல் நமக்கு நன்றாய்த் தெரியவரும். காரணத்தை அனுசரித்துக் காரியம் ஜனிக்கிறது என்னும் நியமம் பிர்ம்மாதி பிபீலிகைவரையில் ஒவ்வொரு பூமிகையிலும் காணப்படுகிறது. ஒரு குறிப்பான விதமாய் இது விளங்கும் என நியமமில்லை. ஆனால் பிர்ம்மாண்டத்தில் ஸ்வபாவநிலைமையில் எப்போது வேறுபாடுகள் நேரிடுகின்றனவோ அப்போது அவைகளைக் கர்மம் திருத்தி சமத்துவத்துக்குக் கொண்டு வருகிறது. உதாரணம்:- ஒரு குளத்தில் ஜலம் ஸ்தம்பமாயிருக்கும்போது ஒருகல்லை அதில் எறிந்தால் அலைகள் உண்டாகிக் கல்விழுந்தவிடம் முதல் சக்கராகாரமாகப் பரவுகின்றன. குளத்தின் கரையில் மோதுவதால் அந்த அலைகள் தடைபட்டுத் திரும்பி மறுபடியும் மூலஸ்தானத்துக்கு வந்துவிடுகின்றன. பிறகுதான் குளம் முன்போல ஸ்தம்பமாகிறது. இதுபோல பிர்ம்மாண்டத்தில் எந்தச் செயலும் ஸ்வபாவநிலைமையில் வேறுபாடு உண்டுபண்ணுகிறது. மறுபடியும் ஸ்வபாவம் தன்நிலைமைக்குத் திரும்புகிறது இதுவே கர்மம். பிர்ம்மாண்டங்கள் சூரியமண்டலங்கள் லோகங்கள் முதலியவை உண்டாகிறதும் லயமடைவதும் கர்மத்தின் வியாபாரமே.

147. ஒருவன் ஒரு கிளையை அதின் ஸ்தானத்திலிருந்து வளைக்கிறுன். அதிகபலமாய் அதை வளைப்பதில் இவன் கைவிட்டு அதுபோகிறது. அப்படிபோகையில் இவனுக்குக் காயம் நேரிடுகிறது. இப்போது கிளைக்காயம் உண்டுபண்ணினதாகச் சொல்லலாமா. அது தன் ஸ்தானத்துக்குத் தான்திரும்பிற்று. இவனுடைய பலம் இவனுக்குக்காயத்தை உண்டுபண்ணினதேதவிரக் கிளைக்கு இவனிடத்தில் யாதொரு கோபமுமில்லை. இதுபோல நம்முடைய சுகதுக்க அனுபவங்களுக்கு நாமே காரணமேதவிர வேறு ஒன்றுமில்லை. விதைக்கு வேறாகப் பலன் உண்டாகமாட்டாது. எந்த இடத்தில் எந்தச் செயல் கலக்கமுண்டுபண்ணுகிறதோ அந்த இடத்தில் அந்தக் கலக்கம் திரும்பி லயமடையாதவரையில் ஸ்வபாவநிலைமை சித்திக்காதுபோல ஒருவன் செய்யும் கர்மபலன் அவனுக்கே முக்கியமாய்த் திரும்பிவருமேதவிர வேறுஒருவனுக்குப் போகமாட்டாது. சத்கர்மத்தைச் செய்கிறவன் சுகத்தையும் துஷ்கர்மத்தைச் செய்கிறவன் துக்கத்தையும் அனுபவிக்கவேண்டியது. கர்மம் மானசிக, வாசிக, காயிகமாக இருக்கக்கூடுமானதால் பலனும் மூவகையாகும். மேலும் கர்மம் (1) சஞ்சிதம் (2) பிராரப்தம் (3) ஆகாமியென மூவகைத்து. இந்த ஜன்மத்தில் பலனுக்கு வந்திருப்பது பிராரப்தம். பலனுக்குவராத முந்தியஜன்மங்களின் கர்மம் சஞ்சிதம். இப்போது செய்யப்பட்டு இனிமேல் வருவது ஆகாமி. கர்மம் மோக்ஷபலத்தைக் கொடுக்கமாட்டாது என்பது விசாரசாகரத்தில் விவரமாய் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

148. நாம் செய்யும் கர்மத்தின் பலத்தை அனுபவித்தே தீரவேண்டும். இந்தப்பலன் சம்பவிக்காமலிருக்கும்படி செய்ய ஒருவனாலும் முடியாது. கைவிட்டுப்போனபாணம் அடித்தேதீரும். உபாசனையாலும் பிரார்த்தனையாலும் தெய்வத்தின் அனுக்கிரகத்தைப்பெற்று செய்தகுற்றங்களின் மன்னிப்பு அடையலாம் என்று சிலர் வீணசைகொள்ளுகிறார்கள். பிர்ம்மாண்டத்தில் மன்னிப்பு என்பது கிடையாது. அசங்கபரமாத்மாவைத்தவிர சத்தியமானது வேறு யாதொன்றுமில்லாதபடியால் மன்னிப்பு யாரால் கிடைக்கக்கூடும். ஒருவனுடைய கெட்டசெயல் மன்னிக்கப்பட்டு அதின் துக்கரூபபலன் அவனுக்கு உண்டாகாமல் போவதும் அச்செயலால் தீங்கடைந்தவனுக்குச் சமாதானம கிடைக்காமல் போவதும் வெகு அயுக்தம். மன்னிக்கும்படி தெய்வத்துக்குச்சக்தியிருந்தால் தீங்கு அடைந்தவனுடைய தீங்கையும் நிவிர்த்திக்கக்கூடுமே. தீங்கு நீங்காமலிருக்க மன்னிப்புமட்டும் சாதகியமென்று நினைப்பதற்குக் காரணமென்ன. காரணத்துக்குத்தக்கபடி காரியம் சம்பவிப்பது நியாயமாயிருக்க தீங்கு செய்தவன் விஷயத்தில் மட்டும் இந்த நியமத்துக்குவிலக்கு இருப்பானேன். வெங்கலப்பாத்திரத்தைத்தட்டுவதால் உண்டாகும் சப்தம் பாத்திரம் எடுபடுவதால் போய்விடுமா? புலியென்று விடப்பட்டபாணம் பசுமாடு என்று அறிந்தமாத்திரத்தில் அடிக்காமல் போகு

மா? இதுபோல் செய்தசெயலின் பலன் விசனப்படுவதினால் போய்விடு மா? கர்மமானது வேண்டுமென்று ஒன்றையும் செய்கிறதில்லை. காரண த்துக்குத்தக்கபடி பலனைக்கொடுக்கிறது. இதினால் அதினிடத்தில் கோ பதாபங்கள் இருப்பதாக நினைக்கக்கூடாது. காரணங்களுக்கு ஆதாரம் மனிதன். இவனுடைய செயலால் உண்டான அஸ்திரதையை நீக்கு வதே கர்மத்தின் செய்கை.

149. பிரபஞ்சத்தில் பிரார்த்தனை என்னும் ஒரு வியவஹாரம் ஏற் பட்டிருக்கிறது. தாங்கள் செய்த குற்றங்களின் மன்னிப்பைத்தெய்வத் தினிடத்தில் பெற்றுக்கொள்ளலாம் என்றும் வேண்டிய பொருளைத் தெய்வானுக்கிரகத்தினால் பெறலாம் என்பதும் சாதாரணஜனங்களுடை ய அபிப்பிராயம். நம்முடைய குற்றங்களை ஒருவன் மன்னித்துவிட்டா ல் அவைகளை அடிக்கடிச்செய்ய நம்முடைய தைரியம் பலப்படுமேயன் றியில் நாம் நல்வழியில் செல்லமாட்டோம். இதனால் ஜனங்களுக்கு துக் கமதிகமாகுமேதவிர வேறில்லை. நாம் கேட்கும் பொருளை கொடுப்ப தே உபாசனையின் பலனாகில், அப்பொருளை சம்பாதிக்க நம்மிடத்திலுள் ள சக்தியில் நமக்கு நம்பிக்கைபோய்விடும், நாம் யாதொரு பிரயாசையும் எடுத்துக்கொள்ளமாட்டோம். நம்மிடத்தில் அகம்பாவமும் ஸ்வப்பிரயோ சனதிருஷ்டியும் விருத்தியாகும். இதனால் பிறருக்கு ஹிம்சையும் அதிக ப்படும். ஒரு வேலைக்காரன் வேலைசெய்யாமல் எஜமானை கூலிகொடுக் கப் பிரார்த்தித்தால், எஜமான் கூலி கொடுப்பானா? அப்படியே யாதொ ரு பிரயாசையன்றியில் பொருள் எப்படி நாம் சம்பாதிக்கக்கூடும். நா ம் இச்சிக்கும் பலன் நம்மையே பொறுத்திருக்கிறபடியால் சாதாரணமா ய் ஜனங்கள் நினைக்கிறபடி பிரார்த்தனையிலும் உபாசனையிலும் ஞானி களுக்கு நம்பிக்கை இல்லை. உபாசனை சித்திக்க, உபாசகன், உபாசிக்க த்தக்கவஸ்து, உபாசனையாகிற கர்மம் இம்மூன்றும் சித்திக்கவேண்டும். எங்கும் வியாபகமான பரமாத்மாவைத்தவிர வேறு ஒன்றுமில்லாத விட த்தில் யார் யாரை உபாசிக்கிறது. மேலும் அசங்கமானது உபாசனையை எப்படி அங்கீகரிக்கும். இதினால் ஞானிகள் நாஸ்திகர்கள் என்றும் அவ ர்களுக்கு யாதொரு பிரார்த்தனையுமில்லை என்றும் நினைக்கக்கூடாது. பிர ம்மத்துக்கு வேறாகாத தங்கள் தங்களுடைய பிரத்தியகாத்மாவை அவர் கள் பிரார்த்திக்கிறார்கள். பொருள் சம்பாதிக்கவேண்டும் அல்லது பிரா பஞ்சிக இஷ்டகாரியம் சித்திக்கவேண்டுமென்பது இந்தப்பிரார்த்தனையி ன் கருத்தன்று. பிரகிருதி சம்பந்தத்தால் மூடப்பட்டுப்போன தாங்க ள் பந்தத்தில் நின்றும் விடுபட்டு தங்களுடைய மூலஸ்தானமாகிய பர மாத்மாவுடன் சேரவேண்டுமென்கிற தீவிரமான இச்சையே உபாசனை என்னப்படும். இது ஹிருதயத்திலுள்ள பரமாத்மாவை நோக்கியதே ஒழிய வேறு தெய்வத்தை நோக்கவில்லை. இப்படிப்பட்ட பிரார்த்தனை யைப் பிரதிதினமும் ஒவ்வொருவனும் அப்பியசிக்கவேண்டியது.

150. மனிதனுடைய செய்கை கர்மாதீனமா? அல்லது ஸ்வேச்சாதீனமா? விஷ்ணுபுராணம 6-வது அம்சம் 7-வது அத்தியாயத்தில் சொல்லியிருக்கிறதாவது:— மனிதர்களுக்கு மனம் விடயங்களைப்பற்றி நின்றால், பந்தத்துக்குக்காரணமாகும், அவற்றைப்பற்றாமல் நின்றால் மோக்ஷத்துக்குக்காரணமாகும். ஆகையால், பந்தத்துக்கும் மோக்ஷத்துக்குங் காரணம் மனமேயாகின்றது. ஆகையால் பிரகிருதி புருஷேசுவர ஞானமுள்ளவன் அம்மனதை விஷயங்களினின்றும் திருப்பி அதைக்கொண்டு பரப்பிர்ம்மமான சர்வேசுவரனை மோக்ஷத்திற்காகத்தியானிக்கவேண்டும்.' சாந்தோக்கிய உபநிஷத்தில் (III—XIV—I) சொல்லியிருக்கிறதாவது:-- மனிதன், இச்சையின் காரியம். இந்த ஜன்மத்தில் அவன் இச்சை இருக்கிறபடி மறுஜன்மத்திலிருப்பான். ஆகையால அவன் சுத்தமான இச்சையைக்கொள்ளவேண்டும்'' இருக்குவேதத்தில் (VIII—XIX 20) ஒரு இருஷி காமாதிகளை ஜயிக்க மனோதைரியத்தை அபேக்ஷித்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி இருக்க எல்லாம் ஈசுவர ஆஞ்ஞையால் நடக்கிறதென்றும், மனிதனுக்கு ஸ்வதந்திரமில்லை என்றும் சர்வஜனங்களும சாதாரணமாய்ச் சொல்லுவதற்குக் காரணம் என்ன. அடியில்கண்டவைகளில் ஒன்று இருக்கக்கூடும்.

(1) சில ஜனங்கள் தங்களுக்கு யாதொரு ஸ்வதந்திரமுமில்லை என்றும் எந்தச்செயலும் ஈசுவர ஆஞ்ஞையால்தான் நடக்கிறதென்றும் நினைக்கிறார்கள். இப்படி நினைப்பதால் உண்டாகும கெடுதியை அவர்கள் கவனிக்கிறதில்லை. இந்த மதத்தால் தெய்வம இஷ்டப்படி செய்யக்கூடுமென்றும், யுக்தியுக்தியுடன் கூடின மனிதன் கேவலம் யந்திரம்போலவென்றும் நினைக்கவேண்டியது. இஷ்டப்படிச்செய்கிறதினால் புண்ணியபாபங்கள் வியர்த்தமாய்விடுமேயெனில் இந்த மதஸ்தர்கள் புண்ணியபாபத்தை அனுசரித்துத்தான் செயல்களைச் செய்யும்படி தெய்வம் செய்வதாகச்சொல்லுகிறார்கள். அப்போது புண்ணியபாபத்தை முதலில் செய்யும்படிச்செய்தது யாது. இவையெல்லாம் ஆலோசித்துப்பார்க்குமளவில் தெய்வத்துக்குச்சுத்த ஸ்வதந்திரமும மனிதனுக்குப்பரதந்திரமும் யுக்திக்கு ஒவ்வவில்லை.

151. (2) பகவத்கீதை 18-வது அத்தியாயம், மஹாபாரதம் அனுசாஸனபர்வம் 6-வது அத்தியாயம் முதலிய இடங்களில் செய்த கர்மத்தின் பலனைக்குறிப்பிட "தெய்வம்" என்னும் சம்ஸ்கிருதபதம் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. இப்பதத்தினால் தேவதையின் சம்பந்தமிருப்பதாகத்தோன்றுகிறது. தெய்வம் என்னும் பதத்திற்குச்சாதாரணமான அர்த்தம் தேவதையின் சம்பந்தமாக இருந்தாலும், இதற்கு ஒரு விசேஷ அர்த்தமுமுண்டு. அமரகோசத்தில் தெய்வம் என்னும் பதத்திற்கும் இ

ன்னும் வேறு ஐந்து பதங்களுக்கும் அர்த்தம் கர்மத்தின் பலன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. மத்சியபுராணம் 219-வது அத்தியாயத்திலும் வாயுபுராணம் 8-வது அத்தியாயத்திலும் தெய்வம் என்பதற்குக்கர்மபலன் என்று வியுக்தமாய் சொல்லப்பட்டிருக்கிறது. மஹாபாரதம் அனுசாசனபர்வம் 6-வது அத்தியாயத்திலும் இன்னும் அநேக சமுஸ்கிருதக்கிரந்தங்களிலிருந்தும் இந்த அர்த்தம் ஊகிக்கப்படும்படியிருக்கிறது. பகவத்கீதை (II 71 XIV 20) சொல்லுகிறதாவது "எவன் சமஸ்த விஷயங்களையும் விட்டு ஆசை, மமதை அகங்காரங்களற்று இருக்கிறானோ அவன் சகல துக்கங்களிலிருந்தும் விடுபட்டு மோக்ஷத்தை அடைகிறான்." "தேகத்தை உண்டாக்கப்பட்ட முக்குணங்களை அதிக்கிரமித்துப்பிறப்பு ... மூப்பு துக்கங்களினால் விடப்பட்டவனாய், ஜீவன் பிர்ம்மானந்தத்தை அடைகிறான்." தெய்வமே வேண்டுமென்று பந்தத்தை உண்டுபண்ணியிருந்தால் அதில் நின்றும் மனிதன் தப்பித்துக்கொள்ளமுடியுமா? ... தை மனிதனே உண்டுபண்ணிக்கொண்டதாக நினைத்தால், அதிலிருந்தும் அவனே தப்பித்துக்கொள்ளக்கூடும். கர்மபலனைக்குறிப்பிட்டு தெய்வம் என்னும்பதத்தை உபயோகித்ததின் கருத்து, அது மிகவும் ...யமானது, அதை அலக்ஷியம் பண்ணத்தகாது என்பதைக்காட்டுவதற்கேயாம்.

152. (3) பகவத்கீதையில் 9-வது அத்தியாயம் 4-வது சுலோகத்தில் "சகல பூதங்களும் என்னிடத்தில் இருக்கின்றன." என்று பகவான் சொல்லியிருப்பதால் மனிதனுக்கு ஸ்வதந்திரம் இல்லை என்று சொல்லுகிறார்கள். மேற்சொல்லிய வசனத்தினால் சுவாமியின் ...ம் விளங்குகிறதேதவிர ஈசுவர ஆஞ்ஞையன்றியில் ஒரு விரல் அசைக்க மனிதனுக்கு ஸ்வதந்திரமில்லை என்பது அர்த்தமன்று ...யில் கண்ட பகவத்கீதை வசனங்களாலும் மனிதனுடைய சுவ... நன்றாக விளங்கும்:— (III. 5) "தன்னிடத்திலுள்ள பிரகிருதியால் ஒவ்வொருவனும் காரியம் செய்யும்படி செய்யப்படுகிறான்." ... ஈசுவரன் ஜனங்களுக்காக கர்த்திருத்துவத்தையாவது, கருமங்களையாவது, கர்மபலன்களில் பற்றுதலையாவது உண்டாக்குகிறதில்லை. ஸ்வபாவமே அதாவது மாயையானது பிரவிர்த்திக்கிறது." (V 15-16):— "அஞ்ஞானத்தினாலே விவேகமானது மூடப்பட்டிருப்பதினால் மனிதர்கள் மோகிக்கிறார்கள். பிர்ம்மஞானத்தினால் யாருடைய அஞ்ஞானமானது நசிப்பிக்கப்பட்டிருக்கிறதோ, அவர்களுக்கு ஞானமானது சூரியனைப்போல் பரப்பிர்ம்மஸ்வரூபத்தைப் பிரகாசிப்பிக்கிறது. ஆகையால் (VI-5) விவேகமுள்ள தன் மனசினாலே தன்னை சமுசாரசமுத்திரத்திலிருந்து மனிதன் கரையேற்றிக்கொள்ளவேண்டியது." (XVII-63):— "பூர்த்தியா யாராய்ந்து எப்படி இச்சிக்கிறா

ஞே அப்படி மனிதன் செய்யவேண்டியது." மேற்சொல்லிய வசனங்கள் (இன்னும் அநேகமுள) மனிதனுடைய சுவதந்திரத்தை ஸ்தாபிக்காவிட்டால், அவைகளுக்கு வேறு அர்த்தம் என்ன இருக்கக்கூடும்? ஆகையால் மனிதன் செய்யும் செயல் கர்மாதீனமா அல்லது இச்சாதீனமாவென்று கேட்டகேள்விக்கு, இரண்டும் உண்டெனவே சொல்லவேண்டும். இது எப்படி ஒவ்வுமெனில் செய்தகர்மங்களின் பலன் மட்டும் இவனுடைய இச்சையைப்பொறுத்திருககாமல், இனி செய்யப்போகிற கர்மம் இவனுடைய இச்சையைப்பொறுத்திருக்கும். நூதனமாய்ச்செய்யப் போகிற கிரியைகளில் இவனுடைய ஸ்வதந்திரத்தை உபயோகிக்கலாமேயொழிய செய்தகர்மம் இவன் இச்சையன்றியில் பலனைக்கொடுத்தே தீரும்.

153. ஒருவன் துக்கத்தைச் சகிக்க கர்மநியாயத்திலுள்ள நம்பிக்கையே முக்கியமான சாதகமாகும். சிலர் அரோகியாயும், சிலர் ரோகியாயும், சிலர் பணக்காரராயும், சிலர் தரித்திரர்களாயும், இருப்பதை நாம் பார்க்கிறோம். ஒருவன் சுகியாயும் ஒருவன் துக்கியாயும் இருப்பதற்குக் காரணமென்ன? ஈஸ்வரன் அப்படிச் சிருஷ்டித்திருப்பதாகச் சொன்னால் அவரிடத்தில் பக்ஷபாதம் சம்பவிக்கும். அன்றியும் மனதிற்கும் திருப்தியுண்டாகமாட்டாது. காரணமில்லாமல் ஒவ்வொருவனுடைய ஸ்திதியும் வெவ்வேறு விதமாய் இருக்குமா. இவைகளின் காரணம் தெரிந்தால் இவைகளை ஒருவன் பொறுத்துக்கொள்ளுவதுமல்லாமல் மறுபடியும் துக்கம் சம்பவிக்காத மார்க்கத்தையும் தேடக்கூடும். தன் சுக துக்கத்தைத்தானே தேடிக்கொள்ளுகிறான் என்றும் அவைகள் தற்செயலாக கிடைக்கவில்லை என்றும், தன்னுடைய முந்திய ஜன்மங்களின் கர்மங்களே தன் சுக துக்க பலன்களுக்குக் காரணமென்றும் அறிந்த மாத்திரத்தில் அவைகளிடத்தில் ஒரு வெறுப்புப் போய் மனிதன் சாவதனப்பட்டு மறுபடியும் துக்கம் நேரிடாமலிருக்கும்படி தன் நடத்தையைத் திருத்திக்கொள்ளுகிறான். இந்த நியாயத்தை அறிந்தவன் பிறருடைய சுகத்தால் தான் தனக்குச் சுகம் கிடைக்குமென்பதைக் கண்டு பிறருடைய சுகத்தையே முக்கியமாய்த் தேடுவான். ஆகையால் கர்மத்தில் நம்பிக்கை ஜனங்களுக்கு அவசியம் வேண்டியது.

154. ஒவ்வொருவனுடைய கர்மமும் சேர்ந்து ஒருவர்க்கத்தின் கர்மமாக முடிகிறது. எல்லா வர்க்கங்களின் கர்ம சமுஷ்டி பிரபஞ்சத்தின் கர்மமாகிறது. துக்கப்படும் ஒரு வர்க்கம் சுகத்தைப் பெறவேண்டியதேயாகில் அதில் அடங்கிய ஒவ்வொருவனும் தன்னாலான சத்கர்மத்தைச்செய்யவேண்டியது. இந்தச் சமஷ்டி சத்கர்மத்தால் தான் சமஷ்டி துக்கம் நாசமடையும்.

155. இந்தக் கர்ம நியாயத்தின் விஷயங்களை நாம் பொதுவாய் அறியக்கூடுமேயொழிய அதின் இரகசிய விவரங்கள் ஞானிகளே அறிவார்கள். இவர்களைப்பற்றிமுன் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இவர்களுடைய சக்திகளை அடையவேண்டுமென்கிற இச்சை எல்லாருக்கும் இருக்கக்கூடும். ஆனால் அவைகளைப்பெற ஏற்பட்டிருக்கும் விதிகளைத் தவறாமல் அநுஷ்டிக்கவேண்டியது. இவைகளைக்கண்டு மயங்காத தைரியசாலிகள் வெகுஸ்வல்பம். நான், தன்னுடையது என்னும் அபிமானத்தைவிட்டு எல்லாரும் பரப்பிரம்மத்தின் அம்சங்களானதால் எல்லாரினிடத்திலும் சமபுத்திவைக்க வேண்டியது முக்கியம்.

ஆறுவது அத்தியாயம்.

முற்றிற்று.

---

# பிர்ம்மஞானச்சுருக்கம்

## ஏழாவது அத்தியாயம்

### தர்மம்

156. முந்தின அத்தியாயங்களினின்றும் பரமாத்மாவைத்தவிர வேறு ஒன்றும் சத்தியமில்லை என்பதும், எந்த ஜீவனும் எந்த ஜீவனிடத்திலிருந்தும் பிரிந்திருக்கவில்லையென்பதும், ஆனதால் ஒவ்வொரு ஜீவனுடைய சுகமும் மற்ற ஜீவர்களின் சுகத்தைப்பொறுத்திருக்கிறதென்பதும், நன்றாய் விளங்கிவரும். நம்முடைய சரீரத்தில் அநேகக்கிருமிகள் இருப்பதுபோல் ஹிரணியகர்ப்பசரீரத்தில் அநந்தகோடிஜீவர்கள் இருக்கிறார்கள். நம்முடையசரீரத்தில் யாதானுமொரு அவயவத்தில் வியாதிமுதலியவை பீடிக்குமேயாயின், மற்ற அவயவங்களுக்கும் அதினால் முழுசரீரத்துக்குமே எப்படிச்சுகம் கிடைக்கவில்லையோ, வியாதிமுதலியவைகளை நிவிர்த்திக்கும் பொருட்டு அவயவங்களெல்லாம் பிரவிர்த்திப்பதுபோல், ஹிரணியகர்ப்பசரீரத்திலுள்ள அநேக ஜீவர்களில் எந்த ஜீவனுக்காவது துக்கமிருக்கும்பக்ஷத்தில், அது மற்றவர்களைக்கொஞ்சங்கூடப் பாதிக்காமல் எப்படிச்சுகத்தைக்கொடுக்கும். பெரிய குளத்தில் எறியப்பட்ட சிறு கல்லால் உண்டாகும் வர்த்துலமான அலைகள் குளமுழுமையும் பரவாமலிருக்கிறதில்லை. ஆகையால் ஒருவன் செய்கை எவ்வளவு சுவல்பமாகிலும் எல்லாரையும் பாதிக்காமல் விடாது. ஒருபாகத்தில் துக்கமிருக்க முழுவதில் சுகம் உண்டாகமாட்டாது. ஆகையால் சுகப்பிராப்தியின் பொருட்டு ஒவ்வொருவனும் பிறருடைய துக்கத்தை நீக்கத்தன்னாலானமட்டில் பிரயத்தனம் செய்வது அதிக அவசியம். இந்த அத்தியாயத்தில் மனிதன் நடந்துகொள்ளவேண்டிய விதம் சுருக்கமாய்ச்சொல்லப்படும்.

157. ஆத்மஞானவிர்த்தியடையும் கிரமத்தைப்பற்றி குப்தவித்தை சொல்வதாது.

1. ஞானமடையவேண்டிய வழியின் சாராம்சமானது மனிதசுபாவத்தில் மிகவும் உத்கிருஷ்டமானதாயும் ஆத்மசம்பந்தமானதாயுமுள்ள விஷயங்களில் கருத்தைச்செலுத்தவேண்டியதை யெல்லாத்தொழிலுக்கும் மேலாகப்பாவிக்கவேண்டியது.

2. இப்படிச்செய்வது நான்கு விதத்தால் சாத்தியமாகும். அவை யாவையெனின்:—

(1) எல்லாவிதமான சுயப்பிரியத்தையும் நீக்கி மற்றவர்கள் நன்மைக்காகவே கைம்மாறு கருதாமற் பாடுபட்டு, எல்லாரிடத்திலும் கருணையோடிருக்குங்குணத்தை விர்த்திசெய்யவேண்டியது.

(2) பரமாத்மாவை தியானம் செய்தல் முதலிய கிரியைகளால் ஞானக்கண்ணைப்பெற முயலுவது.

(3) விஷயசம்பந்தமான எல்லாவித அபிமானத்தையும் ஆத்மாவின் கட்டளையைவிட மேற்செல்லாதபடி உறுதியுடன் புத்திபூர்வமாய் அடக்குதல்.

(4) தானிருக்கும் நிலைமைக்குத்தகுந்தபடி செய்யவேண்டியகாரியம் ஒன்றையும் விடாமல் அதனால் விளையும் பயனைத்தெய்வப்பிரமாணங்களுக்கு விட்டு விட்டு நிஷ்காமியமாய்ச்செய்வது.

3. எந்த ஜீவனுடனும் வியவஹரிக்கும்போது தன் விஷயத்தில் மற்றவர்கள் எப்படி நடந்துகொள்ளவேண்டுமென்று தோன்றுகிறதோ அப்படியே அவர்கள் விஷயத்தில் நடக்கவேண்டியது.

4. தன்னைச்சேர்ந்தவர்களிடத்திலும் இப்படியே நடந்துகொள்வதுடன் விவாகாதி சம்பந்தத்தால் ஏற்றுக்கொண்டிருக்கும் பொறுப்பையும் சரியாய் நிறைவேற்றவேண்டியது.

5. அந்தக்கரணத்தை சுத்திசெய்து, மனசாட்சியைத்தவிர யாதொன்றுக்கும் பயப்படாமலும் பிறருடைய தூஷணையைக்கவனிக்காமல் தன் மனசாட்சிக்குச்சரியாய்த்தோன்றியதை அரைகுறையாக இல்லாமலும் செவ்வையாயச்செய்யவேண்டியது.

6. தன்னால் கூடியமட்டில் தர்மத்தைச்செய்யவேண்டியது. பிறர்படுந்துக்கத்தை நிவர்த்திக்கசாமர்த்தியமில்லை என்று நினைத்துச்சும்மாவிருக்கக்கூடாது. அக்கினிபாதையில் அகப்பட்ட வீட்டிலிருந்து கைவிட்டு எறியப்பட்ட பதார்த்தங்களே மிச்சப்பட்டு உபயோகப்படுவதுபோல, தர்மத்தில் செலவு செய்வதினால் கைவிட்டுப்போவதே ஒருவனுக்கு உபயோகமாகுமேதவிர வேறு ஒன்றுமாகமாட்டாது.

7. அபராதத்தை க்ஷமிக்கவேண்டியது. ஒருவன் செய்தகுற்றத்தை அவனுடைய கர்மம் திருத்திவிடும். நாம் அதில் அனாவசியமாகப் பிரவேசிக்கவேண்டியதில்லை.

8. வீண்காலக்ஷேபம் செய்யாமல் பிறருடைய உபயோகத்திற்காகவே காலத்தை உபயோகிக்கவேண்டியது.

9. தன் அபிவிர்த்தியே மேலானதாக நினைக்கக்கூடாது.

10. தனக்குத்தெரிந்தமட்டில் பிறருக்கு உபதேசம் செய்யவேண்டியது.

11. தன் குறைவுகளை எப்போதும் அங்கீகாரம் செய்துகொண்டு அவைகளை நீக்கவேண்டியது.

12. பிறரை நிந்திக்கலாகாது. நம்மைச்சேராதவர்கள் விஷயத்தில் தூஷணைவார்த்தையை எப்போதும் உபயோகிக்கக்கூடாது. நம்மைச்சேர்ந்தவர்கள் விஷயத்திலும் ஏகாந்தத்தில் பிறருடைய நன்மையையுத்தேசித்து நல்லபுத்திசொல்லவேண்டியது.

13. நித்தியாநித்திய வஸ்து விவேகம், விஷயபோகங்களில் வைராக்கியம், விஷயங்களில் மனதையும் இந்திரியங்களையும் போகாமல் தகைத்தல், மோக்ஷமடையவேண்டுமென்கிற இச்சை இந்நான்கு சாதனங்களையும் அப்பியசிக்கவேண்டியது.

14. முக்கியமாய்த்தான், தனது என்னும் அபிமானத்தை மலினப்படுத்திக்கொண்டுவரவேண்டியது. முதல் அத்தியாயத்தில் சொல்லிய சகோதரபாவத்தை ஒருக்ஷணமும் மறக்காமல் சகல வியவஹாரங்களிலும் கவனிப்பதே ஒருவனுடைய அபிவிர்த்திக்குச்சாதகமாயிருக்கும்.

மேற்சொல்லியவைகளின் மனப்பூர்ண அப்பியாசத்தால் மஹான்களுடைய ஞாபகத்தில் வந்து ஞானமார்க்க விஷயத்துக்கு வேண்டிய உபதேசங்களை நம்முடைய யோக்கியதைக்குத்தக்கபடி அவர்களிடமிருந்து பெற்று மேன்மேல் அபிவிர்த்தி பெறலாமென்பதில் யாதொரு சந்தேகமுமில்லை.

ஹரி: ஓம்.

தத் சத்.

---

# சுருக்கம்

---*---

பிரம்மஞானமானது அநாதியாயுள்ளது. அது பெரும்பான்மையும் இந்தியாவிலிருந்த பூர்விக இருஷிகளாலும், சிறுபான்மை இதர தேச மகான்களாலும், அநுபவித்த அநுபவங்களை ஆதாரமாகக்கொண்டு ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் சுபாவத்தைப்பற்றியும் ஜீவத்துவத்தைப்பற்றியும் உள்ள உண்மைகளைக்காட்டுகிறது. அதை அப்பியசித்துக்கொண்டிருக்கும் மாணுக்கருள் சிறந்தோர், இந்த ஞானமானது வெறுங்கற்பனையாயாவது அநுமானமாயாவதிராமல், அதனை அடையவேண்டியதற்கான சாதனைகளை சாதிக்க விரும்புவரேனால் பிரத்தியக்ஷமாய் அநுபவித்து அறியப்படுகிறதென்று வற்புறுத்துகிறார்கள். அதன் முக்கியமான கோட்பாடுகளுள் சில என்னவென்றால்:—

I. மனிதனில் சத்தியமானதாயும் சாசுவதமானதாயுமிருப்பது அவனது ஆத்மா ஒன்று மாத்திரந்தான். மற்றவை, பிரகிருதியிலிருந்துண்டான தத்துவங்களின் வெவ்வேறுவிதமான சேர்க்கையாலானபடியாலும் சேர்க்கை வஸ்துவாயிருக்கிற ஒவ்வொன்றிற்கும் நாசத்துவம் சுபாவசித்தமாயிருப்பதாலும், அழியத்தக்கவையேயாம்.

மேலும் பிரபஞ்சமென்பது சமஷ்டியாயிருப்பது. அதிலுள்ள ஒவ்வொன்றுந் தனித்தனியாயிராமற் சமஷ்டியோடும் மற்ற ஒவ்வொன்றோடும் சம்பந்தப்பட்டிருப்பதால் எல்லாம் சகோதர பாவமாய்ப் பிரிக்கக்கூடாத வண்ணம் பிணைக்கப்பட்டிருக்கின்றன. அதன் தீர்ந்தநிலையோ பரிபூரண ஞானம். இப்படி இருப்பதால் சமஷ்டியின் ஒவ்வொரு பாகத்திலும் பதியப்படாமலும் ஒவ்வொரு பாகத்திலும் பார்க்கப்படாமலுமிருக்கக்கூடிய யாதொரு நினைப்புஞ்செயலுமுண்டாகிறதில்லை.

2. ஆத்மத்திற்குக்கீழாயும் அந்தக்கரணத்திற்கு மேலாயுமுள்ள நிலையில், சாதாரணமாய் ஞான உடம்பென்றழைக்கப்படுகிற ஒரு சரீரமிருக்கிறது. இதில் மனிதனுடைய சகல அநுபவமும் பதிந்திருக்கின்றன. தேகம், புத்தி, என்னுமிவைகளை எவ்வாறு வளரச்செய்யக்கூடுமோ, அவ்வாறே இதையும் வளரச்செய்யக்கூடும்.

3. இந்த அறிவு வளர்ச்சியானது தேகசம்பந்தமான அபிமானம் ஆசாபாசம் முதலியவற்றை அடக்கி ஆத்மசம்பந்தமான விஷயங்களில் அபிமானம், ஆசை முதலியவற்றை உண்டாக்கிக்கொண்டால் மட்டும் சாத்திய

மாகும். இப்படியாகவேண்டியது சுபாவத்திற் கிசைந்ததாயிருப்பது மல்லாமல் அதைஉண்டாக்கிக்கொள்ள கிரமமான மார்க்கங்களுமுண்டு.

4. இம்மார்க்கத்திலொழுங்காய்ப்பழக்கப்பட்ட மனிதர்கள் ஸ்தூலமல்லாத சூக்ஷ்மமாயுள்ள பிரபஞ்சங்களை தெளிவாய்ப்பார்க்கும் சக்தி பெறுகிறார்கள். புலனுக்கு புலப்படக்கூடியவற்றைஞானேந்திரியங்களும் மனம் புத்தி இவைகளுக்குப் புலப்படக்கூடியதை அந்தக்கரணமும் எவ்வளவு சுலுவாயும் சீக்கிரமாயும் கிரகிக்குமோ அவ்வாறே அவர்களது உட்கண்ணும் சூக்ஷ்மபிரபஞ்சங்களின் உண்மைகளைக் கிரகிக்கும். இது காரணம்பற்றி இவ்வுண்மைகளைக்குறித்து அவர்கள் சொல்லுவது பூத வாராய்ச்சி செய்யும் சாஸ்திரிகளும் தத்துவஞானிகளும் தங்களுக்கு சம்பந்தப்பட்ட விஷயங்களில சொல்வது எவ்வளவு உண்மையாயிருக்குமோ அப்படியே இருக்கும்.

5. இம்மாதிரியான ஞானவித்தை பழகும்பேர் து மற்றவர்களுக்கு அதிரியமாயிருக்கும் அநேகம் சக்திகள் அவர்களுக்குப் புலப்படுகிறது மல்லாமல் அவைகளை யாளும் திறமையுமுண்டாகிறது. இதைக்கொண்டு உலகத்தோரால் சாதாரணமாய் அற்புதங்களென்றழைக்கப்படும் காரியத்தைச்செய்ய வல்லவராகிறார்கள், ஆனால் வாஸ்தவ்வியத்தி லிக்காரியங்களோவென்றால் சுபாவமாயுள்ள பிரமாணங்களை மற்றவர்களைப்பார்க்கிலும் அவர்கள் அதிகமாய் தெரிந்துக்கொண்டிருப்பதால் சாத்தியமாகின்றன.

6. இவ்வித சக்திகளைக்கொண்டு தாங்கள் பரிக்ஷைபார்த்து உண்மையென்று தெளிந்துகொண்டிருக்கும் ஞானக்கண்ணால் அறியப்படக்கூடிய உண்மைகளைக் குறித்து அவர்கள் சொல்வதெல்லாம் ஒவ்வொரு மதாபிமானியும் நிஷ்பக்ஷபாதத்தோடு பரிசோதித்து பார்க்கும்பொருட்டு பின்னடையாமல் முன்னுக்குவந்து நிற்கின்றன.

## இந்தமகான்களால் சொல்லப்படும் மார்க்கங்களைக்குறித்து விசாரிக்கப்புகின் அவைகளின் முக்கிய அம்சங்களாவன:—

1. பிரபஞ்சோற்பத்திக்கிரமம்; இப்பூமி முதலிய மண்டலங்களினுடைய பூதபரிஷிகிலே; உலோகம், ஸ்தாபரம், பிராணி மனிதரூபங்களின்மூலமாய் படிப்படியாய் ஜீவன் விர்த்தியடைதல்; இவைகளின் சரித்திரம்.

2. இவ்வுலகமும் அதிலுள்ள மண்ணுயிரும் காலக்கிரமங்களின் பிரமாணத்துக்கு கட்டுப்பட்டிருக்கின்றனவென்றும், அதனால் யாதொருகா

லத்தில் இன்னொரு காலத்திலாகவேண்டிய வளர்ச்சியும் அவ்வளர்ச்சியின் கதியும் கூடா என்பது.

3. சித்திரகுப்தரின் புஸ்தகமென்று சொல்லக்கூடிய எங்கும் நிறைந்ததும் மிக சூக்ஷ்மமானதாயுமுள்ள ஆகாசமென்ப தொன்றுண்டு. அதில் முக்காலத்திலும் நடக்குங்காரியங்களுமடங்கியிருக்கின்றன. அதிநுட்பமான காரணங்களாலுண்டாகும் காரியங்களையும் ஆத்மா அநாத்மா இவை ஒவ்வொன்றிலிருந்துமுண்டாகும் நினைப்புகளையும் அது பதிந்துக் கொண்டிருக்கிறது.

4. மனுஷ்யரின் உற்பத்தி சரித்திரம் வளர்ச்சி முடிவு இவை முதலியனவாம்.

மனிதர்களைக்குறித்து அது என்ன சொல்லுகிறதென்றால்:—

1. ஒவ்வொரு பிரத்தியேக ஆத்மாவும் ஓரே பரமாத்மாவின் வெளிப்படையான தோற்றம். ஆகையால் ஒவ்வொன்றும் சமஷ்டியின் ஒரு பாகமாயிருக்கிறது. அது அநேக ஜென்மங்களெடுத்து அநுபவம்பெற்றுக் கடைசியில் பரம்பொருளோடு மறுபடியும் சேருகிறது.

2. இந்தஜனனமானது ஒருதடவையில் மாத்திரமல்ல, பலதடவைகளில் திரும்பித்திரும்பி யெடுக்கப்படுகிறது. ஒவ்வொரு ஜீவ ஆன்மாவும் அநேக மண்டலங்களிலுள்ள மனுசந்ததியில், ஒவ்வொரு சந்ததியிலும் அநேக ஜென்மங்களெடுத்து, கடைசியில், ஞானமுண்டாகும்பொருட்டெல்லா அனுபவங்களையும் பெறுகிறது.

3. ஒரு ஜென்மத்திற்கும் அதற்கடுத்த மற்ற ஜென்மத்திற்கும் மத்தியில் ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்கள் நீக்கப்பட்ட பிறகு, சொர்க்கமென்றழைக்கப்படும் நிலையில் காரண உடம்பானது ஓய்வையும் சுகத்தையும் பெற்று, மறுபடி ஸ்தூல உடம்புடன் ஜனிக்க அங்கே தயாராக்கப்படுகிறது.

4. ஒவ்வொரு நூதன ஜென்மமும் அதற்கு முந்தின ஜென்மம் அல்லது ஜென்மங்களில செய்த பாவ புண்ணியங்களுக்கு தக்கதாயும், அவன் எவ்வித நினைப்புகளுடனிருந்தானோ எவ்வித கருமஞ்செய்து ஜீவித்தானோ; அதை அநுசரித்ததாயு மிருக்கிறது. இப்பிரமாணமானது யாராலு மாற்றப்படக் கூடாததாயும் முழுதும் நியாயமானதாயுமிருக்கிறது.

5. காரணத்தைப்பற்றியே கர்ரியமுமிருக்கும், அதாவது, மனிதன் எதை விதைக்கிறானோ அதுவே விளையுமென்னும் பிரமாணமாயும், ஜீவ

னில் பாபம் ஜாஸ்தியோ புண்ணியம் ஜாஸ்தியோ என்று தீர்மானிப்பதாயுமுள்ள, "கர்மம்" "கர்மம்" என்று சொல்லப்படுவதானது, ஒவ்வொரு ஜென்மத்திலும் துக்கமெவ்வளவு சுகமெவ்வளவு அனுபவிக்கவேண்டுமென்பதையும் தீர்மானிக்கிறது. ஆகையால் "அதிர்ஷ்டம்" என்று ஜனங்கள் சொல்வதெல்லாம் வாஸ்தவ்வியத்தில் முன் செய்தவைகளுக்குக் கூலியேயாம்.

6. சமஷ்டியோடு ஐக்கியமாகும் வரையிலும் என்னும் வளர்ச்சிக் கிரமத்தில் வல்லமையிலும் மற்றவருக்குப் பயன்படுதலிலும் படிப்படியாய் உயரவேண்டுமென்பதடங்கியிருக்கிறது. இம்மாதிரி சரீரத்தோடு கூட, மகா உன்னத ஸ்திதியிலிருப்பவர்கள் ரிஷிகளென்றும், குருவென்றும், மகான்களென்றும், அழைக்கப்படுகிறார்கள். இவர்களின் கடமை, ஞானத்தையெக்காலத்திலும் பரிபாலித்து வைத்துக்கொண்டிருந்து காலத்திற்கு தக்கபடி மனிதரின நடக்கையை சீர்படுத்தலும், அந்த ஞானத்தை யெவ்வளவு வெளியிடவேண்டுமோ அவ்வளவு வெளியிடுதலுமாம்.

7. சமஷ்டியில் ஐக்கியமானபோது தானெடுத்த வெல்லா ஜென்மங்களிலும் நடந்த விஷயங்களும் அனுபவமும் தெரிகிறது.

## ஆத்மஞானவிர்த்தியடையும் கிரமத்தைப்பற்றி அது சொல்வதாவது:—

1. ஞானமடையவேண்டிய வழியின் ஸாராம்சமானது, மனித சுபாவத்தில் மிகவும் உத்கிருஷ்டமானதாயும் ஆத்மசம்பந்தமானதாயுமுள்ள விஷயங்களில் கருத்தை செலுத்த வேண்டியவைகளை யெல்லாக் கொழிலுக்கும் மேலாக பாவிக்கவேண்டியது.

2. இப்படி செய்வது நான்குவிதத்தால் சாத்தியமாகும். அவை யெவையெனின்:—

(a) எல்லாவிதமான சுயப்பிரியத்தையும் நீக்கி மற்றவர்கள் நன்மைக்காகவே கைம்மாறு கருதாமற்பாடுபட்டு, எல்லாரிடத்துங் கருணையோடிருக்கும் குணத்தை விர்த்திகரிக்கச்செய்வது.

(b) பரமாத்மாவை தியானம்செய்தல், முதலிய கிரியைகளால் ஞானக்கண்ணை பெற முயலுவது.

(c) விஷய சம்பந்தமான வெல்லாவித அபிமானத்தையும் ஆத்மா

வின் கட்டளையைவிட மேற்செல்லாதபடி வேணுமென்றே புத்தி பூர்வகமாய் அடக்குதல்.

(d) தானிருக்கும் நிலைமைக்குத் தகுந்தபடி செய்ய வேண்டிய காரியம் ஒன்றையும் விடாமல், அதனால் விளையும்பயனைத் தெய்வப்பிரமாணங்களுக்கு விட்டுவிட்டு நிஷ்காமியமாய்ச் செய்வது.

3. மேற்கூறியவற்றை ஒவ்வொரு மதாநுசாரியும் செய்யக்கடமைப்பட்டிருக்கிறான். இவர்களாலே அவைகளைச் செய்யவும் சாத்தியமாகும். ஆனால் தேகம், புத்தி யென்னு மிவைகளை நிஷ்கரிஷையாயேற்பட்டிருக்கும் ஒருவழியாயப் பழக்குவதால் இதைப்பார்க்கிலு மின்னும் உயர்ந்த நிலை பெறப்பட்டு, அதரிந்திரியங்கள் முதலில் உதயமாய்ப் பின்பு விர்த்தியாக்கப்படுகின்றன.

4. இவைகள் மகாத்மாவான நிலையில இன்னம் அதிகமாய் வளருகின்றன. இந்நிலையானது அநேக ஜென்மங்களில் மிக்க வருத்தப்பட்டு, சுய உழைப்பினால் பெறப்படுகிறது. இதில் வெவ்வேறுபடிக்கிரமமான ரகசியோபதேசங்களும் நிலைப்பேதங்களுமுண்டு. இதற்கும் மேலே, சதாபரத்வத்திற்கு நெருங்கிக்கொண்டே யிருக்கும்படிகளு மநேகமுண்டு.

## ஆத்மஞானவிருத்தியடையும் விதத்தைக்குறித்து அது சொல்வதாவது:—

1. இந்தவழி ஒவ்வொரு ஜீவாத்மாவினும் சுயமாகவே யுண்டாக வேண்டியது. அதற்கு வேண்டிய விச்சையும், பிரயாசையும், இவற்றால் உண்டாகும் காரியமும், அவனையே சார்ந்ததாயிருக்கிறது.

2. இது எவ்வளவு அவனது சுயப்பிரயாசையா லாவதாயிருந்தாலும் வெளியிலிருந்து இது விஷயத்தில் உதவிவராமற் போகிறதில்லை. ஏனென்றால் எல்லாப்பலத்திற்கும் காரணமாயிருக்கும் பரத்வத்துடன் நெருங்கிய சம்பந்தத்தால் மாத்திரம் இது சாத்தியமாகும்.

## ஒரு ஜென்மத்தில் எவ்வளவு விருத்தியாகக்கூடுமென்பதைப் பற்றி அது சொல்வதாவது:—

1. பிரம்மஞான உண்மைகளை அநுபவத்தால் பெறுவிட்டாலும் புத்தி பூர்வமாய்க் கிரகிப்பதுகூட, அம்மார்க்கத்தில் ஆஸக்தியை விளைவிப்பதால், அவனது அடுத்த ஜென்மத்தில் அவனை இன்னம் உயர்ந்தபடியில் வைக்க மிகவும் உபயோகமாகிறது.

2. இதைப்பார்க்கிலும் தான் செய்யவேண்டிய தொழிலே ஒன்றும் விடாமற் செய்வதாலும், பக்தியாயிருப்பதாலும், ஜீவகாருண்ணியத் துடனிருப்பதாலும், ஜாஸ்தியாய்ப் பெறப்படுகிறது.

3. இதுவரையும் கூறிவந்த ஆத்மஞான விருத்தியடையு மார்க்கங்களை நன்றாய்க்கவனித்து உபயோகிப்பதனால் இன்ன மதிகவிருத்தியடையப்படுகின்றது.

சாந்திரஸ்து







# விசாரசாகரத்தின்

## அகாராதி சொல்லீட்டவணை.

[குறிப்பு:— (1) சாதாரணலக்கங்கள் பிரிவுகளைக் குறிப் பிடுகின்றன.]

(2) இந்த ( ) அடையாளத்திலுள்ள லக்கங்கள் தரங் கங்களையும் அவைகளுக்குப்பின்வரும் லக்கங்கள் அத்தரங் கங்களின் குறிப்பு நெம்பர்களையும் குறிப்பிடுகின்றன.

## ஆ

இ

உ.

## விசாரசாகரத்தில பிழைதிருத்தல் வகையறு குறிப்பு.

| பக்கம் | வரி | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 11 | விஷ்ணு | விஷ்ணு |
| 8 | 15 | சொல்லப்ப்படாததிருல் | சொல்லப்படாததினல் |
| 9 | தலை | 14—19 | 14—39 |
| 10 | 23 | யைராக்கியாதி | வைராக்கியாதி |
| 11 | தலை | 14—19 | 14—39 |
| ,, | 30 | விழயத்தில் | விஷயத்தில் |
| 13 | தலை | 14—19 | 14—39 |
| 14 | 25 | சிரவணுதிளிற் | சிரவணுதிகளிற் |
| 15 | தலை | 14—19 | 14—39 |
| 17 | 17 | அறியபடாதென்றும் | அறியப்படாதென்றும் |
| 21 | 13 | சமாதானங்கள்(30—) | சமாதானங்கள் (30-31) |
| 22 | 34 | அதற்க்கு | அதற்கு |
| 26 | 15 | அற்கு | அதற்கு |
| ,, | ,, | நிவிர்தி | நிவிர்த்தி |
| 28 | 26-7 | ஒருவம் | ஒருவனும் |
| 35 | 13 | மோ | மோக்ஷ |
| 37 | 2 | 14 | 15 |
| 45 | 26 | ரஸ்நேந்திரியம் | ரஸநேந்திரியம் |
| 48 | 34 | (57) | (58) |
| 55 | 3 | மூன் (76) ச் | முன் (76) |
| 57 | 21-2 | நசிக்கமாட்ட்ா | நசிக்கமாட்டா |
| 58 | தலை | விசார்சாகரம | விசாரசாகரம் |
| 59 | 17 | யிக்கிறதோ | யிருக்கிறதோ |
| 60 | 15-6 | பேலும் | போலும் |
| ,, | 22-3 | சுவக்க | சுவர்க்க |
| 61 | 28 | "மௌனவும்" என்பதற்கு [ப்பிழை | "நியமமில்லை என்று" [சேர்த்துக்கொள்ளவும் |
| 63 | 16 | ர்ம்மம | பிர்ம்மம் |
| 73 | தலை | மோக்ஷபாவம் | மோக்ஷாபாவம் |
| 77 | 27 | ஆனைல் | ஆகையால் |
| 79 | 1 | உண்டகுராம் | உண்டாகும் |
| ,, | 19 | பிரசன்னதனையால் | பிரசன்னதையால் |
| 81 | 21-2 | பிரசன்னதனைத | பிரசன்னதை |
| 84 | 18 | ஒன் | உன் |
| 87 | 17 | இதில்லுனக்கு | இதிலுனக்கு |
| 89 | 28 | அசத்கியாதி | அக்கியாதி |
| 91 | 7 | ஆனையால் | ஆகையால் |
| 92 | 27 | இராஜுதம் | இரஜதம் |
| 93 | 35 | ரஜ்ஜு | ரஜ்ஜு |
| 94 | 6-7 | இருக்கும் | யிருக்கும் |
| ,, | 35 | அனுர்வசனீய | அநிர்வசனீய |

| பக்கம் | வரி | பிழை | திருத்தல் |
|---|---|---|---|
| 96 | 22 | சேன | சேதன |
| ,, | 23 | உபாதாணம் | உபாதானம் |
| 101 | 5-6 | ஆதலல் | ஆதலால் |
| ,, | 11 | இருக்கின்றனார் | இருக்கின்றன |
| 102 | 32 | நிதநியமுக்த்தை | நித்தியமுக்தனை |
| 103 | 9—10 | ராஜ்ஜு | ரஜ்ஜு |
| 105 | 10 | உபாசனையுனுறும் | உபாசனையினுறும் |
| 107 | 1 | ரத்மமேவ | தமாமேவ |
| ,, | 2-3 | உண்டாகிபது | உண்டாகிறது |
| 110 | 7 | பிரத்தியக்கென்று | பிரத்தியக்கென்றும் |
| ,, | 36-7 | மத்துக்கு | மதத்துக்கு |
| 111 | 22 | பிதிரபிம்ப | பிரதிபிம்ப |
| ,, | 31 | வஸ்திமர | வஸ்திரம |
| 112 | தலை | 121 | 112 |
| 113 | 10 | அக்ஞானத்தால் | அஞ்ஞானத்தால் |
| 114 | 7 | சேதனப் | சேதனம் |
| 122 | 5-6 | ஷிவரமாய் | விவரமாய் |
| ,, | 15 | அதிஷ்டானமாகிய: | அதிஷ்டானமாகிய |
| ,, | 33 | திருஷ்டாந்தத்திற் | திருஷ்டாந்தத்தில் |
| 127 | 21 | துவகநிந்திய | துவகிந்திரிய |
| 130 | 16 | விஷய | விஷய |
| 131 | 22 | சம்ஸகாரமதால் | சம்ஸ்காரத்தால் |
| ,, | 25-6 | ஆசிரியக்கிலை | ஆசிரயிக்கவில்லை |
| ,, | 32 | யதாாதக | யதார்த்த |
| 135 | 32-3 | ஆபாஸவாக்கில் | ஆபாஸவாதத்தில் |
| 138 | 29 | . | , |
| 139 | தலை | இரும | இராம |
| 141 | தலை | இரும | இராம |
| ,, | 34 | நவிரிக | நவிரிகி |
| 142 | 26 | அவிடத்தில் | அவ்விடத்தில் |
| 147 | தலை | 1 (பக்க இலக்கம்) | 147 |
| ,, | 14 | விஷயயம | விஷயம் |
| ,, | 15 | சந்பந்த | சம்பந்த |
| 150 | தலை | 051 (பக்க இலக்கம்) | 150 |
| 154 | 2 | கிரமம | கிரமமு |
| 156 | 15 | செரல்வி | சொல்வி |
| 157 | 36 | மாமியான் தர் | மாமியார் தன் |
| 164 | 34 | பிரம் | பிரம்ம |
| 166 | 15 | 283 | 284 |
| 168 | 32 | கூட்ாது | கூடாது |
| 170 | 21 | வாசகியார்த்த | வாச்சியார்த்த |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 172 | 14 | காமபலன் | கர்மபலன் |
| 173 | 10 | 291—309 | 297—309 |
| 180 | 31 | ளாயிருக்கின்றன | களாயிருக்கின்றன |
| 187 | 1-2 | மரணங்ள் | மரணங்கள் |
| 200 | 27 | ண்வன் | சிர்ணவன் |
| 201 | 11 | யாதொன்மறு | யாதொன்றும் |
| 203 | 35 | கூடன | கூடின |
| 204 | 30-1 | பிர்ம்மத்தில்ஆரோபித | பிர்மத்தில் ஆரோபித |
| 207 | 8-9 | சர்ப்புஜ | சதுர்ப்புஜ |
| 209 | 15-6 | அவ்வற்றின் | அவ்வவற்றின |
| 212 | 23 | "விசுவன்,, என்பதற்கு முன் | "347" என்பதை சேர்க்கவேண்டியது |
| 216 | 22 | எத்த | எந்த |
| 218 | 1 | சாருங்கர்லத்தில் | சாருங்காலத்தில் |
| ,, | 24 | நிர்ணய | நிர்ணய |
| 219 | தலை | 119 (பக்கஇலக்கம்) | 219 |
| ,, | 18 | இஸ்வர | ஈஸ்வர |
| 222 | 10 | வசிக்கிறனுக்கு | வசிக்கிறவனுக்கு |
| 227 | 4 | ஸ்ம்ஸ்கார | ஸம்ஸ்கார |
| ,, | 14 | ஸ்முருதி | ஸ்மிருதி |
| 228 | 2 | இந்திய | இந்திரிய |
| 229 | 15 | யேலும் | மேலும் |
| 230 | 14 | விஷ்ய | விஷய |
| 232 | 18 | ஜெஆஞல்சரப்பனு | ஆஞலசொப்பனு |
| 243 | 2 | விர்தகி | விர்க்தி |
| 248 | 16 | 422—660 | 422—600 |
| 261 | 24 | ஷேமுமில்லை | தோஷமுமில்லை |
| 263 | 27 | வெளிப்படுகிறது | வெளிப்படுகிறது |
| ,, | 34 | சுவடப்தியில் | சுஷுப்தியில் |
| 264 | 3 | சுஷைப்தி | சுஷுப்தி |
| ,, | 7 | மனங் | மனம் |
| ,, | 24 | உண்டாரவதாக | உண்டாகவதாக |
| 265 | 11 | பரபானு | பரமாணு |
| 266 | 1 | தாவது | ஏதாவது |
| ,, | 20 | கருமம | கர்ம |
| 267 | 21-2 | ஆத்மாக்களுக்குப் | ஆத்மாக்களுக்கும் |
| 280 | 25 | வேறுனதெல்லாம் | வேறானதெல்லாம் |
| 286 | 1 | தானை | தாவை |
| 289 | 32 | நிவுர்த்தி | நிவிர்த்தி |
| 261 | 14-5 | தண்மை | தன்மை |
| 292 | 35 | கர்மபலன்ன் | கர்மபலன்கள் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தல் |
|---|---|---|---|
| 294 | 28-9 | என்படும் | என்னப்படும் |
| 295 | தலை | 25 (பக்க இலக்கம்) | 295 |
| ,, | 16 | கர்மோயாசனை | கர்மோபாசனை |
| ,, | 30 | திருஷ்டப்லன் | திருஷ்டபலன் |
| 298 | 21 | பிரபோசன | பிரயோசன |
| ,, | 24 | செய்வதிதிறைலே | செய்வதினாலே |
| 299 | 2 | எதுவசையில் | எதுவரையில் |
| 300 | 20 | கரமோபார்சனைரளை | கர்மோபாசனைகளை |
| 301 | 2 | சிரவணத்தை | சிரவணத்தை |
| 302 | 8 | கர்போபாசனை | கர்மோபாசனை |
| ,, | 30 | அவைகனின் | அவைகளின் |
| ,, | 33 | கர்போபா சனை | கர்மோபாசனை |
| 303 | தலை | —539 | 496-539 |
| 304 | 31 | ராஜ | ராஜஸ |
| 309 | 31 | மூன் று | மூன் று |
| ,, | 34 | என்ன | என்ன |
| 312 | 20-1 | அர்த்தஞானமுண்டாகும் [படி | அர்த்தஞான முண்டாகு [ம்படி |
| ,, | 31 | தர்மமன்று | தர்மமன்று |
| 314 | 13 | சம்பந்தந்துக்கு | சம்பந்தத்துக்கு |
| 318 | 2 | பிரச்சித்த | பிரசித்த |
| 324 | 24 | சம்பந்மே | சம்பந்தமே |
| ,, | 30 | அநிர்வசீய | அநிர்வசனீய |
| 326 | 23 | கொடுக்குமமடி | கொடுக்கும்படி |
| ,, | 24 | தத:பன் | தகப்பன் |
| 328 | 2 | அறிகிறபடியல் | அறிகிறபடியால் |
| ,, | 30 | சேனத்துக்கு | சேதனத்துக்கு |
| 329 | 3 | ஜகர்லக்ஷணை | அஜகர்லக்ஷணை |
| 332 | 10 | "வியஷ்டி" என்னும் பதம் முதல் | அடிக்கவேண்டியது |
| | 13 | "சியம்" என்பது வரையில் | |
| 333 | 11 | விசேஷ | விசேஷண |
| 334 | 30 | கத்த்வம் | தத்த்வம் |
| ,, | 30-1 | விருக்தாச | விருத்தாம்ச |
| ,, | 31-32 | சித்திக்மன்றனை | சித்திக்கின்றன |
| ,, | 33 | இ | அடிக்கவேண்டியது |
| 335 | 26 | பரிசின்ன | பரிச்சின்ன |
| 340 | 29 | எதப்புரோத | ஓதப்புரோத |
| 344 | 24 | கர்மம் | கர்ம |
| 348 | | அத்வைதானுபூதி | அபரோக்ஷானுபூதி |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 349 | தலை | 613 | 613—37 |
| 353 | 12 | லயமார்கிறது | லயமாகிறது |
| ,, | 2 | மிதத்தியத்தினுல் | மிதித்தியத்தினுல் |
| 354 | 1 | தேஷங்கள் | தோஷங்கள் |
| 356 | 2 | திர்ஷ்டார்தம் | திருஷ்டாந்தம் |
| 357-8 | 1 | விரோகளாவதால் | விரோதங்களாவதல் |
| 361 | 2 | உத்கர | உத்தம |
| 364 | 3 | இத்தப்பக்ஷம் | இந்தப்பக்ஷம் |
| 366 | 1 | உபாஸே | உபாசனே |
| ,, | 3 | சொல்ப்பட்ட | சொல்லப்பட்ட |
| 367 | 6 | விலக்ஷணேயாய் | விலக்ஷணமாய் |
| 368 | 8 | ஸ்யோனதி | ஸ்யோன |
| ,, | 3 | பிராகாதனியக | பிரகாதாணியக |
| ,, | 3 | யஜுர்வேத | யஜுர்வேத |
| 373 | 2 | இவைம்ளு | இவைகளும |
| 378 | 1 | ஸ்ரீகளே | ஸ்திரீகளே |
| ,, | 1 | பிருஷ்ட | பிர்ஷ்ட |
| ,, | 2 | இங்கே | இங்கே |
| 379 | 1 | இவ்வறும் | இவ்வாறும் |
| ,, | 3 | மாக்த்தியமிகன் | மாத்தியமிகன் |
| 380 | 1 | திரஸ்டி | திருஷ்டி |
| 386 | 1 | றவர் | திறவர் |
| 390 | 1 | தேவமில்லே | தெய்வமில்லே |
| 395 | 1 | க்போகின்றன | போகிக்கின்றன |
| ,, | 1 | பிர்ம்மத்தைப் | பிர்மமத்தையும் |
| 396 | 2 | காரணப்பிர்ம்ம | காரணப்பிர்ம்ம |
| 397 | 2 | புருஷனுடைய | புருஷனுடைய |
| 398 | 2 | சாமான | சமான |
| ,, | 2 | இச்சாஸ்திரகளின் | இதரசாஸ்திரங்களின் |
| 403 | 8 | வேலமயிலுந்துணே | வேலுமயிலுந்துணே |

## FOR SALE

The following books published by the Theosophical society Kumbakonum are now ready and will be sent per V. P. P. on application to the undersigned.

(I) "**Thoughts on Bagavad Gita**" a series of twelve instructive and interesting lectures written by Brahmin F. T. S. and an earnest student of H. P. B. Price exclusive of postage Re. 1-0-0 (Foreign 1. s. 6. d.)

(2) "**Vasudevamanana**" The meditations of Vasudeva a compendium of Advita philosophy translated from sanskrit by K. Narayanasamy Iyer and R. SundaraSastri B. A. Price exclusive of postage As. 8 (Foreign 1. s. inclusive of postage).

TAMIL PUBLICATIONS

3. A manual of Theosophy in Tamil by A. Siva Row. Price As. 4. Postage one anna.

4. Vichara sagar in Tamil, the only exhaustive treatise on Advita philosophy. Price Rs. 3. including Postage. BY A. SIVA ROW.

**M. C. Krishnasamy Iyer.**
*Secretary. T. S. Kumbakonam*